ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஆழ்வார்கள் அருளிச்செய்த

# நாலாயிர திவ்யப்ரபந்தம்

---

மூன்றாம் பதிப்பு

---

திருவல்லிக்கேணி

தமிழ்ப்பண்டிதர்

சே. கிருஷ்ணமாசாரியரால்


சென்னை

ஸக்ஸஸ் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

---

ருதிரோத்காரி௵

விலை ரூபா ௩—௮—௦

சே. கிருஷ்ணமாசாரியர்

தமிழ்ப்பண்டிதர்

ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாய புஸ்தகசாலை

19 - தென்னண்டை மாடவீதி

திருவல்லிக்கேணி.




ஸ்ரீ

# முகவுரை.

—❀—

நாலாயிரதிவ்வியபிரபந்தமானது—ஸ்ரீயঃபதியான ஸர்வேஸ்வரனது கிருபையால் ஸம்ஸாரிசேதநர்களின் உஜ்ஜீவநத்தின்பொருட்டு இந்த உலகிருள் நீங்க வந்து உதித்த ஆழ்வார்கள் பதினொருவரும் ஆண்டாள் ஒருத்தியுமாகிய பன்னிருவரும் அந்தமிழால் நற்கலைகளை ஆய்ந்து உரைத்த எம்பெருமானது ஸ்தோத்ரரூபமான இருபத்துநான்கு பிரபந்தங்களின் ஸமுதாயமாகும். நித்தியசூரிகளின் அம்சமாகத் திருவவதரித்த இவ்வாழ்வார்கள் எம்பெருமானால் மயர்வற மதிநலம் அருளப்பெற்று அப்பெருமானைத் தமது நெஞ்சென்னும் உட்கண்ணால் நன்கு அனுபவித்த அநுபவம் உள்ளடங்காமல் பெருக்கெடுத்துப் புறம்பேவழியத் திருவவதரித்தன வாதலால், இந்தப்பிரபந்தங்கள் "அருள்கொண்டு ஆயிரம் இன்தமிழ் பாடினன்" என்கிறபடியே பகவத்கிருபையாலுண்டான ஞானக்கண்மூலமாகப் பகதிபலாத்காரத்தாலே அவதரித்தனவாய், பகவதேகபரங்களாய், விலக்ஷணங்களாய், போக்யங்களாய், பகவந்முகோல்லாஸஹேதுக்களாய், அந்த எம்பெருமானைத்தவிர வேறொன்றைப் பிரதிபாதியாதனவாய் ஸாரதமங்களாய், வேதத்தைக்காட்டிலும் விஞ்சியனவாய், எம்பெருமானது பர வ்யூஹ விபவ அந்தரியாமி அர்ச்சை யென்கிற ஐவகை நிலைகளையும் குறிப்பனவாயிருந்தாலும் அர்ச்சையையே முக்கியதமமாகக் கொண்டனவாய், பெண்ணுக்கும் பேதைக்குங்கூட எளிதில் அப்பியவிக்கத்தக்கனவாய், அப்யவிசித்தவர்களுக்குப பிறவித்துயரறுத்து அந்தமில் பேரின்பத்தை யளிக்கவல்லனவாய், செவிக்கினிய செஞ்சொல்லாய், கற்பனை அலங்காரம் சொற்செறிவு பொருட்பொலிவு ஆழ்ந்தகருத்து வ்யங்க்யார்த்தம் முதலிய காவ்யலக்ஷணங்களிற் குறைவில்லாதனவாய், முமுக்ஷுக்களுக்கு அவச்யம் அறியவேண்டிய அர்த்தபஞ்சகத்தையும் விசமதமாகப்பிரதிபாதிப்பனவாய், ஆங்காங்கு ஸ்வாபதேசம் நிரம்பப்பெற்றனவா யிருக்கும். ரஹஸ்யஸம்ப்ரதாயத்துக்குப் பிரதான காரணபூதங்களான இந்தப்பிரபந்தங்கள் "கண்ண! நின்தனக்கும் குறிப்பாகில் கற்கலாம் கவியின்பொருள்தானே" என்றும், "ஆரார் வானவர்கள் செவிக்கினியசெஞ்சொல்லே" என்றும் ஸர்வஜ்ஞனை ஈச்வரனையும் ஸம்ஸாரஸம்பந்தமற்று நிர்மல ஜ்ஞானவான்களாகிய விண்ணுளாரையும் ஈடுபடுத்து மென்றால், இந்தத் திவ்யப்ரபந்தங்களின் பெருமை மந்தமதிகளான நம்மாற் சொல்லும் தரமுடையதோ?

திவ்வியபிரபந்தங்களின் முக்கியமான அர்த்தம்—இப்படிப்பட்ட திவ்யப்பிரபந்தங்களிற் பேசுகின்ற அர்த்தங்கள்தாம் எவையென்னில்:—ஆத்மாக்கள் அறியவேண்டிய பரப்ரஹ்மஸ்வரூபமும், அடைகிற ஆத்மாக்களின் ஸ்வரூபமும், அடைதற்கு உரிய உபாயத்தின் ஸ்வரூபமும், அடைவதனாற் பெறவேண்டிய பலத்தின் ஸ்வரூபமும், பலத்தைப் பெறவொட்டாது தடுக்

கும் விரோதியின் ஸ்வரூபமும் என்கிற அர்த்தபஞ்சகங்களுமாம். இவைகள் தாம் வேதங்களாலும், இதிஹாஸ புராணங்களாலும், வேதவேதார்த்தங்களை யறிந்த மஹாத்மாக்களாலும் சொல்லப்படுபவை.

இந்தப் பிரபந்தங்கள்:—க. திருப்பல்லாண்டு, உ. பெரியாழ்வார்திருமொழி, ௩. திருப்பாவை, ச. நாச்சியார்திருமொழி, ரு. பெருமாள்திருமொழி, சு. திருச்சந்தவிருத்தம், எ. திருமாலை, அ. திருப்பள்ளியெழுச்சி, கூ. அமலனாதிபிரான், க0. கண்ணிநுண்சிறுத்தாம்பு என்னும் பத்துப்பிரபந்தங்கள் அடங்கிய முதலாயிரமும், கக. பெரியதிருமொழி, கஉ. திருக்குறுந்தாண்டகம், க௩. திருநெடுந்தாண்டகம் என்னும் மூன்று பிரபந்தங்கள் அடங்கிய பெரியதிருமொழி என்னும் இரண்டாவது ஆயிரமும்; கச. முதல்திருவந்தாதி, கரு. இரண்டாந்திருவந்தாதி, கசு. மூன்றாந்திருவந்தாதி, கஎ. நான்முகன் திருவந்தாதி, கஅ. திருவிருத்தம், ககூ. திருவாசிரியம், உ0. பெரியதிருவந்தாதி, உக. திருவெழுகூற்றிருக்கை, உஉ. சிறியதிருமடல், உ௩. பெரியதிருமடல் என்னும் பத்துப்பிரபந்தங்கள் அடங்கிய இயற்பா என்னும் மூன்றாவது ஆயிரமும்; உச. திருவாய்மொழி என்னும் நான்காவது ஆயிரமுமாம். இவைகளின் பாசுரங்களை எண்ணிப்பார்க்குமிடத்தில் ஸங்க்யையிற் சிறிது குறைந்திருப்பினும் குறைந்த சொச்சத்தொகையைக் கருதாது நாலாயிரதிவ்யப்ரபந்தங்கள் என்று இவை திருநாமம் படைத்தன.

இந்தப்பிரபந்தங்களின் முறைமை ஏற்பட்ட வகை:—'திருப்பல்லாண்டு' முதல் 'அமலனாதிபிரான்' ஈறானவை பிரணவார்த்தங்களாகையாலே முதலில் வைக்கப்பட்டனவென்றும், 'கண்ணிநுண்சிறுத்தாம்பு' நமஸ்ஸப்தார்த்தத்தை விவரிப்பதாகையாலே அது அவற்றின்பின்பு வைக்கப்பட்ட தென்றும், பெரிய திருமொழி முதல் பெரியதிருமடல் ஈறாகவுள்ள பிரபந்தங்கள் மந்த்ரசேஷமான நாராயண சப்த விவரண மாகையாலே அதன்பின்பு வைக்கப்பட்டனவென்றும், இந்தப்பிரபந்தங்களிலும் பொருட்பொருத்தத்தைக் கணிசித்தே பௌர்வாபர்யங்கள் ஏற்பட்டுள்ளன வென்றும், இவ்வாறு திருமந்த்ரார்த்த ப்ரதிபாதகங்களான பிரபந்தங்கள் வைக்கப்பட்டபின்பு த்வயார்த்தமாய்த் தீர்க்கசரணாகதியை ப்ரதிபாதிப்பதாய் ஸாரதமமான திருவாய்மொழி எல்லாவற்றுக்கும் சரமப்ரபந்தமாக வைக்கப்பட்ட தென்றும் * தமது தேவகானவல்லமையால் கண்ணிநுண்சிறுத்தாம்பைக்கொண்டு ப்ரமுஷிதமாய்ப்போன திவ்யப்ரபந்தங்களை உத்தரிப்பித்த ஸ்ரீமந்நாதமுனிகள் நம்மாழ்வாரிடத்திலே திவ்யப்ரபந்தங்களை உபதேசத்தாற் பெற்றபோது இவ்வாறே நாலாயிரங்களையும் நம்மாழ்வார் அவர்க்கு உபதேசித்தன ரென்றும், இப்படி நம்மாழ்வார் நாதமுனிகளுக்கு அவயவியான தாம் அருளிச்செய்த திருவாய்மொழியை

---

*ப்ரணவம் நமஸ் என்பவற்றின் விவரண மாதலால் முதலாயிரத்தை முதலாகவும், நாராயணசப்த விவரணமாதலால் பெரியதிருமொழியை இரண்டாவதாகவும், த்வயார்த்தவிவரணமாதலால் திருவாய்மொழியை மூன்றாவதாகவும், சரமச்லோகவிவரணமாதலால் இயற்பாவை நான்காவதாகவும் நமது முன்னோர்கள் முறைப்படுத்தினர்க ளென்று கூறுவாரு முண்டு.

யன்றித் தமக்கு அவயவபூதர்களான மற்றையாழ்வார்களின் அருளிச்செயல்களை யும் உபதேசம்செய்ததனால்தான் “நாதனுக்கு நாலாயிரமுரைத்தான் வாழி யே” என்று பாராட்டி அநுஸந்திக்கப்பட்டிருப்பதென்றும் ஸம்ப்ரதாயம்வல்ல பெரியோர் அருளிச்செய்வர்.

**திவ்யப்ரபந்தம் முன்புறத்திலே அநுஸந்திக்கப்படுதற்குக் காரணம்:—** கோயில்களில் உத்ஸவம்கண்டருளும்போது எம்பெருமான் நடுவேயெழுந்தருள, வடமொழிவேதம் எம்பெருமானது குணங்களைப் பேசத்தொடங்கி அவற்றின் முடிவு தனக்கு எட்டமுடியாமல் “யதோவாசோ நிவர்த்தந்தே, அப்ராப்யமந ஸாஸஹ” என்று இளைத்துப்போய்ப் பின்னும் அப்பெருமானை நாடிச்செல்வ தற்கு அறிகுறியாக எம்பெருமானுக்குப்பின்னே பாராயணஞ்செய்யப்பட்டும், மயர்வறமதிநலம்அருளப்பெற்ற ஆழ்வார்களின் திவ்யஸூக்தியான தமிழ்வேத மாகிய திவ்வியப்பிரபந்தம் அப்பெருமானது ஸ்வரூபத்தை உள்ளபடி உணர் ந்து அவனை ஸாக்ஷாத்கரித்து வடமொழிவேதத்துக்கு முற்பட்டமை தோன்ற அப்பெருமானுக்கு முன்னே பாராயணஞ்செய்யப்பட்டும் வருகின்றன. இவ் விஷயத்தை, வேதாந்ததேசிகனும்

“[illegible]
[illegible] ।
[illegible]
[illegible] ॥

என்று அருளிச்செய்தார்.

**நித்யாநுஸந்தாநமும், கோயில்திருவாய்மொழியும்:—** இப்படி மஹத்தான வைபவங்களையுடைய திவ்வியப்பிரபந்தங்கள் முழுவதையும் தினந்தோறும் ஸேவிப்பது இயலாமையாலே, அவற்றுள்ளே திருப்பாவை திருப்பள்ளி யெழுச்சி யிரண்டும் எம்பெருமானைத் திருப்பள்ளியுணர்த்தி அப்பெருமானி டத்திற் கைங்கரியங்கொள்ளும் பிரபந்தங்களாகையால் அவை ப்ராதஃகாலத் தில் நித்யம் அநுஸந்தேய மென்றும், ஆழ்வார்கள்திவ்யஸூக்திகளைச் சேவிக் கும்போதெல்லாம் முதலில் வேதத்துக்கு ஓமென்னுமது போன்ற மங்களா சாஸநபரமான திருப்பல்லாண்டு அநுஸந்தேய மென்றும், திருவாய்மொழி யநுஸந்தாநத்திற்குப் பூர்வோத்தரங்களில் நம்மாழ்வார்விஷயமான கண்ணி நுண்சிறுத்தாம்பு அநுஸந்தேயமென்றும், ஸந்நிதிகளிலெல்லாம் ஸாயங்காலங் களில் திருப்பல்லாண்டு முதல் சிலபிரபந்தங்கள் நித்யமாக அநுஸந்தேயங்க ளென்றும், இப்படி ஸ்ரீவைஷ்ணவதர்மப்ரவர்த்தகரான ஸ்ரீமந்நாதமுனிகள்முத லிய பூர்வாசார்யபரம்பரைகள் திவ்யப்ரபந்தாநுஸந்தாநங்களில் சில நிஷ்கர்ஷ மான அநுஷ்டாநங்களை ஏற்படுத்தினார்களென்றும்; இப்படியேதிருவாய்மொழி யில் முதற்பத்தில் முதலிரண்டு திருவாய்மொழிகளையும் பத்தாம்பத்தில் இறுதி யிரண்டு திருவாய்மொழிகளையும், மற்றையெட்டுப்பத்துக்களிலும் ஸாரமான

ஒவ்வொரு திருவாய்மொழியையும் தேர்ந்தெடுத்து அந்தப் பன்னிரண்டு திருவாய்மொழிகளையும் 'கோயில்திருவாய்மொழி' என்று பேரிட்டு அவை திருவாய்மொழிமுழுதையும் ஸேவிக்க இயலாதபோது அநுஸந்தேயங்களாக ஏற்படுத்தப்பட்டனவென்றும் ஸம்ப்ரதாயஜ்ஞரான பெரியோர் அருளிச்செய்வர்.

**திவ்யப்ரபந்தங்களின் வேதஸாம்யம்:**—ஆழ்வார்களில் கடைக்குட்டியான திருமங்கையாழ்வார் எம்பெருமானருளால் திருந்திச் சதுர்வேதஸாரமாக நம்மாழ்வாரால் அருளிச்செய்யப்பட்ட திருவிருத்தம் திருவாசிரியம் பெரிய திருவந்தாதி திருவாய்மொழி என்ற திவ்யப்ரபந்தங்கள் நான்குக்கும் சிக்ஷை வியாகரணம் சந்தஸ் நிருக்தம் ஜ்யோதிஷம் கல்பம் என்ற வேதாங்கங்கள் ஆறு போலப் பெரியதிருமொழி திருக்குறுந்தாண்டகம் திருநெடுந்தாண்டகம் திருவெழுகூற்றிருக்கை சிறியதிருமடல் பெரியதிருமடல் என்ற பிரபந்தங்கள் ஆறையும் அருளிச்செய்து திருவரங்கம்பெரியகோயிலிற் கைங்கரியஞ்செய்து வருகையில் ஒருநாள் பெருமாள் திருமுன்பே திருநெடுந்தாண்டகத்தைத் தேவகானத்தாற் பாடிக்கொண்டு மனமுருகிநிற்க, அதற்குத் திருவுள்ளமுவந்த ஸ்ரீரங்கநாதனுக்கு 'உமக்கு வேண்டுவது யாது?' என்று திருவுள்ளமாக, ஆழ்வாரும் பணிந்து 'நாயன்தே! நம்மாழ்வார் திருவாய்மலர்ந்தருளிய தமிழ்வேதமாகிய திருவாய்மொழியை மார்கழிமாஸத்தில் நடக்கும் திருவத்யயநோத்ஸவத்தில் வடமொழிவேதத்துடனே திருச்செவிசாத்தியருளவேணும்' என்று விண்ணப்பஞ்செய்ய, பெருமாளும் அவ்வாறே அநுக்ரஹம் செய்தபின்பு, பெரிய பெருமாள் பிரஸாதித்த திருமுகப்பட்டயப்படியே திருமங்கையாழ்வார் ஆழ்வார் திருநகரியிலிருந்து நம்மாழ்வாரை எழுந்தருளப்பண்ணிக்கொண்டுவந்து மார்கழிமாஸத்தில் சுக்லபக்ஷத்து ஏகாதசிதொடங்கிப் பகலில வடமொழிவேத பாராயணமும் இரவில் திராவிடவேதமாகிய திருவாய்மொழிபாராயணமுமாகப் பத்துநாள் திருவத்யயநோத்ஸவம் குறைவற நடக்கும்படி செய்தருளினார். இப்படியே கலியன்காலம்வரையில் நடந்துவந்தது. பிறகு, கலிதோஷத்தால் திவ்யப்ரபந்தங்கள் ப்ரமுஷிதங்களாய்ப்போக, வெகுகாலங்கழித்து அந்தத் திவ்யப்ரபந்தங்களை உத்தாரணம்பண்ணி ஸ்ரீவைஷ்ணவஸாமங்களை ஸ்தாபித்த ஸ்ரீமந்நாதமுனிகள், நின்றுபோயிருந்த திருவத்யயநதிருவிழாவை ஸ்ரீரங்கநாதனது சாஸநத்தினால் நடப்பித்ததுமன்றி, ஏகாதசிக்கு முன்பு பிரதமைமுதல் 'பகல்பத்து' என்று பெயர்வைத்து அந்தத்தினங்களில முதலிரண்டு ஆயிரங்களையும் ஸேவிக்கும்படிக்கும், இராப்பத்தில் திருவாய்மொழி சாத்துமறையான மறுநாளில் இயற்பாவைச் சேவித்து முடிக்கும்படிக்கும் திட்டஞ்செய்தனர். (இயற்பாசாத்துமறைக்குமறுநாள் திருப்பல்லாண்டுதொடக்கம்; இதன் பிறகுதான் கிருஹங்களிலெல்லாம் திவ்யப்பிரபந்தங்கள் ஸேவிக்கலாம்.)

பின்பும், அந்நாதமுனிகள், பெரியபெருமாள்நியமனத்தால் வேதஸாம்யம் பெற்ற திராவிடவேதத்துக்கும் வடமொழிவேதத்துக்குப்போலவே உத்ஸர்ஜந உபக்ரமகாலங்களை நியமிக்கத் திருவுள்ளங்கொண்டு பெருமாள் தைலக்காப்புச் சாத்திக்கொள்ளும் திருக்கார்த்திகைதொடங்கி அத்யயந உத்ஸவ ஆரம்ப பரியந்தம் இந்தத்திவ்யப்ரபந்தங்களுக்கு உத்ஸர்ஜநகாலமென்றும், அந்நாள்களில் எங்கும் திவ்யப்ரபந்தங்கள் ஸேவிக்கக்கூடாதென்றும், மார்கழிமாசத்

தில சுகலபாதமை தொடங்கித் திவ்யப்ரபந்தஙகளுக்கு உபக்ரமகால மென்றும், அபபோதுதான் ஸந்நிதிகளில் திவ்வியபபிரபந்தம் தொடங்கி ஸேவிக்கலாமெனறும் சிலவரையறைகளை ஏற்படுத்தித் திவ்வியபபிரபந்தத்தின் மகிமையைப் பாராட்டியருளினர்-

**இராமாநுசநூற்றந்தாதியின் சிறப்பு:**—இபபடி ஸ்ரீமந்நாதமுனிகள் காலம் தொடங்கி ஓராண்வழியாக நடந்துவந்த இந்த ஸம்பாதாயம் எம்பெருமானர் காலத்தில் பின்னும் பரவிச் செழித்து வளரலாயிற்று. அந்த எம்பெருமானர் காலத்திலே திருவரங்கத்தமுதனர் அவர்விஷயமாக அருளிச்செய்த பிரபந்ந காயத்திரியான இராமாநுசநூற்றந்தாதி பெரியபெருமாளருளால் அந்த அமுதனர்க்கு அருளப்பாடிட்டுத் திருச்செவிசார்த்தப்பட்ட தாதலால், அது முதல் அது ஆழ்வார்களருளிச்செயலகளோடு சேர்த்து அநுஸந்திக்கலாயிற்று. ஆகவே, பிரணவார்த்தமான முதலாயிரத்தோடு நம்மாழ்வார்விஷயமான பாகவதசேஷத்வத்தைப் பிரதிபாதிக்கும் கண்ணிநுண்சிறுததாம்பைச் சோத்தாற்போலக் கைஙகரியத்திற் கீளபறுப்பதான இயற்பாவுடனே சேர்த்து இராமாநுசநூற்றநதாதியும் அநுஸந்திக்கத் தட்டிலலே.

**திவ்யப்ரபந்த வ்யாக்யாநங்கள்** :—ஓராணவழியாக வந்த இந்தத் திவ்யப்ரபந்தங்களின் ஆத்தங்கள் முனபெலலாம் உபதேசமுகமாய் வந்தன. ' எம்பெருமானர்தரிசநம் ' எனறு நமபெருமாள் போராதரதோடு பேரிட்டு நாட்டும்படி ஸ்ரீவைஷ்ணவஸித்தாந்ததைத எங்கும்பரவசசெய்த ஸ்ரீபாஷ்யகாரர் தாமே இந்தத்திவ்யபாபநதஙகட்கு வ்யாக்யாநம் இட்டால் அதற்குமேல் வேறொருவரும் வ்யாக்யாநம்செய்யாமல் அவ்வளவோடே நின்றுவிடு மாகையால் அங்ஙனமாகாது மேன்மேலும் கிளைததுச் செழித்து வளரவேண்டுமென்னும் திருவுள்ளக்கருத்தாலே, தாம் வ்யாகயாநமிடாமல் தமது புத்ரஸ்தாநீயராக அபிமாநிததிருந்த திருக்குருகைபபிரானபிளளானைக் கொண்டு ஸ்ரீவிஷ்ணு புராணபாக்ரியையாலே திருவாய்மொழிக்கு முதலமுதல் ஆறுயிரப்படியாக ஒரு வ்யாக்யாநம இடுவித்தார். அநநதரம் பட்டாபேரருளால வேதாநதியான நஞ்சீயர் ஸ்ரீபாஷயபாக்ரியையாலே ஒன்பதினுயிரப்படியாக ஒரு வ்யாக்யாநம் செய்தருளினர். அபபால், நம்பிள்ளையினிடத்து அர்த்தவிசேஷஙகளையெல்லாம் கேட்டருளிய பெரியவாச்சான்பிள்ளை, ஸ்ரீராமாயண பாகரியையாலே இருபத்துநாலாயிரப்படியாக ஒரு வ்யாக்யாநம் செய்தருளியது மல்லாமலும், நஞ்சீயாசிஷ்யரான நமபிள்ளையினிடதது வடககுததிருவீதிபபிள்ளை தாம் கேட்ட திருவாய்மொழியின் ஆத்தத்தைக் கேட்டதுகேட்டபடியே பட்டோலை கொள்கையால் ஸ்ருதப்ரகாஶிகாபாக்ரியையாலே ஈடுமுப்பத்தாறயிரப்படி திருவவதரித்தது. பெரியவாச்சான்பிள்ளையின் திருக்குமாராகிய நயினராச்சானது சிஷ்யரான வாதிகேஸரி அழகியமணவாளச்சீயர் சப்தார்த்தம் விளங்கும்படி பன்னீராயிரப்படிவ்யாக்யாநம் செய்தருளினர். இவர்களைத்தவிர, பிற்காலத்தில் பெரியபரிகாலஸ்வாமி முதலியோரும் திருவாய்மொழிக்கு வ்யாக்யாநம் செய்திருக்கிறார்கள். இவைகளெல்லாம் ' பகவத்விஷயம் ' எனப்படும். இப்படி திருவாய்மொழிக்குப் பலவ்யாக்யாநங்கள் ஏற்பட்டதே திருவாய்மொழியென்னுந் திவ்யப்ரபந்தத்தின் சீர்மையை வெளியாக்கும்.

பெரியவாச்சான்பிள்ளை திருவாய்மொழிக்குப்போலவே மற்றைமூவாயிரங்களுக்கும் வ்யாக்யாநம் செய்தருளினர். (பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்த வ்யாக்யாநங்களில் பெரியாழ்வார்திருமொழியின் முதல்நான்குபத்தின் வ்யாக்யாநங்கள் செல்லரித்துப் பழுதுபட்டபடியால் ப்ரமுஷிதமான அந்தபாகத்திற்கு ஸ்ரீமந்மணவாளமாமுனிகள் வியாக்கியாநமிட்டருளினர்.) இப்படி பெரியவாச்சான்பிள்ளை நாலாயிர திவ்வியபிரபந்தம் முழுவதுக்கும் வயாக்யாநம் அருளிச்செய்ததனால்தான், இந்தபரபநதம் ஸகலராலும் அர்த்தம் எளிதில் அறியும்படியாயிற்று. இதனைப் பாராட்டியே மணவாளமாமுனிகள் "பெரியவாச்சான்பிள்ளை பின்புள்ளவர்க்கும், தெரிய வியாககியைகள் செய்வால்— அரிய, அருளிச் செயற்பொருளை ஆரியர்கட்கு இபபோது, அருளிச்செயலாய்த்து அறிந்து" என்று அருளிச்செயதார். இவைகள்தவிர, திருப்பாவை அமலனாதிபிரான் கண்ணிநுண்சிறுத்தாம்பு திருவிருத்தம் முதலிய சிலபிரபந்தங்கட்கு, நஞ்சீயர் அழகியமணவாளசீயர் அழகியமணவாளபபெருமாள்நயினர் முதலியோர்கள் அருளிய வ்யாக்யாநங்களும், அமலனாதிபிரானுக்கு வேதாந்த தேசிகன் செய்தருளிய 'முநிவாஹநபோகம்' என்னும் வடமொழிவ்யாக்யாநமும், மணவாளமாமுனிகளின் திருவடிகளை ஆச்ரயித்த அப்பிள்ளை யென்பவர் இயற்பாவுக்கு அருளிச்செய்த வ்யாக்யாநமும் உள்ளன. இராமாநுசநூற்றந்தாதிக்கு மணவாளமாமுனிகளும் பிள்ளைலோகார்யசீயரும் வ்யாக்யாநமிட்டுள்ளார்கள்.

**முடிவுரை :—** இபபடி வ்யாகயாநங்களால் வளம்பெற்ற நாலாயிரதிவ்யபரபந்தங்கள், எம்பெருமானது நியமநத்தால் இந்தஉலகிருள் நீங்க வந்துஉதித்த ஆழ்வார்கள் வேதங்களிற்கூறியுள்ள அருமையான அர்த்தங்களையெல்லாம் எடுத்துத் திரட்டி எல்லாரும் அதிகரிக்கும்படி செவிக்கினிய செந்தமிழ்ப் பாசுரங்களால் அருளிச்செய்தன வாகையாலே, தமிழ்மறைகளான இவைகள், " அறியக்கற்று வல்லார் வைட்டணவர் ஆழ்கடல்ஞாலத்துள்ளே" என்கிறபடி ஸ்ரீவைஷ்ணவர்களுககு உபாதேயதமஙகளாகும்.

செய்யுளை'பாசுரம்'என்றும், பத்து அலலது பதிஞெரு செய்யுள் கொண்டதாகிய தசகமென்னும் பதிகத்தை 'திருமொழி' அல்லது 'திருவாய்மொழி' என்றும், பத்துப்பதிகங்கள் சேர்ந்த நூறுபாடலாகிய சதகத்தை 'பத்து' என்றும் கூறுவது ஸ்ரீவைஷ்ணவ ஸம்பரதாயம்.

இப்புஸ்தகத்தில ❀ இந்த ஸங்கேதம், இரண்டுதரம் ஸேவிக்கும் பாசுரங்களைக் குறிககும. * இந்த ஸஙகேதம், பிறததுமிடஙகளைக் குறிக்கும்

இபபதிப்பில ஒவ்வொரு பிரபநதத்துக்கும் முனனே அதனை அருளிச்செயத ஆழ்வாரின் சரிதாம் தமிழ்நடையில் அச்சிடபபட்டுளளது. ஒவவொரு ஆயிரமும் முடிநதபிறகு அதனதன் இறுதியில செயயுளகாாதியும் சேர்ககப்பட்டுள்ளது. இந்த ப்ரபந்தத்தில் வழங்கும் அரும்பதங்கட்கு வ்யாக்யாநங்களிற் கூறியுள்ளபடி அர்த்தம் எழுதி அகாாதியாகத் தனியே அச்சிடப்பட்டிருக்கிறது. உகந்தருளின நிலங்களாகிய திருமால்திருப்பதிகள் நூற்றெட்டின் வைபவமும் இபபுத்தகத்தின் இறுதியில் வைக்கப்பட்டிருக்கிறது.

# திவ்யப்ரபந்த அடைவு.

---

## முதலாயிரம்.

## ௧௧. பெரியதிருமொழி

### முதற்பத்து.



### இரண்டாம்பத்து.



### மூன்றாம்பத்து.



### நான்காம்பத்து.



### ஐந்தாம்பத்து.



### ஆறாம்பத்து.



### ஏழாம்பத்து.

# இயற்பா.



# உச. திருவாய்மொழி.

முதற்பத்து.

| | | பாசுரம். |
|---|---|---|
| ௫ | மொய்ம்மாம் | ௧௧ |
| ௬ | செய்யதாமரை | ௧௧ |
| ௭ | பயிலுஞ்சுடரொளி | ௧௧ |
| ௮ | முடியானே | ௧௧ |
| ௯ | சொன்னாலவிரோதம் | ௧௧ |
| ௧௦ | சன்மம்பலபல | ௧௧ |

நான்காம்பத்து.

| | | |
|---|---|---|
| ௧ | ஒருநாயகமாய் | ௧௧ |
| ௨ | பாலனாய் | ௧௧ |
| ௩ | கோவைவாயாள் | ௧௧ |
| ௪ | மண்ணையிருந்து | ௧௧ |
| ௫ | வீற்றிருந்து | ௧௧ |
| ௬ | தீர்ப்பாரை | ௧௧ |
| ௭ | சீலமில்லா | ௧௧ |
| ௮ | ஏறாளும் | ௧௧ |
| ௯ | நண்ணாதார் | ௧௧ |
| ௧௦ | ஒன்றுந்தேவும் | ௧௧ |

ஐந்தாம்பத்து.

| | | |
|---|---|---|
| ௧ | கையார்சக்கரம் | ௧௧ |
| ௨ | பொலிகபொலிக | ௧௧ |
| ௩ | மாசறுசோதி | ௧௧ |
| ௪ | ஊரெல்லாம் | ௧௧ |
| ௫ | எங்ஙனேயோ | ௧௧ |
| ௬ | கடல்ஞாலம் | ௧௧ |
| ௭ | நோற்றநோன்பு | ௧௧ |
| ௮ | ஆராவமுதே | ௧௧ |
| ௯ | மானேய்நோக்கு | ௧௧ |
| ௧௦ | பிறந்தவாறும் | ௧௧ |

ஆறாம்பத்து.

| | | |
|---|---|---|
| ௧ | வைகல்பூங்கழி | ௧௧ |
| ௨ | மின்னிடைமடவார்கள் | ௧௧ |
| ௩ | நல்குரவும் | ௧௧ |
| ௪ | குரவையாய்ச்சியர் | ௧௧ |
| ௫ | துவளில்மாமணிமாடம் | ௧௧ |
| ௬ | மாலுக்கு | ௧௧ |
| ௭ | உண்ணுஞ்சோறு | ௧௧ |
| ௮ | பொன்னுலகு | ௧௧ |
| ௯ | நீராய்நிலனாய் | ௧௧ |
| ௧௦ | உலகமுண்ட | ௧௧ |

ஏழாம்பத்து.

| | | |
|---|---|---|
| ௧ | உண்ணிலாவிய | ௧௧ |
| ௨ | கங்குலும்பகலும் | ௧௧ |
| ௩ | வெள்ளைச்சுரிசங்கு | ௧௧ |
| ௪ | ஆழியெழ | ௧௧ |
| ௫ | கற்பார் | ௧௧ |
| ௬ | பாமருமூவுலகும் | ௧௧ |
| ௭ | ஏழையராவி | ௧௧ |
| ௮ | மாயாவாமனனே | ௧௧ |
| ௯ | என்றைக்கும் | ௧௧ |
| ௧௦ | இன்பம்பயக்க | ௧௧ |

எட்டாம்பத்து.

| | | |
|---|---|---|
| ௧ | தேவிமாராவார் | ௧௧ |
| ௨ | நங்கள்வரிவளை | ௧௧ |
| ௩ | அங்குமிங்கும் | ௧௧ |
| ௪ | வார்கடாவருவி | ௧௧ |
| ௫ | மாயக்கூத்தா | ௧௧ |
| ௬ | எல்லியும் | ௧௧ |
| ௭ | இருத்தும் | ௧௧ |
| ௮ | கண்கள்சிவந்து | ௧௧ |
| ௯ | கருமாணிக்கமலை | ௧௧ |
| ௧௦ | நெடுமாற்கடிமை | ௧௧ |

ஒன்பதாம்பத்து.

| | | |
|---|---|---|
| ௧ | கொண்டபெண்டிர் | ௧௧ |
| ௨ | பண்டைநாளாலே | ௧௧ |
| ௩ | ஓராயிரமாய் | ௧௧ |
| ௪ | மையார் | ௧௧ |
| ௫ | இன்னுயிர் | ௧௧ |
| ௬ | உருகுமால | ௧௧ |
| ௭ | எங்கானல் | ௧௧ |
| ௮ | அறுக்கும் | ௧௧ |
| ௯ | மல்லிகை | ௧௧ |
| ௧௦ | மாலைநண்ணி | ௧௧ |

பத்தாம்பத்து.

| | | |
|---|---|---|
| ௧ | தாளதாமரை | ௧௧ |
| ௨ | கெடுமிடர் | ௧௧ |
| ௩ | வேயமருதோளிணை | ௧௧ |
| ௪ | சார்வேதவநெறி | ௧௧ |
| ௫ | கண்ணன்கழலிணை | ௧௧ |
| ௬ | அருள்பெறுவார் | ௧௧ |
| ௭ | செஞ்சொற்கவிகாள் | ௧௧ |
| ௮ | திருமாலிருஞ்சோலை | ௧௧ |
| ௯ | சூழ்விசும்பு | ௧௧ |
| ௧௦ | முனியேநான்முகனே | ௧௧ |

ஆக, பாசுரம் - ௧௧௦௨.

இராமாநுச நூற்றந்தாதி - ௧௦௮.

ஸ்ரீ

    

# பொதுத்தனியன்கள்.

---

## மணவாளமாமுனிகள் தனியன்.

(அழகியமணவாளன் அருளிச்செய்தது)

𑌶𑍍𑌰𑍀𑌶𑍈𑌲𑍇𑌶𑌦𑌯𑌾𑌪𑌾𑌤𑍍𑌰𑌂 𑌧𑍀𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌗𑍁𑌣𑌾𑌰𑍍𑌣𑌵𑌮𑍍 ।
𑌯𑌤𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌪𑍍𑌰𑌵𑌣𑌂 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌰𑌮𑍍𑌯𑌜𑌾𑌮𑌾𑌤𑌰𑌂 𑌮𑍁𑌨𑌿𑌮𑍍 ॥

శ్రీశైలేశదయాపాత్రం ధీభక్త్యాదిగుణార్ణవమ్।
యతీన్ద్రప్రవణంవన్దే రమ్యజామాతరంమునిమ్॥

ஸ்ரீஸைலேஸதயாபாத்ரம தீபக்த்யாதிகுணார்ணவம்-
யதீந்த்ரப்ரவணம்வந்தே ரம்யஜாமாதரம்முநிம்.

## குருபரம்பரையின் தனியன்.

(ஸ்ரீ கூரத்தாழ்வான் அருளிச்செய்தவை)

𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑍀𑌨𑌾𑌥𑌸𑌮𑌾𑌰𑌮𑍍𑌭𑌾𑌂 𑌨𑌾𑌥𑌯𑌾𑌮𑍁𑌨𑌮𑌧𑍍𑌯𑌮𑌾𑌮𑍍 ।
𑌅𑌸𑍍𑌮𑌦𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌪𑌰𑍍𑌯𑌨𑍍𑌤𑌾𑌂 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌗𑍁𑌰𑍁𑌪𑌰𑌮𑍍𑌪𑌰𑌾𑌮𑍍 ॥

లక్ష్మీనాథసమారమ్భాం నాథయామునమధ్యమామ్।
అస్మదాచార్యపర్యన్తాం వన్దే గురుపరమ్పరామ్॥

லக்ஷ்மீநாதஸமாரம்பாம் நாதயாமுநமத்யமாம்-
அஸ்மதாசார்யபர்யந்தாம் வந்தேகுருபரம்பராம்.

## எம்பெருமானார் தனியன்.

𑌯𑍋𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑌚𑍍𑌯𑍁𑌤𑌪𑌦𑌾𑌮𑍍𑌬𑍁𑌜𑌯𑍁𑌗𑍍𑌮𑌰𑍁𑌕𑍍𑌮
𑌵𑍍𑌯𑌾𑌮𑍋𑌹𑌤𑌸𑍍𑌤𑌦𑌿𑌤𑌰𑌾𑌣𑌿 𑌤𑍃𑌣𑌾𑌯 𑌮𑍇𑌨𑍇 ।
𑌅𑌸𑍍𑌮𑌦𑍍𑌗𑍁𑌰𑍋𑌰𑍍𑌭𑌗𑌵𑌤𑍋𑌽𑌸𑍍𑌯 𑌦𑌯𑍈𑌕𑌸𑌿𑌨𑍍𑌧𑍋𑌃
𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌸𑍍𑌯 𑌚𑌰𑌣𑍌 𑌶𑌰𑌣𑌂 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑍇 ॥

యోనిత్యమచ్యుతపదామ్బుజయుగ్మరుక్మ వ్యామోహతస్తదితరాణితృణాయ మేనే।
అస్మద్గురోర్భగవతోఽస్యదయైకసిన్ధోః రామానుజస్యచరణౌ శరణంప్రపద్యే॥

யோநித்யமச்யுதபதாம்புஜயுக்மருக்ம
வ்யாமோஹதஸ்ததிதராணி த்ருணாய மேநே-
அஸ்மத்குரோர்பகவதோஸ்ய தயைகஸிந்தோ:
ராமாநுஜஸ்யசரணௌ ஶரணம்ப்ரபத்யே॥

## நம்மாழ்வார் தனியன்.

(ஸ்ரீ ஆளவந்தார் அருளிச்செய்தது.)

𑌮𑌾𑌤𑌾 𑌪𑌿𑌤𑌾 𑌯𑍁𑌵𑌤𑌯𑌸𑍍𑌤𑌨𑌯𑌾 𑌵𑌿𑌭𑍂𑌤𑌿𑌃
𑌸𑌰𑍍𑌵𑌂 𑌯𑌦𑍇𑌵 𑌨𑌿𑌯𑌮𑍇𑌨 𑌮𑌦𑌨𑍍𑌵𑌯𑌾𑌨𑌾𑌮𑍍 ।
𑌆𑌦𑍍𑌯𑌸𑍍𑌯 𑌨𑌃 𑌕𑍁𑌲𑌪𑌤𑍇𑌰𑍍𑌵𑌕𑍁𑌳𑌾𑌭𑌿𑌰𑌾𑌮𑌂
𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍍𑌤𑌦𑌙𑍍𑌘𑍍𑌰𑌿𑌯𑍁𑌗𑌳𑌂 𑌪𑍍𑌰𑌣𑌮𑌾𑌮𑌿 𑌮𑍂𑌰𑍍𑌧𑍍𑌨𑌾 ॥

మాతా పితా యువతయస్తనయా విభూతిః సర్వం యదేవ నియమేన మదన్వయానాం।
ఆద్యస్య నః కులపతేర్వకుళాభిరామం శ్రీమత్తదంఘ్రియుగళం ప్రణమామి మూర్ధ్నా॥

மாதாபிதாயுவதயஸ்தநயாவிபூதிஸ்
ஸாவம்யதேவநியமேநமதந்வயாநாம்-
ஆத்யஸ்யந: குலபதேர்வகுளாபிராமம்
ஸ்ரீமத்ததங்க்ரியுகளம்ப்ரணமாமிமூர்த்நா.

## ஆழ்வார்கள் உடையவர் தனியன்.

(ஸ்ரீ பராசரபட்டர் அருளிச்செய்தது.)

𑌭𑍂𑌤𑌂 𑌸𑌰𑌶𑍍𑌚 𑌮𑌹𑌦𑌾𑌹𑍍𑌵𑌯 𑌭𑌟𑍍𑌟𑌨𑌾𑌥
𑌶𑍍𑌰𑍀𑌭𑌕𑍍𑌤𑌿𑌸𑌾𑌰 𑌕𑍁𑌲𑌶𑍇𑌖𑌰 𑌯𑍋𑌗𑌿𑌵𑌾𑌹𑌾𑌨𑍍 ।
𑌭𑌕𑍍𑌤𑌾𑌙𑍍𑌘𑍍𑌰𑌿𑌰𑍇𑌣𑍁 𑌪𑌰𑌕𑌾𑌲 𑌯𑌤𑍀𑌨𑍍𑌦𑍍𑌰 𑌮𑌿𑌶𑍍𑌰𑌾𑌨𑍍
𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍍𑌪𑌰𑌾𑌙𑍍𑌕𑍁𑌶 𑌮𑍁𑌨𑌿𑌂 𑌪𑍍𑌰𑌣𑌤𑍋𑌽𑌸𑍍𑌮𑌿 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑍍 ॥

భూతం సరశ్చ మహదాహ్వయ భట్టనాథ శ్రీభక్తిసార కులశేఖర యోగివాహాన్।
భక్తాంఘ్రిరేణు పరకాల యతీంద్ర మిశ్రాన్ శ్రీమత్పరాంకుశ మునిం ప్రణతోఽస్మి నిత్యం॥

பூதம் † ஸரஶ்சமஹதாஹ்வயபட்டநாத
ஸ்ரீபக்திஸாரகுலஶேகரயோகிவாஹாந் -
பக்தாங்க்ரிரேணுபரகாலயதீந்த்ரமிஶ்ராந
ஸ்ரீமத்பராங்குஶமுநிம்ப்ரணதோஸ்மிநித்யம்.

———:o———

† 'ஸரஸ' என்றும் பாடம்.

ஸ்ரீ

# பெரியாழ்வார் வைபவம்.

𑌮𑌿𑌥𑍁𑌨𑍇 𑌸𑍍𑌵𑌾𑌤𑌿𑌜𑌂 𑌵𑌿𑌷𑍍𑌣𑍋𑌰𑍍𑌰𑌥𑌾𑌂𑌶𑌂 𑌧𑌨𑍍𑌵𑌿𑌨𑌃 𑌪𑍁𑌰𑍇 ।
𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑍇 𑌶𑍍𑌵𑌶𑍁𑌰𑌂 𑌵𑌿𑌷𑍍𑌣𑍋𑌰𑍍𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌚𑌿𑌤𑍍𑌤𑌂 𑌪𑍁𑌰𑌃𑌶𑌿𑌖𑌮𑍍 ॥

*மிதுநேஸ்வாதிஜம்விஷ்ணோ: ரதாம்ஸந்தநவிந:புரே-*
*ப்ரபத்யேஸ்வஸுரம்விஷ்ணோ: விஷ்ணுசித்தம்புரஸ்ஸிகம*

இவ்வாழ்வார், ஸ்ரீவில்லிபுத்தூரில் கலி - சஎ - ஆவதான க்ரோதநவரு ஆனிமீ சுகலபக்ஷம் ஏகாதசி ஞாயிற்றுக்கிழமைகூடின ஸ்வாதிநக்ஷத்ரத்தில கருடாம்ஸராய வேயர்குலத்தில் பதுமையாருக்கும முகுநதாசாரியருககுப புத்ராராகத திருவவதரித்து, "விஷ்ணு சித்தர்"என்னும் திருநாமததையுடைய ராய், வடபெருங்கோயிலுடையானுடைய நிர்ஹேதுக கடாக்ஷததினல் ஸஹஜ பகவத்தாஸ்ய முடையராய், 'அவனுகந்த அடிமையே நாம் செயயததககது' என்று நினைதது, அதை யறிகைக்கு அவதாரங்களை யாராய்ந்து பார்தத விடத தில், ஸர்வேஸ்வரன், பூபாரத்தைப போக்கித தர்மத்தை நிலை நிறுததி ஸாதுக் களைக் காக்கும்பொருட்டுத் தேவகியின்வயிற்றில கிருஷ்ணனுயப்பிறந்து யசோ தைவளர்க்க வளர்ந்து, கமஸனுக்குப் பணிசெய்துவந்த ஸ்ரீமாலாகாரர்திருமாளி கையில் எழுந்தருளிப பூவை இரக்க, அவர உகநது சூட்டினபடியைக கணடு, 'இவ்விஷயததுக்குப் பூவிடுகையே உகபபு' எனறு அறுதியிட்டுத திருநந்த வநஞ்செய்து வடபெருங்கோயிலுடையானுக்குத திருமாலை கட்டிச சாததிக் கொண்டு வநதார.

இக்காலத்தில் பாண்டிய குலத்திற் பிறநத ஸ்ரீவல்லபதேவன் என்னும ஓரரசன், தார்மிகனுகையால் சிறியதைப பெரியது நலியாதபடி கூடல் என னும் மதுரையில் அரசாண்டுகொண்டிருந்தான. அவ்வரசன, ஒருநாளிராததிரி யில் நகரசோதனைக்கு வரும்போது, ஒரு தெருததிண்ணையின மேல் வேதிய னொருவன் இருக்கக் கண்டு, அவனை யெழுப்பி "நீ யார்?" எனறுகேட்க, அவ னும் "நான் ஒரு பிராமணன்; கங்காஸ்நாநம் பண்ணி வருகின்றேன" எனன, அரசன் "உனக்கு ஏதேனும் நீதி தெரிந்தது உண்டாகில சொல்வாய்" என்ன, அவ்வந்தணனும், "மழைக்காலத்தில் வேண்டியவைகளுககு மற்றை எட்டு மாஸங்களிலும், இராததிரிக்கு வேண்டியவைகளுக்குப பகலிலும், முதுமை யில் வேண்டியவைகளுககு இளமையிலும, மறுமைக்கு வேண்டியவைகளுககு இம்மையிலும் ஒருவன் ப்ரயத்நஞ்செய்யவேண்டும்" என்னும் பொருளுள்ள ["வர்ஷார்த்த மஷ்டௌப்ரயதேதமாஸாந் நிஸார்த்தமர்த்தம்திவஸம்யதேத- வார்த்தக்ய ஹேதோர்வயஸாநவேந பரத்ரஹேதோரிஹஜந்மநாச"] சுலோகத் தைச்சொல்ல, அரசனும்வித்வானுகையால், 'நமக்கோ த்ருஷ்டத்தில ஒருகுறை யுமில்லை; இனி அத்ருஷ்டயத்நம்பண்ணும்படி யென்?' என்று இராமுழுதும்

அதுவே சிந்தையாக இருந்து மறுமைப்பேற்றுக்கு முயற்சி செய்யக் கருதி, பொழுது விடிந்தவுடனே தனது புரோஹிதனை செல்வநம்பியை நோக்கி "புருஷார்த்த நிர்ணய பூர்வகமாக அத்ருஷ்டஸித்திக்கு உபாயமென்?" என்று வினவ, புரோஹிதனும், "வித்வான்களைத் திரட்டி வேதாந்தஸித்தமான பரதத்வநிர்ணயம் பண்ணுவித்து அவ்வழியாலே பெறவேணும்" என்ன, அரசனும் "அப்படியே யாகிறது" என்று வெகுத்ரவ்யத்தைக் கிழிச்சீரையிலே முடிந்து அப்பொற்கிழியை வித்யாசுல்கமாகச் சபா மண்டபத்தின் முன்னிலையிலே ஒரு தோரணத்தில் கட்டுவித்து, ராஜ்யத்தில் வித்வான்களைத்திரட்டும்படி உத்தரவு செய்தான்.

அப்போது, வடபெருங்கோயிலுடையான், இவ்வாழ்வாரைக் கொண்டு வேதாந்தத்திற் சொல்லப்படும் பரதத்வத்தை இவ்வுலகத்தில் ப்ரகாசிப்பிக்க நினைக்க, மெய்யடியாரான இவ்வாழ்வாருடைய ஸ்வப்நத்தில் எழுந்தருளி, "நீர் போய்க் கிழியை அறுத்துக் கொண்டு வாரும்" என்று அருளிச் செய்ய, "அது வித்யாசுல்கமாக ஏற்படுத்தப் பட்டதன்றோ? ஒன்றுமறியாத நான் என் கையிற் கொட்டுத்தழும்பைக் காட்டிக் கிழியை அறுக்கலாமோ?" என்ன, "அது உமக்குப் பரமோ? நாமன்றோ வேதார்த்தத்தைப் ப்ரதிபாதிக்கக் கடவோம்" என்று ஆழ்வாரை நிர்ப்பந்தித்தருள, அவரும் சிற்றஞ்சிறுகாலையில் எழுந்திருந்து, "இது ஒரு ஸ்வப்ந மிருந்தபடி யென்!" என்று ஆச்சரியப்பட்டு, பாண்டியனுடைய வித்வத் கோஷ்டியில் எழுந்தருளினவளவில், செல்வநம்பியும் அரசனும் ப்ராஹ்மணோத்தமரான இவ்வாழ்வாரைக் கண்டு எழுந்து சேவித்து மிகவும் ஸத்கரிக்க, இதனைக்கண்ட வித்வான்கள், "அளவிறந்த வேத சாஸ்த்ரங்களைப் பயின்று தேர்ந்த எங்கள்முன்னிலையில் யாதொரு தேர்ச்சியுமில்லாத இவனை ஸத்கரித்தது சிறிதும் தகுதியன்று" என்று கோபத்துடன் ஆக்ஷேபிக்க, அப்போது, அபிமானதுங்கனான செல்வநம்பி ஆழ்வாரைத் தண்டனிட்டு, "வேதாந்த ப்ரதிபாத்யமான பரதத்வத்தை நிச்சயித்து அருளிச்செய்ய வேணும்" என்று ப்ரார்த்தித்தார்.

இவ்வாழ்வாரும், ஸ்ரீவால்மீகி பகவான் ப்ரஹ்மாவின் ப்ரஸாதத்தாலே எல்லா வ்ருத்தாந்தங்களையும் அறிந்தாற்போலவும் ஸ்ரீபாஞ்சஜந்யஸ்பர்சத்தாலே ராஜகுமாரனான த்ருவன் ஸர்வஜ்ஞனானாற் போலவும், வடபெருங்கோயிலுடையானுடைய நிர்ஹேதுக கடாக்ஷத்தாலே நன்றாக அறிந்து கொண்டு "அகாரவாச்யனான ஸ்ரீமந்நாராயணனே ஸர்வஸ்மாத் பரன்" என்று ச்ருதி ஸ்ம்ருதி இதிஹாஸ புராணாதி வசநஸஹஸ்ரங்களால் பஹுமுகமாக ப்ரதிபாதித்தருளிச் செய்கையால், வித்யாசுல்கமாகத் தோரணத்தில் கிழியாகக் கட்டி வைத்தது இவர்முன்னே தானே தாழ வளைய, ஆழ்வாரும் ப்ரீதியோடே அக்கிழியை அறுத்துக் கொண்டருளினார்.

இதனைக்கண்ட வித்வான்களும் அரசன் முதலானோரும் வியப்புற்று, இவர் திருவடிகளில் தண்டன் ஸமர்ப்பித்து, மிகவும் ப்ரீதியுடனே ஆழ்வாரைப் பட்டத்துயானையின்மேலேற்றி, அந்த வித்வான்கள் குடை கொடி சாமர ஆலவட்டம் முதலானவை தாங்களே பணிமாறிக் கொண்டு உடன் இருந்து வீதிவலஞ் செய்விக்கையில், "வேதப்பயன் கொள்ள வல்ல மெய்ஞ்ஞானவான் வந்தான்" என்று விருதூதித் திருச்சின்னம் பணிமாறவும், ஈண்டிய சங்கமெய்ந்தூதவும், அரசன் இவருக்கு 'பட்டர்பிரான்' என்று திருநாமம்சாத்தித் தானும் தன் பரிகரத்துடன் ஸேவித்து நிற்க, நகரி வலம் வருகிற அந்த மஹோத்ஸவ

த்தைக் காண்கைக்காக, புத்ரர்களை ப்ரஹ்மரதம் பண்ணும்போது மாதாபிதாக்கள் காண ஆதரித்து வருமாபோலே, ஸர்வேச்வரனும், பிராட்டி ஸஹிதனாய்க் கரியதிருமேனியுடன் பெரியதிருவடிமேலேறி, திவ்யாயுதங்களைப் பரிந்து, ப்ரஹ்ம ருத்ராதிகளெல்லாரும் ஸேவிக்க ஆகாசத்தில் திவ்யமங்கள விக்ரஹத்தோடுங் கூடி, நெருங்கிநிற்கிற இத்திரளோடு ஸந்நிஹிதனாக, அந்தத் திவ்யமங்கள விக்ரஹத்தை ஆழ்வார் ஸேவித்து, தமஸம்ருத்தியைப் பார்த்து இறுமாந்திராதே, அவன் கடாக்ஷத்தாலே அளவற்ற பக்தியைப் பெற்றவராகையாலே, அவனுடைய ஸர்வஜ்ஞத்வம் ஸர்வசக்தித்வம் ஸர்வரக்ஷகத்வம் முதலானவைகளை அநுஸந்திப்பதற்கு முன்னமே முதலில் நீலமேனியிலுண்டான ஸௌந்தர்யம் ஸௌகுமார்யம் லாவண்யம் யௌவநம் முதலானவற்றைக் கண்டு அவற்றில் ஈடுபட்டுப் பக்தி பரவசராய், அதனால் தம் நிலையையும் எம்பெருமான் நிலையையும் மறந்து "காலாதீதமான பரமபதத்தில் நித்யஸூரிகளால் எப்போதும் தாஸ்யம் பண்ணப்படுகிற வஸ்து கலிநடமாடுகிற இத்தேசத்தில் வந்து கண்ணுக்கு விஷயமாவதே! இவ்வஸ்துவுக்கு என்ன தீங்கு வருகிறதோ!" என்னும் அதிசங்கையாலே, யானைக்கழுத்தின் மேல் கிடக்கும் மணிகளையே தாளமாகக் கொண்டு "இந்த ஸௌந்தர்யாதிகளுக்கு ஒரு தீங்கு வாராதே நித்யமாகச் செல்லவேணும்" என்று மங்களாசாஸநம்பண்ணியருளி, "இவ்விஷயத்துக்கு நாமொருவரும் மங்களாசாஸநம் பண்ணுகை போதாது" என்று ஐச்வர்ய கைவல்ய பகவச்சரணார்த்திகளையும் மங்களாசாஸநயோக்யராம்படி திருத்தி ச்சேர்த்துக்கொண்டு பலவகையாலும் திருப்பல்லாண்டு பாடியருளினார்

பின்பு, இவ்வாழ்வார் அவ்வரசனையும் விசேஷகடாக்ஷம் செய்தருளி, அவனால் ஸத்கரிக்கப்பட்டவராய், மீண்டு ஸ்ரீவில்லிபுத்தூருக்கு எழுந்தருளி, தநத்தை வடபெருங்கோயிலுடையான் திருமுன்பே வைத்துத் தண்டன் ஸமர்ப்பித்து, தாம் முதலில் உபக்ரமித்தருளினபடியே திருமாலைகட்டி வடபெருங்கோயிலுடையானுக்கு நித்யமாகச் சாத்தி ஸேவித்துக்கொண்டிருந்தார்.

இவர் தாம் கிருஷ்ணாவதாரத்திலே ஆதிதொடங்கி ஆழ்ந்த சிந்தையராய் அவ்வவதாரவ்ருத்தாந்தத்தையே பிரதானமாகப் பாராட்டி அனுபவித்து அவ்வனுபவத்தாலாகிய ஆநந்தம் உள்ளடங்காமற் பெருக்கெடுத்துப் பாய்தலால் அதனைப் பிரபந்தமுகமாக வெளியிடத்தொடங்கி க்ருஷ்ணன் அவதரித்தது முதலாகச் செய்தருளின வ்ருத்தாந்தத்தை, கோபஜநமத்தை ஆஸ்தாநம் பண்ணி அநுகரித்து "பெரியாழ்வார் திருமொழி" என்கிற திவ்ய ப்ரபந்தமாக அருளிச்செய்து ஸஜ்ஜநங்களுக்கு உபகரித்தருளி லோகத்தை வாழ்வித்தருளினார்

நல்லதிருப்பல்லாண்டு நான்மூன்றோன் வாழியே
    நானூற்றறுபத்தொன்றும் நமக்குரைத்தான் வாழியே
சொல்லரியவானிதனிற் சோதிவந்தான் வாழியே
    தொடைசூழ்ந்து கொடுத்தாளைத் தொழுமப்பன் வாழியே
செல்வநம்பி தனைப்போலச் சிறப்புற்றான் வாழியே
    சென்றுகிழியறுத்து மால்தெய்வமென்றான் வாழியே
வில்லிபுத்தூர் நகரத்தை விளங்கவைத்தான் வாழியே
    வேதியர்கோன் பட்டர்பிரான் மேதினியில் வாழியே

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.



ஸ்ரீ

ஆழ்வார்கள் அருளிச்செய்த

நாலாயிர திவ்விய ப்ரபந்தங்களுள்

# முதலாயிரம்.

---

## திருப்பல்லாண்டு பெரியாழ்வார் திருமொழிகளின் தனியன்கள்.

(நாதமுனிகள் அருளிச்செய்தது.)

𑌗𑍁𑌰𑍁𑌮𑍁𑌖𑌮𑌨𑌧𑍀𑌤𑍍𑌯 𑌪𑍍𑌰𑌾𑌹𑌵𑍇𑌦𑌾𑌨𑌶𑍇𑌷𑌾𑌨𑍍
𑌨𑌰𑌪𑌤𑌿𑌪𑌰𑌿𑌕𑍢𑌪𑍍𑌤𑌂𑌶𑍁𑌲𑍍𑌕𑌮𑌾𑌦𑌾𑌤𑍁𑌕𑌾𑌮𑌃 ।
𑌶𑍍𑌵𑌶𑍁𑌰𑌮𑌮𑌰𑌵𑌨𑍍𑌦𑍍𑌯𑌂 𑌰𑌙𑍍𑌗𑌨𑌾𑌥𑌸𑍍𑌯 𑌸𑌾𑌕𑍍𑌷𑌾𑌤𑍍
𑌦𑍍𑌵𑌿𑌜𑌕𑍁𑌲𑌤𑌿𑌲𑌕𑌂 𑌤𑌂 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌚𑌿𑌤𑍍𑌤𑌂 𑌨𑌮𑌾𑌮𑌿 ॥

గురుముఖమనధీత్య ప్రాహ వేదానశేషాన్ నరపతిపరిక్లృప్తం శుల్కమాదాతుకామః
శ్వశురమమరవన్ద్యం రఙ్గనాథస్య సాక్షాత్ ద్విజకులతిలకం తం విష్ణుచిత్తం నమామి॥

குருமுகமநதீத்ய ப்ராஹவேதாநஶேஷாந்
நரபதிபரிக்ல்பதம் ஶுல்கமாதாதுகாம:-
ஶ்வஶுரமமரவந்த்யம் ரங்கநாதஸ்ய ஸாக்ஷாத்
த்விஜகுலதிலகந்தம் விஷ்ணுசித்தம் நமாமி.

(பாண்டியபட்டர் அருளிச்செய்தவை)

இருவிகற்ப நேரிசைவெண்பா.

மின்னார்தடமதிள்சூழ் வில்லிபுத்தூரென்று* ஒருகால்
சொன்னாகழற்கமலஞ்சூடினோம்* —முன்னாள்
கிழியறுத்தானென்றுரைத்தோம், *† கீழ்மையினிற்சேரும்
வழியறுத்தோம் நெஞ்சமே! வந்து. *

பாண்டியன்கொண்டாடப் பட்டர்பிரான்வந்தானென்று *
ஈண்டியசங்க ‡ மெடுத்தூத *—வேண்டிய
வேதங்களோதி விரைந்து கிழியறுத்தான் *
பாதங்கள்யாமுடையபற்று.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.

---

† 'கீழ்மையினிச்சேரும்' என்று பாடாந்தரம்.

‡ 'மடுத்தூத' என்றும், 'எடுத்தோத'என்றும், 'அடுத்தூத'என்றும் பாடம்.

பெரியாழ்வார் அருளிச்செய்த

# திருப்பல்லாண்டு.

—o—

காப்பு.

குறள்வெண்செந்துறை.

(தோடயம்-நாட்டைராகம்-ஜம்பைதாளம்.)

❁ † பல்லாண்டுபல்லாண்டு பல்லாயிரத்தாண்டு *
‡ பலகோடிநூறாயிரம்
மல்லாண்டதிண்தோள்மணிவண்ணா ! * உன்
§ செவ்வடிசெவ்விதிருக்காப்பு. (௧)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

(நாட்டைராகம்-அடதாளம்)

❁ அடியோமோடும்நின்னோடும் பிரிவின்றிஆயிரம்பல்லாண்டு *
வடிவாய்நின்வலமார்பினில் வாழ்கின்றமங்கையும்பல்லாண்டு *
வடிவார்சோதிவலத்துறையும் சுடராழியும்பல்லாண்டு *
படைபோர்புக்குமுழங்கும் அப்பாஞ்சசன்னியமும்பல்லாண்டே. (௨)

வாழாட்பட்டுநின்றீருள்ளீரேல் வந்துமண்ணும்மணமும்கொண்மின் *
கூழாட்பட்டுநின்றீர்களை எங்கள்குழுவினில்புகுதலொட்டோம் *
ஏழாட்காலும்பழிப்பிலோம்நாங்கள் இராக்கதர்வாழ்இலங்கை *
பாழாளாகப்படைபொருதானுக்குப் பல்லாண்டுகூறுதுமே. (௩)

ஏடுநிலத்தில்இடுவதன்முன்னம்வந்து எங்கள்குழாம்புகுந்து *
கூடுமனமுடையீர்கள் வரம்பொழிவந்துஒல்லைக்கூடுமினோ *
நாடுநகரமும்நன்கறிய நமோநாராயணாயவென்று *
பாடுமனமுடைப்பத்தருள்ளீர் ! வந்துபல்லாண்டுகூறுமினே. (௪)

அண்டக்குலத்துக்கதிபதியாகி அசுரரிராக்கதரை *
$ இண்டைக்குலத்தைஎடுத்துக்களைந்த இருடீகேசன்தனக்கு *
தொண்டக்குலத்திலுள்ளீர்! வந்தடிதொழுது ஆயிரநாமம்சொல்லி *
பண்டைக்குலத்தைத்தவிர்ந்துபல்லாண்டுபல்லாயிரத்தாண்டென்மினே.

---

† முதலிரண்டுபாசுரங்களும் தனித்தனி வெவ்வேறாயினும் பொருட்சேர்த்தியால் இவற்றை ஒருபாசுரம்போல ஸேவிப்பது ஸம்பரதாயம்.

‡ 'பலகோடிநூறாயிரமும்' என்றும் பாடம் § 'சேவடி' என்றும் பாடம்.

$ 'இண்டக்குலம்' என்றும் பாடம்.

எந்தைதந்தைதந்தைதந்தைதம்மூத்தப்பன் ஏழ்படிகால்தொடங்கி *
வந்துவழிவழி ஆட்செய்கின்றோம் * திருவோணத்திருவிழவில்
அந்தியம்போதிலரியுருவாகி அரியையழித்தவனை *
பந்தனைதீரப்பல்லாண்டு பல்லாயிரத்தாண்டென்றுபாடுதுமே. (௬)

• தீயிற்பொலிகின்றசெஞ்சுடராழி திகழ்திருச்சக்கரத்தின் *
கோயிற்பொறியாலேயொற்றுண்டுநின்று குடிகுடி ஆட்செய்கின்றோம் *
மாயப்பொருபடைவாணனை ஆயிரந்தோளும்பொழிகுருதி
பாய * சுழற்றிய ஆழிவல்லானுக்குப் பல்லாண்டுகூறுதுமே. (௭)

† நெய்யிடைநல்லதோர்சோறும் நியதமும்அத்தாணிச்சேவகமும் *
கையடைக்காயும்கழுத்துக்குப்பூணொடு காதுக்குக்குண்டலமும் *
மெய்யிடநல்லதோர்சாந்தமும்தந்து என்னைவெள்ளுயிராக்கவல்ல *
பையுடைநாகப்பகைக்கொடியானுக்குப் பல்லாண்டுகூறுவனே. (௮)

உடுத்துக்களைந்த ‡ நின்பீதகவாடையுடுத்துக் கலத்ததுண்டு *
தொடுத்ததுழாய்மலர்சூடிக்களைந்தன சூடும்இத்தொண்டர்களோம் *
விடுத்ததிசைக்கருமம்திருத்தித் திருவோணத்திருவிழவில் *
படுத்தபைந்நாகணைப்பள்ளிகொண்டானுக்குப் பல்லாண்டுகூறுதுமே. ()

எந்நாள்எம்பெருமான் உன்தனக்கடியோமென்றெழுத்துப்பட்ட
அந்நாளே * அடியோங்களடிக்குடில் வீடுபெற்றுஉய்ந்ததுகாண் *
செந்நாள்தோற்றித் திருமதுரையுள்சிலைகுனித்து * ஐந்தலைய
பைந்நாகத்தலைப்பாய்ந்தவனே ! உன்னைப்பல்லாண்டுகூறுதுமே. (௧௦)

❀ அல்வழக்கொன்றுமில்லா அணிகோட்டியர்கோன் * அபிமானதுங்கனை
செல்வனைப்போலத் திருமாலே ! நானுமஉனக்குப்பழவடியேன் *
நல்வகையால்நமோநாராயணாவென்று நாமம்பலபரவி *
பல்வகையாலும்பவித்திரனே ! உன்னைப்பல்லாண்டுகூறுவனே. (௧௧)

❀ பல்லாண்டென்றுபவித்திரனைப் பரமேட்டியை * சார்ங்கமெனும்
வில்லாண்டான்தன்னை வில்லிபுத்தூர்விட்டுசித்தன்விரும்பியசொல் *
நல்லாண்டென்றுநவின்றுரைப்பார் நமோநாராயணாயவென்று *
பல்லாண்டும்பரமாத்மனைச் சூழ்ந்திருந்தேத்துவர்பல்லாண்டே. (௧௨)

அடிவரவு:—பல் அடி வாழ் ஏடு அண்டம் எந்தை தீ நெய் உடுத்து எந்நாள் அல்வழக்கு பல்லாண்டு வண்ணம

[ஆதிகூறுதும, அந்தரம் கூறுமின, அண்டம்எனமின, எந்தைபாடுதும, தீ உடுத்து எந்நாள் கூறுதும், நெய்யும் அல்லும கூறுவனே ]

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்

† 'நெய்யெடை' என்றும், 'நெய்யடை' என்றும்பாடம். ‡ 'நன' என்றுங்கூறுவா

முற்றிலும் தூதையும் முன்கைம்மேல்பூவையும் *
சிற்றிலிழைத்துத் திரிதருவோர்களை *
பற்றிப்பறித்துக்கொண்டு ஓடும்பரமன்தன் *
நெற்றி இருந்தவா காணீரே நேரிழையீர்! வந்துகாணீரே. (க௯)

அழகியபைம்பொன்னின்கோல் அங்கைக்கொண்டு *
கழல்கள்சதங்கை கலந்தெங்குமார்ப்ப *
மழகன்றினங்கள் மறித்துத்திரிவான் *
குழல்கள்இருந்தவாகாணீரே குவிமுலையீர்! வந்துகாணீரே. (உ௦)

தரவுகொச்சகக்கலிப்பா.

❀ சுருப்பார்குழலி யசோதைமுன்சொன்ன *
திருப்பாதகேசத்தைத் தென்புதுவைப்பட்டன் *
விருப்பாலுரைத்த இருபதோடொன்றும்
உரைப்பார்போய் * வைகுந்தத்து ஒன்றுவர்தாமே. (உக)

அடிவரவு:—சீதம் முத்து பணை உழந்தாள் பிறங்கிய மத்த இருங்கை வந்த அதிரும் பெருமா நாளகள் மை வண்டு எம் நோக்கி விண் பருவம் மண் முற்றில அழகிய சுருப்பார் மாணிக்கம்

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்

---

## ௩- ஆந் திருமொழி- மாணிக்கங்கட்டி.

---

[கண்ணனைத் தொட்டிலிலிட்டுத் தாலாட்டுதல்: தாலப்பருவம்.]

கலித்தாழிசை. (நீலாம்பரிராகம்-அடதாளம்.)

❀ மாணிக்கம்கட்டி வயிரமிடைகட்டி *
ஆணிப்பொன்னால்செய்த வண்ணச்சிறுதொட்டில் *
பேணிஉனக்குப் பிரமன்விடுதந்தான் *
மாணிக்குறளனே! தாலேலோ
வையமளந்தானே! தாலேலோ. (க)

உடையார்கனமணியோடு ஒண்மாதுளம்பூ *
இடைவிரவிக்கோத்த எழில் † தெழ்கினோடு *
விடையேறுகாபாலி ஈசன்விடுதந்தான் *
உடையாய்! அழேல்அழேல்தாலேலோ
உலகமளந்தானே! தாலேலோ. (உ)

† 'தெள்ரு' என்றும், 'தொழ்கு' என்றும் கூறுவர்.

எந்தபபிரானுர் எழில்திருமாவர்க்கு *
சந்தமழகிய தாமரைததாளர்க்கு *
இந்திரனதானும் எழிலுடைக்கிண்கிணி
தநதுஉவனுய்நின்ருன் தாலேலோ
தாமரைக்கண்ணனே ! தாலேலோ (௩)

சங்கின்வலம்புரியும சேவடிக்கிண்கிணியும் *
அங்கைசசரிவளையும நாணும அரைநதொடரும் *
அங்கண்விசும்பில் அமரர்கள்போததநதார் *
செங்கண்கருமுகிலே ! தாலேலோ
தேவகிசிங்கமே ! தாலேலோ. (௪)

எழிலார்திருமார்வுக்கு ஏற்குமிவையென்று *
அழகியஐம்படையும் ஆரமும்கொண்டு *
வழுவில்கொடையான் † வயிசசிரவணன *
தொழுதுஉவனுய்நின்ருன் தாலேலோ
தூமணிவண்ணனே ! தாலேலோ. (௫)

ஓதக்கடலின் ஒளிமுததினாரமும் *
சாதிபபவளமும் சநதச்சரிவளையும *
மாதக்கவென்று வருணன்விடுதநதான் *
சோதிசசுடாமுடியாய் ! தாலேலோ
சுநதரததோளனே ! தாலேலோ. (௬)

கானுர்நறுநதுழாய் கைசெய்தகண்ணியும் *
வானுர்செழுஞ்சோலைக் கற்பகததினவாசிகையும் *
தேனுர்மலாமேல் திருமங்கைபோததநதாள *
கோனே ! அழேல்அழேல்தாலேலோ
குடந்தைக்கிடநதானே ! தாலேலோ. (௭)

கசசொடுபொற்சுரிகை காம்பு ‡ கனவளை *
உசசிமணிச்சுட்டி ஒண்தாள்நிரைப்பொற்பூ *
அசசுதனுககென்று அவனியாள்போததநதாள *
நச்சுமுலையுண்டாய் ! தாலேலோ
நாராயணு ! அழேல்தாலேலோ. (அ)

மெய்திமிரும்நானப்பொடியோடு மஞ்சளும் *
செய்யதடங்கண்ணுக்கு அஞ்சனமும்சிநதூரமும் *
வெய்யகலைப்பாகி கொண்டுஉவளாய்நின்ருள் *
ஐயா ! அழேல்அழேல்தாலேலோ
அரங்கத்தணையானே ! தாலேலோ. (௯)

† 'வயிச்சிராவணன்' என்று பலர். ‡ 'கனகவளை' எனறும் பாடம்

பணைதோளிளவாய்ச்சி பால்பாய்ந்தகொங்கை *
அணைத்தாரஉண்டு கிடந்தஇப்பிள்ளை *
இணைக்காலில் வெள்ளித்தளைநின்றிலங்கும் *
கணைக்கால்இருந்தவாகாணீரே காரிகையீர்! வந்துகாணீரே.(௩)

உழந்தாள்நறுநெய் † ஓரோர்தடாவுண்ண *
இழந்தாளெரிவினாலீர்த்து எழில்மத்தின் *
பழந்தாம்பாலோச்சப் பயத்தால்தவழ்ந்தான் *
முழந்தாள்இருந்தவாகாணீரே முகிழ்முலையீர்! வந்துகாணீரே(௪)

பிறங்கியபேய்ச்சி முலைசுவைத்துண்டிட்டு *
உறங்குவான்போலேகிடந்த இப்பிள்ளை *
மறங்கொளிரணியன் மார்பைமுன்கீண்டான் *
குறங்குகளைவந்துகாணீரே குவிமுலையீர்! வந்துகாணீரே. (௫)

மத்தக்களிற்று வசுதேவர்தம்முடை*
சித்தம்பிரியாத தேவகிதன்வயிற்றில் *
அத்தத்தின்பத்தாநாள் தோன்றியஅச்சுதன் *
முத்தம்இருந்தவாகாணீரே முகிழ்நகையீர்! வந்துகாணீரே. (௬)

இருங்கைமதகளிறு ஈர்க்கின்றவனை *
பருங்கிப்பறித்துக்கொண்டு ‡ ஓடுபரமன்தன் *
நெருங்குபவளமும் நேர்நாணும்முத்தும் *
மருங்கும்இருந்தவாகாணீரே வாணுதலீர்! வந்துகாணீரே. (௭)

வந்தமதலைக்குழாத்தை வலிசெய்து *
தந்தக்களிறுபோல் தானேவிளையாடும் *
நந்தன்மதலைக்கு நன்றுமழகிய *
உந்திஇருந்தவாகாணீரே ஒளியிழையீர்! வந்துகாணீரே. (௮)

அதிருங்கடல்நிறவண்ணனை * ஆய்ச்சி
மதுரமுலையூட்டி வஞ்சித்துவைத்து *
பதறப்படாமே பழந்தாம்பாலார்த்த *
உதரம்இருந்தவாகாணீரே ஒளிவளையீர்! வந்துகாணீரே. (௯)

பெருமாவுரலில் பிணிப்புண்டிருந்து * அங்கு
இருமாமருதம் இறுத்தஇப்பிள்ளை *
குருமாமணிப்பூண் குலாவித்திகழும் *
திருமார்புஇருந்தவாகாணீரே சேயிழையீர்! வந்துகாணீரே.(௧௦)

---

† 'ஓரோதடாவுண்ண' என்றும் பாடம்.

‡ 'ஓடும்' என்றும் வழங்குவர்.

நாள்கலோர்நாலைந்து திங்களளவிலே *
தாளைநிமிர்த்துச் சகடத்தைச்சாடிப்போய் *
வாள்கொள்வளையெயிறு ஆருயிர்வவ்வினான் *
தோள்கள்இருந்தவாகாணீரே சுரிகுழலீர்! வந்துகாணீரே. (கக)

மைத்தடங்கணணி யசோதைவளர்க்கின்ற *
செய்த்தலைநீலநிறத்துச் சிறுப்பிள்ளை *
நெய்த்தலைநேமியும் சங்குமநிலாவிய *
கைத்தலங்கள்வந்துகாணீரே கனங்குழையீர்! வந்துகாணீரே. ()

வண்டமர்பூங்குழல் ஆய்ச்சிமகனாகக்
கொண்டு * வளர்க்கின்ற † கோவலக்குட்டற்கு *
அண்டமும்நாடும் அடங்கவிழுங்கிய *
கண்டமிருந்தவாகாணீரே காரிகையீர்! வந்துகாணீரே. (கரு)

‡ எந்தொண்டைவாய்ச்சிங்கம் வாவென்றெடுத்துக்கொண்டு *
அந்தொண்டைவாயமு தாதரித்து * ஆய்ச்சியர்
தம்தொண்டைவாயால் தருக்கிப்பருகும் * இச்
செந்தொண்டைவாய்வந்துகாணீரே சேயிழையீர்!வந்துகாணீரே.

நோக்கியசோதை நுணுக்கியமஞ்சளால் *
நாக்குவழித்து நீராட்டும்இந்நம்பிக்கு *
வாக்கும்நயனமும் வாயும்முறுவலும் *
மூக்கும்இருந்தவாகாணீரே மொய்குழலீர்! வந்துகாணீரே.(கரு)

விண்கொளமரர்கள் வேதனைதீர * முன்
மண்கொள்வசுதேவர்தம் மகனாய்வந்து *
திண்கொளசுரரைத் தேயவளர்கின்றான் *
கண்கள்இருந்தவாகாணீரே கனவளையீர்! வந்துகாணீரே. (கசு)

பருவம்நிரம்பாமே பாரெல்லாம்உய்ய *
திருவின்வடிவொக்கும் தேவகிபெற்ற *
உருவுகரிய ஒளிமணிவண்ணன் *
புருவம்இருந்தவாகாணீரே பூண்முலையீர்! வந்துகாணீரே. (கஎ)

மண்ணும்மலையும் கடலும்உலகேழும் *
உண்ணுந்திறத்து மகிழ்ந்துண்ணும்பிள்ளைக்கு *
வண்ணமெழில்கொள் மகரக்குழையிவை *
திண்ணம்இருந்தவாகாணீரே சேயிழையீர்! வந்துகாணீரே.(கஅ)

† 'கோவலர்குட்டற்கு' என்றும்பாடம் ‡ 'என்தொண்டை' எனவுங்கூறுவர்.

# பெரியாழ்வார் திருமொழி.

## முதற்பத்து.

### க - ஆம் திருமொழி - வண்ணமாடங்கள்.

[கண்ணன் திருவவதாரச் சிறப்பு.]

கலிவிருத்தம் (அடாணாராகம் - அடதாளம்)

❀ வண்ணமாடங்கள்சூழ் திருக்கோட்டியூர் *
கண்ணன்கேசவன் நம்பிபிறந்தினில் *
எண்ணெய்சுண்ணம் எதிரெதிர் தூவிடக் *
கண்ணன்முற்றம் கலந்து அளறாயிற்றே. (க)

ஓடுவார்விழுவார் உகந்தாலிப்பார் *
நாடுவார்நம்பிரான் † எங்குத்தானென்பார் *
பாடுவார்களும் பல்பறைகொட்டநின்று *
ஆடுவார்களும் ஆயிற்று ஆய்ப்பாடியே. (உ)

பேணிச்சீருடைய பிள்ளைபிறந்தினில் *
காணத்தாம்புகுவார் புக்குப்போதுவார் *
‡ ஆணொப்பார் இவன்நேரில்லைகாண் * திரு
வோணத்தான் உலகாளுமென்பார்களே. (ங)

உறியைமுற்றத்து உருட்டிநின்றாடுவார் *
நறுநெய்பால்தயிர் நன்றாகத்தூவுவார் *
செறிமென்கூந்தல் அவிழத்திளைத்து * எங்கும்
அறிவழிந்தனர் ஆய்ப்பாடியாயரே. (ச)

கொண்டதாளுறி கோலக்கொடுமழு *
தண்டினர் பறியோலைச்சயனத்தர் *
$ விண்டமுல்லை அரும்பன்னபல்லினர் *
அண்டர்மிண்டிப்புகுந்து நெய்யாடினார். (ரு)

கையும்காலுமநிமிர்த்துக் கடாரநீர் *
பையவாட்டிப் பசுஞ்சிறுமஞ்சளால் *
ஐயநாவழித்தாளுக்கு அங்காந்திட *
வையமேழும்கண்டாள் பிள்ளைவாயுளே. (சா)

---

† 'எங்குற்றான்' என்றும் பாடம். ‡ 'ஆணொப்பாரிவன்' என்பதும் பாடம்.
$ 'விண்டின்' என்பதும் பாடம்.

வாயுள்வையகங்கண்ட மடநல்லார் *
ஆயர்புத்திரனல்லன் அருந்தெய்வம் *
பாயசீருடைய பண்புடைப்பாலகன் *
மாயனென்று மகிழ்ந்தனர்மாதரே. (எ)

பத்துநாளும்கடந்த இரண்டாநாள்
எத்திசையும் சயமரம் கோடித்து
மத்தமாமலை தாங்கியமைந்தனை *
உத்தானஞ்செய்து உகந்தனர்ஆயரே. (அ)

கிடக்கில் தொட்டில்கிழியவுதைத்திடும் *
எடுத்துக்கொள்ளில் மருங்கையிறுத்திடும்
ஒடுக்கிப்புல்கில் உதரத்தேபாய்ந்திடும் *
மிடுக்கிலாமையால் நான்மெலிந்தேன்நங்காய் (கூ)

செந்நெலார்வயல்சூழ் திருக்கோட்டியூர் *
மன்னுநாரணன் நம்பிபிறந்தமை *
மின்னுநூல் விட்டுசித்தன்விரித்த * இப்
பன்னுபாடல்வல்லார்க்கு இல்லைபாவமே. (கo)

அடிவரவு:—வண்ணம் ஒடுவார் பேணி உறியை கொண்ட கை வாயுள் பத்து கிடக்கில் செந்நெல் சீதக்கடல்

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.

---

## உ - ஆந் திருமொழி - சீதக்கடல்.

---

[கண்ணனது திருமேனியழகைப் பாதாதிகேசாந்தமாக அனுபவித்தல்.]

வெண்டளையால்வந்தகலித்தாழிசை (நயாசிராகம் - ஆதிதாளம்.)

சீதக்கடல் உள்ளமுதன்னதேவகி *
கோதைக்குழலாள் அசோதைக்குப்போத்தந்த *
பேதைக்குழவி பிடித்துச்சுவைத்துண்ணும் *
பாதக்கமலங்கள்காணீரே பவளவாயீர்! வந்துகாணீரே. (க)

முத்தும்மணியும் வயிரமும்நன்பொன்னும் *
தத்திப்பதித்துத் தலைப்பெய்தாற்போல் * எங்கும்
பத்துவிரலும் மணிவண்ணன்பாதங்கள் *
ஒத்திட்டிருந்தவாகாணீரே ஒண்ணுதலீர்! வந்துகாணீரே. (உ)

தரவுகொச்சகக்கலிப்பா.

வஞ்சனையால்வந்த பேய்ச்சிமுலையுண்ட *
அஞ்சனவண்ணனை ஆய்ச்சிதாலாட்டிய *
செஞ்சொல்மறையவர்சேர் புதுவைப்பட்டன்சொல் *
எஞ்சாமைவல்லவர்க்கு இல்லையிடர்தானே. (க0)

அடிவரவு:—மாணிக்கம் உடை என் சங்கின எழில் ஓதம் காணா கச்சொடு மெய் வஞ்சனையால் தன்.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்

---

## ச-ஆந் திருமொழி-தன்முகத்து.

[சந்திரனை அழைத்தல்; அம்புலிப்பருவம்.]

கலிநிலைத்துறை. (மோஹநராகம்-அடதாளம்.)

தன்முகத்துச்சுட்டி தூங்கத்தூங்கத்தவழ்ந்துபோய் *
பொன்முகக்கிண்கிணியார்ப்பப் புழுதியளைகின்றான் *
என்மகன்கோவிந்தன்கூத்தினை இளமாமதீ ! *
நின்முகம்கண்ணுளவாகில் நீஇங்கேநோக்கிப்போ. (க)

என்சிறுக்குட்டன் எனக்கோரின்னமுதெம்பிரான் *
தன்சிறுக்கைகளால் காட்டிக்காட்டியழைக்கின்றான் *
அஞ்சனவண்ணனோடு ஆடலாடஉறுதியேல் *
மஞ்சில்மறையாதே மாமதீ ! மகிழ்ந்தோடிவா. (உ)

சுற்றும்ஒளிவட்டம் சூழ்ந்துசோதிபரந்தெங்கும் *
எத்தனைசெய்யினும் என்மகன்முகம்நேரொவ்வாய் *
வித்தகன்வேங்கடவாணன் உன்னைவிளிக்கின்ற *
கைத்தலம்நோவாமே அம்புலீ ! கடிதோடிவா. (ங)

சக்கரக்கையன் தடங்கண்ணால்மலரவிழித்து *
ஒக்கலைமேலிருந்து உன்னையேசுட்டிக்காட்டும்காண் *
தக்கதறிதியேல் சந்திரா ! சலம்செய்யாதே *
மக்கட்பெறாத மலடனல்லையேல்வாகண்டாய். (ச)

அழகியவாயில் அமுதவூறல்தெளிவுற *
மழலைமுற்றாதஇளஞ்சொல்லால் உன்னைக்கூவுகின்றான் *
குழகன்சிரீதரன் கூவக்கூவநீபோதியேல் *
புழை†யிலவாகாதே நின்செவிபுகர்மாமதீ ! (ரு)

† 'இலவாகாவே' என்றுங் கூறுவர்.

தண்டொடுசக்கரம் சார்ங்கமேந்துந்தடக்கையன் *
கண்துயில்கொள்ளக்கருதிக் கொட்டாவிகொள்கின்றான் *
உண்டமுலைப்பாலறாகண்டாய் உறங்காவிடில் *
விண்தனில்மன்னிய மாமதீ ! விரைந்தோடிவா. (சு)

பாலகனென்று பரிபவஞ்செய்யேல் * பண்டொருநாள்
ஆலினிலைவளர்ந்த சிறுக்கனவன் இவன் *
மேலெழப்பாய்ந்து பிடித்துக்கொள்ளும்வெகுளுமேல் *
மாலைமதியாதே மாமதீ ! மகிழ்ந்தோடிவா. (எ)

சிறியனென்றென்னிளஞ்சிங்கத்தை இகழேல்கண்டாய் *
சிறுமையின்வார்த்தையை மாவலியிடைச்சென்றுகேள் *
சிறுமைப்பிழைகொள்ளில் நீயும்உன்தேவைக்குரியைகாண் *
நிறைமதீ ! நெடுமால் விரைந்துஉன்னைக்கூவுகின்றான். (அ)

தாழியில்வெண்ணெய் தடங்கையாரவிழுங்கிய *
பேழைவயிற்றெம்பிரான்கண்டாய் உன்னைக்கூவுகின்றான் *
ஆழிகொண்டுஉன்னையெறியும் ஐயுறவில்லைகாண் *
வாழவுறுதியேல் மாமதீ ! மகிழ்ந்தோடிவா. (கூ)

❀ மைத்தடங்கண்ணி யசோதைதன்மகனுக்கு * இவை
ஒத்தனசொல்லி உரைத்தமாற்றம் * ஒளிபுத்தூர்
வித்தகன்விட்டுசித்தன் விரித்ததமிழிவை *
எத்தனையும்சொல்லவல்லவர்க்கு இடரில்லையே. (கo)

அடிவரவு:—தன் என் சுற்றும் சக்கரம் அழகிய தண்டொடு பாலகன் சிறியன் தாழியில் மை உய்ய.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.

---

## ரு - ஆம் திருமொழி - உய்யவுலகு.

---

[தலையைநிமிர்த்து முகத்தையசைத்தாடுதல்:
செங்கீரைப்பருவம்.]

எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம். (முகாரிராகம்-ஆதிதாளம்.)

❀ உய்யஉலகுபடைத்துண்டமணிவயிறா !
ஊழிதோறூழிபலஆலினிலையதன்மேல் *
பையஉயோகுதுயில்கொண்டபரம்பரனே !
பங்கயநீள்நயனத்து அஞ்சனமேனியனே ! *

செய்யவள்நின்னகலம்சேமமெனக்கருதிச்
செல்வுபொலிமகரக்காதுதிகழ்ந்திலக *
ஐய! எனக்கொருகால்ஆடுகசெங்கீரை
ஆயர்கள்போரேறே! ஆடுகஆடுகவே. (க)

கோளரியின்னுருவங்கொண்டுஅவுணனுடலம்
குருதிகுழம்பியெழக்கூருகிரால்குடைவாய்! *
மீளஅவன்மகனை † மெய்ம்மைகொளக்கருதி
மேலையமரர்பதிமிக்குவெகுண்டுவர *
காளநன்மேகமவைகல்லொடு ‡ கால்பொழியக்
கருதிவரைக்குடையாக்காலிகள்காப்பவனே! *
ஆள! எனக்கொருகால்ஆடுகசெங்கீரை
ஆயர்கள்போரேறே! ஆடுகஆடுகவே. (உ)

நம்முடைநாயகனே! நான்மறையின்பொருளே!
நாவியுள்நற்கமலநான்முகனுக்கு * ஒருகால்
தம்மனையானவனே! தரணிதலமுழுதும்
தாரகையின்னுலகும்தடவிஅதன்புறமும் *
விம்மவளர்ந்தவனே! வேழமும்ஏழ்விடையும்
விரவியவேலைதனுள்வென்றுவருமவனே! *
அம்ம! எனக்கொருகால்ஆடுகசெங்கீரை
ஆயர்கள்போரேறே! ஆடுகஆடுகவே. (ங)

வானவர்தாம்மகிழவன்சகடமுருள
வஞ்சமுலைப்பேயின் $ நஞ்சமதுஉண்டவனே! *
கானகவல்விளவின்காயுதிரக்கருதிக்
கன்றதுகொண்டெறியுங்கருநிறஎன்கன்றே! *
தேனுகனும்முரனும்திண்திறல்வெந்நரகன்
என்பவர்தாம்மடியசெருவதிரச்செல்லும் *
ஆனை! எனக்கொருகால்ஆடுகசெங்கீரை
ஆயர்கள்போரேறே! ஆடுகஆடுகவே. (ச)

மத்தளவும்தயிரும்வார்குழல்நன்மடவார்
வைத்தனநெய்களவால்வாரிவிழுங்கி * ஒருங்கு
ஒத்தஇணைமருதம்உன்னியவந்தவரை
ஊருகரத்தினொடும்உந்தியவெந்திறலோய்! *

---

† 'மேன்மை' என்றும்பாடம். ‡ 'கார்பொழிய' என்றும் பாடம்.
$ 'நெஞ்சமது' என்றும், 'நஞ்சமுது' என்றும் பாடம்.

முத்தினிளமுறுவல்முற்றவருவதன்முன்
முன்னமுகத்தணியார்மொய்குழல்களலைய *
அத்த! எனக்கொருகால்ஆடுகசெங்கீரை
ஆயர்கள்போரேறே! ஆடுகஆடுகவே. (ரு)

காயமலர்நிறவா! கருமுகில்போலுருவா!
கானகமாமடுவில்காளியனுச்சியிலே *
தூயநடம்பயிலும்சுந்தரஎன்சிறுவா!
துங்கமதக்கரியின்கொம்புபறித்தவனே! *
ஆயமறிந்துபொருவான்எதிர்வந்தமல்லை
அந்தரமின்றியழித்தாடியதாளிணையாய்! *
ஆய! எனக்கொருகால்ஆடுகசெங்கீரை
ஆயர்கள்போரேறே! ஆடுகஆடுகவே. (சு)

துப்புடையாயர்கள்தம்சொல்வழுவாதொருகால்
தூயகருங்குழல்நல்தோகைமயிலனைய *
நப்பினைதன்திறமாநல்விடையேழவிய
நல்லதிறலுடையநாதனும்ஆனவனே! *
தப்பினபிள்ளைகளைத்தனமிகுசோதிபுகத்
தனியொருதேர்கடவித்தாயொடுகூட்டிய * என்
அப்ப! எனக்கொருகால்ஆடுகசெங்கீரை
ஆயர்கள்போரேறே! ஆடுகஆடுகவே. (எ)

❀ உன்னையுமொக்கலையில்கொண்டுதமில்மருவி
உன்னொடுதங்கள்கருத்தாயினசெய்து வரும் *
கன்னியருமகிழக்கண்டவர்கண்குளிரக்
கற்றவர்தெற்றிவரப்பெற்றஎனக்கு அருளி *
மன்னுகுறுங்குடியாய்! வெள்ளறையாய்! மதிள்சூழ்
சோலைமலைக்கரசே! கண்ணபுரத்தமுதே! *
என்னவலம்களைவாய்! ஆடுகசெங்கீரை
ஏழுலகும்முடையாய்! ஆடுகஆடுகவே. (அ)

பாலொடுநெய்தயிர்ஒண்சாந்தொடுசண்பகமும்
பங்கயம்நல்லகருப்பூரமும்நாறிவர *
கோலநறும்பவளச்செந்துவர்வாயினிடைக்
கோமளவெள்ளிமுளைப்போல்சிலபல்லிலக *

நீலநிறத்தழகாரைம்படையின்நடுவே
நின்கனிவாயமுதம்இற்று முறிந்துவிழ *
ஏலுமறைப்பொருளே ! ஆடுகசெங்கீரை
ஏழுலகும்முடையாய் ! ஆடுகஆடுகவே. (௯)

செங்கமலக்கழலிலசிற்றிதழ்போல்விரலில்
சேர்திகழாழிகளுங்கிண்கிணியும் * அரையில்
தங்கியபொன்வடமுந்தாளநன்மாதுளையின்
பூவொடுபொன்மணியும்மோதிரமுங்கிறியும் *
மங்கலஐம்படையும்தோள்வளையும்குழையும்
மகரமும்வாளிகளும்சுட்டியுமொத்திலக *
எங்கள்குடிக்கரசே ! ஆடுகசெங்கீரை
ஏழுலகும்முடையாய் ! ஆடுகஆடுகவே. (௧௦)

❁ அன்னமும்மீனுருவும்ஆளரியும்குறளும்
ஆமையுமானவனே ! ஆயர்கள்நாயகனே ! *
என்அவலம்களைவாய் ! ஆடுகசெங்கீரை
ஏழுலகும்முடையாய் ! ஆடுகவாடுகவென்று *
அன்னநடைமடவாள்அசோதையுகந்தபரிசு
ஆனபுகழ்ப்புதுவைப்பட்டனுரைத்ததமிழ் *
இன்னிசைமாலைகள்இப்பத்தும்வல்லார் உலகில்
எண்திசையும்புகழ்மிக்குஇன்பமதெய்துவரே. (௧௧)

அடிவரவு:—உய்ய கோளரியின் நம்முடை வானவர் மத்து காய துப்பு உன்னை பாலொடு செங்கமலம் அன்னம் மாணிக்கக் கிண்கிணி.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.

## ௯ - ஆம் திருமொழி - மாணிக்கக்கிண்கிணி.

[கைகொட்டி விளையாடுதல்: சப்பாணிப்பருவம்.]

வெண்டளையால் வந்த கலித்தாழிசை. (யமுனாகல்யாணிராகம் - ஆதிதாளம்.)

❁ மாணிக்கக்கிண்கிணியார்ப்ப மருங்கின்மேல் *
ஆணிப்பொன்னால்செய்த ஆய்ப்பொன்னுடைமணி *
பேணிப்பவளவாய் முத்திலங்க * பண்டு
காணிகொண்டகைகளால்சப்பாணி
கருங்குழல்குட்டனே ! சப்பாணி. (௧)

பொன்னரைநாணொடு மாணிக்கக்கிண்கிணி *
தன்னரையாடத் தனிச்சுட்டிதாழ்ந்தாட *
என்னரைமேல்நின்றிழிந்து உங்களாயர்தம் *
மன்னரைமேல்கொட்டாய்சப்பாணி
மாயவனே! கொட்டாய்சப்பாணி. (உ)

பன்மணிமுத்து இன்பவளம்பதித்தன்ன *
என்மணிவண்ணன்! இலங்குபொற்றோட்டின்மேல் *
நின்மணிவாய்முத்திலங்க நின்னம்மைதன் *
அம்மணிமேல்கொட்டாய்சப்பாணி
ஆழியங்கையனே! சப்பாணி. (௩)

தூநிலாமுற்றத்தே போந்துவிளையாட *
வானிலாஅம்புலீ! சந்திரா! வாவென்று *
நீநிலாநின்புகழாநின்ற ஆயர்தம் *
கோநிலாவக்கொட்டாய்சப்பாணி
குடந்தைக்கிடந்தானே! சப்பாணி. (௪)

புட்டியில்சேறும் புழுதியும்கொண்டுவந்து *
அட்டியமுக்கி அகம்புக்கறியாமே *
சட்டித்தயிரும் தடாவினில்வெண்ணெயும்உண் *
பட்டிக்கன்றே! கொட்டாய்சப்பாணி
பற்பநாபா! கொட்டாய்சப்பாணி. (௫)

தாரித்துநூற்றுவர் தந்தைசொல்கொள்ளாது *
போருய்த்துவந்து புகுந்தவர்மண்ணாள *
பாரித்தமன்னர்படப் பஞ்சவர்க்கு * அன்று
தேருய்த்தகைகளால்சப்பாணி
தேவகிசிங்கமே! சப்பாணி. (௬)

பரந்திட்டுநின்ற படுகடல் * தன்னை
இரந்திட்டகைம்மேல் எறிதிரைமோத *
கரந்திட்டுநின்ற கடலைக்கலங்க *
சரந்தொட்டகைகளால்சப்பாணி
சார்ங்கவிற்கையனே! சப்பாணி. (௭)

குரக்கினத்தாலே குரைகடல்தன்னை *
நெருக்கிஅணைகட்டி நீள்நீரிலங்கை *
அரக்கர்அவிய அடுகணையாலே *
நெருச்கியகைகளால்சப்பாணி
நேமியங்கையனே ! சப்பாணி. (அ)

அளந்திட்டதூணை அவன்தட்ட * ஆங்கே
வளர்ந்திட்டு வாளுகிர்ச்சிங்கவுருவாய் *
உளந்தொட்டிரணியன் ஒண்மார்வகலம் *
பிளந்திட்டகைகளால்சப்பாணி
பேய்முலையுண்டானே ! சப்பாணி. (கூ)

அடைந்திட்டுஅமரர்கள் ஆழ்கடல்தன்னை *
மிடைந்திட்டு மந்தரம்மத்தாகநாட்டி *
வடம்சுற்றிவாசுகி வன்கயிறாக *
கடைந்திட்டகைகளால்சப்பாணி
கார்முகில்வண்ணனே ! சப்பாணி. (கo)

தரவுகோச்சகக்கலிப்பா

✿ஆட்கொள்ளத்தோன்றிய ஆயர்தங்கோவினை *
நாடகமழ்பூம்பொழில் வில்லிபுத்தூர்ப்பட்டன் *
†வேட்கையால்சொன்ன சப்பாணிஈரைந்தும் *
வேட்கையினால்சொல்லுவார் வினைபோமே. (கக)

அடிவரவு:—மாணிக்கம பொன் பல் தூநிலா புட்டியில் தாரித்து பரந்து குரககினம் அளந்து அடைநது ஆட்கொள்ளத் தொடர்

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்

## எ - ஆந் திருமொழி - தொடர்சங்கிலிகை.

[தளர்நடை நடத்தல்.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்-(அடாணாராகம்-ஆதிதாளம்.)

✿ தொடர்‡சங்கிலிகைசலார்பிலாரென்னத் தூங்குபொன்மணியொலி
படுமும்மதப்புனல்சோர வாரணம்பையநின்றூர்வதுபோல் * [ப்ப *
உடன்கூடிக்கிண்கிணியாரவாரிப்ப உடைமணிபறைகறங்க *
தடந்தாளிணைகொண்டுசார்ங்கபாணி தளர்நடைநடவானோ. (க)

†'வேட்கையினால்' என்று சிலர். ‡ 'சங்கிலிகள்' எனவும் கூறுவர்.

செக்கரிடை நுனிக்கொம்பில்தோன்றும் சிறுபிறைமுளைப்போல் *
நக்கசெந்துவர்வாய்த்திண்ணைமீதே நளிர்வெண்பல்முளையிலக *
அக்குவடமுடுத்துஆமைத்தாலிபூண்ட அனந்தசயனன் *
தக்கமாமணிவண்ணன்வாசுதேவன் தளர்நடைநடவானோ. (உ)

மின்னுக்கொடியும்ஓர்வெண்திங்களும் சூழ்பரிவேடமுமாய் *
பின்னல்துலங்கும்அரசிலையும் பீதகச்சிற்றாடையொடும் *
மின்னிலபொலிந்ததோர்கார்முகில்போலக் கழுத்தினில்காறையொடும் *
தன்னில்பொலிந்தஇருடீகேசன் தளர்நடைநடவானோ. (ங)

கன்னற்குடம்திறந்தாலொத்தூறிக் கணகணசிரித்துவந்து *
முன்வந்துநின்றுமுத்தம்தரும் என்முகில்வண்ணன திருமார்வன் * [ன் *
தன்னைப்பெற்றேற்குத்தன்வாயமுதம்தந்து என்னைத்தளிர்ப்பிக்கின்று
தன்னெற்றுமாற்றலர்தலைகள்மீதே தளர்நடைநடவானோ. (ச)

முன்னலோர்வெள்ளிப்பெருமலைக்குட்டன் மொடுமொடுவிரைந்தோட *
பின்னைத்தொடர்ந்ததோர்கருமலைக்குட்டன் பெயர்ந்தடியிடுவதுபோல் *
பன்னியுலகம்பரவியோவாப் புகழ்ப்பலதேவனென்னும் *
தன்நம்பியோடப்பின்கூடச்செல்வான் தளர்நடைநடவானோ. (ரு)

ஒருகாலில்சங்குஒருகாலில்சக்கரம் உள்ளடிபொறித்தமைந்த *
இருகாலும்கொண்டுஅங்கங்குஎழுதினாற்போல் இலச்சினைபடநடந்து *
பெருகாநின்றஇன்பவெள்ளத்தின்மேல் பின்னையும்பெய்துபெய்து *
கருகார்க்கடல்வண்ணன்காமர்தாதை தளர்நடைநடவானோ. (சா)

படர்பங்கயமலர்வாய்நெகிழப் பனிபடுசிறுதுளிபோல் *
இடங்கொண்டசெவ்வாயூறியூறி இற்றிற்றுவீழநின்று *
கடுஞ்சேக்கழுத்தின்மணிக்குரல்போல் உடைமணிகணகணென *
தடந்தாளிணைகொண்டுசார்ங்கபாணி தளர்நடைநடவானோ. (எ)

பக்கம்கருஞ்சிறுப்பாறைமீதே அருவிகள்பகர்ந்தனைய *
அக்குவடமிழிந்தேறித்தாழ அணியல்குல்புடைபெயர *
மக்களுலகினில்பெய்தறியா மணிக்குழவியுருவின் *
தக்கமாமணிவண்ணன்வாசுதேவன் தளர்நடைநடவானோ. (அ)

வெண்புழுதிமேல்பெய்துகொண்டளைந்ததோர் வேழத்தின்கருங்கன்றுபோல் *
தெண்புழுதியாடிதிரிவிக்கிரமன் சிறுபுகர்படவியர்த்து *
ஒண்போதலர்கமலச்சிறுக்காலுறைத்து ஒன்றும்நோவாமே *
தண்போதுகொண்ட தவிசின்மீதே தளர்நடைநடவானோ. (கூ)

MAHAMAHOPADHYAYA

திரைநீர்ச்சந்திரமண்டலம்போல் செங்கண்மால்கேசவன் * தன்
திருநீர்முகத்துத்துலங்குசுட்டி திகழ்ந்தெங்கும்புடைபெயர *
பெருநீர்த்திரையெழுகங்கையிலும் பெரியதோர்தீர்த்தபலம்
தருநீர் * சிறுச்சண்ணம்துள்ளம்சோரத் தளர்நடைநடவானோ. (க0)

ஆயர்குலத்தினில்வந்துதோன்றிய அஞ்சனவண்ணன்தன்னை *
தாயர்மகிழவொன்னார்தளரத் தளர்நடைநடந்ததனை *
வேயர்புகழ்விட்டுசித்தன் சீரால்விரித்தனஉரைக்கவல்லார் *
மாயன்மணிவண்ணன்தாள்பணியும் மக்களைப்பெறுவர்களே. (கக)

அடிவரவு:—தொடர் செக்கர் மின்னுக் கன்னல் முன்னல் ஒருகாலில் படர் பக்கம் வெண் திரை ஆயர் பொன்.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.

## அ - ஆந் திருமொழி - பொன்னியல்.

[அணைத்துக்கொள்ள அழைத்தல்.]

கலித்தாழிசை. (தேசியராகம்-ஆதிதாளம்.)

பொன்னியல்கிண்கிணி சுட்டிபுறம்கட்டி *
தன்னியலோசை சலன்சலனென்றிட *
மின்னியல்மேகம் விரைந்தெதிர்வந்தாற்போல் *
என்னிடைக்கோட்டரா அச்சோவச்சோ
எம்பெருமான்! வாரா அச்சோவச்சோ. (க)

செங்கமலப்பூவில் தேனுண்ணும்வண்டேபோல் *
பங்கிகள்வந்து உன்பவளவாய்மொய்ப்ப *
சங்குவில்வாள்தண்டு சக்கரமேந்திய *
அங்கைகளாலேவந்துஅச்சோவச்சோ
ஆரத்தழுவா † வந்துஅச்சோவச்சோ. (உ)

பஞ்சவர்தூதனாய்ப் பாரதம்கைசெய்து *
நஞ்சுமிழ்நாகம்கிடந்த நற்பொய்கைபுக்கு *
அஞ்சப்பணத்தின்மேல் பாய்ந்திட்டுஅருள்செய்த *
அஞ்சனவண்ணனே! அச்சோவச்சோ
ஆயர்பெருமானே! அச்சோவச்சோ. (ஙு)

† 'ஆரத்தழுவாய்' என்று சிலர் பாடம்.

நாறியசாந்தம் நமக்கிறைநல்கென்ன *
தேறியவளும் திருவுடம்பில்பூச *
ஊறியகூனினை உள்ளேயொடுங்க * அன்று
ஏறவுருவினாய்! அச்சோவச்சோ
எம்பெருமான்! வாரா அச்சோவச்சோ. (சு)

கழல்மன்னர்சூழக் கதிர்போல்விளங்கி *
எழலுற்றுமீண்டே இருந்துஉன்னைநோக்கும் *
சுழலைப்பெரிதுடைத் துச்சோதனனை *
அழலவிழித்தானே! அச்சோவச்சோ
ஆழியங்கையனே! அச்சோவச்சோ. (ரு)

போரொக்கப்பண்ணி இப்பூமிப்பொறைதீர்ப்பான் *
தேரொக்கவூர்ந்தாய்! செழுந்தாரவிசயற்காய் *
காரொக்கும்மேனிக் கரும்பெருங்கண்ணனே! *
ஆரத்தழுவாவந்து அச்சோவச்சோ
ஆயர்கள்போரேறே! அச்சோவச்சோ. (சா)

மிக்கபெரும்புகழ் மாவலிவேள்வியில் *
தக்கதிதன்றென்று தானம்விலக்கிய *
சுக்கிரன்கண்ணைத் துரும்பால்கிளறிய *
சக்கரக்கையனே! அச்சோவச்சோ
சங்கமிடத்தானே! அசசோவச்சோ. (எ)

என்னிதுமாயம்? என்னப்பன் அறிந்திலன் *
முன்னையவண்ணமேகொண்டு அளவாயென்ன *
மன்னுநமுசியை வானில்சுழற்றிய *
மின்னுமுடியனே! அச்சோவச்சோ
வேங்கடவாணனே! அச்சோவச்சோ. (அ)

கண்டகடலும் மலையும்உலகேழும் *
முண்டத்துக்காற்றா முகில்வண்ணாவோ! என்று *
இண்டைச்சடைமுடி ஈசன்இரக்கொள்ள *
மண்டைநிறைத்தானே! அச்சோவச்சோ
மார்வில்மறுவனே! அச்சோவச்சோ. (கூ)

துன்னியபேரிருள் சூழ்ந்துஉலகைமூட *
மன்னியநான்மறை முற்றும்மறைந்திட *
பின்னிவ்வுலகினில் பேரிருள்நீங்க * அன்று
அன்னமதானானே! அச்சோவச்சோ
† அருமறைதந்தானே! அச்சோவச்சோ. (க௦)

தரவுகொச்சகக்கலிப்பா

❀ நச்சுவார்முன்னிற்கும் நாராயணன்தன்னை *
அச்சோவருகவென்று ஆய்ச்சியுரைத்தன *
மச்சணிமாடப் புதுவைக்கோன்பட்டன்சொல் *
நிச்சலும்பாடுவார் நீள்விசும்பாள்வரே. (கக)

அடிவரவு:—பொன் செங்கமலம் பஞ்சவர் நாறிய கழல் போர் மிக்க என்னிது கண்ட துன்னிய நச்சுவார் வட்டு

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.

கூ - ஆந் திருமொழி - வட்டுநடுவே.

[தன் முதுகைக் கட்டிக்கொள்ளும்படி கண்ணனை அழைத்தல்.]

வெண்டளையால்வந்த கலித்தாழிசை (உசேனிராகம் - ரூபகதாளம்.)

❀ வட்டுநடுவே வளர்கின்ற * மாணிக்க
மொட்டு ‡ நுனையில் முளைக்கின்றமுத்தேபோல் *
சொட்டுச்சொட்டென்னத் துளிக்கத்துளிக்க * என்
குட்டன்வந்தென்னைப்புறம்புல்குவான்
கோவிந்தன்என்னைப்புறம்புல்குவான். (க)

$ கிங்கிணிகட்டிக் கிறிகட்டி * கையினில்
கங்கணமிட்டுக் கழுத்தில்தொடர்கட்டி *
தன்கணத்தாலே சதிராநடந்துவந்து *
என்கண்ணன்என்னைப்புறம்புல்குவான்
எம்பிரான்என்னைப்புறம்புல்குவான். (உ)

கத்தக்கதித்துக் கிடந்தபெருஞ்செல்வம் *
ஒத்துப்பொருந்திக்கொண்டு உண்ணாதுமண்ணாள்வான் *
கொத்துத்தலைவன் குடிகெடத்தோன்றிய *
அத்தன்வந்தென்னைப்புறம்புல்குவான்
ஆயர்களேறுஎன்புறம்புல்குவான். (௩)

† 'ஆர்மறை' என்னும் பாடம் வெண்டளைக்குச் சேரும்.

‡ 'நுனியில்' என்றும் கூறுவர். $ 'கிண்கிணி' எனவுஞ் சொல்லுவர்.

நாந்தகமேந்திய நம்பிசரணென்று *
தாழ்ந்த தனஞ்சயற்காகி * தரணியில்
வேந்தர்களுட்க விசயன்மணித்திண்தேர் *
ஊர்ந்தவன்என்னைப்புறம்புல்குவான்
உம்பர்கோன்என்னைப்புறம்புல்குவான். (ச)

வெண்கலப்பத்திரம் கட்டி விளையாடி *
கண்பல † செய்த கருந்தழைக்காவின்கீழ் *
பண்பலபாடிப் பல்லாண்டிசைப்ப * பண்டு
மண்பலகொண்டான்புறம்புல்குவான்
வாமனன்என்னைப்புறம்புல்குவான். (ரு)

சத்திரமேந்தித் தனியொருமாணியாய் *
உத்தரவேதியில் நின்றஒருவனை *
கத்திரியர்காணக் காணிமுற்றும்கொண்ட *
பத்திராகாரன்புறம்புல்குவான்
பாரளந்தான்என்புறம்புல்குவான். (சா)

பொத்தவுரலைக்கவிழ்த்து அதன்மேலேறி *
தித்தித்தபாலும் தடாவினில்வெண்ணெயும் *
மெத்தத்திருவயிறார விழுங்கிய *
அத்தன்வந்துஎன்னைப்புறம்புல்குவான்
ஆழியான்என்னைப்புறம்புல்குவான். (எ)

மூத்தவைகாண முதுமணற்குன்றேறி *
கூத்துவந்தாடிக் குழலால்இசைபாடி *
வாய்த்தமறையோர் வணங்க * இமையவர்
ஏத்தவந்துஎன்னைப்புறம்புல்குவான்
எம்பிரான்என்னைப்புறம்புல்குவான். (அ)

கற்பகக்காவு கருதியகாதலிக்கு *
இப்பொழுதுஈவனென்று இந்திரன்காவினில் *
நிற்பனசெய்து நிலாத்திகழ்முற்றத்துள் *
உய்த்தவன்என்னைப்புறம்புல்குவான்
உம்பர்கோன்என்னைப்புறம்புல்குவான். (கூ)

---

† 'பெய்த' என்றும், 'பெய்து' என்றும் பாடம்.

தரவுகொச்சகக்கலிப்பா.

ஆய்ச்சியன்றாழிப்பிரான் புறம்புல்கிய *
வேய்த்தடந்தோளிசொல் விட்டுசித்தன்மகிழ்ந்து *
ஈத்ததமிழிவை ஈரைந்தும்வல்லவர் *
வாய்த்தநன்மக்களைப்பெற்று மகிழ்வரே. (க0)

அடிவரவு:—வட்டு கிங்கிணி கத்த நாந்தகம் வெண்கலம் சத்திரம் பொத்த மூத்தவை கற்பகம ஆய்ச்சி மெச்சூது.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.



## இரண்டாம்பத்து.

### க - ஆம் திருமொழி - மெச்சூது.

[பூச்சிகாட்டி விளையாடுதல்.]

கலித்தாழிசை. (பந்துவராளிராகம் - ரூபகதாளம்.)

மெச்சூதுசங்கம்இடத்தான் நல்வேயூதி *
பொய்ச்சூதில்தோற்ற பொறையுடைமன்னர்க்காய் *
பத்தூர்பெறாதுஅன்று பாரதம்கைசெய்த *
அத்தூதன் அப்பூச்சிகாட்டுகின்றான்
அம்மனே! அப்பூச்சிகாட்டுகின்றான். (க)

மலைபுரைதோள்மன்னவரும் மாரதரும்மற்றும் *
பலர்குலைய நூற்றுவரும்பட்டழிய * பார்த்தன்
சிலைவளையத் திண்தேர்மேல் முன்னின்ற * செங்கண்
அலவலைவந்து அப்பூச்சிகாட்டுகின்றான்
அம்மனே! அப்பூச்சிகாட்டுகின்றான். (உ)

காயும்நீர்புக்குக் கடம்பேறி * காளியன்
தீயபணத்தில் சிலம்பார்க்கப்பாய்ந்தாடி *
வேயின்குழலூதி வித்தகனாய்நின்ற *
ஆயன்வந்து அப்பூச்சிகாட்டுகின்றான்
அம்மனே! அப்பூச்சிகாட்டுகின்றான். (௩)

இருட்டில்பிறந்துபோய் ஏழைவல்லாயர் *
மருட்டைத்தவிர்ப்பித்து வன்கஞ்சன்மாளப்
புரட்டி * அந்நாள்எங்கள் பூம்பட்டுக்கொண்ட *
அரட்டன்வந்து அப்பூச்சிகாட்டுகின்றான்
அம்மனே! அப்பூச்சிகாட்டுகின்றான். (௪)

சேப்பூண்ட சாடிசிதறி * திருடிநெய்க்கு
ஆப்பூண்டு நந்தன்மனைவிகடைத்தாம்பால் *
சோப்பூண்டு துள்ளித்துடிககத்துடிக்க * அன்று
ஆப்பூண்டான் அப்பூச்சிகாட்டுகின்றான்
அம்மனே ! அப்பூச்சிகாட்டுகின்றான். (ரு)

செப்பிளமென்முலைத் தேவகிநங்கைக்கு *
சொப்படத்தோன்றித் தொறுப்பாடியோம்வைத்த *
துப்பமும்பாலும் தயிரும்விழுங்கிய *
அப்பன்வந்து அப்பூசசிகாட்டுகின்றான்
அம்மனே ! அப்பூச்சிகாட்டுகின்றான். (சு)

தத்துக்கொண்டாள்கொலோ? தானேபெற்றாள்கொலோ ? *
சித்தமனையாள் அசோதையிளஞ்சிங்கம் *
கொத்தார்கருங்குழல் கோபாலகோளரி *
அத்தன்வந்து அப்பூச்சிகாட்டுகின்றான்
அம்மனே ! அப்பூச்சிகாட்டுகின்றான். (எ)

கொங்கை வன்கூனிசொற்கொண்டு * குவலயத்
துங்கக்கரியும் பரியும்இராச்சியமும் *
எங்கும்பரதற்கருளி வன்கானடை *
அங்கண்ணன் அபபூச்சிகாட்டுகின்றான்
அம்மனே ! அப்பூச்சிகாட்டுகின்றான். (அ)

பதகமுதலைவாய்ப் பட்டகளிறு *
கதறிக்கைகூப்பி என்கண்ணா ! கண்ணா ! என்ன *
உதவப்புள்ளூர்ந்து அங்குஉறுதுயர்தீர்தத *
அதகன்வநது அப்பூச்சிகாட்டுகின்றான்
அம்மனே ! அப்பூச்சிகாட்டுகின்றான். (கூ)

தாவுகோச்சகக்கலிப்பா.

❀ வல்லாளிலங்கைமலங்கச் சரநதுரந்த *
வில்லாளனை விட்டுசித்தன் † விரிதத *
சொல்லார்நத அப்பூச்சிப்பாடல்இவைபததும்
வல்லார்போய் * வைகுநதம் மன்னியிருபபரே. (கo)

அடிவரவு:—மெச்சு மலை காயும் இருட்டில் சேப்பூண்ட செப்பு தத்து கொஙகை பதகம் வல்லாள் அரவணையாய்.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.

† 'விரித்தன' என்ற பாடம் வெண்டளைக்குச் சேரும்.

## உ - ஆந் திருமொழி - அரவணையாய்.



[கண்ணனை முலையுண்ண அழைத்தல்.]

கலிவிருத்தம். (புன்னாகவராளிராகம் - ரூபகதாளம்.)

❀ அரவணையாய் ! ஆயரேறே ! அம்மமுண்ணத்துயிலெழாயே *
இரவுமுண்ணாதுஉறங்கிநீபோய் இன்றுமுச்சிகொண்டதாலோ *
வரவுங்காணேன்வயிறசைந்தாய் வனமுலைகள்சோர்ந்துபாய *
திருவுடையவாய்மடுத்துத் திளைத்துதைத்துப்பருகிடாயே. (க)

வைத்தநெய்யுங்காய்ந்தபாலும் வடிதயிரும்நறுவெண்ணெயும் *
இத்தனையும்பெற்றறியேன் எம்பிரான் ! நீபிறந்தபின்னை *
எத்தனையும்செய்யப்பெற்றாய் ஏதும்செய்யேன்கதம்படாதே *
முத்தனையமுறுவல்செய்து மூக்குறிஞ்சிமுலையுணாயே. (உ)

தந்தம்மக்கள்அழுதுசென்றால் தாய்மாராவார்தரிக்ககில்லார் *
வந்துநின்மேல்பூசல்செய்ய வாழவல்லவாசுதேவா ! *
உந்தையார்உன்திறத்தரல்லர் உன்னைநானொன்றுரப்பமாட்டேன் *
நந்தகோபனணிசிறுவா ! நான்சுரந்தமுலையுணாயே (ங)

கஞ்சன்தன்னால்புணர்க்கப்பட்ட கள்ளச்சகடுகலக்கழிய *
பஞ்சியன்னமெல்லடியால் பாய்ந்தபோதுநொந்திடுமென்று *
அஞ்சினேன்காண்அமரர்கோவே ! ஆயர்கூட்டத்தளவன்றாலோ *
கஞ்சனைஉன்வஞ்சனையால் வலைப்படுத்தாய் ! முலையுணாயே. (ச)

தீயபுந்திக்கஞ்சன்உன்மேல் சினமுடையன், சோர்வுபார்த்து *
மாயந்தன்னால்வலைப்படுக்கில் வாழகில்லேன்வாசுதேவா ! * [டா
தாயர்வாய்ச்சொல்கருமங்கண்டாய் சாற்றிச்சொன்னேன்போகவேண்
ஆயர்பாடிக்கணிவிளக்கே ! அமர்ந்துவந்துஎன்முலையுணாயே. (ரு)

மின்னனையநுண்ணிடையார் விரிகுழல்மேல்நுழைந்தவண்டு *
இன்னிசைக்கும்வில்லிபுத்தூர் இனிதமர்ந்தாய் ! * உன்னைக்கண்டார்
என்னநோன்புநோற்றாள்கொலோ இவனைப்பெற்றவயிறுடையாள் ! *
என்னுமவார்த்தையெய்துவித்த இருடீகேசா ! முலையுணாயே. (சு)

பெண்டிர்வாழ்வார்நின்னொப்பாரைப் பெறுதுமென்னுமாசையாலே *
கண்டவர்கள்போக்கொழிந்தார் கண்ணிணையால்கலக்கநோக்கி *
வண்டுலாம்பூங்குழலினார் உன்வாயமுதம்உண்ணவேண்டி *
கொண்டுபோவான்வந்துநின்றார் கோவிந்தா ! நீமுலையுணாயே (எ)

இருமலைபோலெதிர்ந்தமல்லர் இருவரங்கமெரிசெய்தாய் ! * உன்
திருமலிந்துதிகழ்மார்வு தேக்கவந்தென்னல்குலேறி *
ஒருமுலையைவாய்மடுத்து †ஒருமுலையைநெருடிக்கொண்டு *
இருமுலையும்முறைமுறையா ஏங்கியேங்கியிருந்துணாயே. (௮)

அங்கமலப்போதகத்தில் அணிகொள்முத்தம்சிந்தினாற்போல் *
செங்கமலமுகம்வியர்ப்பத் தீமைசெய்திம்முற்றத்தூடே *
அங்கமெல்லாம்புழுதியாக அளையவேண்டாஅம்ம ! * விம்ம
அங்கமரர்க்கமுதளித்த அமரர்கோவே ! முலையுணாயே. (௯)

ஓடவோடக்கிங்கிணிகள் ஒலிக்குமோசைப்பாணியாலே *
பாடிப்பாடிவருகின்றாயைப் பற்பநாபனென்றிருந்தேன் *
ஆடியாடியசைந்தசைந்திட்டு அதனுக்கேற்றகூத்தையாடி *
ஓடியோடிப்போய்விடாதே உத்தமா ! நீமுலையுணாயே. (௧௦)

வாரணிந்தகொங்கையாய்ச்சி மாதவா ! உண்ணென்றமாற்றம் *
நீரணிந்தகுவளைவாசம் நிகழநாறும்வில்லிபுத்தூர் *
பாரணிந்ததொல்புகழான் பட்டர்பிரான்பாடல்வல்லார் *
சீரணிந்தசெங்கண்மால்மேல் சென்றசிந்தைபெறுவர்தாமே. (௧௧)

அடிவரவு—அரவணையாய் வைத்த தந்தம் கஞ்சன் தீப மின் பெண்டிர் இருமலை அங்கமலம் ஓட வாரணிந்த போய்ப்பாடு.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.



## ௩-ஆம் திருமொழி - போய்ப்பாடு.



[துவாதசநாமம் : காதுகுத்துதல்.]

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம் (அசாவேரிராகம் — ஆதிதாளம்)

போய்ப்பாடுடையநின்தந்தையும்தாழ்த்தான்
பொருதிறல்கஞ்சன்கடியன் *
காப்பாருமில்லைகடல்வண்ணா ! உன்னைத்
தனியேபோய்எங்குந்திரிதி *
பேய்ப்பால்முலையுண்டபித்தனே !
கேசவநம்பீ ! உன்னைக்காதுகுத்த *
ஆய்ப்பாலர்பெண்டுகளெல்லாரும்வந்தார்
அடைக்காய்திருத்திநான்வைத்தேன் (௧)

† 'ஒருமுலையை நெருடிக்கொண்டு' என்ற பாடம் வ்யாக்யானத்தோடு நன்கு பொருந்தும்.

வண்ணப்பவளமருங்கினில்சாத்தி
மலர்ப்பாதக்கிங்கிணியார்ப்ப *
நண்ணித்தொழுமவர்சிந்தைபிரியாத
நாராயணா ! இங்கேவாராய் *
எண்ணற்கரியபிரானே ! திரியை
எரியாமேகாதுக்கிடுவன் *
கண்ணுக்குநன்றுமழகுமுடைய
கனகக்கடிப்பும்இவையா ! (உ)

வையமெல்லாம்பெறும்வார்கடல்வாழும்
மகரக்குழைகொண்டுவைத்தேன் *
வெய்யவேகாதில்திரியையிடுவன்
நீவேண்டியதெல்லாம்தருவன் *
உய்யஇவ்வாயர்குலத்தினில்தோன்றிய
ஒண்சுடராயர்கொழுந்தே ! *
மையன்மைசெய்துஇளவாய்ச்சியருள்ளத்து
மாதவனே ! இங்கேவாராய். (௩)

வணநன்றுடையவயிரக்கடிப்பிட்டு
வார்காதுதாழப்பெருக்கி *
குணநன்றுடையர்இக்கோபாலபிள்ளைகள்
கோவிந்தா ! நீசொல்லுக்கொள்ளாய் *
இணைநன்றழகியஇக்கடிப்புஇட்டால்
இனியபலாப்பழம்தந்து *
சுணநன்றணிமுலையுண்ணத்தருவன்நான்
சோததம்பிரான் ! இங்கேவாராய். (௪)

சோத்தம்பிரான் ! என்றுஇரந்தாலும்கொள்ளாய்
சுரிகுழலாரொடுநீபோய் *
கோத்துக்குரவைபிணைந்துஇங்குவந்தால்
குணங்கொண்டிடுவனோ? நம்பீ ! *
பேர்த்தும்பெரியனஅப்பம்தருவன்
பிரானே ! திரியிடவொட்டில் *
வேய்த்தடந்தோளார்விரும்புகருங்குழல்
விட்டுவே ! நீஇங்கேவாராய். (௫)

விண்ணெல்லாம்கேட்கஅழுதிட்டாய் !
உன்வாயில்விரும்பியதனைநான்நோக்கி *
மண்ணெல்லாம்கண்டுஎன்மனத்துள்ளேயஞ்சி
மதுசூதனேயென் † றிருந்தேன் *

† 'அறிந்தேன்' என்ற பாடம் வ்யாக்யாநத்துக்கு ஒக்கும்.

புண்ணேதுமில்லைஉன்காதுமறியும்
பொறுத்துஇறைப்போதுஇருநம்பீ! *
கண்ணா! என்கார்முகிலே!
கடல்வண்ணா! காவலனே! முலையுணாயே. (௬)

முலையேதும்வேண்டேனென்றோடி
நின்காதில்கடிப்பைப்பறித்தெறிந்திட்டு *
மலையையெடுத்துமகிழ்ந்துகல்மாரிகாத்துப்
பசுநிரைமேய்த்தாய்! *
சிலையொன்றுஇறுத்தாய்! திரிவிக்கிரமா!
திருவாயர்பாடிப்பிரானே! *
தலைநிலாப்போதேஉன்காதைப்பெருக்காதே
விட்டிட்டேன்குற்றமேயன்றே. (௭)

என்குற்றமேயென்றுசொல்லவும்வேண்டாகாண்
என்னைநான்மண்ணுண்டேனாக *
அன்புற்றுநோக்கிஅடித்தும்பிடித்தும்
அனைவர்க்கும்காட்டிற்றிலையே *
வன்புற்றரவின்பகைக்கொடிவாமனநம்பீ!
உன்காதுகள்தூரும் *
துன்புற்றனவெல்லாம்தீர்ப்பாய்பிரானே!
திரியிட்டுச்சொல்லுகேன்மெய்யே. (௮)

மெய்யென்றுசொல்லுவார்சொல்லைக்கருதித்
தொடுப்புண்டாய்வெண்ணெயையென்று *
கையைப்பிடித்துக்கரையுரலோடுஎன்னைக்
காணவேகட்டிற்றிலையே? *
செய்தனசொல்லிச்சிரித்துஅங்குஇருக்கில்
சிரீதரா! உன்காதுதூரும் *
கையில்திரியையிடுகிடாய் இந்நின்ற
காரிகையார்சிரியாமே. (௯)

காரிகையார்க்கும்உனக்கும்இழுக்குற்றென்?
காதுகள்வீங்கியெரியில் *
தாரியாதாகில்தலைநொந்திடுமென்று
விட்டிட்டேன்குற்றமேயன்றே *

சேரியிற்பிள்ளைகளெல்லாரும் காது
பெருக்கித்திரியவுங்காண்டி *
ஏர்விடைசெற்று இளங்கன்றுஎறிந்திட்ட
இருடீகேசா ! என்தன்கண்ணே ! (௧௦)

கண்ணைக்குளிரக்கலந்துஎங்கும்நோக்கிக்
கடிகமழ்பூங்குழலார்கள் *
எண்ணத்துள்என்றும்இருந்துதித்திக்கும்
பெருமானே ! எங்களமுதே! *
உண்ணக்கனிகள்தருவன் கடிப்பொன்றும்
நோவாமேகாதுக்கிடுவன் *
பண்ணைக்கிழியச்சகடமுதைத்திட்ட
பற்பநாபா ! இங்கேவாராய். (௧௧)

வாவென்றுசொல்லிஎன்கையைப்பிடித்து
வலியவேகாதில்கடிப்பை *
நோவத் † திரிக்கில்உனக்கிங்கிழுக்குற்றென் ?
காதுகள்நொந்திடும்கில்லேன் *
நாவற்பழம்கொண்டுவைததேன்
இவை ‡ காணாய்நம்பீ ! * முன்வஞ்சமகளைச்
சாவப்பாலுண்டுசகடிறப்பாய்ந்திட்ட
தாமோதரா ! இங்கேவாராய். (௧உ)

❀ வார்காதுதாழப்பெருக்கியமைத்து
மகரக்குழையிடவேண்டி *
சீரால்அசோதைதிருமாலைச்சொன்னசொல்
சிந்தையுள்நின்றுதிகழ *
பாரார்தொல்புகழான்புதுவைமன்னன்
பன்னிருநாமததாற்சொன்ன *
ஆராதஅந்தாதிபன்னிரண்டும்வல்லார்
அச்சுதனுக்குஅடியாரே. (௧௩)

அடிவரவு:—பொய்ப்பாடு வண்ணம் வையம் வணம் சோத்தம் விண் முலை என்குற்றம் மெய் காரிகையார்க்கும் கண்ணை வாவென்று வார்காது வெண்ணெயளைந்த.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.



† 'தரிக்கில்' என்றும் பாடம். ‡ 'ஆணாய்' என்று சிலர் பாடம்; பொருள்படாது

## ச - ஆந் திருமொழி - வெண்ணெயளைந்த.



[கண்ணனை நீராட அழைத்தல்.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (பிலஹரிராகம்-ஜம்பைதாளம்.)

† ❀ வெண்ணெயளைந்தகுணுங்கும் விளையாடுபுழுதியும்கொண்டு *
திண்ணெனஇவ்விராஉன்னைத் தேய்த்துக்கிடக்கநான்ஒட்டேன் *
எண்ணெய்ப்புளிப்பழம்கொண்டு இங்குஎத்தனைபோதும்இருந்தேன்
நண்ணலரியபிரானே ! நாரணா ! நீராடவாராய். (௧)

கன்றுகளோடச்செவியில் கட்டெறும்புபிடித்திட்டால் *
தென்றிக்கெடுமாகில் வெண்ணெய் திரட்டிவிழுங்குமாகாண்பன் *
நின்றமராமரம்சாய்த்தாய் ! நீபிறந்ததிருவோணம் *
இன்று, நீநீராடவேண்டும் எம்பிரான் ! ஓடாதேவாராய். (௨)

பேய்ச்சிமுலையுண்ணக்கண்டு பின்னையும்நில்லாதுஎன்னெஞ்சம் *
ஆய்ச்சியரெல்லாரும்கூடி அழைக்கவும்நான்முலைதந்தேன் *
காய்ச்சினநீரொடுநெல்லி கடாரத்தில்பூரித்துவைத்தேன் *
வாய்த்தபுகழ்மணிவண்ணா ! மஞ்சனமாடநீவாராய். (௩)

கஞ்சன்புணர்ப்பினில்வந்த கடியசகடம்உதைத்து *
வஞ்சகப்பேய்மகள்துஞ்ச வாய்முலைவைத்தபிரானே ! *
மஞ்சளும்செங்கழுநீரின் வாசிகையும்நாறுசாந்தும் *
அஞ்சனமும்கொண்டுவைத்தேன் அழகனே ! நீராடவாராய். (௪)

அப்பம்கலந்த ‡ சிற்றுண்டி அக்காரம்பாலில்கலந்து *
சொப்படநான்சுட்டுவைத்தேன் தின்னலுறுதியேல்நம்பீ ! *
செப்பிளமென்முலையார்கள் சிறுபுறம்பேசிச்சிரிப்பர் *
சொப்படநீராடவேண்டும் சோத்தம்பிரான் ! இங்கேவாராய். (௫)

எண்ணெய்க்குடத்தையுருட்டி இளம்பிள்ளைகிள்ளியெழுப்பி *
கண்ணைப்புரட்டிவிழித்துக் $ கழகண்டுசெய்யும்பிரானே ! *
உண்ணக்கனிகள்தருவன் ஒலிகடலோதநீர்போலே *
வண்ணம்அழகியநம்பீ ! மஞ்சனமாடநீவாராய். (௬)

கறந்தநற்பாலும்தயிரும் கடைந்துஉறிமேல்வைத்தவெண்ணெய் *
பிறந்ததுவேமுதலாகப் பெற்றறியேன்எம்பிரானே ! *
சிறந்தநற்றாய்அலர்தூற்றும் என்பதனால்பிறர்முன்னே *
மறந்தும்உரையாடமாட்டேன் மஞ்சனமாடநீவாராய். (௭)

---

† இந்தப் பத்துப்பாசுரங்களும், திருமஞ்சனகாலத்தில் ஸேவிக்கப்படுவன.
‡ 'சிற்றுண்டை' என்றும் பாடம். $ 'கழைகண்டு' என்றும் பாடம்.

கன்றினைவாலோலைகட்டிக் கனிகளுதிரஎறிந்து * [னும்
பின்தொடர்ந்தோடி ஓர்பாம்பைப் பிடித்துக்கொண்டாட்டினாய்போ
நின்திறத்தேனல்லேன்நம்பீ ! நீபிறந்ததிருநல்நாள் *
நன்றுநீநீராடவேண்டும் நாரணா ! ஓடாதேவாராய். (அ).

பூணித்தொழுவினில்புக்குப் புழுதியளைந்தபொன்மேனி *
காணப்பெரிதும்உகப்பன் ஆகிலும்கண்டார்பழிப்பர் *
நாணெத்தனையுமிலாதாய் ! நப்பின்னைகாணில்சிரிக்கும் *
மாணிக்கமே ! என்மணியே ! மஞ்சனமாடநீவாராய். (கூ).

❀ கார்மலிமேனி † நிறத்துக் கண்ணபிரானையுகந்து *
வார்மலிகொங்கையசோதை மஞ்சனமாட்டியவாற்றை *
பார்மலிதொல்புதுவைக்கோன் பட்டர்பிரான்சொன்னபாடல் *
சீர்மலிசெந்தமிழ்வல்லார் தீவினையாதுமிலரே. (௧0).

அடிவரவு:—வெண்ணெய் கன்றுகள் பேய்ச்சி கஞ்சன் அப்பம் எண்ணெய் கறந்த கனறினை பூணி கார்மலி பின்னை.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.



## ரு - ஆந் திருமொழி - பின்னைமணாளனை.



[கண்ணன் குழல்வாரக் காக்கையை வாவெனல்.]

கலித்தாழிசை. (மத்யமாவதிராகம் - ரூபகதாளம்.)

❀ பின்னைமணாளனைப் பேரில்கிடந்தானை *
முன்னையமரர் முதல்தனிவித்தினை *
என்னையும் எங்கள்குடி முழுதுஆட்கொண்ட *
மன்னனைவந்துகுழல்வாராய்அக்காக்காய் !
மாதவன்தன்குழல்வாராய்அக்காக்காய்! (க).

பேயின்முலையுண்ட பிள்ளை இவன்முன்னம் *
மாயச்சகடும் மருதும்இறுத்தவன் *
காயாமலர்வண்ணன் கண்ணன்கருங்குழல் *
தூய்தாகவந்துகுழல்வாராய்அக்காக்காய் !
தூமணிவண்ணன்குழல்வாராய்அக்காக்காய்! (உ).

† 'நிறத்தன்' என்றும் பாடம்.

திண்ணக்கலத்தில் திரையுறிமேல்வைத்த *
வெண்ணெய்விழுங்கி † விரையஉறங்கிடும் *
அண்ணல் அமரர்பெருமானை * ஆயர்தம்
கண்ணனைவந்துகுழல்வாராய் அக்காக்காய் !
கார்முகில்வண்ணன்குழல்வாராய் அக்காக்காய் ! (௩)

பள்ளத்தில்மேயும் பறவையுருக்கொண்டு *
கள்ளவசுரன்வருவானைத தானகண்டு *
புள்ளிதுவென்று பொதுககோவாய்கீண்டிட்ட *
பிள்ளையைவந்துகுழல்வாராய் அக்காக்காய் !
பேய்முலையுண்டானகுழல்வாராய் அக்காக்காய்! (௪)

கற்றினம்மேய்த்துக் கனிககுஒருகன்றினை *
பற்றியெறிநத பரமனதிருமுடி *
உற்றனபேசி நீஓடிததிரியாதே *
அற்றைக்கும்வநதுகுழல்வாராய் அக்காக்காய் !
ஆழியான்தன்குழல்வாராய் அக்காக்காய்! (௫)

கிழக்கில்குடிமன்னர் கேடிலாதாரை *
அழிப்பான்நினைநதிட்டு அவ்வாழியதனால் *
விழிக்குமளவிலே வேரறுததானை *
குழற்குஅணியாகக்குழல்வாராய் அக்காக்காய் !
கோவிந்தன் ‡ தன்குழல்வாராய் அக்காக்காய்! (௬)

பிண்டத்திரளையும் பேய்க்குஇட்டநீர்ச்சோறும் *
உண்டற்குவேண்டி நீஓடித்திரியாதே +
அண்டத்துஅமரர்பெருமான் அழகமர் *
வண்டொத்திருண்டகுழல்வாராய அக்காக்காய் !
மாயவன்தன்குழல்வாராய் அக்காக்காய்! (௭)

உந்தியெழுந்த உருவமலர்தன்னில் *
சந்தச்சதுமுகனதன்னைப படைததவன் *
கொந்தக்குழலைக் குறந்து $ புளியட்டி +
தந்ததின்சிப்பால்குழல்வாராய் அக்காக்காய்!
தாமோதரன்தன்குழல்வாராய் அக்காக்காய் ! (௮)

மன்னன்தன்தேவிமார் கண்டுமகிழ்வெய்த *
முன் இவ்வுலகினை முற்றும்அளநதவன் *
பொன்னின்முடியினைப் பூவணைமேல்வைத்து *
பின்னேயிருநதுகுழல்வாராய் அக்காக்காய் !
பேராயிரத்தான்குழல்வாராய் அக்காக்காய்! (௯)

† 'விரையன்' என்பதும் பாடம். ‡ 'தண்குழல்' எனறும் பாடம்.
$ 'குறந்த' என்றும், 'புழுகட்டி' என்றும் பாடம்.

தரவுகொச்சகக்கலிப்பா.

❀ கண்டார்பழியாமே அக்காக்காய்! * கார்வண்ணன்
வண்டார்குழல்வார வாவென்றஆய்ச்சிசொல் *
விண்தோய்மதிள் வில்லிபுத்தூர்க்கோன்பட்டன்சொல் *
கொண்டாடிப்பாடக் குறுகாவினை † தாமே. (௧0)

அடிவரவு:—பின்னை பேயின் திண்ணம் பள்ளத்தில் கற்றினம் கிழக்கில் பிணடம் உந்தி மன்னன் கண்டார வேலி.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.



## ௬ - ஆந் திருமொழி - வேலிக்கோல்.



[காக்கையைக் கண்ணனுக்குக் கோல்கொண்டுவர விளம்புதல்.]

கலித்தாழிசை. (தேசியராகம் - ஆதிதாளம்.)

❀ வேலிக்கோல்வெட்டி விளையாடுவில்லேற்றி *
தாலிக்கொழுந்தைத தடங்கழுததிற பூண்டு *
பீலித்தழையைப் பிணைத்துபபிறகிட்டு *
காலிப்பின்போவாற்குஓர்கோல்கொண்டுவா
கடல்நிறவண்ணற்குஓர்கோல்கொண்டுவா. (௧)

கொங்குங்குடந்தையும் கோட்டியூருமபேரும் *
எங்கும்திரிநது விளையாடும்என்மகன் *
சங்கம்பிடிக்கும் தடக்கைக்குததக்க * நல்
அங்கமுடையதோர்கோல்கொண்டுவா
அரக்குவழிததோர்கோல்கொண்டுவா. (௨)

கறுத்திட்டெதிர்நின்ற கஞ்சனைக்கொன்றான் *
பொறுததிட்டெதிர்வந்த புள்ளின்வாய்கீண்டான் *
நெறிததகுழல்களை நீங்கமுன்னோடி *
சிறுக்கன்றுமேய்ப்பாற்குஓர்கோல்கொண்டுவா
தேவபிரானுக்குஓர்கோல்கொண்டுவா. (௩)

ஒன்றேயுரைப்பான் ஒருசொல்லேசொல்லுவான் *
துன்றுமுடியான் துரியோதனன்பக்கல் *
சென்றுஅங்குப்பாரதம் கையெறிந்தானுக்கு *
கன்றுகள்மேய்ப்பதோர்கோல்கொண்டுவா
கடல்நிறவண்ணற்குஓர்கோல்கொண்டுவா. (௪)

† 'தானே' என்பதும் பாடம்.

சீரொன்றுதூதாய்த் துரியோதனன்பக்கல் *
ஊரொன்றுவேண்டிப் பெறாதஉரோடத்தால் *
பாரொன்றிப் பாரதம்கைசெய்து * பார்த்தற்குத
தேரொன்றையூர்ந்தாற்குஓர்கோல்கொண்டுவா
தேவபிரானுக்குஓர்கோல்கொண்டுவா. (௫)

ஆலத்திலையான் அரவினணைமேலான் *
நீலக்கடலுள் நெடுங்காலம்கண்வளர்ந்தான் *
பாலப்பிராயத்தே பார்த்தற்குஅருள்செய்த *
கோலப்பிரானுக்குஓர்கோல்கொண்டுவா
குடந்தைக்கிடந்தாற்குஓர்கோல்கொண்டுவா. (௬)

பொன்திகழ் சித்திரகூடப்பொருப்பினில் *
உற்றவடிவில் ஒருகண்ணும்கொண்ட * அக்
கற்றைக்குழலன் கடியன்விரைந்து * உன்னை
மற்றைக்கண்கொள்ளாமேகோல்கொண்டுவா
மணிவண்ணநம்பிக்குஓர்கோல்கொண்டுவா. (௭)

மின்னிடைச் சீதைபொருட்டா * இலங்கையர்
மன்னன்மணிமுடி பத்தும்உடனவீழ *
தன்னிகரொன்றில்லாச் சிலைகால்வளைத்திட்ட *
மின்னுமுடியற்குஓர்கோல்கொண்டுவா *
வேலையடைத்தாற்குஓர்கோல்கொண்டுவா. (௮)

தென்னிலங்கைமன்னன் சிரமதோள்துணிசெய்து *
மின்னிலங்குபூண் விபீடணநம்பிக்கு *
என்னிலங்குநாமத்தளவும் அரசென்ற *
மின்னலங்காரற்குஓர்கோல்கொண்டுவா
வேங்கடவாணற்குஓர்கோல்கொண்டுவா. (௯)

தரவுகொச்சகக்கலிப்பா.

அக்காக்காய் ! நம்பிக்குக் கோல்கொண்டுவாவென்று *
மிக்காளுரைத்தசொல் வில்லிபுத்தூர்ப்பட்டன் *
ஒக்கவுரைத்த தமிழ்ப்பத்தும்வல்லவர் *
மக்களைப்பெற்று மகிழ்வர் இவ்வையத்தே. (௧0)

அடிவரவு:—வேலி கொங்கு கறுத்திட்டு ஒன்றே சீர் ஆலத்து பொன்திகழ் மின்னிடை தென்னிலங்கை அக்காக்காய் ஆனிரை.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்

## எ - ஆந் திருமொழி - ஆனிரை.



[கண்ணனைப் பூச்சூட அழைத்தல்.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (அடாணாராகம்-ரூபகதாளம்.)

† ஆனிரைமேய்க்கநீபோதி அருமருந்தாவதறியாய் *
கானகமெல்லாம்திரிந்து உன்கரியதிருமேனிவாட *
பானையில்பாலைப்பருகிப் பற்றாதாரெல்லாம்சிரிப்ப *
தேனிலினியபிரானே ! செண்பகப்பூச்சூட்டவாராய். (க)

கருவுடைமேகங்கள்கண்டால் உன்னைக்கண்டாலொக்குங்கண்கள் *
உருவுடையாய் ! உலகேழும்உண்டாகவந்துபிறந்தாய் ! *
திருவுடையாள்மணவாளா ! திருவரங்கத்தேகிடந்தாய் ! *
மருவிமணம்கமழ்கின்ற மல்லிகைப்பூச்சூட்டவாராய். (உ)

மச்சொடுமாளிகையேறி மாதர்கள்தம்மிடம்புக்கு *
கச்சொடுபட்டைக்கிழித்துக் காம்புதுகிலவைகீறி *
நிச்சலும்தீமைகள்செய்வாய் ! நீள்திருவேங்கடத்துஎந்தாய் ! *
பச்சைத்தமனகத்தோடு பாதிரிப்பூச்சூட்டவாராய். (ங)

தெருவின்கண்நின்று இளவாய்ச்சிமார்களைத்தீமைசெய்யாதே *
மருவும்தமனகமும்சீர் மாலைமணம்கமழ்கின்ற *
புருவம்கருங்குழல்நெற்றி பொலிந்தமுகிற்கன்றுபோலே *
உருவமழகியநம்பீ ! உகந்திவைசூட்டநீவாராய். (௪)

புள்ளினைவாய்பிளந்திட்டாய் ! பொருகரியின்கொம்பொசித்தாய் ! *
கள்ளவரக்கியைமூக்கொடு காவலனைத்தலைகொண்டாய் ! *
அள்ளிநீவெண்ணெய்விழுங்க அஞ்சாதுஅடியேன்அடித்தேன் *
தெள்ளியநீரிலெழுந்த செங்கழுநீர்சூட்டவாராய். (ரு)

எருதுகளோடுபொருதி ஏதும்உலோபாய்காண்நம்பீ ! *
கருதியதீமைகள்செய்து கஞ்சனைக்கால்கொடுபாய்ந்தாய் ! *
தெருவின்கண்தீமைகள்செய்து சிக்கெனமல்லர்களோடு *
பொருதுவருகின்றபொன்னே ! புன்னைப்பூச்சூட்டவாராய். (சு)

குடங்களெடுத்தேறவிட்டுக் கூத்தாடவல்லஎம்கோவே ! *
மடங்கொள்மதிமுகத்தாரை மால்செய்யவல்லஎன்மைந்தா ! *
இடந்திட்டுஇரணியன்நெஞ்சை இருபிளவாகமுன்கீண்டாய் !
குடந்தைக்கிடந்தஎம்கோவே ! குருக்கத்திப்பூச்சூட்டவாராய். (எ)

---

† இந்தத்திருமொழி, நித்யாநுஸந்தாநத்திற் சேர்ந்தது.

சீமாலிகனவனோடு தோழமைகொள்ளவும்வல்லாய்! *
சாமாறு அவனைநீயெண்ணிச் சக்கரத்தால்தலைகொண்டாய்! *
ஆமாறறியும்பிரானே! அணியரங்கத்தேகிடந்தாய்! *
ஏமாற்றம்என்னைத்தவிர்த்தாய்! இருவாட்சிப்பூச்சூட்டவாராய். (அ)

அண்டத்தமரர்கள்சூழ அத்தாணியுள்ளங்கிருந்தாய்! *
தொண்டர்கள்நெஞ்சிலுறைவாய்! தூமலராள்மணவாளா! *
உண்டிட்டுலகினையேழும் ஓராலிலையில்துயில்கொண்டாய்! *
கண்டுநானுன்னையுகக்கக் கருமுகைப்பூச்சூட்டவாராய். (௯)

செண்பகமல்லிகையோடு செங்கழுநீர்இருவாட்சி *
எண்பகர்பூவும்கொணர்ந்தேன் இன்றுஇவைசூட்டவாவென்று *
மண்பகர்கொண்டானை ஆய்ச்சிமகிழ்ந்துரைசெய்தஇம்மாலை *
பண்பகர்வில்லிபுத்தூர்க்கோன் பட்டர்பிரான்சொன்னபத்தே. (௧௦)

அடிவரவு:—ஆனிரை கரு மச்சொடு தெருவின்கண் புள்ளினை எருதுகளோடு
குடங்கள் சீமாலிகன் அண்டத்து செண்பகம் இந்திரன்.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.



## அ - ஆந் திருமொழி - இந்திரனோடு.



[க்ருஷ்ணனை த்ருஷ்டிதோஷம் வாராதபடி திருவந்திக் காப்பிட அழைத்தல்.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (தோடிராகம் - ரூபகதாளம்.)

† இந்திரனோடுபிரமன் ஈசன்இமையவரெல்லாம் *
மந்திரமாமலர்கொண்டு மறைந்துஉவராய்வந்துநின்றார் *
சந்திரன்மாளிகைசேரும் சதுரர்கள்வெள்ளறைநின்றாய்! *
அந்தியம்போதுஇதுவாகும் அழகனே! காப்பிடவாராய். (௧)

கன்றுகள்இல்லம்புகுந்து கதறுகின்றபசுவெல்லாம் *
நின்றொழிந்தேன்உன்னைக்கூவி நேசமேலொன்றுமிலாதாய்! *
மன்றில்நில்லேல் அந்திப்போது மதிள்திருவெள்ளறைநின்றாய்! *
நன்றுகண்டாய்என்தன்சொல்லு நான்உன்னைக்காப்பிடவாராய். (௨)

செப்போதுமென்முலையார்கள் சிறுசோறும்இல்லும்சிதைத்திட்டு *
அப்போதுநானுரப்பப்போய் அடிசிலுமுண்டிலையாள்வாய்! *
முப்போதும்வானவரேத்தும் முனிவர்கள்வெள்ளறைநின்றாய்! *
இப்போதுநான்ஒன்றும்செய்யேன் எம்பிரான்! காப்பிடவாராய். (௩)

† இது, நித்யாநுஸந்தாநத்தைச் சேர்ந்தது.

கண்ணில்மணல்கொடுதூவிக் காலினால்பாய்ந்தனையென்றென்று *
எண்ணரும்பிள்ளைகள்வந்திட்டு இவரால்முறைப்படுகின்றார் *
கண்ணனே! வெள்ளறைநின்றாய்! கண்டாரோடேதீமைசெய்வாய்! *
வண்ணமேவேலையதொப்பாய்! வள்ளலே! காப்பிடவாராய். (௪)

பல்லாயிரவர்இவ்வூரில்பிள்ளைகள் தீமைகள்செய்வார் *
எல்லாம்உன்மேலன்றிப் † போகாது எம்பிரான்! நீஇங்கேவாராய் *
நல்லார்கள்வெள்ளறைநின்றாய்! ஞானச்சுடரே! உன்மேனி *
சொல்லாரவாழ்த்திநின்றேத்திச் சொப்படக்காப்பிடவாராய். (௫)

கஞ்சன்கறுக்கொண்டுநின்மேல் கருநிறச்செம்மயிர்ப்பேயை *
வஞ்சிப்பதற்குவிடுத்தானென்பது ஓர்வார்த்தையும்உண்டு *
மஞ்சுதவழ்மணிமாட மதிள்திருவெள்ளறைநின்றாய்! *
அஞ்சுவன்நீஅங்குநிற்க அழகனே! காப்பிடவாராய். (௬)

கள்ளச்சகடும்மருதும் கலக்கழியவுதைசெய்த *
பிள்ளையரசே! நீபேயைப்பிடித்துமுலையுண்டபின்னை *
உள்ளவாறொன்றும்அறியேன் ஒளியுடைவெள்ளறைநின்றாய்! *
பள்ளிகொள்போதுஇதுவாகும் பரமனே! காப்பிடவாராய். (௭)

இன்பமதனைஉயர்த்தாய்! இமையவர்க்குஎன்றும்அரியாய்! *
கும்பக்களிறட்டகோவே! கொடுங்கஞ்சன்நெஞ்சினிற்கூற்றே! *
செம்பொன்மதிள்வெள்ளறையாய்! செல்வத்தினால்வளர்பிள்ளாய்! *
கம்பக்கபாலிகாண்அங்குக் கடிதோடிக்காப்பிடவாராய். (௮)

இருக்கொடுநீர்சங்கில்கொண்டிட்டு எழில்மறையோர்வந்துநின்றார் *
தருக்கேல்நம்பி! சந்திநின்று தாய்சொல்லுக்கொள்ளாய்சிலநாள் *
திருக்காப்புநான்உன்னைச்சாத்தத் தேசுடைவெள்ளறைநின்றாய்! *
உருக்காட்டும்அந்திவிளக்குஇன்றொளிகொள்ளஏற்றுகேன்வாராய். (௯)

❋ போதமர்செல்வக்கொழுந்து புணர்திருவெள்ளறையானை *
மாதர்க்குயர்ந்தஅசோதை மகன்தன்னைக்காப்பிட்டமாற்றம் *
வேதப்பயன்கொள்ளவல்ல விட்டுசித்தன்சொன்னமாலை *
பாதப்பயன்கொள்ளவல்ல பத்தருள்ளார்வினைபோமே. (௰)

அடிவரவு:—இந்திரனோடு கன்றுகள் செப்பு கண்ணில் பல்லாயிரவர் கஞ்சன் கள்ளம் இன்பமதனை இருக்கொடு போதமர் வெண்ணெய்விழுங்கி.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.



† 'போகா' என்றுங் கூறுவர்.

## ' கூ - ஆந் திருமொழி-வெண்ணெய்விழுங்கி.



[வெண்ணெய் களவாடல் முதலிய பாலக்ரீடை விசேஷங்கள்.]

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (கேதாரகௌளராகம்-ஆதிதாளம்)

வெண்ணெய்விழுங்கிவெறுங்கலத்தை
வெற்பிடையிட்டு அதனோசைகேட்கும் *
கண்ணபிரான்கற்றகல்விதன்னைக்
காக்ககில்லோம்உன்மகனைக்காவாய் *
புண்ணில்புளிப்பெய்தாலொக்கும்தீமை
புரைபுரையால்இவைசெய்யவல்ல *
அண்ணற்கண்ணானோர்மகனைப்பெற்ற
அசோதைநங்காய் ' உன்மகனைக்கூவாய். (க

வருகவருகவருக இங்கே
வாமனநம்பீ ! வருக இங்கே *
கரியகுழல்செய்யவாய்முகத்துக்
காகுத்தநம்பீ ' வருகஇங்கே *
அரியனிவன்எனக்குஇன்றுநங்காய் !
அஞ்சனவண்ணா ! அசலகத்தார் *
பரிபவம்பேசததரிக்ககில்லேன்
பாவியேனுக்குஇங்கேபோதராயே. (உ)

திருவுடைப்பிள்ளை தான்தீயவாறு
தேக்கமொன்றுமிலன்தேசுடையன்*
உருகவைததகுடத்தொடுவெண்ணெய்
† உறிஞ்சியுடைத்திட்டுப்போந்துநின்றான் *
அருகிருந்தார்தம்மைஅநியாயம்செய்வது
தான் வழக்கோ ? அசோதாய் ! *
வருகவென்றுஉன்மகன்தன்னைக்கூவாய்
வாழவொட்டான்மதுசூதனனே. (ந)

கொண்டல்வண்ணா ' இங்கேபோதராயே
கோயிற்பிள்ளாய் ! இங்கேபோதராயே *
தெண்திரைசூழ்திருப்பேர்க்கிடந்த
திருநாரணா ! இங்கேபோதராயே *

---

† 'உறிச்சி' எனபது அத்யாபகபாடம்.

உண்டுவந்தேன் அம்மமென்றுசொல்லி
ஓடி அகம்புகஆய்ச்சிதானும் *
கண்டெதிரேசென்றெடுத்துக்கொள்ளக்
கண்ணபிரான்கற்றகல்விதானே. (௪)

பாலைக்கறந்துஅடுப்பேறவைத்துப்
பல்வளையாள்என்மகளிருப்ப *
மேலையகத்தேநெருப்புவேண்டிச்சென்று
இறைப்பொழுதுஅங்கேபேசிநின்றேன் *
சாளக்கிராமமுடையநம்பி
சாய்த்துப்பருகிட்டுப்போந்துநின்றான் *
ஆலைக்கரும்பின்மொழியனைய
அசோதைநங்காய்! உன்மகனைக்கூவாய். (௫)

போதர்கண்டாய்இங்கேபோதர்கண்டாய்
போதரேனென்னாதேபோதர்கண்டாய் *
ஏதேனும்சொல்லிஅசலகத்தார்
ஏதேனும்பேசநான்கேட்கமாட்டேன் *
† கோதுகலமுடைக்குட்டனேயோ !
குன்றெடுத்தாய்! குடமாடுகூத்தா ! *
வேதப்பொருளே ! என்வேங்கடவா !
வித்தகனே! இங்கேபோதராயே. (௬)

செந்நெலரிசிசிறுபருப்புச்
செய்த அக்காரம்நறுநெய்பாலால் *
பன்னிரண்டுதிருவோணம்அட்டேன்
பண்டும்இப்பிள்ளைபரிசறிவன் *
இன்னமுகப்பன்நானென்றுசொல்லி
எல்லாம்விழுங்கிட்டுப்போந்துநின்றான் *
உன்மகன்தன்னையசோதைநங்காய் !
கூவிக்கொள்ளாய்இவையும்சிலவே. (௭)

கேசவனே ! இங்கேபோதராயே
கில்லேனென்னாதுஇங்கேபோதராயே *
நேசமிலாதாரகத்திருந்து
நீவிளையாடாதேபோதராயே *

† 'கோதுகுலம்' என்று சிலர்.

தூசனம்சொல்லும்தொழுத்தைமாரும்
தொண்டரும்நின்றவிடத்தில்நின்று *
தாய்சொல்லுக்கொள்வதுதன்மம்கண்டாய்
தாமோதரா! இங்கேபோதராயே. (அ)

கன்னலிலட்டுவத்தோடுசீடை
காரெள்ளினுண்டைகலத்திலிட்டு *
என்னகமென்றுநான்வைத்துப்போந்தேன்
இவன்புக்குஅவற்றைப்பெறுத்திப்போந்தான் *
பின்னும்அகம்புக்குஉறியைநோக்கிப்
பிறங்கொளிவெண்ணெயும்சோதிக்கின்றான் *
உன்மகன்தன்னையசோதைநங்காய்!
கூவிக்கொள்ளாய் இவையும் சிலவே. (கூ)

சொல்லிலரசிப்படுதிநங்காய்!
சூழலுடையன்உன்பிள்ளைதானே *
இல்லம்புகுந்துஎன்மகளைக்கூவிக்
கையில்வளையைக்கழற்றிக்கொண்டு *
கொல்லையில்நின்றும்கொணர்ந்துவிற்ற
அங்கொருத்திக்குஅவ்வளைகொடுத்து *
நல்லனநாவற்பழங்கள்கொண்டு
நானல்லேனென்றுசிரிக்கின்றானே. (க0)

❀ வண்டுகளித்திரைக்கும்பொழில்சூழ்
வருபுனல்காவிரித்தென்னரங்கன் *
பண்டவன்செய்தகிரீடையெல்லாம்
பட்டர்பிரான்விட்டுசித்தன்பாடல் *
கொண்டிவைபாடிக்குனிக்கவல்லார்
கோவிந்தன்தன்அடியார்களாகி *
எண்திசைக்கும்விளக்காகிநிற்பார்
இணையடிஎன்தலைமேலனவே. (கக)

அடிவரவு:—வெண்ணெய் வருக திரு கொண்டல் பாலை போதர் செந்நெல் கேசவனே கன்னல் சொல்லில் வண்டு ஆற்றிலிருந்து.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.



## கo - ஆந் திருமொழி - ஆற்றிலிருந்து.



[ஆயர்மங்கையர் யசோதைபக்கல் கண்ணன்தீம்புகளைக் கூறி
முறையிடுதல்.]

கலித்தாழிசை. (நாதநாமக்கிரியை ராகம் - ரூபகதாளம்.)

ஆற்றிலிருந்து விளையாடுவோங்களை *
சேற்றாலெறிந்து வளைதுகில்கைக்கொண்டு *
காற்றின்கடியனாய் ஓடி அகம்புக்கு *
மாற்றமும்தாரானால்இன்றுமுற்றும்
வளைத்திறம்பேசானால்இன்றுமுற்றும். (க)

குண்டலம்தாழக் குழல்தாழநாண்தாழ *
எண்திசையோரும் இறைஞ்சித்தொழுதேத்த *
வண்டமர்பூங்குழலார் துகில்கைக்கொண்டு *
விண்தோய்மரத்தானால்இன்றுமுற்றும்
வேண்டவும்தாரானால்இன்றுமுற்றும். (உ)

தடம்படுதாமரைப் பொய்கைகலக்கி *
விடம்படுநாகத்தை வால்பற்றிஈர்த்து *
படம்படுபைந்தலை மேலெழப்பாய்ந்திட்டு *
உடம்பையசைத்தானால்இன்றுமுற்றும்
உச்சியில்நின்றானால்இன்றுமுற்றும். (ந)

தேனுகனாவி செகுத்து * பனங்கனி
தானெறிந்திட்ட தடம்பெருந்தோளினால் *
வானவர்கோன்விட வந்தமழைதடுத்து *
ஆனிரைகாத்தானால்இன்றுமுற்றும்
அவைஉய்யக்கொண்டானால்இன்றுமுற்றும். (ச)

ஆய்ச்சியர்சேரி அளைதயிர்பாலுண்டு *
பேர்த்தவர்கண்டுபிடிக்கப் பிடியுண்டு *
வேய்த்தடந்தோளினார் வெண்ணெய்கொள்மாட்டாது * அங்கு
ஆப்புண்டிருந்தானால்இன்றுமுற்றும்
அடியுண்டழுதானால்இன்றுமுற்றும். (ரு)

தள்ளித்தளர்நடையிட்டு இளம்பிள்ளையாய் *
உள்ளத்தினுள்ளே அவளையுறநோக்கி *
கள்ளத்தினால்வந்த பேய்ச்சிமுலையுயிர் *
துள்ளச்சுவைத்தானால்இன்றுமுற்றும்
துவக்கறவுண்டானால்இன்றுமுற்றும். (சு)

மாவலிவேள்வியில் மாணுருவாய்ச்சென்று *
மூவடிதாவென்று இரந்தஇம்மண்ணினை *
ஓரடியிட்டு இரண்டாமடிதன்னிலே *
தாவடியிட்டானால்இன்றுமுற்றும்
தரணியளந்தானால்இன்றுமுற்றும். (எ)

தாழைதண்ணாம்பல் தடம்பெரும்பொய்கைவாய் *
வாழுமுதலை வலைப்பட்டுவாதிப்புண் *
வேழம்துயர்கெட விண்ணோர்பெருமானாய் *
ஆழிபணிகொண்டானால்இன்றுமுற்றும்
அதற்குஅருள்செய்தானால்இன்றுமுற்றும். (அ)

வானத்தெழுந்த மழைமுகில்போல் * எங்கும்
கானத்துமேய்ந்து களித்துவிளையாடி *
ஏனத்துருவாய் இடந்தஇம்மண்ணினை *
தானத்தேவைத்தானால்இன்றுமுற்றும்
தரணியிடந்தானால்இன்றுமுற்றும். (கூ)

தரவுகொச்சகக்கலிப்பா.

அங்கமலக்கண்ணன்தன்னை யசோதைக்கு *
மங்கைநல்லார்கள்தாம் வந்துமுறைப்பட்ட *
அங்கவர்சொல்லைப் புதுவைக்கோன்பட்டன்சொல் *
இங்கிவைவல்லவர்க்கு ஏதமொன்றில்லையே. (கo)

அடிவரவு:—ஆற்றில் குண்டலம் தடம் தேனுகன் ஆய்ச்சியர் தள்ளி மாவலி தாழை வானத்து அங்கமலம் தன்னேராயிரம்.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.



## மூன்றாம் பத்து.

### க-ஆந் திருமொழி - தன்னேராயிரம்.

[யசோதைப்பிராட்டி கண்ணனது அதிமாநுஷ சேஷ்டிதங்களைக் கண்டு முலைகொடுக்க அஞ்சுதல்.]

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம் (ஆபிராகம் - ஆதிதாளம்)

தன்னேராயிரம்பிள்ளைகளோடு
தளர்நடையிட்டுவருவான் *
பொன்னேய்நெய்யொடுபாலமுதுண்டு
ஒருபுள்ளுவன்பொய்யேதவழும *

மின்னேர் நுண்ணிடைவஞ்சமகள் கொங்கைதுஞ்ச
வாய்வைத்தபிரானே ! *
அன்னே! உன்னை அறிந்துகொண்டேன்
உனக்குஅஞ்சுவன் அம்மம்தரவே. (க)

பொன்போல்மஞ்சனமாட்டி அமுதூட்டிப்
போனேன் வருமளவுஇப்பால் *
வன்பாரச்சகடம்இறச்சாடி
வடக்கிலகம்புக்கிருந்து *
மின்போல் நுண்ணிடையாள் ஒருகன்னியை
வேற்றுருவம்செய்துவைத்த *
அன்பா! உன்னை அறிந்துகொண்டேன்
உனக்குஅஞ்சுவன் அம்மம்தரவே. (உ)

கும்மாயத்தொடுவெண்ணெய்விழுங்கிக்
குடத்தயிர்சாய்த்துப்பருகி *
பொய்ம்மாயமருதான அசுரரைப்
பொன்றுவித்துஇன்றுநீவந்தாய் *
இம்மாயம்வல்லபிள்ளைநம்பீ !
உன்னைஎன்மகனேயென்பர்நின்றார் *
அம்மா ! உன்னை அறிந்துகொண்டேன்
உனக்குஅஞ்சுவன் அம்மம்தரவே. (ஈ)

மையார்கண்மடவாய்ச்சியர்மக்களை
மையன்மைசெய்து அவர்பின்போய் *
கொய்யார்பூந்துகில்பற்றித்தனிநின்று
குற்றம்பலபலசெய்தாய் *
பொய்யா! உன்னைப்புறம்பலபேசுவ
புத்தகத்துக்குளகேட்டேன் *
ஐயா ! உன்னை அறிந்துகொண்டேன்
உனக்கு அஞ்சுவன் அம்மம்தரவே. (ச)

முப்போதும்கடைந்தீண்டியவெண்ணெயி
னோடு தயிரும்விழுங்கி *
கப்பாலாயர்கள்காவிற்கொணர்ந்த
கலத்தொடுசாய்த்துப்பருகி *

மெய்ப்பாலுண்டழுபிள்ளைகள்போல
நீவிம்மிவிம்மியழுகின்ற *
அப்பா! உன்னை அறிந்துகொண்டேன்
உனக்கு அஞ்சுவன் அம்மம்தரவே. (௫)

கரும்பார்நீள்வயல்காய்கதிர்ச்செந்நெலைக்
கற்றாநிரைமண்டித்தின்ன *
விரும்பாக்கன்றொன்றுகொண்டு
விளங்கனிவீழஎறிந்தபிரானே! *
சுரும்பார்மென்குழல்கன்னியொருத்திக்குச்
சூழ்வலைவைத்துத்திரியும் *
அரம்பா! உன்னை அறிந்துகொண்டேன்
உனக்கு அஞ்சுவன் அம்மம்தரவே. (௬)

மருட்டார்மென்குழல்கொண்டுபொழில்புக்கு
வாய்வைத்துஅவ்வாயர்தம்பாடி *
சுருட்டார்மென்குழல்கன்னியர்வந்துஉன்னைச்
சுற்றும்தொழநின்றசோதி! *
பொருட்டாயமிலேன்எம்பெருமான்!
உன்னைப்பெற்றகுற்றமல்லால் * மற்றிங்கு
அரட்டா! உன்னை அறிந்துகொண்டேன்
உனக்கு அஞ்சுவன் அம்மம்தரவே. (௭)

வாளாவாகிலும்காணகில்லார்
பிறர்மக்களை மையன்மைசெய்து *
தோளாலிட்டு அவரோடுதிளைத்து நீ
சொல்லப்படாதனசெய்தாய் *
கேளார்ஆயர்குலத்தவர் இப்பழி
கெட்டேன்! வாழ்வில்லை * நந்தன்
காளாய்! உன்னையறிந்துகொண்டேன்
உனக்கு அஞ்சுவன் அம்மம்தரவே. (௮)

தாய்மார்மோர்விற்கப்போவர்
தமப்பன்மார்கற்றாநிரைப்பின்புபோவர் *
நீ ஆய்ப்பாடி இளங்கன்னிமார்களை
நேர்படவேகொண்டுபோதி *

காய்வார்க்குஎன்றும்உகப்பனவேசெய்து
கண்டார்கழறத்திரியும் *
ஆயா ! உன்னைஅறிந்துகொண்டேன்
உனக்குஅஞ்சுவன்அம்மம்தரவே. (௯)

தொத்தார்பூங்குழல்கன்னியொருத்தியைச்
சோலைத்தடம்கொண்டுபுக்கு *
முத்தார்கொங்கைபுணர்ந்துஇராநாழிகை
மூவேழுசென்றபின்வந்தாய் *
ஒத்தார்க்குஒத்தனபேசுவர் உன்னை
உரப்பவேநான்ஒன்றும்மாட்டேன் *
அத்தா ! உன்னை அறிந்துகொண்டேன்
உனக்குஅஞ்சுவன்அம்மம்தரவே. (௧௦)

❀ காரார்மேனிநிறத்தெம்பிரானைக்
கடிகமழ்பூங்குழலாய்ச்சி *
ஆராஇன்னமுதுண்ணத்தருவன்நான்
அம்மம்தாரேனென்றமாற்றம் *
பாரார்தொல்புகழான்புதுவைமன்னன்
பட்டர்பிரான்சொன்னபாடல் *
ஏராரின்னிசை † மாலைவல்லார்
இருடீகேசனடியாரே. (௧௧)

அடிவரவு:—தன்னேராயிரம் பொன் கும்மாயத்தொடு மையார் மூப்போதும் கரும்பு மருட்டார் வாளா தாய்மார் தொத்தார் காரார் அஞ்சனம்.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.



## ௨ - ஆந் திருமொழி - அஞ்சனவண்ணனை.



[யசோதைப்பிராட்டி கண்ணனைக் கன்றின்பின் போக்கினதை எண்ணி அநுதபித்தல்.]

கலிநிலைத்துறை. (சங்கராபரணராகம்-ரூபகதாளம்.)

❀ அஞ்சனவண்ணனை ஆயர்கோலக்கொழுந்தினை *
மஞ்சனமாட்டி மனைகள்தோறும்திரியாமே *
கஞ்சனைக்காய்ந்த கழலடிநோவக்கன்றின்பின் *
என்செயப்பிள்ளையைப்போக்கினேன் எல்லேபாவமே ! (௧)

† 'மாலைநல்வல்லார்' என்னும் பாடம் ஓசைக்கு அமையும்.

பற்றுமஞ்சள்பூசிப் பாவைமாரொடுபாடியில் *
சிற்றில்சிதைத்து எங்கும்தீமைசெய்துதிரியாமே *
கற்றுத்தூளியுடை வேடர்கானிடைக்கன்றின்பின் *
எற்றுக்குஎன்பிள்ளையைப்போக்கினேன் ? எல்லேபாவமே! (உ)

நல்மணிமேகலை நங்கைமாரொடுநாள்தொறும் *
பொன்மணிமேனி புழுதியாடித்திரியாமே *
கல்மணிநின்றதிர் கானதரிடைக்கன்றின்பின் *
என்மணிவண்ணனைப்போக்கினேன் எல்லேபாவமே ! (ங)

வண்ணக்கருங்குழல் மாதர்வந்துஅலர்தூற்றிட *
பண்ணிப்பலசெய்து இப்பாடியெங்கும்திரியாமே *
கண்ணுக்கினியானைக் கானதரிடைக்கன்றின்பின் *
எண்ணற்கரியானைப்போக்கினேன் எல்லேபாவமே! (ச)

அவ்வவ்விடம்புக்கு அவ்வாயர்பெண்டிர்க்குஅணுக்கனாய் *
கொவ்வைக்கனிவாய்கொடுத்துக் கூழைமைசெய்யாமே *
† எவ்வம்சிலையுடை வேடர்கானிடைக்கன்றின்பின் *
தெய்வத்தலைவனைப்போக்கினேன் எல்லேபாவமே ! (ரு)

மிடறுமெழுமெழுத்தோட வெண்ணெய்விழுங்கிப்போய் *
படிறுபலசெய்து இப்பாடியெங்கும்திரியாமே *
கடிறுபலதிரி கானதரிடைக்கன்றின்பின் *
இடறஎன்பிள்ளையைபபோக்கினேன் எல்லேபாவமே! (சு)

வள்ளிநுடங்கிடை மாதர்வந்துஅலர்தூற்றிட *
துள்ளிவிளையாடித் தோழரோடுதிரியாமே *
கள்ளியுணங்கு வெங்கானதரிடைக்கன்றின்பின் *
புள்ளின்தலைவனைப்போக்கினேன் எல்லேபாவமே ! (எ)

பன்னிருதிங்கள் வயிற்றிற்கொண்டஅப்பாங்கினால் *
என்இளங்கொங்கை அமுதமூட்டியெடுத்தியான *
பொன்னடி நோவப் புலரியேகானில்கன்றின்பின் *
என்னிளஞ்சிங்கத்தைபபோக்கினேன் எல்லேபாவமே ! (அ)

குடையும்செருப்பும்கொடாதே தாமோதரனைநான் *
உடையும்கடியன ஊன்றுவெம்பரற்களுடை *
கடியவெங்கானிடைக் காலடிநோவக்கன்றின்பின் *
கொடியேன்என்பிள்ளையைபபோக்கினேன் எல்லேபாவமே! (கூ)

---

† 'எவ்வும்' என்று சிலர்.

❀என்றும்எனக்குஇனியானை என்மணிவண்ணனை *
கன்றின்பின்போக்கினேனென்று அசோதைகழறிய *
பொன்திகழ்மாடப் புதுவையார்கோன்பட்டன்சொல் *
இன்தமிழ் மாலைகள்வல்லவர்க்கு இடரில்லையே. (௰)

அடிவரவு:—அஞ்சனம் பற்று நன்மணி வண்ணம் அவ்வவ்விடம் மிடறு வள்ளி பனனிரு குடை என்றும் சீலை.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.



## ௩ - ஆந் திருமொழி - சீலைக்குதம்பை.



### [கண்ணன் கன்றுகள்மேய்த்துவரக் கண்டு யசோதை மகிழ்தல்.]

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (சுருட்டிராகம்-ஆதிதாளம்.)

❀சீலைக்குதம்பைஒருகாது ஒருகாதுசெந்நிறமேல்தோன்றிப்பூ *
கோலப்பணைக்கச்சும்கூறையுடையும் குளிர்முத்தின்கோடாலமும் *
சாலிப்பின்னேவருகின்ற கடல்வண்ணன்வேடத்தைவந்துகாணீர் *
† ஞாலத்துப்புத்திரனைப்பெற்றார் நங்கைமீர்!நானேமற்றாருமில்லை. (௧)

கன்னிநன்மாமதிள்சூழ்தரு பூம்பொழில்காவிரித்தென்னரங்கம் *
மன்னியசீர்மதுசூதனா ! கேசவா ! பாவியேன்வாழ்வுகந்து *
உன்னைஇளங்கன்றுமேய்க்கச் சிறுகாலேயூட்டிஒருப்படுத்தேன் *
என்னின்மனம்வலியாள்ஒருபெண் இல்லை என்குட்டனேமுத்தம்தா(௨)

‡ காடுகளூடுபோய்க் கன்றுகள்மேய்த்துமறியோடி* கார்க்கோடல்பூச்
சூடிவருகின்றதாமோதரா ! கற்றுதூளிகாண்உன்னுடம்பு *
பேடைமயிற்சாயல்பின்னைமணாளா ! நீராட்டமைத்துவைத்தேன் *
ஆடிஅமுதுசெய்அப்பனுமுண்டிலன உன்னோடுஉடனேயுண்பான். (௩)

கடியார்பொழிலணிவேங்கடவா! கரும்போரேறே! * நீயுகக்கும்
குடையும்செருப்புமகுழலுமதருவிக்கக்கொள்ளாதேபோனாய்மாலே!*
கடியவெங்கானிடைக்கன்றின்பின்போன சிறுக்குட்டசெங்கமல
அடியும்வெதும்பி* உன்கண்கள்சிவந்தாய் அசைந்திட்டாய் நீஎம்பிரான்!

பற்றாரநடுங்கமுன்பாஞ்சசன்னியத்தை வாய்வைத்தபோரேறே ! *
என்சிற்றாயர்சிங்கமே! சீதைமணாளா! சிறுக்குட்டச்செங்கண்மாலே! *
சிற்றாடையும்சிறுபபத்திரமும் இவைகட்டிலின்மேல்வைத்துப்போய் *
கற்றாயரோடுநீகன்றுகள்மேய்த்துக் கலந்துடன்வந்தாய்போலும். (௫)

---

† 'ஞாலத்தில்' என்று சிலர். ‡ ௩, ௪ - இவ்விரண்டுபாசுரங்களும் திருமஞ்சனகாலத்தில் சேவிக்கப்படுவன.

அஞ்சுடராழிஉன்கையகத்தேந்தும் அழகா ! நீபொய்கைபுக்கு *
நஞ்சுமிழ்நாகத்தினோடேபிணங்கவும் நான்உயிர்வாழ்ந்திருந்தேன *
என்செய்யஎன்னைவயிறுமறுக்கினாய் ? ஏதுமோரச்சமில்லை * [டாய்!
கஞ்சன்மனத்துக்குஉகப்பனவேசெய்தாய் காயாம்பூவண்ணம்கொண் ()

பன்றியும்ஆமையும்மீனமுமாகிய † பாற்கடல்வண்ணா! உன்மேல் *
கன்றினுருவாகிமேய்புலத்தேவந்த கள்ள ‡ அசுரன்தன்னை *
சென்றுபிடித்துச்சிறுக்கைகளாலே விளங்காயெறிந்தாய்போலும் *
என்றும்என்பிள்ளைக்குத்தீமைகள்செய்வார்கள் அங்ஙனமாவர்களே.()

கேட்டறியாதனகேட்கின்றேன் கேசவா ! கோவலர்இந்திரற்கு *
காட்டியசோறும்கறியும்தயிரும் கலந்துடன்உண்டாய்போலும் *
ஊட்டமுதலிலேன்உன்தன்னைக்கொண்டு ஒருபோதும்எனக்கரிது *
வாட்டமிலாப்புகழ்வாசுதேவா ! உன்னை அஞ்சுவன்இன்றுதொட்டும். ()

[முன்
திண்ணார்வெண்சங்குடையாய் ! திருநாள்திருவோணமின்றேழுநாள்*
பண்ணோர்மொழியாரைக்கூவிமுளையட்டிப் பல்லாண்டுகூறுவித்தேன்*
கண்ணாலம்செய்யக் கறியும்கலத்ததரிசியும்ஆக்கிவைத்தேன *[ யிரு.
கண்ணா ! நீநாளைத்தொட்டுக்கன்றினபின்போகேல் கோலம்செய்திங்கே

꧁புற்றரவல்குல்அசோதைநல்லாய்ச்சி தன்புதல்வன்கோவிந்தனை *
கற்றினம்மேய்த்துவரக்கண்டுகந்து அவள்கற்பித்தமாற்றமெல்லாம் *
செற்றமிலாதவர்வாழ்தரு தென்புதுவைவிட்டுசித்தன்சொல *
கற்றிவைபாடவல்லார் கடல்வண்ணன்கழலிணைகாண்பார்களே. (௧0)

அடிவரவு:—சீலை கன்னி காடுகள் கடி பற்றார் அஞ்சுடர் பன்றி கேட்டு திண்ணா புற்று தழை.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.



---

† 'பாற்கடல்வண்ணா' என்றும் பாடம். ‡ 'அசுரர்தம்மை' என்றும் பாடம்.

## ௪ - ஆந் திருமொழி - தழைகளும்.



[காலிப்பின்னேவருங்கண்ணனைக்கண்டு இடைக்கன்னியர்காமுறுதல்.]

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (பைரவிராகம்-ஆதிதாளம்.)

தழைகளும்தொங்கலும்ததும்பிஎங்கும்
தண்ணுமைஎக்கம்மத்தளிதாழ்பீலி *
குழல்களும்கீதமுமாகிஎங்கும்
கோவிந்தன்வருகின்றகூட்டம்கண்டு *
மழைகொலோவருகின்றதென்றுசொல்லி
மங்கைமார்சாலகவாசல்பற்றி *
நுழைவனர்நிற்பனராகி எங்கும்
உள்ளம்விட்டுஊண்மறந்தொழிந்தனரே. (௧)

வல்லிநுண்இதழன்னஆடைகொண்டு
வசையறத்திருவரைவிரித்துடுத்து *
பல்லிநுண்பற்றாகஉடைவாள்சாத்திப்
பணைக்கச்சுந்திப்பலதழைநடுவே *
முல்லைநல்நறுமலர்வேங்கைமலரணிந்து
பல்லாயர்குழாம்நடுவே *
எல்லியம்போதாகப்பிள்ளைவரும்
எதிர்நின்றுஅங்கினவளைஇழவேன்மினே. (௨)

சுரிகையும்தெறிவில்லும்செண்டுகோலும்
மேலாடையும்தோழன்மார்கொண்டோட *
ஒருகையால்ஒருவன்தன்தோளையூன்றி
ஆநிரையினம்மீளக்குறித்தசங்கம் *
வருகையில்வாடியபிள்ளைகண்ணன்
மஞ்சளும்மேனியும்வடிவும்கண்டாள் *
அருகேநின்றாள்என்பெண்நோக்கிக்கண்டாள்
அதுகண்டுஇவ்வூர்ஒன்றுபுணர்க்கின்றதே. (௩)

குன்றெடுத்துஆநிரைகாத்தபிரான்
கோவலனாய்க்குழலூதியூதி *
கன்றுகள்மேய்த்துத்தன்தோழரோடு
கலந்துடன்வருவானைத்தெருவில்கண்டு *

என்றும்இவனையொப்பாரைநங்காய் !
கண்டறியேன்ஏடி ! வந்துகாணாய் *
ஒன்றும்நில்லாவளைகழன்று
துகிலேந்திளமுலையும்என்வசமல்லவே. (ச)

சுற்றிநின்றுஆயர்தழைகளிடச்
சுருள்பங்கிநேத்திரத்தால்அணிந்து *
பற்றிநின்றுஆயர்கடைத்தலையே
பாடவும்ஆடக்கண்டேன் * அன்றிப்பின்
மற்றொருவர்க்குஎன்னைப்பேசலொட்டேன்
மாலிருஞ்சோலைஎம்மாயற்கல்லால் *
கொற்றவனுக்குஇவளாமென்றெண்ணிக்
கொடுமின்கள்கொடீராகில்கோழம்பமே. (ரு)

சிந்துரமிலங்கத்தன்திருநெற்றிமேல்
திருத்தியகோறம்பும்திருக்குழலும் *
அந்தரமுழவத்தண்தழைக்காவின்கீழ்
வருமாயரோடுஉடன்வளைகோல்வீச *
அந்தமொன்றில்லாதஆயப்பிள்ளை
அறிந்தறிந்துஇவ்வீதிபோதுமாகில் *
பந்துகொண்டானென்றுவளைத்துவைத்துப்
பவளவாய்முறுவலும்காண்போம்தோழீ ! (சா)

சாலப்பல்நிரைப்பின்னேதழைக்காவின்கீழ்
தன்திருமேனிநின்றொளிதிகழ *
நீலநல்நறுங்குஞ்சிநேத்திரத்தாலணிந்து
பல்லாயர்குழாம்நடுவே *
கோலச்செந்தாமரைக்கண்மிளிரக்
குழலூதியிசைபாடிக்குனித்து * ஆயரோடு
ஆலித்துவருகின்றஆயப்பிள்ளை
அழகுகண்டுஎன்மகளயர்க்கின்றதே. (எ)

சிந்துரப்பொடிக்கொண்டுசென்னியப்பித்
திருநாமமிட்டங்கோரிலைபந்தன்னால் *
அந்தரமின்றிதன்னெறிபங்கியை
அழகியநேத்திரத்தாலணிந்து

இந்திரன்போல்வருமாயப்பிள்ளை
எதிர்நின்றங்கினவளை இழவேலென்ன *
சந்தியில்நின்றுகண்டீர் நங்கைதன்
துகிலொடுசரிவளைகழல்கின்றதே. (அ)

வலங்காதின்மேல்தோன்றிப்பூவணிந்து
மல்லிகைவனமாலைமௌவல்மாலை *
சிலிங்காரத்தால்குழல்தாழவிட்டுத்
தீங்குழல்வாய்மடுத்தூதியூதி *
அலங்காரத்தால்வருமாயப்பிள்ளை
அழகுகண்டுஎன்மகள்ஆசைப்பட்டு *
விலங்கிநில்லாதெதிர்நின்றுகண்டீர்
வெள்வளைகழன்றுமெய்ம்மெலிகின்றதே. (கூ)

விண்ணின்மீதுஅமரர்கள்விரும்பித்தொழ
மிறைத்துஆயர்பாடியில்வீதியூடே *
கண்ணன்காலிப்பின்னேஎழுந்தருளக்கண்டு
இளவாய்க்கன்னிமார்காமுற்ற
வண்ணம் * வண்டமர்பொழில்புதுவையர்கோன்
விட்டுசித்தன்சொன்னமாலைபத்தும் *
பண்ணின்பம்வரப்பாடும்பத்தருள்ளார்
பரமானவைகுந்தம்நண்ணுவரே. (கூ0)

அடிவரவு:—தழைகளும் வல்லி சுரிகை குனறு சுற்றி சிந்துரம் சால சிந்துரப் பொடி வலம் விண்ணினமீது அட்டு.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.



## ரு - ஆந் திருமொழி - அட்டுக்குவி.



[கண்ணன் கோவர்த்தனகிரியைக் குடையாகக்கொண்டு கன்மழை தடுத்து ஆயரையும் ஆநிரையையும் பாதுகாத்தல்.]

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம் (பந்துவராளிராகம் - அடதாளம்.)

அட்டுக்குவிசோற்றுப்பருப்பதமும்
தயிர்வாவியும்நெய்யளறும்அடங்கப்
பொட்டத்துற்றி * மாரிப்பகைபுணர்த்த
பொருமாகடல்வண்ணன்பொறுத்தமலை *

வட்டத்தடங்கண்மடமான்கன்றினை
வலைவாய்ப்பற்றிக்கொண்டு * குறமகளிர்
கொட்டைத்தலைப்பால்கொடுத்துவளர்க்கும்
கோவர்த்தனமென்னும்கொற்றக்குடையே. (௧)

வழுவொன்றுமில்லாச்செய்கை வானவர்கோன்
வலிப்பட்டுமுனிந்துவிடுக்கப்பட்ட *
மழைவந்தெழுநாள்பெய்துமாத்தடுப்ப
மதுசூதன்எடுத்துமறித்தமலை *
இழவுதரியாததோரீற்றுப்பிடி
இளஞ்சீயம்தொடர்ந்துமுடுகுதலும் *
குழவியிடைக்காலிட்டெதிர்ந்துபொரும்
கோவர்த்தனமென்னும்கொற்றக்குடையே. (௨)

அம்மைத்தடங்கண்மடவாய்ச்சியரும்
ஆனாயரும்ஆநிரையும்அலறி *
எம்மைச்சரணேன்றுகொள்ளென்றிரப்ப
இலங்காழிக்கையெந்தைஎடுத்தமலை *
தம்மைச்சரணென்றதம்பாவையரைப்
புனமேய்கின்றமானினம்காண்மினென்று *
கொம்மைப்புயக்குன்றர்சிலைகுனிக்கும்
கோவர்த்தனமென்னும்கொற்றக்குடையே. (௩)

கடுவாய்ச்சினவெங்கண்களிற்றினுக்குக்
கவளமெடுத்துக்கொடுப்பானவன்போல் *
அடிவாயுறக்கையிட்டெழப்பறித்திட்ட
அமரர்பெருமான்கொண்டுநின்றமலை *
கடல்வாய்ச்சென்றுமேகம்கவிழ்ந்திறங்கிக்
கதுவாய்ப்படநீர்முகந்தேறி * எங்கும்
குடவாய்ப்படநின்றுமழைபொழியும்
கோவர்த்தனமென்னும்கொற்றக்குடையே. (௪)

வானத்திலுள்ளீர்! வலியீருள்ளீரேல்
அறையோ! வந்துவாங்குமினென்பவன்போல் *
ஏனத்துருவாகியஈசன்எந்தை
இடவனெழவாங்கியெடுத்தமலை *

கானக்களியானைதன்கொம்பிழந்து
கதுவாய்மதம்சோரத்தன்கையெடுத்து *
கூனல்பிறைவேண்டி அண்ணாந்துநிற்கும்
கோவர்த்தனமென்னும்கொற்றக்குடையே. (ரு)

செப்பாடுடையதிருமாலவன் தன்
செந்தாமரைக்கைவிரலைந்தினையும் *
கப்பாகமடுத்துமணிநெடுந்தோள்
காம்பாகக்கொடுத்துக்கவித்தமலை *
எப்பாடும்பரந்திழிதெள்ளருவி
இலங்குமணிமுத்துவடம்பிறழ *
குப்பாயமெனநின்றுகாட்சிதரும்
கோவர்த்தனமென்னும்கொற்றக்குடையே. (சு)

படங்கள்பலவுமுடைப்பாம்பரையன்
படர்பூமியைத்தாங்கிக்கிடப்பவன்போல் *
தடங்கைவிரலைந்தும்மலரவைத்துத
தாமோதரன்தாங்குதடவரைதான் *
அடங்கச்சென்றுஇலங்கையையீடழித்த
அனுமன்புகழ்பாடித்தம்குட்டன்களை *
குடங்கைக்கொண்டுமந்திகள்கண்வளர்த்தும்
கோவர்த்தனமென்னும்கொற்றக்குடையே. (எ)

சலமாமுகில்பல்கணப்போர்க்களத்துச்
சரமாரிபொழிந்தெங்கும்பூசலிட்டு *
நலிவானுறக்கேடகம்கோப்பவன்போல்
நாராயணன்முன்முகம்காத்தமலை *
இலைவேய்குரம்பைத்தவமாமுனிவர்
இருந்தார்நடுவேசென்று அணார்சொறிய *
கொலைவாய்ச்சினவேங்கைகள்நின்றுறங்கும்
கோவர்த்தனமென்னும்கொற்றக்குடையே. (அ)

வன்பேய்முலையுண்டதோர்வாயுடையன்
வன்தூணெனநின்றதோர்வன்பரத்தை *
தன்பேரிட்டுக்கொண்டுதரணிதன்னில்
தாமோதரன்தாங்குதடவரைதான் *

'முன்பேவழிகாட்டமுசுக்கணங்கள்
முதுகில்பெய்துதம்முடைக்குட்டன்களை *
கொம்பேற்றியிருந்துகுதிபயிற்றும்
கோவர்த்தனமென்னும்கொற்றக்குடையே. (௯)

கொடியேறுசெந்தாமரைக்கைவிரல்கள்
கோலமும்அழிந்திலவாடிற்றில *
வடிவேறுதிருவுகிர்நொந்துமில
மணிவண்ணன்மலையுமோர்சம்பிரதம் *
முடியேறியமாமுகிற்பல்கணங்கள்
முன்னெற்றிநரைத்தனபோல * எங்கும்
குடியேறியிருந்துமழைபொழியும்
கோவர்த்தனமென்னும்கொற்றக்குடையே. (௧௦)

꧁ அரவில்பள்ளிகொண்டு அரவம்துரந்திட்டு
அரவப்பகையூர்தியவனுடைய *
குரவிற்கொடிமுல்லைகள்நின்றுறங்கும்
கோவர்த்தனமென்னும்கொற்றக்குடைமேல் *
திருவிற்பொலிமறைவாணர்புத்தூர்
திகழ் பட்டர்பிரானசொன்னமாலைபத்தும் *
பரவுமனநன்குடைப்பத்தருள்ளார்
பரமானவைகுந்தம்நண்ணுவரே. (௧௧)

அடிவரவு:—அட்டு வழு அம்மை கடு வானத்தில் செப்பாடு படங்கள் சலம் வன்பேய் கொடி அரவில் நாவலம்.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.



சா - ஆந் திருமொழி - நாவலம்.



[கண்ணன்வேய்ங்குழலூதற்சிறப்பு.]

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (ஸாவேரிராகம் - ஆதிதாளம்)

꧁ நாவலம்பெரியதீவினில்வாழும்
நங்கைமீர்கள் ! இதுஓரற்புதம்கேளீர் *
தூவலம்புரியுடையதிருமால்
தூயவாயில்குழலோசைவழியே *

கோவலர்சிறுமியர் இளங்கொங்கை
குதுகலிப்பஉடலுளவிழ்ந்து * எங்கும்
காவலும்கடந்துகயிறுமாலையாகி
வந்துகவிழ்ந்துநின்றனரே. (௧)

இடவணரை இடத்தோளொடுசாய்த்து
இருகைகூடப்புருவம்நெரிந்தேற *
குடவயிறுபடவாய்கடைகூடக்
கோவிந்தன்குழல்கொடூதினபோது *
மடமயில்களொடுமான்பிணைபோலே
மங்கைமார்கள்மலர்க்கூந்தல்அவிழ *
உடைநெகிழஓர்கையால்துகில்பற்றி
ஒல்கியோடரிக்கணோடநின்றனரே. (௨)

வானிளவரசுவைகுந்தக்குட்டன்
வாசுதேவன்மதுரைமன்னன் * நந்த
கோனிளவரசுகோவலர்குட்டன்
கோவிந்தன்குழல்கொடூதினபோது *
வானிளம்படியர்வந்துவந்தீண்டி
மனமுருகிமலர்க்கண்கள்பனிப்ப *
தேனளவுசெறிகூந்தலவிழச்
சென்னிவேர்ப்பச்செவிசேர்த்துநின்றனரே. (௩)

தேனுகன்பிலம்பன்காளியனென்னும்
தீப்பப்பூடுகள் அடங்கஉழக்கி *
கானகம்படிஉலாவியுலாவிக்
கருஞ்சிறுக்கன்குழலூதினபோது *
மேனகையொடுதிலோத்தமைஅரம்பை
உருப்பசியரவர்வெள்கிமயங்கி *
வானகம்படியில்வாய்திறப்பின்றி
ஆடல்பாடலவைமாறினர்தாமே. (௪)

முன்நரசிங்கமதாகி அவுணன்
முக்கியத்தைமுடிப்பான், மூவுலகில்
†மன்னரஞ்சும் * மதுசூதனன்வாயில்
குழலினோசை செவியைப்பற்றிவாங்க *

† 'மன்னரஞ்ச' என்று சிலர்.

ந்னரம்புடையதும்பருவோடு
நாரதனும்தம்தம்வீணைமறந்து *
கின்னரமிதுனங்களும் தம்தம்
கின்னரம்தொடுகிலோமென்றனரே. (௫)

செம்பெருந்தடங்கண்ணன்திரள்தோளன்
தேவகிசிறுவன்தேவர்கள்சிங்கம் *
நம்பரமன்இந்நாள்குழலூதக்
கேட்டவர்கள் இடருற்றனகேளீர் *
அம்பரம்திரியும்காந்தப்பரெல்லாம்
அமுதகீதவலையால்சுருக்குண்டு *
நம்பரமன்றன்னாறுநாணிமயங்கி
நைந்துசோர்ந்துகைம் மறித்துநின்றனரே. (௬)

புவியுள்நான்கண்டதோரற்புதம்கேளீர்
பூணிமேய்க்கும்இளங்கோவலர்கூட்டத்து
அவையுள் * நாகத்தணையானகுழலூத
அமரலோகத்தளவும்சென்றிசைப்ப *
அவியுணாமறந்துவானவரெல்லாம்
ஆயர்பாடிநிறையப்புகுந்தீண்டி *
செவியுணாவின்சுவைகொண்டுமகிழ்ந்து
கோவிந்தனைத்தொடர்ந்துஎன்றும்விடாரே. (௭)

சிறுவிரல்கள்தடவிப்பரிமாறச்
செங்கண்கோடச்செய்யவாய்கொப்பளிப்ப *
குறுவெயர்ப்புருவம்கூடலிப்பக்
கோவிந்தனகுழல்கொடூதினபோது *
பறவையின்கணங்கள்கூடுதுறந்து
வந்துசூழ்ந்துபடுகாடுகிடப்ப *
கறவையின்கணங்கள்கால்பரப்பிட்டுக்
கவிழ்ந்திறங்கிச்செவியாட்டகில்லாவே. (௮)

திரண்டெழுதழைமழைமுகில்வண்ணன்
செங்கமலமலர்சூழ்வண்டினம்போலே *
சுருண்டிருண்டகுழல்தாழ்ந்தமுகத்தான்
ஊதுகின்றகுழலோசைவழியே *

மருண்டுமான்கணங்கள்மேய்கைமறந்து
மேய்ந்தபுல்லும்கடைவாய்வழிசோர *
இரண்டுபாடும்துலுங்காப்புடைபெயரா
எழுதுசித்திரங்கள்போலநின்றனவே. (௯)

கருங்கண்தோகைமயிற்பீலியணிந்து
கட்டிநன்குடுத்தபீதகவாடை *
அருங்கலவுருவினாயர்பெருமான்
அவனொருவன்குழலூதினபோது *
மரங்கள்நின்றுமதுதாரைகள்பாயும்
மலர்கள்வீழும்வளர்கொம்புகள்தாழும் *
இரங்கும்கூம்பும்திருமால்நின்றநின்ற
பக்கம்நோக்கி அவைசெய்யுங்குணமே. (௧0)

❀ குழலிருண்டுசுருண்டேறியகுஞ்சிக்
கோவிந்தனுடையகோமளவாயில் *
குழல்முழைஞ்சுகளினூடுகுமிழ்த்துக்
கொழித்திழிந்தஅமுதப்புனல்தன்னை *
குழல்முழவம்விளம்பும்புதுவைக்கோன்
விட்டுசித்தன்விரித்த தமிழ்வல்லார் *
குழலைவென்றகுளிர்வாயினராகிச
சாதுகோட்டியுள்கொள்ளப்படுவாரே. (௧௧)

அடிவரவு:—நாவலம் இட வான் தேனுகன் முன் செம் புவியுள் சிறு திரண்டு கருங் குழல் ஐய.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.



## எ - ஆந் திருமொழி - ஐயபுழுதி.



[திருமாலினிடத்து ஈடுபட்ட தலைமகளின்மை கண்டு
நற்றாய் இரங்கும் பாசுரம்.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

(யமுனகல்யாணிராகம் - திரிபுடைதாளம்)

❀ ஐயபுழுதிஉடம்பளைந்து இவள்பேச்சுமலந்தலையாய் *
செய்யநூலின்சிற்றாடை செப்பனுடுக்கவும்வல்லளல்லள் *
கையினில்சிறுதூதையோடு இவள்முற்றில்பிரிந்துமிலள் *
பையரவணைப்பள்ளியானொடு கைவைத்துஇவள்வருமே. (௧)

வாயில்பல்லுமெழுந்தில மயிரும்முடிகூடிற்றில *
சாய்விலாதகுறுந்தலைச் சிலபிள்ளைகளோடிணங்கி *
தீயிணக்கிணங்காடிவந்து இவள்தன்னன்னசெம்மைசொல்லி *
மாயன்மாமணிவண்ணன்மேல் இவள்மாலுறுகின்றாளே. (உ)

பொங்குவெண்மணல்கொண்டு சிற்றிலும்முற்றத்திழைக்கலுறில் *
சங்குசக்கரம்தண்டுவாள் வில்லுமல்லதுஇழைக்கலுறாள் *
கொங்கைஇன்னம்குவிந்தெழுந்தில கோவிந்தனோடுஇவளை *
சங்கையாகிஎன்னுள்ளம் நாள்தொறும்தட்டுளுப்பாகின்றதே. (ங)

ஏழைபேதைஓர்பாலகன்வந்து என்பெண்மகளையெள்கி *
தோழிமார்பலர்கொண்டுபோய்ச்செய்தசூழ்ச்சியையார்க்குரைக்கேன்?
ஆழியானென்னுமாழமோழையில் பாய்ச்சிஅகப்படுத்தி *
மூழையுப்பறியாததென்னும் மூதுரையுமிலளே. (ச)

நாடும்ஊரும்அறியவேபோய் நல்லதுழாயங்கல்
சூடி * நாரணன்போமிடமெல்லாம் சோதித்துழிதருகின்றாள் *
கேடுவேண்டுகின்றார்பலருளர் கேசவனோடுஇவளை *
பாடுகாவலிடுமினென்றென்று பார்தடுமாறினதே. (ரு)

பட்டம்கட்டிப்பொற்றோடுபெய்து இவள்பாடகமும்சிலம்பும் *
இட்டமாகவளர்த்தெடுத்தேனுக்கு என்னோடுஇருக்கலுறாள் *
பொட்டப்போய்ப்புறப்பட்டுநின்று இவள்பூவைப்பூவண்ணாவென்னும் *
வட்டவார்குழல்மங்கைமீர் ! இவள்மாலுறுகின்றாளே. (சு)

பேசவும் † தரியாதபெண்மையின் பேதையேனபேதைஇவள் *
கூசமின்றிநின்றார்கள்தமமெதிர் கோல்கழிந்தான்மூழையாய் *
கேசவாவென்றும்கேடிலீயென்றும் கிஞ்சுகவாய்மொழியாள் *
வாசவார்குழல்மங்கைமீர் ! இவள்மாலுறுகின்றாளே. (எ)

காறைபூணும்கண்ணாடிகாணும் தனகையில்வளைகுலுக்கும் *
கூறையுடுக்கும்அயர்க்கும் தன்கொவ்வைச்செவ்வாய்திருத்தும் *
தேறித்தேறிநின்று ஆயிரம்பேர்த்தேவன்திறம்பிதற்றும் *
மாறில்மாமணிவண்ணன்மேல் இவள்மாலுறுகின்றாளே. (அ)

கைத்தலத்துள்ளமாடழியக் கண்ணாலங்கள்செய்து * இவளை
வைத்துவைத்துக்கொண்டுஎன்னவாணிபம்? நம்மை ‡ வடுப்படுத்தும் *
செய்த்தலையெழுநாற்றுப்போல் அவன்செய்வனசெய்துகொள்ள *
மைத்தடமுகில்வண்ணன்பக்கல் வளரவிடுமின்களே. (கூ)

---

† 'தெரியாத' என்றபாடம் சிறவாது. ‡ 'வடுப்படுக்கும்' என்பதும் பாடம்.

பெருப்பெருத்தகண்ணாலங்கள்செய்து பேணிநம்மில்லத்துள்ளே *
இருத்துவானெண்ணிநாமிருக்க இவளும்ஒன்றெண்ணுகின்றாள் *
மருத்துவப்பதம்நீங்கினாளென்னும்வார்த்தை படுவதன்முன் *
ஒருப்படுத்திடுமின்இவளை உலகளந்தானிடைக்கே. (௧௦)

ஞாலமுற்றும்உண்டுஆலிலைத்துயில் நாராயணனுக்கு * இவள்
மாலதாகிமகிழ்ந்தனளென்று தாயுரைசெய்ததனை *
கோலமார்பொழில்சூழ்புதுவையர்கோன் விட்டுசித்தன்சொன்ன *
மாலைபத்தும்வல்லவர்கட்கு இல்லைவருதுயரே. (௧௧)

அடிவரவு:—ஐய வாயில் பொங்கு ஏழை நாடு பட்டம் பேச காறை கைத்தலத்து பெரு ஞாலம் நல்லது.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.



## அ - ஆந் திருமொழி - நல்லதோர்தாமரை.

[தலைமகனுடன்சென்ற தலைமகளைக்குறித்துத் தாய் பலபடி வருந்திக்கூறும் பாசுரம்.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம் (ஆனந்தபைரவிராகம் - ஆதிதாளம்.)

நல்லதோர்தாமரைப்பொய்கை நாண்மலர்மேல்பனிசோர *
அல்லியும்தாதும்உதிர்ந்திட்டு அழகழிந்தாலொத்ததாலோ *
இல்லம்வெறியோடிற்றாலோ என்மகளை எங்குங்காணேன் *
மல்லரையட்டவன்பின்போய் மதுரைப்புறம்புக்காள்கொலோ? (௧)

ஒன்றுமறிவொன்றில்லாத உருவறைக்கோபாலர்தங்கள் *
கன்றுகால்மாறுமாபோலே கன்னியிருந்தாளைக்கொண்டு *
நன்றும்கிறிசெய்துபோனான் நாராயணன்செய்ததீமை *
என்றும்எமர்கள்குடிக்கு ஓரேச்சுச்சொலாயிடுங்கொலோ? (௨)

குமரிமணம்செய்துகொண்டு கோலம்செய்துஇல்லத்திருத்தி *
தமரும்பிறரும்அறியத் தாமோதரற்கென்றுசாற்றி *
அமரர்பதியுடைத்தேவி அரசாணியை † வழிபட்டு *
துமிலமெழப்பறைகொட்டித் தோரணம்நாட்டிடுங்கொலோ? (௩)

ஒருமகள்தன்னையுடையேன் உலகம்நிறைந்தபுகழால் *
திருமகள்போலவளர்த்தேன் செங்கண்மால்தான்கொண்டுபோனான் *
பெருமகளாய்க்குடிவாழ்ந்து பெரும்பிள்ளைபெற்றஅசோதை *
மருமகளைக்கண்டுகந்து மணாட்டுப்புறம்செய்யுங்கொலோ? (௪)

† 'வழிப்பட்டு' என்று ஓதுவர்.

தம்மாமன்நந்தகோபாலன் தழீஇக்கொண்டுஎன்மகள்தன்னை *
செம்மாந்திரேயென்றுசொல்லிச் செழுங்கயற்கண்ணும்செவ்வாயும் *
கொம்மைமுலையும்இடையும் கொழும்பணைதோள்களும்கண்டிட்டு *
இம்மகளைப்பெற்றதாயர் இனித்தரியாரென்னுங்கொலோ? (௫)

வேடர்மறக்குலம்போலே வேண்டிற்றுச்செய்துஎன்மகளை *
கூடியகூட்டமேயாகக் கொண்டுகுடிவாழுங்கொலோ? *
நாடும்நகரும்அறிய நல்லதோர்கண்ணாலம்செய்து *
சாடிறப்பாய்ந்தபெருமான் தக்கவாகைப்பற்றுங்கொலோ? (௬)

அண்டத்தமரர்பெருமான் ஆழியான்இன்றுஎன்மகளை *
பண்டப்பழிப்புக்கள்சொல்லிப் பரிசறஆண்டிடுங்கொலோ? *
கொண்டுகுடிவாழ்க்கைவாழ்ந்து கோவலப்பட்டம்கவித்து *
பண்டைமணாட்டிமார்முன்னே பாதுகாவல்வைக்குங்கொலோ? (௭)

குடியில்பிறந்தவர்செய்யும் குணமொன்றும்செய்திலன்அந்தோ! *
நடையொன்றும்செய்திலன்நங்காய்! நந்தகோபன்மகன்கண்ணன் *
இடையிருபாலும்வணங்க இளைத்திளைத்துஎன்மகள்ஏங்கி *
கடைகயிறேபற்றிவாங்கிக் கைதழும்பேறிடுங்கொலோ? (௮)

வெண்ணிறத்தோய்தயிர்தன்னை வெள்வரைப்பின்முன்எழுந்து *
கண்ணுறங்காதேயிருந்து கடையவும்தான்வல்லள்கொலோ? *
ஒண்ணிறத்தாமரைச்செங்கண் உலகளந்தான்என்மகளை *
பண்ணறையாப்பணிகொண்டு பரிசறஆண்டிடுங்கொலோ? (௯)

மாயவன்பின்வழிசென்று வழியிடைமாற்றங்கள்கேட்டு *
ஆயர்கள்சேரியிலும்புக்கு † அங்குத்தைமாற்றமுமெல்லாம் *
தாயவள்சொல்லியசொல்லைத் தண்புதுவைப்பட்டன்சொன்ன *
தூயதமிழ்ப்பத்தும்வல்லார் தூமணிவண்ணனுக்காளரே. (௧௦)

அடிவரவு:—நல்லது ஒன்றும் குமரி ஒரு தம்மாமன் வேடர் அண்டத்து குடியில் வெண்ணிறம் மாயவன் என்னுதன்.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.

---

† 'அங்குற்ற' என்றும், பாடம்.

## ௯ - ஆந் திருமொழி - என்னாதன்.



[க்ருஷ்ணாவதார ராமாவதாரங்களின் குணசேஷ்டிதங்களை இரண்டு தோழியர் எதிரேதிராகக்கூறி உந்திபறத்தல்.]

கலித்தாழிசை. (செஞ்சுருட்டிராகம் - ரூபகதாளம்.)

❀ என்னாதன்தேவிக்கு அன்றுஇன்பப்பூஈயாதாள்
தன் * நாதன்காணவே தண்பூமரத்தினை *
வன்னாதப்புள்ளால் வலியப்பறித்திட்ட * [பற.
என்னாதன்வன்மையைப்பாடிப்பற எம்பிரான்வன்மையைப்பாடிப் (௧)

என்வில்வலிகண்டு போவென்றுஎதிர்வந்தான்
தன் *வில்லினோடும் தவத்தைஎதிர்வாங்கி *
முன்வில்வலித்து முதுபெண்ணுயிருண்டான் [பாடிப்பற.
தன் * வில்லின்வன்மையைப்பாடிப்பற தாசரதிதன்மையைப் (௨)

உருப்பிணிநங்கையைத் தேரேற்றிக்கொண்டு *
விருப்புற்றங்கேக விரைந்துஎதிர்†வந்து *
செருக்குற்றான் வீரம்சிதைய * தலையைச் [பற.
சிரைத்திட்டான்வன்மையைப்பாடிப்பற தேவகிசிங்கத்தைப்பாடிப் (௩)

மாற்றுத்தாய்சென்று வனம்போகேஎன்றிட *
ஈற்றுத்தாய்பின்தொடர்ந்து எம்பிரான்! என்றுஅழ *
கூற்றுத்தாய்சொல்லக் கொடியவனம்போன *
சீற்றமிலாதானைப்பாடிப்பற சீதைமணாளனைப்பாடிப்பற. (௪)

பஞ்சவர்தூதனாய்ப் பாரதம்கைசெய்து *
நஞ்சுமிழ்நாகமகிடந்த நல்பொய்கைபுக்கு *
அஞ்சப்பணத்தின்மேல் பாய்ந்திட்டுஅருள்செய்த *
அஞ்சனவண்ணனைப்பாடிப்பற அசோதைதன்சிங்கத்தைப்பாடிப்பற.

முடியொன்றிமூவுலகங்களும் ஆண்டு * உன்
அடியேற்கருளென்று அவன்பின்தொடர்ந்த *
படியில்குணத்துப் பரதநம்பிக்கு * அன்று
அடிநிலையீந்தானைப்பாடிப்பற அயோத்தியர்கோமானைப்பாடிப்பற. (௬)

---

† 'வந்த' என்றும் பாடம்.

காளியன்பொய்கைகலங்கப் பாய்ந்திட்டு * அவன்
நீள்முடியைந்திலும்நின்று நடம்செய்து *
மீள அவனுக்கு அருள்செய்தவித்தகன் *
தோள்வலிவீரமேபாடிப்பற தூமணிவண்ணனைப்பாடிப்பற. (எ)

தார்க்குஇளந்தம்பிக்கு அரசீந்து * தண்டகம்
நூற்றவள் சொல்கொண்டுபோகி * நுடங்கிடைச்
சூர்ப்பணகாவைச் செவியொடுமூக்கு * அவள்
ஆர்க்கஅரிந்தானைப்பாடிப்பற அயோத்திக்கரசனைப்பாடிப்பற. (அ)

மாயச்சகடமுதைத்து மருதிறுத்து *
ஆயர்களோடுபோய் ஆநிரைகாத்து * அணி
வேயின்குழலூதி வித்தகனாய்நின்ற *
ஆயர்களேற்றினைப்பாடிப்பற ஆநிரைமேய்த்தானைப்பாடிப்பற. (கூ)

காரார்கடலையடைத்திட்டு இலங்கைபுக்கு *
ஓராதான் பொன்முடி ஒன்பதோடொன்றையும் *
நேரா அவன்தம்பிக்கே நீளரசீந்த *
ஆராவமுதனைப்பாடிப்பற அயோத்தியர்வேந்தனைப்பாடிப்பற. (கo)

தரவுகொச்சகக்கலிப்பா.

ஃ நந்தன்மதலையைக் காகுத்தனைநவின்று *
உந்திபறந்த ஒளியிழையார்கள்சொல் *
செந்தமிழ்தென்புதுவை விட்டுசித்தன்சொல் *
ஐந்தினோடைந்தும்வல்லார்க்கு அல்லலில்லையே. (கக)

அடிவரவு:—என்னுதன் எனவில் உருபபிணி மாற்று பஞ்சவர் முடி காளியன் தார்க்கு மாயம் காரார் நந்தன வெறிந்த.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.



## ௧௦ - ஆம் திருமொழி - நெறிந்தகருங்குழல்.

[இலங்கைக்குத் தூதுசென்ற திருவடி பிராட்டியைக் கண்டு சக்ரவர்த்தித்திருமகன் கூறிய சில அடையாளங்களைக் கூறிக் கணையாழிகொடுத்துக் களிப்பித்தல்.]

கலிவிருத்தம். (கல்யாணிராகம் - ரூபகதாளம்.)

நெறிந்தகருங்குழல்மடவாய்! நின்னடியேன்விண்ணப்பம் *
செறிந்தமணிமுடிச்சனகன் சிலையிறுத்துநினைக்கொணர்ந்தது
அறிந்து * அரசுகளைகட்ட அருந்தவத்தோன் இடைவிலங்க *
செறிந்தசிலைகொடுதவத்தைச் சிதைத்ததும்ஓரடையாளம். (௧)

அல்லியம்பூமலர்க்கோதாய்! அடிபணிந்தேன்விண்ணப்பம் *
சொல்லுகேன்கேட்டருளாய் துணைமலர்க்கண்மடமானே! *
எல்லியம்போதினிதிருத்தல் இருந்ததோரிடவகையில் *
மல்லிகைமாமாலைகொண்டு அங்குஆர்த்ததும்ஓரடையாளம். (௨)

கலக்கியமாமனத்தனளாய்க் கைகேசிவரம்வேண்ட *
மலக்கியமாமனத்தனனாய் மன்னவனும் மறாதொழிய *
குலக்குமரா! காடுறையப்போ என்றுவிடைகொடுப்ப *
இலக்குமணன்தன்னொடும் அங்குஏகியதுஓரடையாளம். (௩)

வாரணிந்தமுலைமடவாய்! வைதேவீ! விண்ணப்பம் *
தேரணிந்தஅயோத்தியர்கோன் பெருந்தேவீ! கேட்டருளாய் *
கூரணிந்தவேல்வலவன் குகனோடும்கங்கைதன்னில் *
சீரணிந்ததோழமை கொண்டதும்ஓரடையாளம். (௪)

மானமருமென்னோக்கி! வைதேவீ! விண்ணப்பம் *
கானமரும்கல்லதர்போய்க் காடுறைந்தகாலத்து *
தேனமரும்பொழிற்சாரல் சித்திரகூடத்துஇருப்ப *
பால்மொழியாய்! பரதநம்பி பணிந்ததும்ஓரடையாளம். (௫)

சித்திரகூடத்துஇருப்பச் சிறுகாக்கைமுலைதீண்ட *
அத்திரமேகொண்டெறிய அனைத்துலகும்திரிந்தோடி *
வித்தகனே! இராமாவோ! நின்னபயம்என்று அழைப்ப *
அத்திரமேஅதன்கண்ணை அறுத்ததும்ஓரடையாளம். (௬)

மின்ஒத்தநுண்ணிடையாய் ! மெய்யடியேன்விண்ணப்பம் *
பொன்னொத்தமானொன்று புகுந்துஇனிதுவிளையாட *
நின்னன்பின்வழிநின்று சிலைபிடித்துஎம்பிரான்ஏக *
பின்னேஅங்குஇலக்குமணன் பிரிந்ததும்ஓரடையாளம். (எ)

மைத்தகுமாமலர்க்குழலாய் ! வைதேவீ ! விண்ணப்பம் *
ஒத்தபுகழ்வானரக்கோன் உடனிருந்துநினைதேட *
அத்தகுசீரயோத்தியர்கோன் அடையாளமிவைமொழிந்தான் *
இத்தகையால்அடையாளம் ஈதுஅவன்கைம்மோதிரமே. (அ)

 திக்குநிறைபுகழாளன் தீவேள்விச்சென்றநாள் *
மிக்கபெருஞ்சபைநடுவே வில்லிறுத்தானமோதிரமகண்டு *
ஒக்குமால்அடையாளம் அனுமான் ! என்றுஉச்சிமேல்
வைத்துககொண்டு * உகந்தனளால் மலர்க்குழலாள்சீதையுமே. (௯)

வாராரும்முலைமடவாள் வைதேவிதனைக்கண்டு *
சீராரும்திறலனுமன் தெரிந்துரைத்தஅடையாளம் *
பாராரும்புகழ்ப்புதுவைப் பட்டர்பிரான்பாடல்வல்லார் *
ஏராரும்வைகுந்தத்து இமையவரோடுஇருப்பாரே. (௧0)

அடிவரவு:—நெறிந்த அலலி கலககிய வாராணி மான சிததிரகூடத்து மின் மைததகு திககு வாராரும கதிர.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.



## நான்காம்பத்து.

### க- ஆந் திருமொழி - கதிராயிரம்.

[ஸர்வேஶ்வரனைக் காணவேணுமென்று தேடுவோர் சிலரும் கண்டார் சிலரு மாகக் கூறுதல்.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம் (தோடிராகம் - அடதாளம்.)

கதிராயிரமிரவி கலந்தெரித்தாலொத்தநீள்முடியன் *
எதிரில்பெருமைஇராமனை இருக்குமிடம்நாடுதிரேல் *
அதிரும்கழற்பொருதோள் இரணியனாகம்பிளந்துஅரியாய் *
உதிரமளைந்தகையோடிருந்தானை உள்ளவாகண்டாருளர். (௧)

நாந்தகம்சங்குதண்டு நாணொலிச்சார்ங்கம்திருச்சக்கரம் *
ஏந்துபெருமைஇராமனை இருக்குமிடம்நாடுதிரேல் *
காந்தள்முகிழ்விரல்சீதைக்காகிக் கடுஞ்சிலைசென்றிறுக்க *
வேந்தர்தலைவன்சனகராசன்தன் வேள்வியில்கண்டாருளர். (உ)

கொலையானைக்கொம்புபறித்துக் கூடலர்சேனைபொருதழிய *
சிலையால்மராமரமெய்ததேவனைச் சிக்கெனநாடுதிரேல் *
தலையால்குரக்கினம்தாங்கிச்சென்று தடவரைகொண்டடைப்ப *
அலையார்கடற்கரைவீற்றிருந்தானை † அங்குத்தைக்கண்டாருளர். (௩)

தோயம்பரந்தநடுவுசூழலில் தொல்லைவடிவுகொண்ட *
மாயக்குழவியதனைநாடுறில் வம்மின்சுவடுரைக்கேன் *
ஆயர்மடமகள்பின்னைக்காகி அடல்விடையேழினையும் *
வீயப்பொருதுவியர்த்துநின்றானை மெய்ம்மையேகண்டாருளர். (ச)

நீரேறுசெஞ்சடைநீலகண்டனும் நான்முகனும் * முறையால்
சீரேறுவாசகஞ்செய்யநின்ற திருமாலைநாடுதிரேல் *
வாரேறுகொங்கைஉருப்பிணியை வலியப்பிடித்துக்கொண்டு
தேரேற்றி * சேனைநடுவுபோர்செய்யச் சிக்கெனக்கண்டாருளர். (ரு)

பொல்லாவடிவுடைப்பேய்ச்சிதுஞ்சப் புணர்முலைவாய்மடுக்க
வல்லானை * மாமணிவண்ணனை மருவுமிடம்நாடுதிரேல் *
பல்லாயிரம்பெருந்தேவிமாரொடு பௌவம்எறிதுவரை *
எல்லாரும்சூழசிங்காசனத்தே இருந்தானைக்கண்டாருளர். (சா)

வெள்ளைவிளிசங்குவெஞ்சுடர்த்திருச்சக்கரம் ஏந்துகையன் *
உள்ளவிடம்வினவில் உமக்குஇறைவம்மின்சுவடுரைக்கேன் *
வெள்ளைப்புரவிக்குரக்குவெல்கொடித் தேர்மிசைமுன்புநின்று *
கள்ளப்படைத்துணையாகிப் பாரதம்கைசெய்யக்கண்டாருளர். (எ)

நாழிகைகூறிட்டுக்காத்துநின்ற அரசர்கள்தம்முகப்பே *
நாழிகைபோகப்படைபொருதவன் தேவகிதன்சிறுவன் *
ஆழிகொண்டுஅன்றுஇரவிமறைப்பச் சயத்திரதன்தலையை *
பாழிலுருளப்படைபொருதவன் பக்கமேகண்டாருளர். (அ)

மண்ணும்மலையும்மறிகடல்களும் மற்றும்யாவுமெல்லாம் *
திண்ணம்விழுங்கியுமிழ்ந்ததேவனைச் சிக்கெனநாடுதிரேல் *
எண்ணற்கரியதோரேனமாகி இருநிலம்புக்கிடந்து *
வண்ணக்கருங்குழல்மாதரோடு மணந்தானைக்கண்டாருளர். (கூ)

---

† 'அங்குற்று' என்பதும் பாடம்.

கரியமுகில்புரைமேனிமாயனைக் கண்டசுவடுரைததுப் *
புரவிமுகம்செய்துசெந்நெலோங்கி விளைகழனிப்புதுவை *
திருவிற்பொலிமறைவாணன்பட்டர்பிரான் சொன்னமாலைபத்தும் *
பரவுமனமுடைப்பத்தருள்ளார் பரமனடிசேர்வர்களே. (க0)

அடிவரவு:—கதிர் நாந்தகம் கொலை தோயம் நீரேறு பொல்லா வெள்ளை நாழிகை மண்ணும் கரிய அலம்பா.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.

## உ - ஆந் திருமொழி - அலம்பாவெருட்டா.

[திருமாலிருஞ்சோலைமலைச்சிறப்பு.]

கலிநிலைத்துறை. (அடாணராகம் - ஜம்பைதாளம்.)

அலம்பாவெருட்டாக்கொன்று திரியும்அரக்கரை *
குலம்பாழ்படுத்துக் குலவிளக்காய்நின்றகோன்மலை *
சிலம்பார்க்கவந்து தெய்வமகளிர்களாடும்சீர் *
சிலம்பாறுபாயும் தென்திருமாலிருஞ்சோலையே. (க)

வல்லாளன்தோளும் வாளரக்கன்முடியும் * தங்கை
பொல்லாதமூக்கும் போக்குவித்தான்பொருந்தும்மலை *
எல்லாவிடத்திலும் எங்கும்பரந்துபல்லாண்டொலி *
செல்லாநிற்கும்சீர்த் தென்திருமாலிருஞ்சோலையே. (உ)

தக்கார்மிக்கார்களைச் சஞ்சலம்செய்யும்சலவரை *
தெக்காநெறியேபோக்குவிக்கும் செல்வன்பொன்மலை *
எக்காலமும்சென்று சேவித்திருக்கும்அடியரை *
அக்கானெறியைமாற்றும் தண்மாலிருஞ்சோலையே. (ந)

ஆனாயர்கூடி அமைத்தவிழவை * அமரர்தம்
கோனார்க்கொழியக் கோவர்த்தனத்துச்செய்தான்மலை *
வானாட்டில்நின்று மாமலர்க்கற்பகத்தொத்திழி *
தேனாறுபாயும் தென்திருமாலிருஞ்சோலையே. (ச)

ஒருவாரணம் பணிகொண்டவன்பொய்கையில் * கஞ்சன்தன்
ஒருவாரணம உயிருண்டவன்சென்றுறையும்மலை *
கருவாரணம் தன்பிடிதுறந்தோட * கடல்வண்ணன்
திருவாணைகூறத்திரியும் தண்மாலிருஞ்சோலையே. (ரு)

ஏவிற்றுச்செய்வான் ஏன்றெதிர்ந்துவந்தமல்லரை *
சாவத்தகர்த்த சாந்தணிதோள்சதுரன்மலை*
ஆவத்தனமென்று அமரர்களும்நன்முனிவரும் *
சேவித்திருக்கும் தென்திருமாலிருஞ்சோலையே. (சு)

மன்னர்மறுக மைத்துனன்மார்க்குஒருதேரின்மேல் *
முன்னங்குநின்று மோழையெழுவித்தவன்மலை *
கொன்னவில்கூர்வேற்கோன் நெடுமாறன்தென்கூடற்கோன் *
தென்னன்கொண்டாடும் தென்திருமாலிருஞ்சோலையே. (எ)

குறுகாதமன்னரைக் கூடுகலக்கி * வெங்கானிடைச்
சிறுகால்நெறியேபோக்குவிக்கும் செல்வன்பொன்மலை *
அறுகால்வரிவண்டுகள் ஆயிரநாமம்சொல்லி *
சிறுகாலைப்பாடும் தென்திருமாலிருஞ்சோலையே. (அ)

சிந்தப்புடைத்துச் செங்குருதிகொண்டு * பூதங்கள்
அந்திப்பலிகொடுத்து ஆவத்தனம்செய் அப்பன்மலை *
இந்திரகோபங்கள் எம்பெருமான்கனிவாயொப்பான் *
சிந்தும்புறவில் தென்திருமாலிருஞ்சோலையே. (கூ)

எட்டுத்திசையும் எண்ணிறந்தபெருந்தேவிமார் *
விட்டுவிளங்க வீற்றிருந்தவிமலன்மலை *
பட்டிப்பிடிகள் பகடுரிஞ்சிச்சென்று * மாலைவாய்த்
தெட்டித்திளைக்கும் தென்திருமாலிருஞ்சோலையே. (க0)

மருதப்பொழிலணி மாலிருஞ்சோலைமலைதன்னை *
கருதியுறைகின்ற கார்க்கடல்வண்ணனம்மான்தன்னை *
விரதம்கொண்டேத்தும் வில்லிபுத்தூர்விட்டுசித்தன்சொல் *
கருதியுரைப்பவர் கண்ணன்கழலிணைகாண்பர்களே. (கக)

அடிவரவு:—அலம்பா வல்லாளன் தககா ஆனுயர் ஒரு ஏவிற்று மன்னர் குறுகாத சிந்த எட்டு மருத உருப்பிணி.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.



## ங - ஆந் திருமொழி - உருப்பிணிநங்கை.



[திருமாலிருஞ்சோலைமலையின் சிறப்பு.]

கலிநிலைத்துறை. (ஸஹாநாராகம் - ரூபகதாளம்.)

❀ உருப்பிணிநங்கைதன்னைமீட்பான் தொடர்ந்தோடிச்சென்ற *
உருப்பனையோட்டிக்கொண்டிட்டு உறைத்திட்டஉறைப்பன்மலை *
பொருப்பிடைக்கொன்றைநின்று முறியாழியும்காசும்கொண்டு *
விருப்பொடுபொன்வழங்கும் வியன்மாலிருஞ்சோலையதே. (க)

கஞ்சனும்காளியனும் களிறும்மருதும்எருதும் *
வஞ்சனையில்மடிய வளர்ந்தமணிவண்ணன்மலை *
நஞ்சுமிழ்நாகமெழுந்தணவி நளிர்மாமதியை *
செஞ்சுடர்நாவளைக்கும் திருமாலிருஞ்சோலையதே. (உ)

மன்னுநரகன்தன்னைச் சூழ்போகிவளைத்தெறிந்து *
கன்னிமகளிர்தம்மைக் கவர்ந்தகடல்வண்ணன்மலை *
புன்னைசெருந்தியொடு புனவேங்கையும்கோங்கும்நின்று *
பொன்னரிமாலைகள்சூழ் பொழில்மாலிருஞ்சோலையதே. (ங)

மாவலிதன்னுடைய மகன்வாணன்மகளிருந்த *
காவலைக்கட்டழித்த தனிக்காளைகருதும்மலை *
கோவலர்கோவிந்தனைக் குறமாதர்கள் * பண்குறிஞ்சிப்
பாவொலிபாடிநடம்பயில் மாலிருஞ்சோலையதே. (ச)

❀ பலபலநாழம்சொல்லிப்பழித்த சிசுபாலன்தன்னை *
அலவலைமைதவிர்த்த அழகனலங்காரன்மலை *
குலமலைகோலமலை குளிர்மாமலைகொற்றமலை *
நிலமலைநீண்டமலை திருமாலிருஞ்சோலையதே. (ரு)

பாண்டவர்தம்முடைய பாஞ்சாலிமறுக்கமெல்லாம் *
ஆண்டுஅங்குநூற்றுவர்தம பெண்டிர்மேல்வைத்தஅப்பன்மலை *
பாண்தருவண்டினங்கள் பண்கள்பாடிமதுப்பருக *
தோண்டலுடையமலை தொல்லைமாலிருஞ்சோலையதே. (சா)

கனங்குழையாள்பொருட்டாக் கணைபாரித்து * அரக்கர்தங்கள்
† இனமழுவேற்றுவித்த எழில்தோள்எம்இராமன்மலை *
கனம்கொழிதெள்ளருவி வந்துசூழ்ந்துஅகல்ஞாலமெல்லாம் *
இனம்குழுவாடும்மலை எழில்மாலிருஞ்சோலையதே. (எ)

† 'இனமகழுக்கேறுவித்த' என்றும பாடம்.

எரிசிதறும்சரத்தால் இலங்கையினை * தன்னுடைய
வரிசிலைவாயில்பெய்து வாய்க்கோட்டம்தவிர்த்துகந்த *
அரையனமரும்மலை அமரரொடுகோனும்சென்று *
திரிசுடர்சூழும்மலை திருமாலிருஞ்சோலையதே. (அ)

கோட்டுமண்கொண்டிடந்து குடங்கையில்மண்கொண்டளந்து *
மீட்டுமதுண்டுமிழ்ந்து விளையாடுவிமலனமலை *
ஈட்டியபல்பொருள்கள் எம்பிரானுக்கு அடியுறையென்று *
ஓட்டருமதண்சிலம்பாறுடை மாலிருஞ்சோலையதே. (கூ)

ஆயிரம்தோள்பரப்பி முடியாயிரம்மின்னிலக *
ஆயிரம்பைந்தலைய அனந்தசயனனாளும்மலை *
ஆயிரமாறுகளும் சுனைகள்பலவாயிரமும் *
ஆயிரம்பூம்பொழிலுமுடை மாலிருஞ்சோலையதே. (கய)

மாலிருஞ்சோலையெனும் மலையையுடையமலையை *
நாலிருமூர்த்திதன்னை நால்வேதக்கடலமுதை *
மேலிருங்கற்பகத்தை வேதாந்தவிழுப்பொருளில் *
மேலிருந்தவிளக்கை விட்டுசித்தன் † விரித்தனவே. (கக)

அடிவரவு:—உருப்பிணி கஞ்சன் மன்னு மாவலி பலபல பாண்டவர் கனம் எரி கோட்டு ஆயிரம் மாலிருஞ்சோலை நாவகாரியம்.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.



## சு - ஆந் திருமொழி - நாவகாரியம்.

[திரிகரணங்களாலும் திருக்கோட்டியூரை அனுபவிப்பவரைக் கொண்டாடியும், அவ்வாறு அனுபவியாத அவைஷ்ணவரை இழித்தும் கூறுதல்.]

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (நாதநாமக்ரியைராகம்-அடதாளம்.)

நாவகாரியம்சொல்லிலாதவர் நாடொறும்விருந்தோம்புவார் *
தேவகாரியம்செய்து வேதம்பயின்றுவாழ்திருக்கோட்டியூர் *
மூவர்காரியமும்திருத்தும் முதல்வனைச்சிந்தியாத * அப்
பாவகாரிகளைப்படைத்தவன் எங்ஙனம்படைத்தான்கொலோ! (க)

குற்றமின்றிக்குணம்பெருக்கிக் குருக்களுக்குஅனுகூலராய் *
செற்றமொன்றுமிலாத வண்கையினார்கள்வாழ்திருக்கோட்டியூர் *
துற்றியேழுலகுண்ட தூமணிவண்ணன்தன்னைத்தொழாதவர் *
பெற்றதாயார்வயிற்றினைப் பெருநோய்செய்வான்பிறந்தார்களே. (உ)

---

†'விரித்தனனே' என்று சிலர் கூறுவர்.

வண்ணநல்மணியும்மரதகமும்அழுத்தி நிழலெழும்
திண்ணைசூழ் * திருக்கோட்டியூர்த் திருமாலவன்திருநாமங்கள் *
எண்ணக்கண்டவிரல்களால் இறைப்பொழுதும்எண்ணகிலாதுபோய் *
உண்ணக்கண்டதம்ஊத்தைவாய்க்குக் கவளமுந்துகின்றார்களே. (௩)

உரகமெல்லணையான்கையில் உறைசங்கம்போல்மடவன்னங்கள் *
நிரைகணம்பரந்தேறும் செங்கமலவயல்திருக்கோட்டியூர் *
நரகநாசனைநாவிற்கொண்டழையாத மானிடசாதியர் *
பருகுநீரும்உடுக்குங்கூறையும் பாவம்செய்தனதாங்கொலோ! (௪)

ஆமையின்முதுகத்திடைக்குதிகொண்டு தூமலர்சாடிப்போய் *
தீமைசெய்துஇளவாளைகள் விளையாடுநீர்த்திருக்கோட்டியூர் *
நேமிசேர்தடங்கையினானை நினைப்பிலாவலிநெஞ்சுடை *
பூமிபாரங்களுண்ணும்சோற்றினைவாங்கிப் புல்லைத்திணிமினே. (௫)

பூதமைந்தொடுவேள்வியைந்து புலன்களைந்துபொறிகளால் *
ஏதமொன்றுமிலாத வண்கையினார்கள்வாழ்திருக்கோட்டியூர் *
நாதனைநரசிங்கனை நவின்றேத்துவார்களுழக்கிய *
பாததூளிபடுதலால் இவ்வுலகம்பாக்கியம்செய்ததே. (௬)

குருந்தமொன்றொசித்தானொடும்சென்று கூடியாடிவிழாச்செய்து *
திருந்துநான்மறையோர் இராப்பகல்ஏத்திவாழ்திருக்கோட்டியூர் *
கருந்தடமுகில்வண்ணனைக் கடைக்கொண்டுகைதொழும்பத்தர்கள் *
இருந்தவூரிலிருக்கும்மானிடர் எத்தவங்கள்செய்தார்கொலோ! (௭)

நளிர்ந்தசீலன்நயாசலன் அபிமானதுங்கனை * நாள்தொறும்
தெளிந்தசெல்வனைச்சேவகங்கொண்டசெங்கண்மால்திருக்கோட்டியூர் *
குளிர்ந்துறைகின்றகோவிந்தன் குணம்பாடுவாருள்ளநாட்டினுள் *
விளைந்ததானியமும் இராக்கதர்மீதுகொள்ளகிலார்களே. (௮)

கொம்பினார்பொழில்வாய்க் குயிலினம்கோவிந்தன்குணம்பாடுசீர் *
செம்பொனார்மதிள்சூழ் செழுங்கழனியுடைத்திருக்கோட்டியூர் *
நம்பனைநரசிங்கனை நவின்றேத்துவார்களைக்கண்டக்கால் *
எம்பிரான்தனசின்னங்கள் † இவரிவரென்றுஆசைகள்தீர்வனே. (௯)

காசின்வாய்க்கரம்விற்கிலும் கரவாதுமாற்றிலிசோறிட்டு *
தேசவார்த்தைபடைக்கும் வண்கையினார்கள்வாழ்திருக்கோட்டியூர் *
கேசவா! புருடோத்தமா! கிளர்சோதியாய்! குறளா! என்று *
பேசுவார்அடியார்கள் எந்தம்மைவிற்கவும்பெறுவார்களே. (௧௦)

† இவரென்றென்று' எனக் கூறுவர் சிலர்

❀ சீதநீர்புடைசூழ் செழுங்கழனிபுடைத்திருக்கோட்டியூர் *
ஆதியானடியாரையும் அடிமையின்றித்திரிவாரையும் *
கோதில்பட்டர்பிரான் குளிர்புதுவைமன்விட்டுசித்தன்சொல் *
ஏதமின்றி † உரைப்பவர்கள் இருடீகேசனுக்காளரே. (கக)

அடிவரவு:—நாவகாரியம் குற்றம் வண்ணம் உரகம் ஆமை பூதம் குருந்தம் நளிர்ந்த கொம்பின் காசின சீதநீர் ஆசைவாய்.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.



## ரு - ஆந் திருமொழி - ஆசைவாய்.

[பகவானிடத்தில் விமுகராயிருக்கும் ஸம்ஸாரிகளுக்கு ஹிதோபதேசஞ் செய்தல்.]

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம் (கண்டராகம்-ஆதிதாளம்.)

❀ ஆசைவாய்ச்சென்ற சிந்தையராகி
அன்னை அத்தன் என் புத்திரர் பூமி *
வாசவார்குழலாளென்று மயங்கி
மாளுமெல்லைக்கண் வாய்திறவாதே *
கேசவா! புருடோத்தமா! என்றும்
கேழலாகிய கேடிலீ! என்றும் *
பேசுவாரவர் எய்தும் பெருமை
பேசுவான்புகில் நம்பரமன்றே. (க)

சீயினால்செறிந்தேறிய புண்மேல்
செற்றலேறிக் குழம்பிருந்து * எங்கும்
ஈயினால் அரிப்புண்டு மயங்கி
எல்லைவாய்ச்சென்று சேர்வதன்முன்னம் *
வாயினால் நமோநாரணாவென்று
மத்தகத்திடைக் கைகளைக்கூப்பி *
போயினால்பின்னை இத்திசைக்கென்றும்
பிணைக்கொடுக்கிலும் போகவொட்டாரே. (உ)

சோர்வினால்பொருள் வைத்ததுண்டாகில்
சொல்லுசொல்லென்று சுற்றுமிருந்து *
‡ ஆர்வினவிலும் வாய்திறவாதே
அந்தகாலம் அடைவதன்முன்னம் *

† 'உரைப்பவர்' என்றும் பாடம். ‡ 'ஆர்வினாவிலும்' என்று சிலர்.

மார்வமென்பதோர்கோயிலமைத்து
மாதவனென்னும்தெய்வத்தைநாட்டி *
ஆர்வமென்பதோர்பூவிடவல்லார்க்கு
அரவதண்டத்தில்உய்யலுமாமே. (௩)

மேலெழுந்ததோர்வாயுக்கிளர்ந்து
மேல்மிடற்றினைஉள்ளெழவாங்கி *
காலுங்கையுமவிதிர்விதிர்த்தேறிக்
கண்ணுறக்கமதாவதன்முன்னம் *
மூலமாகியஒற்றையெழுத்தை
மூன்றுமாத்திரைஉள்ளெழவாங்கி *
வேலைவண்ணனைமேவுதிராகில்
விண்ணகத்தினில்மேவலுமாமே. (௪)

மடிவழிவந்துநீர்புலன்சோர
வாயிலட்டியகஞ்சியும்மீண்டே
கடைவழிவாரக்கண்டமடைப்பக்
கண்ணுறக்கமதாவதன்முன்னம் *
தொடைவழிஉம்மைநாய்கள்கவரா
சூலத்தால்உம்மைப்பாய்வதும்செய்யார் *
இடைவழியில்நீர்கூறையுமஇழவீர்
இருடீகேசனென்றேத்தவல்லீரே. (ரு)

அங்கம்விட்டவையைந்துமகற்றி
ஆவிமூக்கினில்சோதித்தபின்னை *
சங்கம்விட்டவர்கையைமறித்துப்
பையவேதலைசாய்ப்பதன்முன்னம் *
வங்கம்விட்டுலவும்கடற்பள்ளிமாயனை
மதுசூதனைமார்பில்
தங்கவிட்டுவைத்து * ஆவதோர்கருமம்
சாதிப்பார்க்குஎன்றும்சாதிக்கலாமே. (௬)

தென்னவன்தமர்செப்பமிலாதார்
சேவதக்குவார்போலப்புகுந்து *
பின்னும்வன்கயிற்றால்பிணித்தெற்றிப்
பின்முன்னாகஇழுப்பதன்முன்னம் *

இன்னவன் இனையானென்றுசொல்லி
எண்ணி உள்ளத்திருளறநோக்கி *
மன்னவன்மதுசூதனனென்பார்
வானகத்துமன்றாடிகள்தாமே. (எ)

கூடிக்கூடி உற்றார்கள் இருந்து
குற்றம்நிறகநற்றங்கள்பறைநது *
பாடிப்பாடிஓர்பாடையிலிட்டு
நரிப்படைக்குஒருபாகுடம்போலே *
கோடிமூடியெடுப்பதன்முன்னம்
கௌத்துவமுடைகோவிந்தனோடு *
கூடியாடியஉள்ளத்தரானால்
குறிப்பிடமகடந்துஉய்யலுமாமே. (அ)

வாயொருபக்கமவாங்கிவலிப்ப
வாரந்தநீர்க்குழிக்கண்கள்மிழற்ற *
தாய்ஒருபக்கம்தநதைஒருபக்கம்
தாரமும்ஒருபக்கமஅலறற *
தீஒருபக்கமசோவதன்முன்னம
செங்கண்மாலொடும்சிக்கெனச்சுற்ற
மாய் * ஒருபக்சம்நிற்கவல்லார்க்கு
அரவதண்டத்தில்உய்யலுமாமே. (௯)

❀செத்துப்போவதோர்போதுநினைந்து
செய்யுமசெய்கைகள்தேவபிரான்மேல் *
பத்தராயிறந்தார்பெறுமபேற்றைப்
பாழித்தோள்விட்டுசித்தன்புத்தூர்க்கோன் *
சித்தம்நன்கொருங்கித்திருமாலைச்
செய்தமாலைஇவைபத்தும்வல்லார் *
சித்தம்நனகொருங்கித்திருமால்மேல்
சென்றசிந்தை † பெறுவர்தாமே. (௧௦)

அடிவரவு:—ஆசை சீயினால சோர்வினால் மேல் மடி அங்கம் தென்னவன கூடி வாய செத்து காசு.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.



† 'பெறுவர்கள்தாமே' என்பதும் பாடம்.

## ௬ - ஆந் திருமொழி - காசுங்கறையுடை.

[மக்கட்குப் பகவானுடைய திருநாமங்களையிட்டழைக்கும்படி மனம்திருந்தாதார்க்கு உபதேசித்தல்.]

கலித்துறை. (மோஹநராகம் - ரூபகதாளம்.)

காசுங்கறையுடைக்கூறைக்கும் அங்கோர்கற்றைக்கும்
ஆசையினால் * அங்கவத்தப்பேரிடும் ஆதர்காள் ! *
கேசவன்பேரிட்டு நீங்கள்தேனித்திருமினோ *
நாயகன்நாரணன் தம்அன்னைநரகம்புகாள். (௧)

அங்கொருகூறை அரைக்குடுப்பதனாசையால் *
மங்கியமானிடசாதியின் பேரிடும்ஆதர்காள் ! *
செங்கணெடுமால் ! சிரீதரா ! என்று அழைத்தக்கால் *
நங்கைகாள் ! நாரணன் தம்அன்னைநரகம்புகாள். (௨)

உச்சியில்எண்ணெயும் சுட்டியும்வளையுமுகந்து *
எச்சம்பொலிந்தீர்காள் ! என்செய்வான்பிறர்பேரிட்டீர் ? *
பிச்சைபுக்காகிலும் எம்பிரான்திருநாமமே
நச்சுமின் * நாரணன் தம்அன்னைநரகம்புகாள். (௩)

மானிடசாதியில்தோன்றிற்று ஓர்மானிடசாதியை *
மானிடசாதியின்பேரிட்டால் மறுமைக்கில்லை *
வானுடைமாதவா ! கோவிந்தா ! என்று அழைத்தக்கால் *
நானுடைநாரணன் தம்அன்னைநரகம்புகாள். (௪)

மலமுடையூத்தையில்தோன்றிற்று ஓர்மலவூத்தையை *
மலமுடையூத்தையின்பேரிட்டால் மறுமைக்கில்லை *
குலமுடைக்கோவிந்தா ! கோவிந்தா ! என்று அழைத்தக்கால் *
நலமுடைநாரணன் தம்அன்னை நரகம்புகாள். (௫)

நாடும்நகரும்அறிய மானிடப்பேரிட்டு *
கூடியழுங்கிக் குழியில்வீழ்ந்துவழுக்காதே *
சாடிறப்பாய்ந்ததலைவா ! தாமோதரா ! என்று
நாடுமின் * நாரணன்தம்அன்னைநரகம்புகாள். (௬)

மண்ணில்பிறந்துமண்ணாகும் மானிடப்பேரிட்டு * அங்கு
எண்ணமொன்றி†ன்றியிருக்கும் ஏழைமனிசர்காள் ! *
கண்ணுக்கினிய கருமுகில்வண்ணன்நாமமே
நண்ணுமின் * நாரணன்தம்அன்னைநரகம்புகாள். (௭)

---

†'எண்ணியிருக்கும்' என்றும் பாடம்.

நம்பிபிம்பியென்று நாட்டுமானிடப்பேரிட்டால் *
நம்பும்பிம்புமெல்லாம் நாலுநாளில்அழுங்கிப்போம் *
செம்பெருந்தாமரைக்கண்ணன் பேரிட்டழைத்தக்கால் *
நம்பிகாள் ! நாரணன் தம்அன்னைநரகம்புகாள். (அ)

ஊத்தைக்குழியில் அமுதம்பாய்வதுபோல் * உங்கள்
மூத்திரப்பிள்ளையை என்முகில்வண்ணன்பேரிட்டு *
கோத்துக்குழைத்துக் குணலைமாடித்திரிமினோ *
நாத்தகுநாரணன் தம்அன்னைநரகம்புகாள். (கூ)

❀சீரணிமால் திருநாமமேயிடத்தேற்றிய *
வீரணிதொல்புகழ் விட்டுசித்தன்விரித்த *
ஓரணியொண்தமிழ் ஒன்பதோடொன்றும்வல்லவர் *
பேரணிவைகுந்தத்து என்றும்பேணியிருப்பரே. (க௦)

அடிவரவு:—காசும் அங்கொரு உச்சியில் மானிடம் மலம் நாடு மண் நம்பி ஊத்தை சீரணி தங்கை.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.



## எ - ஆந் திருமொழி - தங்கையைமூக்கும்.



[தேவப்ரயாகை யென்று வழங்கும் கண்ட மென்னுந்திருப்பதியின்மகிமை.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம் (அடாணாராகம் - திரிபுடைதாளம்.)

❀ தங்கையைமூக்கும்தமையனைத்தலையும்
தடிந்த எம்தாசரதிபோய் *
எங்குமதன்புகழாவிருந்துஅரசாண்ட
எம்புருடோத்தமனிருக்கை *
கங்கைகங்கை யென்றவாசகத்தாலே
கடுவினைகளைந்திடுகிற்கும் *
கங்கையின்கரைமேல்கைதொழநின்ற
கண்டமென்னும்கடிநகரே. (க)

சலம்பொதியுடம்பின்தழலுமிழ்பேழ்வாய்ச்
சந்திரன்வெங்கதிர் அஞ்ச *
மலர்ந்தெழுந்தணவுமணிவண்ணவுருவின்
மால்புருடோத்தமன்வாழ்வு *

நீலம்திகழ்சடையான்முடிக்கொன்றைமலரும்
நாரணன்பாதத்துழாயும் *
கலந்திழிபுனலால்புகர்படுகங்கைக்
கண்டமெனனும்கடிநகரே. (உ)

அதிர்முகமுடையவலம்புரிகுமிழ்த்தி
அழலுமிழ்ஆழிகொண்டெறிந்து * அங்கு
எதிர்முகவசுரர்தலைகளையிடறும்
எம்புருடோத்தமனிருக்கை *
சதுமுகன்கையில் சதுப்புயனதாளில்
சங்கரன்சடையினில்தங்கி *
கதிர்முகமணிகொண்டிழிபுனல்கங்கைக்
கண்டமென்னும்கடிநகரே. (௩)

இமையவர்இறுமாந்திருந்தரசாள
ஏற்றுவந்தெதிர்பொருசேனை *
நமபுரம்நணுகநாந்தகம்விசிறும்
நம்புருடோத்தமன்நகர்தான் *
இமவந்தம்தொடங்கிஇருங்கடலளவும்
இருகரைஉலகிரைத்தாட *
சமையுடைப்பெருமைக்கங்கையின்கரைமேல்
கண்டமென்னும்கடிநகரே. (ச)

உழுவதோர்படையும்உலக்கையும்வில்லும்
ஒண்சுடராழியும்சங்கும் *
மழுவொடுவாளும்படைக்கலமுடைய
மால்புருடோத்தமன்வாழ்வு *
எழுமையும்கூடிஈண்டியபாவம்
இறைப்பொழுதளவினில்எல்லாம் *
கழுவிடும்பெருமைக்கங்கையின்கரைமேல் *
கண்டமென்னும்கடிநகரே. (ரு)

தலைப்பெய்துகுமுறிச்சலம்பொதிமேகம்
சலசலபொழிந்திடக்கண்டு *
மலைப்பெருங்குடையால் † மறைத்தவன்மதுரை
மால்புருடோத்தமன்வாழ்வு *

† 'மறுத்தவன்' என்றும் பாடம்.

அலைப்புடைத்திரைவாய் அருந்தவமுனிவர்
அவபிரதம்குடைந்தாட *
கலப்பைகள் கொழிக்கும்கங்கையின்கரைமேல்
கண்டமென்னும்கடிநகரே. (௬)

விற்பிடித்திறுத்து வேழத்தை † முருக்கி
மேலிருந்தவன் தலைசாடி *
மற்பொருதெழப்பாய்ந்து அரையனையுதைத்த
மால்புருடோத்தமன்வாழ்வு *
அற்புதமுடைய அயிராவதமதமும்
அவரிளம்படியரொண்சாந்தும் *
கற்பகமலரும்கலந்திழிகங்கைக்
கண்டமென்னும்கடிநகரே. (எ)

திரைபொருகடல்சூழ்திண்மதிள் துவரைவேந்து
தன்மைத்துனன்மார்க்காய் *
அரசினையவிய அரசினையருளும்
அரிபுருடோத்தமனமர்வு *
நிரைநிரையாகநெடியனயூபம்
நிரந்தரம்ஒழுக்குவிட்டு * இரண்டு
கரைபுரைவேள்விப்புகைகமழ்கங்கைக்
கண்டமென்னும்கடிநகரே. (அ)

❀வடதிசைமதுரைசாளக்கிராமம்
வைகுந்தம்துவரை அயோத்தி *
இடமுடைவதரியிடவகையுடைய
எம்புருடோத்தமனிருக்கை *
தடவரையதிரத்தரணிவிண்டிடியத்
தலைப்பற்றிக்கரைமரம்சாடி *
கடலினைக்கலங்கக்கடுத்திழிகங்கைக்
கண்டமென்னும்கடிநகரே. (௯)

❀மூன்றெழுத்ததனைமூன்றெழுத்ததனால்
மூன்றெழுத்தாக்கி * மூன்றெழுத்தை
ஏன்றுகொண்டிருப்பார்க்குஇரக்கம்நன்குடைய
எம்புருடோத்தமனிருக்கை *

† 'முறுக்கி' என்றும் பாடம்.

மூன்றடிநிமிர்த்துமூன்றினில்தோன்றி
மூன்றினில்மூன்றுருவானான் *
கான்தடம்பொழில்சூழ்கங்கையின்கரைமேல்
கண்டமென்னும்கடிநகரே. (௧௦)

※பொங்கொலிகங்கைக்கரைமலிகண்டத்து
உறைபுருடோத்தமனடிமேல் *
வெங்கலிநலியாவில்லிபுத்தூர்க்கோன்
விட்டுசித்தன்விருப்புற்று *
தங்கியஅன்பால்செய்தமிழ்மாலை
தங்கியநாவுடையார்க்கு *
கங்கையில்திருமால்கழலிணைக்கீழே
குளித்திருந்தகணக்காமே. (௧௧)

**அடிவரவு:**—தங்கையை சலம் அதிர் இமையவர் உழுவதோர் தலைப்பெய்து வில் திரை வடதிசை மூன்று பொங்கு மாதவத்தோன்.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.



## ௮ - ஆம் திருமொழி - மாதவத்தோன்.



[திருவரங்கம் பெரியகோயிலின் மகிமை. ௧.]

தரவுகொச்சகக்கலிப்பா. (சங்கராபரணராகம் - ஆதிதாளம்.)

※மாதவத்தோன்புத்திரன்போய் மறிகடல்வாய்மாண்டானை *
ஓதுவித்ததக்கணையா உருவுருவேகொடுத்தானூர் *
தோதவத்தித்தூய்மறையோர் துறைபடியத்துளும்பிளங்கும் *
போதில்வைத்ததேன்சொரியும் புனலரங்கமென்பதுவே. (௧)

பிறப்பகத்தேமாண்டொழிந்த பிள்ளைகளைநால்வரையும் *
இறைப்பொழுதில்கொணர்ந்துகொடுத்து ஒருப்படுத்தவுறைப்பனூர் *
மறைப்பெருந்தீவளர்த்திருப்பார் வருவிருந்தையளித்திருப்பார் *
சிறப்புடையமறையவர்வாழ் திருவரங்கமென்பதுவே. (௨)

மருமகன்தன்சந்ததியை உயிர்மீட்டு, மைத்துனன்மார் *
உருமகத்தேவீழாமே குருமுகமாய்க்காத்தானூர் *
திருமுகமாய்ச்செங்கமலம் திருநிறமாய்க்கருங்குவளை
பொருமுகமாய்நின்றலரும் புனலரங்கமென்பதுவே. (௩)

கூன்தொழுத்தைசிதகுரைப்பக் கொடியவள்வாய்க்கடியசொல்கேட்டு *
ஈன்றெடுத்ததாயரையும் இராச்சியமும்ஆங்கொழிய *
கான்தொடுத்தநெறிபோகிக் கண்டகரைக்களைந்தானூர் *
தேன்தொடுத்தமலர்ச்சோலைத் திருவரங்கமென்பதுவே. (௪)

பெருவரங்களவைபற்றிப் பிழக்குடைய இராவணனை *
உருவரங்கப்பொருதழித்து இவ்வுலகினைக்கண்பெறுத்தானூர் *
குரவரும்பக்கோங்கலரக் குயில்கூவும்குளிர்பொழில்சூழ் *
திருவரங்கமென்பதுவே எனதிருமால்சேர்விடமே. (௫)

கீழுலகில்அசுரர்களைக் கிழங்கிருந்துகிளராமே *
ஆழிவிடுத்துஅவருடைய கருவழித்தவழிப்பனூர் *
தாழைமடலூடுரிஞ்சித தவளவண்ணப்பொடியணிந்து *
யாழினிசைவண்டினங்கள் ஆளமவைக்கும்அரங்கமே. (௬)

கொழுப்புடையசெழுங்குருதி கொழித்திழிந்துகுமிழ்த்தெறிய *
பிழக்குடையஅசுரர்களைப் பிணம்படுத்தபெருமானூர் *
தழுப்பரியசந்தனங்கள் தடவரைவாய்ஈர்த்துக்கொண்டு *
தெழிப்புடையகாவிரிவந்து அடிதொழும்சீரங்கமே. (௭)

வல்லெயிற்றுக்கேழலுமாய் வாளெயிற்றுச்சீயமுமாய் *
எல்லையில்லாத்தரணியையும் அவுணனையும்இடந்தானூர் *
எல்லியம்போதுஇருஞ்சிறைவண்டு எம்பெருமான்குணம்பாடி *
மல்லிகைவெண்சங்கூதும் மதிளரங்கமென்பதுவே. (௮)

குன்றாடுகொழுமுகில்போல் குவளைகள்போல்குரைகடல்போல் *
நின்றாடுகணமயில்போல் நிறமுடையநெடுமாலூர் *
குன்றாடுபொழில்நுழைந்து கொடியிடையார்முலையணவி *
மன்றாடுதென்றலுலாம் மதிளரங்கமென்பதுவே. (௯)

பருவரங்களவைபற்றிப் படையாலித்தெழுந்தானை *
செருவரங்கப்பொருதழித்த திருவாளன்திருப்பதிமேல் *
திருவரங்கத்தமிழ்மாலை விட்டுசித்தன்விரித்தனகொண்டு *
இருவரங்கமெரித்தானை ஏத்தவல்லாரடியோமே. (௧௦)

அடிவரவு:—மாதவத்தோன் பிறப்பு மருமகன் கூன் பெரு கீழ் கொழுப்பு வல்லெயிற்று குன்று பரு மாவடி.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.



## ௯-ஆந் திருமொழி-மரவடியை.



[திருவரங்கம்பெரியகோயிலின் மகிமை. ௨.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (தோடிராகம் - ஆதிதாளம்.)

மரவடியைத்தம்பிக்கு வானபணையம்
வைத்துப்போய்வானோவாழ *
செருவுடையதிசைக்கருமம் திருத்திவந்து
உலகாண்டதிருமால்கோயில் *
திருவடிதன்திருவுருவும் திருமங்கை
மலர்க்கண்ணுங்காட்டிநின்று *
உருவுடையமலர்நீலம் காற்றாட்ட
ஒ! சலிக்கும்ஒளியரங்கமே. (க)

தன்னடியார்திறத்தகத்துத் தாமரையா
ளாகிலும்சிதகுரைக்குமேல் *
என்னடியார் அதுசெய்யார் செய்தாரேல்
நன்றுசெய்தாரென்பர்போலும் *
மன்னுடையவிபீடணற்கா மதிளிலங்கைத்
திசைநோக்கிமலர்க்கணவைத்த *
என்னுடையதிருவரங்கற்கன்றியும
மற்றொருவர்க்குஆளாவரே ? (௨)

கருளுடையபொழில்மருதும்
கதக்களிறும்பிலம்பனையும்கடியமாவும் *
உருளுடையசகடரையும்மல்லரையும்
உடையவிட்டுஓசைகேட்டான் *
இருள்அகற்றும்எறிகதிரோன்மண்டலத்தூடு
ஏற்றிவைத்துஏணிவாங்கி *
அருள்கொடுத்திட்டுஅடியவரை
ஆட்கொள்வான்அமருமூர் அணியரங்கமே. (௩)

பதினாறாமாயிரவர் தேவிமார்
பணிசெய்ய * துவரையென்னும்
அதில்நாயகராகிவீற்றிருந்த
மணவாளர்மன்னுகோயில் *

புதுநாண்மலர்க்கமலம் எம்பெருமான்
பொன்வயிற்றில்பூவேபோல்வான் *
பொதுநாயகம்பாவித்து இறுமாந்து
பொன்சாய்க்கும்புனலரங்கமே. (ச)

ஆமையாய்க்கங்கையாய் ஆழ்கடலாய்
அவனியாய்அருவரைகளாய் *
நான்முகனாய்நான்மறையாய் வேள்வியாய்த்
தக்கணையாய்த்தானுமானான் *
சேமமுடைநாரதனார் சென்றுசென்று
துதித்திறைஞ்சக்கிடந்தான்கோயில் *
பூமருவிப்புள்ளினங்கள் புள்ளரையன்
புகழ்குழறும்புனலரங்கமே. (ரு)

மைத்துனன்மார்காதலியைமயிர்முடிப்பித்து
அவர்களையேமன்னராக்கி *
உத்தரைதன்சிறுவனையும்உய்யக்கொண்ட
உயிராளன்உறையும்கோயில் *
பத்தர்களும்பகவர்களும் பழமொழிவாய்
முனிவர்களும்பரந்தநாடும் *
சித்தர்களும்தொழுதிறைஞ்சத்
திசைவிளக்காய்நிற்கின்றதிருவரங்கமே. (சு)

குறட்பிரமசாரியாய் மாவலியைக்
குறும்பதக்கிஅரசுவாங்கி *
இறைப்பொழுதில்பாதாளம்கலவிருக்கை
கொடுத்துகந்தஎம்மான்கோயில் *
எறிப்புடையமணிவரைமேல் இளஞாயிறு
எழுந்தாற்போல்அரவணையின்வாய் *
சிறப்புடையபணங்கள்மிசைச்
செழுமணிகளவிட்டெறிக்கும்திருவரங்கமே. (எ)

உரம்பற்றிஇரணியனை உகிர்நுதியால்
ஒள்ளியமார்புறைக்கவூன்றி *
சிரம்பற்றிமுடியிடியக்கண்பிதுங்க
† வாயலரத்தெழித்தான்கோயில் *

† 'வாயலற' என்றும் பாடம்.

உரம்பெற்றமலர்க்கமலம் உலகளந்த
சேவடிபோல்உயர்ந்துகாட்ட *
வரம்புற்றகதிர்ச்செந்நெல் தாள்சாய்த்துத்
தலைவணக்கும்தண்ணரங்கமே. (அ)

தேவுடையமீனமாய்ஆமையாய்
ஏனமாய் அரியாய்க்குறளாய் *
மூவுருவினிராமனாய்க் கண்ணனாய்க்
கற்கியாய்முடிப்பான்கோயில் *
சேவலொடுபெடையன்னம
செங்கமலமலரேறிஊசலாடி *
பூவணைமேல்துதைந்தெழு செம்
பொடியாடிவிளையாடும்புனலரங்கமே. (கூ)

செருவாளும்புள்ளாளன்மண்ணாளன்
செருச்செய்யும்நாந்தகமென்னும்
ஒருவாளன் * மறையாளன்ஓடாத
படையாளன் விழுக்கையாளன் *
இரவாளன்பகலாளன்என்னையாளன்
ஏழுலகப்பெரும்புரவாளன் *
திருவாளன் இனிதாகத் திருக்கண்கள்
வளர்கின்றதிருவரங்கமே. (கO)

❁ கைந்நாகத்திடர்கடிந்த கனலாழிப
படையுடையான்கருதுமகோயில் *
தென்னாடும்வடநாடுமதொழநின்ற
திருவரங்கம்திருப்பதியின்மேல் *
மெய்ந்நாவன்மெய்யடியான் விட்டுசித்தன்
விரித்ததமிழுரைக்கவல்லார் *
எஞ்ஞான்றும்எம்பெருமானிணையடிக்கீழ்
இணைபிரியாதிருப்பர்தாமே. (கக)

அடிவரவு:—மரவடியை தன்னடியார் கருள் பதினாறு ஆமையாய் மைத்துனன்மார் குறள் உரம் தேவு செரு கைந்நாகத்து துப்பு.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.



## கo - ஆந் திருமொழி - துப்புடையாரை.

[அந்திமகாலத்தில் கடாக்ஷிக்கும்படி அப்போதைக்குஇப்போதே பெரியபெருமாள் திருவடிகளில் சரணம் புகுதல்.]

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (அரபிராகம்-ஆதிதாளம்.)

துப்புடையாரை அடைவதுஎல்லாம்
சோர்விடத்துத்துணையாவரென்றே *
ஒப்பிலேனாகிலும்நின்னடைந்தேன்
ஆனைக்குநீ அருள்செய்தமையால் *
எய்ப்புஎன்னைவந்துநலியும்போது
அங்குஏதும்நானுன்னைநினைக்கமாட்டேன் *
அப்போதைக்குஇப்போதேசொல்லிவைத்தேன்
அரங்கத்தரவணைப்பள்ளியானே ! (க)

சாமிடத்துஎன்னைக்குறிக்கொள்கண்டாய்
சங்கொடுசக்கரமேந்தினானே ! *
நாமடித்துஎன்னை அநேகதண்டம்
செய்வதாநிற்பர்நமன்தமர்கள் *
போமிடத்துஉன்திறத்துஎத்தனையும்
புகாவண்ணம்நிற்பதோர்மாயைவல்லை *
ஆமிடத்தேஉன்னைச்சொல்லிவைத்தேன்
அரங்கத்தரவணைப்பள்ளியானே ! (உ)

எல்லையில்வாசல்குறுகச்சென்றால்
எற்றிநமனதமர்பற்றும்போது *
நில்லுமினென்னும்உபாயமில்லை
நேமியும்சங்கமுமேந்தினானே ! *
சொல்லலாம்போதேஉன்நாமமெல்லாம்
சொல்லினேன என்னைக்குறிக்கொண்டுஎன்றும் *
அல்லல்படாவண்ணம்காக்கவேண்டும்
அரங்கத்தரவணைப்பள்ளியானே ! (ங)

ஒற்றைவிடையனும்நான்முகனும்
உன்னையறியாப்பெருமையோனே! *
முற்றஉலகெல்லாம்நீயேயாகி
மூன்றெழுத்தாயமுதல்வனேயோ ! *

அற்றதுவாணாள் இவற்கென்றெண்ணி
அஞ்சநமன்தமர்பற்றலுற்ற *
அற்றைக்கு, நீஎன்னை க்காக்கவேண்டும்
அரங்கத்தரவணைப்பள்ளியானே! (ச)

பையரவினணைப் பாற்கடலுள்
பள்ளிகொள்கின்றபரமமூர்த்தி! *
உய்யஉலகுபடைக்கவேண்டி
உந்தியில்தோற்றினாய்நான்முகனை *
வையமனிசரைப்பொய்யெனவெண்ணிக்
காலனையுமஉடனேபடைத்தாய் *
ஐய! இனிஎன்னைக்காக்கவேண்டும்
அரங்கத்தரவணைப்பள்ளியானே! (ரு)

தண்ணெனவில்லைநமன்தமர்கள்
சாலக்கொடுமைகள்செய்யாநிற்பர் *
மண்ணொடுநீரும்எரியும்காலும்
மற்றும்ஆகாசமுமாகிநின்றாய்! *
எண்ணலாம்போதேஉன்நாமமெல்லாம்
எண்ணினேன், என்னைக்குறிக்கொண்டென்றும் *
அண்ணலே! நீஎன்னைக்காக்கவேண்டும்
அரங்கத்தரவணைப்பள்ளியானே! (சா)

செஞ்சொல்மறைப்பொருளாகிநின்ற
தேவர்கள்நாயகனே! எமமானே! *
எஞ்சலிலென்னுடையின்னமுதே!
ஏழுலகுமுடையாய்! என்னப்பா! *
வஞ்சவுருவின்நமன்தமர்கள்
வலிந்துநலிந்துஎன்னைப்பற்றும்போது *
அஞ்சலமென்றுஎன்னைக்காக்கவேண்டும்
அரங்கத்தரவணைப்பள்ளியானே! (எ)

நான்ஏதும்உன்மாயமொன்றறியேன்
நமன்தமர்பற்றிநலிந்திட்டு * இந்த
ஊனேபுகேயென்றுமோதும்போது
† அங்கேதும் நான்உன்னைநினைக்கமாட்டேன் *

† 'அங்குன்னைநானென்றுநினைக்கமாட்டேன்' என்பதும் பாடம்.

வானேய்வானவர்தங்களீசா !
மதுரைப்பிறந்தமாமாயனே ! * என்
ஆனாய் ! நீஎன்னைக்காக்கவேண்டும்
அரங்கத்தரவணைப்பள்ளியானே ! (அ)

குன்றெடுத்துஆநிரைகாத்தஆயா !
கோநிரைமேய்த்தவனே! † எம்மானே ! *
அன்றுமுதல் ‡ இன்றறுதியா
ஆதியஞ்சோதி ! மறந்தறியேன் *
நன்றுமகொடியநமன்தமர்கள்
நலிந்துவலிந்துஎன்னைப்பற்றும்போது *
அன்றங்குநீஎன்னைக்காக்கவேண்டும்
அரங்கத்தரவணைப்பள்ளியானே ! (கூ)

❀ மாயவனைமதுசூதனனை
மாதவனைமறையோர்களேத்தும் *
ஆயர்களேற்றினைஅச்சுதனை
அரங்கத்தரவணைப்பள்ளியானை *
வேயர்புகழ்வில்லிபுத்தூர்மன்னன்
விட்டுசித்தன்சொன்னமாலைபத்தும் *
தூயமனத்தனராகிவல்லார்
தூமணிவண்ணனுக்காளர்தாமே. (கo)

அடிவரவு:—துப்பு சாமிடத்து எல்லே ஒற்றை பை தண்ணெனவு செஞ்சொல் நான் குன்று மாயவனை வாக்கு.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.

---

## ஐந்தாம்பத்து.

### க - ஆந் திருமொழி - வாக்குத்தூய்மை.

[நைச்யாநுஸந்தாநம்.]

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (தன்யாசிராகம் - அடதாளம்.)

❀ வாக்குத்தூய்மையிலாமையினாலே
மாதவா ! உன்னைவாய்க்கொள்ளமாட்டேன் *
நாக்குநின்னையல்லால்அறியாது
நானதஞ்சுவன்என்வசமன்று *

---

† 'அம்மானே' என்பதும் பாடம். ‡ 'இன்றறுதியாக' என்று சிலர்.

மூர்க்குப்பேசுகின்றானிவனென்று
முனிவாயேலும்என்நாவினுக்குஆற்றேன் *
காக்கைவாயிலும்கட்டுரைகொள்வர்
காரணா! கருளக்கொடியானே! (௧)

சழக்குநாக்கொடுபுன்கவிசொன்னேன்
சங்குசக்கரமேந்துகையானே! *
பிழைப்பராகிலும்தமமடியார்சொல்
பொறுப்பது பெரியோர்கடனன்றே *
விழிக்கும்கண்ணிலேன்நின்கண்மற்றல்லால்
வேறொருவரோடுஎன்மனம்பற்றாது*
உழைக்குஓர்புள்ளிமிகையன்றுகண்டாய்
ஊழியேழுலகுண்டுமிழ்ந்தானே! (௨)

நன்மைதீமைகளொன்றும்அறியேன்
நாரணா! என்னும்இத்தனையல்லால்*
புன்மையால்உன்னைப்புள்ளுவம்பேசிப்
புகழ்வானன்றுகண்டாய்திருமாலே!*
உன்னுமாறுஉன்னைஒன்றும்அறியேன்
ஓவாதேநமோநாரணா! என்பன்*
வன்மையாவதுஉன்கோயிலில்வாழும்
வைட்டணவனென்னும்வன்மைகண்டாயே. (௩)

நெடுமையால்உலகேழுமளந்தாய்!
நின்மலா! நெடியாய்!* அடியேனைக்
குடிமைகொள்வதற்குஐயுறவேண்டா
கூறைசோறுஇவைவேண்டுவதில்லை*
அடிமையென்னுமக்கோயின்மையாலே
அங்கங்கே அவைபோதரும்கண்டாய் *
கொடுமைக்கஞ்சனைக்கொன்று நின்தாதை
கோத்தவன்தளைகோள்விடுத்தானே! (௪)

தோட்டம்இல்லவள்ஆத்தொழுஓடை
துடவையும்கிணறும்இவையெல்லாம் *
வாட்டமின்றிஉன்பொன்னடிக்கீழே
வளைப்பகம்வகுத்துக்கொண்டிருந்தேன் *

நாட்டுமானிடத்தோடெனக்கு அரிது
நச்சுவார்பலர்கேழலொன்றாகி *
கோட்டுமண்கொண்டகொள்கையினானே !
குஞ்சரம்வீழக்கொம்பொசித்தானே ! (ரு)

கண்ணா! நான்முகனைப்படைத்தானே !
காரணா !கரியாய் !அடியேனான் *
உண்ணாநாள்பசியாவதொன்றில்லை
ஓவாதேநமோநாரணாவென்று *
எண்ணாநாளும்இருக்கெசுச்சாமவேத
நாண்மலர்கொண்டுஉன்பாதம்
நண்ணாநாள் * அவைதத்துறுமாகில்
அன்றுஎனக்குஅவைபட்டினிநாளே. (சு)

வெள்ளைவெள்ளத்தின்மேல்ஒருபாம்பை
மெத்தையாகவிரித்து * அதன்மேலே
கள்ளநித்திரைகொள்கின்றமார்க்கம்
காணலாங்கொ† லெனாசையினாலே *
உள்ளம்சோரஉகந்தெதிர்விம்மி
உரோமகூபங்களாய் * கண்ணநீர்கள்
துள்ளம்சோரத்துயிலணைகொள்ளேன்
சொல்லாய்யான்உன்னைத்தத்துறுமாறே. (எ)

வண்ணமால்வரையேகுடையாக
மாரிகாத்தவனே ! மதுசூதா ! *
கண்ணனே ! கரிகோள்விடுத்தானே !
காரணா ! களிறட்டபிரானே ! *
எண்ணுவாரிடரைக்களைவானே !
ஏத்தரும்பெருங்கீர்த்தியினானே ! *
நண்ணிநான்உன்னைநாள்தொறும்ஏத்தும்
நன்மையேஅருள்செய்எம்பிரானே ! (அ)

நம்பனே ! நவின்றேத்தவல்லார்கள்
நாதனே ! நரசிங்கமதானாய் ! *
உம்பர்கோனுலகேழும்அளந்தாய் !
ஊழியாயினாய் ! ஆழிமுன்னேந்தி *

† 'என்னாசையினாலே' என்பதும் பாடம்.

கம்பமாகரிகோள்விடுத்தானே !
  காரணா ! கடலைக்கடைந்தானே !*
எம்பிரான் ! என்னையாளுடைத்தேனே !
  ஏழையேனிடரைக்களையாயே. (௯)

காமர்தாதைகருதலர்சிங்கம்
  காணவினியகருங்குழல்குட்டன *
வாமனன்என்மரதகவண்ணன்
  மாதவன்மதுசூதனன்தன்னை *
சேமநன்கமரும்புதுவையர்கோன்
  விட்டுசித்தன்வியன்தமிழ்பத்தும் *
நாமமென்றுநவின்றுரைப்பார்கள்
  நண்ணுவார்ஒல்லைநாரணனுலகே. (௧௦)

அடிவரவு:—வாக்கு சழக்கு நன்மை நெடுமையால் தோட்டம் கண்ணு வெள்ளை வண்ணம் நம்பனே காமா நெய்க்குடத்தை.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.



## ௨ - ஆந் திருமொழி - நெய்க்குடத்தை.

[தம்மிடத்து எம்பெருமான் திருப்பதிகளிற்போல விரும்பிப்புகுந்ததனால், நோய்களை யகலும்படி ஆழ்வார் கூறுதல்.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (பியாகடைராகம் - ரூபகதாளம்.)

நெய்க்குடத்தைப்பற்றி ஏறும்எறும்புகள்போல்நிரந்து * எங்கும்
கைக்கொண்டுநிற்கின்றநோய்காள் ! காலம்பெறஉய்யப்போமின்*
மெய்க்கொண்டுவந்துபுகுந்து வேதப்பிரானார்கிடந்தார் *
பைக்கொண்டபாம்பணையோடும் பண்டன்றுபட்டினம்காப்பே. (௧)

சித்திரகுத்தனெழுத்தால் தென்புலக்கோன்பொறியொற்றி *
வைத்தஇலச்சினைமாற்றித் தூதுவர்ஓடிஒளித்தார் *
முத்துத்திரைக்கடற்சேர்ப்பன் மூதறிவாளர்முதல்வன் *
பத்தர்க்கமுதன்அடியேன் பண்டன்றுபட்டினம்காப்பே. (௨)

வயிற்றில்தொழுவைப்பிரித்து வன்புலச்சேவையதக்கி *
கயிற்றும்அக்காணிகழித்துக் † காலிடைப்பாசம்கழற்றி *
எயிற்றிடைமண்கொண்டஎந்தை இராப்பகல்ஓதுவித்து * என்னைப்
பயிற்றிப்பணிசெய்யக்கொண்டான் பண்டன்றுபட்டினம்காப்பே. (௩)

†'காலிடைப்பாசம்,' 'காலடைப்பாசம்' என்பன பாடாந்தரம்.

மங்கியவல்வினைநோய்காள் ! உமக்குமோர்வல்வினைகண்டீர் *
இங்குப்புகேன்மின்புகேன்மின் எளிதன்றுகண்டீர்புகேன்மின் *
சிங்கப்பிரானவன்எம்மான் சேரும்திருக்கோயில்கண்டீர் *
பங்கப்படாதுஉய்யப்போமின் பண்டன்றுபட்டினம்காப்பே. (ச)

மாணிக்குறளுருவாயமாயனை என்மனத்துள்ளே *
பேணிக்கொணர்ந்து புகுதவைத்துக்கொண்டேன்பிறிதின்றி *
மாணிக்கப்பண்டாரம்கண்டீர் வலிவன்குறும்பர்களுள்ளீர் ! *
பாணிக்கவேண்டாநடமின் பண்டன்றுபட்டினம்காப்பே. (ரு)

உற்றவுறுபிணிநோய்காள் ! உமக்குஒன்றுசொல்லுகேன்கேண்மின் *
பெற்றங்கள்மேய்க்கும்பிரானார் பேணும்திருக்கோயில்கண்டீர் *
அற்றமுரைக்கின்றேன் இன்னம்ஆழ்வினைகாள் ! உமக்குஇங்குஓர்
பற்றில்லைகண்டீர்நடமின்* பண்டன்று பட்டினம்காப்பே. (சு)

கொங்கைச்சிறுவரையென்னும் பொதும்பினில்வீழ்ந்துவழுக்கி *
அங்கோர்முழையினில்புக்கிட்டு அழுந்திக்கிடந்துழல்வேனை *
வங்கக்கடல்வண்ணன்அம்மான் வல்வினையாயினமாற்றி *
பங்கப்படாவண்ணம்செய்தான் பண்டன்றுபட்டினம்காப்பே. (எ)

ஏதங்களாயினவெல்லாம் இறங்கலிடுவித்து * என்னுள்ளே
பீதகவாடைப்பிரானார் பிரமகுருவாகிவந்து *
போதில்கமலவன்னெஞ்சம் புகுந்தும்என்சென்னித்திடரில் *
பாதவிலச்சினைவைத்தார் பண்டன்றுபட்டினம்காப்பே. (அ)

❀ உறகலுறகலுறகல் ஒண்சுடராழியே ! சங்கே ! *
அறவெறிநாந்தகவாளே ! அழகியசார்ங்கமே ! தண்டே ! *
இறவுபடாமலிருந்த எண்மர்உலோகபாலீர்காள் ! *
பறவையரையா ! உறகல் பள்ளியறைகுறிக்கொண்மின். (கூ)

❀ அரவத்தமளியினோடும் அழகியபாற்கடலோடும் *
அரவிந்தப்பாவையும்தானும் அகம்படிவந்துபுகுந்து *
பரவைத்திரைபலமோதப் பள்ளிகொள்கின்றபிரானை *
பரவுகின்றான்விட்டுசித்தன் பட்டினம்காவற்பொருட்டே. (க0)

அடிவரவு:—நெய் சித்திரகுத்தன வயிற்றில் மங்கிய மாணி உற்ற கொங்கை ஏதங்கள் உறகல அரவத்து துக்கச்சுழலையை.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.



## ௩ - ஆந் திருமொழி - துக்கச்சுழலையை.



[திருமாலிருஞ்சோலை யெம்பெருமானைப் போகவொட்டே
னென்றுதடுத்தல்.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (ஸஹானாராகம் - அடதாளம்.)

துக்கச்சுழலையைச்சூழ்ந்துகிடந்த வலையை அறப்பறித்து *
புக்கினில்புக்குன்னைக்கண்டுகொண்டேன் இனிப்போகவிடுவதுண்டே?*
மக்களறுவரைக்கல்லிடைமோத இழந்தவள்தன்வயிற்றில் *
சிக்கெனவந்துபிறந்துநின்றாய் ! திருமாலிருஞ்சோலையெந்தாய் ! (௧)

வளைத்துவைத்தேன் இனிப்போகலொட்டேன் உன்தனிந்திரஞாலங்களால் *
ஒளித்திடில்நின் திருவாணைகண்டாய் நீஒருவர்க்குமெய்யனல்லை *
அளித்தெங்கும்நாடும்நகரமும் தம்முடைத்தீவினைதீர்க்கலுற்று *
தெளித்துவலஞ்செய்யும்தீர்த்தமுடைத் திருமாலிருஞ்சோலையெந்தாய்!

உனக்குப்பணிசெய்திருக்குமதவமுடையேன், இனிப்போய்ஒருவன்
தனக்குப்பணிந்து * கடைத்தலைநிற்கை நின்சாயையழிவுகண்டாய் *
புனத்தினைகிள்ளிப்புதுவவிகாட்டி உன்பொன்னடிவாழ்கவென்று *
இனக்குறவர்புதியதுண்ணும் எழில்மாலிருஞ்சோலையெந்தாய் ! (௩)

காதம்பலவும்திரிந்துழன்றேற்கு அங்கோர்நிழலில்லைநீருமில்லை * உன்
பாதநிழலல்லால்மற்றோருயிர்ப்பிடம் நான்எங்கும்காண்கின்றிலேன் *
தூதுசென்றாய்! குருபாண்டவர்க்காய் அங்கோர்பொய்ச்சுற்றம்பேசிச்சென்று *
பேதஞ்செய்தெங்கும்பிணம்படுத்தாய்! திருமாலிருஞ்சோலையெந்தாய்!

காலுமெழாகண்ணநீரும்நில்லா உடல்சோர்ந்துநடுங்கி * குரல்
மேலுமெழாமயிர்க்கூச்சுமறா எனதோள்களும்வீழ்வொழியா *
மாலுகளாநிற்கும்என்மனனே! உன்னைவாழத்தலைப்பெய்திட்டேன் *
சேலுகளாநிற்கும்நீள்சுனைசூழ் திருமாலிருஞ்சோலையெந்தாய் ! (௫)

எருத்துக்கொடியுடையானும் பிரமனும்இந்திரனும் * மற்றும்
ஒருத்தரும்இப்பிறவியென்னும்நோய்க்கு மருந்தறிவாருமில்லை *
மருத்துவனாய்நின்றமாமணிவண்ணா! மறுபிறவிதவிரத்
திருத்தி*உன்கோயிற்கடைப்புகப்பெய் திருமாலிருஞ்சோலையெந்தாய்!(௬)

அக்கரையென்னுமனத்தக்கடலுளழுந்தி உன்பேரருளால் *
இக்கரையேறியிளைத்திருந்தேனை அஞ்சேலென்றுகைகவியாய் *
சக்கரமும்தடக்கைகளும் கண்களும்பீதகவாடையொடும் *
செக்கர்நிறத்துச்சிவப்புடையாய் ! திருமாலிருஞ்சோலையெந்தாய்! (௭)

எத்தனைகாலமும்எத்தனையூழியும் இன்றொடுநாளையென்றே *
இத்தனைகாலமும்போய்க்கிறிப்பட்டேன்இனிஉன்னைப்போகலொட்டேன் *
மைத்துனன்மார்களைவாழ்வித்து மாற்றலர்நூற்றுவரைக்கெடுத்தாய்! *
சித்தமநின்பாலதறிதியன்றே திருமாலிருஞ்சோலையெந்தாய்! (அ)

அன்றுவயிற்றில்கிடந்திருந்தே அடிமைசெய்யலுற்றிருப்பன் *
இன்றுவந்துஇங்குஉன்னைக்கண்டுகொண்டேன் இனிப்போகவிடுவதுண்டே? *
சென்றங்குவாணனை ஆயிரந்தோளும் திருச்சக்கரமதனால் *
தென்றித்திசைதிசைவீழச்செற்றாய்! திருமாலிருஞ்சோலையெந்தாய்!

சென்றுலகங்குடைந்தாடும்சுனைத் திருமாலிருஞ்சோலைதன்னுள்
நின்றபிரான் * அடிமேல்அடிமைத்திறம் நேர்படவிண்ணப்பஞ்செய் *
பொன்திகழ்மாடம்பொலிந்துதோன்றும் புதுவைக்கோன்விட்டுசித்தன் *
ஒன்றினோடொன்பதும்பாடவல்லார் உலகமளந்தான்தமரே. (க0)

அடிவரவு:—துக்கச்சுழலையை வளைத்து உனக்கு காதம் காலும் எருது அக்கரை எத்தனை அன்று சென்று சென்னி.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.



## †ச - ஆந் திருமொழி - சென்னியோங்கு.



[எம்பெருமான் தமது திருவுள்ளத்திற் புகுந்தமையால் ஆழ்வார் தாம் பெற்ற நன்மைகளைக் கூறி உகத்தல்.]

‡ அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (ஸ்ரீராகம் - திரிபுடைதாளம்.)

சென்னியோங்கு தண்திருவேங்கடமுடையாய்! * உலகு
தன்னைவாழநின்றநம்பீ! தாமோதரா! சதிரா! *
என்னையுமென்னுடைமையையும் உன்சக்கரப்பொறியொற்றிக்கொண்டு *
நின்னருளேபுரிந்திருந்தேன் இனிஎன்திருக்குறிப்பே? (க)

பறவையேறுபரம்புருடா! நீஎன்னைக்கைக்கொண்டபின் *
பிறவியென்னும்கடலும்வற்றிப் பெரும்பதமாகின்றதால் *
இறவுசெய்யும்பாவக்காடு தீக்கொளீஇவேகின்றதால் *
அறிவையென்னும்அமுதவாறு தலைப்பற்றிவாய்க்கொண்டதே. (உ)

எம்மனா! என்குலதெய்வமே! என்னுடையநாயகனே! *
நின்னுளேனாய்ப்பெற்றநன்மை இவ்வுலகினில்ஆர்பெறுவார்? *
நம்மன§போலேவீழ்த்தமுக்கும் நாட்டிலுள்ளபாவமெல்லாம் *
சும்மெனாதேகைவிட்டோடித் தூறுகள்பாய்ந்தனவே. (ங)

† இது,நித்யாநுஸந்தாநம்.

‡ 'இப்பாசுரங்களைக் கலிநிலைத்துறையாகவும் அலகிடலாம்.

§ 'போல' என்பதும் பாடம்.

கடல்கடைந்துஅமுதம்கொண்டு கலசத்தைநிறைத்தாற்போல் *
உடலுருகிவாய்திறந்து மடுத்துஉன்னைநிறைத்துக்கொண்டேன் *
கொடுமைசெய்யும்கூற்றமும் என்கோலாடிகுறுகப்பெறா *
தடவரைத்தோள்சக்கரபாணீ! சார்ங்கவிற்சேவகனே! (ச)

பொன்னைக்கொண்டுஉரைகல்மீதே நிறமெழவுரைத்தாற்போல் *
உன்னைக்கொண்டுஎன்நாவகம்பால் மாற்றின்றிஉரைத்துக்கொண்டேன் *
உன்னைக்கொண்டுஎன்னுள்வைத்தேன் என்னையும்உன்னிலிட்டேன் *
என்னப்பா! என்னிருடீகேசா! என்னுயிர்க்காவலனே! (ரு)

உன்னுடையவிக்கிரமம் ஒன்றொழியாமல்எல்லாம் *
என்னுடையநெஞ்சகம்பால் சுவர்வழிஎழுதிக்கொண்டேன் *
மன்னடங்கமழுவலங்கைக்கொண்ட இராமநம்பீ! *
என்னிடைவந்துஎம்பெருமான்! இனியெங்குப்போகின்றதே? (சு)

பருப்பதத்துக்கயல்பொறித்த பாண்டியர்குலபதிபோல் *
திருப்பொலிந்தசேவடி என்சென்னியின்மேல்பொறித்தாய் *
மருப்பொசித்தாய்!மல்லடர்த்தாய்! என்றென்றுஉன்வாசகமே *
உருப்பொலிந்தநாவினேனை உனக்குஉரித்தாக்கினையே. (எ)

அனந்தன்பாலும்கருடன்பாலும் ஐதுநொய்தாகவைத்து * என்
மனந்தனுள்ளேவந்துவைகி வாழச்செய்தாய்எம்பிரான்! *
நினைந்துஎன்னுள்ளேநின்றுநெக்குக் கண்கள்அசும்பொழுக *
நினைந்திருந்தேசிரமம்தீர்ந்தேன் நேமிநெடியவனே! (அ)

பனிக்கடலில்பள்ளிகோளைப் பழகவிட்டு * ஓடிவந்துஎன்
மனக்கடலில்வாழவல்ல மாயமணாளநம்பீ! *
தனிக்கடலேதனிச்சுடரே தனியுலகேஎன்றென்று *
உனக்கிடமாயிருக்க என்னைஉனக்குஉரித்தாக்கினையே. (கூ)

தடவரைவாய்மிளிர்ந்துமின்னும் தவளநெடுங் † கொடிபோல் *
சுடரொளியாய்நெஞ்சினுள்ளே தோன்றும்என்சோதிநம்பி! *
வடதடமும்வைகுந்தமும் மதிள்துவராபதியும் *
இடவகைகள்இகழ்ந்திட்டு என்பால்இடவகைகொண்டனையே. (க0)

வேயர்தங்கள்குலத்துதித்த விட்டுசித்தன்மனத்தே *
கோயில்கொண்டகோவலனைக் கொழுங்குளிர்முகில்வண்ணனை *
ஆயரேற்றைஅமரர்கோவை அந்தணர்தம்அமுதத்தினை *
சாயைபோலப்பாடவல்லார்தாமும் அணுக்கர்களே. (கக)

அடிவரவு:—சென்னி பறவை எம்மனா கடல் பொன்னை உன பருப்பதம் அனந்தன் பனி தடவரை வேயா மாகழி.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.

பெரியாழ்வார் திருமொழி ஸம்பூர்ணம்.

† 'கொடிப்போல்' என்று வழங்குவர்.

ஸ்ரீ

# ஆண்டாள் வைபவம்.

കൎക്കടേപൂൎവ്വഫല്ഗുന്യാം തുളസീകാനനോൽഭവാം ।
പാംഡ്യേവിശ്വംഭരാംഗോദാം വംദേശ്രീരംഗനായകീം ॥

కర్కటేపూర్వఫల్గున్యాం తులసీకాననోద్భవాం ।
పాండ్యేవిశ్వంభరాంగోదాం వందేశ్రీరంగనాయకీం ॥

கர்க்கடேபூர்வபல்குந்யாம் துளஸீகாநநோத்பவாம் -
பாண்ட்யேவிஸ்வம்பராம்கோதாம் வந்தேஸ்ரீரங்கநாயகீம்.

ஆண்டாள், ஸ்ரீவில்லிபுத்தூரில் நந்தவநத்தில் துளசிமலரில், கலி - ௯௮ ஆவதான நள௵ ஆடி௴ சுக்லபக்ஷம் சதுர்த்தசி செவ்வாய்க்கிழமை கூடின பூரநக்ஷத்திரத்தில், பூமிப்பிராட்டியாரம்சையாய், அயோநிஜையாய்த் திருவவதரித்தருளினாள்.

முன்பு திரேதாயுகத்திலே விதேகதேசத்தில் மிதிலாபட்டணத்தில் ஜநகமகாராஜன் யாகசாலையமைத்தற்பொருட்டுக் கலப்பைகொண்டு பூமியையுழுகையில் அவ்வுழுபடைச்சாலிலே ஸ்ரீதேவியின் அம்சமான ஒருமகள் தோன்ற, அவளை அவ்வரசன் தன் புத்திரியாகப் பாவித்துச் சீதையென்று திருநாமஞ் சாத்தி வளர்த்துவந்தான், அதுபோலவே, பின்பு கலியுகத்திலே பாண்டியநாட்டில் ஸ்ரீவில்லிபுத்தூரிலே பெரியாழ்வார் திருத்துழாய்ப்பாத்தி யமைத்தற்பொருட்டுக் களைக்கொட்டுக்கொண்டு திருநந்தவனத்தைக்கொத்துகையில் அக்கொத்தினநிலத்தில் ஸ்ரீதேவிபூதேவிகளின்அம்சமான ஒருமகள்ஆடிமாசத்துப் பூர்வபல்குநிநாளிலே தோன்ற, அவளை அவ்வாழ்வார் தம் தமகளாகப்பாவித்து ‘கோதை’ என்று நாமகரணஞ்செய்து வளர்க்கலானார். நிகரபபடும்பொருளொருசிறிது மில்லாத வறியவனொருவன் பெருநிதியைக்கண்டாற்போல அப்பெண்ணருங்கலத்தைக்கண்டவளவில் பெருங்களிப்புக்கொண்டு மிக அருமையாகச்சீராட்டிப் பாராட்டித் தாலாட்டிப் பாலூட்டிப்பாலித்துவந்த பட்டர்பிரான் அவளுக்குப் பஞ்சஸம்ஸ்காரங்களைச் செய்து பரமஞானத்தைப் போதித்தனர்.

தந்தை முதலியோர் கண்டு வியக்கும்படி இளமைதொடங்கி எம்பெருமானிடத்திலே பத்திபெருவேட்கைகொண்டு அவனையே தான் மணஞ்செய்துகொள்ளக்கருதி, அப்பிரானதுமகிமைகளையே எப்பொழுதும் சிந்தித்தல் துதித்தல்முதலியன செய்துநிற்கிற அச்சுரிகுழற்கோதை, நாடோறும் விஷ்ணுசித்தர் வடபெருங்கோயிலுடையானுக்குச் சாத்துதற்காகக் கட்டிவைத்த திருமாலையை அவரில்லாத சமயம் பார்த்து எடுத்துத் தான் குழலிலே தரித்துக்கொண்டு, ‘அப்பெருமானுக்கு நான் நேரொத்திருக்கின்றேனோ? இல்லையோ?’ என்றுசிறந்தஆபரணங்களையணிந்து உயர்ந்தபட்டாடையையுடுத்துத் தன்னையலங்கரித்து அவ்வொப்பனையழகைக் கண்ணாடியிலேகண்டு தந்தையார் வரு

தற்குமுன் மலர்மாலையைக்களைந்து முன்போலவே செண்டாகச்சுற்றிப் பூங்கூடையினுள்ளே நலங்காமல் வைத்துவந்தாள். இரகசியமாகநடக்கிற அச்செயதியை உணராமல் ஆழ்வார் அம்மாலையைக்கொண்டுபோய்ச் சுவாமிக்குச்சாத்திவர, பெருமானும் பரீதியுடன் ஏற்றருளினன. இங்ஙனம் பலநாள்கழிந்தபின் ஒருநாள், வெளியிற்சென்ற ஆழ்வார் விரைவில மீண்டுவந்தபொழுது, பூமாலையைக் கோதை சூடியிருத்தலைப் பார்த்துக் கோபங்கொண்டு, 'பெண்ணே! நீ செய்த இது மிக்க அபசாரமான காரியம்; இனி இவ்வாறு செய்தற்கு நினைப்புங்கொள்ளாதே' என்று நங்கைக்கு நற்புத்திசொல்லிவிட்டு அன்று வடபத்திரசாயிக்கு மாலைசாத்தாமல், திருப்பணிக்கு முட்டுப்பாடு நேர்ந்ததற்கு மனம் வருந்தியிருந்தார். அற்றைநாளிரவில ஆலிலைத்துயில்வோன ஆழ்வார்துகனவிலே தோன்றி 'இன்று நீ நமக்கு மாலை கொணடுவாராதிருந்தது என?' என்று வினவியதற்கு, அவர் தமதிருமகளாரது பொருந்தாச செய்கையை விண்ணப்பஞ்செய்ய, அதுகேட்டு அப்பெருமான 'அவள் சூடிக்கொடுத்த மாலையேகாண் நறுமணமமிக்கு நமதுஉள்ளத்துக்கு நனிஉகப்பாவது; ஆதலின, இனி அத்தன்மைத்தான தொடையலையே நமக்குக் கொண்டுவருவாய்' என்றுஅருளிச்செய்தனன். உடனே கண்விழித்த விஷ்ணுசித்தர் அம்மங்கையை மலாமங்கையென்றே எண்ணி அவள்திறத்து அளவிலன்பு கொண்டு அனைத்துலகத்துக்கும் அன்னையாய் அவற்றை ஆண்டுவருகின்ற இலக்குமியின் அவதாரவிசேஷமென்றகாரணத்தால், அவளுக்கு 'ஆண்டாள்' என்றும், மாதவனுக்கு உரிய மலர்மாலையைத் தான சூடிக்கொண்டு பார்த்துப் பின்பு கொடுத்தது காரணமாக 'சூடிக்கொடுத்த நாச்சியார்' என்றும் திருப்பெயரிட்டு அழைத்துவந்தார்.

அந்நாச்சியார் தனதுபருவம் வளருந்தோறும ஞானபக்திகளும உடன வளர்ந்துவரப்பெற்று, தனக்கு ஏற்ற காதலனாகக் கருதிய கடல்வண்ணன விஷயமான வேட்கை விஞ்சியவளாகி, இனி அவனை ஒருகணப்பொழுதுங் கூடாதிருக்கப் பொறாமல், கண்ணனது பிரிவை யாற்றாத கோபஸ்திரீகள போலத் தானும் நோன்புநோற்று உயிர்தரிப்பவளாய், அவ்வபிப்பிராயத்தைத் 'திருப்பாவை', 'நாச்சியார் திருமொழி' என்ற திவ்வியப்பிரபந்தங்களின் மூலமாகப் பகவத்ஸந்நிதியிலே விண்ணப்பஞ்செய்து வாழ்ந்திருந்தாள்.

இப்படியிருக்கையில் இவட்கு விவாகத்துக்கு ஏற்ற பருவம் வந்ததைக் கண்டு தந்தையார் இவளுக்கு ஏற்ற கொழுநனைக் காணப்பெறாது கவலைப்பட்டு இவளையழைத்து 'நீ யாருக்கு வாழ்க்கைப்பட விரும்புகின்றாய்?' என்று வினவ, ஆண்டாள் "மானிடவர்க்கென்றுபேசுப்படில் வாழகில்லேன்" என்று சொல்ல, பட்டர்பிரான 'பின்னை எங்ஙனம் நிகழ்வது?' என்றுகேட்க, சூடிக்கொடுத்தாள் 'பெருமாளுக்கே உரியவளாக விருக்கின்றேன' என்று கட்டுரைத்தாள். அதுகேட்டு விஷ்ணுசித்தர் 'நூற்றெட்டுத் திருப்பதிகளிலுள்ள எம்பெருமான்களுள் யாருக்கு வாழ்க்கைத்துணைவியாகத்துணிகிறாய்?' என்று வினாவித்தலும், கோதை 'அவ்வப்பெருமானகளுடையவைபவத்தை விளங்க எடுத்துக்கூறியருளவேண்டும்' என வேண்ட, ஆழ்வாரும் அவ்வாறே எடுத்து அருளிச்செய்து வருகையில், ஆண்டாள் வடமதுரையில் எழுந்தருளியுள்ள

கண்ணபிரானது வரலாற்றைக் கேட்டவளவிலே மயிர்சசிலிர்ப்பும், திருவேங்கடமுடையானது வரன்முறையைச் செவிபுற்றபொழுது முகமலர்ச்சியும், திருமாலிருஞ்சோலைமலையழகரது வடிவழகை அறிந்தமாத்திரத்தில் மனமகிழ்ச்சியும் பெற்று ஸ்ரீரங்கநாதனது மகிமை செவிபபட்டவுடனே அளவற்ற ஆனநத மடைந்து நிற்க, அபபொழுது அந்தந்தத திருபபதியெம்பெருமானகளெல்லாரும இவளதுசுயமவரத்தை யுததேசித்து ஸ்ரீவில்லிபுத்தூரக்கு எழுநதருளி இவளது ஞானக்கண்ணுக்கு விஷயமாக, இவள் அவர்களுள் ரங்கநாதனிடத்தே மனத்தைச செலுத்தி அவனுககே தனனை மணமகளாக நிசசயிததுஅவ்வமலனையே சாவகாலமும் சிந்திததிருந்தாள்.

அதனையறிந்து ஆழ்வார் 'நம்பெருமாள் இவளைக் கடிமணம் புரிதல் கைகூடுமோ?' என்று சிநதாககிராநதராயிருககையில், திருவரஙகசசெல்வன் இவருடைய சொப்பனத்திலே யெழுநதருளி 'உமது திருமகளைக் கோயிலுக்கு அழைத்துககொண்டுவாரும; அவளை யாம் அங்கீகரிப்போம்' என்று அருளிச்செய்ய, அதனால், விஷ்ணுசித்தா வியாகுலம் நீங்கி மனமகிழ்நதிருநதனா. பின்பு, ஸ்ரீரஙகநாதன் ஸ்தாநிகா முதலிய கோயிற்பரிசனங்களுடைய கனவிலே தோன்றி 'நீஙகள் சகலமஙகளவாத்தியங்களோடும சத்திரசாமராதிகளோடும் நமது நவரத்தினப்பல்லக்கையும் உடனகொண்டு வில்லிபுத்தூரக்குச் சென்று ஆணடாளைப பல்லககிலேற்றி அழைத்துவாருங்கள்' என்று கட்டளையிட்டான். அவ்வாறே எல்லாப பரிகரத்தாரும் சென்று பெரியாழ்வாரையடுதது நம்பெருமாளது அருளபபாட்டை விண்ணபபஞ்செயய, காணுமிருதமான அவ்வார்த்தையைச் செவியாரககேட்டுச் சந்தோஷித்து, கோதைதாதை, வடபெருங்கோயிலுடையான் சன்னிதியிலே அழகியமணவாளனது நியமனததை விண்ணப்பஞ் செய்து அநுமதிபெற்றுப் பிரயாணமாயினா.

அச்செய்தியைக் கேள்வியுற்று ஸ்ரீவல்லபதேவன் அக்கலியாண மகோத்ஸவததைத தானும் உடனிருநது விசேஷமாகநடத்திக் கண்டு களிகூாந்து கிருதார்த்தனாகக் கருதி, தனஏவலாளரைககொண்டு ஸ்ரீவிலலிபுததூரையும், ஸ்ரீரஙகநகரததையும், இவ்விரண்டுக்கும்நடுவிலுள்ளநெடுவழியையும் தண்ணீர்தெளித்தும் பூம்பந்தரிட்டும் தோரணங்கட்டியும் வாழை கமுகு நாட்டியும் நன்றாக அலஙகரிப்பித்துக கசதுரஙகாதி சதுரங்கபலத்துடனே ஆழ்வார்பக்கல் வநது சேர்நதான்.

அபபால பட்டர்பிரான் ஆண்டாளை மணிச்சிவிகையில் எழுந்தருளப் பண்ணி மஙகலவாத்திய கோஷத்துடனே 'ஆண்டாள் வந்தாள்', 'சூடிக்கொடுத்த சுடாககொடி வந்தாள்', 'சுரும்பாருகுழற்கோதை வந்தாள்', 'திருப்பாவைபாடிய செல்வி வந்தாள்', 'பட்டர்பிரான் புதல்வி வந்தாள்,' 'வேயர்குல விளக்கு வந்தாள்' என்று பல சின்னங்கள் பணிமாற, மெய்காப்பாளர் உடன் சூழ்ந்துநிற்க, தாமும் அரசனுமாக இருபுறத்தும் இடைவிடாதிருந்து அழைத்து வந்து திருவரங்கம்பெரியகோயிலை யடைந்து பெரியபெருமாளுடைய முன் மண்டபத்திலே அப்பிராட்டியை நிறுத்திப் பெருமாளைச் சேவிக்கப் பண்ணுவிக்கையில், அத்திருமாலின் திவ்விய சௌந்தரியம் இரும்பைக் காந்தம் இழுக்

கின்றவாறுபோல ஆண்டாளைக் கவரதடொடங்கியதனால் சூடிக்கொடுத்தநாச்சியார் சிலம்பார்க்கச் சீரார்வளையொலிபபக் கொடியேரிடையாடக காதளவும் ஓடிக் கயல்போல் மிளிருங் கடைக்கண் பிறழ அனனமெனனடைகொண்டு அருகிற்சென்று ஆனந்தககடலிலாழ்ந்து திருவரங்கன திருவடிவருடக் கருதி நாகப்பர்யங்கத்தை மிதித்தேறி நம்பெருமாளது திருமேனியிலே அந்தாபபவித்து அவனை என்றும் பிரியாதிருப்பவளாயினள்.

அவ்வண்ணம் அரும்பேறுபெற்றதைத் தரிசித்து ஆழ்வாரும் அவர்சிஷ்யரான வல்லபதேவனுள்ளிட்டாரும் யாவரும் அதிசயிததுநிற்கையில், திருவரங்கமுடையான் அர்ச்சகமுகமாக ஆழ்வாரை அருகி லழைத்து 'க்ஷீரசமுத்திரராஜன் போல நீரும் நமக்கு மாமனாராய்விட்டீர்' எனறு முகமன் கூறித் தமது தீர்த்தம் திருப்பரியட்டம் மாலை ஸ்ரீசடகோபன் முதலியவற்றைப பிரசாதித்து 'வில்லிபுத்தூருறைவானுக்கே தொண்டுபூண்டிரும்' என்று திருவாய் மலர்ந்து விடைகொடுத்தருளினன். அநநதரம் ஆழ்வார்

"ஒருமகள்தன்னையுடையேன்உலகம்நிறைந்தபுகழால்
திருமகள்போலவளர்த்தேன்செங்கண்மால்தான்கொண்டுபோனான்
பெருமகளாய்க்குடிவாழ்நதுபெரும்பிள்ளைபெற்றவசோதை
மருமகளைக்கண்டுகந்துமணாட்டுப்புறஞ்செய்யுங்கொலோ? "

என்று போர உகந்து அரிதிற்பிரிந்து ஸ்ரீவில்லிபுத்தூர்க்குச்சென்று முன்போலவே கைங்கர்யநிரதராய்ச் சண்பகம் மல்லிகை பாதிரி செங்கழுநீர் புன்னை குருக்கத்தி இருவாட்சி முதலிய பல மலர்களுடன ஆர்வமென்பதோர் பூவையும் இட்டுக்கொண்டு எண்பத்தைந்து வருஷகாலம் வாழ்ந்திருந்து பேரானந்தப்பெரும்பத மடைந்தனர்.

திருவாடிப்பூரத்துச் செகத்துதித்தாள் வாழியே
திருப்பாவைமுப்பதும் செப்பினாள் வாழியே
பெரியாழ்வார்பெற்றெடுத்த பெண்பிள்ளை வாழியே
பெரும்பூதூர்மாமுனிக்குப் பின்னானாள் வாழியே
ஒருநூற்றுநாற்பத்துமூன்றுரைத்தாள் வாழியே
உயரரங்கர்க்கே கண்ணி உகந்தளித்தாள் வாழியே
மருவாரும் திருமல்லி வளநாடி வாழியே
வண்புதுவைநகர்க்கோதை மலர்ப்பதங்கள் வாழியே.

---



ஸ்ரீ ஆண்டாள்.

ஸ்ரீ

## ஆண்டாள் அருளிச்செய்த

# திருப்பாவை.

---

### ஆண்டாள் தனியன்கள்.

(ஸ்ரீ பராசரபட்டர் அருளிச்செய்தது.)

𑌨𑍀𑌳𑌾𑌤𑍁𑌙𑍍𑌗𑌸𑍍𑌤𑌨𑌗𑌿𑌰𑌿𑌤𑌟𑍀𑌸𑍁𑌪𑍍𑌤𑌮𑍁𑌦𑍍𑌬𑍋𑌧𑍍𑌯𑌕𑍃𑌷𑍍𑌣𑌂
𑌪𑌾𑌰𑌾𑌰𑍍𑌥𑍍𑌯𑌂𑌸𑍍𑌵𑌂𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌶𑌤𑌶𑌿𑌰𑌸𑍍𑌸𑌿𑌦𑍍𑌧𑌮𑌧𑍍𑌯𑌾𑌪𑌯𑌨𑍍𑌤𑍀 ।
𑌸𑍍𑌵𑍋𑌚𑍍𑌛𑌿𑌷𑍍𑌟𑌾𑌯𑌾𑌂𑌸𑍍𑌰𑌜𑌿𑌨𑌿𑌗𑌳𑌿𑌤𑌂𑌯𑌾𑌬𑌲𑌾𑌤𑍍𑌕𑍃𑌤𑍍𑌯𑌭𑍁𑌙𑍍𑌕𑍍𑌤𑍇
𑌗𑍋𑌦𑌾𑌤𑌸𑍍𑌯𑍈𑌨𑌮𑌇𑌦𑌮𑌿𑌦𑌂𑌭𑍂𑌯𑌏𑌵𑌾𑌸𑍍𑌤𑍁𑌭𑍂𑌯𑌃 ॥

నీళాతుంగస్తనగిరితటీ సుప్తముద్బోధ్యకృష్ణం
పారార్థ్యంస్వం శ్రుతిశతశిరస్సిద్ధమధ్యాపయంతీ ।
స్వోచ్ఛిష్టాయాం స్రజినిగళితం యాబలాత్కృత్యభుంక్తే
గోదాతస్యైనమఇదమిదం భూయ ఏవాస్తుభూయః ॥

நீளாதுங்கஸ்தநகிரிதடீஸுப்தமுத்போத்யக்ருஷ்ணம்
பாரார்த்யம்ஸ்வம்ஶ்ருதிஶதஶிரஸ்ஸித்தமத்யாபயந்தீ—
ஸ்வோச்சிஷ்டாயாம்ஸ்ரஜிநிகளிதம்யாபலாத்க்ருத்யபுங்க்தே
கோதாதஸ்யைநமஇதமிதம்பூயஏவாஸ்துபூய:.

(உய்யக்கொண்டார் அருளிச்செய்தவை.)

இருவிகற்பநேரிசை வெண்பா

அன்னவயல்புதுவையாண்டாள் * அரங்கற்குப்
பன்னுதிருப்பாவைப்பல்பதியம் * —இன்னிசையால்
பாடிக்கொடுத்தாள் நற்பாமாலை * பூமாலை
சூடிக்கொடுத்தாளைச்சொல்லு.

சூடிக்கொடுத்தசுடர்க்கொடியே! தொல்பாவை *
பாடியருளவல்லபல்வளையாய்! *—நாடிநீ
வேங்கடவற்கென்னைவிதியென்றவிம்மாற்றம் *
நாம்கடவாவண்ணமேநல்கு.

---

## எட்டடிநாற்சீர் ஒருவிகற்பக் கொச்சகக்கலிப்பா.

(பிலஹரிராகம்-அடதாளம்.)

மார்கழித்திங்கள் மதிநிறைந்தநன்னாளால் *
நீராடப்போதுவீர் ! போதுமினோநேரிழையீர் ! *
சீர்மல்குமாய்ப்பாடிச் செல்வச்சிறுமீர்காள் ! *
கூர்வேல்கொடுந்தொழிலன் நந்தகோபன்குமரன் *
ஏரார்ந்தகண்ணி யசோதையிளஞ்சிங்கம் *
கார்மேனிச்செங்கண் கதிர்மதியம்போல்முகத்தான் *
நாராயணனே நமக்கேபறைதருவான *
பாரோர்புகழப் படிந்தேலோரெம்பாவாய். (க)

(பந்துவராளிராகம் - ஆதிதாளம்.)

வையத்துவாழ்வீர்காள் ! நாமும்நம்பாவைக்கு *
செய்யுங்கிரிசைகள் கேளீரோ * பாற்கடலுள்
பையத்துயின்ற பரமனடிபாடி *
நெய்யுண்ணோம்பாலுண்ணோம் நாட்காலேநீராடி *
மையிட்டெழுதோம் மலரிட்டுநாமுடியோம் *
செய்யாதனசெய்யோம் தீக்குறளைசென்றோதோம் *
ஐயமும்பிச்சையும் ஆந்தனையும்கைகாட்டி *
உய்யுமாறெண்ணி உகந்தேலோரெம்பாவாய். (உ)

(பந்துவராளிராகம் - திரிபுடைதாளம்.)

ஓங்கியுலகளந்த உத்தமன்பேர்பாடி *
நாங்கள்நம்பாவைக்குச் சாற்றிநீராடினால் *
தீங்கின்றிநாடெல்லாம் திங்கள்மும்மாரிபெய்து *
ஓங்குபெருஞ்செந்நெ லூடுகயலுகள *
பூங்குவளைப்போதில் பொறிவண்டுகண்படுப்ப *
தேங்காதேபுக்கிருந்து சீர்த்தமுலைபற்றி
வாங்க * குடம்நிறைக்கும் வள்ளல்பெரும்பசுக்கள் *
நீங்காதசெல்வம் நிறைந்தேலோரெம்பாவாய். (ந)

(காம்போதிராகம் - அடதாளம்.)

ஆழிமழைக்கண்ணா ! ஒன்றுநீகைகரவேல் *
ஆழியுள்புக்கு முகந்துகொடார்த்தேறி *
ஊழிமுதல்வ னுருவம்போல்மெய்கறுத்து *
பாழியந்தோளுடைப் பற்பநாபன்கையில் *

ஆழிபோல்மின்னி வலம்புரிபோல்நின்றதிர்ந்து *
தாழாதேசார்ங்கமுதைத்த சரமழைபோல் *
வாழஉலகினில்பெய்திடாய் * நாங்களும்
மார்கழிநீராட மகிழ்ந்தேலோரெம்பாவாய். (ச)

(தோடிராகம் - ரூபகதாளம்.)

மாயனை மன்னுவடமதுரைமைந்தனை *
தூயபெருநீர் யமுனைத்துறைவனை *
ஆயர்குலத்தினில் தோன்றும்அணிவிளக்கை *
தாயைக்குடல்விளக்கம்செய்த தாமோதரனை *
தூயோமாய்வந்துநாம் தூமலர்தூவித்தொழுது *
வாயினால்பாடி மனத்தினால்சிந்திக்க *
போயபிழையும் புகுதருவான்நின்றனவும் *
தீயினில்தூசாகும் செப்பேலோரெம்பாவாய். (ரு)

(பூபாளராகம் - ஆதிதாளம் )

புள்ளும்சிலம்பினகாண் புள்ளரையன் † கோயில் *
வெள்ளைவிளிசங்கின் பேரரவம்கேட்டிலையோ ? *
பிள்ளாய் ! எழுந்திராய் பேய்முலைநஞ்சுண்டு *
கள்ளச்சகடம் கலக்கழியக்காலோச்சி *
வெள்ளத்தரவில் துயிலமர்ந்தவித்தினை *
உள்ளத்துக்கொண்டு முனிவர்களும்யோகிகளும் *
மெள்ளஎழுந்து அரியென்றபேரரவம் *
உள்ளம்புகுந்து குளிர்ந்தேலோரெம்பாவாய். (சு)

(பூபாளராகம் - ரூபகதாளம் .)

கீசுகீசென்றெங்கும் ஆனைச்சாத்தன் * கலந்து
பேசினபேச்சரவம் கேட்டிலையோ ? பேய்ப்பெண்ணே ! *
காசும்பிறப்பும் கலகலப்பக்கைபேர்த்து *
வாசநறுங்குழலாய்ச்சியர் * மத்தினால்
ஓசைபடுத்த தயிரரவம்கேட்டிலையோ ? *
நாயகப்பெண்பிள்ளாய் ! நாராயணன்மூர்த்தி *
கேசவனைப்பாடவும் நீகேட்டேகிடத்தியோ ? *
தேசமுடையாய் ! திறவேலோரெம்பாவாய். (எ)

---

† 'கோயிலில்' என்பதும் பாடம்.

(பூபாளராகம் - ஆதிதாளம்.)

கீழ்வானம்வெள்ளென்று எருமைசிறுவீடு *
மேய்வான்பரந்தனகாண் மிக்குள்ளபிள்ளைகளும் *
போவான்போகின்றாரைப் போகாமல்காத்து * உன்னைக்
கூவுவான் வந்துநின்றோம் * கோதுகலமுடைய
பாவாய் ! எழுந்திராய் பாடிப்பறைகொண்டு *
மாவாய்பிளந்தானை மல்லரைமாட்டிய *
தேவாதிதேவனைச் சென்றுநாம்சேவித்தால் *
ஆவாவென்றாராய்ந் தருளேலோரெம்பாவாய். (அ)

(மோஹநராகம் - ஆதிதாளம் .)

தூமணிமாடத்துச் சுற்றும்விளக்கெரிய *
தூபம்கமழத் துயிலணைமேல்கண்வளரும் *
மாமான்மகளே ! மணிக்கதவம்தாள்திறவாய் *
மாமீர் ! அவளையெழுப்பீரோ ? * † உன்மகள்தான்
ஊமையோ ? அன்றிச்செவிடோ ? அனந்தலோ ? *
ஏமப்பெருந்துயில் மந்திரப்பட்டாளோ ? *
மாமாயன்மாதவன் வைகுந்தனென்றென்று *
நாமம்பலவும் நவின்றேலோரெம்பாவாய். (கூ)

(அஸாவேரிராகம் - ஆதிதாளம்.)

நோற்றுச்சுவர்க்கம் புகுகின்றஅம்மனாய் ! *
மாற்றமும்தாராரோ ? வாசல்திறவாதார் *
நாற்றத்துழாய்முடி நாராயணன் * நம்மால்
போற்றப்பறைதரும் புண்ணியனால் * பண்டொருநாள்
கூற்றத்தின்வாய்வீழ்ந்த கும்பகரணனும் *
தோற்றும்உனக்கே பெருந்துயில்தான்தந்தானோ ? *
ஆற்றஅனந்தலுடையாய் ! அருங்கலமே ! *
தேற்றமாய்வந்து திறவேலோரெம்பாவாய். (கo)

(ஸஹாநா ராகம் - திரிபுடைதாளம்.)

கற்றுக்கறவைக் கணங்கள்பலகறந்து *
செற்றார்திறலழியச் சென்றுசெருச்செய்யும் *
குற்றமொன்றில்லாத கோவலர்தம்பொற்கொடியே ! *
புற்றரவல்குல் புனமயிலே ! போதராய் *

---

† 'உம்மகள்' என்பதும் பாடம்.

சுற்றத்துத்தோழிமா ரெல்லாரும்வந்து * நின்
முற்றம்புகுந்து முகில்வண்ணன்பேர்பாட *
சிற்றாதேபேசாதே செல்வபபெண்டாட்டி ! * நீ
எற்றுக்குஉறங்கும் பொருளேலோரெமபாவாய். (கக)

(கேதாரகௌளராகம் - ஆதிதாளம்)

கனைத்திளங்கற்றெருமை கன்றுக்கிரங்கி *
நினைததுமுலைவழியே நின்றுபால்சோர *
நனைததில்லம்சேறாக்கும் நற்செல்வன்தங்காய் ! *
பனித்தலைவீழ நின்வாசற்கடைபற்றி *
சினத்தினால்தென்னிலங்கைக் கோமானைச்செற்ற *
மனத்துக்கினியானைப் பாடவும்நீவாய்திறவாய் *
இனித்தானெழுந்திராய் ஈதென்னபேருறக்கம் ! *
அனைத்தில்லத்தாரும் அறிநதேலோரெம்பாவாய். (கஉ)

(அடாணாராகம்- ரூபகதாளம்)

புள்ளின்வாய்கீண்டானைப் பொல்லாஅரக்கனை *
கிள்ளிக்களைநதானைக் கீர்த்திமைபாடிப்போய் *
பிள்ளைகளெல்லாரும் பாவைக்களம்புக்கார் *
வெள்ளியெழுந்து வியாழ முறங்கிற்று *
புள்ளும்சிலம்பினகாண் போதரிக்கண்ணினாய் ! *
குள்ளக்குளிரக் குடைநதுநீராடாதே *
பள்ளிக்கிடததியோ ? பாவாய் ! நீநன்னாளால் *
கள்ளம்தவிர்நது கலநதேலோரெம்பாவாய். (கந)

(ஸாரங்கராகம் - ஆதிதாளம்.)

உங்கள் † புழைக்கடைத் தோட்டததுவாவியுள் *
செங்கழுநீர்வாய்நெகிழ்நது ஆம்பல்வாய்கூம்பினகாண் *
செங்கல்பொடிக்கூறை வெண்பல்தவத்தவர் *
தங்கள்திருக்கோயில் சங்கிடுவான் ‡ போதந்தார் *
எங்களைமுன்னம் எழுப்புவான்வாய்பேசும் *
நங்காய் ! எழுநதிராய் நாணாதாய் ! நாவுடையாய் ! *
சங்கொடுசக்கரமேந் தும்தடக்கையன் *
பங்கயக்கண்ணானைப் பாடேலோரெம்பாவாய். (கச)

---

† 'புறங்கடை' என்பதும் பாடம். ‡ 'போகின்றார்' என்பது சிலர்பாடம்.

(ஸௌராஷ்ட்ரராகம்-அடதாளம்.)

எல்லே ! இளங்கிளியே ! இன்னமுறங்குதியோ ! *
சில்லென்றழையேன்மின் ! நங்கைமீர் ! போதர்கின்றேன் *
வல்லையுன்கட்டுரைகள் பண்டேயுன்வாயறிதும் *
வல்லீர்கள்நீங்களே நானேதானாயிடுக *
ஒல்லைநீபோதாய் உனக்கென்ன † வேறுடையை *
எல்லாரும்போந்தாரோ ? போந்தார்போந்தெண்ணிக்கொள் *
வல்லானைகொன்றானை மாற்றாரைமாற்றழிக்க
வல்லானை *மாயனைப் பாடேலோரெம்பாவாய். (கரு)

(யமுனாகல்யாணிராகம் - ஆதிதாளம்.)

❀ நாயகனாய்நின்ற நந்தகோபனுடைய
கோயில்காப்பானே ! * கொடித்தோன்றும் தோரண
வாயில்காப்பானே ! *மணிக்கதவம் தாள்திறவாய் *
ஆயர்சிறுமியரோமுக்கு * அறைபறை
மாயன்மணிவண்ணன் நென்னலேவாய்நேர்ந்தான் *
தூயோமாய்வந்தோம் ‡ துயிலெழப்பாடுவான் *
வாயால்முன்னம்முன்னம் மாற்றாதே அம்மா ! *நீ
நேயநிலைக்கதவம் நீக்கேலோரெம்பாவாய். (கசு)

(யமுனாகல்யாணிராகம்-ரூபகதாளம்.)

அம்பரமேதண்ணீரே சோறேஅறஞ்செய்யும் *
எம்பெருமான ! நந்தகோபாலா ! எழுந்திராய் ! *
கொம்பனார்க்கெல்லாம் கொழுந்தே ! குலவிளக்கே ! *
எம்பெருமாட்டி யசோதாய் ! அறிவுறாய் *
அம்பரமூடறுத்தோங்கி உலகளந்த *
உம்பர்கோமானே ! உறங்காதெழுந்திராய் *
செம்பொற்கழலடிச் செல்வா ! பலதேவா ! *
உம்பியும்நீயும் உறங்கேலோரெம்பாவாய். (கஎ)

(ஸாவேரிராகம்- ஆதிதாளம்.)

❀ உந்துமதகளிற்றன் ஓடாததோள்வலியன் *
நந்தகோபாலன்மருமகளே ! நப்பின்னாய் ! *
கந்தம்கமழுங்குழலீ ! கடைதிறவாய் *
வந்தெங்கும் கோழி அழைத்தனகாண் * மாதவிப்

---

† 'வேறுடைமை' என்பதும் பாடம். ‡ 'துயிலெழல்' என்பதும் பாடம்.

பந்தல்மேல் பல்கால்குயிலினங்கள்கூவினகாண் *
பந்தார்விரலி ! உன்மைத்துனன்பேர்பாட *
செந்தாமரைக்கையால் சீரார்வளையொலிப்ப *
வந்துதிறவாய் மகிழ்ந்தேலோரெம்பாவாய். (௧௮)

(ஸ்ரீராகம்-ஆதிதாளம்.)

குத்துவிளக்கெரியக் கோட்டுக்காலகட்டில்மேல் *
மெத்தென்ற பஞ்சசயனத்தின்மேலேறி *
கொத்தலர்பூங்குழல் நப்பின்னைகொங்கைமேல் *
வைத்துக்கிடந்த மலர்மார்பா ! வாய்திறவாய் *
மைத்தடங்கண்ணினாய் ! நீஉன் மணாளனை *
எத்தனைபோதும் துயிலெழவொட்டாய்காண் *
எத்தனையேலும் பிரிவாற்றகில்லாயால் *
தத்துவமன்று தகவேலோரெம்பாவாய். (௧௯)

(தேசிராகம்-ஆதிதாளம்)

முப்பத்துமூவர் அமரர்க்குமுன்சென்று *
கப்பம்தவிர்க்குங்கலியே ! துயிலெழாய் *
செப்பமுடையாய் ! திறலுடையாய் ! * செற்றார்க்கு
வெப்பம்கொடுக்கும் விமலா ! துயிலெழாய் *
செப்பன்னமென்முலை செவ்வாய்சிறுமருங்குல் *
நப்பின்னைநங்காய் ! திருவே ! துயிலெழாய் *
உக்கமும்தட்டொளியும் தந்துஉன்மணாளனை *
இப்போதே எம்மைநீராட்டேலோரெம்பாவாய். (௨௦)

(காம்போதிராகம்-ஆதிதாளம்)

ஏற்றகலங்கள் எதிர்பொங்கிமீதளிப்ப *
மாற்றாதேபால்சொரியும் வள்ளல்பெரும்பசுக்கள் *
ஆற்றப்படைத்தான்மகனே ! அறிவுறாய் *
ஊற்றமுடையாய் ! பெரியாய் ! * உலகினில்
தோற்றமாய்நின்ற சுடரே ! துயிலெழாய் *
மாற்றார்உனக்கு வலிதொலைந்துஉன்வாசற்கண் *
ஆற்றாதுவந்து உன்னடிபணியுமாபோலே *
போற்றியாம்வந்தோம் புகழ்ந்தேலோரெம்பாவாய். (௨௧)

(பைரவிராகம்-ஆதிதாளம்.)

அங்கண்மாஞாலத்தரசர் * அபிமான
பங்கமாய்வந்து நினபள்ளிக்கட்டிற்கீழே *
சங்கமிருப்பார்போல் வந்துதலைப்பெய்தோம் *
கிங்கிணிவாய்ச்செய்த தாமரைப் † பூப்போலே *
செங்கண்சிறுசசிறிதே எம்மேல்விழியாவோ ? *
திங்களும்ஆதித்தியனும் எழுந்தாற்போல் *
அங்கணிரண்டும்கொண்டு எங்கள்மேல்நோக்குதியேல் *
எங்கள்மேல்சாபம் இழிந்தேலோரெம்பாவாய். (உஉ)

(அடாணாராகம்-ஆதிதாளம்.)

மாரிமலைமுழைஞ்சில் மன்னிக்கிடந்துறங்கும் *
சீரியசிங்கம் அறிவுற்றுத்தீவிழித்து *
வேரிமயிர்பொங்க எப்பாடும்பேர்ந்துதறி *
மூரிநிமிர்ந்து முழங்கிப்புறப்பட்டு *
போதருமா ‡ போலே நீபூவைப்பூவண்ணா ! * உன்
கோயில்நின்றும் இங்ஙனேபோந்தருளி * கோப்புடைய
சீரியசிங்காசனத்துஇருந்து *யாம்வந்த
காரியம் ஆராய்ந்தருளேலோரெம்பாவாய். (உ௩)

(பியாகடைராகம்-ஆதிதாளம்.)

அன்றுஇவ்வுலகமஅளந்தாய் ! அடிபோற்றி *
சென்றங்குதென்னிலங்கைசெற்றாய் ! திறல்போற்றி *
பொன்றச்சகடமுதைத்தாய் ! புகழ்போற்றி *
கன்றுகுணிலாஎறிந்தாய் ! கழல்போற்றி *
குன்றுகுடையாஎடுத்தாய் ! குணம்போற்றி *
வென்றுபகைகெடுக்கும் நினகையில்வேல்போற்றி *
என்றென்றுஉன்சேவகமே ஏத்திப்பறைகொள்வான் *
இன்றுயாம்வந்தோம இரங்கேலோரெம்பாவாய். (உ௪)

(சங்கராபரணராகம்-ஆதிதாளம்.)

ஒருத்திமகனாய்ப்பிறந்து * ஓரிரவில்
ஒருத்திமகனாய் ஒளித்துவளர *
தரிக்கிலானாகித் தான்தீங்குநினைந்த *
கருத்தைப்பிழைப்பித்துக் கஞ்சன்வயிற்றில் *

---

† 'பூபபோல' என்றுமாம ‡ 'போல' என்றுமாம்.

நெருப்பென்னநின்ற நெடுமாலே ! * உன்னை
அருத்தித்துவந்தோம் பறைதருதியாகில்
திருத்தக்கசெல்வமும் சேவகமும்யாம்பாடி
வருத்தமும்தீர்ந்து மகிழ்ந்தேலோரெம்பாவாய் (உரு)

(ஆரபிராகம்-ஆதிதாளம்.)

மாலே ! மணிவண்ணா ! மார்கழிநீராடுவான் *
மேலையார் † செய்வனகள் வேண்டுவனகேட்டியேல் *
ஞாலத்தையெல்லாம் நடுங்கமுரல்வன *
பாலன்னவண்ணத்து உன்பாஞ்சசன்னியமே *
போல்வனசங்கங்கள் போய்ப்பாடுடையனவே *
சாலப்பெரும்பறையே பல்லாண்டிசைப்பாரே *
கோலவிளக்கே கொடியேவிதானமே *
ஆலினிலையாய் ! அருளேலோரெம்பாவாய். (உசு)

(ஆநந்தபைரவிராகம்-ஆதிதாளம்.)

❀ கூடாரைவெல்லும்சீர்க் கோவிந்தா ! * உன்தன்னைப்
பாடிப்பறைகொண்டு யாமபெறுசம்மானம் *
நாடுபுகழும் பரிசினால்நன்றாக *
சூடகமேதோள்வளையே தோடேசெவிப்பூவே *
பாடகமேயென்றனைய பல்கலனும்யாமணிவோம் *
ஆடையுடுப்போம அதனபின்னேபாற்சோறு *
மூடநெய்பெய்து முழங்கைவழிவார *
கூடியிருந்து குளிர்ந்தேலோரெம்பாவாய். (உஎ)

(தந்யாசிராகம்-ஆதிதாளம்.)

❀ கறவைகள்பின்சென்று கானமசேர்ந்துண்போம் *
அறிவொன்றுமில்லாத ஆய்க்குலத்து * உன்தன்னைப்
பிறவிபெறுந்தனை புண்ணியம்யாமுடையோம் *
குறைவொன்றுமில்லாத கோவிந்தா ! * உன்தன்னோடு
உறவேல்நமக்கு இங்குஒழிக்கஒழியாது *
அறியாதபிள்ளைகளோம் அன்பினால் * உன்தன்னைச்
சிறுபேரழைத்தனவும் சீறியருளாதே *
இறைவா ! நீதாராய் பறையேலோரெம்பாவாய். (உஅ)

† 'செய்வினைகள்' என்பது சிலர் பாடம்.

(கல்யாணிராகம்-ஆதிதாளம்.)

❀ சிற்றஞ் † சிறுகாலே வந்துஉன்னைச்சேவித்து * உன்
பொற்றாமரையடியே போற்றும்பொருள்கேளாய் *
பெற்றம்மேய்த்துண்ணும் குலத்தில் ‡ பிறந்து * நீ
குற்றேவலெங்களைக் கொள்ளாமல்போகாது *
இற்றைப்பறைகொள்வா னன்றுகாண்கோவிந்தா ! *
எற்றைக்கும் ஏழேழ்பிறவிக்கும் * உன்தன்னோடு
உற்றோமேயாவோம் உனக்கேநாமாட்செய்வோம் *
மற்றைநங்காமங்கள் மாற்றேலோரெம்பாவாய். (உகூ)

(சுருட்டிராகம் ரூபகதாளம்.)

❀ வங்கக்கடல்கடைந்த மாதவனைக்கேசவனை *
திங்கள்திருமுகத்துச் சேயிழையார்சென்றிறைஞ்சி *
அங்கப்பறைகொண்டவாற்றை * அணிபுதுவைப்
பைங்கமலத்தண்தெரியல் பட்டர்பிரான்கோதைசொன்ன *
சங்கத்தமிழ்மாலை முப்பதும்தப்பாமே *
இங்குஇப்பரிசுரைப்பார் ஈரிரண்டுமால்வரைத்தோள் *
செங்கண்திருமுகத்துச் செல்வத்திருமாலால் *
எங்குமதிருவருள்பெற்று இன்புறுவரெம்பாவாய். (௩௰)

அடிவரவு:—மார்கழி வையத்து ஓங்கி ஆழி மாயன் புள்ளும் கீசு கீழ்வானம் தூமணி நோற்று கற்று கனைத்து புள்ளின் உங்கள் எல்லே நாயகன் அம்பரம் உந்து குத்து முப்பத்து ஏற்ற அங்கண் மாரி அன்று ஒருத்தி மாலே கூடாரை கறவை சிற்றம் வங்கம் தை.

ஆண்டாள் திருவடிகளே சரணம்.



† 'சிறுகாலை' என்றும். ஓதுவர். ‡ 'பிறந்த' என்பதும் பாடம்.

# நாச்சியார் திருமொழி.

## தனியன்.

(திருக்கண்ணமங்கையாண்டான் அருளிச்செய்தது.)

இருவிகற்பநேரிசைவெண்பா.

அல்லிநாள்தாமரைமேலாரணங்கினின்துணைவி *
மல்லிநாடாண்டமடமயில்—மெல்லியலாள் *
ஆயர்குலவேந்தனாகத்தாள் * தென்புதுவை
வேயர்பயந்தவிளக்கு.

கட்டளைக்கலித்துறை.

† கோலச்சுரிசங்கைமாயன்செவ்வாயின்குணம்வினவும்
சீலத்தனள் * தென்திருமல்லிநாடி * செழுங்குழல்மேல்
மாலைத்தொடைதென்னரங்கருக்கீயும்மதிப்புடைய
சோலைக்கிளி * அவள்தூயநற்பாதம்துணைநமக்கே.



## க - ஆந் திருமொழி - தையொருதிங்களும்.



[கண்ணனிடம் கூட்டும்படி காமனைத் தொழுதல்.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம். (ஸாவேரிராகம்-ஆதிதாளம்.)

❀ தையொருதிங்களும்தரைவிளக்கித்
  தண்மண்டலமிட்டுமாசிமுன்னாள் *
ஐயநுண்மணற்கொண்டுதெருவணிந்து
  அழகினுக்கலங்கரித்துஅனங்கதேவா! *
உய்யவுமாங்கொலோவென்றுசொல்லி
  உன்னையுமும்பியையும்தொழுதேன் *
வெய்யதோர்தழலுமிழ்சக்கரக்கை
  வேங்கடவற்குஎன்னைவிதிக்கிற்றியே. (க)

வெள்ளைநுண்மணற்கொண்டுதெருவணிந்து
  வெள்வரைப்பதன்முன்னம்துறைபடிந்து *
முள்ளுமில்லாச்சுள்ளியெரிமடுத்து
  முயன்றுஉன்னைநோற்கின்றேன்காமதேவா! *

---

† இந்தத்தனியன் இந்தப்ராந்தங்களில் அநுஸந்திக்கப்படுவதில்லை.

கள்ளவிழ்பூங்கணைதொடுத்துக்கொண்டு
கடல்வண்ணனென்பதோர்பேரெழுதி *
புள்ளினைவாய்பிளந்தானென்பது ஓர்
இலக்கினில்புகஎன்னையெய்கிற்றியே. (உ)

மத்தநன்னறுமலர்முருக்கமலர்கொண்டு
முப்போதும்உன்னடிவணங்கி *
தத்துவமிலியென்றுநெஞ்செரிந்து
வாசகத்தழித்துஉன்னைவைதிடாமே *
கொத்தலர்பூங்கணைதொடுத்துக்கொண்டு
கோவிந்தனென்பதோர்பேரெழுதி *
வித்தகன்வேங்கடவாணனென்னும்
விளக்கினில்புகஎன்னைவிதிக்கிற்றியே. (௩)

சுவரில்புராண ! நின்பேரெழுதிச்
சுறவநற்கொடிக்களும்துரங்கங்களும் *
கவரிபிணாக்களும்கருப்புவில்லும்
காட்டித்தந்தேன்கண்டாய்காமதேவா ! *
அவரைபபிராயம்தொடங்கி என்றும்
ஆதரித்தெழுந்தஎன்தடமுலைகள் *
துவரைப்பிரானுக்கேசங்கற்பித்துத்
தொழுதுவைத்தேன்ஒல்லைவிதிக்கிற்றியே. (௪)

வானிடைவாழும்அவ்வானவர்க்கு
மறையவர்வேள்வியில்வகுத்தஅவி *
கானிடைத்திரிவதோர்நரிபுகுந்து
கடப்பதும்மோப்பதும்செய்வதொப்ப *
ஊனிடையாழிசங்குத்தமர்க்கென்று
உன்னித்தெழுந்தஎன்தடமுலைகள் *
மானிடவர்க்கென்றுபேச்சுப்படில்
வாழகில்லேன்கண்டாய்மன்மதனே ! (௫)

உருவுடையார்இளையார்கள்நல்லார்
ஓத்துவல்லார்களைக்கொண்டு * வைகல்
தெருவிடைஎதிர்கொண்டுபங்குனிநாள்
திருந்தவேநோற்கின்றேன்காமதேவா ! *

கருவுடைமுகில்வண்ணன்காயாவண்ணன்
கருவிளைபோல்வண்ணன் * கமலவண்ணத்
திருவுடைமுகத்தினில்திருக்கண்களால்
திருந்தவேநோக்கெனக்கருள்கண்டாய். (௬)

காயுடைநெல்லொடுகரும்பமைத்துக்
கட்டியரிசிஅவலமைத்து *
வாயுடைமறையவர்மந்திரத்தால்
மன்மதனே ! உன்னைவணங்குகின்றேன் *
தேசமுன்னளந்தவன் திரிவிக்கிரமன்
திருக்கைகளால்என்னைத்தீண்டும்வண்ணம் *
சாயுடைவயிறும்என்தடமுலையும்
தரணியில்தலைப்புகழ்தரக்கிற்றியே. (எ)

மாசுடையுடம்பொடுதலையுலறி
வாய்ப்புறம்வெளுத்துஒருபோதுமுண்டு *
தேசுடைத்திறலுடைக்காமதேவா !
நோற்கின்றநோன்பினைக்குறிக்கொள்கண்டாய் *
பேசுவதொன்றுண்டுஇங்கெம்பெருமான் !
பெண்மையைத்தலையுடைத்தாக்கும்வண்ணம் *
கேசவநம்பியைக்கால்பிடிப்பா
ளென்னுமிப்பேறுஎனக்குஅருள்கண்டாய். (அ)

தொழுதுமுப்போதும்உன்னடிவணங்கித்
தூமலர்தூயத்தொழுதேத்துகின்றேன் *
பழுதின்றிப்பார்க்கடல்வண்ணனுக்கே
பணிசெய்துவாழப்பெறாவிடில் * நான்
அழுதழுதலமந்தம்மாவழங்க
ஆற்றவும்அதுஉனக்குஉறைக்குங்கண்டாய் *
உழுவதோரெருத்தினைநுகங்கொடுபாய்ந்து
ஊட்டமின்றித்துரந்தாலொக்குமே. (௯)

❀ கருப்புவில்மலர்க்கணைக்காமவேளைக்
கழலிணைபணிந்துஅங்கோர்கரியலற *
மருப்பினையொசித்துப்புள்வாய்பிளந்த
மணிவண்ணற்குஎன்னைவகுத்திடென்று *

பொருப்பன்னமாடம்பொலிந்துதோன்றும்
புதுவையர்கோனவிட்டுசித்தன்கோதை *
விருப்புடையின்தமிழ்மாலைவல்லார்
விண்ணவர்கோனடிநண்ணுவரே. (கய)

அடிவரவு:—தை வெள்ளை மத்தம் சுவரில் வானிடை உரு காயுடை மாசுடை தொழுது கருப்பு நாமம்.

ஆண்டாள் திருவடிகளே சரணம்.



## உ - ஆம் திருமொழி - நாமமாயிரம்.



[இடைப்பெண்கள் சிற்றில்சிதைக்கவேண்டா வென்று கண்ணனை வேண்டுதல்.]

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

(யமுனகல்யாணிராகம் - திரிபுடைதாளம்.)

நாமமாயிரமேத்தநின்ற நாராயணா ! நரனே ! * உன்னை
மாமிதன்மகனாகப்பெற்றால் எமக்குவாதைதவிருமே *
காமன்போதருகாலமென்று பங்குனிநாள்கடைபாரித்தோம் *
தீமைசெய்யும்சிரீதரா ! எங்கள்சிற்றில்வந்துசிதையேலே. (க)

இன்றுமுற்றும்முதுகுநோவ இருந்திழைத்தஇச்சிற்றிலை *
நன்றும்கண்ணுறநோக்கி நாங்கொளும்ஆர்வந்தன்னைத்தணிகிடாய் *
அன்றுபாலகனாகி ஆலிலைமேல்துயின்றஎம்மாதியாய் ! *
என்றும்உன்தனக்குஎங்கள்மேல் இரக்கமெழாததுஎம்பாவமே. (உ)

குண்டுநீருறைகோளரீ ! மதயானைகோளவிடுத்தாய் ! * உன்னைக்
கண்டுமாலுறுவோங்களைக் கடைக்கண்களாலிட்டுவாதியேல் *
வண்டல்நுண்மணல்தெள்ளி யாம்வளைக்கைகளால்சிரமப்பட்டோம் *
தெண்டிரைக்கடற்பள்ளியாய் ! எங்கள்சிற்றில்வந்துசிதையேலே. (ங)

பெய்யுமாமுகில்போல்வண்ணா ! உன்தன்பேச்சும்செய்கையும் * எங்களை
மையலேற்றிமயக்க உன்முகம்மாயமந்திரந்தான்கொலோ ? *
நொய்யர்பிள்ளைகளென்பதற்கு உன்னைநோவநாங்கள்உரைக்கிலோம் *
செய்யதாமரைக்கண்ணினாய் ! எங்கள்சிற்றில்வந்துசிதையேலே. (ச)

வெள்ளைநுண்மணற்கொண்டு சிற்றில்விசித்திரப்பட * வீதிவாய்த்
தெள்ளிநாங்களிழைத்தகோலம் அழித்தியாகிலும்உன்தன்மேல் *
உள்ளமோடியுருகலல்லால் உரோடமொன்றுமிலோம்கண்டாய் *
கள்ளமாதவா ! கேசவா ! உன்முகத்தனகண்களல்லவே. (ரு)

முற்றிலாதபிள்ளைகளோம் முலைபோந்திலாதோமை * நாள்தொறும்
சிற்றில்மேலிட்டுக்கொண்டு நீசிறிதுண்டு திண்ணெனநாம்அது
கற்றிலோம் * கடலையடைத்துஅரக்கர்குலங்களை முற்றவும்
செற்று * இலங்கையைப்பூசலாக்கியசேவகா ! எம்மைவாதியேல். (சு)

பேதம்நன்கறிவார்களோடு இவைபேசினால்பெரிதுஇன்சுவை *
யாதுமொன்றறியாதபிள்ளைகளோமை நீநலிந்துஎன்பயன ? *
ஓதமாகடல்வண்ணா ! உன்மணவாட்டிமாரொடு† சூளுறும் *
சேதுபந்தம்திருத்தினாய் ! எங்கள்சிற்றில்வந்துசிதையேலே. (எ)

வட்டவாய்ச்சிறு தூதையோடு சிறுசுளகும்மணலும்கொண்டு *
இட்டமாவிளையாடுவோங்களைச் சிற்றிலீடழித்துஎன்பயன் ? *
தொட்டுதைத்துநலியேல்கண்டாய் சுடர்ச்சக்கரமகையிலேந்தினாய் ! *
கட்டியும்கைத்தால் இன்னாமையறிதியேகடல்வண்ணனே ! (அ)

முற்றத்தூடுபுகுந்து நின்முகம்காட்டிப்புன்முறுவல்செய்து *
சிற்றிலோடெங்கள்சிந்தையும் சிதைக்கக்கடவையோ ? கோவிந்தா ! *
முற்றமண்ணிடம்தாவி விண்ணுறநீண்டளந்துகொண்டாய்! * எம்மைப்
பற்றிமெய்ப்பிணக்கிட்டக்கால் இந்தப்பக்கம்நின்றவாஎன்சொல்லார் ?

❀ சீதைவாயமுதமுண்டாய் ! எங்கள்சிற்றில்நீசிதையேலென்று *
வீதிவாய்விளையாடும் ஆயசிறுமியர்மழலைச்சொல்லை *
வேதவாய்த்தொழிலார்கள்வாழ் வில்லிபுத்தூர்மன்விட்டுசித்தன்தன் *
கோதைவாய்த்தமிழ்வல்லவர் குறைவின்றிவைகுந்தம்சேருவரே. (க0)

அடிவரவு:—நாமம் இன்று குண்டு பெய்யும் வெள்ளை முற்றிலாத பேதம் வட்டம் முற்றத்தூடு சீதை கோழி.

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

## ரு-ஆந் திருமொழி - கோழியழைப்பதன் முன்னம்.

[கண்ணனைக் கன்னியர் கவர்ந்த கூறைகளை இரத்தல்.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (செஞ்சுருட்டிராகம் - அடதாளம்.)

❀ கோழியழைப்பதன்முன்னம் குடைந்துநீராடுவான்போந்தோம் *
ஆழியஞ்செல்வன்எழுந்தான் அரவணைமேல்பள்ளிகொண்டாய் ! *
ஏழைமையாற்றவும்பட்டோம் இனியென்றும்பொய்கைக்குவாரோம் *
தோழியும்நானுமதொழுதோம் துகிலைப்பணித்தருளாயே. (க)

† 'சூழறும்' என்று வழங்குவர்.

இதுஎன்புகுந்ததுஇங்கு அந்தோ! இப்பொய்கைக்குஎவ்வாறுவந்தாய்? *
மதுவின்துழாய்முடிமாலே! மாயனே! எங்களமுதே! *
விதியின்மையால்அதுமாட்டோம் வித்தகப்பிள்ளாய்! விரையேல் *
குதிகொண்டுஅரவில்நடித்தாய்! குருந்திடைக்கூறைபணியாய். (உ)

எல்லே! ஈதுஎன்னஇளமை? எம்மனைமார்காணில்ஒட்டார் *
பொல்லாங்குஈதென்றுகருதாய் பூங்குருந்தேறியிருத்தி *
வில்லால்இலங்கையழித்தாய்! நீவேண்டியதெல்லாம்தருவோம் *
பல்லாரும்காணாமேபோவோம் பட்டைப்பணித்தருளாயே. (ங)

பரக்கவிழித்துஎங்கும்நோக்கிப் பலர்குடைந்தாடும்சுனையில் *
அரக்கநில்லாகண்ணநீர்கள் அலமருகின்றவாபாராய் *
இரக்கமேலொன்றுமிலாதாய்! இலங்கையழித்தபிரானே! *
குரக்கரசுஆவதுஅறிந்தோம் குருந்திடைக்கூறைபணியாய். (ச)

காலைக்கதுவிடுகின்ற கயலொடுவாளைவிரவி *
வேலைப்பிடித்தென்னைமார்களோட்டில் என்னவிளையாட்டோ? *
கோலச்சிற்றாடைபலவும்கொண்டு நீயேறியிராதே *
கோலம்கரியபிரானே! குருந்திடைக்கூறைபணியாய். (ரு)

தடத்தவிழ்தாமரைப்பொய்கைத் தாள்கள்எம்காலைக்கதுவ *
விடத்தேளெறிந்தாலேபோல வேதனைஆற்றவும்பட்டோம் *
குடத்தையெடுத்தேறவிட்டுக் கூத்தாடவல்லஎங்கோவே! *
படிற்றையெல்லாம்தவிர்ந்து எங்கள்பட்டைப்பணித்தருளாயே. (சு)

நீரிலேநின்றுஅயர்க்கின்றோம் நீதியல்லாதனசெய்தாய் *
ஊரகம்சாலவும்சேய்த்தால் ஊழியெல்லாம்உணர்வானே! *
ஆர்வம்உனக்கேயுடையோம் அம்மனைமார்காணில்ஒட்டார் *
போரவிடாய்எங்கள்பட்டைப் பூங்குருந்தேறியிராதே. (எ)

மாமிமார்மக்களேயல்லோம் மற்றும்இங்குஎல்லாரும்போந்தார் *
தூமலர்க்கண்கள்வளரத் தொல்லையிராத்துயில்வானே *!
சேமமேலன்றிதுசாலச் சிக்கெனநாம்இதுசொன்னோம் *
கோமளஆயர்கொழுந்தே! குருந்திடைக்கூறைபணியாய். (அ)

கஞ்சன்வலைவைத்தஅன்று காரிருளெல்லில்பிழைத்து *
நெஞ்சுதுக்கம்செய்யப்போந்தாய் நின்றஇக்கன்னியரோமை *
அஞ்சஉரப்பாள்அசோதை ஆணாட்டவிட்டிட்டிருக்கும் *
வஞ்சகப்பேய்ச்சிபாலுண்ட † மசிமையிலீ! கூறைதாராய். (கூ)

---

† 'மகிமை' என்பதும் பாடம்.

❀ கன்னியரோடெங்கள்நம்பி கரியபிரான்விளையாட்டை *
பொன்னியல்மாடங்கள்சூழ்ந்த புதுவையர்கோன்பட்டன்கோதை *
இன்னிசையால்சொன்னமாலை ஈரைந்தும்வல்லவர்தாம்போய் *
மன்னியமாதவனோடு வைகுந்தம்புக்கிருப்பாரே. (௧0)

அடிவரவு:—கோழி இது எல்லே பாக்க காலை தடத்து நீரில் மாமிமார் கஞ்சன் கன்னியரோடு தெள்ளியார்.

ஆண்டாள் திருவடிகளே சரணம்.



## ச- ஆந் திருமொழி-தெள்ளியார்பலர்.



[கூடலிழைத்தல்.]

கலிவிருத்தம். (கேதாரராகம் - அடதாளம்)

❀ தெள்ளியார்பலர் கைதொழும்தேவனார் *
வள்ளல் மாலிருஞ்சோலைமணாளனார் *
பள்ளிகொள்ளுமிடத்து அடிகொட்டிட *
கொள்ளுமாகில் நீகூடிடுகூடலே! (௧)

❀ காட்டில்வேங்கடம் கண்ணபுரநகர் *
வாட்டமின்றி மகிழ்ந்துறைவாமனன் *
ஓட்டராவந்து என்கைப்பற்றி * தன்னொடும்
கூட்டுமாகில் நீகூடிடுகூடலே! (௨)

பூமகன்புகழ்வானவர் போற்றுதற்
காமகன் * அணிவாணுதல் தேவகி
மாமகன் * மிகுசீர் வசுதேவர்தம் *
கோமகனவரில் கூடிடுகூடலே! (௩)

ஆய்ச்சிமார்களும் ஆயருமஞ்சிட *
பூத்தநீள்கடம்பேறிப் புகப்பாய்ந்து *
வாய்த்தகாளியன்மேல் நடமாடிய *
கூத்தனார்வரில் கூடிடுகூடலே! (௪)

மாடமாளிகைசூழ் மதுரைப்பதி
நாடி * நந்தெருவின் நடுவேவந்திட்டு *
ஓடைமாமதயானை உதைத்தவன் *
கூடுமாகில் நீகூடிடுகூடலே! (௫)

அற்றவன் மருதம் முறியநடை
கற்றவன் * கஞ்சனை வஞ்சனையின்
செற்றவன் * திகழும் மதுரைப்பதி *
கொற்றவன்வரில் கூடிடுகூடலே ! (௬)

அன்று இன்னாதனசெய் சிசுபாலனும் *
நின்றநீள்மருதும் எருதும்புள்ளும் *
வென்றிவேல்விறல் கஞ்சனும்வீழ * முன்
கொன்றவன்வரில் கூடிடுகூடலே ! (௭)

ஆவலன்புடையார்தம் மனத்தன்றி
மேவலன் * விரைசூழ் துவராபதிக்
காவலன் * கன்றுமேய்த்து விளையாடும் *
கோவலன்வரில் கூடிடுகூடலே ! (௮)

கொண்டகோலக் குறளுருவாய்ச்சென்று *
பண்டுமாவலிதன் பெருவேள்வியில் *
அண்டமும்நிலனும் அடியொன்றினால் *
கொண்டவன்வரில் கூடிடுகூடலே ! (௯)

பழகுநான்மறையின் பொருளாய் * மத
மொழுகுவாரணம் உய்ய அளித்த * எம்
அழகனார் அணியாய்ச்சியர்சிந்தையுள் *
குழகனார்வரில் கூடிடுகூடலே ! (௧௦)

❀ ஊடல்கூடல் உணர்தல்புணர்தலை *
† நீடுநின்ற நிறைபுகழாய்ச்சியர் *
கூடலைக் குழற்கோதைமுன்கூறிய *
பாடல்பத்துமவல்லார்க்கு இல்லைபாவமே. (௧௧)

அடிவரவு :—தெள்ளியார் காட்டில் பூமகன் ஆய்ச்சிமார்கள் மாடம் அற்றவன் அன்று ஆவல் கொண்ட பழகு ஊடல் மன்னு.

ஆண்டாள் திருவடிகளே சரணம்.



† 'நீடிநின்ற' என்றும் கூறுவர்.

## ரு - ஆந் திருமொழி - மன்னுபெரும்புகழ்.



[எம்பெருமானைக் கூவியழைக்கும்படி குயிலுக்குக் கூறுதல்.]

• எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம் (ஆநந்தபைரவிராகம்-ஆதிதாளம்.)

❀ மன்னுபெரும்புகழ்மாதவனை
மாமணிவண்ணனைமணிமுடிமைந்தனை
தன்னை * உகந்ததுகாரணமாக
என்சங்கிழக்கும்வழக்குண்டே
புன்னைகுருக்கத்திஞாழல்செருந்திப
பொதும்பினில்வாழுமகுயிலே ! *
பன்னிஎப்போதும்இருந்துவிரைந்து என்
பவளவாயன்வரக்கூவாய்.

வெள்ளைவிளிசங்குஇடங்கையில்கொண்ட
விமலன்எனக்குஉருக்காட்டான் *
உள்ளம்புகுந்துஎன்னைநைவித்து
நாளும் † உயிர்பெய்துகூத்தாட்டுக்காணும் *
கள்ளவிழ்செண்பகப்பூமலர்கோதிக்
களித்திசைபாடுமகுயிலே ! *
மெள்ளவிருந்துமிழற்றிமிழற்றாது என்
வேங்கடவன்வரக்கூவாய். (உ)

மாதலிதேர்முன்புகோல்கொள்ள
மாயன்இராவணன்மேல் * சரமாரி
தாய்தலைஅற்றற்றுவீழத் தொடுத்த
தலைவன்வரவெங்குங்காணேன் *
போதலர்காவில்புதுமணம்நாறப்
பொறிவண்டினகாமரமகேட்டு * உன்
காதலியோடுஉடனவாழ்குயிலே ! என்
கருமாணிக்கமவரக்கூவாய். (ங)

என்புருகிஇனவேல்நெடுங்கண்கள்
இமைபொருந்தாபலநாளும் *
துன்பக்கடல்புக்குவைகுந்தனென்பது ஓர்
தோணிபெறாதுஉழல்கின்றேன் *

† 'உயிர்ப்பெய்து' என்று பலா.

அன்புடையாரைபபிரிவுறுநோ
யது நீயும்அறிதிகுயிலே ! *
பொன்புரைமேனிக்கருளக்கொடியுடைப்
புண்ணியனைவரக்கூவாய். (ச)

மென்னடையன்னம்பரநதுவிளையாடும்
வில்லிபுததூருறைவான்தன *
பொன்னடிகாண்பதோராசையினால் என்
பொருகயற்கண்ணிணை துஞ்சா *
இன்னடிசிலொடுபாலமுதூட்டி
எடுததஎன்கோலக்கிளியை *
உன்னொடுதோழமைகொள்ளுவன்குயிலே !
உலகளநதான்வரக்கூவாய். (ரு)

எத்திசையும்அமரர்பணிநதேததும்
இருடீகேசன்வலிசெய்ய *
முத்தன்னவெண்முறுவல் செய்யவாயும்
முலையும்அழகழிநதேன்நான் *
கொததலர்காவில்மணிததடம் கண்படை
கொள்ளும்இளங்குயிலே ! *என்
தததுவனைவரககூகிற்றியாகில்
தலையல்லால்கைம்மாறிலேனே. (சா)

பொங்கியபாற்கடலபள்ளிகொள்வானைப்
புணர்வதோராசையினால் * என்
கொங்கைகிளர்நதுகுமைததுக்குதுகலித்து
ஆவியைஆகுலமசெய்யும் *
அங்குயிலே ! உனக்கெனனமறைந்துறைவு ?
ஆழியும்சஙகும்ஒண்தண்டும *
தங்கியகையவனைவரக்கூவில் நீ
சாலததருமம்பெறுதி. (எ)

சார்ங்கம்வளையவலிக்கும் தடக்கைச்
சதுரன்பொருததமுடையன் *
நாங்கள்எமமிலிருநதொட்டியகச்சங்கம்
நானும்அவனும்அறிதும் *

தெங்கனிமாம்பொழில்செந்தளிர்கோதும்
சிறுகுயிலே! * திருமாலை
ஆங்குவிரைந்தொல்லைக்கூகிற்றியாகில்
அவனைநான்செய்வனகாணே. (அ)

பைங்கிளிவண்ணன்சிரீதரனென்பது ஓர்
பாசத்தகப்பட்டிருந்தேன் *
பொங்கொளிவண்டிரைக்கும்பொழில்வாழ்குயிலே!
குறிக்கொண்டிதுநீகேள் *
சங்கொடுசக்கரத்தான்வரக்கூவுதல்
பொன்வளைகொண்டுதருதல் *
இங்குள்ளகாவினில்வாழக்கருதில்
இரண்டத்தொன்றேல்திண்ணம்வேண்டும். (கூ)

அன்றுலகமளந்தானையுகந்து
அடிமைக்கணவன்வலிசெய்ய *
தென்றலும்திங்களும்ஊடறுத்து
என்னைநலியும்முறைமைஅறியேன் *
என்றும்இக்காவில்இருந்திருந்து
என்னைத † ததைத்தாதேநீயும்குயிலே! *
இன்றுநாராயணனைவரக்கூவாயேல்
‡ இங்குத்தைநின்றும்துரப்பன். (கo)

விண்ணுறநீண்டடிதாவியமைந்தனை
வேற்கணமடந்தைவிரும்பி *
கண்ணுறஎன்கடல்வண்ணனைக்கூவு
கருங்குயிலே! என்றமாற்றம் *
பண்ணுறுநானமறையோர்புதுவைமன்னன்
பட்டர்பிரான்கோதைசொன்ன *
நண்ணுறுவாசகமாலைவல்லார்
நமோநாராயணாயவென்பாரே. (கக)

அடிவரவு:—மன்னு வெள்ளை மாதலி என்பு மென்னடை எத்திசை பொங்கிய சார்ங்கம் பைங்கிளி அன்று விண் வாரணம்.

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

† 'ததர்த்தாதே' என்றும் பாடம்.
‡ 'இங்குற்றுநின்றும்' என்பதும் பாடம்.

## சூ - ஆந் திருமொழி - வாரணமாயிரம்.



[மாயவனை மணஞ்செய்துகொள்வதாகத் தான்கண்ட கனவைத் தலைவி தோழிக்குக் கூறுதல்.]

கலிவிருத்தம். (கல்யாணிராகம் - ரூபகதாளம்.)

† ❀ வாரணமாயிரம் சூழவலஞ்செய்து *
நாரணநம்பி நடக்கின்றானென்றெதிர் *
பூரணபொற்குடம் வைத்துப் ‡ புரமெங்கும் *
தோரணம்நாட்டக் கனாக்கண்டேன்தோழீ! நான். (க)

நாளை வதுவை மணமென்றுநாளிட்டு *
பாளைகமுகு பரிசுடைப்பந்தற்கீழ் *
கோளரிமாதவன் கோவிந்தனென்பான் * ஓர்
காளைபுகுதக் கனாக்கண்டேன்தோழீ! நான். (உ)

இந்திரனுள்ளிட்ட தேவர்குழாமெல்லாம் *
வந்திருந்து என்னை மகட்பேசிமந்திரித்து *
மந்திரக்கோடியுடுத்தி மணமாலை *
அந்தரிசூட்டக் கனாக்கண்டேன்தோழீ! நான். (ங)

நால்திசைதீர்த்தம்கொணர்ந்து நனிநல்கி *
பார்ப்பனச்சிட்டர்கள் § பல்லாரெடுத்தேத்தி *
(0 பூப்புனைகண்ணிப் புனிதனோடென்தன்னை *
காப்புநாண்கட்டக் கனாக்கண்டேன்தோழீ! நான். (ச)

கதிரொளிதீபம் கலசமுடனேந்தி *
சதிரிளமங்கையர் தாம்வந்தெதிர்கொள்ள *
மதுரையார்மன்னன் அடிநிலைதொட்டு * எங்கும்
அதிரப்புகுதக் கனாக்கண்டேன்தோழீ! நான். (ரு)

மத்தளம்கொட்ட வரிசங்கம்நின்றூத *
முத்துடைத்தாமம் நிரைதாழ்ந்தபந்தற்கீழ் *
மைத்துனன்நம்பி மதுசூதனன்வந்து * என்னைக்
(கக) கைத்தலம்பற்றக் கனாக்கண்டேன்தோழீ! நான். (சா)

உ வாய்நல்லார் நல்லமறையோதிமந்திரத்தால் *
பாசிலைநாணல்படுத்துப் பரிதிவைத்து *
காய்சினமாகளிறன்னான் என்கைப்பற்றி *
தீவலஞ்செய்யக் கனாக்கண்டேன்தோழீ! நான். (எ)

---

† இந்தப்பாடல்கள், கலியாணகாலங்களில் பாடும் சீர்பாடல்கள்.

‡ 'புறமெங்கும்' என்றும் பாடம்.

§ 'பல்லாண்டெடுத்து' என்பதும் பாடம்.

இம்மைக்குமேழேழ்பிறவிக்கும பற்றுவான் *
நம்மையுடையவன் நாராயணனநம்பி *
செம்மையுடையதிருக்கையால தாள்பற்றி *
அம்மிமிதிக்கக் கனாக்கண்டேனதோழீ ! நான். (அ)

வரிசிலைவாள்முகத்து என்னைமார்தாம்வந்திட்டு *
எரிமுகம்பாரிதது என்னைமுனனேநிறுததி *
அரிமுகன்அச்சுதன கைமமேல்என்கைவைதது *
பொரிமுகந்தட்டக் கனாக்கண்டேனதோழீ ! நான. (கூ)

குங்குமமப்பிக் குளிர்சாநதமட்டிதது *
மங்கலவீதி வலஞ்செய்துமணநீர் *
அங்குஅவனோடுமஉடன்சென்று அங்குஆனைமேல் *
மஞ்சனமாட்டக் கனாககண்டேன்தோழீ ! நான். (கo)

❀ ஆயனுககாகத தான்கண்டகனாவினை *
வேயர்புகழ் வில்லிபுத்தூர்க்கோன்கோதைசொல் *
தூயதமிழ்மாலை ஈரைநதும்வல்லவா *
வாயுமநனமக்களைப்பெற்று மகிழ்வரே. (கக)

அடிவரவு:—வாரணம நாளை இநதிரன நாலதிசை கதிர் மத்தளம் வாய இம்மைக்கும வரிசிலை குஙகுமம ஆயனுககாக கருபபூரம.

ஆண்டாள் திருவடிகளே சரணம்



## எ - ஆந் திருமொழி - கருப்பூரம்நாறுமோ.



[பாஞ்சசன்னியத்தைப் பத்மநாபனோடேஞ் சுற்றமாக்குதல்.]

தரவுகொச்சகக்கலிப்பா. (வராளிராகம் - ரூபகதாளம்.)

❀ கருபபூரம்நாறுமோ ? கமலப்பூநாறுமோ ? *
திருபபவளச்செவவாய்தான திததித்திருக்குமோ ? *
மருபபொசிததமாதவன்றன வாய்சசுவையுமநாற்றமும் *
விருப்புற்றுக்கேட்கினறேன் சொல்லாழிவெண்சங்கே ! (க)

கடலில்பிறந்து கருதாது * பஞ்சசனன்
உடலில்வளர்ந்துபோய் ஊழியானகைததலத
திடரில் * குடியேறித் தீயவசுரர் *
நடலைப்படமுழங்கும் தோற்றத்தாய்நற்சங்கே ! (உ)

தடவரையின்மீதே சரற்காலசந்திரன் *
இடையுவாவில்வந்து எழுந்தாலேபோல * நீயும்
வடமதுரையார்மன்னன் வாசுதேவன்கையில் *
குடியேறிவீற்றிருந்தாய் கோலப்பெருஞ்சங்கே ! (௩)

சந்திரமண்டலம்போல் தாமோதரன்கையில் *
அந்தரமொன்றின்றி ஏறிஅவன்செவியில் *
மந்திரம்கொள்வாயேபோலும் வலம்புரியே ! *
இந்திரனும்உன்னோடு செல்வத்துக்கேலானே. (௪)

உன்னோடுஉடனே ஒருகடலில்வாழ்வாரை *
இன்னார் † இனையாரென்று எண்ணுவாரில்லைகாண் *
மன்னுகின்ற மதுசூதன்வாயமுதம் *
பன்னாளும்உண்கின்றாய் பாஞ்சசன்னியமே ! (௫)

போய்த்தீர்த்தமாடாதே நின்றபுணர்மருதம் *
சாய்த்தீர்த்தான்கைத்தலத்தே ஏறிக்குடிகொண்டு *
சேய்த்தீர்த்தமாய்நின்ற செங்கண்மால்தன்னுடைய *
வாய்த்தீர்த்தம்பாய்ந்தாடவல்லாய் வலம்புரியே ! (௬)

செங்கமலநாண்மலர்மேல் தேனுகரும்அன்னம்போல் *
செங்கண்கருமேனி வாசுதேவனுடைய *
அங்கைத்தலமேறி அன்னவசஞ்செய்யும் *
சங்கரையா ! உன்செல்வம் சாலஅழகியதே. (எ)

உண்பதுசொல்லில் உலகளந்தான்வாயமுதம் *
கண்படைகொள்ளல் கடல்வண்ணன்கைத்தலத்தே *
பெண்படையார்உன்மேல் பெரும்பூசல்சாற்றுகின்றார் *
பண்பலசெய்கின்றாய் பாஞ்சசன்னியமே ! (அ)

பதினாறாமாயிரவர் தேவிமார்பார்த்திருப்ப *
மதுவாயில்கொண்டாற்போல் மாதவன்தன்வாயமுதம் *
பொதுவாகஉண்பதனைப் புக்குநீயுண்டக்கால் *
சிதையாரோஉன்னோடு ? செல்வப்பெருஞ்சங்கே! (௯)

† 'இனியார்' என்பது சிலர் பாடம்.

❀ பாஞ்சசன்னியத்தைப் பற்பநாபனோடும் *
வாய்ந்தபெருஞ்சுற்றமாக்கிய வண்புதுவை *
ஏய்ந்தபுகழ்ப்பட்டர்பிரான் கோதைதமிழீரைந்தும் *
ஆய்ந்தேத்தவல்லாரவரும் அணுக்கரே. (க0)

அடிவரவு:—கருப்பூரம் கடலில் தடவரை சந்திர உன்னோடு போய் செங்கமலம் உண்பது பதினாறு பாஞ்சசன்னியத்தை விண்.

ஆண்டாள் திருவடிகளே சரணம்.



## அ - ஆம் திருமொழி - விண்ணீலமேலாப்பு.



[மேகவிடுதூது.]

தரவுகொச்சகக்கலிப்பா. (துசாவந்திராகம் - ஆதிதாளம்.)

❀ விண்ணீலமேலாப்பு விரித்தாற்போல்மேகங்காள் !*
தெண்ணீர்பாய்வேங்கடத்து என்திருமாலும்போந்தானே ? *
கண்ணீர்கள்முலைக்குவட்டில் துளிசோரச்சோர்வேனை *
பெண்ணீர்மையீடழிக்கும்இது தமக்குஓர்பெருமையே. (க)

மாமுத்தநிதிசொரியும் மாமுகில்காள் ! * வேங்கடத்துச்
சாமத்தினிறங்கொண்ட † தாடாளன்வார்த்தையென்னே ! *
காமத்தீயுள்புகுந்து கதுவப்பட்டு, இடைக்கங்குல் *
ஏமத்தோர்தென்றலுக்கு இங்கிலக்காய்நானிருப்பேனே. (உ)

ஒளிவண்ணம்வளைசிந்தை உறக்கத்தோடுஇவையெல்லாம் *
எளிமையால்இட்டென்னை ஈடழியப்போயினவால் *
குளிரருவிவேங்கடத்து என்கோவிந்தன்குணம்பாடி *
அளியத்தமேகங்காள் ! ஆவிகாத்திருப்பேனே. (ங)

மின்னாகத்தெழுகின்ற மேகங்காள் ! * வேங்கடத்துத்
தன்னாகத்திருமங்கை தங்கியசீர்மார்வர்க்கு *
என்னாகத்திளங்கொங்கை விரும்பித்தாம்நாள்தோறும் *
பொன்னாகம்புல்குதற்கு என்புரிவுடைமைசெப்புமினே. (ச)

வான்கொண்டுகிளர்ந்தெழுந்த மாமுகில்காள் ! *வேங்கடத்துத்
தேன்கொண்டமலர்சிதறத் திரண்டேறிப்பொழிவீர்காள் !*
ஊன்கொண்டவள்ளுகிரால் இரணியனைஉடலிடந்தான் *
தான்கொண்டசரிவளைகள் தருமாகில்சாற்றுமினே. (ரு)

† 'தாளாளன்' எனவும் ஓதுவர்.

சலங்கொண்டுகிளர்ந்தெழுந்த தண்முகில்காள்! * மாவலியை
நிலங்கொண்டான்வேங்கடத்தே நிரந்தேறிப்பொழிவீர்காள்! *
உலங்குண்டவிளங்கனிபோல் உள்மெலியப்புகுந்து * என்னை
நலங்கொண்டநாரணற்கு என்நடலைநோய்செப்புமினே. (சு)

❁ சங்கமாகடல்கடைந்தான் தண்முகில்காள்! * வேங்கடத்துச்
செங்கண்மால்சேவடிக்கீழ் அடிவீழ்ச்சிவிண்ணப்பம *
கொங்கைமேல்குங்குமத்தின் குழம்பழியப்புகுந்து * ஒருநாள்
தங்குமேல் என்னாவிதங்குமென்றுஉரையீரே. (எ)

கார்காலத்தெழுகின்ற கார்முகில்காள்! * வேங்கடத்துப்
போர்காலத்தெழுந்தருளிப் பொருதவனார்பேர்சொல்லி *
நீர்காலத்து எருக்கினம்பழவிலைபோல்வீழ்வேனை *
வார்காலத்துஒருநாள் தம்வாசகம்தந்தருளாரே. (அ)

❁ மதயானைபோலெழுந்த மாமுகில்காள்! * வேங்கடத்தைப்
பதியாகவாழ்வீர்காள்! பாம்பணையானவார்த்தைஎன்னே! *
கதியென்றும்தானாவான் கருதாது * ஓர்பெண்கொடியை
வதைசெய்தானென்னும்சொல் வையகத்தார்மதியாரே. (௯)

❁ நாகத்தினணையானை நன்னுதலாள்நயந்துஉரைசெய் *
மேகத்தைவேங்கடக்கோன் விடுதூதில்விண்ணப்பம் *
போகத்தில்வழுவாத புதுவையர்கோன்கோதைதமிழ் *
ஆகத்துவைத்துரைப்பாரவர் அடியாராகுவரே. (க0)

அடிவரவு:—விண் மா ஒளி மின் வான சலம சங்கம் கார் மதம் நாகம் சிந்துரம்.

ஆண்டாள் திருவடிகளே சரணம்.



## கூ - ஆந் திருமொழி - சிந்துரச்செம்பொடி.

[திருமாலிருஞ்சோலை எம்பெருமானை வழிபடுதல்.]

கலிநிலைத்துறை. (கல்யாணிராகம் - ரூபகதாளம்.)

❁ சிந்துரச்செம்பொடிப்போல் திருமாலிருஞ்சோலையெங்கும் *
இந்திரகோபங்களே எழுந்தும்பரந்திட்டனவால் *
மந்தரம்நாட்டி அன்றுமதுரக்கொழுஞ்சாறுகொண்ட *
சுந்தரத்தோளுடையான் சுழலையில்நின்றுஉய்துங்கொலோ? (க)

போர்க்களிறுபொரும் மாலிருஞ்சோலையம்பூம்புறவில் *
தார்க்கொடிமுல்லைகளும் தவளநகைகாட்டுகின்ற *
கார்க்கொள்†பிடாக்கள்நின்று கழறிச்சிரிக்கத்தரியேன் *
ஆர்க்குஇடுகோ ? தோழீ ! அவன்தார்செய்தபூசலையே. (௨)

கருவிளையொண்மலர்காள் ! காயாமலர்காள் ! * திருமால
உருவொளிகாட்டுகின்றீர் எனக்குஉய்வழக்கொன்றுஉரையீர் *
திருவிளையாடுதிண்தோள் திருமாலிருஞ்சோலைநம்பி *
வரிவளையில்புகுந்து வந்திபற்றும்வழக்குளதே. (௩)

பைம்பொழில்வாழ்குயில்காள்! மயில்காள்! ஒண்கருவிளைகாள்! *
வம்பக்களங்கனிகாள் ! வண்ணப்பூவைநறுமலர்காள் ! *
ஐம்பெரும்பாதகர்காள் ! அணிமாலிருஞ்சோலைநின்ற *
எம்பெருமானுடையநிறம் உங்களுக்குஎன்செய்வதே ? (௪)

துங்கமலர்ப்பொழில்சூழ் திருமாலிருஞ்சோலைநின்ற *
செங்கண்கருமுகிலின் திருவுருப்போல் * மலர்மேல்
தொங்கியவண்டினங்காள் ! தொகுபூஞ்சுனைகாள் ! * சுனையில்
தங்குசெந்தாமரைகாள் ! எனக்குஓர்சரண்சாற்றுமினே. (௫)

✿ நாறுநறும்பொழில் மாலிருஞ்சோலைநம்பிக்கு * நான்
நூறுதடாவில்வெண்ணெய் வாய்நேர்ந்துபராவிவைத்தேன் *
நூறுதடாநிறைந்த அக்காரவடிசில்சொன்னேன் *
ஏறுதிருவுடையான் இன்றுவந்துஇவைகொள்ளுங்கொலோ ? (௬)

இன்றுவந்துஇத்தனையும் அமுதுசெய்திடப்பெறில் * நான்
ஒன்றுநூறாயிரமாக்கொடுத்துப் பின்னும்ஆளும்செய்வன் *
தென்றல்மணங்கமழும் திருமாலிருஞ்சோலைதன்னுள்
நின்றபிரான் * அடியேன்மனத்தேவந்து நேர்படிலே. (௭)

காலையெழுந்திருந்து கரியகுருவிக்கணங்கள் *
மாலின்வரவுசொல்லி மருள்பாடுதல்மெய்ம்மைகொலோ ? *
சோலைமலைப்பெருமான் துவராபதியெம்பெருமான் *
ஆலினிலைப்பெருமான் அவன்வார்த்தையுரைக்கின்றதே. (௮)

கோங்கலரும்பொழில் மாலிருஞ்சோலையில்கொன்றைகள்மேல் *
தூங்குபொன்மாலைகளோடு உடனாய்நின்றுதூங்குகின்றேன் *
பூங்கொள்திருமுகத்து மடுத்தூதியசங்கொலியும் *
சார்ங்கவில்நாணொலியும் தலைப்பெய்வதுஎஞ்ஞான்றுகொலோ ? (௯)

† 'படாக்கள்' என்று வழங்குவர்.

சங்தொடுகாரகிலும்சுமந்து தடங்கள்பொருது *
வந்திழியும்சிலம்பாறுடை மாலிருஞ்சோலைநின்ற
சுந்தரனை * சுரும்பார்குழல்கோதை தொகுத்துரைத்த *
செந்தமிழ்பத்தும்வல்லார் திருமாலடிசேர்வர்களே. (க௦)

அடிவரவு:—சிந்துரம் போர் கருவிளை பைம்பொழில் துங்கம் நாறு இன்று காலை கோங்கு சங்தொடு கார்க்கோடல்.

ஆண்டாள் திருவடிகளே சரணம்.



## க௦ - ஆந் திருமொழி - கார்க்கோடற்பூக்காள்.

[தலைவி பிரிந்தநிலையில் மனம்பொருது வருந்திக் கூறுதல்.]

கலிநிலைத்துறை (காம்போதிராகம் - திரிபுடைதாளம்.)

கார்க்கோடல்பூக்காள் ! கார்க்கடல்வண்ணன்என்மேல் * உம்மைப்
போர்க்கோலஞ்செய்து போரவிடுத்தவன்எங்குற்றான் ? *
ஆர்க்கோ இனிநாம பூசலிடுவது ? * அணிதுழாய்த்
தார்க்கோடும்நெஞ்சந்தன்னைப் படைக்கவல்லேன் அந்தோ ! (க)

மேலதோன்றிப்பூக்காள் ! மேலுலகங்களினமீதுபோய் *
மேல்தோன்றும்சோதி வேதமுதல்வர்வலங்கையில் *
மேல்தோன்றுமாழியின் வெஞ்சுடர்போலச்சுடாது * எம்மை
மாற்றோலைப்பட்டவர் கூட்டத்துவைத்துக்கொள்கிற்றிரே. (உ)

கோவைமணாட்டி ! நீஉன்கொழுங்கனிகொண்டு * எம்மை
ஆவிதொலைவியேல் வாயழகர்தம்மையஞ்சுதும் *
பாவியேன்தோன்றிப் பாம்பணையார்க்கும்தம்பாம்புபோல் *
நாவுமிரண்டுள † வாய்த்து நாணிலியேனுக்கே. (௩)

முல்லைப்பிராட்டி ! நீஉன்முறுவல்கள்கொண்டு * எம்மை
அல்லல்விளைவியேல் ஆழிநங்காய் ! உன்னடைக்கலம் *
கொல்லையரக்கியைமூக்கரிந்திட்ட குமரனார்
சொல்லும்பொய்யானால் * நானும்பிறந்தமைபொய்யன்றே. (௪)

பாடுமகுயில்காள் ! ஈதென்னபாடல் ? * நல்வேங்கட
நாடர்நமக்கொருவாழ்வுதந்தால் வந்துபாடுமின் *
ஆடும்கருளக்கொடியுடையார் வந்துஅருள்செய்து *
கூடுவராயிடில் கூவிநும்பாட்டுக்கள்கேட்டுமே. (௫)

† 'ஆயிற்று' எனவும் பாடம்.

கணமாமயில்காள் ! கண்ணபிரான்திருக்கோலம்போன்று *
அணிமாநடம்பயின்றாடுகின்றீர்க்கு அடிவீழ்கின்றேன் *
† பணமாடரவணைப் பற்பலகாலமும்பள்ளிகொள் *
மணவாளர்நம்மைவைத்த பரிசிதுகாண்மினே. (சா)

நடமாடிததோகைவிரிக்கின்ற மாமயில்காள் ! * உம்மை
நடமாட்டம்காணப் பாவியேன்நான் ஓர்முதலிலேன் *
குடமாடுகூத்தன் கோவிந்தன்கோமிறைசெய்து * எம்மை
உடைமாடுகொண்டான் ‡ உங்களுக்குஇனியொன்றுபோதுமே ? (எ)

மழையே ! மழையே ! மண்புறம்பூசி உள்ளாய்நின்று *
மெழுகூற்றினாற்போல் ஊற்றுநல்வேங்கடததுள்நின்ற *
அழகப்பிரானார் தம்மை என்னெஞ்சத்தகப்படத்
தழுவிநின்று * என்னைத § ததைததுக்கொண்டு ஊற்றவும்வல்லையே ?

கடலே ! கடலே ! உன்னைக்கடைந்து கலக்குறுதது *
உடலுள்புகுந்துநின்று ஊறலறுததவற்கு * என்னையும்
உடலுள்புகுநதுநின்று ஊறலறுக்கின்றமாயற்கு * என்
நடலைகளெல்லாம நாகணைக்கேசென்றுரைததியே. (கூ)

❀ நல்லஎன்தோழி ! நாகணைமிசைநம்பரர் *
செல்வர்பெரியர் சிறுமானிடவர்நாம்செய்வதென் ? *
வில்லிபுதுவைவிட்டுசிததர் தங்கள்தேவரை *
வல்லபரிசுவருவிப்பரேல் அதுகாண்டுமே. (க௦)

அடிவரவு:—கார மேல் கோவை முல்லை பாடும் கணம் நடமாடி மழையே கடலே நல்ல தாம்.

ஆண்டாள் திருவடிகளே சரணம்.



## கக - ஆந் திருமொழி - தாமுகக்கும்.

[தலைவி மாயவன்செய்கைக்கு மனம்பொறுது தாய்மார் முதலியோரை நோக்கி வருந்திக்கூறுதல்.]

தரவுகொச்சகக்கலிப்பா. (ஸாவேரிராகம் – திரிபுடைதாளம்.)

❀ தாமுகக்கும்தம்கையில் சங்கமேபோலாவோ ? *
யாமுகக்கும்எங்கையில் சங்கமும்ஏந்திழையீர் ! *
தீமுகததுநாகணைமேல் சேரும்திருவரங்கர் *
ஆ ! முகததைநோக்காரால் அம்மனே ! அம்மனே ! (க)

† 'பணவாடரவணை' என்றும் பாடம். ‡ 'உங்கட்கு' என்று சிலர்
§'ததர்த்தி' எனவும் கூறுவர்.

எழிலுடைய அம்மனைமீர் ! என்னரங்கத்தின்னமுதர் *
குழலழகர் வாயழகர் கண்ணழகர் * கொப்பூழில்
எழுகமலப்பூவழகர் எம்மானார் * என்னுடைய
கழல்வளையைத் தாமும்கழல்வளையேயாக்கினரே. (௨)

❀ பொங்கோதம்சூழ்ந்த புவனியும்விண்ணுலகும் *
அங்காதும்சோராமே ஆள்கின்றஎம்பெருமான் *
செங்கோலுடைய திருவரங்கச்செல்வனார் *
எங்கோல்வளையால் இடர்தீர்வராகாதே ? (௩)

மச்சணிமாட மதிளரங்கர்வாமனனார் *
பச்சைப்பசுந்தேவர் தாம்பண்டுநீரேற்ற *
பிச்சைக்குறையாகி என்னுடையபெய்வளைமேல் *
இச்சையுடையரேல் இத்தெருவேபோதாரே ? (௪)

பொல்லாக்குறளுருவாய்ப் பொற்கையில்நீரேற்று *
எல்லாவுலகும் அளந்துகொண்டஎம்பெருமான் *
நல்லார்கள்வாழும் நளிரரங்கநாகணையான் *
இல்லாதோம்கைப்பொருளும் எய்துவானொத்துளனே. (௫)

கைப்பொருள்கள் முன்னமே கைக்கொண்டார் * காவிரிநீர்
செய்ப்புரளவோடும் திருவரங்கச்செல்வனார் *
எப்பொருட்கும்நின்று ஆர்க்கும்எய்தாது *நான்மறையின்
சொற்பொருளாய்நின்றார் என்மெய்ப்பொருளும்கொண்டாரே. (௬)

உண்ணாதுஉறங்காது ஒலிகடலையூடறுத்து *
பெண்ணாக்கையாப்புண்டு தாமுற்றபேதெல்லாம் *
திண்ணார்மதிள்சூழ் திருவரங்கச்செல்வனார் *
எண்ணாதேதம்முடைய நன்மைகளேஎண்ணுவரே. (௭)

❀ பாசிதூர்த்துக்கிடந்த பார்மகட்கு * பண்டொருநாள்
மாசுடம்பில † நீர்வார மானமிலாப்பன்றியாம் *
தேசுடையதேவர் திருவரங்கச்செல்வனார் *
பேசியிருப்பனகள் பேர்க்கவும்பேராவே. (௮)

கண்ணாலம்கோடித்துக் கன்னிதன்னைக்கைப்பிடிப்பான் *
திண்ணார்ந்திருந்த சிசுபாலன்தேசழிந்து *
அண்ணாந்திருக்கவே ஆங்கவளைக்கைப்பிடித்த *
பெண்ணாளன்பேணுமூர் பேரும்அரங்கமே. (௯)

---

† 'நீர்வாரா' என்றுவழங்குவர்.

செம்மையுடைய திருவரங்கர்தாம்பணித்த *
மெய்ம்மைப்பெருவார்த்தை விட்டுசித்தர்கேட்டிருப்பர் *
தம்மையுகப்பாரைத் தாமுகப்பரென்னும்சொல் *
தம்மிடையேபொய்யானல் சாதிப்பார்ஆரினியே ? (கo)

அடிவரவு:—தாம் எழில் பொங்கு மச்சு பொல்லா கை உண்ணாது பாசி கண்ணலம் செம்மை மற்று.

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

## கஉ - ஆந் திருமொழி - மற்றிருந்தீர்கட்கு.

[தலைவி கண்ணனுள்ளவிடத்தில் தன்னைக்கொண்டுவிடும்படி உற்றாரை வேண்டுதல்.]

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.(நாதநாமக்ரியைராகம்-ஆதிதாளம்)

மற்றிருந்தீர்கட்கறியலாகா
மாதவனென்பதோரன்புதன்னை *
உற்றிருந்தேனுக்குரைப்பதெல்லாம்
ஊமையரோடுசெவிடர்வார்த்தை *
பெற்றிருந்தாளையொழியவேபோய்ப்
பேர்த்தொருதாயில்வளர்ந்தநம்பி *
மற்பொருந்தாமற்களமடைந்த
மதுரைப்புறத்தென்னையுய்த்திடுமின். (க)

நாணிஇனியோர்கருமமில்லை
நாலயலாரும்அறிந்தொழிந்தார் *
பாணியாதென்னைமருந்துசெய்து
பண்டுபண்டாக்கவுறுதிராகில் *
மாணியுருவாய்உலகளந்த
மாயனைக்காணில்தலைமறியும் *
ஆணையால்நீர்என்னைக்காக்கவேண்டில்
ஆய்ப்பாடிக்கேஎன்னையுய்த்திடுமின். (உ)

தந்தையும்தாயும்உற்றாரும்நிற்கத்
தனிவழிபோயினாளென்னும்சொல்லு *
வந்தபின்னைப்பழிகாப்பரிது
மாயவன்வந்துருக்காட்டுகின்றான் *

கொந்தளமாக்கிப்பரக்கழித்துக்
குறும்புசெய்வானோர்மகனைப்பெற்ற *
நந்தகோபாலன்கடைத்தலைக்கே
நள்ளிருட்கண்என்னையுய்த்திடுமின். (௩)

அங்கைத்தலத்திடையாழிகொண்டா
னவன்முகத்தன்றிவிழியேனென்று *
செங்கச்சுக்கொண்டுகண்ணாடையார்த்துச்
சிறுமானிடவரைக்காணில்நாணும் *
கொங்கைத்தலமிவைநோக்கிக்காணீர்
கோவிந்தனுக்கல்லால்வாயில்போகா *
இங்குத்தைவாழ்வையொழியவேபோய்
யமுனைக்கரைக்குஎன்னையுய்த்திடுமின். (௪)

ஆர்க்குமென்னோயிது அறியலாகாது
அம்மனைமீர் ! துழதிபடாதே *
கார்க்கடல்வண்ணனென்பானொருவன்
கைகண்டயோகம்தடவத்தீரும் *
நீர்க்கரைநின்றகடம்பையேறிக்
காளியனுச்சியில்நட்டம்பாய்ந்து *
போர்க்களமாகநிருத்தம்செய்த
பொய்கைக்கரைக்குஎன்னையுய்த்திடுமின். (௫)

கார்த்தண்முகிலும்கருவிளையும்
காயாமலரும்கமலப்பூவும் *
ஈர்த்திடுகின்றனஎன்னைவந்திட்டு
இருடீகேசன்பக்கல்போகேயென்று *
வேர்த்துப்பசித்துவயிறசைந்து
வேண்டடிசிலுண்ணும்போது * ஈதென்று
பார்த்திருந்துநெடுநோக்குக்கொள்ளும்
பத்தவிலோசனத்துஉய்த்திடுமின். (௬)

வண்ணந்திரிவும்மனங்குழைவும்
மானமிலாமையும்வாய்வெளுப்பும் *
உண்ணலுறாமையும்உள்மெலிவும் *
ஓதநீர்வண்ணனென்பானொருவன் *

தண்ணந்துழாயென்னும்மாலைகொண்டு
சூட்டததணியும் * பிலம்பன்தன்னைப
பண்ணழியப்பலதேவன்வென்ற
பாண்டிவடததுஎன்னைஉய்ததிடுமின். (எ)

கற்றினம் † மேய்க்கிலும்மேய்க்கப்பெற்றான்
காடுவாழ்சாதியுமாகப்பெற்றான் *
பற்றியுரலிடையாப்புமுண்டான்
பாவிகாள் ! உங்களுக்குஏச்சுக்கொலோ ? *
கற்றனபேசி ‡ வசையுணாதே
காலிகளுய்யமழைதடுத்து *
கொற்றக்குடையாகஏந்திநின்ற
கோவர்ததனததுஎன்னைஉய்ததிடுமின. (அ)

கூட்டிலிருந்துகிளிஎப்போதும்
கோவிநதா ! கோவிந்தா ! என்று அழைக்கும் *
ஊட்டக்கொடாதுசெறுப்பனாகில்
உலகளநதானென்றுஉயரக்கூவும் *
நாட்டில்தலைப்பழியெய்தி உங்கள்
நன்மையிழநதுதலையிடாதே *
சூட்டுயர்மாடங்கள் சூழ்நதுதோனறும்
துவராபதிக்குஎன்னைஉய்ததிடுமின். (கூ)

✿ மன்னுமதுரைதொடக்கமாக
வண்துவராபதிதன்னளவும் *
தன்னைததமருய்ததுப்பெய்யவேண்டித
தாழ்குழலாள் துணிநததுணிவை *
பொன்னியல்மாடம்பொலிநதுதோனறும்
புதுவையர்கோன்விட்டுசித்தன்கோதை *
இன்னிசையால்சொனனசெஞ்சொல்மாலை
ஏததவல்லார்க்கு இடமவைகுநதமே. (க0)

**அடிவரவு:**—மற்று நாணி தந்தை அங்கை ஆரகும கார்த்தண் வண்ணம் கற்றினம் கூட்டில மன்னு கண்ணன.

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

---

† 'மேய்க்கவும்' என்று சிலர்.

‡ 'வசவுணாதே' என்றுவழங்குவர்.

## க௩ - ஆந் திருமொழி - கண்ணனென்னும்.

[தலைவி கண்ணன்அணிந்த ஆடைமுதலியவற்றால் தன் வாட்டத்தைத் தணிக்கவேண்டுதல்.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (பைரவிராகம்-ஆதிதாளம்.)

கண்ணனென்னும்கருந்தெய்வம் காட்சிப்பழகிக்கிடப்பேனை *
புண்ணில்புளிப்பெய்தாற் † போலப் புறம்நின்றுஅழகுபேசாதே *
பெண்ணின்வருத்தமறியாத பெருமானரையில்பீதக
வண்ணவாடைகொண்டு * என்னை வாட்டம்தணியவீசீரே. (க)

பாலாலிலையில்துயில்கொண்ட பரமன்வலைப்பட்டிருந்தேனை *
வேலால்துன்னம்பெய்தாற்போல் வேண்டிற்றெல்லாம்பேசாதே *
கோலால்நிரைமேய்த்துஆயனாய்க் குடந்தைக்கிடந்தகுடமாடி *
நீலார்தண்ணந்துழாய்கொண்டு என்நெறிமென்குழல்மேல்சூட்டீரே (௨)

கஞ்சைக்காய்ந்தகருவில்லி கடைக்கணென்னும்சிறைக்கோலால் *
நெஞ்சூடுருவவேவுண்டு நிலையும்தளர்ந்துநைவேனை *
அஞ்சேலென்னான்அவனொருவன் அவன்மார்பணிந்தவனமாலை *
வஞ்சியாதேதருமாகில் மார்பில்கொணர்ந்துபுரட்டீரே. (௩)

ஆரேஉலகத்துஆற்றுவார் ? ஆயர்பாடிகவர்ந்துண்ணும் *
காரேறுழக்கஉழக்குண்டு தளர்ந்தும்முறிந்தும்கிடப்பேனை *
ஆராவமுதமனையான்தன் அமுதவாயிலூறிய *
நீர்தான்கொணர்ந்துபுலராமே பருக்கிஇளைப்பைநீக்கீரே. (௪)

அழிலும்தொழிலும்உருக்காட்டான் அஞ்சேலென்னான்அவனொரு [வன்
தழுவி ‡ முழுவிப்புகுந்தென்னைச் சுற்றிச்சுழன்றுபோகானால் *
தழையின்பொழில்வாய்நிரைப்பின்னே நெடுமாலூதிவருகின்ற *
குழலின்தொளைவாய்நீர்கொண்டு குளிரமுகத்துத்தடவீரே. (௫)

நடையொன்றில்லாஉலகத்து நந்தகோபன்மகனென்னும் *
கொடியகடியதிருமாலால் குளப்புக்கூறுகொளப்பட்டு *
புடையும்பெயரகில்லேன்நான் போட்கன்மிதித்தஅடிப்பாட்டில் *
பொடித்தான்கொணர்ந்துபூசீர்கள் போகாவுயிரென்னுடம்பையே. (௬)

வெற்றிக்கருளக்கொடியான்தன் மீமீதாடாஉலகத்து *
வெற்றவெறிதேபெற்றதாய் வேம்பேயாகவளர்த்தாளே *
குற்றமற்றமுலைதன்னைக் குமரன்கோலப்பணைத்தோளோடு *
அற்றகுற்றமவைதீர அணையஅமுக்கிக்கட்டீரே. (௭)

---

† 'போல்' என்று சிலர் பாடம். ‡ 'முழுசி' என்று கூறுவர்.

உள்ளேயுருகிநைவேனை உளளோஇலளோவென்னாத *
கொள்ளைகொள்ளிக்குறும்பனைக் கோவர்த்தனனைக்கண்டக்கால் *
கொள்ளும்பயனொன்றில்லாத கொங்கைதன்னைக்கிழங்கோடும் *
அள்ளிப்பறித்திட்டு அவன்மார்விலெறிந்து என்னழலைத்தீர்வேனே (அ)

கொம்மைமுலைகள் இடர்தீரக் கோவிந்தற்குஓர்குற்றேவல் *
இம்மைப்பிறவிசெய்யாதே இனிப்போய்ச்செய்யும்தவந்தானென் ? *
செம்மையுடைய திருமார்வில் சேர்த்தானேனும்ஒருஞான்று *
மெய்ம்மைசொல்லிமுகம்நோக்கி விடைதான்தருமேல்மிகநன்றே. (கூ)

ஃ அல்லல்விளைத்தபெருமானை ஆயர்பாடிக்குஅணிவிளக்கை *
வில்லிபுதுவைநகர்நம்பி விட்டுசித்தன்வியன்கோதை *
வில்லைத்தொலைத்தபுருவத்தாள் வேட்கையுற்றுமிகவிரும்பும் *
சொல்லைத்துதிக்கவல்லார்கள் துன்பக்கடலுள்துவளாரே. (கo)

அடிவரவு:—கண்ணன் பால் கஞ்சை ஆரே அழில் நடை வெற்றி உள்ளே கொம்மை அல்லல் பட்டி.

ஆண்டாள் திருவடிகளே சரணம்.



## கச - ஆந் திருமொழி - பட்டிமேய்ந்து.



[விருந்தாவனத்தே பரந்தாமனைக் கண்டமை கூறுதல்.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம் (கல்யாணிராகம் - ரூபகதாளம்)

ஃ பட்டிமேய்ந்தோர்காரேறு பலதேவற்குஓர்கீழ்க்கன்றாய் *
இட்டீறிட்டுவிளையாடி இங்கேபோதக்கண்டீரே ? *
இட்டமானபசுக்களை இனிதுமறித்துநீரூட்டி *
விட்டுக்கொண்டுவிளையாட விருந்தாவனத்தேகண்டோமே. (க)

அனுங்கவென்னைப்பிரிவுசெய்து ஆயர்பாடிகவர்ந்துண்ணும் *
குணுங்குநாறிக்குட்டேற்றைக் கோவர்த்தனனைக்கண்டீரே ? *
கணங்களோடுமின்மேகம் கலந்தாற்போல * வனமாலை
மினுங்கநின்றுவிளையாட விருந்தாவனத்தேகண்டோமே. (உ)

மாலாய்ப்பிறந்தநம்பியை மாலேசெய்யும்மணாளனை *
ஏலாப்பொய்களுரைப்பானை இங்கேபோதக்கண்டீரே ? *
மேலால்பரந்தவெயில்காப்பான் வினதைசிறுவன்சிறகென்னும் *
மேலாப்பின்கீழ்வருவானை விருந்தாவனத்தேகண்டோமே. (ங)

கார்த்தண்கமலக்கண்ணென்னும் நெடுங்கயிறுபடுத்தி * என்னை
ஈர்த்துக்கொண்டுவிளையாடும் ஈசன்தன்னைக்கண்டீரே? *
போர்த்தமுத்தின்குப்பாயப் புகர்மால்யானைக்கன்றேபோல் *
வேர்த்துநின்றுவிளையாட விருந்தாவனத்தேகண்டோமே. (௪)

மாதவன்என்மணியினை வலையில்பிழைத்தபன்றிபோல் *
ஏதுமொன்றும்கொளத்தாரா ஈசன்தன்னைக்கண்டீரே? *
பீதகவாடையுடைதாழப் பெருங்கார்மேகக்கன்றேபோல் *
வீதியாரவருவானை விருந்தாவனத்தேகண்டோமே. (௫)

தருமமறியாக்குறும்பனைத் தன்கைச்சார்ங்கமதுவேபோல் *
புருவவட்டமழகிய பொருத்தமிலியைக்கண்டீரே? *
உருவுகரிதாய்முகம்செய்தாய் உதயப்பருப்பதத்தின்மேல் *
விரியும்கதிரேபோல்வானை விருந்தாவனத்தேகண்டோமே. (௬)

பொருத்தமுடையநம்பியைப் புறம்போல்உள்ளும்கரியானை *
கருத்தைப்பிழைத்துநின்ற அக்கருமாமுகிலைக்கண்டீரே? *
அருத்தித்தாராகணங்களால் ஆரப் † பெருகுவானம்போல் *
விருத்தம்பெரிதாய்வருவானை விருந்தாவனத்தேகண்டோமே. (௭)

வெளியசங்கொன்றுடையானைப் பீதகவாடையுடையானை *
அளிநன்குடையதிருமாலை ஆழியானைக்கண்டீரே? *
களிவண்டெங்கும்கலந்தாற்போல கமழ்பூங்குழல்கள்தடந்தோள்மேல் *
மிளிரநின்றுவிளையாட விருந்தாவனத்தேகண்டோமே. (௮)

நாட்டைப்படையென்று ‡ அயன்முதலாத்தந்த நளிர்மாமலருந்தி *
வீட்டைப்பண்ணிவிளையாடும் விமலன்தன்னைக்கண்டீரே? *
காட்டைநாடித்தேனுகனும் களிறும்புள்ளும்உடன்மடிய *
வேட்டையாடிவருவானை விருந்தாவனத்தேகண்டோமே. (௯)

பருந்தாட்களிற்றுக்கருள்செய்த பரமன்தன்னை * பாரின்மேல்
விருந்தாவனத்தேகண்டமை விட்டுசித்தன்கோதைசொல் *
மருந்தாமென்று தம்மனத்தே வைத்துக்கொண்டுவாழ்வார்கள் *
பெருந்தாளுடையபிரானடிக்கீழ்ப் பிரியாதென்றும்இருப்பாரே. (௧௦)

அடிவரவு:—பட்டி அனுங்க மால் கார்த்தண் மாதவன் தருமம் பொருத்தம் வெளிய நாட்டை பருந்தாள் இருள்.

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

நாச்சியார் திருமொழி ஸம்பூர்ணம்.

---

† ‘பருகு’ என்பதும் பாடம். ‡ ‘அயன்தன்னை’ என்பதும் பாடம்.

# குலசேகராழ்வார் வைபவம்.

𑌕𑍁𑌮𑍍𑌭𑍇 𑌪𑍁𑌨𑌰𑍍𑌵𑌸𑍌 𑌜𑌾𑌤𑌂 𑌕𑍇𑌰𑌳𑍇 𑌚𑍋𑌳𑌪𑌟𑍍𑌟𑌨𑍇 ।
𑌕𑍌𑌸𑍍𑌤𑍁𑌭𑌾𑌂𑌶𑌂 𑌧𑌰𑌾𑌧𑍀𑌶𑌂 𑌕𑍁𑌲𑌶𑍇𑌖𑌰𑌮𑌾𑌶𑍍𑌰𑌯𑍇 ॥

కుంభే పునర్వసౌ జాతం కేరళే-చోళపత్తనే ।
కౌస్తుభాంశం ధరాధీశం కులశేఖరమాశ్రయే ॥

கும்பேபுநர்வஸௌஜாதம் கேரளேசோளபத்தநே।
கௌஸ்துபாம்ஸம்தராதீஸம் குலஸேகரமாஸ்ரயே॥

சேரநாட்டில் கோழிக்கூடென்னுமராஜதானியில் அரசாண்ட த்ருடவ்ரதனென்ற அரசன் வெகுநாளளவும் பிள்ளையில்லாத குறையால் திருமாலுக்கு விசேஷமான ஆராதனத்தைச் செய்ய, அதன்பயனால் அவனுக்கு ஒரு குமாரன கலியுகம் பிறந்த உஅ - ஆம் வருஷமான பராபவவருஷத்து மாசிமாதத்தில் சுக்கிலபக்ஷத்துத் துவாதசியும் வியாழக்கிழமையுங் கூடின சுபதினத்தில் புநர்வஸூநக்ஷத்திரத்திலே பட்டத்துஇராணியினிடத்தில் திருவஞ்சிக்களமென்ற ஊரிலே கௌஸ்துபாம்ஸமாய் அவதரித்தனன். அச்செய்தியை அறிந்த அரசன் ஆனந்தக்கடலில்ஆழ்ந்து, உரியகாலத்தில்நாமகரணஞ்செய்யத்தொடங்கி, இம்மகன் தன்குலத்துக்குச் சிரோபூஷணம்போலச் சிறப்புத்தந்து யாவராலுங் கொண்டாடத்தக்கவனெனக் கொண்டு 'குலசேகரன்' எனப் பெயரிட்டான்.

பின்பு, அவ்விளமகன் நாளொருவண்ணமும் பொழுதொருமேனியுமாகச் சுக்கிலபக்ஷத்துச் சந்திரன்போல வளர்ந்து சௌளமும் உபநயநமும் தக்க பருவங்களில் தந்தையாற் செய்விக்கப்பெற்று, நல்லாசிரியரைத் துணைக்கொண்டு, நான்கு வேதங்களையும் ஆறுசாஸ்திரங்களையும் தநுர்வித்தையையும் மற்றும் அரசர்க்கு உரிய நீதிநூல்களையும் யானை குதிரை தேர்முதலியவற்றின் நூல்களையும் சிறிதுகாலத்திலேயே ஐயந்திரிபுஅற முற்றக்கற்று வல்லனாயினன். அம்மைந்தனது திறத்தைக் கண்டு களிப்புக்கொண்ட காவலன் அவனுக்கு இளவரசுமுடி சூட்டினன்.

பின்னர், குலசேகரன் பராக்கிரமத்தாற் பகைவெல்லலுற்று நால்வகைச் சேனையோடு புறப்பட்டுச்சென்று, சோழ பாண்டியர் முதலிய அரசர்களனைவரையும் புறங்கொடுத்தோடுமாறு வென்று அவர்களைக்கீழ்ப்படுத்தி அவர்கள் நாடுகளைத் தன்வசப்படுத்தி, இங்ஙனம் சேரசோழபாண்டியமென்னுந் தமிழ்நாடு மூன்றுக்குந் தலைமை பூண்டதனால், "கொல்லிகாவலன் கூடல்நாயகன் கோழிக்கோன் குலசேகரன்" என்னும்படி பலபிருதுகளைப் பெற்று மீண்டு வந்தனன். பிறகு த்ருடவ்ரதமஹாராஜா குமாரனுக்குப்பட்டாபிஷேகஞ்செய்து இராச்சியபாரம் முழுவதையும் அம்மகன் தோளில் நிலைநிறுத்தி க்ஷத்திரிய ஜாதிமுறைப்படியே தான் தவஞ்செய்து உயர்கதிபெறுதற்பொருட்டுத் தவவனஞ் சென்றான்.

தந்தையின் பிரிவுக்கு ஆற்றாது வருந்தி மந்திரிகள் தேற்றத் தேறிய மன்னவகுமாரன், நடுவுநிலைமை தவறாது, சிறியவற்றைப் பெரியவை நலியாதபடி இராமராசசிய மென்னுமாறு எதிரின்றி அரசாண்டு ஒரு பெண்மணியை மணந்து, திருமாலின் தேவிமார் மூவருள் நீளாதேவியின் அம்சமான இளை யென்னும் ஒரு புத்திரியையும் த்ருடவ்ரத னென்று பிதாமகன் பெயரையே பெறும் ஒருபுத்திரனையும் பெற்றுக் கவலையற்றிருக்கையில், 'இம்மை மறுமை வீடு என்னும் மும்மையின்பங்களையுந் தரவல்லனாய் முதலும் முடிவும் அற்ற முழுமுதற்கடவுள் யாரோ?' என்று பரதத்துவவிசாரம் பண்ணத் தொடங்கிப் பலபண்டிதர்களுடனே ஸ்ருதி ஸ்மிருதி இதிஹாஸம் புராணம் முதலிய ஸகல கலைகளையும் பரிசோதித்துப் பார்த்துவர, அதுவே சமயமென்று அவ்வரசனை ஆட்கொண்டு உய்விக்கக் கருதிய கருணாநிதியான கமலக்கண்ணனது திருவருள் நோக்கத்தால், ஸ்ரீமகாவிஷ்ணுவே சிறந்ததெய்வ மென்கிற ஸத்தியமான சித்தாந்தம் அவனது ஞானக்கண்ணுக்குத் தெளிவிற் புலப்பட்டது.

இப்படி எம்பெருமானை எல்லாவுயிர்கட்கும் இறைவனாக அறிந்து அப்பிரானது அநந்த கல்யாணகுணகணங்களாகிய பெருங்கடலில் ஆழ்ந்து நெஞ்சுருகி ஈடுபட்ட இந்தக் குலசேகராழ்வார், திருமாலின் விபவாவதாரங்களில் ஸ்ரீராமாவதார கிருஷ்ணாவதாரங்களினிடத்திலும், அர்ச்சாவதாரத்தில் திருவரங்கம் திருவேங்கடம்முதலிய திவ்வியதேசத்து எம்பெருமான்களிடத்திலும் மிக்க பக்திபெருங்காதல் கொண்டு, ஸ்ரீராமாயண காலக்ஷேபத்தையே எப்பொழுதும் தமக்குப் பொழுதுபோக்காகப் பெற்றும், ஸ்ரீவைஷ்ணவர்களைக் கண்டால் எதிர்கொண்டு அழைத்துவந்து விசேஷமாக உபசரித்தும், தமது திருமாளிகைத் திருவாராதனத்தில் எழுந்தருளியுள்ள ஸ்ரீராமசந்திரமூர்த்திக்கும் ஸ்ரீராஜகோபாலஸ்வாமிக்கும் நித்திய நைமித்திக உத்ஸவங்களைக் குறைவறச் செய்துகொண்டும் இருந்தார்.

இவர், ஒருநாள் ஸ்ரீராமாயணகாலக்ஷேபஞ்செய்துவருகையில், ஆரண்ய காண்டத்தில் 'இராவணன் தங்கையான சூர்ப்பணகை மூக்கு அறுப்புண்டு தனக்குத் துணையாக இராவணனால் நியமிக்கப்பட்டு ஜநஸ்தாநத்தி லிருந்த கரதூஷணத்திரியரிடத்திற் போய் முறையிட்டதை யறிந்து அவர்கள் அதியுக்கிரமாக எண்ணிறந்த சேனைகளைத் திரட்டிக்கொண்டு படையெடுத்து வந்த சமயத்தில், பெருமாள், பிராட்டிக்குக்காவலாக இருக்கும்படி இளையபெருமாளைப் பர்ணசாலையிலே நிறுத்திவிட்டு, தமக்கு ஒருவருந் துணையின்றித் தாம் தனியே அவ்வரக்கர்களனைவரோடும் போர்க்குச்சென்று நின்றார்' என்று பௌராணிகர் சொல்லக் கேட்டவுடனே, ஸ்ரீராமசரித்திரத்தில் தமக்குஉள்ள மிக்க பிரீதி விசேஷத்தால், வெகுகாலத்துக்கு முன்பு நடந்த அந்தச் சரித்திரத்தை அன்று தான் நடக்கின்றதாக நினைத்து, 'இப்படிப்பட்ட சங்கடகாலத்தில் என்னால் இயன்ற உதவியைச் செய்யாதுவிடுவது சிறிதும் தக்கதன்று' என்றுதுணிந்து, தமதுசேனைகளையெல்லாம் போர்க்குச்சித்தமாய் முன்செல்லும்படி பணித்து, தாமும் ஜநஸ்தாநத்தை நோக்கிப் புறப்பட்டார். அச்சமயத்தில் யாவரும் இன்னதென்று அறியாது திடுக்கிட்டு நிற்கையில், அதிநிபுணரான ஆசிரியர்,

'இராமபிரான் தாம் ஒருவராகவே நிர்ப்பயமாகப் பிரபலயுத்தஞ்செய்து சத்துருக்களத்தனை பேரையுஞ் சயித்துத் தமது ஆச்சிரமத்துக்கு மீண்டுவர, அவரைச் சீதாதேவி களிப்புடன் அணைத்து அவரது இளைப்பைத் தணித்தாள்' என்ற செய்தியை எடுத்துக் கூற, அதுகேட்ட ஆழ்வார் ஆனந்தமடைந்து சேனையைத் திருப்பிக்கொண்டு தாமும் பிரயாணத்தை நிறுத்தினார்.

அதுமுதல், இராமாயணங்கூறுபவர், எந்தெந்தப்பாகத்தில் இராமனது விஜயப்ரஸ்தாபம் வருகின்றதோ அந்தந்தப்பாகத்தையே வளர்த்தியுரைத்தும், அரக்கராதியரால் இராகவபிரானுக்குத் துன்பம் நேர்ந்த இடங்களையெல்லாம் சுருக்கியுரைத்தும் வந்தனர். இப்படியிருக்கையில், ஒருநாள் அந்தக்குரு வேறொருகாரியநிமித்தம் தாம் அவசியமாகப் பிறிதிடஞ்செல்லவேண்டிவந்ததனால், இராமாயணகாலக்ஷேபஞ் சொல்லுதற்குத் தாம் வாராமல் தமது குமாரரை அனுப்பினார்.

அவர், குலசேகரருடைய இயற்கையை உணராமல், இராவணன் சீதையையெடுத்துப்போன வ்யஸநகரமான செய்தியை உபந்யாஸஞ்செய்ய, அது செவியிற்பட்டவுடனே குலசேகரர் மனங்கொதித்து 'நான் இப்பொழுதே வெகுவிரைவாகச் சென்று கடல்கடந்து இலங்கையை நீறுபடுத்தி ராக்ஷஸராஜனைப் பந்துமித்திரரோடும் போரில் தொலைத்து எனது அன்னையை மீட்டு வருவேன்' என்று சொல்லி எழுந்து ஆயுதங்களை யெடுத்துக்கொண்டு ஸேநாஸமூஹத்தோடு இலங்கையை நோக்கிப் பிரயாணமானார். அப்பொழுது விண்ணுலகத்தாரும் மண்ணுலகத்தாரும் இதனைக்கண்டு பெருவியப்புக்கொண்டு 'இதன்முடிவு என்னாகுமோ?' என்று பெருங்கவலையோடு பார்த்து நின்றனர். ஆழ்வார் கடலை நீந்தியே கடக்க நிச்சயித்துக் கழுத்தளவினதான தண்ணீரில் இறங்கிநின்ற சமயத்தில், இவரது அன்புக்கு இடமான இராமமூர்த்தி, இவரைத் தடுத்தற்கு வேறுவகை யொன்றும் இல்லாமையைக் கருதி, தாம் நேரிலே சீதையைக் கைப்பற்றிக்கொண்டு இலக்குமணனோடு எதிரில் வந்து நின்று தரிசனந் தந்து, தமதுபோர்வெற்றியையும் சத்துருவிநாசத்தையும் தேவியை மீட்டதையும் தெளிவாகக்கூறி, பிறவிப்பெருங்கடலினின்று கரையேறுதற்கு ஓர் அறிகுறியாகுமாறு இவரைக் கரையேற்றி நகரினுட்செலுத்திவிட்டு, பின்பு மறைந்தருளினார்.

இப்படி எம்பெருமானுடைய திவ்யசரித்திரங்களைக் கேட்பதில் மிக்க அன்பை யுடையரான குலசேகரர், புராணங்களிற் கூறப்பட்ட ஸ்ரீரங்கக்ஷேத்திரமகிமையைக்கேட்டு, 'திருவரங்கத்தைநோக்கிப் பிரயாணப்பட்டுச் செல்லுதலும், அத்திருப்பதிக்குச் செல்லவேண்டு மென்ற விருப்பமும், சகலகருமங்களையுந் தொலைக்கும்' என்ற தன்மையையும், 'அக்கோயிலில் நித்தியவாசஞ் செய்தலும், நம்பெருமாளைக் கண்ணாரக்கண்டு களித்தலும், பேரின்பத்தைத் தரும்' என்ற தகைமையையும் உணர்ந்து, அங்குப்போதற்கு மிக்க குதூகலமுடையராய்ப் பரிவாரங்களோடு புறப்படுபவரானார்.

இவர் இவ்விடத்தை விட்டு அவ்விடத்துச்சென்று பெரியபெருமாளைச் சேவிப்பாராயின் பின்பு இங்கு மீளுதலரிதென்றும், அங்குத்தானே நித்திய

வாசஞ்செய்யக் கருதிவிடுவரென்றும் நினைத்து அந்த யாத்திரையைத் தடுத்தற்கு ஆலோசித்து மந்திரிகள் ஒருபாயஞ்செய்தார்கள்; அது யாதெனில்:— இவர் ஸ்ரீவைஷ்ணவர்களை உபசரிப்பதில் மிக்க விருப்பமுள்ளவராதலால், அநேக பாகவதர்களை அமைச்சர்கள் வரவழைத்து இவர்முன் செலுத்த, இவர், 'அறுபதினாயிரம் வருஷகாலம் விஷ்ணுவை ஆராதநஞ்செய்த பயனும், ஒருகால் வைஷ்ணவர்களைப் பூசித்த பேற்றுக்கு ஈடாகாது' என்ற சாஸ்திரமுறைமையை யறிந்தவராதலால், ஸ்ரீரங்கயாத்திரையை நிறுத்தி, ஷோடசோபசாரத்தோடு திருமாலடியார்களைப் பலவாறு உபசரித்தார். இவ்வாறு இவர் திவ்யதேசயாத்திரை தொடங்கும்பொழுதெல்லாம் மந்திரிகள் மெய்யடியார்களைக் கொணர்ந்துவிட்டுத் தடுத்துவந்தனர். ஆழ்வார் இங்ஙனம் அவர்களை அகங்களிந்த அன்போடு கொண்டாடிவருகையில், அந்நாடெங்கும் ஸ்ரீவைஷ்ணவாதிரள் மிக்கது.

அரண்மனையினுள்ளும் ஆலோசனைச் சபாமண்டபத்திலும் இன்னும் அந்தரங்கமான இடங்களிலும் பாகவதர்கள் எக்காலத்திலுஞ் சிறிதுந் தடையின்றிப் போக்குவரவுசெய்தலையும் தமது அரசன்பக்கல் இவர்கள் வரம்பு கடந்த ஸ்வாதந்தரியம் பாராட்டுதலையுங் கண்டு பொறாமைகொண்ட மந்திரிகள், இவர்களிடத்துக் குலசேகரர்க்கு வெறுப்பையுண்டாக்கக் கருதினர். இவ்வாறு இருக்கையில், அனைவருங்கொண்டாடத்தக்க ஸ்ரீராமநவமிமஹோத்ஸவம் வந்தது. அதன்பொருட்டு, தோரணம் நாட்டியும், துவசங்களைக் கட்டியும், வாழைமரங்களை நிறுத்தியும் நகரம் முழுவதும் அலங்கரிக்கப்பட்டது. பின்பு திருக்கோயிலில் அர்ச்சகர், இராமமூர்த்திக்கும் மற்றும் விக்கிரகரூபமாயுள்ள எம்பெருமானகட்கும் திருமஞ்சனஞ்செய்தற்பொருட்டு அவர்களுடைய திவ்யாபரணங்களையெல்லாம் களைந்துவைத்தனர். பின்பு வேதகோஷத்தோடும் வாத்தியகோஷத்தோடும்திருமஞ்சனம்நடந்தேறிற்று. அச்சமயத்தில் யாவரும் ஸ்வாமிஸேவையிலே கருத்தூன்றி நிற்கையில், மந்திரிகள், ஒரு நவரத்தின மாலையைத் திருவாபரணத்திரளிலிருந்து எடுத்து ஒளித்துவைத்திட்டனர். பின்பு பெருமாளுக்கு அலங்காரஞ் செய்யும்பொழுது அவ்வணிகலத்தைக் காணமல் அர்ச்சகர் கவலைப்பட்டு அரசரிடத்து அறிவிக்க, அதுகேட்டு ஆழ்வார் மனங்கலங்கி மந்திரிகளை அழைப்பித்து 'கள்வனை விரைவில் தேடிப் பிடியுங்கள்' என்று கட்டளை யிட்டார். அதுவே வியாஜமாக, அவர்கள் 'இது கொண்டு போனவர் வைணவரேயன்றி வேறு எவரு மல்லர்; இவர்களே எப்பொழுதும் இங்கு எங்கும் தட்டின்றித் திரிகின்றவர்; பிறனொருவன் புதியனாகவந்து அஞ்சாது இத்தொழில்செய்யான்' என்று பாகவதர்மீது அடாப்பழி சுமத்தினர். நாராசம்புக்கதுபோல அக்கடுஞ்சொல் செவிபுகப்பெற்ற ஆழ்வார் அரிபக்தர்களின் நற்குணநற்செய்கைகளை நன்றாக அறிந்தவராதலால், அவர்கள்மேற் சற்றும் சங்கைகொள்ளாமல், அவர்களின்மீது குற்றங்கூறின தமது மந்திரிகளையே கடிந்து 'வைஷ்ணவசிகாமணிகள் ஒருபோதும் இத்தகைய கடுந்தொழிலை நினைத்தலுஞ் செய்யார்; இது திண்ணம்: இதனை உங்கட்கு உறுதிப்படுத்துதற்காக, யானே பிரமாணங்காட்டுவேன்' என்றுசொல்லி, பாம்பையுள்ளிட்டதொரு குடத்தைச் சபைமுன்பே தருவித்து, 'ஸ்ரீவைஷ்ணவர்

மனம் மொழி மெய் யென்னுந் திரிகரணத்தாலும் சுத்தராயின், இப்பாம்பு என்னை யாதொன்றுஞ் செய்யாது; இல்லையாயின, இந்நாகம் இப்பொழுதே என்னைத் தீண்டிக் கொல்லுக' என்று சபதஞ்செய்து அக்குடத்தினுள்ளே கையிட்டனர். அப்பொழுது, சத்தியத்துக்குக் கட்டுப்படுந் தன்மையதான சர்ப்பம் சிறிது கொடுமையும் புரியாது தணிந்திருந்தது. அதுநோக்கி, அமைச்சர்கள், தமது சூழ்ச்சி சிஞ்சித்தும் பலியாதுவிட்டதே யென்று வருத்தமும், தேர்ந்த ஆராய்ச்சியின்றி இங்ஙனந் தவறுசெய்துவிட்டோமே யென்று கழிவிரக்கமும், இனி நமது கதி என்னுமோ வென்று பேரச்சமுங் கொண்டு, நடுநடுங்கி, தாமகவா்ந்திட்ட அந்த ஆபரணத்தை உடனே கொணர்ந்து சமர்ப்பித்து, தாம அறியாத்செய்த அப்பெரும்பிழையைப் பொறுத்தருளுமாறு பிரார்த்தித்து, ஆழ்வாரது திருவடித்தாமரைகளைச் சரணமடைந்தார்கள். ஆழ்வார் மிக்க பொறுமையுடைய ராதலால் அமைச்சர்கள் பிழையைப் பொறுத்து 'இனி நீவிர் பாகவதர்கட்கு எப்பொழுதும் பணிவிடை செய்வதே, நுமது குற்றம்தீரும் வகை' என்று சொல்லிவிட, அவர்கள் அங்ஙனமே அடியவர்க்கு அடியாராய்க் குறிப்பறிந்து குற்றேவலபுரிந்து பேறுபெற்றனர்.

பின்பு குலசேகரா பொய்ம்மைக்கு இடமான அரசாட்சியில் இருத்தற்கு இஷ்டப்படாமல் தமது குமாரனை தருடவாதனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்துவைத்துத் தாம் திருவரங்கம்பெரியகோயிலுக்குச் சென்று நம்பெருமாளைச் சேவித்து, அவ்வழகியமணவாளனையே தனக்கு உரிய மணவாளனாகக் கருதிய தம் திருமகளை அப்பெருமானுக்கே உரியபொருளாகக்கொடுத்து மணஞ் செய்வித்து, பகவத் பாகவத கைங்கரியங்களை விதிமுறை வழுவாது நித்யமுஞ் செய்துகொண்டு அத்திருப்பதியிற் சிலகாலம் இருந்தனர்.

பிறகு மற்றுஞ் சில திவ்யதேசங்கட்கும் யாத்திரைசெய்ய எண்ணி, திருவேங்கடம், திருவயோத்தி, தில்லைத் திருச்சித்திரகூடம, திருக்கண்ணபுரம், திருமாலிருஞ்சோலை, திருவிற்றுவக்கோடு முதலிய திருப்பதிகட்குச் சென்று ஆங்காங்கு எழுந்தருளியிருக்கின்ற பெருமாளைக் கண்ணாரக்கண்டு சேவித்து, அப்பால், நம்மாழ்வாரது திருவவதாரஸ்தலமான திருக்குருகூர்க்கு அருகிலுள்ள பிரமதேசமென்னும் ஊரை யடைந்து, அங்கு ஸ்ரீராஜகோபாலஸ்வாமி சந்நிதியிற் சிலகாலம் திருத்தொண்டு செய்துகொண்டிருந்து, தமது அறுபத்தேழாவது பிராயத்திற் பரமபதமடைந்தனர்.

இவர் எம்பெருமானை அனுபவிக்கும்போது அவ்வநுபவத்தாலாகிய ஆனந்தம் உள்ளடங்காமையால் அது யாவாக்கும் புலப்படுமாறு அருளிச்செய்த திவ்வியப் பிரபந்தங்கள் - முகுந்தமாலை யென்னும் வடநூலும், பெருமாள் திருமொழி யென்னுந் தமிழ் நூலுமாம். இவற்றால் இவா வடமொழி தென்மொழி யிரண்டிலும் வல்லவரென விளங்கும்.

"அரசமர்ந்தானடிசூடு மரசையல்லா லரசாக வெண்ணேன் மற்றரசுதானே" என்று கோவிந்தபாதாரவிந்தத்தைச் சிரமேற் கொள்ளுதலையே சிரீ

டாபிஷேகமாகப பாவிககின்ற இவர் பெருமாளுடைய [இராமபிரானுடைய] இன்ப துனபஙகளைத தமது சுகதுக்கங்களாகக கருதியதனுல், இவாக்கு 'பெருமாள்' எனறும் ஒருபெயா வழங்கும்.

இவ்வாழ்வார் "செடியாய வல்வினைகள் தீர்க்குந் திருமாலே, நெடியானே வேஙகடவா நின்கோயிலின்வாயில், அடியாரும் வானவரும் அரம்பையரும் கிடந்தியங்கும், படியாய்க்கிடந்து உன்பவளவாய் காண்பேனே" என்று வேண்டியமைபற்றி விஷ்ணுவாலயங்களில் கோயிலினுள் வாயிற்படி 'குலசேகரன்படி' என்று இவாபெயரையிட்டு வழங்கப்படும்.



குலசேகராழ்வார்.

அஞ்சனமாமலைப்பிறவி யாதரிததோன வாழியே
அணியரங்கர் மணததூணை யடைநதுய்நதோன் வாழியே
வஞ்சிநகரநதன்னில் வாழவந்தோன் வாழியே
மாசிதனிற் புனர்பூசம் வநதுதிததான் வாழியே
அஞ்சலெனக் குடப்பாம்பி லங்கையிட்டான் வாழியே
அநவரத மிராமகதை யருளுமவன் வாழியே
செஞ்சொல்மொழி நூற்றஞ்சும் செப்பினுன் வாழியே
சேரலர்கோன் செங்கமலத் திருவடிகள் வாழியே.

குலசேகரப்பெருமாள் அருளிச்செய்த

# பெருமாள் திருமொழி.

## தனியன்கள்.

(† உடையவர் அருளிச்செய்தது.)

இருவிகற்பநேரிசை வெண்பா.

இன்னமுதமூட்டுகேன் இங்கேவாபைங்கிளியே ! *
தென்னரங்கம்பாடவல்லசீர்ப்பெருமாள் *—பொன்னஞ்
சிலைசேர் நுதலியர்வேள்சேரலர்கோன் * எங்கள்
குலசேகரனென்றேகூறு.

(மணக்கால்நம்பி அருளிச்செய்தது.)

கட்டளைக்கலித்துறை.

ஆரங்கெடப்பரனன்பர்கொள்ளாரென்று * அவர்களுக்கே
வாரங்கொடுகுடப்பாம்பிற்கையிட்டவன் * மாற்றலரை
வீரங்கெடுத்தசெங்கோல்கொல்லிகாவலன்வில்லவர்கோன் *
சேரன்குலசேகரன்முடிவேந்தர்சிகாமணியே.



## க - ஆந் திருமொழி—இருளிரியச்சுடர்மணிகள்.



[ஸ்ரீரங்கநாதனது ஸேவையை ஆஸம்ஸித்தல்.]

எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.(பந்துவராளிராகம் - ஆதிதாளம்.)

இருளிரியச்சுடர்மணிகள்இமைக்கும்நெற்றி
இனத்துத்தியணிபணம்ஆயிரங்களார்ந்த *
அரவரசப்பெருஞ்சோதிஅனந்தனென்னும்
அணிவிளங்கும்உயர்வெள்ளையணையைமேவி *
திருவரங்கப்பெருநகருள்தெண்ணீர்ப்பொன்னி
திரைக்கையால்அடிவருடப்பள்ளிகொள்ளும் *
கருமணியைக்கோமளத்தைக்கண்டுகொண்டு என்
கண்ணிணைகள்என்றுகொலோகளிக்குநாளே ? (க)

† மணக்கால்நம்பி அருளிச்செய்த தெனக் கூறுவாருமுளர்.

❀ வாயோரீரைஞ்ஞூறு துதங்களார்ந்த
வளையுடம்பினழல்நாகம்உமிழ்ந்தசெந்தீ *
வீயாதமலர்சென்னிவிதானமேபோல்
மேன்மேலுமமிகவெங்கும்பரந்ததன்கீழ் *
காயாம்பூமலர்ப்பிறங்கலன்னமாலைக்
கடியரங்கத்தரவணையில்பள்ளிகொள்ளும் *
மாயோனைமணத்தூணேபற்றிநின்று என்
வாயாரஎன்றுகொலோவாழ்த்தும்நாளே? (உ)

எம்மாண்பினயன்நான்குநாவினாலும்
எடுத்தேத்திஈரிரண்டுமுகமும்கொண்டு *
எம்மாடும் எழிற்கண்களெட்டினோடும்
தொழுதேத்தி இனிதிறைஞ்சநின்ற * செம்பொன்
அம்மான்தனமலர்க்கமலக்கொப்பூழ்தோன்ற
அணியரங்கத்தரவணையில்பள்ளிகொள்ளும் *
அம்மான்தன் அடியிணைக்கீழ்அலர்களிட்டு அங்கு
அடியவரோடென்றுகோலோ அணுகும்நாளே? (௩)

மாவினைவாய்பிளந்துகந்தமாலை வேலை
வண்ணனைஎன்கண்ணனை * வன்குன்றமேந்தி
ஆவினைஅன்றுய்யக்கொண்டஆயரேற்றை
அமரர்கள்தந்தலைவனைஅந்தமிழினின்பப்
பாவினை * அவ்வடமொழியைப் பற்றற்றார்கள்
பயிலரங்கத்தரவணையில்பள்ளிகொள்ளும் *
கோவினைநாவுறவழுத்திஎன்தன்கைகள்
கொய்ம்மலர்தூய்என்றுகொலோகூப்பும்நாளே? (௪)

இணையில்லா இன்னிசையாழ்கெழுமி இன்பத்
தும்புருவும்நாரதனும்இறைஞ்சியேத்த *
துணையில்லாத்தொன்மறைநூல்தோத்திரத்தால்
தொன்மலர்க்கணயனவணங்கியோவாதேத்த *
மணிமாடமாளிகைகள்மல்கு செல்வ
மதிளரங்கத்தரவணையில்பள்ளிகொள்ளும் *
மணிவண்ணனம்மானைக்கண்டுகொண்டு என்
மலர்ச்சென்னிஎன்றுகொலோவணங்கும்நாளே? (௫)

அளிமலர்மேலயனரனிந்திரனோடு ஏனை
அமரர்கள்தம்குழுவுமஅரமபையரும்மற்றும் *
தெளிமதிசேர்முனிவர்கள்தமகுழுவும் முநதித
திசைதிசையில்மலர்தூவிசசென்றுசேருமீ *
களிமலர்சேர்பொழிலரஙகததுஉரகமேறிக்
கண்வளரும்கடல்வண்ணர்கமலக்கண்ணும் *
ஒளிமதிசேர்திருமுகமுமகண்டுகொண்டு என்
உள்ளம்மிகஎன்றுகொலோஉருகும்நாளே ? (சு)

மறம்திகழும்மனமொழிததுவஞ்சமாற்றி
† ஐம்புலன்களடக்கிஇடர்ப்பாரத்துன்பம்
துறந்து * இருமுப்பொழுதேத்திஎல்லையில்லாத்
தொன்னெறிக்கண் நிலைநின்றதொண்டரான *
அறம்திகழும்மனத்தவர்தம்கதியைப் பொன்னி
யணியரங்கததரவணையில்பள்ளிகொள்ளும் *
நிறம்திகழுமமாயோனைக்கண்டு என்கண்கள்
நீர்மல்கஎன்றுகொலோநிற்கும்நாளே ? (எ)

கோலார்நதநெடுஞ்சார்ங்கம்கூனற்சங்கம்
கொலையாழிகொடுநதண்டுகொற்றவொள்வாள் *
காலார்ந்தகதிகருடனெனனும் வெனறிக்
கடும்பறவைஇவையனைததும்புறஞ்சூழ்காபப *
சேலார்நதநெடுங்கழனிசோலைசூழ்ந்த
திருவரங்கததரவணையில்பள்ளிகொள்ளும் *
மாலோனைக்கணடுஇன்பக்கலவிஎய்தி
வல்வினையேன்என்றுசொலோவாழும்நாளே ? (அ)

தூராதமனக்காதல்தொண்டர்தங்கள்
குழாம்குழுமித திருப்புகழ்கள்பலவும்பாடி *
ஆராதமனக்களிப்போடுஅழுதகண்ணீர்
மழைசோர நினைந்துருகியேதது * நாளும்
சீரார்ந்தமுழுவோசைபரவைகாட்டும்
திருவரங்கததரவணையில்பள்ளிகொள்ளும் *
போராழியம்மானைக்கண்டுதுள்ளிப்
பூதலத்தில்என்றுகொலோபுரளும்நாளே ? (கூ)

---

† 'வன்புலன்கள்' என்று சிலர்.

❀ வன்பெருவானகமுய்ய அமரருய்ய
மண்ணுய்யமண்ணுலகில்மனிசருய்ய *
துன்பமிகுதுயரகல அயர்வொன்றில்லாச்
சுகம்வளர அகமகிழும்தொண்டர்வாழ *
அன்பொடுதென்திசைநோக்கிப்பள்ளிகொள்ளும்
அணியரங்கன்திருமுற்றத்து * அடியார் தங்கள்
இன்பமிகுபெருங்குழுவுகண்டு யானும்
இசைந்துடனேஎன்றுகொலோஇருக்கும்நாளே? (க0)

❀ திடர்விளங்குகரைப்பொன்னிநடுவுபாட்டுத்
திருவரங்கத்தரவணையில்பள்ளிகொள்ளும் *
கடல்விளங்குகருமேனியம்மான்தன்னைக்
கண்ணாரக்கண்டுகக்கும்காதல்தன்னால் *
குடைவிளங்குவிறல்தானைக்கொற்றவொள்வாள்
கூடலர்கோன்கொடைக்குலசேகரன்சொற்செய்த *
நடைவிளங்குதமிழ்மாலைபத்தும்வல்லார்
நலந்திகழ்நாரணனடிக்கீழ்நண்ணுவாரே. (கக)

அடிவரவு :—இருள் வாய எம்மாண்பின் மாவினை இணை அளி மறம் கோல் தூராத வன்பெரு திடர் தேட்டு.

குலசேகரப்பெருமாள் திருவடிகளே சரணம்.

---

## உ - ஆந திருமொழி - தேட்டருந்திறல்.



[அரங்கனடியாரது அடிமைத்திறத்தில் ஈடுபடுதல்.]

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (ஸ்ரீராகம் - ரூபகதாளம்)

❀ தேட்டருந்திறல்தேனினைத் தென்னரங்கனை * திருமாதுவாழ்
வாட்டமில்வனமாலைமார்வனை வாழ்த்தி மால்கொள்சிந்தையராய் *
ஆட்டமேவியலந்தழைத்து அயர்வெய்தும்மெய்யடியார்கள்தம *
ஈட்டம்கண்டிடக்கூடுமேல் அதுகாணும்கண்பயனாவதே. (க)

தோடுலாமலர்மங்கை தோளிணைதோய்ந்ததும் * சுடர்வாளியால்
நீடுமாமரம்செற்றதும்நிரைமேய்த்ததும் இவையேநினைந்து *
ஆடிப்பாடிஅரங்கவோ ! என்றழைக்கும்தொண்டரடிப்பொடி
ஆடநாம்பெறில * கங்கைநீர்குடைந்தாடும்வேட்கை என்னாவதே ?

ஏறடர்த்ததும்ஏனமாய்நிலங்கீண்டதும் முன்இராமனாய் *
மாறடர்த்ததும்மண்ணளந்ததும் சொல்லிப்பாடி * வண்பொன்னிப்பே
ராறுபோல்வரும்கண்ணநீர்கொண்டு அரங்கன்கோயில்திருமுற்றம் *
சேறுசெய்தொண்டர்சேவடிச்செழுஞ்சேறு என்சென்னிக்கணிவனே.

தோய்த்ததண்தயிர்வெண்ணெய்பாலுடனுண்டலும் உடன்றாய்ச்சிகண்டு *
ஆர்த்ததோளுடைஎம்பிரான் என்னரங்கனுக்கு அடியார்களாய் *
நாத்தழும்பெழநாரணாவென்றழைத்து மெய்த்தழும்பத்தொழுது
ஏத்தி * இன்புறும்தொண்டர்சேவடி ஏத்திவாழ்த்துமென்நெஞ்சமே.

பொய்சிலைக்குரலேற்றெருத்தமிறுத்துப் போரரவீர்த்தகோன் *
செய்சிலைச்சுடர்சூழொளித் திண்ணமாமதிள்தென்னரங்கனாம் *
மெய்சிலைக்கருமேகமொன்று தம்†நெஞ்சில்நின்றுதிகழப்போய் *
மெய்சிலிர்ப்பவர்தம்மையேநினைந்து என்மனம்மெய்சிலிர்க்குமே. (ரு)

ஆதியந்தமனந்தமற்புதமான வானவர்தம்பிரான் *
பாதமாமலர்சூடும்பத்தியிலாத பாவிகளுய்ந்திட *
தீதில்நன்னெறிகாட்டி எங்குந்திரிந்துஅரங்கனெம்மானுக்கே *
காதல்செய்தொண்டர்க்கெப்பிறப்பிலும் காதல்செய்யுமென்நெஞ்சமே.

காரினம்புரைமேனிநற்கதிர் முத்தவெண்ணகைச்செய்யவாய் *
ஆரமார்வரரங்கனென்னும் அரும்பெருஞ்சுடரொன்றினை *
சேரும்நெஞ்சினராகிச் சோர்ந்துகசிந்திழிந்தகண்ணீர்களால் *
வாரநிற்பவர்தாளிணைக்கு ஒருவாரமாகுமென்நெஞ்சமே. (எ)

மாலையுற்றகடல்கிடந்தவன் வண்டுகிண்டுநறுந்துழாய் *
மாலையுற்றவரைப்பெருந்திருமார்வனை மலர்க்கண்ணனை *
மாலையுற்றெழுந்தாடிப்பாடித் திரிந்துஅரங்கனெம்மானுக்கே *
மாலையுற்றிடும்தொண்டர்வாழ்வுக்கு மாலையுற்றதென்நெஞ்சமே. (அ)

மொய்த்துக்கண்பனிசோரமெய்கள்சிலிர்ப்ப ஏங்கியிளைத்துநின்று *
எய்த்துக்கும்பிட்டுநட்டமிட்டெழுந்து ஆடிப்பாடியிறைஞ்சி * என்
அத்தனச்சனரங்கனுக்கு அடியார்களாகி * அவனுக்கே
பித்தராமவர்பித்தரல்லர்கள் மற்றையார்முற்றும்பித்தரே. (கூ)

அல்லிமாமலர்மங்கைநாதன் அரங்கன்மெய்யடியார்கள்தம் *
எல்லையிலடிமைத்திறத்தினில் என்றும்மேவுமனத்தனாம் *
கொல்லிகாவலன்கூடல்நாயகன் கோழிக்கோன்குலசேகரன் *
சொல்லினின்தமிழ்மாலைவல்லவர் தொண்டர்தொண்டர்களாவரே. (கo)

அடிவரவு:—தேட்டு தோடு ஏறு தோய்த்த பொய் ஆதி காரினம்
மாலை மொய்த்து அல்லி மெய்

குலசேகரப்பெருமாள் திருவடிகளே சரணம்.

† 'நெஞ்சன்' என்றும் பாடம்.

## ௩ - ஆந் திருமொழி - மெய்யில் வாழ்க்கையை.

[ஆழ்வார் ரங்கநாதபக்தராய் உலகத்தாரோடு தாம்சேராமை.]

கலிவிருத்தம். (ஸௌராஷ்ட்ரராகம் - அடதாளம்.)

மெய்யில்வாழ்க்கையை மெய்யெனக்கொள்ளும் * இவ்
வையந்தன்னொடும் கூடுவதில்லையான் *
ஐயனே! அரங்கா! என்றழைக்கின்றேன் *
மையல்கொண்டொழிந்தேன் என்தன்மாலுக்கே. (௧)

நூலினேரிடையார்திறத்தே நிற்கும் *
ஞாலந்தன்னொடும் கூடுவதில்லையான் *
ஆலியாஅழையா அரங்கா! என்று *
மாலெழுந்தொழிந்தேன் என்தன்மாலுக்கே. (௨)

மாரனார்வரிவெஞ்சிலைக்கு ஆட்செய்யும் *
பாரினாரொடும் கூடுவதில்லையான் *
ஆரமார்வன் அரங்கன்அனந்தன் * நல்
நாரணன் நரகாந்தகன்பித்தனே. (௩)

உண்டியேஉடையே உகந்தோடும் * இம்
மண்டலத்தொடும் கூடுவதில்லையான் *
அண்டவாணன் அரங்கன் * வன்பேய்முலை
உண்டவாயன்தன் உன்மத்தன்காண்மினே. (௪)

தீதில்நன்னெறிநிற்க அல்லாதுசெய் *
நீதியாரொடும் கூடுவதில்லையான் *
ஆதிஆயன் அரங்கன் * அந்தாமரைப்
பேதைமாமணவாளன்தன் பித்தனே. (௫)

எம்பரத்தரல்லாரொடும் கூடலன் *
உம்பர்வாழ்வை ஒன்றாகக்கருதிலன் *
தம்பிரான் அமரர்க்கு * அரங்கநகர்
எம்பிரானுக்கு எழுமையும்பித்தனே. (௬)

எத்திறத்திலும் யாரொடும்கூடும் * அச்
சித்தந்தன்னைத்தவிர்த்தனன் செங்கண்மால் *
அத்தனே! அரங்கா! என்றழைக்கின்றேன் *
பித்தனாயொழிந்தேன் எம்பிரானுக்கே. (௭)

பேயரே எனக்குயாவரும் * யானுமோர்
பேயனேயெவர்க்கும் இதுபேசியென் ! *
ஆயனே ! அரங்கா ! என்றழைக்கின்றேன் *
பேயனாயொழிந்தேன் எம்பிரானுக்கே. (அ)

அங்கையாழி அரங்கனடியிணை *
தங்குசிந்தைத் தனிப்பெரும்பித்தனாய் *
கொங்கர்கோன் குலசேகரன்சொன்னசொல் *
இங்குவல்லவர்க்கு ஏதமொன்றில்லையே. (கூ)

அடிவரவு:—மெய் நூல் மாரனார் உண்டி தீதில எம்பரத்தர் எத்திறத்திலும் பேயரே அங்கை ஊன

குலசேகரப்பெருமாள் திருவடிகளே சரணம்

---

## ச - ஆந் திருமொழி - ஊனேறு.

[ஆழ்வார் திருவேங்கடமலையிற்பிறத்தலை அவாவுதல்.]

தரவுகொச்சகக்கலிப்பா. (தந்யாசிராகம் - திரிபுடைதாளம்)

ஊனேறுசெல்வத்து உடற்பிறவியான்வேண்டேன் *
ஆனேறேழ்வென்றான் அடிமைத்திறமல்லால் *
கூனேறுசங்கமிடத்தான்றன் வேங்கடத்து *
கோனேரிவாழும் குருகாய்ப்பிறப்பேனே. (க)

ஆனாதசெல்வத்து † அரம்பையர்கள்தற்சூழ *
வானாளுஞ்செல்வமும் மண்ணரசும்யான்வேண்டேன் *
தேனார்பூஞ்சோலைத் திருவேங்கடச்சுனையில் *
மீனாய்ப்பிறக்கும் விதியுடையேனாவேனே. (உ)

பின்னிட்டசடையானும் பிரமனும்இந்திரனும் *
துன்னிட்டுப்புகலரிய வைகுந்தநீள்வாசல் *
மின்வட்டச்சுடராழி வேங்கடக்கோன்தானுமிழும் *
பொன்வட்டில்பிடித்து உடன்புகப்பெறுவேனாவேனே. (ங)

ஒண்பவளவேலையுலவு தண்பாற்கடலுள் *
கண்துயிலும்மாயோன் கழலிணைகள்காண்பதற்கு *
பண்பகருமவண்டினங்கள் பண்பாடும்வேங்கடத்து *
செண்பகமாய்நிற்கும் திருவுடையேனாவேனே. (ச)

---

† 'அரம்பையர் கடற்சூழ' என்றும் பிரிப்பர்.

கம்பமதயானைக் கழுத்தகத்தின்மேலிருந்து *
இன்பமரும்செல்வமும் இவ்வரசும்யான்வேண்டேன் *
எம்பெருமான் ஈசன எழில்வேங்கடமலைமேல் *
† தம்பகமாய்நிற்கும் தவமுடையேனாவேனே. (ரு)

மின்னனைய நுண்ணிடையார் உருப்பசியும்மேனகையும் *
அன்னவர்தம்பாடலொடும் ஆடலவைஆதரியேன் *
தென்னவெனவண்டினங்கள் பண்பாடும்வேங்கடத்துள் *
அன்னனையபொற்குடமாம் அருந்தவத்தெனாவேனே (சா)

வானாளுமாமதிபோல் வெண்குடைக்கீழ் * மன்னவர்தம்
கோனாகிவீற்றிருந்து கொண்டாடும்செல்வறியேன் *
தேனார்பூஞ்சோலைத் திருவேங்கடமலைமேல் *
கானாறாய்ப்பாயும் கருத்துடையேனாவேனே. (எ)

பிறையேறுசடையானும் பிரமனும்இந்திரனும் *
முறையாயபெருவேள்விக் குறைமுடிப்பான்மறையானான் *
வெறியார்தண்சோலைத் திருவேங்கடமலைமேல் *
நெறியாய்க்கிடக்கும் நிலையுடையேனாவேனே. (அ)

❁ செடியாயவல்வினைகள் தீர்க்கும்திருமாலே *
நெடியானே! வேங்கடவா! நின்கோயிலின் ‡ வாசல் *
அடியாரும்வானவரும் அரம்பையரும்கிடந்தியங்கும் *
படியாய்க்கிடந்து உன்பவளவாய்காண்பேனே. (கூ)

உம்பருலகாண்டு ஒருகுடைக்கீழ் * உருப்பசிதன்
அம்பொற்கலையல்குல் பெற்றாலும்ஆதரியேன் *
செப்பவளவாயான் திருவேங்கடமென்னும் *
எம்பெருமான்பொன்மலைமேல் ஏதேனுமாவேனே. (கo)

❁ மன்னியதண்சாரல் வடவேங்கடத்தான்தன் *
பொன்னியலும்சேவடிகள்காண்பான் புரிந்திறைஞ்சி *
கொன்னவிலும்கூர்வேல் குலசேகரன்சொன்ன *
பன்னியநூல்தமிழ்வல்லார் பாங்காயபத்தர்களே. (கக)

அடிவரவு:—ஊன் ஆனாத பின்னிட்ட ஒண் கம்பம் மின் வான் பிறை செடி உம்பர் மன்னிய தரு.

குலசேகரப்பெருமாள் திருவடிகளே சரணம்.

---

† 'தம்பமாய்' என்றும் கூறுவர். ‡ 'வாயில்' என்றும் வழங்குவர்.

## ரு - ஆந் திருமொழி - தருதுயரந்தடாயேல்.



[ † விற்றுவக்கோட்டம்மான்விஷயம்: ஆழ்வார் தமது அநந்யகதித்வத்தைத் தெரிவித்தல்.]

தரவுகொச்சகக்கலிப்பா. (சங்கராபரணராகம் - ரூபகதாளம்.)

தருதுயரம்தடாயேல் உன்சரணல்லால்சரணில்லை *
விரைகுழுவும்மலர்ப்பொழில்சூழ் விற்றுவக்கோட்டம்மானே ! *
அரிசினத்தால்ஈன்றதாய் அகற்றிடினும் * மற்றவள்தன்
அருள்நினைந்தேயழும் குழவியதுவேபோன்றிருந்தேனே. (க)

கண்டாரிகழ்வனவே காதலன்தான்செய்திடினும் *
கொண்டானையல்லால் அறியாக்குலமகள்போல் *
விண்தோய்மதிள்புடைசூழ் விற்றுவக்கோட்டம்மா ! * நீ
கொண்டாளாயாகிலும் உன்குரைகழலேகூறுவனே. (உ)

மீன்நோக்கும்நீள்வயல்சூழ் விற்றுவக்கோட்டம்மா ! * என்
பால்நோக்காயாகிலும் உன்பற்றல்லால்பற்றிலேன் *
தான்நோக்காது எத்துயரம்செய்திடினும் * தார்வேந்தன்
கோல்நோக்கிவாழும் குடிபோன்றிருந்தேனே. (ங)

வாளாலறுத்துச்சுடினும் மருத்துவன்பால் *
மாளாதகாதல் நோயாளன்போல் * மாயத்தால்
மீளாத்துயர்தரினும் விற்றுவக்கோட்டம்மா ! * நீ
ஆளாஉனதருளே பார்ப்பன்அடியேனே. (ச)

வெங்கண்திண்களிறடர்த்தாய் ! விற்றுவக்கோட்டம்மானே ! *
எங்குப்போய்உய்கேன் ? உன்னிணையடியேஅடையலல்லால் *
எங்கும்போய்க்கரைகாணாது எறிகடல்வாய்மீண்டேயும் *
வங்கத்தின்கூம்பேறும் மாப்பறவைபோன்றேனே. (ரு)

செந்தழலேவந்து அழலைச்செய்திடினும் * செங்கமலம்
அந்தரம்சேர்வெங்கதிரோற்கல்லால் அலராவால் *
வெந்துயர்வீட்டாவிடினும் விற்றுவக்கோட்டம்மா ! * உன்
அந்தமில்சீர்க்கல்லால் அகம்குழையமாட்டேனே. (சு)

எத்தனையும் ‡ வான்மறந்தகாலத்தும் பைங்கூழ்கள் *
மைத்தெழுந்தமாமுகிலேபார்த்திருக்கும் மற்றவைபோல் *
மெய்த்துயர்வீட்டாவிடினும் விற்றுவக்கோட்டம்மா ! * என்
சித்தம்மிகஉன்பாலே வைப்பன்அடியேனே. (எ)

† 'வித்துவக்கோடு' எனக் கூறுவாருமுளர். ‡ 'வான்வறந்த' என்றும் பாடம்.

தொக்கிலங்குயாறெல்லாம் பரந்தோடி * தொடுகடலே
புக்கன்றிப்புறம்நிற்கமாட்டாத மற்றவைபோல் *
மிக்கிலங்குமுகில்நிறத்தாய்! விற்றுவக்கோட்டம்மா ! * உன்
புக்கிலங்குசீரல்லால் புக்கிலன்காண்புண்ணியனே ! (அ)

நின்னையேதான்வேண்டி நீள்செல்வம்வேண்டாதான்
தன்னையே * தானவேண்டும் செல்வம்போல், மாயத்தால் *
மின்னையேசேர்திகிரி விற்றுவக்கோட்†டம்மா ! *
நின்னையேதானவேண்டி நிற்பன அடியேனே. (௯)

❀ விற்றுவக்கோட்டம்மா ! நீவேண்டாயேயாயிடினும் *
மற்றாரும்பற்றிலேனென்று அவனைத்தாள்நயந்த *
கொற்றவேல்தானைக் குலசேகரன்சொன்ன *
நற்றமிழ்பத்தும்வல்லார் நண்ணார்நரகமே. (௧௦)

அடிவரவு:—தரு கண்டார் மீன் வாளால் வெங்கண் செந்தழல் எத்தனை தொக்கு நின்னை விற்றுவக்கோடு ஏர்.

குலசேகரப்பெருமாள் திருவடிகளே சரணம்.



## ௬ - ஆந் திருமொழி - ஏர்மலர்ப்பூங்குழல்.

[ஆய்ச்சியர் ஊடி அமலனை எள்கியுரைத்தல்.]

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (செஞ்சுருட்டிராகம் - ஆதிதாளம்.)

❀ ஏர்மலர்ப்பூங்குழலாயாமாதர்
எனைப்பலருள்ள இவ்வூரில் * உன்தன்
மார்வுதழுவுதற்குஆசையின்மைஅறிந்தறிந்தே
உனதனபொய்யைக்கேட்டு *
கூர்மழைபோல்பனிக்கூதலெய்திக்
கூசிநடுங்கியமுனையாற்றில் *
வார்மணற்குன்றில்புலரநின்றேன்
வாசுதேவா ! உன்வரவுபார்த்தே. (௧)

கெண்டையொண்கண்மடவாளொருத்தி
கீழைபகத்துத்தயிர்கடையக்
கண்டு * ஒல்லைநானும்கடைவனென்று
கள்ளவிழியைவிழித்துப்புக்கு *

---

† 'அம்மானே' என்று சிலர்.

வண்டமர்பூங்குழல்தாழ்ந்துலாவ
வாள்முகமவேர்ப்பச்செவ்வாய்துடிப்ப *
தண்தயிர்நீகடைந்திட்டவண்ணம்
தாமோதரா! மெய்யறிவன்நானே. (உ)

கருமலர்க்கூந்தலொருத்திதன்னைக்
கடைக்கணித்து * ஆங்கேஒருத்திதன்பால்
மருவிமனம்வைத்துமற்றொருத்திக்குஉரைத்து
ஒருபேதைக்குப்பொய்குறித்து *
புரிகுழல்மங்கையொருத்திதன்னைப்
புணர்தி அவளுக்கும்மெய்யனல்லை *
மருதிறுத்தாய்! உன்வளர்த்தியூடே
வளர்கின்றதால்உன்தன்மாயைதானே. (௩)

தாய்முலைப்பாலில்அமுதிருக்கத்
தவழ்ந்துதளர்நடையிட்டுச்சென்று *
பேய்முலைவாய்வைத்துநஞ்சையுண்டு
பித்தனென்றேபிறரேசநின்றாய் *
ஆய்மிகுகாதலோடுயானிருப்ப
யான்விடவந்தஎன்தூதியோடே *
நீமிகுபோகத்தைநன்குகந்தாய்
அதுவும்உன்கோரம்புக்கேற்குமன்றே. (௪)

மின்னொத்தநுண்ணிடையாளைக்கொண்டு
வீங்கிருள்வாய்என்தன்வீதியூடே *
பொன்னொத்தவாடைகுக்கூடலிட்டுப்
போகின்றபோதுநான்கண்டுநின்றேன் *
கண்ணுற்றவளைநீகண்ணாலிட்டுக்
கைவிளிக்கின்றதும்கண்டேநின்றேன் *
என்னுக்குஅவளைவிட்டுஇங்குவந்தாய்?
இன்னம்அங்கேநடநம்பி! நீயே. (௫)

மற்பொருதோளுடைவாசுதேவா!
வல்வினையேன்துயில்கொண்டவாறே *
இற்றையிரவிடையேமத்துஎன்னை
இன்னணைமேலிட்டகன்றுநீபோய் *

அற்றையிரவும்ஓர்பிற்றைநாளும்
　　அரிவையரோடும்அணைந்துவந்தாய் *
எற்றுக்குநீஎன்மருங்கில்வந்தாய் ?
　　எம்பெருமான் ! நீயெழுந்தருளே. (சு)

பையரவின்னணைப்பள்ளியினாய் !
　　பண்டையோமல்லோம்நாம் * நீயுகக்கும்
மையரியொண்கண்ணினாருமல்லோம்
　　வைகிஎம்சேரிவரவொழிநீ *
செய்யவுடையும்திருமுகமும்
　　செங்கனிவாயுங்குழலுங்கண்டு *
பொய்யொருநாள்பட்டதேயமையும்
　　புள்ளுவம்பேசாதேபோகுநம்பீ ! (எ)

என்னைவருகவெனக்குறித்திட்டு
　　இனமலர்முல்லையின்பந்தர்நீழல் *
மன்னிஅவளைப்புணரப்புக்கு
　　மற்றென்னைக்கண்டுஉழறாநெகிழ்ந்தாய் *
பொன்னிறவாடையைக்கையில்தாங்கிப்
　　பொய்யச்சம்காட்டிநீபோதியேலும் *
இன்னம்என்கையகத்தீங்கொருநாள்
　　வருதியேல் என்சினம்தீர்வன்நானே. (அ)

மங்கலநல்வனமாலைமார்விலிலங்க
　　மயில்தழைப்பீலிசூடி *
பொங்கிளவாடைஅரையில்சாத்தி
　　பூங்கொத்துக்காதில்புணரப்பெய்து *
கொங்குநறுங்குழலார்களோடு
　　குழைந்துகுழலினிதூதிவந்தாய் *
எங்களுக்கேஒருநாள்வந்தூத
　　உன்குழலின்னிசைபோதராதே. (கூ)

❀ அல்லிமலர்த்திருமங்கைகேள்வன்தன்னை
　　நயந்துஇளவாய்ச்சிமார்கள் *
எல்லிப்பொழுதினில்ஏமத்தூடி
　　எள்கியுரைத்தஉரையதனை *

கொல்லிநகர்க்கிறைகூடற்கோமான்
குலசேகரன் இன்னிசையில்மேவி *
சொல்லிய இன் தமிழ்மாலைபத்தும்
சொல்லவல்லார்க்குஇல்லைதுன்பந்தானே. (கo)

அடிவரவு:—ஏர் கெண்டை கரு தாய் மின் மற்பொரு பை என்னை மங்கலம் அல்லி ஆலை.

குலசேகரப்பெருமாள் திருவடிகளே சரணம்.



## எ - ஆந் திருமொழி - ஆலை நீள் கரும்பு.

[கண்ணனது பாலசேஷ்டிதங்களைக் காணப்பெறாத
தேவகியின் புலம்பல்.]

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம் (கேதாரகௌளராகம்-அடதாளம்.)

ஆலைநீளகரும்பன்னவன்தாலோ
அம்புயத்தடங்கண்ணினன்தாலோ *
வேலைநீர்நிறத்தன்னவன்தாலோ
வேழப்போதகமன்னவன்தாலோ *
ஏலவார்குழலென்மகன்தாலோ
என்றென்றுஉன்னைஎன்வாயிடைநிறைய *
தாலொலித்திடும்திருவினையில்லாத்
தாயரில்கடையாயினதாயே. (க)

வடிக்கொளஞ்சனமெழுதுசெமமலர்க்கண்
மருவிமேலினிதொன்றினைநோக்கி *
முடக்கிச்சேவடிமலர்ச்சிறுகருந்தாள்
பொலியுமநீர்முகிற்குழவியேபோல *
அடக்கியாரச்செஞ்சிறுவிரலனைத்தும்
அங்கையோடுஅணைந்துஆனையிற்கிடந்த *
கிடக்கைகண்டிடப்பெற்றிலன்அந்தோ !
கேசவா ! கெடுவேன்கெடுவேனே. (உ)

முந்தைநன்முறையன்புடைமகளிர்
முறைமுறைதந்தமகுறங்கிடையிருத்தி *
எந்தையே ! என்தன்குலப்பெருஞ்சுடரே !
எழுமுகில்கணத்தெழில்கவரேறே ! *

உந்தையாவனென்றுரைப்ப நின்செங்கேழ்
விரலினும்கடைக்கண்ணினும்காட்ட *
நந்தன்பெற்றனன்நல்வினையில்லா
நங்கள்கோன்வசுதேவன்பெற்றிலனே. (௩)

களிநிலாவெழில்மதிபுரைமுகமும
கண்ணனே ! திண்கைமார்வும்திண்தோளும் *
தளிர்மலர்க்கருங்குழல்பிறையதுவும்
தடங்கொள்தாமரைக்கண்களும்பொலிந்த *
இளமையின்பத்தைஇன்றுஎன்தன்கண்ணால்
பருகுவேற்குஇவள்தாயெனநினைந்த *
அளவில்பிள்ளைமையின்பத்தையிழந்த
பாவியேனெனதாவிநில்லாதே. (௪)

மருவும்நின்திருநெற்றியில்சுட்டியசைதர
மணிவாயிடைமுத்தம்
தருதலும் * உன்தன்தாதையைப்போலும்
வடிவுகண்டுகொண்டுஉள்ளம்உள்குளிர *
விரலைச்செஞ்சிறுவாயிடைச்சேர்த்து
வெகுளியாய்நின்றுரைக்கும்அவ்வுரையும் *
திருவிலேன்ஒன்றும்பெற்றிலேன் எல்லாம்
தெய்வநங்கையசோதைபெற்றாளே. (௫)

தண்ணந்தாமரைக்கண்ணனே ! கண்ணா !
தவழ்ந்தெழுந்துதளர்ந்ததோர்நடையால் *
மண்ணில்செம்பொடியாடிவந்து என்தன்
மார்வில்மன்னிடப்பெற்றிலேன்அந்தோ ! *
வண்ணச்செஞ்சிறுகைவிரலனைத்தும்
வாரிவாய்க்கொண்டஅடிசிலின்மிச்சில் *
உண்ணப்பெற்றிலேன் ஓ! கொடுவினையேன்
என்னைஎன்செய்யப்பெற்றதுஎம்மோயே ! (௬)

குழகனே ! என்தன்கோமளப்பிள்ளாய் !
கோவிந்தா ! என்குடங்கையில்மன்னி *
ஒழுகுபேரெழிலிளஞ்சிறுதளிர்போல்
ஒருகையால்ஒருமுலைமுகம்நெருடா *

மழலைமென்னகையிடையிடையருளா
வாயிலேமுலையிருக்கஎன்முகத்தே *
எழில்கொள்நின்திருக்கண்ணிணைநோக்கந
தன்னையும் இழந்தேன்இழந்தேனே. (எ)

முழுதும்வெண்ணெயளைந்துதொட்டுண்ணும
முகிழிளஞ்சிறுத்தாமரைக்கையும *
எழில்கொள்தாம்புகொண்டடிப்பத்தற்குள்கு
நிலையும் வெண்தயிர்தோய்ந்தசெவ்வாயும *
அழுகையும்அஞ்சிநோக்குமஅந்நோக்கும்
அணிகொள்செஞ்சிறுவாய்நெளிப்பதுவும் *
தொழுகையும்இவைகண்டஅசோதை
தொல்லையின்பத்திறுதிகண்டாளே. (அ)

குன்றினால்குடைகவித்ததும் கோலக
குரவைகோத்ததும்குடமாட்டும *
கன்றினால்விளவெறிந்ததும் காலால்
காளியன்தலைமிதித்ததும்முதலா *
வென்றிசேர்பிள்ளைநல்விளையாட்டமனைத்திலும்
அங்குஎன் னுள்ளம்உள்குளிர *
ஒன்றும்கண்டிடப்பெற்றிலேன அடியேன
காணுமாறு இனிஉண்டெனில்அருளே. (கூ)

வஞ்சமேவியநெஞ்சுடைப்பேய்ச்சி
வரண்டுநார்நரம்பெழக்கரிந்துக்க *
நஞ்சமார்தருசுழிமுலைஅந்தோ !
சுவைத்துநீ அருள்செய் துவளர்ந்தாய் *
கஞ்சன்நாள்கவர்கருமுகிலெந்தாய் !
கடைப்பட்டேன்வறிதேமுலைசுமந்து *
தஞ்சமேலொன்றிலேன்உய்ந்திருந்தேன்
தக்கதேநல்லதாயைப்பெறாயே. (க௦)

❀ மல்லைமாநகர்க்கிறையவன்தன்னை
வான்செலுத்திவந † தீங்கணைமாயத்து *
எல்லையில்பிள்ளைசெய்வனகாணாத
தெய்வத்தேவகிபுலம்பியபுலம்பல் *

---

† 'ஈங்கணமாயத்து' என்று சிலர்.

கொல்லிகாவலன்மாலடிமுடிமேல்
கோலமாம்குலசேகரன்சொன்ன *
நல்லிசைத்தமிழ்மாலைவல்லார்கள்
நண்ணுவார்ஒல்லைநாரணனுலகே. (கக)

அடிவரவு:—ஆலை வடி முந்தை களி மருவு தண்ணம் குழகன் முழுதும் குன்றினால் வஞ்சம் மல்லை மன்னு.

குலசேகரப்பெருமாள் திருவடிகளே சரணம்.



## அ - ஆந் திருமொழி - மன்னுபுகழ்.

[சக்ரவர்த்தித்திருமகனைக் கௌசலையார் தாலாட்டும் பாசுரம்.]

தரவுகொச்சகக்கலிப்பா. (நீலாம்புரிராகம் - திரிபுடைதாளம்.)

❀ மன்னுபுகழ்க்கௌசலைதன் மணிவயிறுவாய்த்தவனே! *
தென்னிலங்கைக்கோன்முடிகள் சிந்துவித்தாய்! * செம்பொன்சேர்
கன்னிநன்மாமதிள்புடைசூழ் கணபுரத்துஎன்கருமணியே! *
என்னுடையஇன்னமுதே! இராகவனே! தாலேலோ. (க)

புண்டரிகமலரதன்மேல் புவனியெல்லாம்படைத்தவனே! *
திண்திறலாள்தாடகைதன் உரமுருவச்சிலைவளைத்தாய்! *
கண்டவர்தம்மனம்வழங்கும் கணபுரத்துஎன்கருமணியே! *
எண்திசையுமஆளுடையாய்! இராகவனே! தாலேலோ. (உ)

கொங்குமலிகருங்குழலாள் கௌசலைதன்குலமதலாய்! *
தங்குபெருமபுகழ்ச்சனகன் திருமருகா! தாசரதீ! *
கங்கையிலுமதிர்த்தமலி கணபுரத்துஎனகருமணியே! *
எங்கள்குலத்துஇன்னமுதே! இராகவனே! தாலேலோ. (ங)

தாமரைமேல்அயனவனைப் படைத்தவனே! * தயரதன்தன்
மாமதலாய்! மைதிலிதன மணவாளா! * வண்டினங்கள்
காமரங்களிசைபாடும் கணபுரத்துஎன்கருமணியே! *
† ஏமருவுஞ்சிலைவலவா! இராகவனே! தாலேலோ. (ச)

பாராளுமபடர்செல்வம் பரதநம்பிக்கேயருளி *
ஆராவன்பிளையவனோடு அருங்கானம்அடைந்தவனே! *
சீராளும்வரைமார்பா! திருக்கண்ணபுரத்தரசே! *
‡ தாராளும்நீண்முடி என்தாசரதீ! தாலேலோ. (ரு)

† 'ஏமரு வெஞ்சிலை' என்பதும் பாடம். ‡ 'தாரார்ரும்' என்பதும் பாடம்.

சுற்றமெல்லாம்பின்தொடரத் தொல்கானமடைந்தவனே ! *
அற்றவர்கட்குஅருமருந்தே ! அயோத்திநகர்க்குஅதிபதியே ! *
கற்றவர்கள்தாம்வாழும் கணபுரத்தென்கருமணியே ! *
சிற்றவைதன்சொற்கொண்ட சீராமா ! தாலேலோ. (சு)

ஆலினிலைப்பாலகனாய் அன்றுஉலகமுண்டவனே ! *
வாலியைக்கொன்று அரசுஇளையவானரத்துக்குஅளித்தவனே ! *
காலின்மணிகரையலைக்கும் கணபுரத்தென்கருமணியே ! *
ஆலிநகர்க்குஅதிபதியே ! அயோத்திமனே ! தாலேலோ. (எ)

மலையதனால்அணைகட்டி மதிளிலங்கையழித்தவனே ! *
அலைகடலைக்கடைந்து அமரர்க்குஅமுதருளிச்செய்தவனே ! *
கலைவலவர்தாம்வாழும் கணபுரத்தென்கருமணியே ! *
சிலைவலவா ! சேவகனே ! சீராமா ! தாலேலோ. (அ)

தளையவிழும்நறுங்குஞ்சித் தயரதன்தன்குலமதலாய் ! *
வளையஒருசிலையதனால் மதிளிலங்கையழித்தவனே ! *
களைகழுநீர்மருங்கலரும் கணபுரத்தென்கருமணியே ! *
இளையவர்கட்குஅருளுடையாய் ! இராகவனே ! தாலேலோ. (கூ)

தேவரையும்அசுரரையும் திசைகளையும்படைத்தவனே !*
யாவரும்வந்துஅடிவணங்க அரங்கநகர்த்துயின்றவனே !*
காவிரிநல்நதிபாயும் கணபுரத்தென்கருமணியே ! *
ஏவரிவெஞ்சிலைவலவா ! இராகவனே ! தாலேலோ. (கo)

கன்னிநன்மாமதிள்புடைசூழ் கணபுரத்தென்காகுத்தன்
தன்னடிமேல் * தாலேலோவென்றுரைத்த தமிழ்மாலை *
கொல்நவிலும்வேல்வலவன் குடைக்குலசேகரன்சொன்ன *
பன்னியநூல்பத்தும்வல்லார் பாங்காயபத்தர்களே. (கக)

அடிவரவு:—மன்னு புண்டரிகம் கொங்கு தாமரை பார சுற்றம் ஆலின் மலை தளை தேவரை கன்னி வன்தாள்.

குலசேகரப்பெருமாள் திருவடிகளே சரணம்.

## கூ - ஆந் திருமொழி - வன்தாளினிணை.



[தனயன் கான்புகத் தசரதன் புலம்புதல்.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (காம்போதி ராகம் - ஆதி தாளம்.)

வன்தாளினிணை வணங்கிவளநகரம்
தொழுதேத்த மன்னனாவான்
நின்றாயை * அரியணைமேலிருந்தாயை
நெடுங்கானம்படரப்போகு
வென்றாள் * எம்இராமாவோ !
உனைப்பயந்தகைகேசிதன்சொற்கேட்டு *
நன்றாகநானிலத்தையாள்வித்தேன்
நன்மகனே ! உன்னைநானே. (க)

வெவ்வாயேன்வெவ்வுரைகேட்டு இருநிலத்தை
வேண்டாதேவிரைந்து * வென்றி
மைவாய்களிறொழிந்துதேரொழிந்து
மாவொழிந்து வனமேமேவி *
செவ்வாயவேல்நெடுங்கண்சேயிழையும்
இளங்கோவும்பின்புபோக *
எவ்வாறுநடந்தனை ? எம்மிராமாவோ !
எம்பெருமான் ! என்செய்கேனே ! (உ)

கொல்லணைவேல்வரிநெடுங்கண் கௌசலைதன்
குலமதலாய் ! குனிவில்லேந்தும் *
மல்லணைந்தவரைத்தோளா ! வல்வினையேன்
மனமுருக்கும்வகையேகற்றாய் *
மெல்லணைமேல்முன்துயின்றாய்
இன்று இனிப்போய்வியன்கானமரத்தின்நீழல் *
கல்லணைமேலகண்துயிலக்கற்றனையோ ?
காகுத்தா ! கரியகோவே ! (ங)

வாபோகுவா இன்னம்வந்து
ஒருகால்கண்டுபோ, மலராள்கூந்தல் *
வேய்போலுமெழில்தோளிதன்பொருட்டா
விடையோன்தன்வில்லைச்செற்றாய் *

மாபோகுநெடுங்கானம் வல்வினையேன்
மனமுருக்கும்மகனே ! * இன்று
நீபோகஎன்னெஞ்சம் இருபிளவாய்ப்
போகாதேநிற்குமாறே !                                        (ச)

பொருந்தார்கைவேல்நுதிபோல்
பரல்பாய † மெல்லடிக்கள்குருதிசோர *
விரும்பாதகான்விரும்பிவெயிலுறைப்ப
வெம்பசிநோய்கூர * இன்று
பெரும்பாவியேன்மகனே ! போகின்றாய்
கேகயர்கோன்மகளாய்ப்பெற்ற *
அரும்பாவிசொற்கேட்டஅருவினையேன்
என்செய்கேன் ? அந்தோ ! யானே.                                  (ரு)

அம்மாவென்றுகந்தழைக்கும் ஆர்வச்சொல்
கேளாதே அணிசேர்மார்வம் *
என்மார்வத்திடையழுந்தத் தழுவாதே
‡ முழுசாதேமோவாதுச்சி *
கைம்மாவின்நடையன்னமென்னடையும்
கமலம்போல்முகமும்காணாது *
எம்மானைஎன்மகனையிழந்திட்ட
இழிதகையேன்இருக்கின்றேனே.                                  (சு)

பூமருவுநறுங்குஞ்சிபுன்சடையாப்புனைந்து
பூந்துகில்சேரல்குல் *
காமரெழில்விழலுடுத்துக் கலனணியாது
அங்கங்கள்அழகுமாறி *
ஏமருதோளென்புதல்வன் யான இன்று
செலத்தக்கவனம்தான்சேர்தல் *
தூமறையீர் ! இதுதகவோ ? சுமந்திரனே !
வசிட்டனே ! சொல்லீர்நீரே.                                   (எ)

பொன்பெற்றாரெழில்வேதப்புதல்வனையும்
தம்பியையும் பூவைபோலும் *
மின்பற்றாநுண்மருங்குல்மெல்லியலென்
மருகியையும் வனத்திற்போக்கி *

† 'மெல்லடிக்கண்' என்பதும் பாடம். ‡ 'முழுவாதே' என்று கூறுவாருமுளர்.

நின்பற்றுநின்மகன்மேல்பழிவிளைத்திட்டு
என்னையும்நீள்வானில்போக்க *
என்பெற்றாய் ? கைகேசி ! இருநிலத்தில்
இனிதாக இருக்கின்றாயே. (அ)

முன்னொருநாள்மழுவாளிசிலைவாங்கி
அவன்தவத்தைமுற்றும்செற்றாய் *
உன்னையும்உன்னருமையையும்உன்மோயின்
வருத்தமும் ஒன்றாகக்கொள்ளாது *
என்னையும்என்மெய்யுரையும்மெய்யாகக்
கொண்டு வனம்புக்கவெந்தாய் ! *
நின்னையேமகனாகப்பெறப்பெறுவேன்
ஏழ்பிறப்பும்நெடுந்தோள்வேந்தே ! (கூ)

தேனகுமாமலர்க்கூந்தல்கௌசலையும்
சுமித்திரையும்சிந்தைநோவ *
கூனுருவின்கொடுந்தொழுத்தைசொற்கேட்ட
கொடியவள்தன்சொற்கொண்டு * இன்று
கானகமேமிகவிரும்பிநீதுறந்த
வளநகரைத்துறந்து * நானும்
வானகமேமிகவிரும்பிப்போகின்றேன்
மனுகுலத்தார்தங்கள்கோவே ! (க0)

❀ ஏரார்ந்தகருநெடுமாலிராமனாய்
வனம்புக்க அதனுக்கு ஆற்றா *
தாரார்ந்ததடவரைத்தோள்தயரதன்தான்
புலம்பிய அப்புலம்பல்தன்னை *
கூரார்ந்தவல்வலவனகோழியர்கோன்
குடைக்குலசேகரன்சொற்செய்த *
சீரார்ந்ததமிழ்மாலைஇவைவல்லார்
தீநெறிக்கண்செல்லார்தாமே. (கக)

*அடிவரவு:—வன்தாள் வெவ்வாயேன் கொல்லணை வாபோகு பொருந்தார் அம்மா பூ பெறான் முன் தேன் ஏரார்ந்த அங்கண்.

குலசேகரப்பெருமாள் திருவடிகளே சரணம்.

## கO - ஆந் திருமொழி - அங்கணெடுமதிள்.



[ஸ்ரீராமாயண கதைச்சுருக்கம்.]

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (கல்யாணிராகம் - ஆதிதாளம்.)

அங்கணெடுமதிள்புடைசூழ்அயோத்தியென்னும்
அணிநகரத்துஉலகனைத்தும்விளக்கும்சோதி *
வெங்கதிரோன்குலத்துக்குஓர்விளக்காய்த்தோன்றி
விண்முழுதும்உயக்கொண்டவீரன்தன்னை *
செங்கணெடுங்கருமுகிலைஇராமன்தன்னைத்
தில்லைநகர்த்திருச்சித்ரகூடந்தன்னுள் *
எங்கள்தனிமுதல்வனைஎம்பெருமான்தன்னை
என்றுகொலோ! கண்குளிரக்காணுமநாளே. (க)

வநதெதிர்ந்ததாடகைதன்உரத்தைக்கீறி
வருகுருதிபொழிதரவனகணையொன்றேவி *
மந்திரம்கொள்மறைமுனிவனவேள்விகாத்து
வல்லரக்கருயிருண்டமைந்தன்காண்மின் *
செநதளிர்வாய்மலர்நகைசேர்செழுநதண்சோலைத்
தில்லைநகர்த்திருச்சித்ரகூடநதனனுள *
அந்தணர்களொருமூவாயிரவர்ஏதத
அணிமணியாசனத்திருநத அம்மானதானே. (உ)

செவ்வரிநற்கருநெடுங்கண்சீதைக்காகிச்
சினவிடையோன்சிலையிறுத்துமழுவாளேநதி *
வெவ்வரிநற்சிலைவாங்கிவென்றிகொண்டு
வேல்வேந்தர்பகைதடிநதவீரன்தனனை
தெவ்வரஞ்சுநெடும்புரிசைஉயாநதபாங்காத
தில்லைநகர்த்திருச்சித்ரகூடந்தன்னுள் *
எவ்வரிவெஞ்சிலைததடக்கைஇராமன்தன்னை
இறைஞ்சுவாரிணையடியேஇறைஞ்சினேனே. (௩)

தொத்தலர்பூஞ்சுரிகுழல்கைகேசிசொல்லால்
தொன்னகரம்துறந்து, துறைக்கங்கைதன்னை *
பத்தியுடைக்குகன்கடத்தவனமபோய்ப்புக்குப்
பரதனுக்குப்பாதுகமும்அரசும்ஈந்து *

சித்திரகூடத்துஇருந்தான்தன்னை இன்று
 தில்லைநகர்த்திருச்சித்ரகூடந்தன்னுள் *
எத்தனையும்கண்குளிரக்காணப்பெற்ற
 இருநிலத்தார்க்கு இமையவர்நேரொவ்வார்தாமே. (ச)

வலிவணக்குவரைநெடுந்தோள் † விராதைக்கொன்று
 வண்தமிழ்மாமுனிகொடுத்தவரிவில்வாங்கி *
கலைவணக்குநோக்கரக்கிமூக்கைநீக்கிக்
 கரனோடுதூடணன்தனுயிரைவாங்கி *
சிலைவணக்கிமான்மறியஎய்தான்தன்னைத்
 தில்லைநகர்த்திருச்சித்ரகூடந்தன்னுள் *
தலைவணக்கிக்கைகூப்பிஏத்தவல்லார்
 திரிதலால் தவமுடைத்துத் ‡ தரணிதானே. (ரு)

தனமருவுவைதேகிபிரியலுற்றுத்
 தளர்வெய்திச்சடாயுவைவைகுந்தத்தேற்றி *
வனமருவுகவியரசன்காதல்கொண்டு
 வாலியைக்கொன்று இலங்கைநகரரக்கர்கோமான் *
சினமடங்கமாருதியால்சுடுவித்தானைத்
 தில்லைநகர்த்திருச்சித்ரகூடந்தன்னுள் *
இனிதமர்ந்தஅம்மானைஇராமன்தன்னை
 ஏத்துவாரிணையடியேஏத்தினேனே. (சு)

குரைகடலைஅடலம்பால்மறுகவெய்து
 குலைகட்டிமறுகரையைஅதனாலேறி *
எரிநெடுவேலரக்கரொடும்இலங்கைவேந்தன்
 இன்னுயிர்கொண்டுஅவன்தம்பிக்குஅரசுமீந்து *
திருமகளோடினிதமர்ந்தசெல்வன்தன்னைத்
 தில்லைநகர்த்திருச்சித்ரகூடந்தன்னுள் *
அரசமர்ந்தானடிசூடும்அரசையல்லால்
 அரசுஆகஎண்ணேன்மற்றரசுதானே. (எ)

அம்பொனெடுமணிமாடஅயோத்தியெய்தி
 அரசெய்தி அகத்தியன்வாய்த்தான்முன்கொன்றான்
தன் * பெருந்தொல்கதைகேட்டுமிதிலைச்செல்வி
 உலகுய்யத்திருவயிறுவாய்த்தமக்கள் *

† 'விராதற்கொன்று' என்று சிலர். ‡ 'இத்தரணி' என்பதும் பாடம்.

செம்பவளத்திரள்வாய்த்தன்சரிதைகேட்டான்
தில்லைநகர்த்திருச்சித்ரகூடந்தன்னுள் *
எம்பெருமான்தன்சரிதைசெவியாற்கண்ணால்
பருகுவோம் இன்னமுதம் † மதியோமன்றே. (அ)

செறிதவச்சம்புகன்தன்னைச்சென்றுகொன்று
செழுமறையோனுயிர்மீட்டுததவத்தோனீந்த *
நிறைமணிப்பூணணியும்கொண்டுஇலவணன்தன்னைத்
தம்பியால்வானேற்றிமுனிவன்வேண்ட *
திறல்விளங்குமிலக்குமனைப்பிரிந்தான்தன்னைத்
தில்லைநகர்ததிருச்சித்ரகூடந்தன்னுள்
உறைவானை * மறவாதஉள்ளந்தன்னை
யுடையோம் மற்றுறுதுயர ‡ மடையோமன்றே. (கூ)

அன்றுசராசரங்களைவைகுந்ததேற்றி
அடலரவப்பகையேறிஅசுரர் தம்மை
வென்று * இலங்குமணிநெடுந்தோள்நான்கும்தோன்ற
விண்முழுதுமஎதிர்வரத்தன்தாமம்மேவி *
சென்றுஇனிதுவீற்றிருந்தஅம்மான்தன்னைத்
தில்லைநகர்த்திருச்சித்ரகூடந்தன்னுள் *
என்றும்நின்றான் அவனிவனென்றேத்தி நாளும்
இறைஞ்சுமினோஎப்பொழுதுமதொண்டீர் ! நீரே. (க௦)

தில்லைநகர்த்திருசசிதரகூடந்தன்னுள்
திறல்விளங்குமாருதியோடு அமர்ந்தான்தன்னை *
எல்லையில்சீர்ததயரதனதன்மகனாய்த்தோன்றிற்று
அதுமுதலாத தன்னுலகமபுக்கதீறு *
கொல்லியலும்படைத்தானைக்கொற்றவொள்வாள்
கோழியர்கோன்குடைக்குலசேகரன்சொற்செய்த *
நல்லியலின்தமிழ்மாலைபததும்வல்லார்
நலந்திகழ்நாரணனடிக்கீழ்நண்ணுவாரே. (கக)

டிவரவு:—அங்கண் வந்து செவ்வரி தொத்து வலி தனம் குரை அம்பொன் செறி அன்று தில்லை பூநிலாய.

குலசேகரப்பெருமாள் திருவடிகளே சரணம்.

பெருமாள்திருமொழி ஸம்பூர்ணம்.

---

† 'மதியோம்ஒன்றே' என்பதும், 'மதியோம்இன்றே' என்பதும் பாடம்.
‡ 'அடையோம்இன்றே' என்பதும் பாடம்.

# திருமழிசைப்பிரான் வைபவம்.

---

𑌮𑌘𑌾𑌯𑌾𑌂𑌮𑌕𑌰𑍇𑌮𑌾𑌸𑍇 𑌚𑌕𑍍𑌰𑌾𑌂𑌶𑌂𑌭𑌾𑌰𑍍𑌗𑌵𑍋𑌦𑍍𑌭𑌵𑌂 ।
𑌮𑌹𑍀𑌸𑌾𑌰𑌪𑍁𑌰𑌾𑌧𑍀𑌶𑌂 𑌭𑌕𑍍𑌤𑌿𑌸𑌾𑌰𑌮𑌹𑌂𑌭𑌜𑍇 ॥

మఘాయాం మకరేమాసే చక్రాంశం భార్గవోద్భవం ।
మహీసారపురాధీశం భక్తిసారమహంభజే ॥

மகாயாம்மகரேமாஸே சகராம்ஶம் பார்க்கவோத்பவம் -
மஹீஸாரபுராதீஶம் பக்திஸாரமஹம்பஜே.

முன்ஞெருகாலததில், அததிரி வசிஷ்டர் பிருகு பார்க்கவர் புலஸ்தியர் அங்கிரசு முதலிய பிரமவிருடிகள் பலரும் சத்தியலோகத்தைச்சார்ந்து அங்குத் தலைமைபூண்டு வீற்றிருக்கின்ற பிரமதேவனைத் திருவடிதொழுது கூப்பிய கையராய் அடியில்வருமாறு கூறலுற்றனர்:—'இஹ பர மோக்ஷமாகிற மூன்றிடங்களின பேற்றையும் பெறுதறகு ஏற்ற முயற்சி செய்யத்தக்க தலமாக விருத்தலால் அனைத்துலகங்களுள்ளுஞ் சிறந்ததான பூலோகத்திலே சிலாக்கிய தலமான க்ஷேத்திரம் இன்னதென்று தெரிந்து ஆங்குச்சென்று பெருந்தவமியற்றக் கருதி இபபொழுது இங்குவந்த எங்களுக்கு அத்தகைய திவ்விய ஸ்தானம் இன்னதென்று துணிந்து உரைத்தருளவேண்டும்' எனவேண்ட, அவ்வேண்டுகோளுக்கு இரஙகிய திரிபுவன கர்த்தாவாகிய சதுராநநர் உடனே தேவசிற்பியான விசுவகாமனை வருவித்து, 'இம்முனிவர்கள் காணத் துலாக்கோல் நாட்டி அதன் ஒருதட்டில ஐம்பதுகோடி யோசனை விஸ்தீர்ணமான பூமிமுழுவதையும், மற்றொருதட்டில் திருமழிசை யென்னும் புண்ணியக்ஷேத்திர மாத்திரத்தையும் வைத்து நிறுப்பாய்' என்று பணிக்க, அங்ஙனம் அவன் செய்தவளவிலே, மண்ணுலகமுழுவதையும் நாட்டிய தட்டு இலேசுபட்டு மேலோங்கி நிற்க, மழிசைப்பதியை யிட்ட தட்டு கனம்பெற்றுத் தாழ்ந்து நின்றது.

அவ்வேறுபாட்டைப பிதாமகக்கடவுள் அத்தபோதனர்க்கு நன்கு எடுத்துக்காட்டி அந்த மழிசைபபதிக்கு மஹீஸாரக்ஷேத்ரமென்று காரணப்பெயர் கூறி அதிற்போயிருந்து தவம்புரிந்து உயர்கதிபுகுமாறு அநுமதி தந்து அவர்களை அனுப்பினர்.

அவ்வண்ணமே அம்முனிபுங்கவர்கள் அவ்விடத்தை யடைந்து ஐம்பொறியடக்கி அருந்தவம் புரிந்தனர். அவர்களில் பார்க்கவரென்கிற முனிச்சிரேஷ்டர் தீர்க்கசத்திரமென்ற பெருவேள்வியைச் செய்து அதனால் வாசுதேவனை ஆராதித்து அதன்பின்னர் அவ்வாவனைச்செல்வனையே குறித்துப் பெருந்தவமியற்றுகையில், அதனைக்கண்டு அழுக்காறுகொண்ட தேவர்கள் அத்தவ-

வொழுக்கத்தை யழிக்குமாறு அரம்பை மேனகை ஊர்வசி திலோத்தமை முதலிய அப்ஸரஸ் ஸ்திரீகளநேகரை ஏவினர்கள். அவ்வரம்பையா பலர் வந்து பலவாறு முயன்றுபார்த்தும், எம்பெருமானது சரணகமலத்தில் அழுந்தி நின்ற அவரது இருதயகமலத்தை மீட்க இயலாமல், வெட்கமும் அச்சமுங் கொண்டு மீண்டுசெல்ல, அவர்களில் அதிநிபுணையான கனகாங்கியென்னுங் கட்டழகி விஷ்ணுமாயையைபோல வேண்டியவுயிர்களை மோகிப்பிக்கும் வல்லமையுடையாள், கருப்புவில்லியையும் வசந்தகாலத்தையும் மற்றும் காமோத்தீபகமான தென்றல் திங்கள் முதலியவற்றையும் உற்றதுணையாக உடன் கொண்டு வந்து அம்முனிவர் முன்னிலையில் ஆடல் பாடலாதி விநோதங்களைச் செய்ய, அப்பொழுது விதிவசத்தால் அவ்வருந்தவர் தமது உள்ளத்தைப் பகவத்தியானத்தினின்று மீட்டு அவளது கானாமிருதத்தைக் கேட்டுச் செவி படைத்த பயன் பெற்றோமெனக் கருதிக் கண்விழித்து அவ்வமரமகளது அதி சௌந்தரியத்தைக் கண்டு காமமுற்று யோகம்விட்டுப் போகம்வேட்டு அவளோடுகூடிக் குலாவி மோகவலையினுட் சிக்கிச் சிலகாலம் தம்மை மறந்து தையல் வசப்பட்டிருந்தனர்.

அக்காலத்திற் கருப்பங்கொண்ட அவளது வயிற்றினின்று தைமாதத்தில் மகநக்ஷத்திரத்தில், சுதர்சநமென்னுந் திருவாழியின் அம்சமானதொரு கர்ப்பம் வெளியாயிற்று. அது அவயவமொன்றுங் காணப்படாது பிண்டாகிருதியாக இருந்ததனால், அத்தேவமாது அதனை வெறுத்து அருகிலிருந்த பிரப்பம்புதரில் எடுத்தெறிந்துவிட்டுத் தன்னுலகஞ்சென்றனள்.

பின்பு தம்வசமடைந்த பார்க்கவா தவமிழந்ததற்குக் கழிபேரிரக்கமுற்று வேற்றிடமடைந்து மீண்டுந் தவந்தொடங்கலாயினர். இதுநிற்க: புதரில் எறியப்பட்ட பிண்டம் சிறந்ததோர் ஆண்குழந்தை வடிவமாகப் பரிணமித்து உயிர்பெற்றுப் பசிதாகங்களால் தனியே அழுதுகொண்டிருக்க, அவ்விடத்துக்கு அருகிலே அந்தத்தலத்தில் திருக்கோயில்கொண்டு எழுந்தருளியிருக்கின்ற ஜகந்நாதப்பெருமாள் பிராட்டியுடனே எழுந்தருளி அந்தச்சிசுவைக் குளிரக் கடாக்ஷித்து அதன் பசிதாகங்களைத் தவிர்த்து ஆராவமுதமான தமது திருமேனியைக் காட்டித் தேற்றி மறைந்துசெல்ல, அப்பெருமானது பிரிவை ஆற்றாமல் அக்குழந்தை மீளவும் அதிகமாக அழத்தொடங்கிற்று.

அச்சமயத்தில் அங்குப் பிரம்பறுக்க வந்தானொரு திருவாளனென்னும் வேளாளன் அவ்வழுகுரலைக் கேட்டு அருகில்வந்து அக்குழவியைக் கண்டு மிக்கமகிழ்ச்சிகொண்டு எடுத்துச்சென்று இல்லம்புக்குத் தன்மனைவியான பங்கயச்செல்வியை யழைத்து 'பிள்ளையில்லாத நமக்குத் தெய்விகமாகக் கிடைத்தது இது' என்று சொல்லிக் குழந்தையைக் கையிலே கொடுக்க, அவளும் அதிக ஆதரத்தோடு வாங்கிச் சீராட்டி வளர்க்கத்தொடங்குகையில், அவளுக்கு அம்மகவின்பாலுண்டான பேரன்பினாற் பால்சுரக்க, அதனை அவள் கொடுக்க முயறலும், அத்தெய்வக்குழவி அங்கீகரியாமல் ஸ்தந்யபாநாதிகளில் விருப்பற்றுப் பகவத்குணாநுபவத்தையே தாரகமாகக்கொண்டு பசிதாகங்கள் கொள்ளாது அழுதல் அரற்றுதல் கூவுதல் பேசுதல் முதலிய லோகவியாபார

மொன்றும் இன்றி மலமூத்திர ரகிதமாய்ப் பரிசுத்தமாக இளஞாயிறுபோலத் திருமேனியொளி விளங்க வளர்ந்துவந்தது.

"உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும்வெற்றிலையு மெல்லாங் கண்ணனெம்பெருமான்" என்றபடி இககுமாரர் பகவானை அனுபவித்தலாகிய அமிருதபானததாலே உள்ளமும் உடலமும் நிறைந்து உணவு நீர்வேட்கை யெழிநது காண்பவர் கேட்பவர் யாவரும் வியக்குமாறு எழுந்தருளியிருக்கிற செய்தியை அவ்வூரிலிருபபாஞெரு மூபபுடையவேளாளன் கேள்வியுற்று இவரைத் தரிசிக்க விரும்பிப் பசுவினபால் காயச்சி யெடுத்துக்கொண்டு தன் பாரியையுடனே ஒருநாளுதயகாலத்தில் இவரிருக்கிறவிடத்தை யடைந்து இவரது கிளரொளியிளமையைக் கண்டு அதியாச்சரியபபட்டுத் தான்கொணர்ந்த பாலைத் திருமுன்பே ஸமர்ப்பித்து 'இதனை உட்கொண்டருளவேண்டும்' என்று வெகுவாகப பிரார்த்தித்தான். அவனுடைய பக்திமிகுதிக்குத் திருவுள்ள முகந்து இவர் அதனை அமுதுசெய்தார். பிள்ளையில்லாக்குறையால் அந்தத தம்பதிகள் இவரையே தமககு எல்லாப்பேறுமாகப் பாவிதது நாளதோறும பால் கொண்டுவநது கொடுக்க, அவர்களது பகதியமுதத்துக்கு உவநது அதனைப் பானஞ்செய்துவந்த இவா, ஒருநாள் அவர்களது குறையைத் தீர்க்கக் கருதி, தாம் உண்டு சேடித்த பாலை 'நீங்களுண்ணுங்கள்' எனறு அவர்கட்குக கொடுக்க, அவர்கள் அதனைப பருகியவளவிலே, முதுமையொழிந்து இளமைபபருவ மடைந்தனர். பின்பு அவ்வேளாண்மகள் கர்பபவதியாய் ஒருபுததிரனைப பெற, அதுநோக்கிமகிழ்சசிகொண்ட அவள்கொழுநன் அக்குழந்தைக்குக கணிகண்ண னெனறு பெயரிட்டு அனபோடு வளர்த்து இவரது முன்னிலையிலே கொண்டு வநது விட, அவ்விளமகன இவரது கடாக்ஷவீக்ஷணத்தால் நல்லறிவுபெற்றுப் பலகலைகளை யுணாநது பகவத்பக்தியையும் பாகவதப்பிரதிபத்தியையும் மிகுதியாக உடையனாயினன.

பார்க்கவகுமாரா இபபடி எழுபிராயமளவும் பிரம்பறுப்பானிடத்திலேயிருந்து பினபு அஷடாஙகயோகத்தால் முழுமுதற்கடவுளை யடையக கருதுபவராய் அங்குநினறு புறப்பட்டுப பலவிடங்களையடைந்து 'எல்லாபபொருளுக்குந தலைமையான பரதத்வம் எதுவோ?' என்று ஆராயலுற்று, லோகாயதம் பௌத்தம் சமணம் முதலிய அவைதிகமான புறசசமயங்களுள்ளும் மாயாவாதம் முதலிய வைதிகமான அகச்சமயங்களுள்ளும் ஒவ்வொன்றிலும் தனித்தனி புகுதலுற்றா முதலில் ஒருமதத்திற் பிரவேசித்து அபபொழுது அதற்கு உரிய நூல்களையெல்லாம் ஆய்ந்துதேர்ந்து அம்மதத்திற்கேற்ற பெயரோடும் ஒழுககத்தோடுங் கூடி அதன் நிலையிலே ஊனறிநின்று பலநூல்களை யியற்றிப் பின்பு அக்கொள்கையில் சில குறைபாடுகளைக் கண்டு அதனை விட்டு வேறொருசமயத்தில் இறங்குவார். இவ்வாறே பலகாலம் பலமதங்களையும் பரிசோதித்தவா பின்பு சைவசமயமே ஸத்ஸமயமென்று துணிநது அதில் தலையிட்டுச் சிவவாக்கியரெனனும் பெயர்பூண்டு சிலபரமாகச் சிலநூல்களைச் செய்துகொணடு பிறமதஸ்தரோடு சம்பாஷணைசெய்தற்கும் பிரியமினறி ஏகாந்தசீலராய் ஓரிடத்திலே யிருந்து பரமசிவனைத் தியானித்துவருகையில், முத

லாழ்வார்களில் ஒருவரான பேயாழ்வார் அங்கு எழுந்தருளி அவரது செய லியை யறிந்து அவரைச் சீர்திருத்தி ஸ்ரீவைஷ்ணவஸமயத்தவ ராக்குதற்குத் திருவுளங்கொண்டு அவரது ஆச்சிரமத்துக்குச் சமீபத்தில் தாம் ஓர் ஆச்சிர மத்தை யமைத்துக்கொண்டு அதிலே சிலசெடிகளைத் தலைகீழாக நட்டுச் சில்லிக்குடமும் அற்றதாம்புங் கொண்டு அவற்றிற்கு நீர்வார்க்கத் தொடங்கி நின்றார். கண்டவர் பரிகசிக்கத்தக்க அச்செயலைப் பார்த்துச் சிவவாக்கியர் இகழ்ச்சிப் பெருநகைகொண்டு அவ்விடத்தை யடைந்து 'நீர் பித்தரோ? பேயரோ?' என்ன, அவர் 'நான் அத்தகையனல்லேன்; நீரே உன்மத்தர்' என்று உத்தரங்கூறினர். அதுகேட்டுச் சிவபக்தர் பிரத்யக்ஷமாகவுள்ள அவரது பொருந் தாதசெய்கையை எடுத்துக்காட்டித் தாம் சொன்னதை நிலைநிறுத்த, விஷ்ணு பக்தர் 'வெகுகாலமாக அநேகமதங்களில் அலைந்தும் பரதத்துவ மின்னதென்று உண்மைதெளியாத உம்மை உன்மத்தனென்னத் தடையென்ன? உற்பத்தி விநாசங்க ளில்லாத முழுமுதற்கடவுளான ஸ்ரீமந்நாராயணன் இருக்க, அவனை யறியாது, ஆக்கவழிவுகளோடுகூடிய சிவபிரானைத் தெய்வமாகக்கொண்டது, உமது உணர்வின்மையேயாகும்' என்று தாம் கூறியதை வற்புறுத்தத் தொடங்கி ஞர். அப்பொழுது, அதிப்பிரபலமாக இருவர்க்கும் சைவவைஷ்ணவ ஸம் வாதம் நடந்தது. அதில் தோல்வியடைந்த அரனடியவர் அதுகாறும் காலம் வீணே கழிந்ததற்கு அநுதபித்துச் சைவசின்னங்களை யொழித்துத் தம்மை வாதப்போரில் வென்ற வைஷ்ணவர்க்குச் சிஷ்யராய் அவரைச் சரணமடைய, அப்பொழுது, அவர்க்குப் பேயாழ்வார் பஞ்சஸம்ஸ்காரபூர்வகமாகத் தத்து வோபதேசஞ்செய்து எழுந்தருளினர். அதுமுதல் ஸாரதமமான விஷ்ணு பக்தியையே கொண்ட திருமழிசைப்பிரான் "சாக்கியங்கற்றோம் சமண் கற்றோம் சங்கரனா,ராக்கிய வாகமநூ லாராய்ந்தோம்—பாக்கியத்தாற், செங் கட்கரியானைச் சேர்ந்தோம் யாம் தீதிலமே, யெங்கட்கரியதொன்றில்" என்று எண்ணித் திருமழிசைக்கு வந்து யோகநிலையில் நின்று திருமகள்கொழுநனைத் தியானித்துக்கொண்டிருந்தார்.

அந்நாட்களில், ஒருநாள் ஆகாசமார்க்கத்தில் ருஷபவாகநாரூடராய்ப் பார் வதீபரமேசுவரர் செல்லுகையில், உமாதேவி இவரது தவவொழுக்கத்தைக் கண்டு கொண்டாடித் தமகாதலனை நோக்கி 'இவன் ஆரோ?' என வினவ, சிவபிரான் 'இம்மகாநுபாவன் நம்மைவிட்டு நாராயணனுக்கு அடிமைப்பட்ட வன்' என்று சொன்னவளவிலே, அம்பிகை 'இப்பெரியவனுக்கு நாமும் தரி சனந்தந்து ஏதேனும் வரமளித்துப்போவோம்' என்று கூற, அவளது விருப் பத்தின்படிசெய்யச் சம்மதித்துச் சங்கரபகவான் இவரெதிரில் வந்து காட்சி தந்தருளினர். இவர் அப்பிரானைப் பார்த்தும் பாராதவர்போல உபேக்ஷித்து ஒரு கந்தைத்துணியைத் தைத்துக்கொண்டு காரியாந்தரபரரா யிருக்கக் கண்டு, உமாபதி 'உனக்கு அருள்செய்யவந்த நம்மை நீ அநாதரஞ்செய்தல் தகுதியோ?' என்று நவில, வைணவயோகி 'உம்மால் ஆகவேண்டுவது ஒன்றும் எனக்கு இன்று; ஆதலின், நான் உதாசீனனாயிருந்தேன்' என்று உரைத்தார். பின்பும் சந்திரமௌலி 'நம்வரவு வீண்போவதன்று; உனக்கு அபீஷ்டமான வரம் வேண்டிப்பெற்றுவாழ்வாய்' என்று நிர்ப்பந்திக்க, அநந்தரம் ஆழ்வார் 'பரமபத

மருளவல்லீராயின் அருள்வீர்' என்று வேண்டினார். அதற்கு அக்கடவுள் 'அது நம்மால் தரத்தக்கதன்று; அது தருதற்குஉரிய தேவன் அச்சுதனே; ஆதலின், வேறுவரம் வேண்டுதி' என்ன, ஆழ்வார் புன்முறுவல்செய்து 'அம்முத்தியைப் பெறுதற்பொருட்டுப் பலகாலம் இவ்வுலகில் உயிர்த்திருந்து பெருந்தவம்புரிதற்கு உபயோகமாக நீண்ட ஆயுளையேனும் அடியேற்கு அளித்தருளும்' என்று பிரார்த்தித்தார். அதுகேட்டுக் கைலாசபதி 'அது கர்மாநுகுணமாக நடப்பதேயன்றி வளர்த்தத்தக்கதன்று; வேறு வேண்டுவதை விளம்புவாய்' என்னாலும், திருமழிசைபபிரான் குறுமுறுவலோடு இகழ்ச்சியாய் 'இவ்வூசியின்பின்னே நூலவரும்படி வரதாநஞ் செய்தருளீர்' என்று விநோதமாகச் சொல்ல, அப்பரிகாசவார்த்தை செவிப்பட்டவுடனே கடுஞ்சினங்கொண்டு கண்ணுதற்கடவுள் 'இச்செருக்குடையானை இப்பொழுதே அநங்கனைப்போலாக்கிவிடுவேன்' என்று தமது நெற்றியிலுள்ள நெருப்புக்கண்ணைத் திறந்து விட்டார். அதனினின்று புகையும் பொறியுமாகக் கிளர்ந்தெழுந்த காலாக்கினியைக் கண்டு பாகவதோத்தமர் சிறிதுங் கலங்காமல் 'இந்திரனைப்போல உடம்பு முழுவதிலுங் கண்காட்டினாலும் அஞ்சுவேனல்லேன்' என்றுசொல்லித் தமது வலத்திருவடியின் பெருவிரலி லுள்ளதொரு கண்ணைத் திறந்துவிட, அதிலிருந்து ஒருபெருந்தீ எழுந்து ஊழித்தீயினும் பலமடங்கு மேலிட்டு அவ்வனலை அடக்கத்தொடங்கிற்று. அவ்வளவில், அரவாபரணர் அக்கடுநெருப்பை யவிக்கும்படி தமது சடையிலுள்ள பலமேகங்களை யேவிவிட, அவையும் அங்ஙனமே கல்பாந்தகாலத்திற்போலச் சோனைமழைபொழிந்து பெருவெள்ளங் கோக்கவும், பரமபாகவதர் சிறிதுஞ் சலியாமல் பகவத்பக்தியிலே பிரவணராயிருந்தார். அதுகண்டு முக்கண்மூர்த்தி மிகவியந்து இவர்க்கு 'பக்திஸாரர்' என்று திருநாமஞ்சாத்தி இவர் வைபவத்தைக் கொண்டாடித் தம்மிடத்துக்கு மீண்டுசென்றனர்.

அதன்பின்பு ஆழ்வார் முன்போலவே யோகத்தி லெழுந்தருளியிருக்கையில், சுகதிஹாரனென்பானொரு சித்தன் தன் சாமர்த்தியத்தால் ஒருபுலியையடக்கி வாகனமாகக்கொண்டு அதன்மேலேறி நடாத்தி விசும்பாறுகச் செல்லுகையில், இவரது யோகப்பிரபாவத்தால் அவ்வூர்தி தடைப்பட்டு இவர்க்கு நேரில் மேலே வானத்திற் செல்லமாட்டாது திகைத்துநிற்க, அவன் 'இதற்கு ஏது என்னோ?' என்று எப்புறத்தும் பார்க்கையில், கீழேயிருக்கிற யோகியைக் கண்டு ஆச்சரியப்பட்டு அங்குநின்று இறங்கி இவரருகில் வந்து, இவரது சக்தியைச் சோதிக்கக் கருதி, 'ஓ முனீந்திரரே! நீர் உடுத்துநின்ற அந்தக் கந்தைச்சீலையைப் போகட்டுப் பீதாம்பரத்தாலாகிய இந்த உடையை உபயோகித்துக்கொள்ளும்' என்று ஒரு சிறந்த கஞ்சுகத்தை யுண்டாக்கிக்கொடுக்க, அவர் அதனைத் திரஸ்கரித்து, தமது இச்சாமாத்திரத்தால் மாணிக்கமயமானதொரு கவசத்தை நிருமித்துக்காட்டினார். சூரியன்போல ஒளிவிளங்குகின்ற அதனைக் கண்டு நாணங்கொண்டு அவ்வியாக்கிரவாகனன் தன்கழுத்தி லுள்ளதொரு மணிமாலையை வாங்கி 'இதனை ஜபமாலையாகத் தரித்துக்கொள்ளும்' என்று கொடுக்கவர, முனிவர் தாம் கண்டத்தில் தரித்துள்ள துளசிமணிமாலையையும்

தாமரைமணிமாலையையும் எடுத்துக்காட்டினர். அவை சிலாக்கியமான நவரத்தினமாலைகளாய் விளங்கக் கண்ணுற்று அவன் வெட்கப்பட்டு 'எல்லாச் சித்தர்களையும் வென்றுவந்த என்னை நீர் வென்றதனால், உம்மினுஞ் சிறப்புடையாரொருசித்தன் உலகத்தில் எங்கும் இலன்' என்று சொல்லித் துதித்துப் பிரதக்ஷிணஞ்செய்து நமஸ்கரித்து வேறுவழியாகச் சென்றிட்டான்.

பின்பும் அவர் அங்கே யோகநிஷ்டராயிருக்கையில், கொங்கணசித்தனென்பானோர் இரசவாதி அவரது மகிமையைக் கேள்வியுற்று மிக்க பரபரப்போடு அருகில் வந்து கோடியிரும்பைப் பொன்னாக்கவல்லதோர் இரசகுளிகையைக் காட்டி 'இதனை நீர் பெற்றுமகிழ்மின்' என்ன, மழிசைக்கிறைவர் அதனை வேண்டாவென்று விலக்கித் தமது பொன்னொத்தமேனியின் புழுதியை எடுத்துத்திரட்டி அவ்வுருண்டையை அவன்கையிற் கொடுத்து 'இக்குளிகை பலகோடிக்கற்களைப் பொன்னாக்கவல்லது; இதனைக்கொண்டு நீ பிழைப்பாய்' என்று சொல்லியருள, அவன் அதனை உடனே பரிசோதித்துப்பார்த்து அவ்வாறேயிருக்கக் கண்டு அதிப்ரீதியோடு ஆழ்வாரைத் தண்டனிட்டுப் போயினன்.

அப்பால் பக்திசாரர் பிறிதிடஞ்சென்று ஒருமலைக்குகையினுள் இருந்து யோகு செய்யாநிற்கையில், திவ்யதேச யாத்திரையாகச் சஞ்சரித்துவருகிற முதலாழ்வார்கள் மூவரும் அவ்விடத்தை யடைந்து உள்ளே யெழுந்தருளியிருக்கின்ற இவரது திவ்யமான திருமேனியொளியை வெளியிலிருந்து கண்டு அதியாச்சரியப்பட்டு முழையினுட் புக்குக் குசலப்ரச்நம் பண்ண, அதுகேட்டு அவரும் விரைவாக எழுந்து யோகக்ஷேமவிசாரணை செய்தவளவிலே, நால்வரும் பாலும் பாலுங் கூடினாற்போலவும் தேனும் தேனுங் கலந்தாற்போலவும் ஒருமனப்பட்டுச் சர்வகாலமும் பகவத் குணங்களையே கூறுதல் கேட்டல் சிந்தித்தல் துதித்தல் அநுபவித்தல் முதலியன செய்துகொண்டு தவஞ்செய்திருந்தார்கள். இப்படிச் சிலகாலஞ்சென்றபின் எல்லாரும் பேயாழ்வாரது திருவவதாரஸ்தலமான மயூரபுரிக்கு வந்து அங்கு அவ்வாழ்வார் தோன்றிய இடமாகிய கைரவதீர்த்தத்தின் கரையிலே சில ஆண்டு யோகம் முடித்த பின்னர், முன்னவர் மூவரும் பூமி சஞ்சாரார்த்தமாகப் போயினார்கள்.

அநந்தரம் ஆழ்வார், தமது ஜந்மபூமியான மஹீஸாரபுரத்துக்குச் சென்று தாம் வழக்கம்போலச் சாத்திக்கொள்ளுதற்குத் திருமண்வேண்டிச் சோதித்தவிடத்தில் அகப்படாமையால் மனக்கலக்கமுற, அப்பொழுது திருவேங்கடமுடையான் இவரது கனவிலே முற்பட்டு 'கச்சிவெஃகாவையடுத்த பொற்றாமரைப்பொய்கையிலே யுள்ளது' என்று கூறியருள, உடனே இவர் கவலையொழிந்து அங்கேசென்று திருமண்கண்டு களித்து எடுத்துவந்து தரித்துக்கொண்டு பகவதநுபவம் பண்ணுதலே தொழிலாகச் சிலகாலங்கழித்து, பின்பு மழிசையம்பதியைவிட்டுக் காஞ்சீபுரத்தைச் சேர்ந்து, அங்குத் திருவெஃகாவில் ஆதிசேஷசயனத்திலே திருப்பள்ளிகொண்டிருக்கிற பெருமானைச் சேவித்து ஈடுபட்டு அப்பிரானையே தியானஞ்செய்துகொண்டு அநேக வருஷகாலம் எழுந்தருளியிருந்தார்.

அப்பொழுது கணிகண்ணன வநது தனது ஆசிரியரான இவர்க்குப் பல விதமான சுசுரூஷைகளைப பண்ணிக்கொண்டு உபாதானமூலமாகச் சீவனஞ் செய்திருந்தான். அக்காலத்தில், தலைநரைத்து உடல்திரைந்து பருவம்முதிர்ந்த கிழவியொருத்தி பக்திசாரபாதஙளினங்களிற் பாமபக்தியுடனே அவருள்ள விடத்தைத திருவலகிடுதலும் மெழுகுதலும் கோலமிடுதலுமாகிய கைங்கரியங் களைத் தினந்தோறுஞ் செய்துகொண்டிருந்து ஒருநாள் அவர் திருக்கண்விழித்த அமயததிலே அவரைச சரணமடைந்து வாஙகேட்டுப்பெற்று மாறுத யௌ வனத்தை யடைந்து தேவமாதுபோல அதிசுந்தரையாயினள். அந்நகரத் தரச ஞன பல்லவராயன் ஒருநாள் அவளது வடிவழகைக் கணடு காதலுற்று விலை யுயர்ந்த அணிகலங்களையும் நலமிகுந்த பட்டாடைகளையும் பரிசுகொடுத்து அவளை மணஞ்செய்து பட்டமகிஷியாக்கி அவளுடன் வாழ்ந்திருநதான். இருக்கையில், தனது இளமை நாளுக்கு நாள் குறைவதையும் அவளது பரு வம் மாறுபடாததையும் கண்டு விம்மிதஙகொண்டு 'உனது மங்கைப்பிராயம் எஞ்ஞான்றும் ஒருபடியாயிருத்தற்கு எது என்ன?' என்று கேட்டு, ஆழ்வா ருடைய அநுக்கிரகமென்று அறிந்து, அவ்வருளைத தான் பெறுதற்கு நல்லுபா யத்தை நாடியுரைப்பாயென்று அவளையே வேண்டினன். அதுகேட்டு அவ் வணங்கு 'பிரதிதினமும் நமது அரண்மனைக்குப பிக்ஷுகராய் வருகிற கணி கண்ணரென்பவா அநத மகாயோகிக்கு அந்தரங்கர்; இவர் புருஷகாரமாக அவரை அநுவர்த்தித்தால், கருதியது கைகூடும' என்று கட்டுரைத்தாள். அவ் வாறே வேந்தன், மறுநாள் கணிகண்ணன் வந்தபோது, அவனைத் தனியே யழைத்து உபசரித்து 'உமது பரமகுருவை யான் சேவிக்குமாறு இங்கு அழைத்துவரவேண்டும்' என்று பிரார்த்திகக, அவன் 'நம் ஆசாரியர் ஓரிடத் துக்கும் எழுந்தருளார்' என்று கூறிவிட, மன்னவன் 'என்னை அங்கு அழைத் துப்போயாயினும் அவரது கருணைக்கு இலக்காக்குவித்து அவரருளால் என்னை எனறும் யுவாவாயிருக்கச் செய்யவேண்டும்' என்று வேண்ட, அதற்கும் அவன் உடன்படாமல் 'உன்னைப்போல இம்மைப்பயனையே யெதிர்நோக்கி நிற்பாரை ஆழ்வார் கண்ணெடுத்துப் பார்த்தலும் அரிது' என்று மறுத்துவிட்டான். பின்பு அரசன் வருந்திய சிந்தையனுயிருக்கையில், அமைச்சர்கள் வந்துதேற்றி 'இக்கணிகண்ணன் தெய்வப்புலமையுடையான்; இவன் வாயினுற் பாடியபடி யெல்லாம் பல அற்புதங்கள் நிகழ்கின்றன; ஆதலின், இவனுற் பாடப்பெற் ருல் 'இஷ்டசித்தி பெறலாம்' என்று உறுதிகூற, அங்ஙனமே மன்னவன் அடுத்தநாளில் அவ்வடியவன் வந்தபொழுது 'எனக்கு அழியாத இளமை வரு மாறு கவிபாடவேண்டும்' என்றுபுகல, அவ்வைணவன் 'நான் எப்பொழுதும் நாராயணஸ்தோத்திரஞ்செய்வேனே யொழிய நரஸ்துதி செய்வேனல்லேன்' என இயம்பினன். பின்பும் பார்த்திவன் தன்னைப் பாடவேண்டுமென்று நிர்ப்பந்திக்க, அவன் "ஆடவர்களெங்ஙனகன்ருேழிவார் வெஃகாவும், பாடகமு மூரகமும்பஞ்சரமா—நீடியமால், நின்ருனிருந்தான்கிடந்தானிதுவன்ருே, மன் ருர்பொழிற்கச்சிமாண்பு" என்ற ஒரு திருக்கவி சொல்ல, கொற்றவன் கோபங் கொண்டு 'நம்மைப்பாடு'என்ருல் நகரத்தைப்பாடிய நீ இவ்வூரில் இனி வசித்த லாகாது; உடனே வெளியே போ' என்று உறுக்கிக்கூற, உடனே கணிகண்

ணன் பக்திசாரரையடைந்து நடந்த செய்தியை விண்ணப்பஞ்செய்து 'அடியேனுக்கு விடைதந்தருளவேண்டும்' என்ன, ஆழ்வார் 'நானும் பெருமாளை யெழுந்தருளப்பண்ணிக்கொண்டு உடன்வருவேன்' என்று உரைத்துத் திருக்கோயிலுட் சென்று அடியவர்க்கெளியவனான கடவுளைத் திருவடிதொழுது "கணிகண்ணன்போகின்றான் காமருபூங்கச்சி, மணிவண்ணா நீகிடக்கவேண்டா- துணிவுடைய, செந்நாப்புலவனும்போகின்றேன் நீயுமுன்றன, பைந்நாகப்பாய் சுருட்டிக்கொள்" என்று பிரார்த்தித்தவளவிலே, அந்தப்பகவானும் ஆழ்வாரபிமதப்படி யோகநித்திரையைவிட்டு எழுந்துவர, மூவரும் அவ்வூரைவிட்டு அருகிலுள்ளதோரிடத்தை யடைந்து அங்கு வசித்தனர். இங்ஙனம் பெருமாளும் ஆழ்வாரும் சீவரடியானும் அப்பதியைவிட்டுப் போயினதால், அத்திவ்யதேசத்திற் பலதிருக்கோயில்களி லெழுந்தருளியிருக்கிற மற்றையெம் பெருமான்களும் விட்டு நீங்க, அப்புரமுழுவதும் பொலிவிழந்து, அங்கு மற்றும் பல ஆலயங்களிலிருக்கின்ற தேவதைகளின் சாந்நித்தியமு மில்லையாய், சூரியனொளியுஞ் செல்லாமல இருள்மூடப்பட்டது. இப்படி நீளிரவாய நீண்டதைக் கண்டு கவன்று மன்னவனும மந்திரிமாரும் அவர்களுள்ள விடத்தைத் தேடியடைந்து கணிகண்ணன்காலில விழுந்து தமது பிழையைப் பொறுத்தருளுமாறு பலவாறு பிரார்த்திக்க, அவனும மீண்டெழுந்தருளும்படி ஆழ்வார் பக்கல விண்ணப்பஞ்செய்ய, அவரும் அதனை அங்கீகரித்து ஆச்ரிதபாரதந்திரனான அரவணைச்செல்வனை நோக்கி, "கணிகண்ணன்போக்கொழிந்தான் காமருபூங்கச்சி, மணிவண்ணா நீகிடக்கவேண்டும்—துணிவுடைய, செந்நாப்புலவனும் போக்கொழிந்தேன்நீயுமுன்றன, பைந்நாகப்பாய்படுத்துக்கொள்"என்று,முன்பு பாடியபாட்டை மாற்றிப்பாடி வேண்ட, எம்பெருமானும் அதற்கு உடன்பட்டு ஆழ்வாரும் கணிகண்ணனும் உடனவர மீண்டெழுந்தருளித் திருவெஃகாவை யடைந்து ஆழ்வார்திறத்து அபிமானத்தால் தான இங்ஙனஞ்செய்தது பின் புள்ளார்க்கும் பிரதியக்ஷமாகவேணுமென்று முன்புபோல வலத்திருக்கை கீழாக வன்றி இப்பொழுது இடத்திருக்கை கீழ்ப்படக் கண்வளர்ந்தருளினன்.

இங்ஙனம் பக்தர்சொன்னபடி செய்ததனால், அப்பெருமானுக்கு 'யதோக்தகாரீ' என்று வடமொழியிலும், 'சொன்னவண்ணஞ்செய்தபெருமாள்' என்று தென்மொழியிலும் திருநாமம் வழங்கலாயிற்று. இவர்கள் சென்று ஓரிராத்திரி தங்கியிருந்த ஊர், 'ஓரிரவிருக்கை' எனப் பெயர்பெற்றது.

அம்மாத்திரத்திற் காஞ்சீநகரம் முன்போலப் பொலிவுபெறவே, அரசனும் பாகவதர்களது மகிமையை யுணர்ந்து அதுமுதல் அவர்கட்கே அடியவனாய் வாழ்ந்திட்டான்.

அநந்தரம் ஆழ்வார் கும்பகோணயாத்திராபேக்ஷை யுடையராய்ப் புறப்பட்டுச் செல்லும் வழியிடையே பெரும்புலியூரென்கிற கிராமத்தில ஒருவேதியனவீட்டு வீதிவேதிகையிற் சிறிதுபொழுது எழுந்தருளியிருக்க, அங்கு வேதமோதிக்கொண்டிருந்த அந்தணர்கள், நீறுபூத்தநெருப்புப்போலுள்ள அந்த மகாயோகியின் பிரபாவத்தை யறியாமல் அவரைக் கீழ்ப்பட்ட சாதியனொருவனாகக் கணித்து அவர்காதிற்பட வேதாத்தியயனஞ்செய்யாதே தவிர்ந்திருக்க,

அக்குறிப்பையறிந்த இவர் அவ்விடத்தை விட்டுத் தூரத்திற்சென்று வேறோரகத்துமேடையில் வீற்றிருந்தார். பின்பு அம் முதல் வருணத்தவர் மீண்டும் வேதாத்தியயனஞ் செய்யத்தொடங்கி, விட்டவிடந்தோன்றாது மயங்கி, 'இதற்குக் காரணம், வந்த அதிதியை அலக்ஷ்யஞ்செய்ததே' என்று அறிந்து அவரிடஞ் சென்று சேர, ஆழ்வார் அதனைநோக்கி, கறுப்புநெற்களைக் கையுகிராலேயிடந்து அவர்கள் விட்டசொற்றொடரைக் குறிப்பித்தருளிய மாத்திரத்திலே, அப்பொருளுள்ள * வேதவாக்கியம் அவர்களுக்குத் தோன்றிற்று உடனே அவர்கள் பிரதக்ஷிணப்பிரணாமாதிகளால் இவரை உபசரித்துக் கிருதார்த்தரானார்கள்.

அப்பொழுது அவ்வூர்த் திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கின்ற எம்பெருமான் இவ்வாழ்வார் எந்தெந்த முகமாகத் திரும்புகின்றனரோ அந்தந்த முகமாகத் திரும்பியருள, அந்த ஆச்சரியத்தை அர்ச்சகர் மூலமாக அறிந்து அவ்வூரவரனைவரும் அங்கு யாகஞ்செய்துகொண்டிருந்த பெரும்புலியூரடிகளிடத்தே சென்று இவருடைய வைபவத்தைக் கூற, அதுகேட்டவுடனே தீக்ஷிதரும் அதிக ஆனந்தத்தோடு வந்து பக்திசாரரைத் தரிசித்துக் கண்படைத்த பயன் பெற்றோமென்று களித்து யாகசாலைக்கு எழுந்தருள்வித்துக் கொண்டுபோய் அவர்க்கு அக்கிரபூசை செய்திட்டார். தருமபுத்திரர் இராயசூயயாகத்திலே ஸ்ரீகிருஷ்ணனுக்குப் பிரதம தாம்பூலஞ் சமர்ப்பித்தபொழுது சிசுபாலன் பலவிதமாகப் பழித்தாற்போல, இங்கும் அழுக்காறுற்ற நான்மறையாளர் பலர் எண்ணிறந்த நிந்தைமொழிகளைக் கூற, முற்பூசை தந்த முனிவர் 'அவர்களை அடக்கியருளவேண்டும்' என்று ஆழ்வாரைப் பிரார்த்திக்க, இவரும் அவரது வேண்டுகோளின்படி செய்யக் கருதி, தமக்கு அந்தர்யாமியான அநந்தசயனனைக் குறித்து, "அக்கரங்களக்கரங்களென்றுமாவதென்கொலோ, இக்குறும்பைநீக்கியென்னையீசனாக்கவல்லையேற், சக்கரங்கொள்கையனே சடங்கர்வாயடங்கிட, உட்கிடந்தவண்ணமேபுறம்பொசிந்துகாட்டிடே" என்று விண்ணப்பஞ்செய்ய, எம்பெருமான் "தம்மையே நாளும் வணங்கித் தொழுவார்க்குத், தம்மையேயொக்க வருள்செய்வர்" ஆதலால, திருமகளும் நிலமகளுந் திருவடிவருடப் பெரிய திருவனந்தாழ்வான்மீது அறிதுயிலமருந் திருவுருவத்தை இவரது திருமேனியிலே தோற்றுவிக்க, அனைவரும் அந்தத்திவ்விய மங்களவிக்கிரகத்தைச் சேவித்து ஆழ்வாரது வாசாமகோசரமான விபவத்தையுணர்ந்து அவரது சீர்பாதங்களிலே ஸாஷ்டாங்கமாகத் தண்டன் சமர்ப்பித்து அபராதக்ஷாமணஞ்செய்தருளுமாறு வேண்ட, மழிசைக்கிறைவர் அவர்கட்கு ஞானோபதேசஞ்செய்து ஆட்கொண்டு வாழ்வித்தருளி, திருக்குடந்தைக்குச் சென்று, அங்குச் சயனத்திருக்கோலமாக எழுந்தருளியிருக்கின்ற ஆராவமுதனைச் சேவித்து அப்பெருமானது திருக்கோலத்திலே ஈடுபட்டு, "நடந்தகால்கள்நொந்தவோ நடுங்கஞாலமேனமா, யிடந்தமெய் குலுங்கவோ விலங்குமால்வரைச்சுரங், கடந்தகால்பரந்தகாவிரிக்கரைக்குடந்தையுட், கிடந்தவாறெழுந்திருந்துபேசு" என்றுவிண்ணப்பஞ்செய்ய, அப்பிரானும் ஆழ்வார்பக்கல்

* "க்ருஷ்ணாநாம் வ்ரீஹீணாம் நகநிர்ப்பிந்நம்."

கொண்ட அளவில்பெருங்கருணையால் அர்ச்சாவதாரத்தின் வரம்பு கடந்து விபவாவதாரத்திற்போல அங்ஙனம் எழுந்திருந்து பேசமுயல, உடனே பகதிசாரர் 'இந்த அதிசௌலபயிதத்துக்கு ஒரு தீங்கு வாராதிருக்கவேணும்' என்று திருவுள்ளம்பற்றி "வாழி கேசனே" என்று மங்களாசாஸநம்பண்ண, பெருமானும் அப்பொழுதிருந்தபடியே உத்தானசாயியாய் நிலைத்தருளினான். அந்த ஆராவமுதாழ்வாருடைய திருவடிவதனையே தியானஞ்செய்துகொண்டு திருமழிசைப்பிரான் அத்திருப்பதியிலே அநேககாலம் யோகத்தி லெழுந்தருளியிருந்தார்.

இப்படி இவர் நாலாயிரத்தெழுநூறு வருஷகாலம் பூலோகத்தில் வாழ்ந்திருந்து, தாம் பகவானை அனுபவம் பண்ணினபடிகளை நான்காந்திருவந்தாதி, திருச்சந்தவிருத்தம் என்கிற திவ்யப்ரபந்தமூலமாக உலகத்தார்க்கு உபகரித்தருளி, "இனியறிந்தேன் ஈசற்கும் நான்முகற்குந் தெய்வம், இனியறிந்தே னெம்பெருமா னுன்னை—இனியறிந்தேன், காரணன்நீ கற்றவைநீ கற்பவைநீ நற்கிரிசை, நாரணன்நீ நன்கறிந்தேன்நான்" என்று சகலப் பிரபஞ்சகாரணனை நாரணனது பரத்வத்தை வெளியிட்டு யாவரையும் உய்வித்து அநந்தரம் திருக்குடந்தையிலே மீளாவுலகம் புக்கருளினார்.



திருமழிசைப்பிரான்.

அன்புடனந்தாதி தொண்ணூற்றுறுரைத்தான் வாழியே
　　அழகாருந் திருமழிசை யமர்ந்தபிரான் வாழியே
இன்பமிகு தையில்மகத் திங்குதித்தான் வாழியே
　　எழிற்சந்தவிருத்தம நூற்றிருப தீந்தான் வாழியே
முன்புகத்தில் வந்துதித்த முனிவாகோன் வாழியே
　　முழுப்பொன்னிப் பெருக்கெதிசெல் முதிர்கவியோன் வாழியே
நன்புவி நாலாயிரத்தெழுநூ றிருந்தான் வாழியே
　　நங்கள்பக்தி சாரனிரு நற்பதங்கள் வாழியே.

திருமழிசைப்பிரான் அருளிச்செய்த

# திருச்சந்த விருத்தம்.

## தனியன்கள்.

(திருக்கச்சிநம்பி அருளிச்செய்தது)

தரவுகொச்சகக்கலிப்பா.

தருச்சந்தப்பொழில்தழுவு தாரணியின்துயர்தீர *
திருச்சந்தவிருத்தம்செய் திருமழிசைப்பரன்வருமூர் *
கருச்சந்தும்காரகிலும் கமழ்கோங்கும்மணநாறும் *
திருச்சந்தத்துடன்மருவு திருமழிசைவளம்பதியே.

இருவிகற்பநேரிசைவெண்பா.

உலகும்மழிசையும் உள்ளுணர்ந்து * தம்மில்
புலவர்புகழ்க்கோலால்தூக்க *—உலகுதன்னை
வைத்தெடுத்தபக்கத்தும் * மாநீர்மழிசையே
வைத்தெடுத்தபக்கம்வலிது.



எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம் (யமுநாகல்யாணிராகம்-ரூபகதாளம்.)

❀ பூநிலாயவைந்துமாய்ப் புனற்கண்நின்றநான்குமாய் *
தீநிலாயமூன்றுமாய்ச் சிறந்தகாலிரண்டுமாய் *
மீநிலாயதொன்றுமாகி வேறுவேறுதன்மையாய *
நீநிலாயவண்ணம்நின்னை யார்நினைக்கவல்லரே? (௧)

ஆறுமாறுமாறுமாய் ஓரைந்துமைந்துமைந்துமாய் *
ஏறுசீரிரண்டுமூன்றும் ஏழுமாறுமெட்டுமாய் *
வேறுவேறுஞானமாகி மெய்யினோடுபொய்யுமாய் *
ஊறொடோசையாயவைந்தும் ஆயஆயமாயனே! (௨)

ஐந்துமைந்துமைந்துமாகி அல்லவற்றுளாயுமாய் *
ஐந்துமூன்றுமொன்றுமாகி நின்றஆதிதேவனே! *
ஐந்துமைந்துமைந்துமாகி அந்தரத்தணைந்துநின்று *
ஐந்துமைந்துமாயநின்னை யாவர்காணவல்லரே? (௩)

மூன்றுமுப்பதாறினோடு ஓரைந்துமைந்துமைந்துமாய் *
மூன்றுமூர்த்தியாகிமூன்று மூன்றுமூன்றுமூன்றுமாய் *
தோன்றுசோதிமூன்றுமாய்த் துளக்கமில்விளக்கமாய் *
என்நெஞ்சினுள்புகுந்தது என்கொலோ? எம்மீசனே! (௪)

நின்றியங்கும்ஒன்றலா உருக்கள்தோறுமஆவியாய் *
ஒன்றிஉள்கலந்துநின்ற நின்னதன்மைஇன்னதென்று *
என்றும்யார்க்கும்எண்ணிறந்த ஆதியாய! நின்னுந்திவாய் *
அன்றுநான்முகற்பயந்த ஆதிதேவனல்லையே? (ரு)

நாகமேந்துமேருவெற்பை நாகமேந்துமண்ணினை *
நாகமேந்துமாகமாகம் மாகமேந்துவார்புனல் *
மாகமேந்துமங்குல்தீ ஓர் †வாயுவைந்தமைந்துகாத்து *
ஏகமேந்திநின்றநீர்மை நின்கணேஇயன்றதே. (சு)

ஒன்றிரண்டுமூர்த்தியாய் உறக்கமோடுஉணர்ச்சியாய் *
ஒன்றிரண்டுகாலமாகி வேலைஞாலமாயினாய் *
ஒன்றிரண்டுதீயுமாகி ஆயனாயமாயனே! *
ஒன்றிரண்டுகண்ணினானும் உன்னைஏத்தவல்லனே? (எ)

ஆதியானவானவர்க்கும் அண்டமாயஅப்புறத்து *
ஆதியானவானவர்க்கும் ஆதியானஆதிநீ *
ஆதியானவானவாணர் அந்தகாலம்நீஉரைத்தி *
ஆதியானகாலம்நின்னை யாவர்காணவல்லரே! (அ)

தாதுலாவுகொன்றைமாலை துன்னுசெஞ்சடைச்சிவன் *
நீதியால்வணங்குபாத! நின்மலா! நிலாயசீர் *
வேதவாணர்கீதவேள்வி நீதியானகேள்வியார் *
நீதியால்வணங்குகின்ற நீர்மைநின்கண்நின்றதே. (கூ)

தன்னுளேதிரைத்தெழும் தரங்கவெண்தடங்கடல் *
தன்னுளேதிரைத்தெழுந்து அடங்குகின்றதன்மைபோல் *
நின்னுளேபிறந்திறந்து நிற்பவும்திரிபவும் *
நின்னுளேயடங்குகின்ற நீர்மைநின்கண்நின்றதே. (க0)

(அபருபராகம் - ரூபகதாளம்.)

சொல்லினால்தொடர்ச்சிநீ சொலப்படும்பொருளுநீ *
சொல்லினால்சொலப்படாது தோன்றுகின்றசோதிநீ *
சொல்லினால்படைக்க நீபடைக்கவந்துதோன்றினார் *
சொல்லினால்சுருங்க நின்குணங்கள்சொல்லவல்லரே? (கக)

உலகுதன்னைநீபடைத்தி உள்ளொடுக்கிவைத்தி * மீண்டு
உலகுதன்னுளேபிறத்தி ஓரிடத்தையல்லையால் *
உலகுநின்னொடொன்றிநிற்க வேறுநிற்றியாதலால் *
உலகில்நின்னையுள்ளசூழல் யாவருள்ளவல்லரே? (கஉ)

---

† 'வாயுவைந்துமைந்துகாத்து' என்றும் பாடம்.

இன்னையென்றுசொல்லலாவது இல்லையாதும், இட்டிடை *
பின்னைகேள்வனென்பா உன்பிணக்குணர்ந்தபெற்றியோர் *
பின்னையாயகோலமோடு பேருமஊரும்ஆதியும் *
நின்னையார்நினைக்கவல்லர்? நீர்மையால்நினைக்கிலே. (கங)

தூய்மையோகமாயினாய்! துழாயலங்கல்மாலையாய்! *
ஆமையாகிஆழ்கடல்துயின்ற ஆதிதேவ * நின்
நாமதேயம்இன்னதென்ன வல்லமல்லவாகிலும் *
சாமவேதகீதனாய சக்ரபாணியல்லையே? (கச)

அங்கமாறும்வேதம்நான்கும் ஆகிநின்று, அவற்றுளே *
தங்குகின்றதன்மையாய்! தடங்கடல்பணத்தலை *
செங்கண்நாகணைக்கிடந்த செல்வம்மல்குசீரினாய்! *
சங்கவண்ணமன்னமேனி சார்ங்கபாணியல்லையே? (கரு)

தலைக்கணத்துகள்குழம்புசாதி சோதிதோற்றமாய் *
நிலைக்கணங்கள்காணவந்து நிற்றியேலும், நீடிரும் *
கலைக்கணங்கள்சொற்பொருள் கருத்தினால்நினைக்கொணா *
மலைக்கணங்கள்போலுணர்த்தும்மாட்சி நின்தன்மாட்சியே. (கசு)

ஏகமூர்த்திமூன்றுமூர்த்தி நாலுமூர்த்தி, நன்மைசேர் *
போகமூர்த்திபுண்ணியத்தின்மூர்த்தி எண்ணில்மூர்த்தியாய் *
நாகமூர்த்திசயனமாய் நலங்கடல்கிடந்து * மேல்
ஆகமூர்த்தியாயவண்ணம் என்கொல்? ஆதிதேவனே! (கஎ)

விடத்தவாய்ஓராயிரம இராயிரம்கண்வெந்தழல் *
விடுத்துவீள்விலாதபோகம் மிக்கசோதிதொக்கசீர் *
தொடுத்துமேல்விதானமாய பௌவநீரராவணை *
படுத்தபாயல்பள்ளிகொள்வது என்கொல்! வேலைவண்ணனே! (கஅ)

புள்ளதாகிவேதம்நான்கும் ஓதினாய், அதன்றியும் *
புள்ளின்வாய்பிளந்து புட்கொடிபபிடித்தபின்னரும் *
புள்ளையூர்தியாதலால் அதென்கொல்? மின்கொள்நேமியாய்! *
புள்ளின்மெய்ப்பகைக்கடல்கிடத்தல் காதலித்ததே. (கக)

கூசமொன்றுமின்றி மாசுணம்படுத்து, வேலைநீர் *
பேசநின்றதேவாவந்து பாடமுன்கிடந்ததும் *
பாசம்நின்றநீரில்வாழும ஆமையானகேசவா! *
ஏசஅன்றுநீகிடந்தவாறு கூறுதேறவே. (உ௦)

(அடாணாராகம் - ஆதிதாளம்.)

அரங்கனே! தரங்கநீர் கலங்கஅன்றுகுன்றுசூழ் *
மரங்கள்தேயமாநிலம்குலுங்க மாசுணம்சுலாய் *
நெருங்கநீகடைந்தபோது நின்றசூரர்என்செய்தார்? *
குரங்கையாளுகந்தஎந்தை! கூறுதேறவேறிதே. (உக)

பண்டும்இன்றும்மேலுமாய் ஓர்பாலனாகி, † ஞாலமேழ் *
உண்டுமண்டி ஆலிலைத்துயின்ற ஆதிதேவனே! *
வண்டுகிண்டுதண்துழாய் அலங்கலாய்! கலந்தசீர் *
புண்டரீகபாவைசேரும் மார்ப! பூமிநாதனே! (உஉ)

வால்நிறத்தொர்சீயமாய் வளைந்தவாளெயிற்றவன் *
ஊன்நிறத்துகிர்த்தலம் அழுத்தினாய்! உலாயசீர் *
நால்நிறத்தவேதநாவர் நல்லயோகினால்வணங்கு *
பால்நிறக்கடற்கிடந்த பற்பநாபனல்லையே? (உங)

கங்கைநீர்பயந்த பாதபங்கயத்துஎம்அண்ணலே! *
அங்கையாழிசங்குதண்டு வில்லும்வாளும்ஏந்தினாய்! *
சிங்கமாயதேவதேவ! தேனுலாவுமென்மலர் *
மங்கைமன்னிவாழுமார்ப! ஆழிமேனிமாயனே! (உச)

வரத்தினில்சிரத்தைமிக்க வாளெயிற்றுமற்றவன் *
உரத்தினில்கரத்தைவைத்து உகிர்த்தலத்தைஊன்றினாய் *
இரத்திநீஇதென்னபொய்? இரந்தமண்வயிற்றுளே
கரத்தி * உன்கருத்தை யாவர்காணவல்லர்? கண்ணனே! (உரு)

ஆணினோடுபெண்ணுமாகி அல்லவோடுநல்லவாய் *
ஊணொடோசையூறுமாகி ஒன்றலாதமாயையாய் *
பூணிபேணுமாயனாகி பொய்யினோடுமெய்யுமாய் *
காணிபேணுமாணியாய்க் கரந்துசென்றகள்வனே! (உசா)

விண்கடந்தசோதியாய் விளங்குஞானமூர்த்தியாய் *
பண்கடந்ததேசமேவு பாவநாசநாதனே! *
எண்கடந்தயோகினோடு இரந்துசென்றுமாணியாய் *
மண்கடந்தவண்ணம்நின்னை யார்மதிக்கவல்லரே? (உஎ)

படைத்தபார்இடந்தளந்து அதுண்டுமிழ்ந்துபௌவநீர் *
படைத்தடைத்ததிற்கிடந்து முன்கடைந்தபெற்றியோய்! *
மிடைத்தமாலிமாலிமான் விலங்குகாலனூர்புக *
படைக்கலம்விடுத்த பல்படைத்தடக்கைமாயனே! (உஅ)

---

† 'ஞாலமேழும்' என்றும் வழங்குவர்.

பரத்திலும்பரத்தையாதி பௌவநீரணைக்கிடந்து *
உரத்திலும்ஒருத்திதன்னை வைத்துகந்து, அதன்றியும் *
நரத்திலும்பிறத்தி நாத! ஞானமூர்த்தியாயினாய்! *
ஒருத்தரும்நினாதுதன்மை இன்னதென்னவல்லரே? * (உகூ)

வானகம்முமண்ணகம்மும் வெற்பும்ஏழ்கடல்களும் *
போனகம்செய்தாலிலைத்துயின்ற புண்டரீகனே! *
தேனகஞ்செய்தண்ணறும் மலர்த்துழாய்நன்மாலையாய்! *
கூனகம்புகத்தெறித்த கொற்றவில்லியல்லையே? (௩0)

(பியாகடைராகம் - திரிபுடைதாளம்.)

காலநேமிகாலனே! கணக்கிலாதகீர்த்தியாய்! *
ஞாலமேழும்உண்டு பண்டோர்பாலனாயபண்பனே! *
வேலைவேவவில்வளைத்த வெல்சினத்தவீர! * நின்
பாலராயபத்தர்சித்தம் முத்திசெய்யும்மூர்த்தியே! (௩க)

குரக்கினப்படைகொடு குரைகடலின்மீதுபோய் *
அரக்கரங்கரங்க வெஞ்சரம்துரந்தஆதிநீ *
இரக்கமண்கொடுத்தவற்கு † இருக்கஒன்றுமின்றியே *
பரக்கவைத்தளந்துகொண்ட பற்பபாதனல்லையே? (௩உ)

மின்னிறத்தெயிற்றரக்கன்வீழ வெஞ்சரம்துரந்து *
பின்னவற்குஅருள்புரிந்து அரசளித்தபெற்றியோய்! *
நன்னிறத்தொரின்சொலேழை பின்னைகேள்வ! மன்னுசீர் *
பொன்னிறத்தவண்ணனாய புண்டரீகனல்லையே? (௩௩)

ஆதியாதியாதிநீ ஓரண்டமாதியாதலால் *
சோதியாதசோதிநீ அதுண்மையில்விளங்கினாய் *
வேதமாகிவேள்வியாகி விண்ணினோடுமண்ணுமாய் *
ஆதியாகிஆயனாய மாயமென்னமாயமே? (௩ச)

அம்புலாவும்மீனுமாகி ஆமையாகிஆழியார் *
தம்பிரானுமாகிமிக்கது அன்புமிக்குஅதன்றியும் *
கொம்பராவுநுண்மருங்குல் ஆயர்மாதர்பிள்ளையாய் *
எம்பிரானும்ஆயவண்ணம் என்கொலோ? எம்மீசனே! (௩௫)

ஆடகத்தபூண்முலை யசோதையாய்ச்சிபிள்ளையாய் *
சாடுதைத்தொர்புள்ளதாவி கள்ளதாயபேய்மகள் *
வீடவைத்தவெய்யகொங்கை ஐயபாலமுதுசெய்து *
ஆடசக்கைமாதர்வாயமுதம் உண்டதென்கொலோ! (௩சு)

---

† 'இரக்கமொன்றுமின்றியே' என்று வழங்குவர்.

காய்த்தநீள்விளங்கனியுதிர்த்து எதிர்ந்த † பூங்குருந்து
சாய்த்து * மாபிளந்தகைத்தலத்த கண்ணனென்பரால் *
ஆய்ச்சிபாலையுண்டுமண்ணையுண்டு வெண்ணெயுண்டு * பின்
பேய்ச்சிபாலையுண்டு பண்டொடேனமாயவாமனா ! (கஎ)

கடம்கலந்தவன்கரி மருப்பொசித்து, ஓர்பொய்கைவாய் *
விடம்கலந்தபாம்பின்மேல் நடம்பயின்றநாதனே ! *
குடம்கலந்தகூத்தனாய கொண்டல்வண்ணா ! தண்துழாய் *
வடம்கலந்தமாலைமார்ப ! காலநேமிகாலனே ! (கஅ)

வெற்பெடுத்துவேலைநீர் கலக்கினாய், அதன்றியும் *
வெற்பெடுத்துவேலைநீர் வரம்புகட்டி, வேலைசூழ் *
வெற்பெடுத்தஇஞ்சிசூழ் இலங்கைகட்டழித்தநீ *
வெற்பெடுத்துமாரிகாத்த மேகவண்ணனல்லையே ? (கக)

ஆனைகாத்துஓரானைகொன்று அதன்றி, ஆயபிள்ளையாய *
ஆனைமேய்த்தியானையுண்டி அன்றுகுன்றமொன்றினால் *
ஆனைகாத்து, மையரிக்கண் மாதரார்திறத்து * முன்
ஆனையன்றுசென்றடர்த்த மாயம்என்னமாயமே ? (சo)

(ஆரபிராகம் - ரூபகதாளம்.)

ஆயனாகிஆயர்மங்கை வேயதோள்விரும்பினாய் *
ஆய ! நின்னையாவர்வல்லர் ? அம்பரத்தொடுஇம்பராய் *
மாய ! மாயமாயைகொல் ? அதன்றிநீவகுத்தலும் *
மாயமாயமாக்கினாய் உன்மாயமுற்றும்மாயமே. (சக)

வேறிசைந்தசெக்கர்மேனி நீறணிந்தபுன்சடை *
கீறுதிங்கள்வைத்தவன் கைவைத்தவன்கபால்மிசை *
ஊறுசெங்குருதியால் நிறைத்தகாரணந்தனை *
ஏறுசென்றடர்த்தஈச ! பேசுகூசமின்றியே. (சஉ)

வெஞ்சினத்தவேழவெண் மருப்பொசித்து ‡ உருத்தமா *
கஞ்சனைக்கடிந்து மண்ணளந்துகொண்டகாலனே ! *
வஞ்சனத்துவந்தபேய்ச்சியாவி பாலுள்வாங்கினாய் ! *
அஞ்சனத்தவண்ணனாய ஆதிதேவனல்லையே ? (சங)

பாலினீர்மைசெம்பொனீர்மை பாசியின்பசும்புறம்
போலுநீர்மை * பொற்புடைத்தடத்து வண்டுவிண்டுலாம் *
நீலநீர்மையென்றிவை நிறைந்தகாலம்நான்குமாய் *
மாலினீர்மைவையகம் மறைத்ததென்னநீர்மையே ? (சச)

---

† 'பூங்குருந்தம்' என்பதும் பாடம். ‡ 'உருத்து' என்பதும் பாடம்.

மண்ணுளாய்கொல்? விண்ணுளாய்கொல்? மண்ணுளேமயங்கிநின்று *
எண்ணுமெண்ணகப்படாய்கொல்! என்னமாயை? * நின்தமர்
கண்ணுளாய்கொல்? சேயைசொல்? அனந்தன்மேல்கிடந்தஎம்
புண்ணியா! * புனந்துழாய் அலங்கலம்புனிதனே! (சரு)

தோடுபெற்றதண்துழாய் அலங்கலாடுசென்னியாய்! *
கோடுபற்றிஆழியேந்தி அஞ்சிறைப்புள்ளூர்தியால் *
நாடுபெற்றநன்மை நண்ணமில்லையேனும், நாயினேன *
வீடுபெற்றுஇறப்பொடும பிறப்பறுக்குமாசொலே. (சசு)

காரொடொத்தமேனி நங்கள்கண்ண! விண்ணின்நாதனே! *
நீரிடத்தராவணைக்கிடத்தி யென்பா, அன்றியும *
ஓரிடத்தையல்லை எல்லையில்லையென்பராதலால் *
சேர்விடத்தைநாயினேன தெரிந்திறைஞ்சுமாசொலே. (சஎ)

குன்றில்நின்றுவானிருந்து நீள்கடல்கிடந்து * மண்
ஒன்றுசென்றதொன்றையுண்டு அதொன்றிடந்துபன்றியாய் *
நன்றுசென்றநாளவற்றுள் நல்லுயிர்படைத்து, அவர்க்கு *
அன்றுதேவமைத்தளித்த ஆதிதேவனல்லையே? (சஅ)

❀ கொண்டைகொண்டகோதைமீது தேனுலாவுகூனிகூன் *
உண்டைகொண்டுஅரங்கவோட்டி உள்மகிழ்ந்தநாதனூர் *
நண்டையுண்டுநாரைபேர வாளைபாய, நீலமே *
அண்டைகொண்டுகெண்டைமேயும் அந்தணீரரங்கமே. (சகூ)

வெண்திரைக்கருங்கடல் சிவந்துவேவ, முன்னொர்நாள் *
திண்திறல்சிலைக்கைவாளி விட்டவீரர்சேருமூர் *
எண்திசைக்கணங்களும் இறைஞ்சியாடுதீர்த்தநீர் *
வண்டிரைத்தசோலைவேலி மன்னுசீரரங்கமே. (ரு0)

(தோடிராகம் - ஆதிதாளம்.)

சரங்களைத்துரந்து வில்வளைத்து, இலங்கைமன்னவன் *
சிரங்கள்பத்தறுத்துதிர்த்த செல்வர்மன்னுபொனனிடம் *
பரந்துபொன்னிரந்துநுந்தி வந்தலைக்கும்வார்புனல் *
அரங்கமென்பர் நான்முகத்தயனபணிந்தகோயிலே. (ருக)

பொற்றையுற்றமுற்றல்யானை போரெதிர்ந்துவந்ததை *
பற்றியுற்றுமற்றதன் மருப்பொசித்தபாகனூர் *
சிற்றெயிற்றுமுற்றல்மூங்கில் மூன்றுதண்டர்ஒன்றினர் *
அற்ற ‡ பற்றர்சுற்றிவாழும் அந்தணீரரங்கமே. (ருஉ)

---

‡ 'பக்தர்' என்பதும் பாடம்.

மோடியோடிலச்சையாய சாபமெய்திமுக்கண்ணன் *
கூடுசேனைமக்களோடு கொண்டுமண்டிவெஞ்சமத்து
ஓட * வாணனாயிரம்கரம்கழித்த ஆதிமால் *
பீடுகோயில்கூடுநீர் அரங்கமென்றபோதே (ருங)

இலைத்தலைச்சரந்துரந்து இலங்கைகட்டழித்தவன் *
மலைத்தலைப்பிறந்திழிந்து வந்துநுந்துசந்தனம் *
குலைத்தலைத்திறுத்தெறிந்த குங்குமக்குழம்பினோடு *
அலைத்தொழுகுகாவிரி அரங்கம்மேயஅண்ணலே. (ருச)

மன்னுமாமலர்க்கிழத்தி வையமங்கைமைந்தனாய் *
பின்னும்ஆயர்பின்னைதோள் மணம்புணர்ந்ததன்றியும் *
உன்னபாதம்என்னசிந்தை மன்னவைத்துநல்கினாய் *
பொன்னிசூழரங்கமேய புண்டரீகனல்லையே ? (ருரு)

இலங்கைமன்னனைந்தொடைந்து பைந்தலைநிலத்துக *
கலங்கஅன்றுசென்றுகொன்று வென்றிகொண்டவீரனே ! *
விலங்குநூலாவேதநாவர் நீதியானகேள்வியா *
வலங்கொளக்குடந்தையுள் கிடந்தமாலுமல்லையே ? (ருசு)

சங்குதங்குமுன்கைநங்கை கொங்கைதங்கலுற்றவன் *
அங்கமங்கஅன்றுசென்று அடர்த்தெறிந்தஆழியான் *
கொங்குதங்குவார்குழல் மடந்தைமார்குடைந்தநீர் *
பொங்குதண்குடந்தையுள் கிடந்தபுண்டரீகனே. (ருஎ)

மரம்கெடநடந்தடர்த்து மத்தயானைமத்தகத்து *
உரம்கெடப்புடைத்து ஓர்கொம்பொசித்துகந்தஉத்தமா ! *
துரங்கம்வாய்பிளந்து மண்ணளந்தபாத ! * வேதியர்
வரம்கொளக்குடந்தையுள் கிடந்தமாலுமல்லையே ? (ருஅ)

சாலிவேலிதண்வயல் தடங்கிடங்குபூம்பொழில் *
கோலமாடநீடு தண்குடந்தைமேயகோவலா ! *
காலநேமிவக்கரன் கரன்முரன்சிரம்மவை *
காலனோடுகூடவிற்குனித்தவிற்கைவீரனே ! (ருகூ)

❀ செழுங்கொழும்பெரும்பனி பொழிந்திட * உயர்ந்தவேய்
விழுந்துலர்ந்தெழுந்து விண்புடைக்கும்வேங்கடத்துள்நின்று *
எழுந்திருந்துதேன்பொருந்து பூம்பொழில்தழைக்கொழுஞ் *
செழுந்தடங்குடந்தையுள் கிடந்தமாலுமல்லையே ? (சுo)

(கல்யாணிராகம் - ரூபகதாளம்.)

நடந்தகால்கள்நொந்தவோ ? நடுங்கஞாலமேனமாய் *
இடந்தமெய்குலுங்கவோ ? விலங்குமால்வரைச்சுரம் *
கடந்தகால்பரந்த காவிரிக்கரைக்குடந்தையுள் *
கிடந்தவாறெழுந்திருந்துபேசு வாழிகேசனே ! (சுக)

கரண்டமாடுபொய்கையுள் கரும்பனைப்பெரும்பழம் *
புரண்டுவீழவாளைபாய் குறுங்குடிநெடுந்தகாய் ! *
திரண்டதோளிரணியன் சினங்கொளாகமொன்றையும் *
இரண்டுகூறுசெய்துகந்த சிங்கமென்பதுன்னையே. (சுஉ)

நன்றிருந்துயோகநீதி நண்ணுவார்கள்சிந்தையுள் *
சென்றிருந்துதீவினைகள் தீர்த்ததேவதேவனே ! *
குன்றிருந்தமாடநீடு பாடகத்தும்ஊரகத்தும் *
நின்றிருந்துவெஃகணைக்கிடந்தது என்னநீர்மையே ? (சுங)

நின்றதெந்தைஊரகத்து இருந்ததெந்தைபாடகத்து *
அன்றுவெஃகணைக்கிடந்தது என்னிலாதமுன்னெலாம் *
அன்றுநான்பிறந்திலேன் பிறந்தபின்மறந்திலேன் *
நின்றதும்இருந்ததும் கிடந்ததும்என்நெஞ்சுளே. (சுச)

நிற்பதும்ஓர்வெற்பகத்து இருப்பும்விண்கிடப்பதும் *
நற்பெருந்திரைக்கடலுள் நானிலாதமுன்னெலாம் *
அற்புதன்அனந்தசயனன் ஆதிபூதன்மாதவன் *
நிற்பதும்இருப்பதும் கிடப்பதும்என்நெஞ்சுளே. (சுரு)

இன்றுசாதல்நின்றுசாதல் அன்றியாரும்வையகத்து *
ஒன்றிநின்றுவாழ்தலின்மைகண்டும் நீசர்என்கொலோ *
அன்றுபாரளந்தபாதபோதை யொன்றிவானின்மேல் *
சென்றுசென்றுதேவராய் இருக்கிலாதவண்ணமே ? (சுசு)

சண்டமண்டலத்தினூடு சென்றுவீடுபெற்று * மேல்
கண்டுவீடிலாதகாதலின்பம் நாளும்எய்துவீர் *
புண்டரீகபாதபுண்யகீர்த்தி நும்செவிமடுத்து
உண்டு * நும்முறுவினைத் துயருள்நீங்கிஉய்ம்மினோ. (சுஎ)

முத்திறத்துவாணியத்து இரண்டிலொன்றும்நீசர்கள் *
மத்தராய்மயங்குகின்றது இட்டதிலிறந்துபோந்து *
எத்திறத்தும்உய்வது ஒருபாயமில்லை, உய்குறில் *
† தொத்துறுத்ததண்துழாய் நன்மாலைவாழ்த்திவாழ்மினோ. (சுஅ)

† 'தொத்திறுத்த' என்பதும் பாடம்.

காணிலும்உருப்பொலார் செவிக்கிணாதகீர்த்தியார் *
பேணிலும்வரம் † தர மிடுக்கிலாததேவரை *
ஆணமென்றடைந்துவாழும் ஆதர்காள் ! எம்மாதிபால் *
பேணிநும் ‡ பிறப்பெனும் பிணக்குஅறுக்ககிற்றிரே. (சுகூ)

குந்தமோடுசூலம்வேல்கள் தோமரங்கள்தண்டுவாள் *
பந்தமானதேவர்கள் பரந்துவானகம்உற *
வந்தவாணனீரைஞ்ஞாறு தோள்களைத்துணித்தநாள் *
அந்தவந்தஆகுலம் அமரரே அறிவரே. (எ0)

(ஸாவேரி ராகம் - திரிபுடைதாளம்.)

வண்டுலாவுகோதைமாதர் காரணத்தினால்வெகுண்டு *
இண்டவாணனீரைஞ்ஞாறு தோள்களைத்துணித்தநாள் *
முண்டன்நீறன்மக்கள்வெப்பு மோடிஅங்கிஓடிடக்
கண்டு * நாணிவாணனுக்கு இரங்கினான்எம்மாயனே. (எக)

போதில்மங்கைபூதலக் கிழத்திதேவி, அன்றியும் *
போதுதங்குநானமுகன்மகன் அவனமகனசொலில் *
மாதுதங்குகூறன் ஏறதூர்தியென்றுவேதநூல் *
ஓதுகின்றதுஉண்மை அல்லதில்லைமற்றுரைக்கிலே. (எஉ)

மரம்பொதச்சரம்துரநது வாலிவீழமுன்னொர்நாள் *
உரம்பொதச்சரம் துரந்த உம்பராளிஎம்பிரான் *
வரமகுறிபபில்வைததவாக்கு அலாதுவானமாளிலும் *
நிரம்புநீடுபோகம் எத்திறததும்யார்க்குமில்லையே. (எங)

அறிநதறிந்துவாமனன் அடியிணைவணங்கினால் *
செறிநதெழுந்தஞானமோடு செல்வமும்சிறந்திடும் *
மறிநதெழுந்ததெண்திரையுள் மன்னுமாலைவாழ்த்தினால் *
பறிந்தெழுந்துதீவினைகள் பற்றறுதல்பான்மையே. (எச)

ஒன்றிநின்றுநற்றவம்செய்து ஊழியூழிதோறெலாம் *
நின்றுநின்றுஅவன்குணங்கள் உள்ளிஉள்ளம்தூயராய் *
சென்றுசென்றுதேவதேவர் உம்பரும்பரும்பராய் *
அன்றி, எங்கள்செங்கண்மாலை யாவர்காணவல்லரே ? (எரு)

புன்புலவழியடைத்து அரக்கிலச்சினைசெய்து *
நனபுலவழிதிறந்து ஞானநற்சுடர்கொளீஇ *
என்பிலெள்கிநெஞ்சுருகி உள்கனிந்தெழுநததுஓர் *
அன்பிலன்றிஆழியானை யாவர்காணவல்லரே ? (எசு)

---

† 'தரும்மிடுக்கு' என்பதும் பாடம். ‡ 'இறப்பெனும்' என்பதும் சிலர் பாடம்.

எட்டுமெட்டுமெட்டுமாய் ஓரேழுமேழுமேழுமாய் *
எட்டுமூன்றுமொன்றுமாகி நின்றஆதிதேவனை *
எட்டினாயபேதமோடு இறைஞ்சிநின்று, அவன்பெயர் *
எட்டெழுத்துமோதுவார்கள் வல்லர்வானமாளவே. (எஎ)

சோர்விலாதகாதலால் தொடக்கறாமனத்தராய் *
நீரராவணைக்கிடந்த நின்மலன்நலங்கழல் *
ஆர்வமோடுஇறைஞ்சிநின்று அவன்பெயரெட்டெழுத்தும் *
வாரமாகஓதுவார்கள் வல்லர்வானமாளவே. (எஅ)

பத்தினோடுபத்துமாய் ஓரேழினோடுஒன்பதாய் *
பத்துநால்திசைக்கணின்ற நாடுபெற்றநன்மையாய் *
பத்தினாயதோற்றமோடு ஓராற்றல்மிக்கஆதிபால் *
பத்தராமவர்க்கலாது முத்திமுற்றலாகுமே? (எகூ)

வாசியாகிநேசமின்றி வந்தெதிர்ந்ததேனுகன் *
நாசமாகிநாளுலப்ப நன்மைசேர்பனங்கனிக்கு *
வீசிமேல்நிமிர்ந்ததோளில் இல்லையாக்கினாய் * கழற்கு
ஆசையாமவர்க்கலால் அமரராகலாகுமே? (அ0)

(சுருட்டிராகம் - திரிபுடைதாளம்.)

கடைந்துபாற்கடல்கிடந்து † காலநேமியைக்கடிந்து *
உடைந்தவாலிதன் ‡ தனக்கு உதவவந்துஇராமனாய் *
மிடைந்தஏழ்மரங்களும் அடங்கவெய்து * வேங்கடம்
அடைந்தமாலபாதமே அடைந்துநாளும்உய்ம்மினோ. (அக)

எத்திறத்தும்ஒத்துநின்று உயர்ந்துயர்ந்தபெற்றியோய்! *
முத்திறத்துமூரிநீர் அராவணைத்துயின்ற * நின்
பத்துறுத்தசிந்தையோடுநின்று பாசம்விட்டவர்க்கு *
எத்திறத்தும்இன்பம் இங்கும்அங்கும்எங்குமாகுமே. (அஉ)

மட்டுலாவுதண்துழா யலங்கலாய்! § பொலன்கழல் *
விட்டு $ விள்விலாதபோகம விண்ணில்நண்ணியேறினும் *
எட்டினோடிரண்டெனும் கயிற்றினால்மனந்தனைக்
கட்டி * வீடிலாதுவைத்த காதல்இன்பமாகுமே. (அங)

† 'காலநேமியைக் கடந்து' என்பதும் பாடம். ‡ 'தன்பினுக்கு' என்று பாட மிருக்கலாம். § 'புலன்கழல்' என்பதும் பாடம். $ 'வீள்விலாத' என்றும் கூறுவர்.

பின்பிறக்கவைத்தனன்கொல்? அன்றிநின்றுதன்கழற்கு *
அன்புறைக்கவைத்தநாள் அறிந்தனன்கொல்? ஆழியான் *
தன்திறத்தோரன்பிலா அறிவிலாதநாயினேன *
என்திறத்தில்என்கொல்? எம்பிரான்குறிப்பில்வைத்ததே. (அச)

நச்சராவணைக்கிடந்த நாத! பாதபோதினில *
வைத்தசிந்தைவாங்குவித்து நீங்குவிக்கநீ இனம *
மெய்த்தன்வல்லையாதலால் அறிந்தனன்நின்மாயமே *
உய்த்துநின்மயக்கினில் மயக்கல்என்னைமாயனே! (அரு)

சாடுசாடுபாதனே! சலம்கலந்தபொய்கைவாய் *
ஆடராவின்வன்பிடர் நடம்பயின்றநாதனே! *
கோடுநீடுகைய! செய்யபாதம்நாளுமஉள்ளினால *
வீடாகமெய்செயாத வண்ணம்என்கொல்? கண்ணனே! (அசு)

நெற்றிபெற்றகண்ணன் விண்ணினாதனோடு, போதின்மேல் *
நற்றவத்துநாதனோடு மற்றுமுள்ளவானவா *
கற்றபெற்றியால்வணங்குபாத! நாத! வேத! * நின்
பற்றலாலொர்பற்று மற்றதுற்றிலேன்உரைக்கிலே. (அஎ)

வெள்ளைவேலைவெற்புநாட்டி வெள்ளெயிற்றராவளாய் *
அள்ளலாக்கடைந்தஅன்று அருவரைக்குஓராமையாய் *
உள்ளநோய்கள்தீர்மருந்து வானவர்க்களித்த * எம்
வள்ளலாரையன்றி மற்றோர்தெய்வம்நான்மதிப்பனே? (அஅ)

பாரமிகுத்தபாரம் முன்ஒழிச்சுவான், அருச்சுனன *
தேர்மிகுத்துமாயமாக்கி நின்றுகொன்று, வென்றிசேர் *
மாரதர்க்குவானகொடுத்து வையம்ஐவர்பாலதாம் *
சீர்மிகுத்தநின்னலால் ஓர்தெய்வம்நானமதிப்பனே? (அகூ)

குலங்களாயஈரிரண்டில் ஒன்றிலும்பிறந்திலேன் *
நலங்களாயநற்கலைகள் நாவிலும்நவின்றிலேன் *
புலன்களைந்தும்வென்றிலேன் பொறியிலேனபுனித! * நின்
இலங்குபாதமன்றி மற்றோர்பற்றிலேன்எம்ஈசனே! (கூ0)

(சங்கராபரணராகம் - ரூபகதாளம்.)

பண்ணுலாவுமென்மொழிப் படைத்தடங்கணாள்பொருட்டு *
எண்ணிலாஅரக்கரை நெருப்பினால்நெருக்கினாய் *
கண்ணலால்ஓர்கண்ணிலேன் கலந்தசுற்றம்மற்றிலேன் *
எண்ணிலாதமாய! நின்னைஎன்னுள்நீக்கல்என்றுமே. (கூக)

விடைக்குலங்களேழடர்த்து வென்றிவேற்கண்மாதரார் *
கடிக்கலந்ததோள்புணர்ந்த காலிஆய! வேலைநீர் *
படைத்துஅடைத்துஅதில்கிடந்து முன்கடைந்து, நின்தனக்கு *
அடைக்கலம்புகுந்தஎன்னை அஞ்சலென்னவேண்டுமே. (கூஉ)

சுரும்பரங்குதண்துழாய் துதைந்தலர்ந்தபாதமே *
விரும்பிநின்றிறைஞ்சுவேற்கு இரங்குஅரங்கவாணனே! *
கரும்பிருந்தகட்டியே! கடல்கிடந்தகண்ணனே! *
இரும்பரங்கவெஞ்சரம்துரந்த வில்லிராமனே! (கூஙு)

ஊனில்மேயஆவிநீ உறக்கமோடுஉணர்ச்சிநீ *
ஆனில்மேயஐந்துமநீ அவற்றுள்நின்றதூய்மைநீ *
வானினோடுமண்ணும்நீ வளங்கடற்பயனும்நீ *
யானும்நீஅதன்றி எம்பிரானும்நீஇராமனே! (கூச)

அடக்கரும்புலன்கள்ஐந்தடக்கி ஆசையாமவை *
தொடக்கறாததுவந்து நின்தொழிற்கண்நின்றஎன்னைநீ *
விடக்கருதிமெய்செயாது மிக்கோராசையாக்கிலும் *
கடல்கிடந்தநின்னலால் ஓர்கண்ணிலேன்எம்அண்ணலே! (கூரு)

வரம்பிலாத † மாயைமாய! வையமேழும்மெய்ம்மையே *
வரம்பிலூழியேத்திலும் வரம்பிலாதகீர்த்தியாய்! *
வரம்பிலாதபல்பிறப்பு அறுத்துவந்துநின்கழல் *
பொருந்துமாதிருந்தநீ வரம்செய்புண்டரீகனே! (கூசு)

வெய்யவாழிசங்குதண்டு வில்லும்வாளும்ஏந்துசீர்க்
கைய! * செய்யபோதில்மாது சேரும்மார்ப! நாதனே! *
ஐயிலாயஆக்கைநோய் அறுத்துவந்துநின்னடைந்து *
உய்வதோருபாயம்நீ எனக்குநல்கவேண்டுமே. (கூஎ)

மறம்துறந்துவஞ்சம்மாற்றி ஐம்புலன்களாசையும்
துறந்து * நின்கணாசையே தொடர்ந்துநின்றநாயினேன் *
பிறந்திறந்துபேரிடர்ச் சுழிக்கணின்றுநீங்குமா *
மறந்திடாதுமற்றெனக்கு மாய! நல்கவேண்டுமே. (கூஅ)

காட்டிநான்செய்வல்வினை, பயன்தனால்மனந்தனை *
நாட்டிவைத்துநல்லவல்ல செய்யவெண்ணினாரென *
கேட்டதன்றிஎன்னதாவி பின்னைகேள்வ! நின்னொடும் *
பூட்டிவைத்தஎன்னை நின்னுள்நீக்கல்பூவைவண்ணனே! (கூகூ)

---

† 'மாய மாய' என்று சிலர் கூறுவர்.

பிறப்பினோடுபேரிடர்ச் சுழிக்கண்நின்றும்நீங்குமஃது *
இறப்பவைத்தஞானநீசரைக் கரைக்கொடேற்றுமா *
பெறற்கரியநின்னபாத பத்தியானபாசனம் *
† பெறற்கரியமாயனே! எனக்குநல்கவேண்டுமே. (க00)

(செஞ்சுருட்டிராகம் - ரூபகதாளம்.)

இரந்துரைப்பதுண்டுவாழி ஏமநீர்நிறத்தமா! *
வரம்தரும்திருக்குறிப்பில் வைத்ததாகிலமன்னுசீர் *
பரந்தசிந்தையொன்றிநின்று நின்னபாதபங்கயம் *
நிரந்தரம்நினைப்பதாக நீநினைக்கவேண்டுமே. (க0க)

விள்விலாதகாதலால் விளங்குபாதபோதில்வைத்து *
உள்ளுவேனதுஊனநோய் ஒழிக்குமாதெழிக்குநீர் *
பள்ளிமாய! பன்றியாய வென்றிவீர! * குன்றினால்
துள்ளுநீர்வரம்புசெய்த தோன்றல்! ஒன்றுசொல்லிடே. (க0உ)

திருக்கலந்துசேரும்மார்ப! தேவதேவதேவனே! *
இருக்கலந்தவேதநீதி ஆகிநின்றநின்மலா! *
கருக்கலந்தகாளமேக மேனியாய! நின்பெயர் *
உருக்கலந்தொழிவிலாது உரைக்குமாறுஉரைசெயே. (க0ங)

கடுங்கவந்தன்வக்கரன் கரன்முரன்சிரமவை *
இடந்துகூறுசெய்த பல்படைத்தடக்கைமாயனே! *
கிடந்திருந்துநின்றியங்குபோதும் நின்னபொற்கழல் *
தொடர்ந்துவிள்விலாதது ஓர்தொடர்ச்சிநல்கவேண்டுமே. (க0ச)

மண்ணையுண்டுமிழ்ந்து பின் இரந்துகொண்டளந்து * மண்
கண்ணுளல்லதில்லையென்று வென்றகாலமாயினாய்! *
பண்ணைவென்றஇன்சொல்மங்கை கொங்கைதங்குபங்கயக்
கண்ண! * நின்னவண்ணமல்லதில்லை எண்ணும்வண்ணமே. (க0ரு)

கறுத்தெதிர்ந்தகாலநேமி காலனோடுகூட * அன்று
அறுத்தஆழி சங்குதண்டு வில்லும்வாளுமேந்தினாய்! *
தொறுக்கலந்தவூனமஃது ஒழிக்கஅன்றுகுன்றமமுன் *
பொறுத்தநின்புகழ்க்கலால் ஓர்நேசமில்லைநெஞ்சமே! (க0சு)

காய்சினத்தகாசிமன்னன் வக்கரன்பவுண்டிரன் *
மாசினத்தமாலிமான் சுமாலிகேசிதேனுகன் *
நாசமுற்றுவீழ நாள்கவர்ந்தநின்கழற்கலால் *
நேசபாசமத்திறத்தும் வைத்திடேன்எம்ஈசனே! (க0எ)

---

† 'பிறர்க்கரிய' என்றும் பாடம்.

கேடில்சீர்வரத்தனைக் கெடும்வரத்தயன் அரன் *
நாடினேடு, நாட்டமாயிரத்தன் நாடுநண்ணிலும் *
வீடதானபோகமெய்தி வீற்றிருந்தபோதிலும் *
கூடும்ஆசையல்லதொன்று கொள்வனே? குறிப்பிலே. (க0அ)

சுருக்குவாரையின்றியே சுருங்கினய், சுருங்கியும் *
பெருக்குவாரையின்றியே பெருக்கமெய்துபெற்றியோய்! *
செருக்குவார்கள் தீக்குணங்கள் தீர்த்ததேவதேவனென்று *
இருக்குவாய் முனிக்கணங்களேத்த யானுமேத்தினேன். (க0௯)

தூயனும்அன்றியும் சுரும்புலாவுதண்துழாய் *
மாய! நின்னைநாயினேனை வணங்கிவாழ்த்தும்ஈதெலாம் *
நீயும்நின்குறிப்பினில் பொறுத்துநல்கு, வேலைநீர் *
பாயலோடுபத்தர்சித்தம்மேய வேலைவண்ணனே! (கக0)

(மோஹநராகம் - ரூபகதாளம்.)

வைதுநின்னைவல்லவா பழித்தவர்க்கும், மாறில்போர் *
செய்துநின்னசெற்றதீயில் வெந்தவர்க்கும், வந்துஉன்னை *
எய்தலாகுமென்பர்ஆதலால் எம்மாய! நாயினேன் *
செய்தகுற்றம்நற்றமாகவேகொள் ஞாலநாதனே! (ககக)

வாள்களாகிநாள்கள்செல்ல நோய்மைகுன்றிமூப்பெய்தி *
மாளுநாளதாதலால் வணங்கிவாழ்த்துஎன்நெஞ்சமே! *
ஆளதாகும்நன்மையென்று நன்குணர்ந்ததன்றியும் *
மீள்விலாதபோகம்நல்கவேண்டும் மாலபாதமே. (கக௨)

சலங்கலந்தசெஞ்சடைக் கறுத்தகண்டன், வெண்தலை *
புலன்கலங்கவுண்டபாதகத்தன் வன்துயாசெட *
அலங்கல்மார்வில்வாசநீர் கொடுத்தவன், அடுத்தசீர் *
நலங்கொள்மாலைநண்ணும்வண்ணம் எண்ணுவாழிநெஞ்சமே! (ககங)

ஈனமாயஎட்டும்நீக்கி ஏதமின்றிமீதுபோய் *
வானமாளவல்லையேல் வணங்கிவாழ்த்துஎன்நெஞ்சமே! *
ஞானமாகிஞாயிறாகி ஞாலமுற்றும்ஓரெயிற்று *
ஏனமாயிடந்தமூர்த்தி எந்தைபாதமெண்ணியே. (ககச)

❀ அத்தனாகிஅன்னையாகி ஆளும்எம்பிரானுமாய் *
ஒத்தொவ்வாதபல்பிறப்பொழித்து நம்மைஆட்கொள்வான் *
மூத்தனார்முகுந்தனார் புகுந்துநம்முள்மேவினார் *
எத்தினால்இடர்க்கடல்கிடத்தி? ஏழைநெஞ்சமே! (ககரு)

மாறுசெய்தவாளரக்கன் நாளுலப்ப * அன்றுஇலங்கை
நீறுசெய்துசென்றுகொன்று வென்றிகொண்டவீரனார் *
வேறுசெய்துதம்முள்என்னை வைத்திடாமையால் * நமன்
கூறுசெய்துகொண்டிறந்த குற்றம்எண்ணவல்லனே? (கககூ)

அச்சம்நோயொடுஅல்லல்பல் † பிறப்பு ஆயமூப்பிவை *
வைத்தசிந்தைவைத்தவாக்கை மாற்றிவானிலேற்றுவான் *
அச்சுதன்அனந்தகீர்த்தி ஆதியநதமில்லவன் *
நச்சுநாகணைக்கிடந்த நாதன்வேதகீதனே. (ககஎ)

சொல்லினும்தொழிற்கணும் தொடக்கறாதஅன்பினும் *
அல்லும்நன்பகலினோடும் ஆனமாலைகாலையும் *
வல்லிநாண்மலர்க்கிழத்திநாத! பாதபோதினை *
புல்லிஉள்ளம்விள்விலாது பூண்டுமீண்டதில்லையே. (ககஅ)

❀ பொன்னிசூழ்அரங்கமேய பூவைவண்ண! மாய! கேள் *
என்னதாவிஎன்னும் வல்வினையினுட்கொழுந்தெழுந்து *
உன்னபாதமென்னநின்ற ஒண்சுடர்க்கொழுமலர் *
மன்னவந்துபூண்டு வாட்டமின்றிஎங்கும்நின்றதே. (ககக)

❀ இயக்கறாதபல்பிறப்பில் என்னைமாற்றி, இன்றுவந்து *
உயக்கொள்மேகவண்ணன்நண்ணி என்னிலாயதன்னுளே *
மயக்கினான்தன்மன்னுசோதி ஆதலால், என்னாவிதான் *
இயக்கெலாம்அறுத்து அறாதஇன்பவீடுபெற்றதே. (கஉ0)

அடிவரவு:—பூ ஆறு ஐந்து மூன்று நின்று நாகம் ஒன்று ஆதி தாது தன்னுள் சொல்—சொல் உலகு இனனை தூய்மை அங்கம் தலை ஏக விடத்த புள் கூசம் அரங்கன்—அரங்கன் பண்டு வாலநிற கங்கை வரத்தின் ஆண் விண் படைத்த பரத்தில் வானகம் கால—கால குரக்கு மின் ஆகி அம்பு ஆடகம் காய்த்த கடம் வெற்பு ஆனை ஆயன்—ஆயன் வேறு வெஞ்சின பால் மண் தோடு கார் குன்று கொண்டை வெண்டிரை சரம்—சரம் பொற்றை மோடி இலை மன்னு இலங்கை சங்கு, மரம் சாலி செழு நடந்த—நடந்த காண்டம் நன்று நின்றது நிற்பது இன்று சண்ட மூத்திறம் காணில் குந்தம் வண்டு—வண்டு போதில் மரம் அறிந்து ஒனறி புன்புல எட்டு சோர்வு பத்தின் வாசி கடை—கடை எத்திறம் மட்டு பின் நச்சரா சாடு நெற்றி வெள்ளை பார் குலம் பண்—பண் விடை சுரும்பு ஊனில் அடக்கு வரம்பு வெய்ய மறம் காட்டிநான் பிறபபு இரந்து—இரந்து விள் திரு கடும் மண்ணை கறுத்து காய்சினத்த கேடு சுருக்கு தூயன் வைது—வைது வாள் சலம் ஈனம் அத்தன் மாறு அச்சம் சொல் பொன்னி இயக்கறாத காவல்.

திருமழிசைப்பிரான் திருவடிகளே சரணம்.

திருச்சந்தவிருத்தம் ஸம்பூர்ணம்.

---

† 'பிறப்பவாய' என்று சிலர் பாடங்கொள்வர்.

# தொண்டரடிப்பொடியாழ்வார் வைபவம்.



𑌕𑍋𑌦𑌣𑍍𑌡𑍇 𑌜𑍍𑌯𑍇𑌷𑍍𑌠𑌨𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑍇 𑌮𑌣𑍍𑌡𑌙𑍍𑌗𑍁𑌡𑌿𑌪𑍁𑌰𑍋𑌦𑍍𑌭𑌵𑌮𑍍 ।
𑌚𑍋𑌳𑍋𑌰𑍍𑌵𑍍𑌯𑌾𑌂 𑌵𑌨𑌮𑌾𑌲𑌾𑌂𑌶𑌂 𑌭𑌕𑍍𑌤𑌪𑌦𑌰𑍇𑌣𑍁𑌮𑌾𑌶𑍍𑌰𑌯𑍇 ॥

కోదండే జ్యేష్ఠనక్షత్రే మండంగుడిపురోద్భవం ।
చోళోర్వ్యాం వనమాలాంశం భక్తపద్రేణుమాశ్రయే ॥

கோதண்டேஜ்யேஷ்டநக்ஷத்ரே மண்டங்குடிபுரோத்பவம்-
சோளோர்வ்யாம்வநமாலாம்ஸம் பக்தபதரேணுமாஸ்ரயே.

"சோழவளநாடு சோறுடைத்து" என்ற ஔவையாரமுதமொழியின்படி உயிர்கட்கு ஜீவநாதாரமாகவுள்ள பயிர்வளத்துக்குப் பிரதானகாரணமான நாட்டுச்செழிப்பைக் காவேரிப்பாய்ச்சலால் நன்குபெற்று அந்நீர்வளத்தை மிகுதியாகவுடைமையால் 'புனனாடு' என்று புகழுற்ற சோழநாட்டிலே, "ஈரிருபதாஞ் சோழம்" என்றபடி பிரசித்தமாக விருக்கிற பாடல்பெற்ற விஷ்ணுஸ்தலங்கள் நாற்பதிற் புள்ளம்பூதங்குடி யென்ற திவ்வியதேசத்தின் அருகிலுள்ள திருமண்டங்குடி யென்னுந் திருப்பதியிலே, பகவானது சொரூபமென்று ஸ்ரீகீதையால் விளங்குகின்ற சிறப்புடைய மார்கழி மாதத்தில், கேட்டை நக்ஷத்திரத்தில், வைஜயந்தியெனனும் வநமாலையின் அம்சமாய, ஒருவர், வேதமவல்ல ஒரு முன்குடுமிப்பிராமணரது குமாரராய்த் தோன்றினா. நாராயணனது கடாக்ஷத்தால் அவதரித்த அவ்வந்தணகுமாரர்க்குத் தந்தையார் விப்பிரநாராயணரென்று பேரிட்டுச் சௌளம் உபநயநம் முதலிய வைதிகச்சடங்குகளை உரிய பருவங்களில் முறைப்படி செய்வித்து வேதசாஸ்திரங்களைப் பயிற்றுவிக்க, அவர் நான்குவேதங்களையும ஆறுசாஸ்திரங்களையுங் கசடறக்கற்று வல்லராய் அக்கல்விக்குஏற்பச் சுத்தசத்துவகுணமே தலையெடுத்து ஞானவைராக்கியங்களோடு கூடித் தந்தை தாயர்க்கு மகிழ்ச்சிதந்து வாழ்ந்துவந்தார். அப்படியிருக்கையில, சேனைமுதலியார் மீளாவுலகினின்று எழுந்தருளி அவர்க்குப் பஞ்சஸம்ஸ்காரங்களைப் பண்ணி மந்திரோபதேசமுஞ் செய்து சென்றனர்.

அங்ஙனம் மந்திரார்த்தத்தை யறிந்த விப்பிரநாராயணர், கிருபாநிதியான கேசவனது குணாமிருதத்திலே ஆழ்ந்த சிந்தையுடையராய அதனால இம்மையின்பங்களை வெறுத்து விவாகத்தில் விருப்பமில்லாமல முதலாசிரமத்திலேயே நின்று, பிரணவப்பொருளான எம்பெருமான பிராணிகளை ஈடேற்றுதற்பொருட்டுப் பூலோகத்திற் கோயில்கொண்டு எழுந்தருளியிருக்கின்ற திவ்விய தேசங்களிற் சென்று ஸ்வாமிதரிசனஞ்செய்யக் கருதி, அவற்றில் முதலதான திருவரங்கம் பெரியகோயிலை யடைந்தார். அங்கு உபயகாவேரிமத்தியிலே.

சேஷசயநத்திலே "குடதிசை முடியைவைத்துக் குணதிசைபாதம்நீட்டி, வட திசைபின்புகாட்டித் தென்திசையிலங்கை நோக்கி" பூமங்கையரிருவர் பொன் னடிவருடப் பள்ளிகொண்டுள்ள பெருமானைச் சேவித்துநிற்க, அப்பொழுது நம்பெருமாள் தம்முடைய வடிவழகினால் இவரைத் தம்பக்கல் மிகுந்தபக்தி யுடையராம்படி செய்தருளினர்.

உடனே இவர் தமதுவாணாள் வீணாளாகாதபடி ஒப்புயர்வற்ற அப்பெரு மானுக்கு உற்றஅடிமைத்தொழில் செய்யக் கருதி, முன்பு வடமதுரையிற் கம்சனுடைய குற்றேவலாளனான மாலாகாரன் ஒருகால் வாசுதேவனுக்குப் புஷ்பம் சமர்ப்பித்துப் பேறுபெற்றதையும், கஜேந்திராழ்வான் புஷ்பகைங்கரி யத்தாலே துன்பந்தீர்ந்ததையும் ஆலோசித்து, பெரியாழ்வார்போலவே தாமும் பெருமாளுக்குப் பூவிடுதலையும் திருத்துழாய் சாத்துதலையுமே திருப்பணியா கக்கடைபபிடித்து, இந்திரனதுநந்தனவனமோ? குபேரனது சைத்திரரதமென் னும் உத்தியானமோ? என்று காண்பவர் ஐயுறுமாறு ஒருதிருநந்தவனத்தை அப்பதியிலே செழிப்பாக அமைத்து, காலந்தோறும் பலவகைப் பூமாலைகளையும் திருத்துழாய் நன்மாலையையும் கட்டியெடுத்துக கொணடுவநது அழகியமண வாளனுக்குச் சாத்திக கண்குளிரக்கண்டு மகிழ்ந்துகொண்டு, தமது நிலைக்கு ஏற்பப பிராமணகிருகங்களில் அந்நபிக்ஷை வாங்கியுண்டு ஜீவித்துவந்தார்.

இங்ஙன மிருக்கையில், திருவரங்கததுக்கு வடக்கிலுள்ள திருக்கரம்பனூ ரென்ற உத்தமர்கோயிலில் தேவமாதரம்சமாய்ப் பிறநது ஒப்புயர்வற்ற எழில் வாய்ந்த தேவதேவி யென்பா ளொரு கணிகை, ஒருநாள் பாஙகிமாரோடுந் தமக் கையோடும் உறையூர்க்குச் சென்று, அதனை இராசதானியாகக் கொண்டு வாழ் கிற சோழராசனது முன்னிலையில் திருத்தகீதங்களை நிகரற நிகழ்த்தி அவனை மோகிபபிதது அளவிறநத செல்வத்தை அவன்பாற் பெற்று மிககசெருக்கோடு மீண்டுவருகையில், இளைபபாறுதற்பொருட்டு இவரது பூம்பொழிலின் ஒரு புறத்திலே ஓர் மரத்தினடியில் இருந்து, கண்டவர் கண்கவரும் அத்தண்டலை யின் சிறபபை நாற்புறத்தும் நன்றாக உற்றுநோக்கி, அம்மலர்ச்சோலையைத் தனக்குரிய பொருளாக்கி அதிற் பூக்கொய்தும் புனல்விளையாடியும் பொழுது போக்கி மனமகிழ விரும்பி, அதற்குஉரியவனைக கண்டு தன்வசபபடுத்த நினை த்து, அங்கு உலாவிநின்றாள். நிற்கையில், ஒருசாா, விப்பிரநாராயணர், மன த்திற்பதிந்த சுத்தமாகிய சத்துவகுணந்தான் அகத்து அடங்காது புறத்துப் பொசிந்ததோ வென்னும்படி தூய்தான வஸ்திரமும் முப்புரிநூலும் பன்னிர ண்டு திருமண்காப்பும் வெள்ளொளிசெய்துவிளங்க, கழுததில் தாமரைமணி மாலைகளையும் துளசிமணிமாலைகளையும் தரித்து, பூஞ்செடிகளுககுப பாத்திகட் டுதலுந் தண்ணீர்பாய்ச்சுதலுஞ் செய்துகொண்டிருக்க, கண்ணுற்றாள்.

உடனே அவள், அவரருகில்வந்து முன்னின்று அவரைத்தொழுது தனது தேகசௌந்தரியத்தை அவர்க்குக்காட்டிச் சிலகுறிப்புச்செய்யவும், விஷயாந் தரங்களில் விழித்தகண் குருடாத்திரி வீரராகிய அவா அவளைக கண்ணெடுத் துப் பார்த்தலுஞ் செய்யாது திரஸ்கரித்துத் தமதுகைங்கரியத்திற் கருத்தூன்றி யிருந்தனர். அதுநோக்கித் தேவதேவி ஆச்சரியமுற்றுத் தன்முன்பிறந்தாளுட னே 'அரசர் முதலிய பலரையும் எளிதில் வயப்படுத்துகிற ரூபலாவண்யங்

களிற்சிறந்த யான் சென்று எதிர்நிற்கவும் பாராதிருக்கின்ற இவனை பித்தனோ? பேடனோ?' என்றுகூற, அதற்கு அவள் 'பித்தனும் பேடனுமல்லன்; ஸ்வாமி கைங்கரியத்திற் பற்றின சித்தமுடைய மகாவிரக்தன்: இவனைச் சுவாதீனப் படுத்த உன்னாலாகாது' என்று சொன்னவளவிலே, வடிவழகில் இறுமாப்புடைய தேவதேவி 'இவனை நான் வசீகரியாமல் விடுவதில்லை' என்று உறுதிகூறுதலும், முன்னவள் 'நீ அங்ஙனஞ் செய்தால், நான் உனக்கு ஆறுமாசகாலம் அடியவளாவேன்' என்று சபதஞ்செய்ய, பின்னவளும் 'நான் அங்ஙனஞ்செய்யேனாயின், ஆறுமாசம் உனக்குத் தொழுத்தையாவேன்' என்று பிரதிஜ்ஞை பண்ணினாள்.

அநந்தரம் அவள், தன் ஆபரணங்களைக கழற்றிக்கொடுத்துத் தோழியரோடு தமக்கையையும் அனுப்பிவிட்டுத் தனியே மெல்லியதொரு செங்காவிச் சேலையுடுத்து அவரையடுத்துத் திருவடிகளில்விழுந்து நமஸ்கரிக்க, அவர் 'நீ யார்? ஏன் இங்குவந்தாய்?' என்று வினவ, அதற்கு விலைமகள் 'அடியேன முற்பிறபபிற்செய்த தீவினையால் வேசையாய்ப் பிறந்தவள்; அடியேனைத் தாய அக்குலத்திற்கு உரிய தொழிலைக் கைக்கொள்ளும்படி நிர்ப்பந்திக்க, அதற்கு இசையாமல் அவளைத் துறநது மகாபாகவதரான தேவரீரது திருவடியைச் சரணமடைந்து உய்வுபெற நாடிவந்துற்றேன்; கருணைக்கடலான தேவரீர் அநாதையான எனனைக் காத்தருளவேணும்: செடிகொடிகளுக்கு நீர்பெய்தல், பூபபறித்தல், மாலைகட்டுதல், தேவரீரில்லாதசமயங்களிற் சோலையைப்பாதுகாததல் முதலிய பணிவிடைகளில் எதைநியமித்தாலுஞ் செய்துவரக்காத்திருக்கிறேன்' என்று மிக்கவணக்கத்தோடு விண்ணப்பஞ்செய்தாள். அவர் அவளது கபடசித்தத்தை யுணராமல் உடன்பட்டுத் தாம் உண்டுசேடித்த அந்நத்தைக் கொடுத்துவர, அவளும் அதனைவாஙகிப புசித்துத் திருததுழாய முதலியவற்றிற்குப் பாத்திகொத்தல், நீரபரிமாறுதல் முதலிய குற்றேவல்களைத் தவறாமல் மிக்கவூககத்துடனே எப்பொழுதுஞ் செயதுகொண்டு சோலையைச் செழுமையாக வளர்த்து அவாககுத் தன்பக்கல் நம்புதலுண்டாம்படி நல்லவள்போல நடித்துவந்தாள்.

இபபடி அநேகமாதங்கழிந்தபின் ஒருநாள் பெருமழை பொழிகின்ற பொழுது, பர்ணசாலையிற் பிரவேசித்திருந்த அவ்வந்தணா, வெளியிலே அவள் நனைந்துவருந்துதலைப பார்த்து இயற்கையான ஜீவகாருண்யத்தால் உள்ளேவந்து நிற்கும்படி நியமிக்க, அதுவேவியாஜமாக அவள் அருகில்வந்து தனது மென்மொழிகளாலும் மேனிமினுக்கினாலும மனத்தைக்கவர்ந்து அவரைத் தன்வசமாக்கிச் சிலகாலம் அவருடனே யிருந்து, பின்பு பொருளில்லாத அவரைப் பொருள்செய்யாது கைவிட்டுத் தன்கிருகத்திற்சென்று சேர்ந்தவளவிலே, இவர் அவள்பிரிவை யாற்றாமல் அவளது வீட்டுவாயிலில் சென்று தியங்கினார்.

அவ்வளவிலே, பிராட்டி பெருமானைநோக்கி 'நமக்குப் பலகாலமாகப்பணி செய்துவந்த விபபிரநாராயணன் அதனை முழுவதும் ஒழித்து ஒருபொதுமகளுக்குத் தொண்டுபூண்டு அவள்புறக்கணிக்கவும மனந்திருமபாது அவளில்லத்துப் புறங்கடைபற்றி ஏங்கிநிற்குமாறு தேவரீர் மாயைக்கு இலக்காக்கலாமோ?

'இதுவும் ஒரு திருவிளையாட்டு இருந்தபடி என்? இனி இவனை விரைவில் மீட்டு முன்போல ஆட்கொண்டு அந்தரங்கபக்தனுக்கியருளவேண்டும்' என்று பிரார்த்திக்க, திருமாலும் திருமகள்வார்த்தைக்கு இயைந்து தமது திருக்கோயிற் பாத்திரங்களுள் ஒருஸ்வர்ணபாத்திரத்தை யெடுத்துக்கொண்டு மனிதவடிவம்பூண்டு விப்பிரநாராயணர்க்குத் தெரியாமல் அப்பரத்தையின் மனைக்கு எழுந்தருளி வாயிற்கதவு திறக்கச் சொல்ல, அவள் உள்ளிருந்தபடியே 'யார் நீ? எங்கு வந்தாய்?' என்றுகேட்க, நம்பெருமாள் 'நான் அழகியமணவாளதாசன், விப்பிரநாராயணரனுப்ப வந்தேன்' என்று விளம்பியவளவில், தேவதேவி விரைந்துவந்து கவாடந்திறந்து 'வந்தகாரிய மென்ன?' என்று வினவுதலும், ஸ்ரீரங்கநாதன் தான்கொணர்ந்த பொற்கலத்தை அவள்கையிற் கொடுத்து 'இதனை விப்பிரநாராயணர் உனக்கு வரவிடுத்தார்' என்று சொன்னவுடனே, அவள் அதியாதரத்தோடு 'அவரை உள்ளேவரச் சொல்லும்' என்று அநுமதி செய்தபின், அடியவர்க்கு எளியவனான எம்பெருமான் விப்பிரநாராயணரிடம் வந்து 'தேவதேவி உம்மை உள்ளேவரச் சொன்னாள்' என்று சொல்லிச் சென்றார். அச்செவிக்கினியசெஞ்சொல்லைக் கேட்டமாத்திரத்தில் அவர் பிரிந்தவுயிரைப் பெற்றாற்போல உள்ளங்குளிர்ந்து உடல்பூரித்து உள்ளேசென்று சேர்ந்தனர்.

அவ்விரவுகழிந்து பொழுதுவிடிந்தவாறே ஸ்வாமிசந்நிதியில் திருக்காப்பு நீக்கியவளவில், சிறந்ததொரு பொற்பாத்திரத்தைக் காணாமற் கோயிற்பரிகாரத்தார் இராஜாங்கத்தார்க்கு அறிவிக்க, அவர்கள் உடனே வந்து களவுகண்டுபிடித்தற்பொருட்டு அர்ச்சகர் பரிசாரகர் முதலிய அந்தரங்கபரிசனங்களைப் பிடித்துப் பலவாறுதண்டித்து வருத்தியும் ஒருவர்மீதுங் குற்றங்காணப்படாமையால் ஆங்காங்குப் புலம் விசாரித்துவருகையில், தேவதேவியின்மாளிகையிலிருக்கின்றதென அவள்வீட்டுவேலைக்காரி யொருத்தியால் அறிந்து, அங்குச்சென்று அதனைக்கண்டு அவ்வில்லிலுள்ளார் யாவரையுங் குற்றவாளிகளாக்கி அரசன்முன்னிலையிற் கொண்டுபோய் நிறுத்தினார்கள். அப்போது வளவன் வரைவின்மகளை நோக்கி 'பெருமாள் பாத்திரத்தை நீ கவரலாமோ?' என்று வினவ, அவள் 'யான் இன்னாரென்று அறியேன்: அழகியமணவாளதாசனென்பானொரு தூதன் மூலமாக இவ்வேதியன் இதனை எனக்கு வரவிட்டான்; இவ்வளவே யான் அறிவது' என்று உத்தரங் கூறினள். அதன்மேல் இராசன் விப்பிரரை விசாரிக்க, அவரும் 'யான் ஒன்றும் அறியேன், ஏழையான எனக்கு ஓர் ஏவலாளனும் இல்லை' என்று சொல்ல, இங்ஙனம் இருதலைவாய்மொழியையுங் கேட்டபின் அரசன் ஆலோசித்து, களவாடியபொருளை வாங்கியவர்க்கு உரிய அபராதப்பொருளை இறுக்கும்படி வேசிக்கு விதித்து, அக்காணிக்கையையும் தங்கவட்டிலையும் பெருமாளுக்குச் சமர்ப்பித்து, பொற்கள்வர்க்குரிய தண்டனையை ஆராய்ந்து விதித்தற்பொருட்டு மறையவரைச் சிறையி லிட்டான்.

மீண்டும் ஒருகால் ஸ்ரீரங்கநாயகி 'இவ்வடியவனைத் தேவரீர் லீலைக்கு விஷயமாக்காமற் கிருபைக்குப் பாத்திரமாக்கி யருளவேணும்' என்று வேண்ட, பெருமாள் அதனை அங்கீகரித்துக் கோமகன்கனவிலே தாம்எழுந்தருளி 'வரைவின்மகளை வேட்ட இவனது கருமத்தைக் கழித்தற்பொருட்டு நாமே பொன்

வள்ளத்தைக் கொண்டுபோய்க் கொடுத்து இவனைத் தண்டிப்பித்தோம்; உண்மையில் இவன் சோரனல்லன்: சுத்தனே' என்று தெரிவிக்க, நரபதி துயிலுணர்ந்தவுடனே கனத்தோற்றத்தை அமைச்சராதியர்க்கு வியப்போடு வெளியிட்டு வேதியனை விடுவித்து உபசரித்து அனுப்பிவிட்டான்.

பிறவிப்பெருஞ்சிறையினின்று விடுபடுதற்கு ஒரு முற்குறியாகக் காவல் வீடுபெற்ற பிராமணர், தாம் தளவத்தொண்டுதுறந்து வைதிகவொழுக்கமும் மறந்து பொருட்பெண்டிர் பொய்ம்மைமுயக்கத்தில் ஆழ்ந்து இடைகழியாளனுய் அலைந்து பரிபவப்பட்டதை நினைத்துநினைத்து மிகவும் பச்சாத்தாபப்பட்டுப் பிராயசித்தஞ் செய்துகொள்ளப் பிரயத்தனங்கொண்டு பெரியோர்களைச்சார்ந்து தமது தோஷங்களையெல்லாம் விடாது எடுத்து வாயாற்சொல்லி 'இவற்றிற்குக்கழுவாய் இன்னதென்று துணிந்து கூறியருளவேணும்' என்ன, அவர்கள் அநேகசாஸ்திரங்களை ஆராய்ந்து 'சகலபாபங்களும் பரிகாரமாதற்கு ஏற்ற செய்தொழில் பாகவதர்களுடைய ஸ்ரீபாததீர்த்தத்தை உட்கொள்ளுதலே' என்று உய்யுமாறுகூற, அங்ஙனமே அவர் அதனைப் பெற்றுப பருகிப் பரிசுத்தராயினர்.

பின்பு, அவர், முன்போலவே பகவத்பாகவதபக்தி தலையெடுக்கப்பெற்று "நாதனை நரசிங்கனை நவின்றேத்துவார்களுழக்கிய, பாததூளிபடுதலா லிவ்வுலகம் பாக்கியஞ்செய்ததே" என்றும், "ஆடிப்பாடி யரங்கவோ வென்றழைக்குந் தொண்டரடிப்பொடி, யாட நாம்பெறிற் கங்கைநீர் குடைந்தாடும் வேட்கையென்னுவதே" என்றும், "ஆறுபோல்வருங்கண்ணநீர் கொண்டரங்கன் கோயில் திருமுற்றஞ், சேறுசெய் தொண்டர்சேவடிச்செழுஞ்சே றெனசென்னிக்கணிவனே" என்றும் அருளிச்செய்யப்பட்ட நூற்பொருளிலே நுழைந்த நெஞ்சமுடையராய், ஸ்ரீவைஷ்ணவர்களுடைய ஸ்ரீபாததூளியாய் அவர்கட்குக் கீழ்ப்படிந்து அடிமைபூண்டு ஒழுகி, அதனால் தமக்கு அதுவே நிரூபகமாக "தொண்டரடிப்பொடி" என்று திருநாமம் பெற்றனர்.

அப்பால தொண்டரடிபபொடியாழ்வார்க்கு ஸ்ரீரங்கநாதன் தத்துவஞானத்தைக் கொடுத்துத் தனது பரம் வியூகம் விபவம் அந்தர்யாமித்வம் அர்ச்சை என்ற ஐவகை நிலையையுந் தெளிவாக விளக்கியருள, அவர் அவற்றில் அர்ச்சாவதாரத்திலே மிக்க ஈடுபாடுகொண்டு, அதிலும் எம்பெருமான் உகந்தருளின நிலங்க ளெல்லாவற்றினுள்ளும் திருவரங்கத்து நம்பெருமாள்பக்கலிலே நாட்டம்வைத்து அப்பெரியபெருமாளையல்லது பிறிதொரு பொருளை யறியாராய் அப்பிரானுக்கே தாம் உள்ளவளவும் தளவத்திருத்தொண்டு பூண்டு வாழ்ந்து தமது அநுபவத்தைப் பிரபந்தமூலமாகப் பிறர்க்குத் தெரிவிக்கக் கருதி, திருமாலை, திருப்பள்ளியெழுச்சி யென்ற திவ்வியநூல்களை யியற்றி, அவற்றில் "புலையறமாகிநின்ற புத்தொடுசமணமெல்லாங், கலையறக்கற்றமாந்தர் காண்பரோ கேட்பரோதாம், தலையறுப்புண்டுஞ்சாகேன் சத்தியங்காண்மினையா, சிலையினுலிலங்கைசெற்ற தேவனே தேவனுவான்" என்று தமது சித்தாந்தத்தைப் பிரமாணபூர்வமாக வெளியிட்டு, திருமாலடியில் முடியிடுபவர் யமகிங்கரர்கள் முடியிலே அடியிடுந் தன்மைய ரென்ற சிறப்பையும் விளக்கி, உலகத்தாரை வாழ்வித்து, நூற்றைந்துபிராயம் ஸ்ரீரங்கத்திலேயே வாழ்ந்திருந்து அந்தமிலதோர் நாட்டை யடைந்தார்.

தன்பால் அன்பால்நிறைந்த விப்பிரநாராயணர் இராசதண்டனையினின்று மீண்டு தொண்டரடிப்பொடியாரான செய்தியை அறிந்து, தேவதேவி, தானும் உய்வுபெற உன்னித் தனதுபொருளனைத்தையும் அரங்கனுக்கே உரியதாக்கி விட்டு, பரமசாத்துவிகையாய், கோயிலிலே திருவலகிடுதல் மெழுகுதல் ரங்க வல்லிசமர்ப்பித்தல் முதலிய அடிமைத்தொழில்களைச் சிலகாலஞ் செய்து கொண்டிருந்து, ஊழ்வினை யொழிந்து, தனதுஜநமத்தை ஸபலமாக்கி, முடிவில் நற்கதி நண்ணினாள்.



## தொண்டரடிப்பொடியாழ்வார்.

மண்டங்குடியதனில் வாழவந்தோன் வாழியே
மார்கழியிற் கேட்டைநாள் வந்துதித்தான் வாழியே
தெண்டிரைசூழரங்கரையே தெய்வமென்றான் வாழியே
திருமாலை யொன்பதஞ்சும் செப்பினான் வாழியே
பண்டுதிருப்பள்ளியெழுச்சி பத்துரைத்தான் வாழியே
பாவையர்கள்கலவிதன்னை பழித்தசெல்வன் வாழியே
தொண்டுசெய்து துளபத்தால் துலங்கினான் வாழியே
தொண்டரடிப்பொடியாழ்வார் துணைப்பதங்கள் வாழியே.

தொண்டரடிப்பொடியாழ்வார் அருளிச்செய்த

# திருமாலை.



## தனியன்.

(திருவரங்கப்பெருமாளரையர் அருளிச்செய்தது.)

இருவிகற்பநேரிசைவெண்பா.

*மற்றொன்றும்வேண்டாமனமே ! * மதிளரங்கர்*
*கற்றினம்மேய்த்தகழலிணைக்கீழ் *—உற்ற*
*திருமாலைபாடும்சீர்த்தொண்டரடிப்பொடி † யெம்*
*பெருமானை * எப்பொழுதும்பேசு.*

[திருவரங்கத்து எம்பெருமான் விஷயம்.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (ஸஹாநாராகம் - ரூபகதாளம்.)

❀ *காவலில்புலனைவைத்துக் கலிதன்னைக்கடக்கப்பாய்ந்து **
*நாவலிட்டுஉழிதருகின்றோம் நமன்தமர்தலைகள்மீதே **
*மூவுலகுண்டுமிழ்ந்தமுதல்வ ! நின்நாமம்கற்ற **
*ஆவலிப்புடைமைகண்டாய் அரங்கமாநகருளானே !* (க)

❀ *பச்சைமாமலைபோல்மேனி பவளவாய்கமலச்செங்கண் **
*அச்சுதா ! அமரரேறே ! ஆயர்தம்கொழுந்தே ! என்னும் **
*இச்சுவைதவிரயான்போய் இந்திரலோகம்ஆளும் **
*அச்சுவைபெறினும்வேண்டேன் அரங்கமாநகருளானே !* (உ)

*வேதநூல்பிராயம்நூறு மனிசர்தாம்புகுவரேலும் **
*பாதியும்உறங்கிப்போகும் ‡ நின்றதில்பதினையாண்டு **
*பேதைபாலகனதாகும் பிணிபசிமூப்புத்துன்பம் **
*ஆதலால்பிறவிவேண்டேன் அரங்கமாநகருளானே !* (ங)

---

† இங்குத் தளை தவறுகின்றது: 'தொண்டர்பொடியெம்' என்றாவது, 'தொண்டரடித் தூளெம்' என்றாவது, 'தொண்டரடிப்பொடியெம், பெம்மானை' என்றாவது இருந்தால் பொருந்தும். ‡ 'நின்றதிப்பதிற்றையாண்டு' என்ற பாடம் ஏற்கும்.

மொய்த்தவல்வினையுள்நின்று மூன்றெழுத்துடையபேரால் *
கத்திரபந்துமன்றே பராங்கதிகண்டுகொண்டான் *
இத்தனையடியரானார்க்கு இரங்கும்நம்அரங்கனாய *
பித்தனைப்பெற்றும்அந்தோ! பிறவியுள்பிணங்குமாறே. (௪)

பெண்டிரால்சுகங்களுய்ப்பான் பெரியதோரிடும்பைபூண்டு *
உண்டிராக் † கிடக்கும்போது உடலுக்கேகரைந்துநைந்து *
தண்துழாய்மாலைமார்பன் தமர்களாய்ப்பாடியாடி *
தொண்டுபூண்டமுதமுண்ணாத் தொழும்பர்சோறுஉகக்குமாறே! (௫)

மறம்சுவர்மதிளெடுத்து மறுமைக்கேவெறுமைபூண்டு *
புறம்சுவரோட்டைமாடம் புரளும்போதுஅறியமாட்டீர் *
அறம்சுவராகிநின்ற அரங்கனார்க்குஆட்செய்யாதே *
புறஞ்சுவர்கோலஞ்செய்து புள்கௌவக்கிடக்கின்றீரே. (௬)

புலையறமாகிநின்ற புத்தொடுசமணமெல்லாம் *
கலையறக்கற்றமாந்தர் காண்பரோகேட்பரோதாம்? *
தலையறுப்புண்டும் ‡ சாகேன் சத்தியம்காண்மின்ஐயா! *
சிலையினால்இலங்கைசெற்ற தேவனேதேவனாவான். (௭)

வெறுப்பொடுசமணர்முண்டர் விதியில்சாக்கியர்கள் * நின்பால்
பொறுப்பரியனகள்பேசில் போவதேநோயதாகி *
§ குறிப்பெனக்கடையுமாகில் கூடுமேல், தலையைஆங்கே *
அறுப்பதேகருமம்கண்டாய் அரங்கமாநகருளானே! (௮)

மற்றுமோர்தெய்வமுண்டே? மதியிலாமானிடங்காள்! *
உற்றபோதன்றிநீங்கள் ஒருவனென்றுஉணரமாட்டீர் *
அற்றமேலொன்றறியீர் அவனல்லால்தெய்வமில்லை *
கற்றினம்மேய்த்தஎந்தை கழலிணைபணிமின்நீரே. (௯)

நாட்டினான்தெய்வம்எங்கும் நல்லதோரருள்தன்னாலே *
காட்டினான்திருவரங்கம் உய்பவர்க்குஉய்யும்வண்ணம் *
கேட்டிரேநம்பிமீர்காள்! கெருடவாகனனும்நிற்க *
சேட்டைதன்மடியகத்துச் செல்வம்பார்த்திருக்கின்றீரே. (௧0)

ஒருவில்லால்ஓங்குமுந்நீரடைத்து உலகங்களுய்ய *
செருவிலேஅரக்கர்கோனைச்செற்ற நம்சேவகனார் *
மருவியபெரியகோயில் மதிள்திருவரங்கமென்னா *
கருவிலேதிருவிலாதீர்! காலத்தைக்கழிக்கின்றீரே. (௧௧)

† 'கிடக்குமப்போது' என்னும் பாடம் சிறந்ததாம். ‡ 'சாவேன்' என்பதும் பாடம். § 'குறிப்பினுக்கு' என்பதும் பாடம்.

நமனும்முற்கலனும்பேச நரகில்நின்றார்கள்கேட்க *
நரகமேசுவர்க்கமாகும் நாமங்களுடையநம்பி *
அவனதூர்அரங்கமென்னாது அயர்த்துவீழ்ந்தளியமாந்தர் *
கவலையுள்படுகின்றாரென்று அதனுக்கேகவல்கின்றேனே. (கஉ)

எறியும்நீர்வெறிகொள்வேலை மாநிலத்துஉயிர்களெல்லாம் *
வெறிகொள்பூந்துளவமாலை விண்ணவர்கோனையேத்த *
அறிவிலாமனிசரெல்லாம் அரங்கமென்றழைப்பராகில் *
பொறியில்வாழ்நரகமெல்லாம் புல்லெழுந்தொழியுமன்றே. (கங)

❀ வண்டினம்முரலும்சோலை மயிலினம்ஆலும்சோலை *
கொண்டல்மீதணவும்சோலை குயிலினம்கூவும்சோலை *
அண்டர்கோன்அமரும்சோலை அணிதிருவரங்கமென்னா *
மிண்டர்பாய்ந்துஉண்ணும்சோற்றைவிலக்கி நாய்க்கிடுமினீரே. (கச)

மெய்யர்க்கேமெய்யனாகும் விதியிலாஎன்னைப்போல *
பொய்யர்க்கேபொய்யனாகும் புட்கொடியுடையகோமான் *
உய்யப்போமுணர்வினார்கட்கு ஒருவனென்றுஉணர்ந்தபின்னை *
ஐயப்பாடறுத்துத்தோன்றும் அழகனூர்அரங்கமன்றே. (கரு)

சூதனாய்க்கள்வனாகித் தூர்த்தரோடுஇசைந்தகாலம் *
மாதரார்கயற்கணென்னும் வலையுள்பட்டழுந்துவேனை *
போதரேயென்றுசொல்லிப் புந்தியுள்புகுந்து * தன்பால்
ஆதரம்பெருகவைத்த அழகனூர்அரங்கமன்றே. (கசு)

விரும்பிநின்றேத்தமாட்டேன் விதியிலேன்மதியொன்றில்லை *
இரும்புபோல்வலியநெஞ்சம் இறையிறைஉருகும்வண்ணம் *
சுரும்பமர்சோலைசூழ்ந்த அரங்கமாகோயில்கொண்ட *
கரும்பினைக்கண்டுகொண்டு என்கண்ணிணைகளிக்குமாறே ! (கஎ)

இனிதிரைத்திவலைமோத எறியும்தண்பரவைமீதே *
தனிகிடந்துஅரசுசெய்யும் தாமரைக்கண்ணன்எம்மான் *
கனியிருந்தனையசெவ்வாய்க் கண்ணனைக்கண்டகண்கள் *
பனியரும்புஉதிருமாலோ ! என்செய்கேன்பாவியேனே ? (கஅ)

❀ குடதிசைமுடியைவைத்துக் குணதிசைபாதம்நீட்டி *
வடதிசைபின்புகாட்டித் தென்திசைஇலங்கைநோக்கி *
கடல்நிறக்கடவுளெந்தை அரவணைத்துயிலுமாகண்டு *
உடலெனக்குஉருகுமாலோ ! என்செய்கேன் ? உலகத்தீரே ! (கக)

பாயும்நீரரங்கந்தன்னுள் பாம்பணைப்பள்ளிகொண்ட *
மாயனார்திருநன்மார்வும் மரகதவுருவும்தோளும் *
தூயதாமரைக்கண்களும் துவரிதழ்ப்பவளவாயும் *
ஆயசீர்முடியும்தேசும் அடியரோர்க்குஅகலலாமே? (உ0)

பணிவினால்மனமதொன்றிப் பவளவாயரங்கனார்க்கு *
துணிவினால்வாழமாட்டாத தொல்லைநெஞ்சே! நீசொல்லாய் *
அணியினார்செம்பொனாய அருவரையனையகோயில் *
மணியனார்கிடந்தவாற்றை மனத்தினால்நினைக்கலாமே? (உக)

பேசிற்றேபேசலல்லால் பெருமையொன்றுஉணரலாகாது *
ஆசற்றார்தங்கட்கல்லால் அறியலாவானுமல்லன் *
மாசற்றார்மனத்துளானை வணங்கிநாமிருப்பதல்லால் *
பேசத்தானாவதுண்டோ? பேதைநெஞ்சே! நீசொல்லாய். (உஉ)

கங்கையின்புனிதமாய காவிரிநடுவுபாட்டு *
பொங்குநீர்பரந்துபாயும் பூம்பொழிலரங்கந்தன்னுள் *
எங்கள்மால்இறைவனீசன் கிடந்ததோர்கிடக்கைகண்டும் *
எங்ஙனம்மறந்துவாழ்கேன்? ஏழையேன்ஏழையேனே. (உங)

வெள்ளநீர்பரந்துபாயும் விரிபொழிலரங்கந்தன்னுள் *
களவனார்கிடந்தவாறும் கமலநன்முகமும்கண்டும் *
உளளமே! வலியைபோலும் ஒருவனென்றுஉணரமாட்டாய் *
கள்ளமேகாதல்செய்து உன்கள்ளத்தேகழிக்கின்றாயே. (உச)

குளித்துமூன்றனலையோம்பும் குறிகொள்அந்தணமைதன்னை *
ஒளித்திட்டேன், என்கணில்லை நின்கணும்பத்தனல்லேன் *
களிப்பதுஎன்கொண்டு? நம்பி! கடல்வண்ணா! கதறுகின்றேன் *
அளியதெனக்கருள்செய்கண்டாய் அரங்கமாநகருளானே! (உரு)

போதெல்லாம்போதுகொண்டு உன்பொன்னடிபுனையமாட்டேன் *
தீதிலாமொழிகள்கொண்டு உன்திருக்குணம்செப்பமாட்டேன் *
காதலால்நெஞ்சம்அன்பு கலந்திலேன், அதுதன்னாலே *
ஏதிலேன்அரங்கர்க்குஎல்லே! என்செய்வான்தோன்றினேனே? (உசு)

குரங்குகள்மலையைநூக்கக் குளித்துத்தாம்புரண்டிட்டோடி *
தரங்கநீரடைக்கலுற்ற சலமிலாஅணிலும்போலேன் *
மரங்கள்போல்வலியநெஞ்ச வஞ்சனேன, நெஞ்சுதன்னால் *
அரங்கனார்க்குஆட்செய்யாதே அளியத்தேன்அயர்க்கின்றேனே. (உஎ)

உம்பரால்அறியலாகா ஒளியுளார், ஆனைக்காகி *
செம்புலாலுண்டுவாழும் முதலைமேல்சீறிவந்தார் *
நம்பரமாயதுண்டே? நாய்களோம்சிறுமையோரா *
எம்பிராற்குஆட்செய்யாதே என்செய்வான்தோன்றினேனே? (உஅ)

ஊரிலேன்காணியில்லை உறவுமற்றொருவரில்லை *
பாரில்நின்பாதமூலம் பற்றிலேன்பரமமூர்த்தி! *
† காரொளிவண்ணனே! கண்ணனே! கதறுகின்றேன் *
ஆருளர்? களைகண் அம்மா! அரங்கமாநகருளானே! (உகூ)

மனத்தில்ஓர் தூய்மையில்லை வாயில்ஓரின்சொலில்லை *
சினத்தினால்செற்றம்நோக்கித் தீவிளிவிளிவன்வாளா *
புனத்துழாய்மாலையானே! பொன்னிசூழ்திருவரங்கா! *
எனக்குஇனிக்கதியென்சொல்லாய்? என்னையாளுடையகோவே! (௩0)

தவத்துளார்தம்மிலல்லேன் தனம்படைத்தாரிலல்லேன் *
உவர்த்தநீர்போல என்தனுற்றவர்க்கொன்றுமல்லேன் *
துவர்த்தசெவ்வாயினார்க்கே துவக்கறத்துரிசனானேன் *
அவத்தமேபிறவிதந்தாய் அரங்கமாநகருளானே! (௩க)

ஆர்த்துவண்டலம்பும்சோலை அணிதிருவரங்கந்தன்னுள் *
கார்த்திரளனையமேனிக் கண்ணனே! உன்னைக்காணும் *
மார்க்கமொன்றறியமாட்டா மனிசரில்துரிசனாய *
மூர்க்கனேன்வந்துநின்றேன் மூர்க்கனேன்மூர்க்கனேனே. (௩உ)

மெய்யெல்லாம்போகவிட்டு விரிகுழலாரில்பட்டு *
பொய்யெல்லாம்பொதிந்துகொண்ட போழ்க்கனேன்வந்துநின்றேன் *
ஐயனே! அரங்கனே! உன்னருளெனுமாசைதன்னால் *
பொய்யனேன்வந்துநின்றேன் பொய்யனேன்பொய்யனேனே. (௩௩)

உள்ளத்தேயுறையும்மாலை உள்ளுவானுணர்வொன்றில்லா *
கள்ளத்தேன்நானும்தொண்டாய்த் தொண்டுக்கேகோலம் ‡ பூண்டு *
உள்ளுவாருள்ளிற்றெல்லாம் உடனிருந்தறிதியென்று *
வெள்கிப்போய்என்னுள்ளேநான் விலவறச்சிரித்திட்டேனே. (௩௪)

---

† 'காரொளிவண்ணனே என் கண்ணனே கதறுகின்றேன்' என்னும் பாடம் செய்யுளிலக்கணத்தோடும் வ்யாக்யானத்தோடும் பொருந்தும்.

‡ 'பூண்டேன்' என்றும் பாடம்.

தாவி அன்று உலகமெல்லாம் தலைவிளாக்கொண்ட எந்தாய்! *
சேவியேன் உன்னையல்லால் சிக்கெனச் செங்கண்மாலே! *
ஆவியே! அமுதே! என்தனுருயிரானையனைந்தாய்! *
பாவியேன் உன்னையல்லால் பாவியேனபாவியேனே. (௩௫)

மழைக்கு அன்று வரைமுன்னேந்தும் மைந்தனே! மதுரவாறே! *
உழைக்கன்றேபோல நோக்கமுடையவர்வலையுள்பட்டு *
உழைக்கின்றேற்கு என்னைநோக்காதொழிவதே! * உன்னையன்றே
அழைக்கின்றேன் ஆதிமூர்த்தி! அரங்கமாநகருளானே! (௩௬)

தெளிவிலாக்கலங்கல்நீர்சூழ் திருவரங்கத்துளோங்கும் *
ஒளியுளார்தாமேயன்றே தந்தையுமதாயுமாவார் *
எளியதோரருளுமன்றே என்திறத்தெம்பிரானார் *
அளியன்நம்பையலென்னார் அம்மவோ! கொடியவாறே! (௩௭)

மேம்பொருள்போகவிட்டு மெய்ம்மையைமிகவுணர்ந்து *
ஆம்பரிசறிந்துகொண்டு ஐம்புலனகத்தடக்கி *
காம்பறத்தலைசிரைத்து உன்கடைத்தலையிருந்து * வாழும்
சோம்பரைஉகத்திபோலும் சூழ்புனலரங்கத்தானே! (௩௮)

அடிமையிற்குடிமையில்லா அயல்சதுப்பேதிமாரில் *
குடிமையில்கடைமைபட்ட குக்கரில்பிறப்பரேலும் *
முடியினில்துளபம்வைத்தாய்! மொய்கழற்கு அன்புசெய்யும் *
அடியரைஉகத்திபோலும் அரங்கமாநகருளானே! (௩௯)

திருமறுமார்வ! நின்னைச் சிந்தையுள்திகழவைத்து *
மருவியமனத்தராகில் மாநிலத்துஉயிர்களெல்லாம் *
வெருவரக்கொன்றுசுட்டிட்டு ஈட்டியவினையரேலும் *
அருவினைப்பயனதுய்யார் அரங்கமாநகருளானே! (௪0)

வானுளார் அறியலாகா வானவா என்பராகில் *
தேனுலாம்துளபமாலைச் சென்னியாய் என்பராகில் *
ஊனமாயினகள்செய்யும் ஊனகாரகர்களேலும் *
போனகம்செய்தசேடம் தருவரேல், புனிதமன்றே. (௪க)

பழுதிலாவொழுகலாற்றுப் பலசதுப்பேதிமார்கள்! *
இழிகுலத்தவர்களேலும் எம்மடியார்களாகில் *
தொழுமினீர்கொடுமின்கொண்மின் என்று நின்னோடுமொக்க *
வழிபட அருளினாய்போல் மதிள்திருவரங்கத்தானே! (௪உ)

அமரவோரங்கமாறும் வேதமோர்நான்குமோதி *
தமர்களில்தலைவராய சாதியந்தணர்களேலும் *
நுமர்களைப்பழிப்பராகில் நொடிப்பதோரளவில் * ஆங்கே
அவர்கள்தாம்புலையர்போலும் அரங்கமாநகருளானே ! (சங)

❀ பெண்ணுலாம்சடையினானும் பிரமனும்உன்னைக்காண்பான் *
எண்ணிலாவூழியூழி தவம்செய்தார்வெள்கிநிற்ப *
விண்ணுளாரவியப்பவந்து ஆனைக்குஅன்றுஅருளையீந்த
கண்ணறா ! * உன்னையென்னோ ? களைகணாக்கருதுமாறே. (சச)

❀ வளவெழும்தவளமாட மதுரைமாநகரந்தன்னுள் *
† கவளமால்யானைகொன்ற கண்ணனை அரங்கமாலை *
துளவத்தொண்டாயதொல்சீர் தொண்டரடிப்பொடிசொல் *
இளையபுன்கவிதையேலும் எம்பிராற்குஇனியவாறே. (சரு)

அடிவரவு:—காவல் பச்சை வேதம் மொய்த்த பெண்டிர் மறம் புலை வெறுப்பொடு மற்றும் நாட்டினான ஒரு நமனும் எறியும் வண்டினம் மெய் சூதன் விரும்பி இனிது குட பாயும் பணி பேசு கங்கை வெள்ளம் குளித்து போது குரங்கு உம்பா ஊர மனம் தவம் ஆர்த்து மெய் உள்ளம் தாவி மழை தெளிவு மேம்பொருள் அடிமை திரு வான் பழுதிலா அமர பெண் வளவெழும் கதிர்.

தொண்டரடிப்பொடியாழ்வார் திருவடிகளே சரணம்.

திருமாலை ஸம்பூர்ணம்.



† 'களவமால்யானை' என்பதுமாம்.

தொண்டரடிப்பொடியாழ்வார் அருளிச்செய்த

# † திருப்பள்ளியெழுச்சி.

## தனியன்கள்.

(திருமாலையாண்டான் அருளிச்செய்தது.)

𑌤𑌮𑍇𑌵 𑌮𑌤𑍍𑌵𑌾 𑌪𑌰𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑌂-
𑌰𑌙𑍍𑌗𑍇𑌶𑌯𑌂 𑌰𑌾𑌜𑌵𑌦𑌰𑍍𑌹𑌣𑍀𑌯𑌮𑍍 ।
𑌪𑍍𑌰𑌾𑌬𑍋𑌧𑌿𑌕𑍀𑌂 𑌯𑍋𑌽𑌕𑍃𑌤𑌸𑍂𑌕𑍍𑌤𑌿𑌮𑌾𑌲𑌾𑌂-
𑌭𑌕𑍍𑌤𑌾𑌙𑍍𑌘𑍍𑌰𑌿𑌰𑍇𑌣𑍁𑌂𑌭𑌗𑌵𑌨𑍍𑌤𑌮𑍀𑌡𑍇 ॥

†తమేవమత్వాపరవాసుదేవం రంగేశయంరాజవదర్హణీయం ।
ప్రాబోధకీంయోకృతసూక్తిమాలాం భక్తాఙ్ఘ్రిరేణుంభగవంతమీడే ॥

‡ தமேவமத்வாபரவாஸுதேவம்
ரங்கேஶயம்ராஜவதர்ஹணீயம்-
ப்ராபோதகீம்யோக்ருதஸூக்திமாலாம்
பக்தாங்க்ரிரேணும்பகவந்தமீடே.

(ஸ்ரீரங்கப்பெருமாளரையர் அருளிச்செய்தது.)

இருவிகற்பநேரிசைவெண்பா.

மண்டங்குடியென்பர் மாமறையோர்மன்னியசீர் *
தொண்டரடிப்பொடிதொன்னகரம் *—வண்டு
திணர்த்தவயல் தென்னரங்கத்தம்மானை * பள்ளி
யுணர்த்தும்பிரானுதித்தவூர்.

---

[ஸ்ரீரங்கநாதனைத் துயிலுணர்த்துதல்.]

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (பூபாளராகம் - அடதாளம்.)

❀ கதிரவன்குணதிசைச்சிகரம்வந்தணைந்தான்
கனையிருளகன்றதுகாலையம்பொழுதாய் *
§ மதுவிரிந்தொழுகினமாமலரெல்லாம்
வானவரரசர்கள்வந்துவந்தீண்டி *

---

† இது, நித்யாநுஸந்தாநம். ‡ 'தவாமேவ' என்ற பாடமே வ்ருத்தத்திற்குச் சேரும். § 'மதுவிருந்தொழுகின' என்றும் பாடம்.

எதிர்திசைநிறைந்தனர்இவரொடும்புகுந்த
இருங்களிற்றீட்டமும்பிடியொடுமுரசும் *
அதிர்தலில்அலைகடல்போன்றுளதெங்கும்
அரங்கத்தம்மா ! பள்ளியெழுந்தருளாயே. (க)

கொழுங்கொடிமுல்லையின்கொழுமலரணவிக்
கூர்ந்தது குணதிசைமாருதம்இதுவோ *
எழுந்தனமலரணைப் † பள்ளிகொள்ளன்னம்
ஈன்பனிநனைந்ததமிருஞ்சிறகுதறி *
விழுங்கியமுதலையின்பிலம்புரைபேழ்வாய்
வெள்ளெயிறுற அதன்விடத்தினுக்கனுங்கி *
அழுங்கிய ஆனையினருந்துயர்கெடுத்த
அரங்கத்தம்மா ! பள்ளியெழுந்தருளாயே. (உ)

சுடரொளிபரந்தனசூழ்திசையெல்லாம்
துன்னியதாரகைமின்னொளிசுருங்கி *
படரொளிபசுத்தனன்பனிமதிஇவனோ
பாயிருளகன்றது, பைம்பொழிற்கமுகின் *
மடலிடைக்கீறிவண்பாளைகள்நாற
வைகறைகூர்ந்ததுமாருதம் இதுவோ *
அடலொளிதிகழ்தருதிகிரியந்தடக்கை
அரங்கத்தம்மா ! பள்ளியெழுந்தருளாயே. (ங)

மேட்டிளமேதிகள் தளைவிடும்ஆயர்கள்
வேய்ங்குழலோசையும்விடைமணிக்குரலும் *
ஈட்டிய இசைதிசைபரந்தனவயலுள்
இரிந்தன சுரும்பினம், இலங்கையர்குலத்தை *
வாட்டியவரிசிலைவானவரேறே !
மாமுனிவேள்வியைக்காத்து * அவபிரதம்
ஆட்டியஅடுதிறலயோத்திஎம்மரசே !
அரங்கத்தம்மா ! பள்ளியெழுந்தருளாயே. (ச)

புலம்பினபுட்களும்பூம்பொழில்களின்வாய்,
போயிற்றுக்கங்குல்புகுந்ததுபுலரி *
கலந்ததுகுணதிசைக்கனைகடலரவம்
களிவண்டுமிழற்றியகலம்பகம்புனைந்த *

† 'பள்ளிகொண்டன்னம்' என்றும் பாடம்.

## திருப்பள்ளியெழுச்சி.

அலங்கலந்தொடையல்கொண்டுஅடியிணைபணிவான்
அமரர்கள்புகுந்தனர்ஆதலில்அம்மா ! *
இலங்கையர்கோன்வழிபாடுசெய்கோயில்
எம்பெருமான் ! பள்ளியெழுந்தருளாயே. (௫)

இரவியர்மணிநெடுந்தேரொடும்இவரோ ?
இறையவர்பதினொருவிடையரும்இவரோ ?*
மருவியமயிலினனறுமுகன்இவனோ ?
மருதரும்வசுக்களும்வந்துவந்தீண்டி *
புரவியோடுஆடலும்பாடலும் தேரும்
குமரதண்டம்புகுந்தீண்டியவெள்ளம் *
அருவரையனையநின்கோயில்முன்இவரோ ?
அரங்கத்தம்மா ! பள்ளியெழுந்தருளாயே. (௬)

அந்தரத்தமரர்கள்கூட்டங்கள் இவையோ?
அருந்தவமுனிவரும்மருதரும்இவரோ ?*
இந்திரனானையும்தானும்வந்திவனோ?
எம்பெருமான் ! உனகோயிலின்வாசல் *
சுந்தரர்நெருக்கவிச்சாதரர்நூக்க
இயக்கரும்மயங்கினர்திருவடித்தொழுவான் *
அந்தரம்பாரிடமில்லைமற்றிதுவோ ?
அரங்கத்தம்மா ! பள்ளியெழுநதருளாயே. (௭)

வம்பவிழ்வானவர்வாயுறைவழங்க
மாநிதிகபிலையொண்கண்ணாடிமுதலா*
எம்பெருமான்படிமக்கலங்காண்டற்கு
ஏற்பனவாயினகொண்டுநன்முனிவர் *
தும்புருநாரதர்புகுந்தனர்இவரோ ?
தோன்றினனஇரவியும்துலங்கொளிபரப்பி *
அம்பரதலத்தினின்றுஅகல்கின்றதுஇருள்போய்
அரங்கத்தம்மா ! பள்ளியெழுநதருளாயே. (௮)

ஏதமில்தண்ணுமைஎக்கம்மத்தளி
யாழ்குழல்முழவமோடுஇசைதிசைகெழுமி *
கீதங்கள்பாடினர்கின்னரர்கெருடர்கள்
கந்தருவரவர்கங்குலுளெல்லாம் *

மாதவர்வானவர்சாரணர்இயக்கர்
சித்தரும்மயங்கினர்திருவடிதொழுவான் *
ஆதலில்அவர்க்குநாளோலக்கம்அருள
அரங்கத்தம்மா ! பள்ளியெழுந்தருளாயே. (௯)

❀ கடிமலர்க்கமலங்கள்மலர்ந்தனஇவையோ ?
கதிரவன்கனைகடல்முளைத்தனனஇவனோ ? *
துடியிடையார்சுரிகுழல்பிழிந்துதறித்
துகிலுடுத்தேறினர்சூழ்புனலரங்கா ! *
தொடையொத்ததுளவமும்கூடையும்பொலிந்து
தோன்றியதோள்தொண்டரடிப்பொடியென்னும்
அடியனை * அளியனென்றருளிஉன்னடியார்க்கு
ஆட்படுத்தாய் ! பள்ளியெழுந்தருளாயே. (௧o)

அடிவரவு:—கதிர கொழு சுடர மேட்டு புலம்பின இரவியர் அந்தரம் வம்பவிழ் ஏதம் கடி அமலன்.

தொண்டரடிப்பொடியாழ்வார் திருவடிகளே சரணம்.

திப்பள்ளியெழுச்சி ஸம்பூர்ணம்.



# திருப்பாணாழ்வார் வைபவம்.

𑌵𑍃𑌶𑍍𑌚𑌿𑌕𑍇𑌰𑍋𑌹𑌿𑌣𑍀𑌜𑌾𑌤𑌂 𑌶𑍍𑌰𑍀𑌪𑌾𑌣𑌿𑌂𑌨𑌿𑌚𑍁𑌳𑌾𑌪𑍁𑌰𑍇 ।
𑌶𑍍𑌰𑍀𑌵𑌤𑍍𑌸𑌾𑌂𑌶𑌂𑌗𑌾𑌯𑌕𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌂 𑌮𑍁𑌨𑌿𑌵𑌾𑌹𑌨𑌮𑌾𑌶𑍍𑌰𑌯𑍇 ॥

వృశ్చికేరోహిణీజాతం శ్రీపాణింనిచుళాపురే ।
శ్రీవత్సాంశంగాయకేంద్రం మునివాహనమాశ్రయే ॥

வ்ருஶ்சிகேரோஹிணீஜாதம் ஶ்ரீபாணிம்நிசுளாபுரே-
ஶ்ரீவத்ஸாம்ஶம்காயகேந்தரம் முநிவாஹநமாஶ்ரயே.

"கொண்டல் குமுறுங் குடகிழிந்து மதகுந்தி யகில்கொண்டு நுரைமண்டி வருநீர்த் தெண்டிரைதொறுந் தாளமுங் கனகமுஞ் சிதறு"வதும், தன்னில் நீராடியவர்க்கும் தன்கரைகளில் வாழ்பவர்கரும் மாத்திரமே யன்றித் தனது தீர்த்தத்திற் பரிசித்த காற்றுச் செல்லுமிடமவ்வளவும் உள்ளார்க்கும் முத்திதர வல்ல மகாப்பிரபாவத்தை யுடையதுமாகிய பொன்னிநதி பாயப்பெறுதலாற் புனிதமான சோழவளநாட்டிலே, ராஜநகரங்களிந்தனுள் ஒன்றாய்த் தருமவாமா வென்னுஞ் செம்பியனுக்குக் குமாரியாய் நீளாதேவி அவதரித்த இடமான உறையூரிலே, துர்மதி வருஷத்தில் கார்த்திகைமாதத்து ரோகிணிநட்சத்திரத்திலே, ஸ்ரீதரனது ஸ்ரீவத்ஸத்தின் அம்சமாய், ஒருவர், ஓர் அந்தணனது கழனியிலே நெற்பயிர்க்கதிரில் அவதரித்தார்.

பிறவாதுபிறந்த அத்தெய்வக்குழந்தையை அவ்வூரிற் பஞ்சமசாதியிற் பாணர்குலத்துப் பிறந்தானொருவன பார்த்து நலவினைப்பயனென்று மகிழ்நது எடுத்துக்கொண்டுபோய், மலடுதீர்நது, மருவியகாதல்மனையாளுந் தானுமாக, பசுவின்பால் முதலிய பரிசுத்த ஆகாரஙகளையே கொடுத்துப போஷிதது வந்தான்.

அங்ஙனம் வளர்ந்த இவர், திருமாலருளால் தோன்றியவராதலால், இயற்கையிலே உலகப்பற்றற்று, மதுசூதனனது பாதாம்புயத்துக்குத் தன் மனததை மதுகாமாக்கியதுமன்றி, தாம் புகுந்த குலத்துக்கு ஏற்ற யாழ்பபாடலிலுந தேர்ச்சிபெற்று அதனால், 'பாணர்' என்றே பேர் கூறபபட்டு, நாரதபகவான போல ஞான வைராக்கியங்களோடு காநசாமர்த்தியமும் முதிர்ந்துநின்றார்,

இவ்வாறிருக்கையில், விஷ்வக்ஸேநர் இரகசியமாக எழுந்தருளி இவர்க்குத் திருவிலச்சினை சாதித்துச் சென்றார்

அதனால் மகாபாகவதோத்தமராகிய இவர், ரங்கநாதனுக்குப் பாடல் திருத்தொண்டுசெய்ய உத்தேசித்துப் புறப்பட்டு, தாம் தாழ்ந்தகுலத்தில் வளர்ந்தவராதலால், உபயகாவேரி மத்தியிலுள்ள ஸ்ரீரங்கதிவ்விய க்ஷேத்திரத்தில் அடியிடுதற்குந் துணியாமல் தென்திருக்காவேரியின் தென்கரையில் திருமுகத்துறைக்கெதிரிலே யாழுங்கையுமாக நின்றுகொண்டு நம்பெருமாளைத் திசைநோக்கித்

தொழுது. அவ்வாதிபகவன் விஷயமாக, அநேகதிவ்வியகீதங்களை, கண்டமுங் கருவியு மொக்க, கேட்பவர் செவியும் மனமும் குளிர, எம்பெருமான் திருவுள்ளமுகக்க, கின்னரகந்தருவாதியர் வியப்புறப் பாடினார்.

முன்பு திருக்குறுங்குடியில் நாடோறும் பகவத்விஷயமான யாழிசை பாடிக் கைசிகமென்னும் பண்ணின பயனால் தன்னைச் சரணமடைந்த ஒரு பிரமராக்கதனையுந் தீவினை தீர்த்து நற்கதிபுகுதநித் தானும் பிறவிப்பெருங்கடல் கடந்த 'நம்பாடுவான்' என்னுஞ் சாதிசண்டாளன்போலவே இவ்விழிகுலத்தவரும் பக்தியாற் பரவசப்பட்டு நெஞ்சம் நெக்குருகக் கண்கள் ஆனந்தவருவி சொரிய உடல் புளகிக்கப் பிரதிதினமும வைகறையிலே வந்து இசைபாடா நிற்கையில், ஒருநாள், திருவரங்கசெலவனுக்குத் தீர்த்தகைங்கரியஞ் செய்கிற லோகசாரங்கரென்னும் பூசுரவரர் நீர்கொணர்தற்குப் பொற்குடத்தை யெடுத்துக்கொண்டு பொன்னித்துறையை யடைகையில் அருகிலுள்ள இந்த அதம வருணத்தவரைப் பார்த்து அருவருத்து 'எட்டச் செல்' என்று பலமுறை பணிக்கவும், இவர் இவ்வுலகத்தொடர்பை மறந்திருந்ததனால் அம்மொழியைச் செவியுறாமல் வாளா நின்றிட்டார்.

அச்செய்தியைக் கேள்வியுற்ற மூர்க்ககுணமெனக் கருதி அக்கொண்டது விடாமையைக் குலைகத் துணிந்த சாதியபிமானம் மிக்க பல இருபிறப்பாளர் ஓடிவந்து 'போ போ' என்று அநேகமுறை கூறவும் அது செவியிற்படாமையாற் பாணகுலதிலகர் சிறிதும் பெயராது நிப்சலராய் இராகம் பாடிகொண்டிருக்க, அதுகண்டு அவர்களிற் சிலர் வியந்து 'இவன் ஞானயோகியல்லன்; கானயோகிபோலும்' என்று நினைத்துப்போக, முரட்டுக்குணமுடைய சிலர் 'எப்படியும் இப்பொழுது இவனை இடம்விட்டுத் தூரத்தாது விடுவதில்லை' என்று வீரவாதஞ்செய்து இவர்மேல் பல கற்களை யெடுத்து இடைவிடாது ஒருங்கே எறிய, அவ்வன்சிலைகள் இவருடைய மெல்லுடல்மேல் நன்குபட்டிடவும், இவா பக்திவசப்பட்டதனாற் சிறிதும் பரிசவுணர்ச்சியின்றி, சோனைமாரியாக ஏழுமேகங்களையும் கொண்டு இந்திரன் ஏககாலத்திலே பொழிவித்த சிலாவர்ஷத்துக்குச் சற்றும் பின்னிடாத கோவர்த்தனகிரிபோலச் சலியாதிருநதாா. அதுகண்டு அமராராசன்போல அனைவரும் அஞ்சி அகன்றனர்.

அப்பொழுது இவாது உடம்பிலும உள்ளத்திலும் கிஞ்சிததும வருத்தங் காணப்படவில்லை யாயினும் பக்தாகளது அந்தரங்கத்தில் அமர்நதிருக்கின்ற அரங்கநாதனது திருவுள்ளம் மிகக்கலங்க, திருநெற்றியும் இரததபெருக்குற்றது.

அதனை நோககி அர்ச்சகர் அதிபயபபட்டுக் கோயிலதிகாரிகளுக்கு அறிவிகக, அவாகளும இவவுற்பாதச்செய்தியை அரசனுக்குப் போகவிட, அமாத்தியரோடு அநேகவிதமாக ஆராய்நதும் காவலன் காரணங்காணாது கவன்று ஸ்வாமி திருவடியிலே பாரத்தை வைத்திட்டான்.

அதற்குமுன்னே ஒருநாள், பிராட்டி பெருமானை நோக்கி 'வெகுகாலமாக நம்மை அநவரதபாவனை பண்ணிவருகிற நம் பாணன் புறம்பேநிற்கப் பார்த்திருக்கலாமோ?' என்று விண்ணப்பஞ்செய்ததற்கு வாசுதேவபிரான் விரைவிலே அருகில் அழைப்பதாக வாக்களித்தனர்.

அநந்தரம் அவ்வாறே இந்திரையின் இஷ்டத்தை நிறைவேற்றவும், பாணரைப பெருமைப்படுத்தவும், 'பகவத்பிராபதிக்குச சாதியனறு பிரதானம்; பக்தியே அமையும்' எனற சாஸ்திர சிததாநதத்தை நடத்திக்காட்டவும், சென்னிவேந்தனது சிந்தனையை ஒழித்தருளவும் திருவுள்ளங்கொண்டு திரு வரங்கேசன் லோகசாரங்கமுனீந்திரரது கனவில் தோனறி 'நமககு நல்லனப ரான பாண்பெருமாளை இழிவாக நினையாமல நீர சென்று தோள்களில் எழுந தருளப்பண்ணிவாரும்' என்று நியமிகக, அவர பிராமமுகூர்தததிற் கண் விழித்தவளவிலே சொப்பனததிற் சுவாமி நியமிததத்தை நினைநது அதிசயித்து அப்படியே செய்து தாம பேறுபெறககருதி அச்செய்தியை அததிருப்பதியி லுள்ளார் யாவருக்குந தெரிவித்து அவர்களும் உடனவரச சென்று திருமுகத் துறையிலே தீர்த்தமாடித தெளதவஸ்திரமுடுத்துத துவாதசோர்த்துவபுண்டர மணிநது காலைககடன்கழித்துக் கரையேறிப் பாணர் வழககமாக நிற்கின்ற விடத்துச் சென்று அவர திருவடிகளிலே ஸாஷ்டாங்கமாகத் தண்டனிட்டு "தேவரீரைத தம்மிடத்துக்கு எழுந்தருளப பணணுவிததுககொண்டு வர வேண்டுமென்று நம்பெருமாள் அடியேனுக்குக் கட்டளையிட்டருளினர்' என்று சொல்ல, பாணர்தலைவர், 'நீசனான அடியேன திருவரங்கப்பெருநகரை மிதித திடுவேனோ?' என்று தம் சாதியிழிவைச் சொல்லி மறுத்திட்டனர்.

அப்பால் முனிக்கரசு 'தேவரீர் மிதித்திடவேண்டா; பெருமாள் பெரிய திருவடியின் திருத்தோளில் எழுந்தருளுதலபோலத தேவரீர் அடியேனது தோளில் ஏறியருளும்' எனறு பிரார்த்திகக, அது கேட்டவளவிலே யாழ்ப் பாணர் அளவிறநத அச்சங்கொண்டு அதனால உடல நடுநடுங்கிச் சொற்குழறி 'மகாபரிசுத்த மூர்த்தியான தேவரீர் அடியேன்திறத்து இங்ஙனங கூறவொணா ணாது; பாகவதர் பாதத்துக்குச் சிரததைப பீடமாகுதற்கு உரிய யானோ இக்கொடுந்தொழில்புரிவேன்; இதுசெய்து பாகவதாபசாரப்படுதலினும எரி வாய்நரகதது அழுந்துவது நலமன்றோ?' என்று நைச்சியவார்ததைகள்கூறினர்.

அதன்பின் அருந்தவர் பகவந்நியமநத்தை விண்ணப்பஞ்செய்து 'அது கடத்தற்கு உரியதனறு' என்று பகர்நது நிர்ப்பநதிகக, பினனர வீணைபபாடகர் கடவுள் கட்டளைக்கு யாதும் மாறுகூறமாட்டாமற கூப்பியகையராய் அநந்த சயனனுக்கே தம்மை அர்ப்பிததுப பரதந்திரராய நின்றிட்டார்.

பின்னர்த் தபோநிதி காயகசாரவபௌமரைத் தோளிலேற்றிக்கொண்டு மூக்கனுய்ப்போமவனை ஆதிவாகிகர எழுந்தருளவித்துக்கொண்டு திருமாமணி மண்டபத்துக்குச் செல்லுமாறுபோலச சென்று ரங்கநாதனது திருமுனபே இறக்கிவிட்டனர்.

உடனே முனிவாகனர், "இருளகற்று மெறிகதிரோன் மண்டலத்தூ டேற்றிவைத்தேணிவாங்கி யருள்கொடுத்திட்டடியவரை யாட்கொள்வா" னை அணியரங்கனது திவ்விய மங்கள விககிரகததைப பாதாதிகேசம் நேத்திரா னந்தமாகச் சேவித்து அதில் ஆழ்ந்த அகததராய அதனழகை அனுபவித்து அவ்வநுபவாதிசயத்தைப் பின்புள்ளாாக்கும் விசதமாக்குதற்பொருட்டு "அமல னாதிபிரான்" என்ற திவ்வியப்பிரபநதத்தைத் திருவாய்மலர்ந்தருளி அதன இறுதியில், "கொண்டல்வண்ணனைக் கோவலனாய் வெண்ணெ, யுண்டவாய

னென்னுள்ளங்கவர்ந்தானை, யண்டர்கோனணியரங்கனென்னமுதினைக், கண்ட கண்கள் மற்றொன்றினைக்காணாவே" என்று தமது நிலையை வெளியிட்டு உலகத்தாரை வாழ்வித்து மிகவும் உகப்போடு நிற்கையில், பெரியபெருமாள் அத்திருமேனியோடு அவரை அங்கீகரித்தருள, திருப்பாணாழ்வார் அகிலரும் காண அப்பிரானது திருவடிகளிலே அந்தர்ப்பவித்துக் காய்ந்த இரும்புஉண்ட நீராயினார்.

கோவலன் குழலிசையாற் கோக்களை மகிழச்செய்ததுபோல அக்கோவிந்தனை யாழிசையால் மகிழ்வித்த இவ்வாழ்வார் இவ்வுலகில் வாழ்ந்திருந்தது ஐம்பதுவருஷகால மென்பர்.

லோகசாரங்கர் முதலிய பலர் இவ்வாழ்வாரை யாசிரயித்து நற்கதிபெற்றார்கள். "காண்பனவு முரைப்பனவு மற்றொன்றின்றிக் கண்ணனையே கண்டுரைத்த கடியகாதற், பாண்பெருமாளருள்செய்த பாடல்பத்தும் பழமறையின் பொருளென்று பரவுமின்கள்."



திருப்பாணாழ்வார்.

உம்பர்தொழு மெய்ஞ்ஞானத் துறையூரான் வாழியே
உரோகிணிநாள் கார்த்திகையி லுதித்தவள்ளல் வாழியே
வம்பவிழ்தார் முனிதோளில் வந்தபிரான் வாழியே
மலர்க்கண்ணை வேறொன்றில் வையாதான் வாழியே
அம்புவியில் மதிளரங்க ரகம்புகுந்தான் வாழியே
அமலனாதிபிரான் பத்து மருளினான் வாழியே
செம்பொனடி முடியளவும் சேவிப்போன் வாழியே
திருப்பாணன் பொற்பதங்கள் செகதலத்தில் வாழியே.

---

திருப்பாணாழ்வார் அருளிச்செய்த

# அமலனாதிபிரான்.

---

## தனியன்கள்.

(பெரியநம்பிகள் அருளிச்செய்தது.)

𑌆𑌪𑌾𑌦𑌚𑍂𑌡𑌮𑌨𑍁𑌭𑍂𑌯𑌹𑌰𑌿𑌂𑌶𑌯𑌾𑌨𑌂
𑌮𑌧𑍍𑌯𑍇𑌕𑌵𑍇𑌰𑌦𑍁𑌹𑌿𑌤𑍁𑌰𑍍𑌮𑍁𑌦𑌿𑌤𑌾𑌨𑍍𑌤𑌰𑌾𑌤𑍍𑌮𑌾 ।
𑌅𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑍃𑌤𑌾𑌂𑌨𑌯𑌨𑌯𑍋𑌰𑍍𑌵𑌿𑌷𑌯𑌾𑌨𑍍𑌤𑌰𑌾𑌣𑌾𑌂
𑌯𑍋𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌕𑌾𑌯𑌮𑌨𑌵𑍈𑌮𑍁𑌨𑌿𑌵𑌾𑌹𑌨𑌂𑌤𑌂 ॥

ఆపాదచూడమనుభూయహరింశయానం ।
మధ్యేకవేరదుహితుర్ముదితాంతరాత్మా ॥
అద్రష్టృతాంనయనయోర్విషయాంతరాణాం ।
యోనిశ్చికాయమనవై మునివాహనంతం ॥

ஆபாதசூடமநுபூயஹரிம்ஸயாநம்
மத்யேகவேரதுஹிதுர்முதிதாந்தராத்மா -
அத்ரஷ்ட்ருதாம்நயநயோர்விஷயாந்தராணாம்
யோநிஸ்சிகாயமநவைமுநிவாஹநந்தம்.

(திருமலைநம்பிகள் அருளிச்செய்தது.)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

காட்டவேகண்டபாதகமலம் நல்லாடை உந்தி *
தேட்டருமுதரபந்தம் திருமார்பு கண்டம் செவ்வாய் *
வாட்டமில்கண்கள் மேனி முனியேறிததனிபுகுந்து *
பாட்டினால்கண்டுவாழும் பாணர்தாள் பரவினோமே.

---

† இது, நித்யாநுஸந்தாநம்.

[அழகியமணவாளனது திருமேனியழகில்பாதாதிகேசாந்தமாகஈடுபடுதல்]

ஆசிரியத்துறை. (யழனுகல்யாணிராகம் - திரிபுடைதாளம்.)

❀ அமலனாதிபிரான் அடியார்க்குஎன்னையாட்படுத்த
விமலன் * விண்ணவர்கோன் விரையார்பொழில்வேங்கடவன் *
நிமலன்நின்மலன்நீதிவானவன் நீள்மதிளரங்கத்தம்மான் * திருக்
கமலபாதம்வந்து என்கண்ணினுள்ளனவொக்கின்றதே. (க)

உவந்தவுள்ளத்தனாய் உலகமளந்துஅண்டமுற *
நிவந்தநீள்முடியன் அன்றுநேர்ந்தநிசாசரரை *
கவர்ந்தவெங்கணைக்காகுத்தன் கடியார்பொழிலரங்கத்தம்மான்* அரைச்
சிவந்தஆடையின்மேல் சென்றதாம்எனசிந்தனையே. (உ)

❀ மந்திபாய் வடவேங்கடமாமலை * வானவர்கள்
சந்திசெய்யநின்றான் அரங்கத்தரவினணையான் *
அந்திபோல்நிறத்தாடையும் அதன்மேலயனைப்படைத்ததோரெழில் *
உந்திமேலதன்றோ அடியேனுள்ளத்தின்னுயிரே. (௩)

சதுரமாமதிள்சூழ் இலங்கைக்கிறைவன்தலைபத்து
உதிரவோட்டி * ஓர்வெங்கணையுய்த்தவன் ஓதவண்ணன் *
மதுரமாவண்டுபாட மாமயிலாடரங்கத்தம்மான் * திருவயிற்று
† உதரபந்தம் என்னுள்ளத்துள்நின்றுஉலாகின்றதே. (ச)

பாரமாய பழவினைபற்றறுத்து * என்னைத்தன்
வாரமாக்கிவைத்தான் வைத்ததன்றிஎன்னுள்புகுந்தான் *
கோரமாதவம்செய்தனன்கொல்அறியேன் அரங்கத்தம்மான் * திரு
வாரமார்பதன்றோ அடியேனைஆட்கொண்டதே. (ரு)

துண்டவெண்பிறையன் துயர்தீர்த்தவன் * அஞ்சிறைய
வண்டுவாழ்பொழில்சூழ் அரங்கநகர்மேயஅப்பன் *
அண்டரண்டபகிரண்டத்து ஒருமாநிலம்எழுமால்வரை * முற்றும்
உண்டகண்டம்கண்டீர் அடியேனைஉய்யக்கொண்டதே. (சு)

---

† 'உதரபந்தனம்' என்றும் பாடம்.

கையினார் சுரிசங்கனலாழியர் * நீள்வரைபோல்
மெய்யனார் துளபவிரையார் கமழ்நீள்முடிஎம்
ஐயனார் * அணியரங்கனார் அரவினணைமிசைமேயமாயனார் *
செய்யவாய் ஐயோ ! என்னைச்சிந்தைகவர்ந்ததுவே. (எ)

பரியனாகிவந்த அவுணனுடல்கீண்ட * அமரர்க்கு
அரியஆதிப்பிரான் அரங்கத்தமலன்முகத்து *
கரியவாகிப்புடைபரந்து மிளிர்ந்துசெவ்வரியோடி * நீண்டஅப்
பெரியவாயகண்கள் என்னைப்பேதைமைசெய்தனவே. (அ)

✿ ஆலமாமரத்தினிலைமேல் ஒருபாலகனாய் *
ஞாலமேழும்உண்டான் அரங்கத்தரவினணையான் *
கோலமாமணியாரமும்முத்துத்தாமமும் முடிவில்லதோரெழில் *
நீலமேனிஐயோ ! நிறைகொண்டதுஎன்நெஞ்சினையே. (கூ)

✿ கொண்டல்வண்ணனைக் கோவலனாய்வெண்ணெ
யுண்டவாயன் * என்னுள்ளம்கவர்ந்தானை *
அண்டர்கோன்அணியரங்கன் என் † னமுதினைக்
கண்டகண்கள் * மற்றொன்றினைக் காணாவே. (க0)

அடிவரவு:—அமலன் உவந்த மந்தி சதுரம் பாரம் துண்ட கை பரி ஆலம் கொண்டல் கண்ணி.

திருப்பாணாழ்வார் திருவடிகளே சரணம்

அமலனாதிபிரான் ஸம்பூர்ணம்.



† 'அமுதினை' என்றும் பாடம்.

# மதுரகவியாழ்வார் வைபவம்.



𑌮𑍇𑌷𑍇 𑌚𑌿𑌤𑍍𑌰𑌾𑌸𑌮𑍁𑌦𑍍𑌭𑍂𑌤𑌂 𑌪𑌾𑌣𑍍𑌡𑍍𑌯𑌦𑍇𑌶𑍇 𑌗𑌣𑌾𑌂𑌶𑌕𑌂 ।
𑌶𑍍𑌰𑍀𑌪𑌰𑌾𑌙𑍍𑌕𑍁𑌶𑌸𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑌂 𑌮𑌧𑍁𑌰𑌙𑍍𑌕𑌵𑌿𑌮𑌾𑌶𑍍𑌰𑌯𑍇 ॥

మేషే చిత్రాసముద్భూతం పాండ్యదేశే గణాంశకం ।
శ్రీపరాంకుశ సద్భక్తం మధురంకవిమాశ్రయే ॥

மேஷேசித்ராஸமுத்பூதம் பாண்ட்யதேஶேகணாம்ஶகம்-
ஸ்ரீபராங்குஶஸத்பக்தம் மதுரங்கவிமாஶ்ரயே.

பாண்டியநாட்டிலே, திருக்குருகூர்க்கு அருகிலுள்ள திருக்கோளூரிலே, துவாபரயுகத்தில், எட்டுலக்ஷத்துஅறுபத்துமூவாயிரத்து எண்ணூற்றெழு பத்தொன்பதாவதான ஈசுவரவருஷத்தில்,சித்திரைமாதத்தில்சித்திரைநக்ஷத்திரத்திலே, கணேசரான குமுதரது அமசமும கருடாழ்வானது அம்சமுமாய் ஒருவர் அவதரித்தா. சூரியோதயத்திற்குமுன் கிழக்கிற் காணப்படுகின்ற அருணோதயம்போலப் பராங்குசருதித்தற்குமுன தென்தேயத்தில்தோன்றிய இவர், வேதசாஸ்திரங்களை இளமையிலேயேபயின்று செவிக்கினிய செஞ்சொற்கவிகளைப் பாட வல்லராய் அதனால் 'மதுரகவி' என்று திருநாமம்பெற்று மெய்யுணர்வினால் அவாவற்று மகாவிரக்தராய் விஷ்ணுபக்தி விஞ்சி யோகநிஷ்டையிலுந் தேர்ந்து தீர்த்தயாத்திரை திவ்வியதேசயாத்திரைகளிலே திருவுள்ளமுடையராய்ப புறப்பட்டுச் சஞ்சரிக்கலுற்று வடநாட்டுத்திருப்பதிகளைச் சேவித்துக்கொண்டு திருவயோத்தியை யடைந்து, அங்கு அர்ச்சாவதாரரூபமாய் எழுந்தருளியிருககின்ற இராமபிரானையும் ஜாநகிப் பிராட்டியையுந் தரிசித்துத் திருவடிதொழுது அந்தப பரிசுத்தபூமியில் நித்தியவாசஞ்செய்யக் கருதிச் சிலகாலம் வசித்திருந்தார்.

அக்காலத்தில் ஒருநாள் இரவில் இவர் திருக்கோளூரெம்பெருமானைத் திசைநோக்கித் தொழக் கருதித் தெற்குத்திக்கிற் கண்செலுத்தியபொழுது, அப்பக்கத்திலே வானுறவளர்ந்து விளங்குகின்றதொரு திவ்யமான பேரொளியைக் கண்ணுற்று அது இன்னதென்றறியாமல் 'கிராமநகரங்கள் வேகின்றனவோ? காட்டுத்தீயோ?' என்று சங்கித்துத் திகைத்துநின்றார். நின்றவர், இங்ஙனமே அடுத்த இரண்டுமூன்றுநாள்களிலுங் கண்டு, அச்சுடர்த்திரள் முச்சுடரொளியினும் மிக்குவிளங்கியதனால் வெகுவியப்புற்று அருகிற்சென்றுபார்த்துத்

தெளியுமாறு துணிந்து பிரயாணப்பட்டு, அச்சோதியையே குறியாகக் கொண்டு அதிவிரைவாக நெடுவழிகடந்து நடந்துவந்து, ஆழ்வார்திருநகரியை யடைந்து, அதில் அவதரித்தருளியுள்ள சடகோபமுனிவரது திருமேனிவிளக் கத்தைச் சேவித்து, இதுவே அத்தனைநெடுந்தூரம் பிரகாசித்ததென்று அறிந்து ஆச்சரியப்பட்டு, அவ்வாழ்வாரது நிலைமை முன்பு தாம் கேள்வியுற்றிருந்த படியே அப்ராகிருதமாயிருக்கக் கண்டு, அவர்க்குக் சட்புலனும் வாய்ப்புலனும் உண்மையைச் சில உபாயங்களாற் பரிசோதிப்பவரானார். அப்பொழுது காரி மாறப்பிரான் கண்திறந்து கடாக்ஷித்து, இவர் கேட்ட கேள்விக்கு ஏற்ற விடை சொல்லியருள, அதுகேட்டு மதுரகவியாழ்வார் அவரது ஞானவைபவத்துக்கு அதிசயித்து ஈடுபட்டு அவரையே ஆசாரியராகக்கொண்டு சரணம் புகுந் தனர்.

அப்பொழுது நம்மாழ்வார் பஞ்சஸம்ஸ்காரம் பிரசாதித்து இவரை ஆட் கொண்டு, பரத்வம் வியூகம் விபவம் அந்தர்யாமித்வம் என்னும் நான்கு நிலைக ளுக்கு முறையே வேதம் பாஞ்சராத்ரம் இதிஹாஸம் ஸ்மிருதி என்பனபோல அர்ச்சாவதாரத்திற்குஏற்ற துதிவடிவமான தமிழ்நூல்களைச் செய்யத்தொடங்கி, சதுர்வேதத்தின் ஸாரமாக நான்குபிரபந்தங்களை அருளிச்செய்து, அவற்றை அம்மதுரகவிக்கு உபதேசித்தருளினர்.

'முந்தின மூன்றுயுகங்களில் தியான யாக அர்ச்சநங்களாற் போலக் கடை யுகத்தில் தோத்திரமாத்திரத்தால் உயர்கதி உளதாம்' என்ற நூற்கொள்கைக்கு ஏற்ப மதுரகவிகள் தாம் உபதேசம்பெற்ற திவ்வியப்பிரபந்தங்களைக் கைத்தாள மெடுத்துப் பண்ணிசையோடு எப்பொழுதும் பாராயணஞ் செய்துகொண்டு திருக்குருகூர்நகர்நம்பிக்குப் பிரதானசிஷ்யராய், பரதாழ்வானுக்கே பணிவிடை புரிந்தொழுகின சத்துருக்கனாழ்வான்போலப் பகவத்பக்தியினும் பாகவதப் பிரதிபத்தியையே பரமாநுஷ்டானமாகத் தலைக்கொண்டு அவ்வாழ்வார் விஷய மாக 'கண்ணிநுண்சிறுத்தாம்பு' என்ற திவ்வியப்பிரபந்தத்தைப் பாடி முமு க்ஷுக்களுக்கு உபகரித்தருளி வாழ்ந்திருக்கையில், தேவிற்சிறந்த திருமாற்குத் தக்க தெய்வக்கவிஞரும் பாவிற்சிறந்த திருவாய்மொழி பகர் பண்டிதருமான காரிமாறர் திருநாட்டை யலங்கரித்தார்.

அப்பால், ஆசிரியரைப் பிரிந்ததற்கு மிக இரங்கி அரிதில்தேறிய மதுர கவிகள், அர்ச்சாரூபமான ஆழ்வார் விக்கிரகத்தை அத்திருநகரியில் எறியருளப் பண்ணிப் பிரதிஷ்டித்து அவர்க்கு நித்திய நைமித்திக உத்ஸவங்களையெல்லாம சிறப்புற நடத்திக்கொண்டுவந்தார். அத்திருவிழாக்களில், 'வேதந்தமிழ்செய்த மாறர் வந்தார்,' 'திருமாலுக்குஉரிய தெய்வப்புலவர் வந்தார்,' 'அளவிலா ஞானத்து ஆரியர் வந்தார்' என்ற இவை முதலாக அநேகவிருதுகளைக் கூறித் திருச்சின்னம் முழங்குதலைக் கேள்வியுற்றவளவிலே, மதுரைச் சங்கத்தாரது தூண்டுதலால் அவர்கள்மாணக்கர்கள் வந்து எதிரிட்டு 'உங்களாழ்வார் பக்தரே யன்றிப் பகவானல்லரோ; இவர் சங்கமேறிய புலவரோ?' இவர் பாடிய திரு வாய்மொழி சங்கமேறிய செய்யுளன்றே; இவரை வேதந் தமிழ் செய்தவ

றென்று சிலாகிப்பது தகுதியோ?" என்று பல குதர்க்கம் பேசி விருதுகளைத் தடுத்திட்டனர். அதற்கு மதுரகவிகள் மனம்பொறாமல் வருந்தி, 'இவர்கட்குக் கர்வபங்கமாம்படி தேவரீர் செய்தருளவேண்டும்' என்று ஆழ்வாரையே பிரார்த்திக்க, சடகோபர் ஒரு கிழப்பிராமணவடிவத்தோடு வந்து 'திருவாய்மொழியில் "கண்ணன்கழலிணை, நண்ணும் மனமுடையீர், றெண்ணுந்திருநாமம், திண்ணம் நாரணமே" என்ற பாசுரத்தின் முதலடியை ஒரு சிற்றேட்டில் எழுதிக் கொண்டுபோய்ச் சங்கபலகையில் வைத்திட்டால் அவர்கள் செருக்கு அடங்கும்' என்று கூறியருளினர். அந்த நியமனத்தின்படியே சடகோபபக்தர் கண்ணன்கழலிணையையெழுதிய ஏட்டை எடுத்துப்போய் வைத்திட்ட மாத்திரத்தில், சங்கப்புலவர்கள் ஏறியிருந்த பலகை பொற்றாமரைப்பொய்கையில் மூழ்கித் தன்மேலிருந்த புலவர்களையெல்லாம் நீரில் வீழ்த்தி உடனே மேலெழுந்து தன்மீதுவைத்த சிறுமுறியைமாத்திரம் ஏந்திக்கொண்டு மிதந்தது. அப்பொழுது நீரில்விழுந்து அமிழ்ந்து தடுமாறி யெழுந்து மெல்ல நீந்திக் கரைசேர்ந்த சங்கப்புலவர்கள், சகல வேதசாஸ்திரங்களையும் பிறராற் கற்பிக்கப்படாமல் தாமேயுணர்ந்த பகவதம்சமாகிய ஆழ்வாருடைய தெய்விகமான பாண்டித்தியத்தைத் தெரிந்துகொண்டு இறுமாப்பொழிந்து, தாம் முன்பு அபசாரப்பட்டதற்கு அநுதாபமுற்று, அதனை க்ஷமித்தற்பொருட்டு அவரது மகிமையைக் குறித்துத் தோத்திரமாகத் தனித்தனி ஒவ்வொருபாடல் பாடி வெளியிடுபவரானர்கள்; அங்ஙனம் வெளியிடுகையில், அப்பாடல்கள் யாவும்,

"சேமங் குருகையோ செய்யதிருப் பாற்கடலோ
நாமம் பராங்குசமோ நாரணமோ—தாமந்
துளவோ வகுளமோ தோளிரண்டோ நான்கு
முளவோ பெருமா னுனக்கு."

என்ற இப்பாடல்வடிவாகச் சிறிதும்வேற்றுமையின்றி ஒற்றுமைப்பட்டிருக்க, அதுபற்றி அவர்களனைவரும் 'இது என்ன அற்புதம்! என்ன அற்புதம்!! இதுவும் ஆழ்வாரது தெய்வதிருவருளே !!!' என்று அதிசயபபட்டு,

"ஈயாடுவதோகருடற்கெதிரே யிரவிக்கெதிர்மின்மினியாடுவதோ
நாயோடுவதோவுறுமிப்புலிமுன் நரிகேசரிமுன்நடையாடுவதோ
பேயாடுவதோவழகூர்வசிமுன் பெருமான்வகுளாபரணன்னருள்கூர்ந்
தோவாதுரையாயிரமாமறையின்னொருசொற்பொறுமோவுலகிற்கவியே."

என்பது முதலாகச் சிற்சில கவிகள் பாடிப் புகழ்ந்து, அன்றுமுதல் ஆழ்வார்க்கு விருதுகூறல் முதலிய சகலவிபவங்களையும் முன்னிலும்பலமடங்கு மிகுதியாக நடப்பித்துவந்தார்கள்.

இப்படி மதுரகவியாழ்வார் "ஆசானை யெவ்விடத்து மப்படியே" என்றபடி தமது ஆசாரியருடைய பெருமைகளை வெளியிட்டுக்கொண்டு அத்தலத்திலே சிலகாலம் எழுந்தருளியிருந்து, பின்பு, சிந்தையும் மொழியுஞ் செல்லா நிலைமைத்தான பேரின்பப்பெருவீட்டை யடைந்தனர்.

இங்ஙனம் இவ்வாழ்வார் நம்மாழ்வாருக்குத் திருவடித்தொண்டரா யொழுகியதுபற்றி, அவரது திருவடிகளை, 'மதுரகவிகள்' என இவர் திருநாமத்தை யிட்டு வழங்கப்படும்.



மதுரகவியாழ்வார்.

சித்திரையிற் சித்திரைநாள் சிறக்கவந்தோன் வாழியே
திருக்கோளூ ரவதரித்த செல்வனார் வாழியே
உத்தரகங்காதீரத் துயர்தவத்தோன் வாழியே
ஒளிகதிரோன் தெற்குதிக்க வுகந்துவந்தோன் வாழியே
பத்தியுடன் பதினொன்றும் பாடினான் வாழியே
பராங்குசனே பரமென்று பற்றினான் வாழியே
மத்திமமாம் பதப்பொருளை வாழ்வித்தான் வாழியே
மதுரகவி திருவடிகள் வாழிவாழி வாழியே.

---

மதுரகவியாழ்வார் அருளிச்செய்த

# † கண்ணிநுண்சிறுத்தாம்பு.

-∞◆∞-

## தனியன்கள்.

(நாதமுனிகள் அருளிச்செய்தவை.)

𑌅𑌵𑌿𑌦𑌿𑌤𑌵𑌿𑌷𑌯𑌾𑌨𑍍𑌤𑌰𑌶𑍍𑌶𑍌𑌰𑍇
𑌰𑍁𑌪𑌨𑌿𑌷𑌦𑌾𑌮𑍁𑌪𑌗𑌾𑌨𑌮𑌾𑌤𑍍𑌰𑌭𑍋𑌗𑌃 ।
𑌅𑌪𑌿𑌚𑌗𑍁𑌣𑌵𑌶𑌾𑌤𑍍𑌤𑌦𑍇𑌕𑌶𑍇𑌷𑍀
𑌮𑌧𑍁𑌰𑌕𑌵𑌿𑌰𑍍𑌹𑍃𑌦𑌯𑍇𑌮𑌮𑌾𑌵𑌿𑌰𑌸𑍍𑌤𑍁 ॥

అవిదితవిషయాంతరశ్శౌరే రుపనిషదాముపగానమాత్రభోగః ।
అపిచగుణవశాత్తదేకశేషీ మధురకవిర్హృదయేమమావిరస్తు ॥

அவிதிதவிஷயாந்தரஶ்ஶௌரே
ருபநிஷதாமுபகாநமாத்ரபோக-
அபிசகுணவஶாத்ததேகஶேஷீ
மதுரகவிர்ஹ்ருதயேமமாவிரஸ்து.

இருவிகற்பநேரிசைவெண்பா.

வேறொன்றும்நான் அறியேன் வேதம்தமிழ்செய்த *
மாறன்சடகோபன் வண்குருகூர்—ஏறு * எங்கள்
வாழ்வாமென்றேத்தும் மதுரகவியார் * எம்மை
ஆள்வாரவரேயரண்.

[நம்மாழ்வார்விஷயம்.]

கலிவிருத்தம். (ஆரபிராகம் - ஆதிதாளம்.)

கண்ணிநுண்சிறுத்தாம்பினால் கட்டுண்ணப்
பண்ணியபெருமாயன் * என்னப்பனில்
நண்ணித்தென்குருகூர் நம்பியென்றக்கால் *
அண்ணிக்கும்அமுதூறும் என்னாவுக்கே. (௧)

---

† இது, நித்யாநுஸந்தாநம்.

நாவினால்நவிற்று இன்பமெய்தினேன *
மேவினேன் அவன்பொன்னடிமெய்ம்மையே *
தேவுமற்றறியேன் குருகூர்நம்பி *
பாவினின்னிசை பாடித்திரிவனே. (உ)

திரிதந்தாகிலும் தேவபிரானுடை *
கரியகோலத் திருவுருக்காண்பன்நான் *
பெரியவண்குருகூர் நகர்நம்பிக்குஆள்
உரியனாய் * அடியேன் பெற்றநன்மையே. (ங)

நன்மையால்மிக்க நான்மறையாளர்கள் *
புன்மையாகக் கருதுவராதலின் *
அன்னையாய்அத்தனாய் என்னையாண்டிடும்
தன்மையான் * சடகோபன் என்நம்பியே. (ச)

நம்பினேன் பிறர்நன்பொருள்தன்னையும் *
நம்பினேன் மடவாரையும்முன்னெலாம் *
செம்பொன்மாடத் திருக்குருகூர்நம்பிக்கு
அன்பனாய் * அடியேன் சதிர்த்தேன்இன்றே. (ரு)

இன்றுதொட்டும் எழுமையும்எம்பிரான் *
நின்றுதன்புகழ் ஏத்தஅருளினான் *
குன்றமாடத் திருக்குருகூர்நம்பி *
என்றும்என்னை இகழ்விலன்காண்மினே. (சா)

கண்டுகொண்டுஎன்னைக் காரிமாறப்பிரான் *
பண்டைவல்வினை பாற்றியருளினான் *
எண்திசையும் அறியஇயம்புகேன் *
ஒண்தமிழ்ச் சடகோபனருளையே. (எ)

அருள்கொண்டாடும் அடியவர்இன்புற *
அருளினான் அவ்வருமறையின்பொருள் *
அருள்கொண்டு ஆயிரம்இன்தமிழ்பாடினான் *
அருள்கண்டீர் இவ்வுலகினில்மிக்கதே. (அ)

மிக்கவேதியர் வேதத்தினுட்பொருள் *
நிற்கப்பாடி என்நெஞ்சுள்நிறுத்தினான் *
தக்கசீர்ச் சடகோபன் என்நம்பிக்கு * ஆள்
புக்ககாதல் அடிமைப்பயனன்றே. (கூ)

பயனன்றாகிலும் பாங்கல்லராகிலும் *
செயல்நன்றாகத்திருத்திப் பணிகொள்வான் *
குயில்நின்றார்பொழில்சூழ் குருகூர்நம்பி! *
முயல்கின்றேன் உன்தன்மொய்கழற்கன்பையே. (௧0)

அன்பன்தன்னை அடைந்தவர்கட்கெல்லாம்
அன்பன் * தென்குருகூர் நகர்நம்பிக்கு *
அன்பனாய் மதுரகவிசொன்னசொல்
நம்புவார்பதி * வைகுந்தம் காண்மினே. (௧௧)

அடிவரவு.—கண்ணி நாவினால் திரி நன்மையால் நம்பினேன் இன்று கண்டு அருள் மிக்க பயன் அனபன் வாடினேன்.

மதுரகவியாழ்வார் திருவடிகளே சரணம்.

கண்ணிநுண்சிறுத்தாம்பு ஸம்பூர்ணம்.



| | | | | பாசுரம். |
|---|---|---|---|---|
| திருப்பல்லாண்டு | ... | ... | ... | ௧௨ |
| பெரியாழ்வாரதிருமொழி | .. | .. | ... | ௪௬௧ |
| திருப்பாவை | .. | ... | ... | ௩0 |
| நாச்சியார்திருமொழி | ... | ... | ... | ௧௪௩ |
| பெருமாள்திருமொழி | ... | ... | ... | ௧0௫ |
| திருச்சந்தவிருத்தம் | ... | ... | ... | ௧௨0 |
| திருமாலை | ... | ... | ... | ௪௫ |
| திருப்பள்ளியெழுச்சி | ... | ... | ... | ௧0 |
| அமலனாதிபிரான் | ... | ... | ... | ௧0 |
| கண்ணிநுண்சிறுத்தாம்பு | ... | ... | ... | ௧௧ |

ஆக, முதலாயிரம், பாசுரம் - ௯௪௭

## முதலாயிரம் ஸம்பூர்ணம்.



# முதலாயிரச் செய்யுளகராதி.

## முதலாயிரச் செய்யுள்கராதி.

---

## பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| ௨௩ | ௨௧ | கருகார் | தருகார் |
| ௨௯ | ௩ | கடைத்தாம்பால் | கடைதாம்பால் |
| ௪௧ | ௨௨ | உவந்து | வந்து |
| ௮௯ | ௬ | பையரவினப்னை | பையரவினணைப் |
| ௧௦௬ | ௧௮ | மாரயன் | மார்மாயன் |
| ௧௪௬ | ௧௭ | என்று கோலோ | என்று கொலோ |

PRINTED BY SROUTI & CO., PRINTERS, MADRAS.

# திருமங்கையாழ்வார் வைபவம்.



𑌵𑍃𑌶𑍍𑌚𑌿𑌕𑍇𑌕𑍃𑌤𑍍𑌤𑌿𑌕𑌾𑌜𑌾𑌤𑌂 𑌚𑌤𑍁𑌷𑍍𑌕𑌵𑌿𑌶𑌿𑌖𑌾𑌮𑌣𑌿𑌂 ।
𑌷𑌟𑍍𑌪𑍍𑌰𑌬𑌨𑍍𑌧𑌕𑍃𑌤𑌂 𑌶𑌾𑌰𑍍𑌙𑍍𑌗𑌮𑍂𑌰𑍍𑌤𑌿𑌂 𑌕𑌲𑌿𑌹𑌮𑌾𑌶𑍍𑌰𑌯𑍇 ॥

வ்ருஶ்சிகேக்ருத்திகாஜாதம் சதுஷ்கவிஶிகாமணிம் -
ஷட்ப்ரபந்தக்ருதம் ஶார்ஙகமூர்த்திம் கலிஹமாஶ்ரயே.

கங்கையிற் புனிதமாய காவிரிநதி புனல்பாய்ந்து பொன்கொழிக்கப் பெற்ற ஏற்றமுள்ள சோழமண்டலத்திலே, திருமங்கையென்னும் நாட்டில், திருவாலித்திருநகரி யென்ற திவ்வியதேசத்துக்கு மிக அருகிலுள்ள திருக்குறையலூரிலே, நான்காமவர்ணத்திலே, கள்ளர்க்குடியிலே, சோழராசனுக்குச் சேனைத்தலைவனாகவுள்ள ஒருவனது குமாரராய், ஒருத்தர், கலியுகத்தில் மூந்நூற்றுத் தொண்ணூற்றெட்டாவதான நளவருஷத்திற் பூர்ணிமை பொருந்திய வியாழக்கிழமையில் கார்த்திகைமாஸத்திற் கிருத்திகாநக்ஷத்திரத்திலே, சார்ஙகமென்ற விஷ்ணு கார்முகத்தின் அம்ஶமாய் அவதரித்தார்.

கிருதயுகத்திற் கர்த்தமனென்னும் பிராமணனும், திரேதாயுகத்தில் உபரிசரவஸுவென்னும் க்ஷத்திரியனும், துவாபரயுகத்திற் சங்கபாலனென்னும் வைஶ்யனுமாகத் தோன்றி, உலகத்தை நல்வழிப்படுத்திப் பாதுகாத்த மகாத்மாவே கலியுகத்தில் மண்ணுலகத்து மன்னுயிர்களைச் சன்மார்க்கத்தி லுய்த்தற்குச் சூத்திரசாதியில் இங்ஙனம் உதித்ததாக நூல்கள் நுவலாநிற்கும்.

இப்படிப்பிறந்த இவர் மூலமூர்த்திபோல நீலநிறமுடையராயிருந்ததனால், இவருக்குத் தந்தை நீலனென்று நாமமிட்டான்.

இவர் தமது குடிக்கு ஏற்ப இளமையிலேயே ஆயுதவித்தையில் தேர்ச்சி பெற்றுச் சோழராசனையடுத்துச் சேனாதிபதியுத்தியோகத்திலமர்ந்து கொற்றவனுக்குக் கொடியவரோடு கடும்போர் நேருங் காலங்களிற் படைகளோடு முன்சென்று பராக்கிரமத்தாற் பகைவென்று பரகாலனென்று பேர்பெற்றுப் பலமுறை வாகைசூடிவந்தார். அவ்வாற்றலை யுணர்ந்த அபயராசன் இவரை அந்நாட்டுக்கு அரசனாக்கி முடிசூட்டினான். இவ்வாறு குறுநிலத்தலைமை பூண்ட மங்கையர்கோமான் ராஜாங்ககாரியத்தைக் குறைவற நடத்திப் புகழ்பெற்று இசைநாடகங்களிற் பிரியமுடையராய் எப்பொழுதும் பல இளமங்கையர் இன்னிசைபாடக்கேட்டலையும் நன்னடம்பயிலக்காணலையுமே பொழுதுபோக்காகக் கொண்டிருந்தனர்.

இங்ஙனமிருக்கையில், அர்காட்டில் திருவெள்ளக்குளமென்ற திருப்பதியில் மானசசரஸையொத்ததொரு தாமரைப்பொய்கையில், தேவமாதர் பலர் வந்து ஜலக்கிரீடைசெய்துசெல்ல, அவ்வமரமகளிரில் திருமாமகளென்பாள் தன் இச்சையால் தெய்வவடிவத்தைவிட்டு மானுடப்படிவங்கொண்டு தனியே குமுதமலர் கொய்துநின்றாள். நின்றாளை அங்கு அநுட்டானம் முடித்தற்பொருட்டு வந்தாரொரு வைணவவைத்தியன் கண்டு செய்திவிசாரிக்க, அவள் 'உடன்வந்த மடமாதரிரால் விடப்பட்ட என்னை நீர் பாதுகாத்தருளும்' என்று வேண்ட, மலடனான அம்மருத்துவன் மகிழ்ச்சியோடு அதற்கு உடன்பட்டு அம்மகளைத் தன்மாளிகைக்குஅழைத்துப்போய் மனையாள்வசம் ஒப்பித்து, குமுதமலர்கொண்டு நின்றது காரணமாகக் குமுதவல்லி யென நாமகரணஞ் செய்து வளர்த்துவந்தான். வருங்கையில் அக்கன்னிகைக்கு விவாகத்துக்குரிய பிராயம் வந்தவளவிலே, அவளைவளர்க்கிற அத்தந்தைக்கு 'மகாகுணவதியான இவ்வணங்குக்குஏற்ற கணவன் உலகத்திலுளனோ?' என்ற கவலையும் உடன் வந்தது.

அப்பொழுது அவளுடைய ரூபலாவண்யஸௌந்தர்யங்களையும் குணாதிசயங்களையும் சாரர்கள் நீலனரிடம் கொண்டாடிக்கூற, உடனே அவர் அவளழகைப் பார்த்தற்கு ஆதரங்கொண்டு இராசசியகாரியங்களை இருந்தது இருந்தபடியே விட்டுத் திருநாங்கூரைச் சார்ந்ததான திருவெள்ளக்குளத்துக்குவந்து அந்தப் பாகவதனகத்திற் புக்கு அவனோடு சம்பாஷித்துக்கொண்டிருக்கையில், அந்தமாதுசிரோமணி கண்ணெதிரிற்படக் கண்டு வியந்து காதல் விஞ்சி அவள் வரலாற்றை வினவி அந்தத் தந்தையால் அறிந்தவளவில், அத்தாதையைநோக்கி 'இவளை எனக்கு மனைவியாக்கவேணும்' என்று வரித்து வஸ்திரபூஷணாதிகளை மிகுதியாக முன்வைத்து வணங்கிக்கேட்டார். அதற்கு இசைந்து தந்தைதாயர் அவர்க்குக் கன்னிகாதானஞ் செய்யவிருக்கையில், குமுதவல்லி குறுக்கிட்டு 'தப்தசக்ராங்கநம் திவ்வியோர்த்துவபுண்டரம் முதலிய பஞ்சஸம்ஸ்காரமுடைய ஒருவைணவர்க்கேயன்றிப் பிறர்க்கு வாழ்க்கைப்படேன்' என்று தன்கருத்தைத் தெரிவித்தாள். அதுகேட்டலும் ஆலிநாடர் அதிவிரைவாகத் திருநறையூர்க்குச்சென்று அங்கு எழுந்தருளியுள்ள நம்பியென்னும் திருநாமமுடைய எம்பெருமானது திருமுன்பே நின்று பிரார்த்தித்து அப்பிரான்பக்கல்சங்கசக்கரமுத்திரைகளைப்பெற்றுத் துவாதசோர்த்துவபுண்டரங்களையு முடையவராய் மணஞ்செய்துகொள்ளுதற்பொருட்டு விரைவில் வந்துசேர, கண்டு மீண்டும் அந்நங்கை 'நீர் ஓராண்டளவும் நித்தியமாக ஆயிரத்தெட்டு ஸ்ரீவைஷ்ணவர்களை அமுதுசெய்வித்து அவர்களுடைய திருவடித்தீர்த்தத்தையும் போனகஞ்செய்த சேடத்தையும் உட்கொண்டாலன்றி உம்மை நான் கொழுநராக ஏற்றுக்கொள்ளேன்' என்று நியமங் கூற, அவள்திறத்துக்கொண்ட வேட்கைமிகுதியால் அவர் அவ்வரிய விரதத்தைச் செய்து முடித்தற்கும் உடன்பட்டு அங்ஙனமே செய்வதாகச் சபதஞ்செய்து கொடுக்க, அதன்பின் இருவர்க்கும் திருமணச்சடங்கு நடந்தது.

பின்பு பரகாலர் பகவதாராதநத்திலும்பரமபாவநமான பாகவதாராதநத்தைச் செய்துகொண்டு தம் அரசனுக்குச் செலுத்தவேண்டும் பகுதிப்பொரு

ளூமுட்படச் செல்வமுழுவதையுஞ் செலவிட்டுவர, அச்செய்தியைச் சிலற சொல்லச் செவியுற்றுச் சென்னிமன்னன் சினங்கொண்டு இவர்பக்கல் திரை வாங்கி வருதற்பொருட்டுத் தன் ஏவலாளரை அனுப்பினன். அவர்கள் வந்து கேட்டதற்கு, இவர் 'காலை, நண்பகல், மாலை, இரவு, நாளை, பின்னிட்டு'என்ப தாகச சிலதவணைகளைச சொல்லிக்கொண்டு காலம் நீட்டித்துவந்தார். பின்பு ராஜபரிஜனங்கள் இறைப்பொருளிறுக்குமாறு நிர்ப்பந்திக்க, நீலர் வெகுண்டு அவர்களை வெருட்டித் துரத்தினர். அதனையறிந்து அரசன் சீற்றமுற்றுத் தனது தானைத்தலைவனை விளித்து, 'நீ சென்று பரகாலனைப் பிடித்துவா' என்று நியமிக்க, அவன் அவ்வாறே பலசேனைகளோடு வந்து இவரை வளைத்துப் பிடிக்கத்தொடங்க, இவர் ஆடன்மாவென்னுந் தமது குதிரைநம்பிரான் மேல்ஏறிக்கொண்டு அநீகததோடுமுன்சென்று எதிர்த்துப்பொருது அவனைப் புறங்கொடுத்தோடச்செய்ய, அஃதுணர்ந்து காவலன் தானே சேனாசமூகத தோடு வந்து இவரைவளைய, இவர் தம்படைவலிமையால் அப்படைக்கடலைக் கடந்து தமது திறமையைக் காட்டிப் பொருகையில், தாம் அருள்மாரியாத லால் இறைமகனைக் கொல்லலாகாதென்று சிறிதுபொழுது போர்நிறுத்தி நின்றார்.

அதுவேஸமயமாக அரசன் தந்திரமாய் நல்வார்த்தைசொல்லிக்கொண்டு அருகில்வந்து 'உமது பராக்கிரமததைக் கணடு மிக மகிழ்ந்தோம்' என்று கொணடாடி 'சீக்கிரததிற் கப்பஞ்செலுததிவிடும்' என்று இவரை மந்திரிவச மாக்கிவிட்டுமீண்டனன். அவ்வமைசசன் இவரைப் பகுதிக்காகப்பிடித்து ஒரு தேவாலயத்திற் சிறைவைக்க, அங்கு இவர் உணவில்லாமல் மூன்றுநாள் பட்டினிகிடக்கையில், காஞ்சீபுராதிபரான பேரருளாளப்பெருமாள் இவரதுசொப்பனத்திலே பிரசந்நராய் 'உனக்கு வேண்டிய பொருள் தருகின்றோம், வா' என்று சொல்லியருளினர். இவர் அக்கனவை நனவாகவே நம்பிக் கடவுள் கருணைக்கு மகிழ்ந்து பொழுதுபுலர்ந்ததும் மந்திரியைநோக்கி 'காஞ்சீநகரியிலே நிதி யிருக்கின்றது; அங்கு வந்தால், தருவேன்' என்று கூற, அவ்வமாததியன் அதனை அரசனுககு அறிவித்து அநுமதிபெற்றுப் பலபரிவாரங்களாற் காவல்செய்துகொணடு கச்சிப்பதிக்கு இவரை அழைததுவந்தான். அங்கு இவர் நிதிதேடிக் காணாமையாற் கவலைக்கடலில் மூழ்கி மூர்ச்சிக்குமளவிலே, கருணாகரரான அத்திகிரி அருளாளன் மீணடுங்கனவில்எழுந்தருளி அபயமளிதது வேகவதிநதிக்கரையில் வைப்புள்ள இடததைக் குறிப்பிட்டு அருளிச்செய்தபின்பு, இவர் தெளிந்தெழுந்து பொருள் கண்டெடுத்து அரசன் கடமையைச செலுத்தி, மிகுந்த தனத்தைப் பாகவதாராதனைததுக்கு வைததுக் கொண்டார்.

பின்பு மந்திரி திரவியத்தைக் கொண்டுபோய்ப் புரவலன் முன்னிலையில் வைத்து நிகழ்ந்தவரலாறனைத்தையும் விளம்ப, கேட்டுப் புலிக்கொடிவேந்தன் இவர்மகிமையைக் கருதி அச்சமும் வியப்புங்கொண்டு உடனே இவரை வரவழைத்து விசேஷமாக உபசரித்து, தான்செய்த பிழைகளையெல்லாம் பொறுத்தருளுமாறு பலவாறு பிரார்த்தித்து, அநந்தரம் 'திரௌபதிக்குப் புடவை சுரந்ததுபோல மாயவனருளாற் பெருகிய இப்பொருளைத் திரவியசாலையில்

வைக்கலாகாது' என்று ஆலோசித்து அப்பொருள் முழுவதையும் இவரைப் பட்டினிவைத்த பாவந்தீர்தற்பொருட்டு அநேகபாகவதர்கட்குக் கொடுத்துப் பரிசுத்தனாயினன்.

பிறகு பரகாலர் சேடித்ததிரவியங்கொண்டு ததீயாராதநம் நடத்திவருகையில், எல்லாம் செலவாய்விட்டதனால், கைப்பொருளொன்று மின்றி, வழிபறித்தாகிலும் பொருளீட்டி அக்கைங்கரியத்தைத் தடையற நடப்பிக்கத் துணிந்து நீர்மேல்நடப்பான் நிழலொதுங்குவான் தாளூதுவான் தோலாவழக்கன் என்ற நால்வரை உற்றதுணைவராக உடன்கொண்டு, ஆங்காங்குச்சென்று வழிச்செல்வோரைச் சூறையாடிக் கொணர்ந்த பொருளால் திருமாலடியார்களைப் பூசிக்கும் நோன்பை நோற்றுவந்தார். இவர் கொள்ளைகொள்வதும் வைணவர்களை வழிபடுதற்கே யாதலால், ஸ்ரீமந்நாராயணன் இவர்செயலைத் தீவினையாகத் திருவுள்ளம்பற்றாமல்நல்வினையாகவேநயந்து இவர்க்குவிசேஷகடாக்ஷம்பண்ணி இவரையங்கீகரிக்கவேண்டுமென்று நினைத்து, இவர் தன்னை வழிபறிக்குமாறு தான் ஒரு பிராமணவேடங்கொண்டு பல அணிகலன்களைப் பூண்டு மணவாளக்கோலமாய் மனைவியுடனே இவரிருக்கிற வழியிலே எழுந்தருள, திருமணங்கொல்லையில் திருவரசமரத்தின்கீழ்ப் பதிவிருந்த குமுதவல்லிமணாளர் கண்டு களித்து ஆயுதபாணியாய்ப் பரிவாரத்துடனே வந்து அவர்களை வளைந்து வஸ்திராபரணங்களையெல்லாம் அபஹரிக்கையில், அம்மணமகன் காலில் அணிந்துள்ள மோதிரமொன்றைக் கழற்றமுடியாமையால் அதனையும் விடாமற் பற்களாலே கடித்து வாங்க, அம்மிடுக்கைநோக்கி எம்பெருமான் இவர்க்கு 'கலியன்' என்று ஒருபெயர் கூறியருளினன்.

பின்பு இவர் பறித்த பொருள்களையெல்லாம் சுமையாகக்கட்டிவைத்து எடுக்கப்பார்க்க அப்பொருட்குவை இடம்விட்டுப் பெயராமற் பர்வதம்போல அசலமாயிருக்க, அதுகுறித்து ஆச்சரியப்பட்டு, ஆலிநாடர் அவ்வந்தணனை நோக்கி 'நீ என்ன மந்திரவாதம் பண்ணினாய்?' என்று விடாது தொடர்ந்து தன்கையிலேந்திய வாட்படையைக்காட்டி அச்சுறுத்திநெருக்க, அப்பொழுது பதிகனான ஸர்வேச்வரன் 'அம்மந்திரத்தை உமக்குச் சொல்லுகிறோம், வாரும்' என்று அருகிலழைத்து, ஸகலவேதஸாரமாய்ப் பிறவித்துயரறுத்துப் பரமபதமளிப்பதாய்ச் சிறந்த அஷ்டாக்ஷர மகாமந்திரத்தை, முன்பு நரநாராயணராய்த் தனக்குத்தானே சொல்லிக்கொண்ட குறைதீர இவர்செவியிலே உபதேசித்து, உடனே கருடாரூடனாய்ப் பொன்மலைமீது மின்னுடன் விளங்கு கார்முகில்போலக் கருணைவடிவமான திருமகளோடு இவர்முன் எழுந்தருளிச் சேவைசாதித்தான்.

அங்ஙனம் மந்திரோபதேசம் பெற்றதனாலும், அந்தத்திவ்யமங்களவிகிரகத்தைத் தரிசித்ததனாலும், முன்பு காலாழிவாங்கியபோது பகவத்பாதாரவிந்தத்தில் வாய்வைத்ததனாலும் கலியன் அஜ்ஞாநாந்தகாரம்ஒழிந்து தத்துவஞானச்சுடர் ருதிக்கப்பெற்று, பகவானைப் பரிபூர்ணாநுபவம்பண்ணி, அவ்வாநந்தமேலீட்டால் வெளியிடுமாறு ஆசு மதுரம் சித்திரம் விஸ்தாரம் என்னும் நால்வகைக்கவிகளையும் பாடவல்ல பாண்டித்யமுடையராய் "வாடினேன் வாடிவருந்தினேன்" என்று தொடங்கிப் பாடலுற்று "குலந்தரும் செல்

வந்தந்திடு மடியார்படுதுயராயினவெல்லாம், நிலந்தரஞ்செய்யும் நீள்விசும் பருளு மருளொடுபெருநிலமளிக்கும்,வலந்தரும்மற்றுந்தந்திடுமெபெற்றதாயினு மாயின செய்யும், நலந்தருஞ்சொல்லை நான்கணடுகொணடேன் நாராயணு வென்னும் நாமம'' என்று தமது அநுபவத்தை வெளியிட்டு வடமொழிவே தஙகள் நான்குக்கும் ஆறஙகஙக ளமைந்திருக்கின்றதுபோல அவ்வேதங களின் உட்பொருளால் நம்மாழ்வார் அருளிசசெய்த நான்கு திவ்வியப் பிர பந்தங்களுக்கும் தமது பிரபந்தங்கள் அங்கஙகளாக அமையும்படி பெரிய திருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம், திருவெழுகூற்றிருக் கை, சிறியதிருமடல், பெரியதிருமடல் என்னும் ஆறு திவ்வியநூல்களைத் திருவாய்மலர்ந்தருளி, 'திருமங்கையாழ்வார்' என்று திருநாமம்பெற்றார்.

அவற்றுள் முதலிற் பெரியதிருமொழிபாடுகையில், திவ்வியதேசயாத்தி ரையாகச சென்று ஆஙகாங்குப் பெருமாளை மங்களாசாஸநஞ்செய்து திருப் பதிகம்பாட உத்தேசித்து, ஆழ்வார், பிருதி பதரி பதரிகாசசிரமம ஸாளக்கிரா மம் நைமிசாரணியம சிங்கவேள்குன்றம் திருவேங்கடம் என்னும் வடநாட்டுத் திருப்பதிகளிற் சென்று திருவடிதொழுது பாசுரம்பாடி, தொண்டை நாட்டுத் திருப்பதிகளுள் திருவெவ்வுளூர்க்கு வந்தபின் திருநின்றவூரைச் சேர்ந்தார். அத்திருப்பதியிலெழுந்தருளியுள்ள பததராவிப்பெருமாள் அப் பொழுது ஆழ்வார்க்கு முகஙகொடாமற் பிராட்டியாரோடு ஸரஸஸல்லாபஞ் செய்துகொணடு பராமுகமாயிருக்க, பரகாலர் அப்பால் திருவல்லிக்கேணிக்கு வந்து அங்கு எழுந்தருளியுள்ள ஐந்துஎம்பெருமான்களையுஞ் சேவித்துப் பதிகம்பாடி, திருநீர்மலை சேர்ந்து அந்த எம்பெருமான்பக்கலிலே மிக ஈடு பாடு கொணடு, அநந்தரம் திருககடன்மல்லையையடைந்து பெருமாளைச் சே வித்துநின்றார் ; அப்பொழுது, திருநின்றவூரெம்பெருமான் திருமகளால் தூணடப்பட்டு இவா வாயாற் பாடல்பெற்றுச சிறப்புறக்கருதிக் கடன்மல்லை யிற் காடசிகொடுக்க, கலியன் அப்பிரானையும் அஙகே கணணுரக்கணடு களித்து அவ்வூர்ப்பதிகததிலே "நின்றவூர் நித்திலத்தைத் தொத்தார்சோலைக், காண்டவத்தைக் கனலெரிவாய்ப்பெய்வித்தானைக் கண்டது நான் கடன் மல்லைத் தலசயனத்தே'' என்று பாடினார்.

இவ்வாறே மற்றுஞ் சில தொண்டைநாட்டுததிருப்பதிகளையும் நடுநாட் டுத் திருப்பதிகளிரண்டையுங்கடந்து, சோழநாட்டுத்திருப்பதிகளில் தில்லைத் திருச்சித்திரகூடம் பாடிய பின்பு சீர்காழி வழியாக எழுந்தருளுகையில், வழக்கப்படி பரிசனங்கள் இவர்முன்னே 'நாலுகவிப்பெருமாள் வந்தார், நம் கலியன் வந்தார், ஆலிநாடர் வந்தார், அருள் மாரி வந்தார், மங்கைவேந்தர் வந்தார், பரவாதி மததகஜகண்டீரவர் வந்தார், பரகாலர் வந்தார், நீலநிறத்து நிமலர் வந்தார்' என்று பல பிருதாவளிகளை எடுத்தேத்திக்கொண்டு செல்லா நிற்க, அவ்வூரிலுள்ள திருஞானசம்பந்தமூர்த்திநாயனு ரென்கிற சைவ சமயாசாரியருடைய அடியார்கள் வந்து 'எஙகள்நாயனருள்ளவிடத்திலே நீவிர் விருதூதிச்செல்லலாகாது' என்று தடுக்க, அதுகேட்டுப் பரகாலர் சம்பந்த ருள்ளவிடத்தே சென்று அவரோடு வாதப்போர் செய்யத்தொடங்குகையில், நாயனுர் 'நுமது கவித்திறத்தை யான் காணுமாறு முன்னரைப் பாடல் பாடும்'

என்றுசொல்ல, உடனே ஆழ்வார்
புலகனைத்துமீரடியாலொடுக்கியொன்றுந், தருகவெனுமாவலியைச்சிறையில் வைத்ததாடாளன்ருளனைவீர்த்தகீர்த்தி, யருமறையின்றிரணன்கும் வேள்வி யைந்து மங்கங்களவையாறு மிசைகளேழுந், தெருவின்மலிவிழாவளமுஞ் சிறக்குங் காழிச்சீராமவிண்ணகரே சேர்மினீரே'' என்று தொடங்கி அருகி லிருக்கின்ற காழிச்சீராமவிண்ணகர மென்ற திருப்பதியிலுள்ள தாடாளப் பெருமான் விஷயமாகப் பதிகம்பாட. கேட்டு ஞானசம்பந்தர் மிக அதி சயித்து 'உமக்கு இவ்விருதுகள்யாவும் தகும் தகும்' என்று சொல்லித் தமது வேலாயுதத்தை இவர்க்குத் திருமுன் காணிக்கையாகச் சமர்ப்பித்து நன்குமதித்து உபசரித்து வழிபட்டு வழிவிட்டு மீள, இம்மெய்யடியவர் வெற்றிவேல்பறித்துக்கொண்ட தமது கொற்றம் மூற்றுந்தோன்ற "செங்க மலத்தயனனையமறையோர் காழிச்சீராமவிண்ணகரின்செங்கண்மாலே,யங்கம லத்தடவயல்சூழாலிநாட னருண்மாரி யரட்டமுக்கி யடையார்சீயம்,கொங்கு மலர்க்குழலியர்வேள் மங்கைவேந்தன் கொற்றவேற் பரகாலன் கலியன் சொன்ன, சங்கமுகத்தமிழ்மாலைபத்தும்வல்லார் தடங்கடல்சூ ழுலகுக்குத் தலைவர் தாமே'' என்று தமது பாயிரத்தோடு பதிகத்தை முடித்துச் சயபேரி முழங்க அப்பாற் சென்ற, தமது ஜநநபூமிக்கு அடுத்த திருவாலியைச் சார்ந்து, திருநாங்கூர்த்திருப்பதிகள் முதலியவற்றை நணணிய பிறகு, திரு விந்தளூரை யடைந்தார்.

அப்பொழுது, அத்தலத்து எம்பெருமான் ஆழ்வார்க்குத் தன்னை ஒரு காற் காட்டி மறைய, அவர் திருப்திப்படாமல், மனக்குறையோடு 'வாசிவல்லீ ரிந்தளூரீர் வாழ்ந்தேபோம் நீரே'' என்று தமது குறைபாடுதோன்றப் பாடி, அதற்கு இரங்கிப் பெருமான் நிரந்தரசேவை கொடுக்க, அதுபெற்று நிரம்பிய மனத்தராய், பலதிருப்பதிகளின்வழியாகத் திருவரங்கத்தைச் சேர் ந்து நம்பெருமாள்பக்கலிலே மிக்க ஈடுபாடு கொண்டு பலபதிகங்கள் பாட, அது கேட்டுத் திருவுள்ளமுவந்து அப்பெருமான் திருமுகமலர்ச்சியோடு ஆழ்வாரைக் குளிரநோக்கி 'நமக்கு விமானம் மண்டபம் கோபுரம் பிராகாரம் முதலிய கைங்கரியங்களைச் செய்யும்' என்று கட்டளையிட்டருளினன்.

ஆலிநாடர் அவ்வாணையைச் சிரமேல்தாங்கி அங்ஙனமே திருப்பணி புரிய விரும்பித் தமக்கு அந்தரங்கரான அமைச்சர் நால்வரையும் அழைத்து இரகசியமாகவிருந்து 'ஸ்ரீரங்கநாதனுக்குத் திருமதிள் தொடக்கமான கைங் கரியங்களைப் பண்ணுதற்குப் பொருளீட்டுமாறு யாதுவிரகு செய்யலாவது?' என்று ஆலோசிக்கிறவளவிலே, மந்திரிகள் 'நாகபட்டணத்திற் பொன்மய மான தொரு புத்தவிக்கிரகம் பௌத்தர்களால் அமைக்கப்பட்டதோ ராலயத் தில் அவர்கள் கொண்டாட்டத்துக்கு இலக்காயுள்ளது; அதனைக் களவாடிக் கொண்டுவந்திடுவோமாயின், பல திருப்பணிகளையும் நடத்திமுடிக்கச் சிறி தும் பொருட்குறைபாடு இராது' என்று உபாயங் கூறினர்கள். அவ்வுறுதி மொழியைச்செவியுற்றவுடனே களிப்புக்கொண்டு பரகாலர் பரிவாரங்களு டன் புறப்பட்டு நாகபட்டணமடைந்து அங்கு அதிவிசித்திரமான சிற்பவேலை யையுடைய ஆலயத்தைக் கண்டு அதனுள் நுழைதற்கு எங்கும் வழி அகப்

படாமையால் இளைத்து சுற்றிலும்பார்த்துவருகையில், அதன் சிகரத்திலே சக்கராகாரமான யந்திரவிசேடம் இடைவிடாது சுழன்றுகொண்டிருத்தலைப் பார்த்து அதனை நிறுத்துதற்கு ஏற்ற சூழ்ச்சி செய்பவராய்ப் பலவாழைத் தண்டுகளைக்கொணர்ந்து சிறிதுசிறிதாக நறுக்கி இடைவிடாது கொடுத்து வர, அதன் நூல்கள் உடலிற் சுற்றிக்கொண்டதனால் அந்நேமிப்பொறி அசையாது நின்றுவிட்டது. அதன்பின் ஆழ்வார் தமது சீடர்களுள் வல்லானொருவனை அவ்வழியாய் உள்ளேசெலுத்த, அவன் சென்று கனக விக்கிரகத்தைக் கவரத் தொடங்குகையில், அந்தப்பிம்பம் மந்திரபலத்தால் நிலைபெயர்ந்து அவன் கைக்கு அகப்படாதபடி அச்சினகரமுழுவதிலுந் திரிந்து ஓட்டங்காட்டியது. அது நோக்கி அவன் யாதுசெய்வதென்று சிறிதுபொழுது கலங்கி நின்று, உடனே வெளியி லிருந்து திருமங்கைமன்னர் சொல்லிக்கொடுத்த உபாயத்தின்படி அவ்வுருவத்தை அபரிசுத்தமாக்கிவிடுதலும், அது சக்தி குன்றி "ஈயத்தாலாகாதோ விரும்பினாலாகாதோ, பூயத்தான்மிக்கதொரு பூதத்தாலாகாதோ, தேயத்தே பித்தளைநற்செம்புகளா லாகாதோ, மாயப்பொன்வேணுமோ மதித்தென்னைப்பண்ணுகைக்கே" என்று புலம்பிக்கொண்டு ஒருசார விழுந்திட்டது. பின்பு அச்சீடன் அதனை யெடுத்துக் கொடுக்க, பரகாலர் அதியானந்தத்தோடு வெகுவிரைவாகக் கொண்டுவந்து அவ்விக்கிரகத்தை யுருக்கி அந்தப்பொன்னை விலைப்படுத்திப் பெற்ற பொருளால் திருமதிள்முதல் சிகரபரியந்தமான கைங்கரியங்களைச் செய்வித்துவருகையில், மதிள்கட்டுகிறபொழுது, தொண்டரடிப்பொடியாழ்வார் திருமாலை சேர்த்துவந்த இடம் நேர்பட அதனையழித்துக் குறுக்கில் மதில்கட்ட மனங்கொள்ளாமல் ஒதுக்கிக் கட்டுவித்தார்.

இங்ஙனம் மற்றைக்கைங்கரியங்களையுங் குறைவற முடித்தபின்னர் நம்பெருமாள்பக்கல் விடைபெற்று மீண்டுந் திவ்வியதேசயாத்திரை தொடங்கித் தென்திருப்பேர், நந்திபுரவிண்ணகரம், திருவிண்ணகரம் என்ற இத்தலங்களை மங்களாசாஸநஞ்செய்தபின், திருநறையூரைச்சேர்ந்து, நம்பிவிஷயமாக நூறு பாசுரம் விண்ணப்பஞ்செய்து, திருச்சேறை தேரழுந்தூர் சிறுபுலியூர் என்னும் பதிகளின்வழியாக, திருக்கண்ணமங்கைபுக்கு, அத்திருப்பதி எம்பெருமானைப் பதிகம்பாடித் துதிக்கையில், திருநின்றவூர்ப் பத்தராவிப்பெருமாள் முன்பு ஒருபாடல்பெற்றது போதாதென்று மீட்டும் என்னைப்பெற்ற அன்னையால் ஞாபிக்கப்பட்டவராய் ஆழ்வாரெதிரில்வந்து காட்சியளிக்க, ஆலிநாடர் "நின்றவூர்நின்ற நித்திலத்தொத்தினைக்.... . .கண்ணமங்கையுட் கண்டுகொண்டேனே" என்று அப்பிரானையுஞ் சேர்த்துத் துதிசெய்தனர்.

அப்பால் திருக்கண்ணபுரம் திருக்கண்ணங்குடி திருநாகை யென்னுஞ் சோழநாட்டுத் திவ்யதேசங்களையும், திருப்புல்லாணி திருக்குறுங்குடி யென்னும் பாண்டியநாட்டுத்தலங்களையும், திருவல்லவாழென்ற மலைநாட்டுத்திருப்பதியையும் தரிசித்து, பின்னும் தென்னாட்டில் திருமாலிருஞ்சோலை திருக்கோட்டியூர் முதலானவற்றைத் தொழுது, மற்றும்பலதிருப்பதிகளை வணங்கித் திருமாலின் அர்ச்சாவதாரங்களோடு விபவாவதாரங்களையுங் கருதி உள்ளங்கரைந்து பல திருப்பதிகங்கள் பாடிப் பெரியதிருமொழியை முடித்தனர்.

முடித்தும் தமது ஆராதஅன்பு அடங்காமையால் மற்றும் ஐந்துபிரபந்தங்களை }அருளிச்செய்து, அநந்தரம் ஸ்ரீரங்கத்துக்கு எழுந்தருளி ரங்கநாதன் ஸந்நிதியிலே திருநெடுந்தாண்டகத்தைத் தேவகானத்திற் பாட, அதற்குத்திருவுள்ளமுகந்து நம்பெருமாள் 'உனக்குவேண்டும் வரம்பெற்றுக்கொள்' என்று நியமித்தவளவிலே, நாலுகவிப்பெருமாள் 'முன்பு தேவரீர் நம்மாழ்வார்முகமாக வெளிப்படுத்திய தமிழ்வேதங்கள் நான்கையும் மார்கழிமாதத்திலே தேவரீர் கண்டருளுகிற அத்தியயநோத்ஸவத்திற் கீர்வாணவேதங்களோடு பாராயணஞ்செய்யுமாறு கட்டளையிட்டருளவேணும்' என்று பிரார்த்திக்க, பெருமாள் அங்ஙனமே அருள்புரிந்தார். அவ்வாணையின்படி ஆலிநாடர், அர்ச்சாவிக்கிரக ரூபமான நம்மாழ்வாரை ஆழ்வார்திருநகரியினின்று கோயிலுக்கு எழுந்தருளப்பண்ணி உபயவேதபாராயணத்தையும் ஒழுங்காகநடக்கச்செய்து அத்தியயனத்திருவிழாவைச் சிறப்பாகச் செய்வித்து, அது முடிந்தவாறே பராங்குசரை மீண்டும் குருகூர்க்கு எழுந்தருளப்பண்ணுவித்தார்.

இங்ஙனமே பிரதிவருஷமும் அத்திருநாளைப்பரிபாலிக்கும்படி கட்டளை செய்திட்டு மங்கையர்கோமான், மகேந்திரகிரிக்கு அருகே சித்தாச்சிரம மென்று பிரசித்தமான திருக்குறுங்குடியில் வந்து அங்கு எழுந்தருளியிருக்கின்ற நம்பியென்னும் எம்பெருமானுடைய அழகை யனுபவித்து, அங்கு நித்திய வாசஞ்செய்ய நினைவுபிறந்து, குமுதவல்லியாருடனே விரக்தராய்ச் சில காலம் யோகநிஷ்டையில் எழுந்தருளியிருந்து,தமது நூற்றைந்தாம்பிராயத்தில், ஸமாதி யென்கிற மகாயோகத்தால் திருமேனிநீத்துத் தேஜோமயமான திவ்யநகரஞ் சேர்ந்தனர்

வழிபறித்தலாகிய அக்ருத்யத்தைச் செய்தாலும், அச்செல்வம் முழுவதையும் பகவத்பாகவதகைங்கரியத்துக்கே உபயோகித்ததனாலும், அபாகவதர் பொருளை அபகரித்துப் பாகவதர்க்கு உரியதாக்கியதனாலும், புகழ்புண்ணியங்களையேயன்றிப் பழிபாவங்களைச் சிறிதும் பெறாது பெருமாளுக்கு மிக்க மகோல்லாசத்தைச் செய்து சீருற்ற இத்திருமங்கைமன்னன், தமது திவ்யப்ரபந்தங்களால் உலகத்தை நன்னெறிச்செலுத்திக் கலிதோஷத்தைக் கடிந்ததனால், அவர்க்கு 'கலிகன்றி' என்றும் ஒரு திருநாமம்.

கலந்ததிருக்கார்த்திகையில்கார்த்திகைவந்தோன்வாழியே
காசினியிற்குறையலூர்க்காவலோன்வாழியே
நலந்திகழாயிரத்தெண்பத்துநாலுரைத்தான்வாழியே
நாலைந்துமாறைந்துநமக்குரைத்தான்வாழியே
இலங்கெழுகூற்றிருக்கையிருமடலீந்தான்வாழியே
இம்மூன்றிலிருநூற்றிருபத்தேழீந்தான்வாழியே
வலந்திகழுங்குமுதவல்லிமணவாளன்வாழியே
வாட்கலியன்பரகாலன்மங்கையர்கோன்வாழியே.





திருமங்கையாழ்வார்

# தனியன்கள்.

(திருக்கோட்டியூர்நம்பி அருளிச்செய்தது.)

𑌕𑌲𑌯𑌾𑌮𑌿 𑌕𑌲𑌿𑌧𑍍𑌵𑌂𑌸𑌂 𑌕𑌵𑌿𑌂 𑌲𑍋𑌕𑌦𑌿𑌵𑌾𑌕𑌰𑌮𑍍 ।
𑌯𑌸𑍍𑌯 𑌗𑍋𑌭𑌿𑌃 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌾𑌭𑌿𑌃 𑌆𑌵𑌿𑌦𑍍𑌯𑌂 𑌨𑌿𑌹𑌤𑌂 𑌤𑌮𑌃 ॥

*கலயாமிகலித்வம்ஸம் கவிம்லோகதிவாகரம் -*
*யஸ்யகோபி:ப்ரகாஶாபி: ஆவித்யம்நிஹதம்தம:.*

(எம்பெருமானார் அருளிச்செய்தது.)

இருவிகற்பநேரிசைவெண்பா.

*வாழிபரகாலன் வாழிகலிகன்றி *
வாழிகுறையலூர்வாழ்வேந்தன்—வாழியரோ *
மாயோனைவாள்வலியால்மந்திரங்கொள் * மங்கையர்கோன்
தூயோன்சுடர்மானவேல்.*

(ஆழ்வான் அருளிச்செய்தது.)

கட்டளைக்கலித்துறை.

*நெஞ்சுக்கிருள்கடிதீபம் அடங்காநெடும்பிறவி
நஞ்சுக்குநல்லவமுதம் * தமிழ்நன்னூல்துறைகள்
அஞ்சுக்கிலக்கியம் ஆரணசாரம் * பரசமயப்
பஞ்சுக்கனலின்பொறி * பரகாலன்பனுவல்களே.*

(எம்பார் அருளிச்செய்தது.)

ஒருவிகற்பநேரிசைவெண்பா.

*எங்கள்கதியே ! இராமாநுசமுனியே ! *
சங்கைகெடுத்தாண்டதவராசா ! *—பொங்குபுகழ்
மங்கையர்கோனீந்தமறையாயிரமனைத்தும் *
தங்குமனம்நீயெனக்குத்தா.*

*† [மாலைத்தனியேவழிபறிக்கவேணுமென்று *
கோலிப்பதிவிருந்தகொற்றவனே ! *—வேலை
அணைத்தருளுங்கையாலடியேன்வினையை *
துணித்தருளவேணும்துணிந்து.]*

**திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.**

---

**† இத்தத் தனியன் மணவாளமாமுனிகள் அருளிச்செய்ததென்றும், சோமாசியாண்டான் அருளிச்செய்ததென்றும் சொல்லுவர்; ஆகரம் கண்டுகொள்க. இதனை இந்தப்ராந்தங்களில் அநுஸந்திப்பதில்லை.**

திருமங்கையாழ்வார் அருளிச்செய்த

# பெரிய திருமொழி.

## முதற்பத்து

### க - ஆந் திருமொழி—வாடினேன்.

பெரிய திருமந்திரத்தின் மகிமை.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

(சங்கராபரணராகம் - திரிபுடைதாளம்.)

❀ வாடினேன வாடிவருந்தினேன்மனத்தால
பெருந்துயரிடும்பையில்பிறந்து *
கூடினேன் கூடி இளையவர் தம்மோடு
அவர் தரும்கலவியேகருதி *
ஓடினேன்ஓடிஉய்வதோர்பொருளால
உணர்வெனும்பெரும்பதம் † தெரிந்து *
நாடினேன்நாடிநான் கண்டுகொண்டேன்
நாராயணாவென்னும்நாமம். (க)

❀ ஆவியே ! அமுதே ! எனநினைந்துருகி
அவரவாபணைமுலைதுணையா *
பாவியேனுணராதெத்தனை பகலும்
பழுதுபோயொழிந்தனநாள்கள் *
தூவிசேரன்னம்துணையொடும்புணரும்
சூழ்புனற்குடந்தையேதொழுது * என்
நாவினாலுய்யநான்கண்டுகொண்டேன்
நாராயணாவென்னும்நாமம். (உ)

சேமமேவேண்டித்தீவினைபெருக்கி
தெரிவைமாருருவமேமருவி *
ஊமனார்கண்டகனவிலும்பழுதாய்
ஒழிந்தனகழிந்தஅந்நாள்கள் *

† 'திரிந்து' என்பதும் பாடம்,

காமனார்தாதைநம்முடையடிகள்
தம்மடைந்தார்மனத்திருப்பார் *
நாமம்நானுய்யநான்கண்டுகொண்டேன்
நாராயணாவென்னும்நாமம். (௩)

வென்றியேவேண்டிவீழ்பொருட்கிரங்கி
வேற்கணார்கலவியேகருதி *
நின்றவாநில்லாநெஞ்சினையுடையேன்
என்செய்கேன்? நெடுவிசும்பணவும் *
பன்றியாய்அன்றுபாரகங்கீண்ட
பாழியானாழியானருளே *
நன்றுநானுய்யநான்கண்டுகொண்டேன்
நாராயணாவென்னும்நாமம். (௪)

கள்வனேனானேன்படிறுசெய்திருப்பேன்
கண்டவாதிரிதந்தேனேலும் *
தெள்ளியேனானேன்செல்கதிக்கமைந்தேன்
சிக்கெனத்திருவருள்பெற்றேன் *
உள்ளெலாமுருகிக்குரல்தழுத்தொழிந்தேன்
உடம்பெலாம்கண்ணநீர்சோர *
நள்ளிருளளவும்பகலும்நானழைப்பன்
நாராயணாவென்னும்நாமம். (௫)

※ எம்பிரான்எந்தைஎன்னுடைச்சுற்றம்
எனக்கரசென்னுடைவாணாள் *
அம்பினால்அரக்கர்வெருக்கொளநெருக்கி
அவருயிர்செகுத்தஎம்அண்ணல் *
வம்புலாம்சோலைமாமதிள் † தஞ்சை
மாமணிக்கோயிலேவணங்கி *
நம்பிகாள்! உய்யநான்கண்டுகொண்டேன்
நாராயணாவென்னும்நாமம். (௬)

இற்பிறப்பறியீர்இவரவரென்னீர்
இன்னதோர்தன்மையென்றுஉணரீர் *
கற்பகம்புலவர்களைகணென்றுஉலகில்
கண்டவாதொண்டரைப்பாடும் *

---

† 'தஞ்சமா' என்றும் பாடம்.

சொற்பொருளாளீர்சொல்லுகேன்வம்மின்
சூழ்புனற்குடந்தையேதொழுமின் *
நற்பொருள்காண்மின்பாடிநீருய்ம்மின்
நாராயணாவென்னும்நாமம். (எ)

கற்றிலேன்கலைகள்ஐம்புலன்கருதும்
கருத்துளே திருத்தினேன்மனத்தை *
பெற்றிலேன் அதனால்பேதையேன்நன்மை
பெருநிலத்தாருயிர்க்கெல்லாம் *
செற்றமேவேண்டித்திரிதர்வேன் தவிர்ந்தேன்
செல்கதிக்குஉய்யுமாறெண்ணி *
நல்துணையாகப்பற்றினேன் அடியேன்
நாராயணாவென்னும்நாமம். (அ)

❀ குலம்தரும்செல்வம்தந்திடும்
அடியார்படுதுயராயினவெல்லாம் *
நிலந்தரஞ்செய்யும்நீள்விசும்பருளும்
அருளொடுபெருநிலமளிக்கும் *
வலந்தரும்மற்றுந்தந்திடும்
பெற்றதாயினும்ஆயினசெய்யும் *
நலந்தருஞ்சொல்லைநான்கண்டுகொண்டேன்
நாராயணாவென்னும்நாமம். (கூ)

❀ மஞ்சுலாஞ்சோலைவண்டறைமாநீர்
மங்கையார்வாள்கலிகன்றி *
செஞ்சொலாலெடுத்ததெய்வநல்மாலை
இவைகொண்டுசிக்கெனத்தொண்டீர் ! *
துஞ்சும்போது அழைமின் துயர்வரில்நினைமின்
துயரிலீர்சொல்லிலும்நன்றாம் *
நஞ்சுதான்கண்டீர்நம்முடைவினைக்கு
நாராயணாவென்னும்நாமம். (கo)

அடிவரவு:—வாடினேன் ஆவியே சேமம் வென்றி கள்வனேன் எம்பிரான் இற்பிறப்பு கற்றிலேன் குலம் மஞ்சு வாலி.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## உ - ஆந் திருமொழி—வாலிமாவலத்து.

† திருப்பிருதி.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (அடாணாராகம் - ஆதிதாளம்.)

வாலிமாவலத்தொருவனதுடல்கெட
வரிசிலைவளைவித்து * அன்று
ஏலம்நாறுதண்தடம்பொழிலிடம்பெற
இருந்தநலிமயத்துள் *
ஆலிமாமுகிலதிர்தர அருவரை
அகடுறமுகடேறி *
பீலிமாமயில்நடஞ்செயும்தடஞ்சுனைப்
பிருதிசென்றடைநெஞ்சே ! (க)

கலங்கமாக்கடல்அரிகுலம்பணிசெய்ய
அருவரை அணைகட்டி *
இலங்கைமாநகர்பொடிசெய்த அடிகள்தாம்
இருந்தநலிமயத்து *
விலங்கல்போல்வனவிறலிருஞ்சினத்தன
வேழங்கள்துயர்கூர *
பிலங்கொள்வாளெயிற்றுஅரியவைதிரிதரு
பிருதிசென்றடைநெஞ்சே ! (உ)

துடிகொள்நுண்ணிடைச்சுரிகுழல்
துளங்கெயிற்றிளங்கொடிதிறத்து * ஆயர்
இடிகொள்வெங்குரலினவிடையடர்த்தவன்
இருந்தநலிமயத்து *
கடிகொள்வேங்கையின்நறுமலரமளியின்
மணியறைமிசை, வேழம் *
பிடியினோடுவண்டுஇசைசொலத்துயில்கொளும்
பிருதிசென்றடைநெஞ்சே ! (௩)

மறங்கொளாளரியுருவெனவெருவர
ஒருவனது அகல்மார்வம்
திறந்து * வானவர்மணிமுடிபணிதர
இருந்தநலிமயத்துள் *

† 'பிரிதி' என்றும் வழங்கும்.

இறங்கிஏனங்கள்வளைமருப்பிடந்திடக
கிடந்தருகெரிவீசும் *
† பிறங்குமாமணிஅருவியொடிழிதரு
பிருதிசென்றடைநெஞ்சே ! (௪)

கரைசெய்மாக்கடல்கிடந்தவன்
கனைகழல்அமரர்கள்தொழுதேத்த *
அரைசெய்மேகலைஅலர்மகளவளொடும்
அமர்ந்தநலிமயத்து *
வரைசெய்மாக்களிறுஇளவெதிர்வளர்முளை
அளைமிகுதேன்தோய்த்து *
பிரசவாரிதன்னிளம்பிடிக்குஅருள்செயும்
பிருதிசென்றடைநெஞ்சே ! (௫)

பணங்களாயிரமுடையநல்லரவணை
பள்ளிகொள்பரமா ! என்று *
இணங்கிவானவர்மணிமுடிபணிதர
இருந்தநலிமயத்து *
மணங்கொள்மாதவிநெடுங்கொடிவிசும்புற
நிமிர்ந்தவைமுகில்பற்றி *
பிணங்குபூம்பொழில்நுழைந்துவண்டுஇசைசொலும்
பிருதிசென்றடைநெஞ்சே ! (௬)

கார்கொள்வேங்கைகள்கனவரைதழுவிய
கறிவளர்கொடிதுன்னி *
போர்கொள்வேங்கைகள்புனவரைதழுவிய
பூம்பொழிலிமயத்துள் *
ஏர்கொள்பூஞ்சுனைத்தடம்படிந்து
இனமலரெட்டுமிட்டுஇமையோர்கள் *
பேர்களாயிரம்பரவிநின்றடிதொழும்
பிருதிசென்றடைநெஞ்சே ! (௭)

இரவுகூர்ந்திருள்பெருகியவரைமுழை
இரும்பசியதுகூர *
அரவம்ஆவிக்கும்அகன்பொழில்தழுவிய
அருவரையிமயத்து *

† 'பிறங்கல்' என்றும் பாடம்.

பரமனாதிஎம்பனிமுகில்வண்ணனென்று
எண்ணிநின்றுஇமையோர்கள் *
பிரமனோடுசென்றுஅடிதொழும்பெருந்தகைப்
பிருதிசென்றடைநெஞ்சே! (அ)

ஓதியாயிரநாமங்களுணர்ந்தவர்க்கு
உறுதுயரடையாமல் *
ஏதமின்றிநின்றருளும்நம்பெருந்தகை
இருந்தநலிமயத்து *
தாதுமல்கியபிண்டிவிண்டலர்கின்ற
தழல்புரையெழில்நோக்கி *
பேதைவண்டுகள்எரியெனவெருவரு
பிருதிசென்றடைநெஞ்சே! (கூ)

❀ கரியமாமுகிற்படலங்கள்
கிடந்தவைமுழங்கிட * களிறென்று
பெரியமாசுணம்வரையெனப்பெயர்தரு
பிருதியெம்பெருமானை *
வரிகொள்வண்டறைபைம்பொழில்
மங்கையர்கலியனதொலிமாலை *
அரியஇன்னிசைபாடும்நல்லடியவர்க்கு
அருவினைஅடையாவே. (கo)

அடிவரவு:—வாலி கலங்க துடி மறம் கரைசெய் பணங்கள் கார் இரவு ஓதி கரிய முற்ற.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## ௩ - ஆந் திருமொழி—முற்றமூத்து.



### திருவதரி.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (முகாரிராகம்-ஆதிதாளம்.)

❀ முற்றமூத்துக்கோல்துணையா முன்னடிநோக்கிவளைந்து *
இற்றகால்போல்தள்ளிமெள்ள இருந்துஅங்குஇளையாமுன் *
பெற்றதாய்போல்வந்தபேய்ச்சி பெருமுலையூடு * உயிரை
வற்றவாங்கியுண்டவாயான் வதரிவணங்குதுமே. (க)

முதுகுபற்றிக்கைத்தலத்தால் முன்னொருகோலூன்றி *
விதிர்விதிர்த்துக்கண்சுழன்று மேற்கிளைகொண்டிருமி *
இதுவென்னப்பர்மூத்தவாறென்று இளையவரேசாமுன் *
மதுவுண்வண்டுபண்கள்பாடும் வதரிவணங்குதுமே. (உ)

உறிகள்போல்மெய்ந்நரம்பெழுந்து ஊன்தளர்ந்துஉள்ளமெள்கி *
நெறியைநோக்கிக்கண்சுழன்று நின்றுநடுங்காமுன் *
அறிதியாகில்நெஞ்சம் ! அன்பாய் ஆயிரநாமம்சொல்லி *
வெறிகொள்வண்டுபண்கள்பாடும் வதரிவணங்குதுமே. (ங)

பீளைசோரக்கண்ணிடுங்கிப் பித்தெழமூத்துஇருமி *
தாள்கள்நோவத்தம்மில்முட்டித் தள்ளிநடவாமுன் *
காளையாகிக்கன்றுமேய்த்துக் குன்றெடுத்துஅன்றுநின்றான் *
வாளைபாயும்தண்தடம்சூழ் வதரிவணங்குதுமே. (ச)

பண்டுகாமரானவாறும் பாவையர்வாயமுதம் *
உண்டவாறும்வாழ்ந்தவாறும் ஒக்கவுரைத்துஇருமி *
தண்டுகாலாவூன்றியூன்றித் தள்ளிநடவாமுன் *
வண்டுபாடும்தண்துழாயான் வதரிவணங்குதுமே. (ரு)

எய்த்தசொல்லோடீளையேங்கி இருமியிளைத்துஉடலம் *
பித்தர்போலச்சித்தம்வேறாய்ப் பேசிஅயராமுன் *
அத்தன்எந்தைஆதிமூர்த்தி ஆழ்கடலைக்கடைந்த *
மைத்தசோதிஎம்பெருமான் வதரிவணங்குதுமே. (சு)

பப்பஅப்பர்மூத்தவாறு பாழ்ப்பதுசீத்திரளை
யொப்ப * ஐக்கள்போதவுந்த உன்தமர்காண்மினென்று *
செப்புநேர்மென்கொங்கைநல்லார் தாம்சிரியாதமுன்னம் *
வைப்பும்நங்கள்வாழ்வுமானான் வதரிவணங்குதுமே. (எ)

ஈசிபோமின்ஈங்குஇரேன்மின் இருமிஇளைத்தீர் * உள்ளம்
கூசியிட்டீரென்றுபேசும் குவளையங்கண்ணியர்பால் *
நாசமானபாசம்விட்டு நல்நெறிநோக்கலுறில் *
வாசம்மல்குதண்துழாயான் வதரிவணங்குதுமே. (அ)

புலன்கள்நையமெய்யில்மூத்துப் போந்திருந்துஉள்ளமெள்கி *
கலங்கஐக்கள்போதவுந்திக் கண்டபிதற்றாமுன் *
அலங்கலாயதண்துழாய்கொண்டு ஆயிரநாமம்சொல்லி *
வலங்கொள்தொண்டர்பாடியாடும் வதரிவணங்குதுமே. (கூ)

❀ வண்டுதண்தேனுண்டுவாழும் வதரிநெடுமாலை *
கண்டல்வேலிமங்கைவேந்தன் கலியனொலிமாலை *
கொண்டுதொண்டர்பாடியாடக் கூடிடில் * நீள்விசும்பில்
அண்டமல்லால்மற்றுஅவர்க்கு ஓராட்சிஅறியோமே. (௧0)

அடிவரவு:—முற்ற முதுகு உறிகள் பீளை பண்டு எய்த்த பப்ப ஈசி புலன்கள் வண்டு ஏனம்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



௪ - ஆந் திருமொழி—ஏனமுனாகி.



திருவதரியாச்சிரமம்

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (பந்துவராளிராகம் - ஆதிதாளம்.)

❀ ஏனமுனாகிஇருநிலமிடந்து அன்று
இணையடிஇமையவர்வணங்க *
தானவனாகம்தரணியில்புரளத்
தடஞ்சிலைகுனித்தஎன்தலைவன் *
தேனமர்சோலைக்கற்பகம்பயந்த
தெய்வநல்நறுமலர்கொணர்ந்து *
வானவர்வணங்கும்கங்கையின்கரைமேல்
வதரியாச்சிராமத்துள்ளானே. (௧)

கானிடையுருவைச்சுடுசரம்துரந்து
கண்டுமுன்கொடுந்தொழிலுரவோன் *
ஊனுடையகலத்துஅடுகணைகுளிப்ப
உயிர்கவர்ந்துகந்தஎம்மொருவன் *
தேனுடைக்கமலத்தயனொடுதேவர்
சென்றுசென்றிறைஞ்சிட * பெருகு
வானிடைமுதுநீர்க்கங்கையின்கரைமேல்
வதரியாச்சிராமத்துள்ளானே. (௨)

இலங்கையும்கடலும்அடலருந்துப்பின்
இருநிதிக்கிறைவனும் * அரக்கர்
குலங்களும்கெடமுன்கொடுந்தொழில்புரிந்த
கொற்றவன்,கொழுஞ்சுடர்சுழன்ற *

விலங்கலி லுரிஞ்சிமேல்நின்றவிசும்பில்
வெண்துகிற்கொடியெனவிரிந்து *
வலந்தருமணிநீர்க்கங்கையின்கரைமேல்
வதரியாச்சிராமத்துள்ளானே. (ரு)

துணிவு இனிஉனக்குச்சொல்லுவன்மனமே!
தொழுதெழுதொண்டர்கள்தமக்கு *
பிணியொழித்து அமரர்பெருவிசும்பருளும்
பேரருளாளன்எம்பெருமான் *
அணிமலர்க்குழலாரரம்பையர் துகிலும்
ஆரமும்வாரிவந்து * அணிநீர்
மணிகொழித்திழிந்தகங்கையின்கரைமேல்
வதரியாச்சிராமத்துள்ளானே. (சு)

பேயிடைக்கிருந்துவந்தமற்றவள்தன்
பெருமுலைசுவைத்திட * பெற்ற
தாயிடைக்கிருத்தலஞ்சுவனென்று
தளர்ந்திடவளர்ந்தஎன்தலைவன் *
சேய்முகட்டுச்சியண்டமுஞ்சுமந்த
செம்பொன்செய்விலங்கலிலிலங்கு *
வாய்முகட்டிழிந்தகங்கையின்கரைமேல்
வதரியாச்சிராமத்துள்ளானே. (எ)

தேரணங்கல்குல்செழுங்கயற்கண்ணி
திறத்து ஒருமறத்தொழில்புரிந்து *
பாரணங்கிமிலேறேழும்முன்னடர்த்த
பனிமுகில்வண்ணன்எம்பெருமான் *
காரணந்தன்னுல்கடும்புனல்கயத்த
கருவரைபிளவெழக்குத்தி *
வாரணம்கொணர்ந்தகங்கையின்கரைமேல்
வதரியாச்சிராமத்துள்ளானே. (அ)

வெந்திறல்களிறும்வேலைவாயமுதும்
விண்ணொடுவிண்ணவர்க்கரசும்
இந்திரற்கருளிஎமக்குமீந்தருளும்
எந்தைஎம்மடிகள்எம்பெருமான் *
அந்தரத்து அமரர் அடியிணைவணங்க
ஆயிரமுகத்தினாலருளி *
மந்தரத்திழிந்தகங்கையின்கரைமேல்
வதரியாச்சிராமத்துள்ளானே. (கூ)

மான்முனிந்தொருகால்வரிசிலைவளைத்த
மன்னவன் பொன்னிறத்துஉரவோன் *
ஊன்முனிந்துஅவனதுடல்இருபிளவா
உகிர்நுதிமடுத்து * அயன்அரனைத்
தான்முனிந்திட்ட வெந்திறல்சாபம்
தவிர்த்தவன் * தவம்புரிந்துயர்ந்த
மாமுனிகொணர்ந்தகங்கையின்கரைமேல்
வதரியாச்சிராமத்துள்ளானே. (அ)

கொண்டல்மாருதங்கள்குலவரைதொகுநீர்க்
குரைகடலுலகுடன்அனைத்தும் *
உண்டமாவயிற்றோன்ஒண்சுடரேய்ந்த
உம்பரும்ஊழியும்ஆனான் *
அண்டமூடறுத்துஅன்றுஅந்தரத்துஇழிந்து
அங்குஅவனியாள்அலமர * பெருகும்
மண்டுமாமணிநீர்க்கங்கையின்கரைமேல்
வதரியாச்சிராமத்துள்ளானே. (கூ)

❋ வருந்திரைமணிநீர்க்கங்கையின்கரைமேல்
வதரியாச்சிராமத்துள்ளானை *
கருங்கடல்முந்நீர்வண்ணனைஎண்ணிக்
கலியன்வாயொலிசெய்தபனுவல் *
வரஞ்செய்தஐந்துமைந்தும்வல்லார்கள்
வானவருலகுடன்மருவி *
இருங்கடலுலகம்ஆண்டுவெண்குடைக்கீழ்
இமையவராகுவர்தாமே. (க0)

அடிவரவு:—ஏனம் கானிடை இலங்கை துணிவு பேய் தேர் வெந்திறல் மான் கொண்டல் வருந்திரை கலை.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

## ரு - ஆந் திருமொழி—கலையுங்கரியும்.

### திருச்சாளக்கிராமம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (பைரவிராகம் - ஆதிதாளம்.)

❋ கலையும்கரியும்பரிமாவும் திரியும்கானம்கடந்துபோய் *
சிலையும்கணையும்துணையாகச் சென்றான்வென்றிச்செருக்களத்து *
மலைகொண்டுஅலைநீரணைகட்டி மதிள்நீரிலங்கைவாளரக்கர்
தலைவன் * தலைபத்துஅறுத்துகந்தான் சாளக்கிராமம்அடைநெஞ்சே!

கடம்சூழ்கரியும்பரிமாவும் ஒலிமாந்தேரும்காலாளும் *
உடன்சூழ்ந்தெழுந்தகடியிலங்கைபொடியாவடிவாய்ச்சரம்துரந்தான் *
இடம்சூழ்ந்தெங்கும்இருவிசும்பில் இமையோர்வணங்கமணம்கமழும் *
தடம்சூழ்ந்தெங்கும்அழகாய சாளக்கிராமம்அடைநெஞ்சே! (உ)

உலவுதிரையும்குலவரையும் ஊழிமுதலாஎண்திக்கும் *
நிலவும்சுடரும்இருளுமாய் நின்றான்வென்றிவிறலாழி
வலவன் * வானோர்தம்பெருமான் மருவாஅரக்கர்க்குஎஞ்ஞான்றும்
சலவன் * சலம்சூழ்ந்துஅழகாய சாளக்கிராமம்அடைநெஞ்சே ! (ங)

ஊரான்குடந்தையுத்தமன் ஒருகால்இருகால்சிலைவளைய *
தேராஅரக்கர்தேர்வெள்ளம்செற்றான் வற்றாவருபுனல்சூழ்
பேரான் * பேராயிரமுடையான் பிறங்குசிறைவண்டுஅறைகின்ற
தாரான் * தாராவயல்சூழ்ந்த சாளக்கிராமம்அடைநெஞ்சே ! (ச)

அடுத்தார்த்தெழுந்தாள்பிலவாய்விட்டலற அவள்மூக்குஅயில்வாளால்
விடுத்தான் * விளங்குசுடராழி விண்ணோர்பெருமான், நண்ணார்முன் *
கடுத்தார்த்தெழுந்தபெருமழையைக் கல்லொன்றேந்திஇனநிரைக்காத்
தடுத்தான் * தடம்சூழ்ந்துஅழகாய சாளக்கிராமம்அடைநெஞ்சே! (ரு)

தாயாய்வந்தபேயுயிரும் தயிரும்இழுதும்உடனுண்ட
வாயான் * தூயஅரியுருவிற்குறளாய்ச்சென்று மாவலியை
ஏயானிரப்ப * மூவடிமண் இன்றேதாவென்று உலகேழும்
தாயான் * காயாமலர்வண்ணன் சாளக்கிராமம்அடைநெஞ்சே! (சு)

ஏனோர்அஞ்சவெஞ்சமத்துள் * அரியாய்ப்பரியஇரணியனை *
ஊனாரகலம்பிளவெடுத்த ஒருவன்தானேஇருசுடராய் *
வானாய்த்தீயாய்மாருதமாய் மலையாய்அலைநீருலகனைத்தும்
தானாய் * தானுமானான்தன் சாளக்கிராமம்அடைநெஞ்சே ! (எ)

வெந்தாரென்புஞ்சுடுநீறும் மெய்யில்பூசி, கையகத்து * ஓர்
சந்தார்தலைகொண்டு உலகேழும்திரியும்பெரியோன்தான்சென்று * என்
எந்தாய் ! சாபம்தீரென்ன இலங்குஅமுதுநீர்திருமார்பில்
தந்தான் * சந்தார்பொழில்சூழ்ந்த சாளக்கிராமம்அடைநெஞ்சே!(அ)

தொண்டாமினமும்இமையோரும் துணைநூல்மார்பினந்தணரும் *
அண்டா! எமக்கேயருளாயென்று அணையும்கோயிலருகெல்லாம் *
வண்டார்பொழிலின்பழனத்து வயலினயலேகயல்பாய *
தண்தாமரைகள்முகமலர்த்தும் சாளக்கிராமம்அடைநெஞ்சே! (கூ)

❀ தாராவாரும்வயல்சூழ்ந்த சாளக்கிராமத்துஅடிகளை *
காரார்புறவின்மங்கைவேந்தன் கலியன்ஒலிசெய்தமிழ்மாலை *
ஆரார்உலகத்தறிவுடையார் அமரர்நல்நாட்டரசாள *
பேராயிரமும்ஓதுமின்கள் அன்றிஇவையேபிதற்றுமினே. (கO)

அடிவரவு:—கலை கடம் உலவு ஊரான் அடுத்து தாய் ஏனோர் வெந்தார் தொண்டு தாரா வாணிலா.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## சு - ஆந் திருமொழி—வாணிலாமுறுவல்.



### நைமிசாரணியம்.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (காம்போதிராகம்-ஆதிதாளம்.)

❀ வாணிலாமுறுவல்சிறுநுதல்பெருந்தோள்
மாதரார்வனமுலைப்பயனே
பேணினேன் * அதனைப்பிழையெனக்கருதிப்
பேதையேன்பிறவிநோயறுப்பான் *
ஏணிலேன் இருந்தேன் எண்ணினேன்எண்ணி
இளையவர்கலவியின்திறத்தை
நாணினேன் * வந்துஉன்திருவடியடைந்தேன்
நைமிசாரணியத்துள்எந்தாய்! (க)

சிலம்படியுருவிற்கருநெடுங்கண்ணார்
திறத்தனாய் அறத்தையேமறந்து *
புலம்படிந்துண்ணும்போகமேபெருக்கிப்
போக்கினேன்பொழுதினைவாளா *
அலம்புரிதடக்கைஆயனே! மாயா!
வானவர்க்கரசனே! * வானோர்!
நலம்புரிந்திறைஞ்சும்திருவடியடைந்தேன்
நைமிசாரணியத்துள்எந்தாய்! (உ)

சூதினைப்பெருக்கிக்களவினைத்துணிந்து *
சுரிகுழல்மடந்தையர்திறத்து *
காதலேமிகுத்துக்கண்டவாதிரிந்த
தொண்டனேன், நமன்தமர்செய்யும் *

வேதனைக்குலுடுங்கிநடுங்கினேன்
வேலைவெண்திரையலமரக்கடைந்த
நாதனே! * வந்துஉன்திருவடியடைந்தேன்
நைமிசாரணியத்துள்எந்தாய்! (௩)

வம்புலாம்கூந்தல்மனைவியைத்துறந்து
பிறர்பொருள்தாரமென்றிவற்றை *
நம்பினார்இறந்தால்நமன்தமர்பற்றி
எற்றிவைத்து, எரியெழுகின்ற *
செம்பினாலியன்றபாவையைப்
பாவீ! தழுவெனமொழிவதற்குஅஞ்சி *
நம்பனே! வந்துஉன்திருவடியடைந்தேன்
நைமிசாரணியத்துள்எந்தாய்! (௪)

இடும்பையாலடர்ப்புண்டுஇடுமினோதுற்றென்று
இரந்தவர்க்குஇல்லையேயென்று *
நெடுஞ்சொலால்மறுத்தநீசனேன்அந்தோ!
நினைக்கிலேன்வினைப்பயன்தன்னை *
கடுஞ்சொலார்கடியார்காலனார்தமரால்
படுவதோர்கொடுமிறைக்குஅஞ்சி *
நடுங்கிநான்வந்துஉன்திருவடியடைந்தேன்
நைமிசாரணியத்துள்எந்தாய்! (௫)

கோடியமனத்தால்சினத்தொழில்புரிந்து
திரிந்துநாயினத்தொடும்திளைத்திட்டு *
ஓடியும்உழன்றும்உயிர்களேகொன்றேன்
உணர்விலேனாதலால் * நமனார்
பாடியைப்பெரிதும்பரிசழித்திட்டேன்
பரமனே! பாற்கடல்கிடந்தாய்! *
நாடிநான்வந்துஉன்திருவடியடைந்தேன்
நைமிசாரணியத்துள்எந்தாய்! (௬)

நெஞ்சினால்நினைந்தும்வாயினால்மொழிந்தும்
நீதியல்லாதனசெய்தும் *
துஞ்சினார்செல்லும்தொல்நெறிகேட்டே
துளங்கினேன்விளங்கனிமுனிந்தாய்! *

வஞ்சனேன் அடியேன்நெஞ்சினில்பிரியா
வானவா ! தானவர்க்குஎன்றும்
நஞ்சனே ! * வந்துஉன்திருவடியடைந்தேன்
நைமிசாரணியத்துள்எந்தாய் ! (எ)

ஏவினார்கலியார்நலிகவென்று என்மேல்
எங்ஙனேவாழுமாறு ? * ஐவர்
கோவினார்செய்யும்கொடுமையையடித்தேன்
குறுங்குடிநெடுங்கடல்வண்ணா ! *
பாவினாரின்சொல்பல்மலர்கொண்டு உன்
பாதமேபரவிநான்பணிந்து * என்
நாவினால்வந்துஉன்திருவடியடைந்தேன்
நைமிசாரணியத்துள்எந்தாய் ! (அ)

† ஊனிடைச்சுவர்வைத்துஎன்புதூண்நாட்டி
உரோமம்வேய்ந்துஒன்பதுவாசல் *
தானுடைக்குரம்பைபிரியும்போது உன்தன்
சரணமேசரணமென்றிருந்தேன் *
தேனுடைக்கமலத்திருவினுக்கரசே !
திரைகொள்மாநெடுங்கடல்கிடந்தாய் ! *
நானுடைத்தவத்தால்திருவடியடைந்தேன்
நைமிசாரணியத்துள்எந்தாய் ! (கூ)

ஏதம்வந்தணுகாவண்ணம்நாமெண்ணி
எழுமினோதொழுதுமென்று * இமையோர்
நாதன்வந்திறைஞ்சும் நைமிசாரணியத்
தெந்தையைச்சிந்தையுள்வைத்து *
காதலேமிகுத்தகலியன்வாயொலிசெய்
மாலைதான்கற்றுவல்லார்கள் *
ஓதநீர்வையகம்ஆண்டுவெண்குடைக்கீழ்
உம்பருமாகுவர்தாமே. (கய)

அடிவரவு:—வாணிலா சிலம்பு சூதினை வம்பு இம்மையால் கோடிய நெஞ்சினால் ஏவினார் ஊன் ஏதம் அங்கண்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

---

† 'ஊனுடை' என்பதும் பாடம்.

## எ - ஆந் திருமொழி—அங்கண்ஞாலம்.

### சிங்கவேள்குன்றம்

† கலிநிலைத்துறை. (சுமாஸ்ராகம் - நுபகதாளம்.)

அங்கண்ஞாலம்அஞ்ச அங்குஓராளரியாய் * அவுணன்
பொங்கஆகம்வள்ளுகிரால் போழ்ந்தபுனிதனிடம் *
பைங்கணானைக்கொம்புகொண்டு பத்திமையால் * அடிக்கீழ்ச்
செங்கணாளிஇட்டிறைஞ்சும் ‡ சிங்கவேள்குன்றமே. (க)

அலைத்தபேழ்வாய் வாளெயிற்றோர்கோளரியாய் * அவுணன்
கொலைக்கையாளன்நெஞ்சிடந்த கூருகிராளனிடம் *
மலைத்தசெல்சாத்தெறிந்தபூசல் வன்துடிவாய்கடுப்ப *
சிலைக்கைவேடர்தெழிப்பறாத சிங்கவேள்குன்றமே (உ)

ஏய்ந்தபேழ்வாய் வாளெயிற்றோர்கோளரியாய் * அவுணன்
வாய்ந்தஆகம்வள்ளுகிரால் வகிர்ந்தஅம்மானதிடம் *
ஓய்ந்தமாவும்உடைந்தகுன்றும் அன்றியும்நின்றழலால் *
தேய்ந்தவேயுமல்லதில்லாச் சிங்கவேள்குன்றமே. (ங)

$ எவ்வம்வெவ்வேல்பொன்பெயரோன் ஏதலனின்னுயிரை
வவ்வி * ஆகம்வள்ளுகிரால் வகிர்ந்தஅம்மானதிடம் *
கவ்வுநாயும்கழுகும் உச்சிப்போதொடுகால்சுழன்று *
தெய்வமல்லால்செல்லவொண்ணாச் சிங்கவேள்குன்றமே (ச)

மென்றபேழ்வாய் வாளெயிற்றோர்கோளரியாய் * அவுணன்
பொன்றஆகம்வள்ளுகிரால் போழ்ந்தபுனிதனிடம் *
நின்றசெந்தீமொண்டுசூறை நீள்விசும்பூ § டிரிய *
சென்றுகாண்டற்கரியகோயில் சிங்கவேள்குன்றமே. (ரு)

எரிந்தபைங்கணிலங்குபேழ்வாய் எயிற்றொடுஇதுஎவ்வுருவென்று *
இரிந்துவானோர்கலங்கியோட இருந்தஅம்மானதிடம் *
நெரிந்தவேயின்முழைமுழையுள்நின்று நீள்நெறிவாய்உழுவை *
திரிந்தஆனைச்சுவடுபார்க்கும் சிங்கவேள்குன்றமே. (சு)

முனைத்தசீற்றம்விண்சுடப்போய் மூவுலகும்பிறவும் *
அனைத்தும்அஞ்சஆளரியாய் இருந்தஅம்மானதிடம் *
கனைத்ததீயும்கல்லுமல்லா வில்லுடைவேடருமாய் *
தினைத்தனையும்செல்லவொண்ணாச் சிங்கவேள்குன்றமே. (எ)

---

† இப்பாசுரங்களை அறுசீராகவும் சிலர் பிரிப்பர். ‡ சிங்கவேள்குன்றமே என்றும் வழங்குவர். $ 'எவ்வும்' என்பாருமுளர். § 'எரிய' என்றும் பாடம்.

நாத்தழும்பநான்முகனும் ஈசனுமாய்முறையால்
ஏத்த * அங்குஓராளரியாய் இருந்தஅம்மானதிடம் *
காய்த்தவாகைநெற்றொலிப்பக் கல்லதர்வேய்ங்கழைபோய் *
தேய்த்ததீயால்விண்சிவக்கும் சிங்கவேள்குன்றமே. (அ)

† நல்லைநெஞ்சே! நாம்தொழுதும் நம்முடைநம்பெருமான் *
அல்லிமாதர்புல்கநின்ற ஆயிரந்தோளனிடம் *
நெல்லிமல்கிக்கல்லுடைப்பப் புல்லிலையார்த்து * அதர்வாய்ச்
சில்லுசில்லென்றொல்லறாத சிங்கவேள்குன்றமே. (கூ)

செங்கணாளிஇட்டிறைஞ்சும் சிங்கவேள்குன்றுடைய *
எங்களீசனெம்பிரானை இருந்தமிழ்நூற்புலவன் *
மங்கையாளன்மன்னுதொல்சீர் வண்டறைதார்க்கலியன் *
செங்கையாளன்செஞ்சொல்மாலை வல்லவர்தீதிலரே. (க0)

அடிவரவு:—அங்கண் அலைத்த எய்ந்த எவ்வம் மென்ற எரிந்த முனைத்த நா நல்லை செஙகண் கொங்கு.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

## அ - ஆந் திருமொழி—கொங்கலர்ந்த.

### திருவேங்கடம். (க)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

(யமுனகல்யாணிராகம் - திரிபுடைதாளம்.)

கொங்கலர்ந்தமலர்க்குருந்தம்ஒசித்த கோவலனெம்பிரான் *
சங்குதங்குதடங்கடல் துயில்கொண்டதாமரைக்கண்ணினன் *
பொங்குபுள்ளினைவாய்பிளந்த புராணர்தம்மிடம் * பொங்குநீர்ச்
செங்கயல்திளைக்கும்சுனைத் திருவேங்கடம்அடைநெஞ்சமே! (க)

பள்ளியாவதுபாற்கடல்அரங்கம் இரங்கவன்பேய்முலை *
பிள்ளையாய்உயிருண்டஎந்தை பிரானவன்பெருகுமிடம் *
வெள்ளியான்கரியான் மணிநிறவண்ணனென்றெண்ணி * நாள்தொறும்
தெள்ளியார்வணங்கும்மலைத் திருவேங்கடம்அடைநெஞ்சமே! (உ)

நின்றமாமருதுஇற்றுவீழ நடந்தநின்மலன்நேமியான் *
என்றும்வானவர்கைதொழும் இணைத்தாமரையடியெம்பிரான் *
கன்றிமாரிபொழிந்திடக் கடிதாநிரைக்குஇடர்நீக்குவான் *
சென்றுகுன்றமெடுத்தவன் திருவேங்கடம்அடைநெஞ்சமே! (ங)

---

† 'நல்ல' என்பதும் பாடம்.

❀பார்த்தற்காய்அன்றுபாரதம்கைசெய்திட்டுவென்றபரஞ்சுடர் *
கோத்துஅங்குஆயர்தம்பாடியில் குரவைபிணைந்தஎம்கோவலன் *
ஏத்துவார்தம்மனத்துள்ளான் இடவெந்தைமேவியஎம்பிரான் *
தீர்த்தநீர்த்தடஞ்சோலைசூழ் திருவேங்கடம்அடைநெஞ்சமே! (ச)

வண்கையான்அவுணர்க்குநாயகன் வேள்வியில்சென்று, மாணியாய் *
மண்கையால்இரந்தான் மராமரமேழும்எய்தவலத்தினன் *
எண்கையான்இமயத்துள்ளான் இருஞ்சோலைமேவியஎம்பிரான் *
திண்கைம்மாதுயர்தீர்த்தவன் திருவேங்கடம்அடைநெஞ்சமே! (ரு)

எண்திசைகளும்ஏழுலகமும்வாங்கிப் பொன்வயிற்றில்பெய்து *
பண்டுஓராலிலைப்பள்ளிகொண்டவன் பால்மதிக்குஇடர்தீர்த்தவன் *
ஒண்திறலவுணனுரத்துகிர்வைத்தவன் ஒள்ளெயிற்றொடு *
திண்திறலரியாயவன் திருவேங்கடம்அடைநெஞ்சமே! (சு)

பாரும்நீர்எரிகாற்றினோடு ஆகாசமும் இவையாயினான் *
பேரும்ஆயிரம்பேசநின்ற பிறப்பிலிபெருகுமிடம் *
காரும்வார்பனிநீள்விசும்பிடைச் † சோருமாமுகில்தோய்தர *
சேரும்வார்பொழில்சூழ் எழில்திருவேங்கடம்அடைநெஞ்சமே! (எ)

அம்பரம்அனல்கால்நிலம் சலமாகிநின்றஅமரர்கோன் *
வம்புலாமலர்மேல் மலிமடமங்கைதன்கொழுநனவன் *
கொம்பினன்னஇடைமடக்குறமாதர் நீளிதணந்தொறும் *
செம்புனம்மவைகாவல்கொள் திருவேங்கடம்அடைநெஞ்சமே! (அ)

பேசுமின்திருநாமம்எட்டெழுத்தும் சொல்லிநின்று, பின்னரும் *
பேசுவார்தமைஉய்யவாங்கிப் பிறப்பறுக்கும்பிரானிடம் *
வாசமாமலர்நாறுவார்பொழில் சூழ்தரும்உலகுக்கெலாம் *
தேசமாய்த்திகழும்மலைத் திருவேங்கடம்அடைநெஞ்சமே! (கூ)

❀செங்கயல்திளைக்கும்சுனைத் திருவேங்கடத்துஉறைசெல்வனை *
மங்கையர்தலைவன்கலிகன்றி வண்தமிழ்ச்செஞ்சொல்மாலைகள் *
சங்கையின்றித்தரித்துஉரைக்கவல்லார்கள் தஞ்சமதாகவே *
வங்கமாகடல்வையம்காவலராகி வானுலகாள்வரே. (க0)

அடிவரவு:—கொங்கு பள்ளி நின்ற பார்த்தற்கு வண்கையான் எண்திசைகள் பார் அம்பரம் பேசுமின் செங்கயல் தாய்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



† 'சேருமாமுகில் தேய்தர' என்பதும் பாடம்.

## கூ-ஆந் திருமொழி—தாயேதந்தை.

### திருவேங்கடம். (௨)

கலிநிலைத்துறை. (முகாரிராகம் - அடதாளம்)

✻ தாயேதந்தையென்றும் தாரமேகிளைமக்களென்றும் *
நோயேபட்டொழிந்தேன் நுன்னைக்காண்பதோராசையினால் *
வேயேய்பூம்பொழில்சூழ் விரையார்திருவேங்கடவா! *
நாயேன்வந்து அடைந்தேன் நல்கிஆளென்னைக்கொண்டருளே. (க)

மானேய்கண்மடவார் மயக்கில்பட்டு * மாநிலத்து
நானேநானாவிதநரகம்புகும் பாவம்செய்தேன் *
தேனேய்பூம்பொழில்சூழ் திருவேங்கடமாமலை * என்
ஆனாய்! வந்தடைந்தேன் அடியேனை ஆட்கொண்டருளே. (௨)

கொன்றேன்பல்லுயிரைக் குறிக்கோளொன்றிலாமையினால் *
என்றேனும்இரந்தார்க்கு இனிதாகவுரைத்தறியேன் *
குன்றேய்மேகமதிர் குளிர்மாமலைவேங்கடவா! *
அன்றேவந்தடைந்தேன் அடியேனை ஆட்கொண்டருளே. (௩)

குலந்தானெத்தனையும் பிறந்தேயிறந்தெய்த்தொழிந்தேன் *
நலந்தானொன்றுமிலேன் நல்லதோரறம்செய்துமிலேன் *
நிலந்தோய் § நீள்முகில்சேர் நெறியார்திருவேங்கடவா! *
அலந்தேன்வந்தடைந்தேன் அடியேனை ஆட்கொண்டருளே. (௪)

எப்பாவம்பலவும் இவையேசெய்துஇளைத்தொழிந்தேன் *
துப்பா! நின்னடியே தொடர்ந்தேத்தவும்கிற்கின்றிலேன் *
செப்பார்திண்வரைசூழ் திருவேங்கடமாமலை * என்
அப்பா! வந்தடைந்தேன் அடியேனை ஆட்கொண்டருளே. (௫)

மண்ணாய்நீர்எரிகால் மஞ்சுலாவும்ஆகாசமுமாம் *
புண்ணாராக்கைதன்னுள் புலம்பித்தளர்ந்துஎய்த்தொழிந்தேன் *
விண்ணார்நீள்சிகர விரையார்திருவேங்கடவா! *
அண்ணா! வந்தடைந்தேன் அடியேனை ஆட்கொண்டருளே. (௬)

தெரியேன்பாலகனாய்ப் பலதீமைகள்செய்துமிட்டேன் *
பெரியேனாயினபின் பிறர்க்கேயுழைத்துஏழையானேன் *
கரிசேர்பூம்பொழில்சூழ் கனமாமலைவேங்கடவா! *
அரியே! வந்தடைந்தேன் அடியேனை ஆட்கொண்டருளே. (௭)

§ 'நீர்முகில்' என்பது சிலர் பாடம்.

நோற்றேன்பல்பிறவி நுன்னைக்காண்பதோராசையினால் *
ஏற்றேன் இப்பிறப்பே இடருற்றனன்எம்பெருமான் !
கோல்தேன்பாய்ந்தொழுகும் குளிர்சோலைசூழ்வேங்கடவா ! *
ஆற்றேன்வந்தடைந்தேன் அடியேனைஆட்கொண்டருளே. (௮)

பற்றேலொன்றுமிலேன் பாவமேசெய்துபாவியானேன் *
மற்றேலொன்றறியேன் மாயனே! எங்கள்மாதவனே ! *
கல்தேன்பாய்ந்தொழுகும் கமலச்சுனைவேங்கடவா !
ஆற்றேன்வந்தடைந்தேன் அடியேனைஆட்கொண்டருளே. (௯)

கண்ணாயஏழுலகுக்குஉயிராய எங்கார்வண்ணனை *
விண்ணோர்தாம்பரவும் பொழில்வேங்கடவேதியனை *
திண்ணார்மாடங்கள்சூழ் திருமங்கையர்கோன்கலியன் *
பண்ணார்பாடல்பத்தும் பயில்வார்க்குஇல்லைபாவங்களே. (௧௦)

அடிவரவு:—தாய் மான் கொன்றேன் குலம் எம்பாவம் மண் தெரியேன் நோற்றேன் பற்றேல் கண்ணாய் கண.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

## ௧௦ - ஆந் திருமொழி—கண்ணார்கடல்சூழ்.

### திருவேங்கடம். (௩.)

(கலிவிருத்தம். நாதநாமக்கிரியைராகம் - திரிபுடைதாளம்.)

கண்ணார்கடல்சூழ் இலங்கைக்குஇறைவன்தன் *
திண்ணாகம்பிளக்கச் சரம்செலஉய்த்தாய் ! *
விண்ணோர்தொழும் வேங்கடமாமலைமேய *
அண்ணா ! அடியேனிடரைக் களையாயே. (௧)

† இலங்கைப்பதிக்கு அன்றுஇறையாய * அரக்கர்
குலம்கெட்டுஅவர்மாளக் கொடிப்புள்திரித்தாய் ! *
விலங்கல்குடுமித் திருவேங்கடம்மேய *
அலங்கல்துளபமுடியாய் ! அருளாயே. (௨)

நீரார்கடலும் நிலனும்முழுதுண்டு *
ஏராலமிளந்தளிர்மேல் துயிலெந்தாய் ! *
சீரார்திருவேங்கட மாமலைமேய *
ஆராவமுதே! அடியேற்குஅருளாயே. (௩)

† 'இலங்கைப்பதிக்கென்றிறை' என்றும் பாடமுண்டு.

உண்டாய்உறிமேல் நறுநெய்அமுதாக *
கொண்டாய்குறளாய் நிலம்ஈரடியாலே *
விண்தோய்சிகரத் திருவேங்கடம்மேய *
அண்டா! அடியேனுக்கு அருள்புரியாயே. (௪)

தூணாய்அதனூடு அரியாய்வந்துதோன்றி *
பேணாஅவுணனுடலம் பிளந்திட்டாய்! *
சேணார்திருவேங்கட மாமலைமேய *
கோணாகணையாய்! குறிக்கொள்எனைநீயே. (௫)

மன்னா இம்மனிசப்பிறவியைநீக்கி *
தன்னாக்கித் தன்இன்னருள்செய்யும்தலைவன் *
மின்னார்முகில்சேர் திருவேங்கடம்மேய *
என்னானைஎன்னப்பன் என்நெஞ்சிலுளானே. (௬)

மானேய்மடநோக்கிதிறத்து எதிர்வந்த *
ஆனேழ்விடைசெற்ற அணிவரைத்தோளா! *
தேனே! திருவேங்கடமாமலைமேய *
கோனே! என்மனம் குடிகொண்டிருந்தாயே. (௭)

சேயன்அணியன் எனசிந்தையுள்நின்ற
மாயன் * மணிவாளொளி வெண்தரளங்கள் *
வேய்விண்டுஉதிர் வேங்கடமாமலைமேய *
ஆயனடியல்லது மற்றறியேனே. (௮)

வந்தாய்என்மனம்புகுந்தாய் மன்னிநின்றாய்!*
நந்தாதகொழுஞ்சுடரே! எங்கள்நம்பீ! *
சிந்தாமணியே! திருவேங்கடம்மேய
எந்தாய்! * இனியான்உன்னை என்றும்விடேனே. (௯)

வில்லார்மலி வேங்கடமாமலைமேய *
மல்லார்திரள்தோள் மணிவண்ணனம்மானை *
கல்லார்திரள்தோள் கலியன்சொன்னமாலை *
வல்லாரவர் வானவராகுவர்தாமே. (௧௦)

அடிவரவு:—கண் இலங்கை நீர் உண்டாய் தூணாய் மன்னா மானேய் சேயன் வந்தாய் வில் வானவர்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## இரண்டாம்பத்து.

### க - ஆம் திருமொழி—வானவர்.

திருவேங்கடம். (௪)

ஆசிரியத்துறை. (ஆனந்தபைரவிராகம் - ரூபகதாளம்.)

❀ வானவர்தங்கள்சிந்தைபோல என்நெஞ்சமே! இனிதுவந்து*மாதவ
மானவர்தங்கள்சிந்தை அமர்ந்துறைகின்றஎந்தை *
கானவரிடுகாரகில்புகை ஓங்குவேங்கடம்மேவி * மாண்குற
ளான அந்தணற்கு இன்றுஅடிமைத்தொழில்பூண்டாயே. (க)

உறவுசுற்றமென்றொன்றிலா ஒருவன்உகந்தவர்தம்மை - மண்மிசைப்
பிறவியேகெடுப்பான் அதுகண்டுஎன்நெஞ்சமென்பாய்! *
குறவர்மாதர்களோடு வண்டுகுறிஞ்சிமருளிசைபாடும்வேங்கடத்து *
அறவனாயகற்கு இன்றுஅடிமைத்தொழில்பூண்டாயே. (உ)

இண்டையாயினகொண்டு தொண்டர்களேத்துவாருறவோடும் * வானிடைக்
கொண்டுபோயிடவும் அதுகண்டுஎன்நெஞ்சமென்பாய்! *
வண்டுவாழ்வடவேங்கடமலை கோயில்கொண்டதனோடும் * மீமிசை
அண்டமாண்டிருப்பாற்கு அடிமைத்தொழில்பூண்டாயே. (௩)

பாவியாதுசெய்தாய்என்நெஞ்சமே! பண்டுதொண்டுசெய்தாரை*மண்மிசை
மேவிஆட்கொண்டுபோய் விசும்பேறவைக்கும்எந்தை *
† கோவிநாயகன்கொண்டலுந்துயர் வேங்கடமலையாண்டு * வானவர்
ஆவியாயிருப்பாற்கு அடிமைத்தொழில்பூண்டாயே. (௪)

பொங்குபோதியும்பிண்டியும்முடைப் புத்தர்நோன்பியர்பள்ளியுள்ளுறை *
தங்கள்தேவரும்தாங்களுமேயாக என்நெஞ்சமென்பாய்! *
எங்கும்வானவர்தானவர்நிறைந்தேத்தும் வேங்கடம்மேவிநின்றருள் *
அங்கணாயகற்கு இன்றுஅடிமைத்தொழில்பூண்டாயே. (௫)

துவரியாடையர்மட்டையர் சமண்தொண்டர்கள்மண்டியுண்பின்னரும் *
தமரும்தாங்களுமேதடிக்க என்நெஞ்சமென்பாய்! *
கவரிமாக்கணம்சேரும் வேங்கடம்கோயில்கொண்டகண்ணார்விசும்பிடை *
அமரநாயகற்கு இன்றுஅடிமைத்தொழில்பூண்டாயே. (௬)

† 'கோவல்நாயகன்' என்பதும் பாடம்.

தருக்கினால்சமண்செய்து சோறுதண்தயிரினால்திரளை * மிடற்றிடை
நெருக்குவாரலக்கணதுகண்டு என்னெஞ்சமென்பாய்! * [னிடை
மருட்கள்வண்டுகள்பாடும் வேங்கடங்கோயில்கொண்டதனோடும் * வா
அருக்கன்மேவிநிற்பார்க்கு அடிமைத்தொழில்பூண்டாயே. (எ)

சேயன்அணியன்சிறியன்பெரியனென்பதும் சிலர்பேசக்கேட்டிருந்
தே * என்னெஞ்சமென்பாய்! எனக்குஒன்றுசொல்லாதே *
வேய்கள்நின்றுவெண்முத்தமேசொரி வேங்கடமலைக்கோயில்மேவிய *
† ஆயர்நாயகற்கு இன்றுஅடிமைத்தொழில்பூண்டாயே. (அ)

கூடியாடியுரைத்ததேயுரைத்தாய் என்னெஞ்சமென்பாய்! துணிந்துகேள்*
பாடியாடிப்பலரும் பணிந்தேத்திக் ‡ காண்கிலார் *
ஆடுதாமரையோனுமீசனும் அமரர்கோனும்நின்றேத்தும்*வேங்கடத்து
ஆடுகூத்தனுக்கு இன்றுஅடிமைத்தொழில்பூண்டாயே. (கூ)

மின்னுமாமுகில்மேவு தண்திருவேங்கடமலைக்கோயில்மேவிய *
அன்னமாய்நிகழ்ந்த அமரர்பெருமானை *
கன்னிமாமதிள்மங்கையர்கலிகன்றி இன்தமிழாலுரைத்த * இம்
மன்னுபாடல்வல்லார்க்கு இடமாகும்வானுலகே. (கo)

அடிவரவு:—வானவர் உறவு இண்டை பாவியாது பொங்கு துவரி தருக்கி
னால் சேயன் கூடி மின்னு காசையாடை.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## உ - ஆம் திருமொழி—காசையாடை.



### திருவெவ்வுளூர்.

கலிநிலைத்துறை. ([illegible]).

காசையாடைமூடியோடிக் காதல்செய்தானவனூர் *
நாசமாகநம்பவல்ல நம்பிநம்பெருமான் *
வேயினன்னதோள்மடவார் வெண்ணெயுண்டான்இவனென்று *
ஏசநின்றஎம்பெருமான் எவ்வுள்கிடந்தானே. (க)

† 'ஆயநாயகற்கு' என்றும்பாடமோதுவர். ‡ 'காண்கிலா' என்பதும்பாடம்.

தையலாள்மேல்காதல்செய்த தானவன்வாளரக்கன் *
பொய்யிலாதபொன்முடிகள் ஒன்பதோடொன்றும் * அன்று
செய்தவெம்போர்தன்னில் அங்குஓர்செஞ்சரத்தால்உருள *
எய்தஎந்தைஎம்பெருமான் எவ்வுள்கிடந்தானே. (உ)

முன்ஓர்தூது வானரத்தின்வாயில்மொழிந்து * அரக்கன்
மன்னூர்தன்னை வாளியினால்மாளமுனிந்து * அவனே
பின்ஓர்தூது ஆதிமன்னர்க்காகி, பெருநிலத்தார் *
இன்னார்தூதனெனநின்றான் எவ்வுள்கிடந்தானே (௩)

பந்தணைந்தமெல்விரலாள் பாவைதன்காரணத்தால் *
வெந்திறலேறேழும் வென்றவேந்தன், விரிபுகழ்சேர் *
நந்தன்மைந்தனாகவாகும் நம்பிநம்பெருமான் *
எந்தைதந்தைதம்பெருமான் எவ்வுள்கிடந்தானே (௪)

பாலனாகிஞாலமேழும்உண்டு பண்டுஆலிலைமேல் *
சாலநாளும்பள்ளிகொள்ளும் தாமரைக்கண்ணன், எண்ணில் *
நீலமார்வண்டுண்டுவாழும் நெய்தலந்தண்கழனி *
ஏலநாறும்பைம்புறவில் எவ்வுள்கிடந்தானே. (௫)

சோத்தநம்பியென்று தொண்டர்மிண்டித்தொடர்ந்தழைக்கும் *
ஆத்தனம்பிசெங்கணம்பி ஆகிலும்தேவர்க்கெல்லாம் *
மூத்தநம்பிமுக்கணம்பிஎன்று முனிவர்தொழுது
ஏத்தும் * நம்பிஎம்பெருமான் எவ்வுள்கிடந்தானே. (௬)

திங்களப்புவானெரிகாலாகி * திசைமுகனார்
தங்களப்பன்சாமியப்பன் பாகத்திருந்த * வண்டுண்
தொங்கலப்புநீள்முடியான் சூழ்கழல்சூடநின்ற *
எங்களப்பன்எம்பெருமான் எவ்வுள்கிடந்தானே. (௭)

முனிவன்மூர்த்திமூவராகி வேதம்விரித்துரைத்த
புனிதன் * பூவைவண்ணன்அண்ணல்புண்ணியன் விண்ணவர்கோன் *
தனியன்சேயன்தானொருவனாகிலும் தன்னடியார்க்கு
இனியன் * எந்தைஎம்பெருமான் எவ்வுள்கிடந்தானே. (அ)

பந்திருக்கும்மெல்விரலாள் பாவைபனிமலராள் *
வந்திருக்கும்மார்வன் நீலமேனிமணிவண்ணன் *
அந்தரத்தில்வாழும் வானோர்நாயகனாயமைந்த *
இந்திரற்கும்தம்பெருமான் எவ்வுள்கிடந்தானே, (௯)

இண்டைகொண்டுதொண்டரேத்த எவ்வுள்கிடந்தானை *
வண்டுபாடும்பைம்புறவின் மங்கையர்கோன்கலியன் *
கொண்டசீரால்தண்தமிழ்செய்மாலை ஈரைந்தும்வல்லார் *
அண்டமாள்வதுஆணை அன்றேல்ஆள்வர்அமருலகே. (௧௦)

அடிவரவு:—காசையாடை தையலாள் மூன் பந்தணைந்த பாலன் சோத்தம் திங்கள் முனிவன் பந்திருக்கும் இண்டை வில்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## ௩ - ஆந் திருமொழி—விற்பெருவிழவும்.



### திருவல்லிக்கேணி.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (தோடிராகம் - ஆதிதாளம்)

விற்பெருவிழவும்கஞ்சனும்மல்லும்
வேழமும்பாகனும்வீழ *
செற்றவன்தன்னை, புரமெரிசெய்த
சிவனுறுதுயர்களைதேவை *
பற்றலர்வீயக்கோல்கையில்கொண்டு
பார்த்தன்தன்தேர்முன்நின்றானை *
சிற்றவைபணியால்முடிதுறந்தானைத்
திருவல்லிக்கேணிக்கண்டேனே. (௧)

வேதத்தைவேதத்தின்சுவைப்பயனை
விழுமியமுனிவர்விழுங்கும் *
கோதிலின்கனியைநந்தனார்களிற்றைக்
குவலயத்தோர்தொழுதேத்தும் *
ஆதியைஅமுதைஎன்னையாளுடை
யப்பனை ஒப்பவரில்லா
மாதர்கள்வாழும் * மாடமாமயிலைத்
திருவல்லிக்கேணிக்கண்டேனே. (௨)

வஞ்சனைசெய்யத்தாயுருவாகி
வந்தபேய்அலறிமண்சேர *
நஞ்சமர்முலையூடுயிர்செகவுண்ட
நாதனைத் தானவர்கூற்றை *

விஞ்சைவானவர்சாரணர்சித்தா
வியந்துதிசெய்யப்பெண்ணுருவாகி *
அஞ்சுவையமுதம்அன்றுஅளித்தானைத்
திருவல்லிக்கேணிக்கண்டேனே. (௩)

இந்திரனுக்கென்றுஆயர்கள்எடுத்த
எழில்விழவில்பழநடைசெய் *
மந்திரவிதியில்பூசனைபெறாது
மழைபொழிந்திடத்தளர்ந்து * ஆயர்
எந்தம்மோடுஇனவாநிரைதளராமல்
எம்பெருமான்! அருளென்ன *
அந்தமில்வரையால்மழைதடுத்தானைத்
திருவல்லிக்கேணிக்கண்டேனே. (௪)

இன்துணைப்பதுமத்துஅலர்மகள்தனக்கும்
இன்பன் நற்புவிதனக்குஇறைவன் *
தன்துணைஆயர்பாவைநப்பின்னை
தனக்குஇறை மற்றையோர்க்கெல்லாம்
வன்துணை * பஞ்சபாண்டவர்க்காகி
வாயுரைதூதுசென்றியங்கும்
† என்துணை * எந்தைதந்தைதம்மானைத்
திருவல்லிக்கேணிக்கண்டேனே. (௫)

அந்தகன்சிறுவன்அரசர்தமரசற்கிளையவன்
அணியிழையைச்சென்று *
எந்தமக்குஉரிமைசெய்யெனத்தரியாது
எம்பெருமான்! அருளென்ன *
‡ சந்தமல்குழலாளலக்கண் நூற்றுவர்தம்
பெண்டிருமெய்திநூலிழப்ப
இந்திரன்சிறுவன்தேர்முன்நின்றானைத்
திருவல்லிக்கேணிக்கண்டேனே. (௬)

பரதனும்தம்பிசத்துருக்கனனும்
இலக்குமனோடுமைதிலியும் *
இரவும்நன்பகலும்துதிசெய்யநின்ற
இராவணாந்தகனை எம்மானை *

† 'இன்துணை' என்பதும் பாடம். ‡ 'சந்தமர்' என்பதும் பாடம்.

குரவமேகமழும்குளிர்பொழிலூடு
குயிலொடுமயில்கள்நின்றால *
இரவியின்கதிர்கள் நுழைதலசெய்தறியாத்
திருவல்லிக்கேணிக்கண்டேனே. (எ)

பள்ளியிலோதிவந்ததனசிறுவன்
வாயிலஓராயிரநாமம் *
ஒள்ளியவாகிப்போதஆங்குஅதனுககு
ஒன்றுமோரபொறுப்பிலனாகி *
பிள்ளையைசசீறிவெகுண்டுதூண்புடைப்பப்
பிறையெயிற்றனல்விழிபேழ்வாய் *
தெள்ளியசிங்கமாகியதேவைத்
திருவல்லிக்கேணிக்கண்டேனே. (அ)

மீனமர்பொய்கைநாள்மலர்கொய்வான்
வேட்கையினோடுசென றிழிந்த *
கானமர்வேழம்கைஎடுத்தலறக்
கராஅதன்காலினைக்கதுவ *
ஆனையின்துயரம்தீரப்புள்ளூர்ந்து
சென்றுநின்றுஆழிதொட்டானை *
தேனமர்சோலைமாடமாமயிலைத்
திருவல்லிக்கேணிக்கண்டேனே. (௯)

மன்னுதண்பொழிலும்வாவியும்மதிளும்
மாடமாளிகையுமமண்டபமும் *
தென்னன்தொண்டையர்கோனசெய்தநல்மயிலைத்
திருவல்லிக்கேணிநின்றானை *
கன்னிநன்மாடமங்கையர்தலைவன்
காமருசீர்க்கலிகன்றி *
சொன்னசொல்மாலைபத்துடன்வல்லார்
சுகமினிதாள்வர்வானுலகே. (௧௦)

அடிவரவு:—வில் வேதத்தை வஞ்சனை இந்திரனுக்கு இன்துணை அந்தகன் பாதன் பள்ளியில் மீனமர் மன்னு அன்றாயர்.

**திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.**



## ச - ஆந் திருமொழி—அன்றுயர்.

### திருநீர்மலை.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (கல்யாணிராகம் - ஆதிதாளம்.)

அன்றுயர்குலக்கொடியோடு
அணிமாமலர்மங்கையொடுஅன்பளவி * அவுணர்க்கு
என்தானும்இரக்கமிலாதவனுக்கு
உறையுமிடமாவது * இரும்பொழில்சூழ்
நன்றுயபுனல்நறையூர்திருவாலிகுடந்தை
தடம்திகழ்கோவல்நகர் *
நின்றான் இருந்தான்கிடந்தான்நடந்தாற்குஇடம்
மாமலையாவதுநீர்மலையே (க)

காண்டாவனமென்பதுஓர்காடு
அமரர்க்கரையன்னதுகண்டவன்நிற்க * முனே
மூண்டாரழலுண்ணமுனிந்ததுவும் அதுவன்றியும்
முன்னுலகம்பொறைதீர்த்து
ஆண்டான் * அவுணனவன்மார்பகலம்
உகிரால்வகிராகமுனிந்து * அரியாய்
நீண்டான்குறளாகிநிமிர்ந்தவனுக்குஇடம்
மாமலையாவதுநீர்மலையே. (உ)

அலமன்னுமடல்சுரிசங்க † மெடுத்து
அடலாழியினல்அணியாருருவின் *
புலமன்னுவடம்புனைகொங்கையினுள்
பொறைதீரமுனுள்அடுவாளமரில் *
பலமன்னர்படச்சுடராழியினைப
பகலோன்மறையப்பணிகொண்டு * அணிசேர்
நிலமன்னனுமாய்உலகாண்டவனுக்குஇடம்
மாமலையாவதுநீர்மலையே. (௩)

தாங்காததொராளரியாய் அவுணன்தனை
வீடமுனிந்து, அவனுலமரும் *
பூங்கோதையர்பொங்கெரிமூழ்கவிளைத்து
அதுவன்றியும் வென்றிகொள்வாளமரில் *

---

† 'அடுத்து' என்பதும் பாடம்.

பாங்காகமுன்ஐவரொடுஅன்பளவிப்
பதிற்றைநதிரட்டிப்படைவேநதர்பட *
நீங்காச்செருவிலநிறைகாத்தவனுக்குஇடம்
மாமலையாவதுநீர்மலையே (ச)

மாலும்கடலாரமலைக்குவடிட்டுஅணைகட்டி
வரம்புருவ * மதிசோ
கோலமதிளாயஇலங்கைகெடப் படை
தொட்டுஒருகாலஅமரிலதிர *
காலமிதுவென்றுஅயன்வாளியினால்
கதிர்நீள்முடிபத்துமஅறுத்தமரும் *
$ நீலமுகிலவண்ணனெமக்கிறைவற்குஇடம்
மாமலையாவதுநீமலையே. (ரு)

பாராருலகுமபனிமாலவரையும்
கடலும்சுடரும்இவையுண்டும் * எனக்கு
ஆராதெனநின்றவன்எம்பெருமான்
அலைநீருலகுக்குஅரசாகிய * அப்
பேரானைமுனிநதமுனிக்கரையன்
பிறரில்லைநுனக்கெனும்எலலையினன் *
நீரார்பேரான்நெடுமாலவனுகக்குஇடம்
மாமலையாவதுநீர்மலையே. (சு)

புகராருருவாகிமுனிந்தவனைப்
புகழ்வீடமுனிநது, உயிருண்டு * அசுரன்
நகராயினபாழ்படநாமமெறிநது அதுவன்றியும்
வெ[illegible]றிகொள்வாளவுணன் *
பகராதவனுயிரநாமம் அடிப்
பணியாதவனை, பணியால்அமரில் *
நிகராயவன்நெஞ்சிடநதானவனுக்குஇடம்
மாமலையாவதுநீர்மலையே. (எ)

பிச்சச்சிறுபீலிபிடித்துஉலகில்
பிணந்தின்மடவாரவர்போல் * அங்ஙனே
அச்சமிலர்நாணிலராதன்மையால்
அவர்செய்கைவெறுத்துஅணிமாமலர்தூய் *

$ 'நீலமுகில்வண்ணரெமக்கிறைவர்க்கிடம்' என்றும்வழங்குவர்.

நச்சிநமனர் அடையாமைநமக்கருள்செய்யென
உள்குழைந்து, ஆர்வமொடு *
நிச்சம்நினைவார்க்கருள்செய்யுமவற்கு இடம்
மாமலையாவதுநீர்மலையே. (அ)

பேசுமளவன்றுஇதுவம்மின்நமர்!
பிறர்கேட்பதன்முன், பணிவார்வினைகள் *
நாசமதுசெய்திடுமாதன்மையால்
அதுவேநமதுஉய்விடம், நாள்மலர்மேல *
வாசமணிவண்டறைபைம்புறவில்
மனமைநதொடுநைந்துழல்வார * மதியில்
நீசரவாசென்றடையாதவனுக்குஇடம
மாமலையாவதுநீர்மலையே. (௯)

❀ நெடுமாலவன்மேவியநீர்மலைமேல்
நிலவும்புகழ்மங்கையர்கோன் * அமரில
கடமாகளியானைவல்லான் கலிய
ஞெலிசெய்தமிழ்மாலைவல்லார்க்கு * உடனே
விடுமால்வினைவேண்டிடில் மேலுலகும்
எளிதாயிடும், அன்றிஇலங்கொலிசேர் *
கொடுமாகடல்வையநம்ஆண்டு மதிக்
குடைமன்னவராய் அடிகூடுவரே (௧0)

அடிவரவு: —அன்றாயர் காண்டா அலம தாஙகாது மாலும பார் புகர் பிசசம் பேசும் நெடுமால் பாராயது.
*

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## ரு - ஆந் திருமொழி - பாராயது.



### திருக்கடல்மல்லை. (க)

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம் (கல்யாணிராகம்-ஆதிதாளம்.)

❀ பாராயதுஉண்டுமிழ்ந்தபவளத்தூணைப்
படுகடலிலமுதத்தைப்பரிவாய்கீண்ட
சீரானை * எம்மானைத்தொண்டர்தங்கள்
சிந்தையுள்ளே முளைத்தெழுந்ததீங்கரும்பினை *

போரானைக்கொம்பொசித்தபோரேற்றினைப்
புணர்மருதமிறநடந்தபொற்குன்றினை *
காரானையிடர்கடிந்தகற்பகத்தைக்
கண்டதுநான்கடல்மல்லைத்தலசயனத்தே. (க)

பூண்டவத்தம்பிறர்க்கடைந்துதொண்டுபட்டுப்
பொய்ந்நூலைமெய்ந்நூலென்றென்றுமோதி
மாண்டு * அவத்தம்போகாதேவம்மின் எந்தை
என்வணங்கப்படுவானை * கணங்களேத்தும்
† நீண்டவத்தைக்கருமுகிலைஎம்மான்தன்னை
நின்றவூர்நித்திலத்தை, தொத்தார்சோலை *
காண்டவத்தைக்கனலெரிவாய்ப்பெய்வித்தானைக்
கண்டதுநான்கடல்மல்லைத்தலசயனத்தே (உ)

உடம்புருவில்மூன்றொன்றாய்மூர்த்திவேறாய்
உலகுய்யநின்றானை * அன்றுபேய்ச்சி
விடம்பருகுவித்தகனைக் கன்றுமேய்த்து
விளையாடவல்லானை, வரைமீகானில் *
தடம்பருகுகருமுகிலைத்தஞ்சைக்கோயில்
தவநெறிக்குஓர்பெருநெறியை, வையம்காக்கும் *
கடும்பரிமேல்கற்கியைநான்கண்டுகொண்டேன்
கடிபொழில்சூழ்கடல்மல்லைத்தலசயனத்தே. (ங)

பேய்த்தாயைமுலையுண்டபிள்ளை தன்னைப்
பிணைமருப்பிற்கருங்களிற்றை, பிணைமான்நோக்கின் *
ஆய்த்தாயர்தயிர்வெண்ணெயமர்ந்தகோவை
அந்தணர்தம்அமுதத்தை, குரவைமுன்னே
கோத்தானை * குடமாடுகூத்தன்தன்னைக்
கோகுலங்கள்தளராமல்குன்றமேந்திக்
காத்தானை * எம்மானைக் கண்டுகொண்டேன்
கடிபொழில்சூழ்கடல்மல்லைத்தலசயனத்தே. (ச)

பாய்ந்தானைத்திரிசகடம்பாறிவீழப்
பாலகனாய் ஆலிலையில்பள்ளியின்ப
மேய்ந்தானை * இலங்கொளிசேர்மணிக்குன்றன்ன
ஈரிரண்டுமால்வரைத்தோளெம்மான்தன்னை *

† 'நீண்ட அத்தக்கருமுகிலை அம்மான்தன்னை' என்பதும் பாடம்.

தோய்ந்தானைநிலமகளைத்தாளனூ்திறமசென்று அப
பொய்யறைவாய்ப்புகப்பெய்தமல்லர்மங்கக்
காய்ந்தானை * எம்மானைக்கண்டுகொண்டேன்
கடிபொழில்சூழ்கடல்மல்லைத்தலசயனத்தே. (ரு)

கிடந்தானைத்தடங்கடலுள்பணங்கள்மேவிக்
கிளர்பொறியமறிதிரியஅதனின்பின்னே
படர்ந்தானை * படுமதத்தகளிற்றின்கொம்பு
பறித்தானைப் பாரிடத்தைஎயிறுகீற
இடந்தானை * வளைமருப்பின்ஏனமாகி,
இருநிலனும்பெருவிசும்பும்எய்தாவண்ணம்
கடந்தானை * எம்மானைக்கண்டுகொண்டேன்
கடிபொழில்சூழ்கடல்மல்லைத்தலசயனத்தே (சா)

பேணுதவலியரக்கர்மெலியஅன்று
பெருவரைத்தோளிறநெரித்து, அன்றுஅவுணர்கோனை *
பூணுகமபிளவெடுத்தபோர்வல்லோனைப்
பொருகடலுள்துயிலமர்ந்தபுள்ளூர்தியை *
ஊணாகப்பேய்முலைநஞ்சுஉண்டான்தன்னை
உள்ளுவாருள்ளத்தேஉறைகின்றானை *
காணுது திரிதருவேன்கண்டுகொண்டேன்
கடிபொழில்சூழ்கடல்மல்லைததலசயனத்தே. (எ)

பெண்ணாகிஇன்னமுதம்வஞ்சித்தானைப்
பிறையெயிற்றன்றடலரியாய்ப்பெருகினானை *
தண்ணார்ந்தவார்புனல்சூழ்மெய்யமென்னும்
தடவரைமேல்கிடந்தானை, பணங்கள்மேவி *
எண்ணானைஎண்ணிறநதபுகழினானை
இலங்கொளிசேர்அரவிந்தம்போன்றுநீண்ட
கண்ணானை * கண்ணாரக்கண்டுகொண்டேன்
கடிபொழில்சூழ்கடல்மல்லைத்தலசயனததே. (அ)

தொண்டாயார்தாம்பரவும்அடியினானைப்
படிகடந்ததாளாளற்குஆளாய்உய்தல்
விண்டானை * தென்னிலங்கையரக்கர்வேந்தை
விலக்குண்ணவலங்கைவாய்ச்சரங்களாண்டு *

பண்டாயவேதங்கள்நான்கும்ஐந்து
வேள்விகளும் கேள்வியோடுஅங்கமாறும்
கண்டானை * தொண்டனேன்கண்டுகொண்டேன்
கடிபொழில்சூழ்கடல்மல்லைத்தலசயனத்தே. (௯)

❀ படநாகத்தணைக்கிடந்துஅன்றுஅவுணர்கோனைப்
படவெகுண்டுமருதிடைபோய், பழனவேலி *
தடமார்ந்தகடல்மல்லைத்தலசயனத்துத்
தாமரைக்கண்துயிலமர்ந்த † தலைவன்தன்னை *
கடமாரும்கருங்களிறுவல்லான் வெல்போர்
கலிகன்றி ஒலிசெய்தஇன்பப்பாடல் *
திடமாகஇவையைந்துமைந்தும்வல்லார்
தீவினையைமுதலரியவல்லார்தாமே. (௧௦)

அடிவரவு:—பாராயது பூண்டு உடம்பு பேய் பாய்ந்தானை கிடந்தானை பேணாது பெண் தொண்டாயார் படம் நண்ணாத.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



௬ - ஆந் திருமொழி—நண்ணாத.



திருக்கடல்மல்லை. (உ)

தரவுகொச்சகக்கலிப்பா. (ஸஹாநாராகம் - ரூபகதாளம்.)

❀ நண்ணாத வாளவுணரிடைப்புக்கு * வானவரைப்
பெண்ணாகி அமுதூட்டும்பெருமானார் * மருவினிய
தண்ணார்ந்தகடல்மல்லைத் தலசயனத்துஉறைவாரை *
எண்ணாதேயிருப்பாரை இறைப்பொழுதும்எண்ணோமே. (௧)

பாவண்ணமடமங்கை பனிநன்மாமலர்க்கிழத்தி *
நீர்வண்ணன்மார்வத்தில் இருக்கையைமுன்நினைந்து, அவனூர் *
கார்வண்ணமுதுமுந்நீர்க் கடல்மல்லைத்தலசயனம் *
ஆரெண்ணுமநெஞ்சுடையார் அவர்எம்மைஆள்வாரே. (உ)

❀ ஏனத்தினுருவாகி நிலமங்கையெழில்கொண்டான் *
வானத்திலவர்முறையால மகிழ்ந்தேத்தி ‡ வலங்கொள்ள *
கானத்தின் கடல்மல்லைத்தலசயனத்துஉறைகின்ற *
ஞானத்தினொளியுருவை நினைவார்என்நாயகரே. (௩)

† 'தலைவர்தம்மை' எனவும் பாடமோதுவர்.
‡ 'வரங்கொள்ள' என்பதும் பாடம்.

விண்டாரைவென்று ஆவிவிலங்குண்ண * மெல்லியலார்
கொண்டாடுமல்லகலம் அழலேறவெஞ்சமத்துக்
கண்டாரை * கடல்மல்லைத் தலசயனத்துஉறைவாரை *
கொண்டாடும்நெஞ்சுடையார அவர் எங்கள்குலதெய்வமே. (ச)

பிச்சச்சிறுபீலிச் சமண்குண்டர்முதலாயோர் *
விச்சைக்கிறையெனனும அவ்விறையைப்பணியாதே *
கச்சிகிடந்தவனூர் கடல்மல்லைததலசயனம் *
நச்சித்தொழுவாரை நசசுஎன்தனநல்நெஞ்சே! (ரு)

புலங்கொள்நிதிக்குவையோடு புழைக்கைம்மாகளிற்றினமும் *
நலங்கொள்நவமணிக்குவையும் சுமந்துஎங்கும்நான்றொசிந்து *
கலங்களியங்கும்மல்லைக கடலமல்லைத்தலசயனம் *
வலங்கொள்மனத்தாரவரை வலங்கொள்என்மடநெஞ்சே! (சா)

பஞ்சிச்சிறுகூழையுருவாகி மருவாத
வஞ்சப்பெண்நஞ்சுண்ட அண்ணல், முன்நண்ணாத *
கஞ்சைககடந்தவனூர் கடலமல்லைததலசயனம் *
நெஞ்சில்தொழுவாரைத தொழுவாய்என் தூய்நெஞ்சே! (எ)

செழுநீர்மலர்க்கமலம் † திரையுந்துவன்பகட்டால் *
உழுநீர்வயலுழவருழப் பின்முன்பிழைத்தெழுந்த *
கழுநீர்கடிகமழும கடல்மல்லைத்தலசயனம *
தொழுநீர்மனத்தவரைத் தொழுவாய்என் தூய்நெஞ்சே! (அ)

பிணங்களிடுகாடதனுள் நடமாடுபிஞ்ஞகனோடு *
இணங்குதிருச்சக்கரதது எம்பெருமானார்க்குஇடம் * விசும்பில்
கணங்களியங்கும்மல்லைக் கடல்மல்லைத்தலசயனம *
வணங்கும்மனத்தாரவரை வணஙகுஎன் தன்மடநெஞ்சே! (கூ)

❋ கடிகமழும்நெடுமறுகில் கடல்மல்லைததலசயனத்து *
அடிகளடியேநினையும் அடியவர்கள்தம்அடியான் *
வடிகொள்நெடுவேல்வலவன் கலிகன்றியொலிவல்லார் *
முடிகொள்நெடுமன்னவர்தம் முதல்வர்முதலாவாரே. (௧0)

**அடிவரவு:—நண்ணாத பார் எனத்தின் விண்டாரை பிசசம் புலம் பஞ்சி செழுநீர் பிணங்கள் கடி திவளும்.**

**திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.**

---

† 'திரையுந்த' என்றும் பாடமுண்டு.

## எ -ஆந் திருமொழி—திவளும்.

### திருவிடவெந்தை.

[தலைவனைப் பிரிந்த தலைவியின் ஆற்றாமை கண்ட தாய் இரங்கும் பாசுரம்.]

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (ஸாவேரிராகம் - ஆதிதாளம்.)

திவளும்வெண்மதிபோல்திருமுகத்தரிவை
செழுங்கடலமுதினில்பிறந்த
அவளும் * நின்னாகத்திருப்பதும் அறிந்தும்
ஆகிலும்ஆசைவிடாளால் *
குவளையங்கண்ணிகொல்லியம்பாவை
சொல்லுநின் தாள்நயந்திருந்த
இவளை * உன்மனத்தால்என்நினைந்திருந்தாய் ?
இடவெந்தைஎந்தைபிரானே ! (க)

துளம்படுமுறுவல்தோழியர்க்கு அருளாள்
துணைமுலைசாந்துகொண்டு அணியாள் *
குளம்படுகுவளைக்கண்ணிணைஎழுதாள்
கோலநல்மலர்குழற்கு அணியாள் *
வளம்படுமுந்நீர்வையம்முன்னளந்த
மாலென்னும், மாலினமொழியாள் *
இளம்படியிவளுக்குஎன்நினைந்திருந்தாய் ?
இடவெந்தைஎந்தைபிரானே ! (உ)

சாந்தமும்பூணும்சந்தனக்குழம்பும்
தடமுலைக்கு அணியிலும்தழலாம் *
போந்தவெண்திங்கள்கதிர்சுடமெலியும்
பொருகடல்புலம்பிலும்புலம்பும் *
மாந்தளிர்மேனிவண்ணமும்பொன்னும்
வளைகளும்இறைநில்லா * எனதன்
ஏந்திழையிவளுக்குஎன்நினைந்திருந்தாய் ?
இடவெந்தைஎந்தைபிரானே ! (௩)

ஊழியின்பெரிதால்நாழிகையென்னும்
ஒண்சுடர்துயின்றதாலென்னும் *
ஆழியும்புலம்பும்அன்றிலும்உறங்கா
தென்றலும்தீயினிற்கொடிதாம் *

தோழியோ ! என்னும் துணைமுலை அரக்கும்
சொல்லுமின் என்செய்கேன் ? என்னும் *
ஏழையென் பொன்னுக்கு என் நினைந்திருந்தாய் ?
இடவெந்தை எந்தைபிரானே ! (ச)

ஓதிலும் உன்பேரன்றி மற்றோதாள்
உருகும் நின் திருவுரு நினைந்து *
காதன்மை பெரிதுகையறவுடையள்
கயல் நெடுங்கண் துயில் மறந்தாள் *
பேதையேன் பேதை பிள்ளைமை பெரிது
தெள்ளியள் வள்ளி நுண் மருங்குல் *
ஏதலர் முன்னா என் நினைந்திருந்தாய் ?
இடவெந்தை எந்தைபிரானே. (ரு)

தன்குடிக்கு ஏதும் தக்கவா நினையாள்
தடங்கடல் நுடங்கெயில் இலங்கை *
வன்குடி மடங்க வாளமர் தொலைத்த
வார்த்தை கேட்டு இன்புறும் மயங்கும் *
மின்கொடி மருங்குல் சுருங்க மேல் நெருங்கி
மென்முலை பொன் பயந்திருந்த *
என்கொடி இவளுக்கு என் நினைந்திருந்தாய் ?
இடவெந்தை எந்தைபிரானே ! (சா)

உளங்கனிந்திருக்கும் உன்னையே பிதற்றும்
உனக்கன்றி எனக்கு அன்பொன்றிலளால் *
வளங்கனி பொழில் சூழ் மாலிருஞ்சோலை
மாயனே ! என்று வாய்வெருவும் *
களங்கனி முறுவல் காரிகை பெரிது
கவலையோடு அவலம் சேர்ந்திருந்த *
இளங்கனி இவளுக்கு என் நினைந்திருந்தாய் ?
இடவெந்தை எந்தைபிரானே ! (எ)

அலங்கெழு தடக்கை ஆயன் வாயாம்பற்கு
அழியுமால் என்னுள்ளம் என்னும் *
புலங்கெழு பொருநீர்ப் புட்குழி பாடும்
போதுமோ நீர்மலைக்கு ? என்னும் *

குலங்கெழுகொல்லிகோமளவல்லி
கொடியிடைநெடுமழைக்கண்ணி *
இலங்கெழில்தோளிக்கென்நினைந்திருந்தாய் ?
இடவெந்தைஎந்தைபிரானே ! (அ)

பொன்குலாம்பயலைபூத்தனமென்தோள்
பொருகயற்கண் துயில்மறந்தாள் *
அன்பினால்உன்மேல்ஆதரம்பெரிது
† இவ்வணங்கினுக்குஉற்றநோய்அறியேன் *
மின்குலாமருங்குல்சுருங்கமேல்நெருங்கி
வீங்கியவனமுலையாளுக்கு *
என்கொலாம்? குறிப்பில்என்நினைந்திருந்தாய் ?
இடவெந்தைஎந்தைபிரானே ! (கூ)

அன்னமும்மீனும்ஆமையும்அரியும்
ஆயஎம்மாயனே ! அருளாய் *
என்னும்இன்தொண்டர்க்குஇன்னருள்புரியும்
இடவெந்தைஎந்தைபிரானை *
மன்னுமாமாடமங்கையர்தலைவன்
மானவேல்கலியன்வாயொலிகள் *
பன்னியபனுவல்பாடுவார் நாளும்
பழவினைபற்றறுப்பாரே. (கO)

அடிவரவு—திவளும் துளம் சாந்தம் ஊழியில் ஓதிலும் தன் உளம் அலம் பொன் அன்னம் திரிபுரம்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## அ - ஆம் திருமொழி—திரிபுரம்.



### திருவட்டபுயகரம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (தர்ப்பார்ராகம் - ரூபகதாளம்.)

திரிபுரம்மூன்றுஎரித்தானும்
மற்றைமலர்மிசைமேல்அயனும்வியப்ப *
முரிதிரைமாகடல்போல்முழங்கி
மூவுலகும்முறையால்வணங்க *

† 'என்னணங்கினுக்கு' என்றும் பாடம்.

எரியனகேசரவாளெயிற்றோடு
இரணியனுகம்இரண்டுகூறு *
அரியுருவாம்இவரார்கொல்? என்ன
அட்டபுயகரத்தேனென்றாரே. (க)

வெந்திறல்வீரரில்வீரரொப்பார்
வேதமுரைத்துஇமையோர்வணங்கும் *
செந்தமிழ்பாடுவார் தாம்வணங்கும்
தேவரிவர்கொல்? தெரிக்கமாட்டேன் *
வந்துகுறளுருவாய்நிமிர்ந்து
மாவலிவேள்வியில்மண்ணளந்த *
அந்தணர்போன்றுஇவரார்கொல்? என்ன
அட்டபுயகரத்தேனென்றாரே. (உ)

செம்பொனிலங்குவலங்கைவாளி
திண்சிலைதண்டொடுசங்கம்ஒள்வாள் *
உம்பரிருசுடராழியோடு
கேடகம்ஒண்மலர்பற்றிஎற்றே! *
வெம்புசினத்துஅடல்வேழம்வீழ
வெண்மருபபொன்றுபறித்து * இருண்ட
அம்புதம்போன்றுஇவரார்கொல்? என்ன
அட்டபுயகரத்தேனென்றாரே. (ங)

மஞ்சுயர்மாமணிகுன்றமேந்தி
மாமழைகாத்துஒருமாயவானை
அஞ்ச * அதன்மருப் † பன்றுவாங்கும்
ஆயர்கொல்? மாயம்அறியமாட்டேன் *
வெஞ்சுடராழியும்சங்குமேந்தி
வேதம்முன் ஓதுவாநீதிவானத்து *
அஞ்சுடர்போன்றுஇவரார்கொல்? என்ன
அட்டபுயகரத்தேனென்றாரே. (ச)

கலைகளும்வேதமும் நீதிநூலும்
கற்பமும்சொற்பொருள் தானும் * மற்றை
நிலைகளும்வானவர்க்கும்பிறர்க்கும்
நீர்மையினால்அருள்செய்து * நீண்ட

† 'ஒன்று' என்றும் பாடம்,

மலைகளும்மாமணியும் மலர்மேல்
மங்கையும்சங்கமும்தங்குகின்ற *
அலைகடல்போன்றுஇவரார்கொல்? என்ன
அட்டபுயகரத்தேனென்றாரே. (ரு)

எங்ஙனுமநாம்இவர்வண்ணம்எண்ணில்
ஏதும் அறிகிலம், ஏந்திழையார் *
சங்கும்மனமும்நிறைவும்எல்லாம
தம்மனவாகப்புகுந்து * தாமும்
பொங்குகருங்கடல்பூவைகாயா
போதவிழ்நீலமபுனைந்தமேகம் *
அங்ஙனம்போன்றுஇவரார்கொல்? என்ன
அட்டபுயகரத்தேனென்றாரே. (சா)

முழுசிவண்டாடியதண்டுழாயின்
மொய்ம்மலர்க்கண்ணியும் மேனியஞ்சாந்
திழுசியகோலம்இருந்தவாறும்
எங்ஙனம்சொல்லுகேன்? ஓவிநல்லார் *
எழுதியதாமரையன்னகண்ணும்
ஏந்தெழிலாகமும்தோளும்வாயும் *
அழகியதாம்இவரார்கொல்? என்ன
அட்டபுயகரத்தேனென்றாரே. (எ)

மேவிஎப்பாலும்விண்ணோர்வணங்க
வேதமுரைப்பர்முநீர்மடந்தை
தேவி * அப்பால்அதிர்சங்கம்இப்பால்
சக்கரம் மற்றிவர்வண்ணம்எண்ணில் *
காவியொப்பார்கடலேயுமொப்பார்
கண்ணும்வடிவும்நெடியராய் * என்
ஆவியொப்பார்இவரார்கொல்? என்ன
அட்டபுயகரத்தேனென்றாரே. (அ)

தஞ்சம்இவர்க்குஎன்வளையும்இல்லா
நெஞ்சமும்தம்மதேசிந்தித்தேற்கு *
வஞ்சிமருங்குல்நெருங்கநோக்கி
வாய்திறந்துஒன்றுபணித்ததுஉண்டு *

நஞ்சமுடைத்திவர்நோக்கும்நோக்கம்
நான்இவர்தம்மைஅறியமாட்டேன் *
அஞ்சுவன்மற்றிவரார்கொல்? என்ன
அட்டபுயகரத்தேனென்றாரே. (கூ)

✽ மன்னவன்தொண்டையர்கோன்வணங்கும்
நீள்முடிமாலைவயிரமேகன் *
தன்வலிதன்புகழ்சூழ்ந்தகச்சி
அட்டபுயகரத்துஆதிதன்னை *
கன்னிநன்மாமதிள்மங்கைவேந்தன்
காமருசீர்க்கலிகன்றி * குன்றா
இன்னிசையால்சொன்னசெஞ்சொல்மாலை
ஏத்தவல்லார்க்குஇடம்வைகுந்தமே. (கO)

அடிவரவு :—திரிபுரம் வெந்திறல் செம்பொன் மஞ்சு கலைகளும் எங்ஙனும் முழுசி மேவி தஞ்சம் மன்னவன் சொல்லு.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## க௦ - ஆந் திருமொழி—சொல்லு.



### திருப்பரமேச்சுரவிண்ணகரம்.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (யமுனாகல்யாணிராகம்-ரூபகதாளம்)

✽ சொல்லுவன்சொற்பொருள் தானவையாய்ச்
சுவைஊறொலிநாற்றமும்தோற்றமுமாய் *
நல்லரன் † நான்முகன்நாரணனுக்குஇடந்தான
தடம்சூழ்ந்தழகாயகச்சி *
பல்லவன்வில்லவனென்றுஉலகில்
பலராய்ப்பலவேந்தர்வணங்குகழல
பல்லவன் * மல்லையர்கோன்பணிந்த
பரமேச்சுரவிண்ணகரமதுவே. (க)

கார்மன்னுநீள்விசும்பும்கடலும்
சுடரும்நிலனும்மலையும் * தன்உந்தித்
தார்மன்னுதாமரைக்கண்ணனிடம்
தடமாமதிள்சூழ்ந்தழகாயகச்சி *

† 'நாரணன்நான்முகனுக்கு' என்றும் பாடம்.

தேர்மன்னுதென்னவனைமுனையில்செருவில்
திறல்வாட்டியதிண்சிலையோன் *
பார்மன்னுபல்லவர்கோன்பணிந்த
பரமேச்சுரவிண்ணகரமதுவே. (உ)

உரந்தருமெல்லணைப்பள்ளிகொண்டான்
ஒருகால்முன்னம்மாவுருவாய்க்கடலுள் *
வரந்தருமாமணிவண்ணனிடம்
மணிமாடங்கள்சூழ்ந்தழகாயகச்சி *
நிரந்தவர்மண்ணையில்புண்ணுகர்வேல்
நெடுவாயிலுகச்செருவில்முனநாள் *
பரந்தவன்பல்லவர்கோன்பணிந்த
பரமேச்சுரவிண்ணகரமதுவே. (ங)

அண்டமும்எண்திசையும்நிலனும்
அலைநீரொடுவானெரிகால்முதலா
உண்டவன் * எந்தைபிரானதுஇடம்
ஒளிமாடங்கள்சூழ்ந்தழகாயகச்சி *
விண்டவர்இண்டைக்குழாமுடனே
விரைந்தார்இரியச்செருவில்முனிந்து *
பண்டொருகால்வளைத்தான்பணிந்த
பரமேச்சுரவிண்ணகரமதுவே. (ச)

தூம்புடைத்திண்கைவன்தாள்களிற்றின்
துயர்தீர்த்து, அரவம்வெருவ * முனநாள்
பூம்புனல்பொய்கைபுக்கானவனுக்குஇடந்தான்
தடம்சூழ்ந்தழகாயகச்சி *
தேம்பொழில்குன்றெயில்தென்னவனைத்
§ திசைப்பச்செருமேல்வியந்துஅன்றுசென்ற *
பாம்புடைப்பல்லவர்கோன்பணிந்த
பரமேச்சுரவிண்ணகரமதுவே. (ரு)

திண்படைக்கோளரியின்உருவாய்த்
திறலோனகலம்செருவில்முனநாள் *
புண்படப்போழ்ந்தபிரானதுஇடம்
பொருமாடங்கள்சூழ்ந்தழகாயகச்சி *

§ 'திகைப்ப' எனவும் ஓதுவர்.

வெண்குடைநீழல்செங்கோல்நடப்ப
விடைவெல்கொடிவேற்படைமுன்உயர்த்த *
பண்புடைப்பல்லவர்கோன்பணிந்த
பரமேச்சுரவிண்ணகரமதுவே. (௬)

இலகியநீள்முடிமாவலிதன்பெருவேள்வியில்
மாணுருவாய், முனநாள் *
சலமொடுமாநிலங்கொண்டவனுக்குஇடந்தான்
தடம்சூழ்ந்துஅழகாயகச்சி *
உலகுடைமன்னவன்தென்னவனைக்
கன்னிமாமதிள்சூழ்கருவூர்வெருவ *
பலபடைசாயவென்றான்பணிந்த
பரமேச்சுரவிண்ணகரமதுவே. (௭)

குடைத்திறல்மன்னவனாய் ஒருகால்
குரங்கைப்படையா, * மலையால்கடலை
யடைத்தவன்எந்தைபிரானதுஇடம்
மணிமாடங்கள்சூழ்ந்துஅழகாயகச்சி *
விடைத்திறல்வில்லவன்நென்மெலியில்
வெருவச்செருவேல்வலங்கைப்பிடித்த *
படைத்திறல்பல்லவர்கோன்பணிந்த
பரமேச்சுரவிண்ணகரமதுவே. (௮)

பிறையுடைவாணுதல்பின்னைதிறத்து முன்னே
ஒருகால்செருவில்உருமின் *
மறையுடைமால்விடையேழடர்த்தாற்குஇடந்தான்
தடம்சூழ்ந்துஅழகாயகச்சி *
கறையுடைவாள்மறமன்னர்கெடக
கடல்போல்முழங்கும்குரல்கடுவாய் *
பறையுடைப்பல்லவர்கோன்பணிந்த
பரமேச்சுரவிண்ணகரமதுவே. (௯)

பார்மன்னுதொல்புகழ்ப்பல்லவர்கோன்பணிந்த
பரமேச்சுரவிண்ணகர்மேல் *
கார்மன்னுநீள்வயல்மங்கையர்தம்தலைவன்
கலிகன்றிகுன்றாதுஉரைத்த *

சீர்மன்னுசெந்தமிழ்மாலைவல்லார்
திருமாமகள்தன் அருளால் * உலகில்
தேர்மன்னராய்ஒலிமாகடல்சூழ்
செழுநீருலகாண்டுதிகழ்வர்களே. (௧0)

அடிவரவு:—சொல்லு கார் உரம் அண்டமும் தூம்பு திண் இலகிய குடை பிறை பார் மஞ்சாடு.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## ௧௦ - ஆந் திருமொழி—மஞ்சாடு.



### திருக்கோவலூர்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (ஆபோகம் - ஆதிதாளம்.)

❀ மஞ்சாடுவரையேழும்கடல்களேழும்
வானகமும்மண்ணகமும்மற்றும்எல்லாம் *
எஞ்சாமல்வயிற்றடக்கிஆலின்மேல் ஓரிளந்தளிரில்
கண்வளர்ந்தஈசன்தன்னை *
துஞ்சாநீர்வளம்சுரக்கும்பெண்ணைத்தென்பால்
தூயநான்மறையாளர்சோமுச்செய்ய *
செஞ்சாலிவிளைவயலுள்திகழ்ந்துதோன்றும்
திருக்கோவலூரதனுள்கண்டேன்நானே. (௧)

கொந்தலர்ந்தநறுந்துழாய்சாந்தம்தூபம்
தீபம்கொண்டுஅமரர்தொழப்பணங்கொள்பாம்பில் *
சந்தணிமென்முலைமலராள்தரணிமங்கை
தாமிருவர்அடிவருடும்தன்மையானை *
வந்தனைசெய்துஇசையேழ்ஆறங்கம் ஐந்து
வளர்வேள்விநான்மறைகள்மூன்றுதீயும் *
சிந்தனைசெய்துஇருபொழுதுமொன்றும் செல்வத்
திருக்கோவலூரதனுள்கண்டேன்நானே. (௨)

கொழுந்தலரும்மலர்ச்சோலைக்குழாங்கொள்பொய்கைக்
கோள்முதலைவாளெயிற்றுக்கொண்டற்குள்கி *
அழுந்தியமாகளிற்றினுக்குஅன்றுஆழியேந்தி
அந்தரம்மேலாத்தோன்றிஅருள்செய்தானை *

எழுந்தமலர்க்கருநீலம் இருந்தில்காட்ட
இரும்புன்னைமுத்தரும்பிச்செம்பொன்காட்ட *
செழுந்தடநீர்க்கமலம்தீவிகைபோல்காட்டும்
திருக்கோவலூரதனுள்கண்டேன்நானே. (௩)

தாங்கரும்போர்மாலிபடப்பறவையூர்ந்து
தராதலத்தோர்குறைமுடித்ததன்மையானை *
ஆங்குஅரும்பிக்கண்ணீர்சோர்ந்துஅன்புகூரும்
அடியவர்கட்குஆரமுதமானான்தன்னை *
கோங்கரும்புசுரபுன்னைகுரவார்சோலைக்
குழாவரிவண்டுஇசைபாடும்பாடல்கேட்டு *
தீங்கரும்புகண்வளரும்கழனிசூழ்ந்த
திருக்கோவலூரதனுள்கண்டேன்நானே. (௪)

கறைவளர்வேல்கரன்முதலாக்கவந்தன்வாலி
கணையொன்றினால்மடிய இலங்கைதன்னுள் *
பிறையெயிற்றுவாளரக்கர்சேனையெல்லாம்
பெருந்தகையோடுஉடன்துணித்தபெம்மான்தன்னை *
மறைவளரப்புகழ்வளரமாடந்தோறும்
மண்டபமொண்தொளியனைத்தும்வாரமோத *
சிறையணைந்தபொழிலணைந்ததென்றல்வீசும்
திருக்கோவலூரதனுள்கண்டேன்நானே (௫)

உறியார்ந்தநறுவெண்ணெய்ஒளியால்சென்று அங்கு
உண்டானைக்கண்டுஆய்ச்சிஉரலோடுஆர்க்க *
தறியார்ந்தகருங்களிறேபோலநின்று
தடங்கண்கள்பனிமல்கும்தன்மையானை *
வெறியார்ந்தமலர்மகள்நாமங்கையோடு
வியன்கலைஎண்தோளினாள்விளங்கு * செல்வச்
செறியார்ந்தமணிமாடம்திகழ்ந்துதோன்றும்
திருக்கோவலூரதனுள்கண்டேன்நானே. (௬)

இருங்கைம்மாகரிமுனிந்துபரியைக்கீறி
இனவிடைகளேழடர்த்துமருதம்சாய்த்து *
வரும்சகடம்இறவுதைத்துமல்லையட்டு
வஞ்சம்செய்கஞ்சனுக்குநஞ்சானானை *

கருங்கமுகுபசும்பாளைவெண்முத்தீன்று
காயெல்லாம்மரகதமாய்ப்பவளம்காட்ட *
செருந்திமிகமொட்டலர்த்தும்தேன்கொள்சோலைத்
திருக்கோவலூரதனுள்கண்டேன்நானே. (எ)

பாரேறுபெரும்பாரந்தீரப் பண்டு
பாரதத்துத்தூதியங்கி * பார்த்தன்செல்வத்
தேரேறுசாரதியாய்எதிர்ந்தார்சேனை
செருக்களத்துத்திறலழியச்செற்றான்தன்னை *
போரேறொன்றுடையானும்அளகைக்கோனும்
புரந்தரனும்நான்முகனும்பொருந்தும்ஊர்போல் *
சீரேறுமறையாளர்நிறைந்த செல்வத்
திருக்கோவலூரதனுள்கண்டேன்நானே. (அ)

தூவடிவின்பார்மகள்பூமங்கையோடு
சுடராழிசங்குஇருபால்பொலிந்துதோன்ற *
காவடிவின்கற்பகமேபோலநின்று
கலந்தவர்கட்குஅருள்புரியும்கருத்தினானை *
சேவடிகைதிருவாய்கண்சிவந்தஆடை
செம்பொன்செய்திருவுருவமானான்தன்னை *
தீவடிவின்சிவனயனேபோல்வார்மன்னு
திருக்கோவலூரதனுள்கண்டேன்நானே. (கூ)

வாரணம்கொள்இடர்கடிந்தமாலை நீல
மரதகத்தைமழைமுகிலேபோல்வான்தன்னை *
சீரணங்குமறையாளர்நிறைந்த செல்வத்
திருக்கோவலூரதனுள்கண்டேனென்று *
வாரணங்குமுலைமடவார்மங்கைவேந்தன்
வாள்கலியன்ஒலியைந்துமைந்தும்வல்லார் *
காரணங்களால்உலகம்கலந்துஅங்குஎத்தக்
கரந்துஎங்கும்பரந்தானைக்காண்பர்தாமே. (கO)

அடிவரவு:—மஞ்சாடு கொந்து கொழுந்து தாங்கு கறை உறி இருங்கை பார் தூவடிவின் வாரணம் இருந்தண்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## மூன்றும்பத்து.

## ஆந் திருமொழி—இருந்தண்மாநிலம்.

### திருவயிந்திரபுரம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (செஞ்சுருட்டி ராகம்-ஆதிதாளம்.)

ஸ்ரீ இருந்தண்மாநிலம்ஏனமதாய
வளைமருப்பினில் † அகத்தொடுக்கி *
கருந்தண்மாகடல்கண் துயின்றவனிடம்
கமலநன்மலர்த்தேறல்
அருந்தி * இன்னிசைமுரன்றெழும் அளிகுலம்பொதுளி
அம்பொழிலூடே *
செருந்திநாண்மலர்சென்றணைந்துஉழிதரு
திருவயிந்திரபுரமே. (க)

மின்னும்ஆழியங்கையவன்
செய்யவளுறைதருதிருமார்பன் *
பன்னுநால்மறைப்பல்பொருளாகிய
பரமனிடம், வரைச்சாரல் *
பின்னும்மாதவிப்பந்தலில்
பெடைவரப்பிணியவிழ்கமலத்து *
தென்னவென்றுவண்டு இன்னிசைமுரல்தரு
திருவயிந்திரபுரமே. (உ)

வையமேழும்உண்டு ஆலிலை
வைகியமாயவன் * அடியவர்க்கு
மெய்யனாகியதெய்வநாயகனிடம்
மெய்தகுவரைச்சாரல் *
மொய்கொள்மாதவிசெண்பகம்முயங்கிய
முல்லையங்கொடியாட *
செய்யதாமரைச்செழும்பணைதிகழ்தரு
திருவயிந்திரபுரமே. (ந)

† 'அகத்தடக்கி' என்பதும் பாடம்.

மாறுகொண்டுடன்றெதிர்ந்தவல்லவுணன்தன்
    மார்பகம்இருபிளவா *
கூறுகொண்டுஅவன்குலமகற்கு
    இன்னருள்கொடுத்தவனிடம் * மிடைந்து
சாறுகொண்டமென்கரும்பிளங்கழை
    தகைவிசும்புறமணிநீழல் *
சேறுகொண்டதண்பழனமதெழில்திகழ்
    திருவயிந்திரபுரமே. (௪)

ஆங்குமாவலிவேள்வியில்இரந்துசென்று
    அகலிடம்அளந்து * ஆயர்
பூங்கொடிக்குஇனவிடைபொருதவனிடம்
    பொன்மலர்திகழ் * வேங்கை
கோங்குசெண்பககக்கொம்பினில்
    குதிகொடுகுரக்கினம்இரைதம்தோடி *
தேன்கலந்ததண்பலங்கனிநுகர்தரு
    திருவயிந்திரபுரமே. (ரு)

கூனுலாவியமடந்தைதன்கொடுஞ்சொலின்திறத்து
    இளங்கொடியோடும் *
கானுலாவியகருமுகில்திருநிறத்தவனிடம்
    கவினாரும் *
வானுலாவியமதிதவழ்மாலவரை
    மாமதிள்புடைசூழ *
தேனுலாவியசெழும்பொழில்தழுவிய
    திருவயிந்திரபுரமே. (௬)

மின்னின்நுண்ணிடைமடக்கொடிகாரணம்
    விலங்கலின்மிசைஇலங்கை
மன்னன் * நீள்முடிபொடிசெய்தமைந்தனதிடம்,
    மணிவரைநீழல் *
அன்னமாமலரரவிந்தத்தமளியில்
    பெடையொடும்இனிதமர *
செந்நெலார்கவரிக்குலைவீசு தண்
    திருவயிந்திரபுரமே. (எ)

விரைகமழ்ந்தமென்கருங்குழல்காரணம்
வில்லிறுத்து, † அடல்மழைக்கு *
நிரைகலங்கிடவரைகுடையெடுத்தவன்
நிலவிய இடம், தடமார் *
வரைவளம்திகழ்மதகரிமருப்பொடு
மலைவளரகிலுந்தி *
திரைகொணர்ந்தணைசெழுநதிவயல்புகு
திருவயிந்திரபுரமே. (அ)

வேல்கொள்கைத்தலத்து அரசர்வெம்போரினில்
விசயனுக்காய், மணித்தேர் *
கோல்கொள்கைத்தலத்துஎந்தைபெம்மானிடம்
குலவுதண்வரைச்சாரல் *
காலகொள்கண்கொடிக்கையெழுக
கமுகிளம்பாளைகள்கமழ்சாரல் *
சேல்கள்பாய்தருசெழுநதிவயல்புகு
திருவயிந்திரபுரமே. (௯)

❀ மூவராகியஒருவனை
மூவுலகுண்டுஉமிழ்ந்து அளந்தானை *
தேவர்தானவர்சென்றுசென்றிறைஞ்சத்
தண் திருவயிந்திரபுரத்து *
மேவுசோதியை வேல்வலவன
கலிகன்றிவிரித்துரைத்த *
பாவுதண்தமிழ்பத்திவைபாடிடப்
பாவங்கள்பயிலாவே. (௧௦)

அடிவரவு:—இருந்தண மின்னும் வையம் மாறு ஆங்கு கூன் மின்னின் விரை வேல் மூவர் ஊன்

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



† 'அடர்மழைக்கு' என்பதும் பாடம்.

## உ - ஆந் திருமொழி—ஊன்வாட.

### திருச்சித்திரகூடம். (க)

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (சங்கராபரணராகம் - அடதாளம்.)

ஊன்வாடஉண்ணாதுஉயிர்காவலிட்டு
உடலில்பிரியாபபுலனைந்தும்நொந்து *
தாம்வாடவாடத்தவம்செய்யவேண்டா
தமதாஇமையோருலகாளகிற்பீர் ! *
கானாடமஞ்ஞைக்கணமாட மாடே
கயலாடுகானீர்ப்பழனம்புடைபோய் *
தேனாடமாடக்கொடியாடு தில்லைத்
திருச்சித்ரகூடம்சென்றுசேர்மின்களே. (க)

காயோடுநீடுகனியுண்டு, வீசு
கடுங்கால்நுகர்ந்து, நெடுங்காலம் * ஐந்து
தீயோடுநின்றுதவம்செய்யவேண்டா
திருமார்பனைச்சிந்தையுள்வைத்துமென்பீர் ! *
வாயோதுவேதம்மலிகின்றதொல்சீர்
மறையாளர்நாளும்முறையால்வளர்த்த *
தீயோங்கவோங்கப்புகழோங்கு தில்லைத்
திருச்சித்ரகூடம்சென்றுசேர்மின்களே. (உ)

வெம்பும்சினத்துப்புனக்கேழலொன்றாய்
விரிநீர்முதுவெள்ளம்உள்புக்கழுந்த *
வம்புண்பொழில்சூழுலகன்றெடுத்தான்
அடிப்போது அணைவான்விருப்போடுஇருப்பீர் ! *
பைம்பொன்னும்முத்தும்மணியும்கொணர்ந்து
படைமன்னவன்பல்லவர்கோன்பணிந்த *
செம்பொன்மணிமாடங்கள்சூழ்ந்த தில்லைத்
திருச்சித்ரகூடம்சென்றுசேர்மின்களே. (ங)

அருமாநிலம்அன்றுஅளபபான்குறளாய்
அவுணன்பெருவேள்வியில்சென்றிரந்த *
பெருமான்திருநாமம்பிதற்றி நுந்தம்
பிறவித்துயர்நீங்குதுமென்னகிற்பீர் ! *

கருமாகடலுள்கிடந்தான் உவந்து
　　கவைநா அரவினணைப்பள்ளியின்மேல் *
திருமால்திருமங்கையொடாடு தில்லைத்
　　திருச்சித்ரகூடம்சென்றுசேர்மின்களே. (ச)

கோமங்கவங்கக்கடல்வையம்உய்யக
　　குலமன்னரங்கம்மழுவில்துணிய *
தாம்அங்குஅமருள்படைதொட்ட வென்றித்
　　தவமாமுனியைத்தமக்காக்ககிற்பீர்! *
பூமங்கைதங்கிப்புலமங்கைமன்னிப்
　　புகழ்மங்கைஎங்கும்திகழ * புகழ்சேர்
சேமங்கொள்பைம்பூம்பொழில்சூழ்ந்த தில்லைத்
　　திருச்சித்ரகூடம்சென்றுசேர்மின்களே. (ரு)

நெய்வாயழலம்புதுரந்து முந்நீர்
　　துணியப்பணிகொண்டுஅணியார்ந்து * இலங்கு
மையார்மணிவண்ணனைஎண்ணி நுந்தம்
　　மனத்தேஇருத்தும்படிவாழவல்லீர்! *
அவ்வாய்இளமங்கையர்பேசவும்தான்
　　அருமாமறையந்தணர்சிந்தைபுக *
செவ்வாய்க்கிளிநான்மறைபாடு தில்லைத்
　　திருச்சித்ரகூடம்சென்றுசேர்மின்களே. (சு)

மௌவல்குழலாய்ச்சிமென்தோள்நயந்து
　　மகரம்சுழலச்சுழல்நீர்பயந்த *
தெய்வத்திருமாமலர்மங்கைதங்கு
　　திருமார்பனைச்சிந்தையுள்வைத்துமென்பீர்! *
கௌவைக்களிற்றின்மருப்பும் பொருப்பில்
　　கமழ்சந்தும்உந்திநிவாவலங்கொள் *
தெய்வப்புனல்சூழ்ந்து அழகாய தில்லைத்
　　திருச்சித்ரகூடம்சென்றுசேர்மின்களே. (எ)

மாவாயினங்கம்மதியாதுகீறி
　　மழைமாமுதுகுன்றெடுத்து * ஆயர்தங்கள்
கோவாய்நிரைமேய்த்துஉலகுண்டமாயன்
　　குரைமாகழல்கூடும்குறிப்புடையீர்! *

மூவாயிரம்நான்மறையாளர் நாளும்
முறையால்வணங்க, அணங்காயசோதி *
தேவாதிதேவன்திகழ்கின்ற தில்லைத்
திருச்சித்ரகூடம்சென்றுசேர்மின்களே. (அ)

செருநீலவேல்கண்மடவார்திறத்துச்
சினத்தோடுநின்றுமனத்தால்வளர்க்கும் *
அருநீலபாவம்அகலப் புகழ்சேர்
அமரர்க்கும்எய்தாதஅண்டத்துஇருப்பீர்! *
பெருநீர்நிவாஉந்திமுத்தம்கொணர்ந்து
எங்கும்வித்தும்வயலுள்கயல்பாய்ந்துஉகள *
திருநீலம்நின்றுதிகழ்கின்ற தில்லைத்
திருச்சித்ரகூடம்சென்றுசேர்மின்களே. (கூ)

❀ சீரார்பொழில்சூழ்ந்துஅழகாய தில்லைத்
திருச்சித்ரகூடத்துஉறைசெங்கண்மாலுக்கு *
ஆராதஉள்ளத்தவர்கேட்டுஉவப்ப
அலைநீருலகுக்குஅருளேபுரியும் *
காரார்புயற்கைக்கலிகன்றி குன்றாவொலிமாலை
ஒரொன்பதோடுஒன் றும்வல்லார் *
பாராருலகம்அளந்தானடிக்கீழ்ப்
பலகாலம்நிற்கும்படிவாழ்வர்தாமே. (க௦)

அடிவரவு—ஊன் காயோடு வெம்பும் அருமா கோமங்க நெய் மௌவல் மாவாயின் செரு சீரார் வாட.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## ங - ஆந் திருமொழி—வாடமருதிடை.



### திருச்சித்திரகூடம். (உ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (மோகநாகம்,- ஆதிதாளம்.)

❀ வாடமருதிடைபோகி மல்லரைக்கொன்றொக்கலித்திட்டு *
ஆடல்நன்மாவுடைத்து ஆயராநிரைக்குஅன்றுஇடர்தீர்ப்பான் *
கூடியமாமழைகாத்த கூத்தனெனவருகின்றான் *
சேடியர்பூம்பொழில்தில்லைச் சித்திரகூடத்துள்ளானே. (க)

பேய்மகள்கொங்கைநஞ்சுண்ட பிள்ளைபரிசு இதுவென்றால் *
மாநிலமாமகள் மாதர்கேள்வன் இவனென்றும் * வண்டுண்
பூமகள்நாயகனென்றும் † புலங்கெழுகோவியர்பாடி *
தேமலர்தூவவருவான் சித்திரகூடத்துள்ளானே. (௨)

பண்டுஇவன்வெண்ணெயுண்டானென்று ஆய்ச்சியர்கூடி ‡ இழிப்ப *
எண்திசையோரும்வணங்க இணைமருதூடுநடந்திட்டு *
அண்டரும்வானத்தவரும் ஆயிரநாமங்களோடு *
திண்திறல்பாடவருவான் சித்திரகூடத்துள்ளானே. (௩)

வளைக்கைநெடுங்கண்மடவார் ஆய்ச்சியர்அஞ்சிஅழைப்ப *
தளைத்தவிழ்தாமரைப்பொய்கைத் தண்தடம்புக்குஅண்டர்காண *
முளைத்தஎயிறழல்நாகத்து உச்சியில்நின்றுஅதுவாட *
திளைத்தமர்செய்துவருவான் சித்திரகூடத்துள்ளானே. (௪)

பருவக்கருமுகிலொத்து முத்துடைமாகடலொத்து *
அருவித்திரள்திகழ்கின்ற ஆயிரம்பொன்மலையொத்து *
உருவக்கருங்குழலாய்ச்சிதிறத்து இனமால்விடைசெற்று *
தெருவில்திளைத்துவருவான் சித்திரகூடத்துள்ளானே. (௫)

※ எய்யச்சிதைந்ததுஇலங்கைமலங்க வருமழைகாப்பான் *
உய்யப்பருவரைதாங்கி ஆநிரைகாத்தானென்றுஏத்தி *
$ வையத் § தெவரும்வணங்க அணங்கெழுமாமலைபோலே *
தெய்வப்புள்ஏறிவருவான் சித்திரகூடத்துள்ளானே. (௬)

ஆவர்இவைசெய்தறிவார்? அஞ்சனமாமலைபோலே *
மேவுசினத்துஅடல்வேழம் வீழமுனிந்து * அழகாய
காவியலர்நெடுங்கண்ணார் கைதொழவீதிவருவான் *
தேவர்வணங்குதண்தில்லைச் சித்திரகூடத்துள்ளானே. (௭)

பொங்கிஅமரிலொருகால் பொன்பெயரோனைவெருவ *
அங்குஅவனாகம்அளைந்திட்டு ஆயிரந்தோள்எழுந்தாட *
பைங்கணிரண்டெரிகான்ற நீண்டஎயிற்றொடுபேழ்வாய் *
சிங்கவுருவின்வருவான் சித்திரகூடத்துள்ளானே (௮)

கருமுகில்போல்வதோர்மேனி கையனஆழியும்சங்கும் *
பெருவிறல்வானவர்சூழ ஏழுலகும்தொழுதேத்த *
ஒருமகள்ஆயர்மடந்தை ஒருத்திநிலமகள் * மற்றைத்
திருமகளோடும்வருவான் சித்திரகூடத்துள்ளானே. (௯)

---

† 'பொலன்கெழு' என்றும்பாடம். ‡ 'அழைப்ப' என்றுசிலர். $ 'வையத் தவரும்' என்பதும்சிலர்பாடம். § 'தேவரும்' என்பது அரும்பதத்துக்குப்பாடம்

தேனமர்பூம்பொழில் தில்லைச்சித்திரகூடம்அமர்ந்த *
வானவர்தங்கள்பிரானை மங்கையர்கோன் † மருவார் *
ஊனமர்வேல்கலிகன்றி ஒண்தமிழ்ஒன்பதோடொன்றும் *
தானிவைகற்றுவல்லார்மேல் ‡ சாராதீவினைதானே. (கo)

அடிவரவு:—வாட பேய் பண்டு வளை பருவம் எய்ய ஆவர் பொங்கி கருமுகில்
தேனமர் ஒருகுறள்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## ச - ஆந் திருமொழி—ஒருகுறளாய்.



### திருக்காழிச்சீராமவிண்ணகரம்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (பியாகடைராகம் - நப்கதாளம்.)

ஒருகுறளாய்இருநிலம்மூவடிமண்வேண்டி
உலகனைத்தும்ஈரடியாலொடுக்கி * ஒன்றும்
தருகவெனுமாவலியைச்சிறையில்வைத்த
தாடாளன்தாளணைவீர் ! * தக்ககீர்த்தி
அருமறையின்திரள்நான்கும்வேள்வியைந்தும்
அங்கங்களவையாறும்இசைகளேழும் *
தெருவில்மலிவிழாவளமும்சிறக்கும் காழிச
சீராமவிண்ணகரேசேர்மினீரே. (க)

நான்முகன்நாள் § மிகைத்தருக்கைஇருக்குவாய்மை
நலமிகுசீர்உரோமசனால் ‖ நவிற்றி * நக்கன்
ஊன்முகமார்தலையோட்டூண்ஒழித்தஎந்தை
ஒளிமலர்சசேவடியணைவீர் ! * உழுசேயோடச்
சூல்முகமார்வளையளைவாய்உகுத்தமுத்தைத
தொல்குருகுசினையென்னச்சூழ்ந்தியங்க * எங்கும்
தேன்முகமார்கமலவயல்சேல்பாய் காழிச்
சீராமவிண்ணகரேசேர்மினீரே. (உ)

வையணைந்தநுதிக்கோட்டுவராகமொன்றாய்
மண்ணெல்லாம்இடந்தெடுத்துமதங்கள்செய்து *
நெய்யணைந்ததிகிரியினால்வாணன் திண்தோள்
நேர்ந்தவன்தாளணைகிற்பீர் ! * நெய்தலோடு

† 'மருவார்தம்' என்றும் வழங்குவர். ‡ 'சாரகில்லாவினைதாமே' என்று சில ஸ்ரீகோசங்கள். § 'மிகத்தருக்கை'என்றுசிலர். ‖'நவிற்று'எனவும் ஓதுவர்.

மையணைந்தகுவளைகள்தம்கண்களென்றும்
மலர்க்குமுதம்வாயென்றும்கடைசியார்கள் *
செய்யணைந்துகளைகளையாதேறும் காழிச்
சீராமவிண்ணகரேசேர்மினீரே. (௩)

பஞ்சியமெல்லடிப்பின்னைதிறத்து முன்னாள்
பாய்விடைகளேழடர்த்து, பொன்னன்பைம்பூண் *
நெஞ்சிடந்துகுருதியுகவுகிர்வேலாண்ட
நின்மலன்தாளணைகிற்பீர் ! * நீலமாலை
தஞ்சுடையஇருளதழைப்பத் தரளம்ஆங்கே
தண்மதியின்நிலாக்காட்ட, பவளந்தன்னால்
செஞ்சுடர்வெயில்விரிக்கும்அழகார் காழிச்
சீராமவிண்ணகரேசேர்மினீரே. (௪)

தெவ்வாயமறமன்னர்குருதிகொண்டு
திருக்குலத்தில்இறந்தோர்க்குத்திருத்திசெய்து*
வெவ்வாயமாகீண்டுவேழம்அட்ட
விண்ணவர்கோன்தாளணைவீர் ! * விகிர்தமாதர்
அவ்வாயவாள்நெடுங்கண்குவளைகாட்ட
அரவிந்தம்முகம்காட்ட, அருகேஆம்பல் *
செவ்வாயின்திரள்காட்டும்வயல்சூழ் காழிச்
சீராமவிண்ணகரேசேர்மினீரே. (௫)

பைங்கண்விறல்செம்முகத்துவாலிமாளப்
படர்வனத்துக்கவந்தனொடும், படையார்திண்கை *
வெங்கண்விறல்விராதனுகவிற்குனித்த
விண்ணவர்கோன்தாளணைவீர்! * வெற்புப்போலும்
துங்கமுகமாளிகைமேல்ஆயங்கூறும்
துடியிடையார்முகக்கமலச்சோதிதன்னால் *
திங்கள்முகம்பணிபடைக்கும்அழகார் காழிச்
சீராமவிண்ணகரேசேர்மினீரே. (௬)

பொருவில்வலம்புரியரக்கன்முடிகள்பத்தும்
புற்றுமறிந்தனபோலப்புவிமேல்சிந்த *
செருவில்வலம்புரிசிலைக்கைமலைத்தோள்வேந்தன்
திருவடிசேர்ந்துஉய்கிற்பீர்! * † திரைநீர்த்தெள்கி

† 'திரைநீத்தெள்கி' என்றும் பாடம் உண்டு.

மருவிவலம்புரிகைதைக்கழியூடாடி
வயல்நண்ணிமழைதருநீர்தவழ்கால்மன்னி *
தெருவில்வலம்புரிதரளமீனும் காழிச்
சீராமவிண்ணகரேசேர்மினீரே. (எ)

பட்டரவேரகலல்குல்பவளச்செவ்வாய்
பணைநெடுந்தோள்பிணைநெடுங்கண்பாலாம்இன்சொல் *
மட்டவிழுங்குழலிக்காவானோர்காவில
மரங்கொணர்ந்தானடியணைவீர்! * அணில்கள்தாவ
நெட்டிலையகருங்கமுகின்செங்காய்வீழ
நீள்பலவின்தாழ்சினையில்நெருங்கு * பீனத்
தெட்டபழம்சிதைந்துமதுச்சொரியும் காழிச்
சீராமவிண்ணகரேசேர்மினீரே. (அ)

பிறைதங்குசடையானைவலத்தேவைத்துப்
பிரமனைத்தன்உந்தியிலேதோற்றுவித்து *
கறைதங்குவேலதடங்கண்திருவை மார்பில்
கலந்தவன்தாளணைகிற்பீர்! * கழுநீர்கூடித்
துறைதங்குகமலத்துததுயின்று கைதைத்
தோடாரும்பொதிசோற்றுச்சுண்ணம்நண்ணி *
சிறைவண்டுகளிபாடும்வயல்சூழ் காழிச்
சீராமவிண்ணகரேசேர்மினீரே (கூ)

❀ செங்கமலத்தயனனையமறையோர் காழிச்
சீராம † விண்ணகர்என்செங்கண்மாலை *
அங்கமலத்தடவயல்சூழ்ஆலிநாடன்
அருள்மாரிஅரட்டமுக்கிஅடையார்சீயம் *
கொங்குமலர்க்குழலியர்வேள்மங்கைவேந்தன்
கொற்றவேற்பரகாலன்கலியன்சொன்ன *
சங்கமுகத்தமிழ்மாலைபத்தும்வல்லார்
தடங்கடல்சூழுலகுக்குத்தலைவர்தாமே. (கய)

அடிவரவு:—ஒருகுறள் நான்முகன் வை பஞ்சிய தெவ்வாய பைங்கண் பொருவில் பட்டு பிறை செங்கமலத்து வந்து.

**திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.**



† 'விண்ணகரின்' என்பதும் பாடம்.

# ரு - ஆந் திருமொழி—வந்துனது

## திருவாலி. (க)

ஆசிரியத்துறை. (ஸாவேரிராகம் - ஆதிதாளம்.)

ஸ்ரீ வந்துஉனதடியேன்மனம்புகுந்தாய் புகுந்ததற்பின்வணங்கும் * என்
சிந்தனைக்குஇனியாய் ! திருவே ! என்னாருயிரே ! *
அந்தளிரணியார் அசோகின்இளந்தளிர்கள்கலந்து * அவையெங்கும்
செந்தழல்புரையும் திருவாலியம்மானே ! (க)

நீலத்தடவரை மாமணிநிகழக்கிடந்ததுபோல் * அரவணை
வேலைத்தலைக்கிடந்தாய் ! அடியேன்மனத்துஇருந்தாய் * [எங்கும்
சோலைத்தலைக்கணமாமயில் நடமாட மழைமுகில்போன்றெழுந்து *
ஆலைப்புகைகமழும் அணியாலியம்மானே ! (உ)

சென்னல்போய்வருமென்றென்று எண்ணியிராமை என்மனத்தேபுகுந்தது*
† இம்மைக்கென்றுஇருந்தேன் எறிநீர்வளஞ்செறுவில் *
செந்நெற்கூழைவரம்பொரீஇ அரிவாரமுகத்து ‡ தெழுவாளைபோய் * கரும்பு
அந்நற்காடுஅணையும் அணியாலியம்மானே ! (ங)

மின்னின்மன்னுநுடங்கிடை மடவார்தம்சிந்தைமறந்துவந்து * நின்
மன்னுசேவடிக்கே மறவாமைவைத்தாயால் *
புன்னைமன்னுசெருந்தி வண்பொழில்வாய் அகன்பணைகள்கலந்து * எங்கும்
அன்னம்மன்னும்வயல் அணியாலியம்மானே ! (ச)

நீடுபல்மலர்மாலையிட்டு நின்னிணையடிதொழுதேத்தும் * என்மனம்
வாடநீநினையேல் மரமெய்தமாமுனிவா ! *
பாடலின்ஒலிசங்கின்ஓசைபரந்து பலபணையால்மலிந்து * எங்கும்
ஆடலோசையறா அணியாலியம்மானே ! (ரு)

கந்தமாமலரெட்டும்இட்டு நின்காமர்சேவடிகைதொழுதெழும் *
புந்தியேன்மனத்தே புகுந்தாயைப்போகலொட்டேன் *
சந்திவேள்விசடங்குநான்மறை ஓதிஓதுவித்துஆதியாய்வரும் *
அந்தணாளரறா அணியாலியம்மானே ! (சா)

உலவுதிரைக்கடல்பள்ளிகொண்டுவந்து உன்னடியேன்மனம்புகுந்த *
புலவ ! புண்ணியனே ! புகுந்தாயைப்போகலொட்டேன் * [அப்
நிலவுமலர்பபுன்னைநாழல்நீழல் தண்தாமரைமலரின்மிசை * மலி
அலவன்கண்படுக்கும் அணியாலியம்மானே ! (எ)

† 'இன்மைக்கு' என்பதும்பாடம் ‡ 'எழ' என்பதும் பாடம்.

சங்குதங்குதடங்கடல் கடல்மல்லையுள்கிடந்தாய் ! * அருள்புரிந்து
இங்குஎன்னுள்புகுந்தாய் ! இனிப்போயினால்அறையோ! *
கொங்குசெண்பகமல்லிகைமலர்புல்கி இன்னிளவண்டுபோய் * இளந்
தெங்கின்தாதளையும் திருவாலியம்மானே ! (அ)

ஓதியாயிரநாமமும்பணிந்தேத்தி நின்அடைந்தேற்கு * ஒருபொருள்
வேதியா ! அரையா ! உரையாய்ஒருமாற்றம், எந்தாய் *
நீதியாகியவேதமாமுனியாளர் தோற்றமுரைத்து * மற்றவர்க்கு
ஆதியாயிருந்தாய் ! அணியாலியம்மானே ! (கூ)

புல்லிவண்டறையும்பொழில்புடைசூழ் தென்னாலியிருந்தமாயனை *
கல்லின்மன்னுதிண்தோள் கலியன் ஒலிசெய்த *
நல்லஇன்னிசைமாலை நாலுமோரைந்துமொன்றும்நவின்று * தாம்உடன்
வல்லராயுரைப்பார்க்கு இடமாகும்வானுலகே (கo)

அடிவரவு—வந்து நீல நென்னல் மின்னின் நீடு கந்தம் உலவு சங்கு ஓதி புல்லி தூவிரிய.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## சு - ஆந் திருமொழி—தூவிரிய.



திருவாலி. (உ)

[தலைவனைப் பிரிந்த தலைவி இரங்கிக்கூறிய பாசுரம்.]

தரவுகொச்சகக்கலிப்பா. (நாதநாமக்கிரியைராகம் - ருபகதாளம்.)

தூவிரியமலருழக்கித் துணையோடும்பிரியாதே *
பூவிரியமதுநுகரும் பொறிவரியசிறுவண்டே ! *
தீவிரியமறைவளர்க்கும் புகழாளர்திருவாலி *
ஏவரிவெஞ்சிலையானுக்கு என்நிலைமையுரையாயே (க)

பிணியவிழுங்நறுநீல மலர்கிழியப்பெடையோடும் *
அணிமலர்மேல்மதுநுகரும் அறுகாலசிறுவண்டே ! *
மணிகெழுநீர்மருங்கலரும் வயலாலிமணவாளன் *
பணியறியேன், நீசென்று என்பயலைநோயுரையாயே. (உ)

நீர்வானம்மண்எரிகாலாய் நின்றநெடுமால் * தன
தாராயநறுந்துளவம் பெருந்தகையேற்கு அருளானே !
சீராரும்வளர்பொழில்சூழ் திருவாலிவயல்வாழும் *
கூர்வாயசிறுகுருகே ! குறிப்பறிந்துகூறாயே. (ஙு)

தானாகநினையானேல் தன்நினைந்துநைவேற்கு * ஓர்
மீனாயகொடிநெடுவேள் வலிசெய்யமெலிவேனோ? *
தேனாவாயவரிவண்டே! திருவாலிநகராளும் *
ஆனாயற்கென்னுறுநோய் அறியச்சென்றுரையாயே. (௪)

வாளாயகண்பனிப்ப மென்முலைகள்பொன் அரும்ப *
நாள்நாளும்நின்நினைந்து நைவேற்கு * ஓ! மண்ணளந்த
தாளாளா! தண்குடந்தைநகராளா! வரையெடுத்த
தோளாளா! * என்தனக்கு ஓர்துணையாளனாகாயே! (௫)

தாராயதண்துளவ வண்டுஉழுதவரைமார்பன் *
போரானைக்கொம்பொசித்த புட்பாகனென்னம்மான் *
தேராருமநெடுவீதித் திருவாலிநகராளும *
காராயன், என்னுடைய கனவளையும்கவர்வானோ! (௬)

கொண்டுஅரவத்திரையுலவு குரைகடல்மேல் குலவரைபோல் *
பண்டுஅரவினணைக்கிடந்து பாரளந்தபண்பாளா! *
வண்டுஅமரும்வளர்பொழில்சூழ் வயலாலிமைந்தா! * என்
கண்துயில்நீகொண்டாய்க்கு என்கனவளையும்கடவேனோ! (௭)

குயிலாலும்வளர்பொழில்சூழ் தண்குடந்தைக்குடமாடீ! *
துயிலாதகண்ணிணையேன் நின்நினைந்துதுயர்வேனோ! *
முயலாலுமஇளமதிக்கே வளையிழந்தேற்கு * இதுநடுவே
வயலாலிமணவாளா! கொள்வாயோமணிநிறமே! (௮)

நிலையாளா! நின்வணங்க வேண்டாயேயாகிலும் * என்
முலையாளஒருநாள் உன அகலத்தாலாளாயே? *
சிலையாளா! மரமெய்ததிறலாளா! திருமெய்ய
மலையாளா! * நீயாள வளையாளமாட்டோமே. (௯)

மையிலங்குகருங்குவளை மருங்கலரும்வயலாலி *
நெய்யிலங்குசுடராழிப் படையானைநெடுமாலை *
கையிலங்குவேல்கலியன் கண்டுரைத்ததமிழ்மாலை *
ஐயிரண்டும்இவைவல்லார்க்கு அருவினைகள்அடையாவே. (௰)

அடிவரவு:—தூவிரிய பிணி நீர் தான் வாள் தாராய கொண்டு குயில் நிலையாளா மையிலங்கு கள்வன்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## ௭ - ஆந் திருமொழி—கள்வன்கொல்.

திருவாலி. (௩)

[உடன்போக்கிற் சென்ற நலமகளைக்குறித்துத் தாய் இரங்கிக்கூறிய பாசுரம்.]

கலிநிலைத்துறை (த்வஜாவந்திராகம் - ஆதிதாளம்.)

கள்வன்கொல்? யான் அறியேன் கரியானொருகாளை வந்து *
வள்ளிமருங்குல் என்தன்மடமானினைப்போதவென்று *
வெள்ளிவளைக்கைபற்றப் பெற்ற † தாயரைவிட்டகன்று *
அள்ளலம்பூங்கழனி அணியாலிபுகுவர்கொலோ? (௧)

பண்டுஇவன்ஆயன்நங்காய்! படிறன்புகுந்து * என்மகள்தன்
தொண்டையஞ்செங்கனிவாய் நுகர்ந்தானை உகந்து * அவன்பின்
கெண்டையொண்கண்மிளிரக் கிளிபோலமிழற்றிநடந்து *
வண்டமர்கானல்மல்கும் வயலாலிபுகுவர்கொலோ? (௨)

அஞ்சுவன்வெஞ்சொலநங்காய்! அரக்கர்குலப்பாவைதன்னை *
வெஞ்சினமூக்கரிந்த விறலோன்திறம்கேட்கில் * மெய்யே
பஞ்சியமெல்லடி எம்பணைத்தோளிபரக்கழிந்து *
வஞ்சியந்தண்பணைசூழ் வயலாலிபுகுவர்கொலோ? (௩)

ஏதுஅவன்தொல்பிறப்பு? இளையவன்வளையூதி * மன்னர்
தூதுவனாயவனூர் சொலுவீர்கள்! சொலீர் அறியேன் *
மாதவன்தன்துணையாநடந்தாள் தடஞ்சூழ்புறவில் *
போதுவண்டாடுசெம்மல் புனலாலிபுகுவர்கொலோ? (௪)

தாய்எனையென்றுஇரங்காள் தடந்தோளிதனக்கமைந்த *
மாயனை, மாதவனை மதித்துஎன்னை ‡ யகன்றஇவள் *
வேயனதோள்விசிறிப் பெடையன்னமெனநடந்து *
போயினபூங்கொடியாள் புனலாலிபுகுவர்கொலோ? (௫)

என்துணையென்றுஎடுத்தேற்கு இறையேனுமஇரங்கிற்றிலள் *
தன்துணையாயஎன்தன் தனிமைக்குமஇரங்கிற்றிலள் *
வன்துணைவானவர்க்காய் வரம்செற்று, அரங்கத்துஉறையும் *
இன்துணைவனொடும்போய் எழிலாலிபுகுவர்கொலோ? (௬)

†'தாயரை யிட்டகன்று' என்றும்பாடம். ‡'அகன்றவன்பின்' என்றும்பாடம்.

அன்னையும்அத்தனும்என்று அடியோமுக்குஇரங்கிற்றிலள் *
பின்னைதனகாதலனதன் பெருந்தோள்நலம்பேணினளால் *
மின்னையும்வஞ்சியையும் வென்றிலங்கும்இடையாள்நடந்து *
புன்னையும்அன்னமும்சூழ் புனலாலிபுகுவர்கொலோ ? (எ)

முற்றிலும்பைங்கிளியும பந்துமஊசலும, பேசுகின்ற *
சிற்றில்மென்பூவையும்விட்டகன்ற செழுங்கோதைதன்னைப்
பெற்றிலேன் * முற்றிழையை, பிறப்பிலிபின்னேநடந்து *
மற்றெல்லாம்கைதொழப்போய் வயலாலிபுகுவர்கொலோ ? (அ)

காவியங்கண்ணிஎண்ணில் கடிமாமலர்ப்பாவையொப்பாள் *
பாவியேன்பெற்றமையால பணைத்தோளிபரக்கழிந்து *
தூவிசேரன்னமன்னநடையாள் நெடுமாலொடுமபோய் *
வாவியந்தணபணைசூழ் வயலாலிபுகுவர்கொலோ ? (௯)

❀ தாய்மனம்நின்றிரங்கத் தனியேநெடுமால்துணையா *
போயினபூங்கொடியாள் புனலாலிபுகுவரென்று *
காய்சினவேல்கலியன் ஒலிசெய்தமிழ்மாலைபத்தும் *
மேவியநெஞ்சுடையார் தஞ்சமாவது விண்ணுலகே. (௧0)

அடிவரவு:—கள்வன் பண்டு அஞ்சுவன் ஏதவன் தாய் என்துணை அன்னையும முற்றிலும் காவி தாய்மனம் நந்தா.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

## அ - ஆந் திருமொழி—நந்தாவிளக்கே.

திருநாங்கூர்த்திருப்பதி - ௧௧.

க. திருமணிமாடக்கோயில்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (தோடிராகம் - அடதாளம்)

❀ நந்தாவிளக்கே ! அளத்தற்குஅரியாய் !
நரநாரணனே ! கருமாமுகில்போல்
எந்தாய் ! * எமக்கேஅருளாயெனநின்று
இமையோர்பரவும இடம் * எத்திசையும்
கந்தாரம்அந்தேன் இசைபாட மாடே
களிவண்டுமிழற்றநிழல்துதைந்து *
மந்தாரம்நின்றுமணமல்குநாங்கூர்
மணிமாடக்கோயில்வணங்குஎன்மனனே ! (க)

முதலைத்தனிமாமுரண்தீர அன்று
முதுநீர்த்தடத்துச்செங்கண்வேழம்உய்ய *
விதலைத்தலைச்சென்றுஅதற்குதவி
வினைதீர்த்தஅம்மானிடம் * விண்ணணவும்
பதலைக்கபோதத்தொளிமாடநெற்றிப
பவளக்கொழுங்காலபைங்காலபுறவம் *
மதலைத்தலைமென்பெடைகூடுநாங்கூர்
மணிமாடக்கோயில்வணங்குஎன்மனனே! (௨)

கொலைப்புண்தலைக்குன்றம்ஒன்றுஉய்ய அன்று
கொடுமாமுதலைக்குஇடர்செய்து * கொங்குஆர
இலைப்புண்டரீகத்தவளின்பம் அன்போடு
அணைந்திட்ட அம்மானிடம் * ஆளரியால்
அலைப்புண்டயானைமருப்புமஅகிலும
அணிமுத்தும்வெண்சாமரையோடு * பொன்னி
மலைப்பண்டமண்டத்திரையுந்துநாங்கூர்
மணிமாடக்கோயில்வணங்குஎன்மனனே! (௩)

சிறையார்உவணப்புள்ளொன்றுஏறி அன்று
திசைநான்கும்நான்கும்இரிய * செருவில
கறையார்நெடுவேலரக்கர்மடியக்
கடல்சூழிலங்கைகடந்தான இடந்தான *
முறையால்வளர்க்கின்றமுத்தீயர்நால்வேதர்
ஐவேள்வியாறங்கர்ஏழினிசையோர் *
மறையோர்வணங்கப்புகழெய்துநாங்கூர்
மணிமாடக்கோயில்வணங்குஎன்மனனே! (௪)

இழையாடுகொங்கைத்தலைநஞ்சம்உண்டிட்டு
இளங்கன்றுகொண்டுவிளங்காய்எறிந்து *
தழைவாடவன்தாள்குருந்தம்ஒசித்துத்
தடந்தாமரைப்பொய்கைபுக்கான் இடந்தான் *
குழையாடவல்லிக்குலமாட மாடே
குயில்கூவநீடுகொடிமாடம்மல்கு *
மழையாடுசோலைமயிலாலுநாங்கூர்
மணிமாடக்கோயில்வணங்குஎன்மனனே! (௫)

பண்ணேர்மொழி ஆய்ச்சியர் அஞ்ச வஞ்சப்
பகுவாய்க்கழுதுக்கு இரங்காது * அவள்தன்
உண்ணாமுலைமற்றவளாவியோடும்
உடனேசுவைத்தானிடம் * ஓங்குபைந்தாள்
கண்ணார்கரும்பின கழைதின்றுவைகிக்
கழுநீரில்மூழ்கிச்செழுநீர்த்தடத்து *
மண்ணேந்து இளமேதிகள் வைகுநாங்கூர்
மணிமாடக்கோயில்வணங்குஎன்மனனே ! (௬)

தளைக்கட்டவிழ்தாமரைவைகுபொய்கைத்
தடம்புக்கு, அடங்காவிடங்கால அரவம் *
இளைக்கத்திளைத்திட்டு அதனுச்சிதன்மேல
அடிவைத்த அம்மானிடம * மாமதியம
திளைக்கும்கொடிமாளிகைசூழ் தெருவில்
செழுமுத்துவெண்ணெற்கெனச்சென்று * முன்றில்
வளைக்கை நுளைப்பாவையர்மாறுநாங்கூர்
மணிமாடக்கோயிலவணங்குஎனமனனே ! (௭)

துளையார்கருமென்குழல்ஆய்ச்சியர்தம்
துகில்வாரியும்சிற்றில்சிதைத்தும * முற்றா
இளையார்விளையாட்டொடுகாதல்வெள்ளம்
விளைவித்த அம்மானிடம் * வேல்நெடுங்கண்
முளைவாளெயிற்றுமடவார்பயிற்று
மொழிகேட்டிருந்துமுதிராத இன்சொல் *
வளைவாய்க்கிளிமறைபாடுநாங்கூர்
மணிமாடக்கோயில்வணங்குஎன்மனனே ! (௮)

விடையோடவென்றுஆய்ச்சிமென்தோள்நயந்த
விகிர்தா ! விளங்குசுடராழியென்னும் *
படையோடுசங்கொன்றுடையாய ! எனநின்று
இமையோர்பரவும்இடம் * பைந்தடத்துப்
பெடையோடுசெங்கால அன்னம் துகைப்பத்
தொகைப்புண்டரீகத்திடைச்செங்கழுநீர் *
மடையோடநின்றுமதுவிம்முநாங்கூர்
மணிமாடக்கோயில்வணங்குஎன்மனனே ! (௯)

❀ வண்டார்பொழில்சூழ்ந்த அழகாயநாங்கூர்
மணிமாடக்கோயில்நெடுமாலுக்கு * என்றும்
தொண்டாயதொல்சீர்வயல்மங்கையர்கோன்
கலியன்ஒலிசெய்தமிழ்மாலைவல்லார் *
கண்டார்வணங்கககளியானைமீதே
கடல்சூழுலகுக்குஒருகாவலராய் *
விண்தோய்நெடுவெண்குடைநீழலின்கீழ்
விரிநீருலகாண்டுவிரும்புவரே. (கo)

அடிவரவு—நந்தா முதலை கொலை சிறை இழை புண் தளை துளை விடை வண்டார் சலம்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## க - ஆந் திருமொழி - சலங்கொண்ட.



### உ. திருவைகுந்தவிண்ணகரம்

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (அடாணாராகம் - அடதாளம்.)

❀ சலங்கொண்டஇரணியனதுஅகல்மார்வங்கீண்டு
தடங்கடலைக்கடைந்துஅமுதங்கொண்டுகந்தகாளை *
நலங்கொண்டகருமுகில்போலதிருமேனிஅம்மான்
நாள்தோறும்மகிழ்ந்துஇனிதுமருவியுறைகோயில் *
சலங்கொண்டுமலர்சொரியும்மல்லிகைஒண்செருந்தி
சண்பகங்களமணநாறும்வண்பொழிலினூடே *
வலங்கொண்டுகயலோடிவிளையாடுநாங்கூர்
வைகுந்தவிண்ணகரம்வணங்குமடநெஞ்சே ! (க)

திண்ணியதோரரியுருவாய்த்திசையனைத்தும்நடுங்கத்
தேவரொடுதானவர்கள்திசைப்ப * இரணியனை
நண்ணிஅவனமார்வகலத்துஉகிர்மடுத்தநாதன்
நாள்தோறும்மகிழ்ந்துஇனிதுமருவியுறைகோயில் *
எண்ணில்மிகுபெருஞ்செல்வத்துஎழில்விளங்குமறையும்
ஏழிசையும்கேள்விகளும்இயன்றபெருங்குணத்தோர் *
மண்ணில்மிகுமறையவர்கள்மலிவெய்துநாங்கூர்
வைகுந்தவிண்ணகரம்வணங்குமடநெஞ்சே ! (உ)

அண்டமும் இவ்வலைகடலும் அவனிகளுமெல்லாம்
அமுதுசெய்த திருவயிற்றன், அரன்கொண்டுதிரியும் *
முண்டமது நிறைத்து அவன்கண்சாபமது நீக்கும்
முதல்வனவன் மகிழ்ந்து இனிது மருவியுறைகோயில் *
எண்திசையும் பெருஞ்செந்நெல் இளந்தெங்குகதலி
இலைக்கொடி ஒண்குலைக்கமுகோடு இசலிவளம்சொரிய *
வண்டுபல இசைபாட மயிலாலுநாங்கூர்
வைகுந்தவிண்ணகரம் வணங்குமடநெஞ்சே ! (௩)

கலையிலங்கும் அகலல்குல் அரக்கர்குலக்கொடியைக்
காதொடுமூக்குடன் அரியக்கதறி அவளோடி *
தலையில் அங்கைவைத்து மலையிலங்கைபுகச்செய்த
தடந்தோளன் மகிழ்ந்து இனிது மருவியுறைகோயில் *
சிலையிலங்குமணிமாடத்துச்சிமிசைச்சூலம்
செழுங்கொண்டலகடு இரியச்சொரிந்தசெழுமுத்தம் *
மலையிலங்குமாளிகைமேல் மலிவெய்துநாங்கூர்
வைகுந்தவிண்ணகரம் வணங்குமடநெஞ்சே ! (௪)

மின்னனைய நுண்மருங்குல் மெல்லியற்கா இலங்கை
வேந்தன்முடியொருபதும் தோளிருபதும்போயுதிர *
தன்னிகரில் சிலைவளைத்து அன்று இலங்கைபொடிசெய்த
தடந்தோளன் மகிழ்ந்து இனிது மருவியுறைகோயில் *
செந்நெலொடுசெங்கமலம் சேல்கயல்கள்வாளை
செங்கழுநீரொடுமிடைந்து கழனிதிகழ்ந்து எங்கும் *
மன்னுபுகழ் வேதியர்கள் மலிவெய்துநாங்கூர்
வைகுந்தவிண்ணகரம் வணங்குமடநெஞ்சே ! (௫)

பெண்மைமிகுவடிவுகொடுவந்தவளைப் பெரிய
பேயினதுஉருவுகொடுமாள உயிருண்டு *
திண்மைமிகுமருதொடுநற்சகடம் இறுத்தருளும்
தேவனவன் மகிழ்ந்து இனிது மருவியுறைகோயில் *
உண்மைமிகுமறையொடுநற்கலைகள் நிறைபொறைகள்
உதவுகொடையென்று இவற்றின் ஒழிவில்லா ※ பெரிய
வண்மைமிகுமறையவர்கள் மலிவெய்துநாங்கூர்
வைகுந்தவிண்ணகரம் வணங்குமடநெஞ்சே ! (௬)

விளங்கனியை இளங்கன்றுகொண்டுஉதிரஎறிந்து
வேல்நெடுங்கணாய்ச்சியர்கள்வைத்ததயிர்வெண்ணெய் *
உளம்குளிரஅமுதுசெய்து இவ்வுலகுண்டகாளை
உகந்தினிதுநாள்தோறும்மருவியுறைகோயில் *
இளம்படிநற்கமுகுகுலைத்தெங்குகொடிச்செந்நெல்
ஈன்கரும்புகண்வளரக்கால்தடவும்புனலால் *
வளங்கொண்டபெருஞ்செல்வம்வளருமணிநாங்கூர்
வைகுந்தவிண்ணகரம்வணங்குமடநெஞ்சே ! (எ)

ஆறுதசினத்தின்மிகுநரகனுரம்அழித்த
அடலாழித்தடக்கையன், அலர்மகட்கும்அரற்கும் *
கூறுகக்கொடுத்தருளும்திருவுடம்பன் இமையோர்
குலமுதல்வன்மகிழ்ந்து இனிதுமருவியுறைகோயில் *
மாறுதமலர்க்கமலம்செங்கழுநீர்ததும்பி
மதுவெள்ளம்ஒழுகவயலுழவர்மடையடைப்ப *
மாறுதபெருஞ்செல்வம்வளருமணிநாங்கூர்
வைகுந்தவிண்ணகரம்வணங்குமடநெஞ்சே ! (அ)

வங்கமலிதடங்கடலுள்வானவர்களோடு
மாமுனிவர்பலர்கூடிமாமலர்கள்தூவி *
எங்கள்தனிநாயகனே ! எமக்குஅருளாயென்னும்
ஈசனவன்மகிழ்ந்து இனிதுமருவியுறைகோயில் *
செங்கயலும்வாளைகளும்செந்நெலிடைக்குதிப்பச்
சேலுகளுமசெழும்பணைசூழ்வீதிதொறுமமிடைந்து *
மங்குலமதியகடுஉரிஞ்சுமணிமாடநாங்கூர்
வைகுந்தவிண்ணகரம்வணங்குமடநெஞ்சே ! (கூ)

சங்குமலிதண்டுமுதல்சக்கரமுன்ஏந்தும்
தாமரைக்கண்நெடியபிரான்தானமரும்கோயில் *
வங்கமலிகடலுலகில்மலிவெய்துநாங்கூர்
வைகுந்தவிண்ணகர்மேல், வண்டறையும்பொழில்சூழ் *
மங்கையர்தம்தலைவன், மருவலர்தம்உடல்துணிய
வாள்வீசும்பரகாலன்கலிகன்றிசொன்ன *
சங்கமலிதமிழ்மாலைபத்து இவைவல்லார்கள்
தரணியொடுவிசும்பாளும்தன்மைபெறுவாரே. (கo)

அடிவரவு:—சலம் திண்ணியது அண்டமும் கலை மின் வெண்மை விளங்கனியை ஆறுத வங்கம் சஙகு திருமடந்தை.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

## ௧0 - ஆந் திருமொழி—திருமடந்தை.

### ௩. திருஅரிமேயவிண்ணகரம்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (மோஹநராகம்-
ஜம்பைதாளம்.)

திருமடந்தைமண்மடந்தைஇருபாலும்திகழத்
தீவினைகள்போயகலஅடியவர்கட்குஎன்றும்
அருள்நடந்து * இவ்வேழுலகத்தவர்பணிய வானோர்
அமர்ந்தேத்தஇருந்தஇடம் * பெரும்புகழ்வேதியர்வாழ்
தரும்இடங்கள்மலர்கள்மிகுகைதைகள்செங்கழுநீர்
தாமரைகள்தடங்கள்தொறும்இடங்கள்தொறும்திகழ *
அருவிடங்கள்பொழில்தழுவிஎழில்திகழும்நாங்கூர்
அரிமேயவிண்ணகரம்வணங்குமடநெஞ்சே! (௧)

வென்றிமிகுநரகனுரமதுஅழியவிசிறும்
விறலாழித்தடக்கையன், விண்ணவர்கட்கு * அன்று
குன்றுகொடுகுரைகடலைக்கடைந்துஅமுதமளிக்கும்
குருமணிஎன்னாரமுதம்குலவியுறைகோயில் *
என்றும்மிகுபெருஞ்செல்வத்துஎழில்விளங்குமறையோர்
எழிலிசையும்கேள்விகளும்இயன்றபெருங்குணத்தோர் *
அன்றுஉலகம்படைத்தவனேயனையவர்கள்நாங்கூர்
அரிமேயவிண்ணகரம்வணங்குமடநெஞ்சே! (௨)

உம்பரும்இவ்வேழுலகும்ஏழ்கடலும்எல்லாம்
உண்டபிரான், அண்டர்கள்முன்கண்டுமகிழ்வெய்த *
கும்பமிகுமதயானைமருப்பொசித்துக் கஞ்சன்
குஞ்சிபிடித்தடித்தபிரான்கோயில் * மருங்கெங்கும்
பைம்பொனொடுவெண்முத்தம்பலபுன்னைகாட்டப்
பலங்கனிகள்தேன்காட்ட, படவரவேரல்குல் *
அம்பனையகண்மடவார்மகிழ்வெய்துநாங்கூர்
அரிமேயவிண்ணகரம்வணங்குமடநெஞ்சே! (௩)

ஓடாதவாளரியின்உருவமதுகொண்டு அன்று
உலப்பில்மிகுபெருவரத்தஇரணியனைப்பற்றி *
வாடாதவள்ளுகிரால்பிளந்து, அவன்தன்மகனுக்கு
அருள்செய்தான்வாழுமிடம், மல்லிகைசெங்கழுநீர் *

சேடேறுமலர்ச்செருந்திசெழுங்கமுகம்பாளை
செண்பகங்கள் மணம்நாறும்வண்பொழிலினூடே *
ஆடேறுவயலாலைப்புகைகமழும்நாங்கூர்
அரிமேயவிண்ணகரம்வணங்குமடநெஞ்சே! (௪)

கண்டவர்தம்மனம்மகிழமாவலிதன்வேள்வி
களவிலமிகுசிறுகுறளாய்மூவடியென்றுஇரந்திட்டு *
அண்டமும்இவவுலகடலும்அவனிகளுமெல்லாம்
அளந்தபிரான் அமரும்இடம், வளங்கொள்பொழிலயலே *
அண்டமுறுமுழவொலியும்வண்டினங்களொலியும்
அருமறையினொலியும்மடவார்சிலம்பினொலியும் *
அண்டமுறும் அலைகடலினொலிதிகழும்நாங்கூர்
அரிமேயவிண்ணகரம்வணங்குமடநெஞ்சே! (௫)

வாள்நெடுங்கண்மலர்க்கூந்தல்மைதிலிக்கா இலங்கை
மன்னன்முடியொருபதும்தோளிருபதும்போயுதிர *
தாள்நெடுந்திண்சிலைவளைத்ததயரதன்சேய் என்றன்
தனிச்சரண் வானவர்க்கரசு கருதுமிடம், தடமார் *
சேணிடங்கொள்மலர்க்கமலம்சேல்கயல்கள் வாளை
செந்நெலொடுமடுத்தரியஉதிர்ந்தசெழுமுத்தம் *
வாள்நெடுங்கண் கடைசியர்கள்வாருமணிநாங்கூர்
அரிமேயவிண்ணகரம்வணங்குமடநெஞ்சே! (௬)

தீமனத்தான்கஞ்சனதுவஞ்சனையில்திரியும்
தேனுகனும்பூதனைதனுருயிருமசெகுத்தான் *
காமனைத்தான்பயந்தகருமேனியுடையம்மான்
கருதும்இடம், பொருதுபுனல்துறைதுறைமுத்துஉந்தி *
நாமனத்தால்மந்திரங்கள்நால்வேதம் ஐந்து
வேள்வியோடுஆறங்கம்நவின்றுகலைபயின்று * அங்கு
ஆமனத்துமறையவர்கள் பயிலுமணிநாங்கூர்
அரிமேயவிண்ணகரம்வணங்குமடநெஞ்சே! (௭)

கன்றதனால்விளவெறிந்துகனியுதிர்த்தகாளை
காமருசீர்முகில்வண்ணன், காலிகள்முன்காப்பான் *
குன்றதனால்மழைதடுத்துக்குடமாடுகூத்தன்
குலவும்இடம், கொடிமதிள்கள்மாளிகைகோபுரங்கள் *

துன்றுமணிமண்டபங்கள்சாலைகள் தூமறையோர்
தொக்குஈண்டித்தொழுதியொடுமிகப்பயிலும்சோலை *
அன்றுஅலர்வாய்மதுவுண்டுஅங்குஅளிமுரலுமணிநாங்கூர்
அரிமேயவிண்ணகரம்வணங்குமடநெஞ்சே! (௮)

வஞ்சனையால்வந்தவள தன்உயிருண்டு வாய்த்த
தயிருண்டுவெண்ணெயமுதுண்டு * வலிமிக்க
கஞ்சனுயிரதுவுண்டுஇவ்வுலகுண்டகாளை
கருதுமிடம்; காவிரிசந்து அகில்கனகம்உந்தி *
மஞ்சுலவுபொழிலூடும்வயலூடும்வந்து
வளம்கொடுப்ப மாமறையோர்மாமலர்கள்தூவி *
அஞ்சலித்துஅங்குஅரிசரணென்றுஇறைஞ்சுமணிநாங்கூர்
அரிமேயவிண்ணகரம்வணங்குமடநெஞ்சே! (௯)

❀ சென்றுசினவிடையேழும்படஅடர்த்துப் பின்னை
செவ்விதடதோள்புணர்ந்துஉகந்ததிருமால்தன்கோயில் *
அன்றுஅயனும்அரன்சேயும்அனையவர்கள்நாங்கூர்
அரிமேயவிண்ணகரமமர்ந்தசெழுங்குன்றை *
கன்றிநெடுவேல்வலவன்மங்கையர்தம்கோமான்
கலிகன்றியொலிமாலைஐந்திணொடுமூன்றும் *
ஒன்றினொடுமொன்றுமஇவைகற்றுவல்லார் உலகத்து
உத்தமர்கட்குஉத்தமராய்உம்பருமாவர்களே. (௰)

அடிவரவு:—திருமடந்தை வென்றி உம்பர் ஓடாத கண்டவர் வாள் தீமனத்
தான் கன்று வஞ்சனையால் சென்று போது.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## நான்காம்பத்து

### ௧ - ஆம் திருமொழி—போதலர்ந்த.



### ௪. திருத்தேவனார்தொகை.

கொச்சகக்கலிப்பா. (பைரவிராகம் - ஆதிதாளம்.)

❀ போதலர்ந்தபொழிற்சோலைப் புறமெங்கும்பொருதிரைகள் *
தாதுதிரவந்தலைக்கும் நடமண்ணித்தென்கரைமேல *
மாதவன்தானுறையுமிடம் வயல்நாங்கை * வரிவண்டு
தேதெனவென்றுஇசைபாடும் திருத்தேவனார்தொகையே. (௧)

யாவருமாய்யாவையுமாய் எழில்வேதப்பொருள்களுமாய் *
மூவருமாய்முதலாய மூர்த்தியமர்ந்துறையுமிடம் *
மாவரும்திண்படைமன்னை வென்றிகொள்வார்மன்னுநாங்கை *
தேவரும்சென்றிறைஞ்சும்பொழில் திருத்தேவனார்தொகையே. (௨)

வானாடும்மண்ணாடும் மற்றுள்ளபலவுயிரும் *
தானாயஎம்பெருமான் தலைவனமர்ந்துறையுமிடம் *
ஆனாதபெருஞ்செல்வத்து அருமறையோர்நாங்கைதன்னுள் *
தேனாரும்மலர்ப்பொழில்சூழ் திருத்தேவனார்தொகையே. (௩)

இந்திரனும்இமையவரும் முனிவர்களும் † எழிலமைந்த *
சந்தமலர்ச்சதுமுகனும் கதிரவனும்சந்திரனும் *
எந்தை! எமக்கு ‡ அருளென நின்று அருளுமிடம், எழில்நாங்கை *
சுந்தரநற்பொழில்புடைசூழ் திருத்தேவனார்தொகையே. (௪)

அண்டமும் இவ்வலைகடலும் அவனிகளும் குலவரையும் *
உண்டபிரானுறையுமிடம், ஒளிமணிசந்தகிலகனகம் *
தெண்திரைகள்வரத்திரட்டும் திகழ்மண்ணித்தென்கரைமேல் *
திண்திறலார்பயில்நாங்கைத் திருத்தேவனார்தொகையே. (௫)

ஞாலமெல்லாம்அமுதுசெய்து நான்மறையும்தொடராத *
பாலகனாய்ஆலிலையில் பள்ளிகொள்ளும்பரமனிடம் *
சாலிவளம்பெருகிவரும் தடமண்ணித்தென்கரைமேல் *
சேலுகளும்வயல்நாங்கைத் திருத்தேவனார்தொகையே (௬)

ஓடாதவாளரியின் உருவாகிஇரணியனை *
வாடாதவள்ளுகிரால் பிளந்தளைந்தமாலதிடம் *
ஏடேறுபெருஞ்செல்வத்து எழில்மறையோர்நாங்கைதன்னுள் *
§ சேடேறுபொழில்தழுவு திருத்தேவனார்தொகையே. (௭)

வாராருமிளங்கொங்கை மைதிலியைமணம்புணர்வான் *
காரார்திண்சிலையிறுத்த தனிக்காளைகருதுமிடம் *
ஏராரும்பெருஞ்செல்வத்து எழில்மறையோர்நாங்கைதன்னுள் *
சீராரும்மலர்ப்பொழில்சூழ் திருத்தேவனார்தொகையே. (௮)

கும்பமிகுமதயானை பாகனொடும்குலைந்துவீழ *
கொம்பதனைப்பறித்தெறிந்த கூத்தனமர்ந்துறையுமிடம் *
வம்பவிழும்செண்பகத்தின் மணங்கமழும்நாங்கைதன்னுள் *
செம்பொன்மதிள்பொழில்புடைசூழ் திருத்தேவனார்தொகையே. (௯)

---

† 'எழிலமர்ந்த' என்பதும் பாடம். ‡ 'அருளென்ன அருளுமிடம்' என்றும் ஓதுவர். § 'சேடேறுமலர்ப்பொழில்சூழ்' என்றும் வழங்குவர்.

✿ காரார்ந்ததிருமேனிக் கண்ணனமர்ந்துறையுமிடம் *
சீரார்ந்தபொழில்நாங்கைத் திருத்தேவனார்தொகைமேல் *
கூரார்ந்தவேற்கலியன் கூறுதமிழ்ப்பத்தும்வல்லார் *
ஏரார்ந்தவைகுந்தத்து இமையவரோடுஇருப்பாரே. (௧௦)

அடிவரவு:—போது யாவரும் வாளும் இந்திரனும் அண்டமும் ஞாலம் ஓடாத வாராரும் கும்பம் காரார்ந்த கம்பமா.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## ௨ - ஆந் திருமொழி—கம்பமா



### ரு திருவண்புருடோத்தமம்

• அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (கல்யாணிராகம் - ரூபகதாளம்.)

✿ கம்பமாகடலடைத்துஇலங்கைக்குமன் கதிர்முடியவைபத்தும்
அம்பினாலறுத்து * அரசுஅவன்தம்பிக்கு அளித்தவனுறைகோயில் *
செம்பலாநிரைசெண்பகம்மாதவி சூதகம்வாழைகள்சூழ் *
வம்புலாம்கமுகோங்கியநாங்கூர் வண்புருடோத்தமமே. (௧)

பல்லவம்திகழ்பூங்கடம்பேறி அக்காளியன்பணவரங்கில் *
ஒல்லை † வந்திறப்பாய்ந்து அருநடஞ்செய்த உம்பர்கோனுறைகோயில் *
நல்லவெந்தழல்மூன்றுநால்வேதம் ஐவேள்வியோடுஆறங்கம் *
வல்லஅந்தணர்மல்கியநாங்கூர் வண்புருடோத்தமமே. (௨)

அண்டரானவர்வானவர்கோனுக்கென்று அமைத்தசோறதுவெல்லாம்
உண்டு*கோநிரைமேய்த்து அவைகாத்தவன் உகந்தினிதுறைகோயில் *
கொண்டலார்முழவிற்குளிர்வார்பொழில் குலமயில்நடமாட *
வண்டுதானிசைபாடிடுநாங்கூர் வண்புருடோத்தமமே. (௩)

பருங்கையானையின்கொம்பினைப்பறித்து அதன்பாகனைச்சாடிப்புக்கு *
ஒருங்கமல்லரைக்கொன்று பின்கஞ்சனையுதைத்தவனுறைகோயில் *
‡ கரும்பினூடுயர்சாலிகள்விளைதரு கழனியில்மலிவாவி *
மருங்கெலாம்பொழிலோங்கியநாங்கூர் வண்புருடோத்தமமே (௪)

சாடுபோய்விழத்தாள்நிமிர்த்து ஈசன் தன்படையொடுங்கிளையோடும்
ஓட * வாணனையாயிரந்தோள்களும் துணித்தவனுறைகோயில் *
ஆடுவான்கொடி அகல்விசும்பணவிப்போய்ப் பகலவனொளிமறைக்கும் *
மாடமாளிகைசூழ்தருநாங்கூர் வண்புருடோத்தமமே. (௫)

† 'வந்துற'என்றும்பாடம். ‡ 'கரும்பினூடு' என்பது நஞ்சீயர்படியிற்பாடம்.

அங்கையால்அடிமூன்றுநீரேற்று அயன்அலர்கொடுதொழுதேத்த *
கங்கைபோதரக்கால்நிமிர்த்தருளிய கண்ணன்வந்துறைகோயில் *
கொங்கைகோங்கவைகாட்டவாய்குமுதங்கள்காட்ட, மாபதுமங்கள் *
மங்கைமார்முகங்காட்டிடுநாங்கூர் வண்புருடோத்தமமே. (சா)

உளையஒண்திறல்பொன்பெயரோன்தனது உரம்பிளந்துஉதிரத்தை
அளையும் * வெஞ்சினத்துஅரிபரிகீறிய அப்பன்வந்துறைகோயில் *
இளையமங்கையர்இணையடிச்சிலம்பினொடு எழில்கொள்பந்தடிப்போர்*கை
வளையினின்றொலிமல்கியநாங்கூர் வண்புருடோத்தமமே. (எ)

வாளையார்தடங்கண்உமைபங்கன் வன்சாபமற்றதுநீங்க *
மூளையார்சிரத்துஐயம்முன்னளித்த எம்முகில்வண்ணனுறைகோயில்
பாளைவான்கமுகூடுயர்தெங்கின் வனபழம்விழவெருவிப்போய் *
வாளைபாயதடம்சூழ்தருநாங்கூர் வண்புருடோத்தமமே. (அ)

இந்துவார்சடையீசனைப்பயந்த நான்முகனை, தன்னெழிலாரும் *
உந்திமாமலர்மீமிசைப்படைத்தவன் உகந்துஇனிதுறைகோயில் *
குந்திவாழையின்கொழுங்கனிநுகர்ந்து தன்குருளையைத்தழுவிப்போய் *
மந்திமாம்பணைமேல்வைகுநாங்கூர் வண்புருடோத்தமமே. (கூ)

❀ மண்ணுளார்புகழ்வேதியர்நாங்கூர் வண்புருடோத்தமத்துள் *
அண்ணல்சேவடிக்கீழடைந்துஉய்ந்தவன் ஆலிமன்அருள்மாரி *
பண்ணுளார்தரப்பாடியபாடல் இப்பத்தும்வல்லார் * உலகில்
எண்ணிலாதபேரின்பமுற்று இமையவரோடும்கூடுவரே. (கo)

அடிவரவு:—கம்பம் பல்லவம் அண்டர் பருங்கை சாடு அங்கையால் உளைய வாளை இந்து மண்ணுளார் பேரணிந்து.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## ந - ஆந் திருமொழி - பேரணிந்து.



### கூ திருச்சேம்பொன்செய்கோயில்.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (பந்துவராளிராகம் - அடதாளம்.)

❀ பேரணிந்துஉலகத்தவர்தொழுதேத்தும்
பேரருளாளன்எம்பிரானை *
வாரணிமுலையாள்மலர்மகளோடு
மண்மகளும்உடன்நிற்ப *

சீரணிமாடநாங்கைநன்னடுவுள்
செம்பொன்செய்கோயிலினுள்ளே *
காரணிமேகம்நின்றதொப்பானைக்
கண்டுகொண்டுஉய்ந்தொழிந்தேனே. (௧)

பிறப்பொடுமூப்பொன்றில்லவன்தன்னைப்
பேதியாஇன்பவெள்ளத்தை *
இறப்பெதிர்காலக்கழிவுமானானை
ஏழிசையின்சுவைதன்னை *
சிறப்புடைமறையோர்நாங்கைநன்னடுவுள்
செம்பொன்செய்கோயிலினுள்ளே *
மறைப்பெரும்பொருளைவானவர்கோனைக்
கண்டுநான்வாழ்ந்தொழிந்தேனே. (௨)

திடவிசும்பெரிநீர்திங்களும்சுடரும்
செழுநிலத்துயிர்களுமமற்றும *
படர்பொருள்களுமாய்நின்றவனதன்னைப
பங்கயத்தயனவனனைய *
திடமொழிமறையோர்நாங்கைநன்னடுவுள்
செம்பொன்செய்கோயிலினுள்ளே *
கடல்நிறவண்ணன்தன்னைநான்அடியேன்
கண்டுகொண்டுஉய்ந்தொழிந்தேனே (௩)

வசையறுகுறளாய்மாவலி † வேள்வி
மண்ணளவிட்டவன்தன்னை *
அசைவறும்அமரரடியிணைவணங்க
அலைகடல்துயின்றஅம்மானை *
திசைமுகனனையோர்நாங்கைநன்னடுவுள்
செம்பொன்செய்கோயிலினுள்ளே *
உயர்மணிமகுடம்சூடிநின்றானைக்
கண்டுகொண்டுஉய்ந்தொழிந்தேனே (௪)

தீமனத்தரக்கர்திறலழித்தவனே !
என்று சென்றடைந்தவர்தமக்கு *
தாய்மனத்திரங்கிஅருளினைகொடுக்கும
தயரதன்மதலையை, சயமே *

---

† 'வேள்வியில்' என்று சிலர்.

தேமலர்ப்பொழில்சூழ்நாங்கைநன்னடுவுள்
செம்பொன்செய்கோயிலினுள்ளே *
காமனைப்பயந்தான் தன்னைநான் அடியேன்
கண்டுகொண்டுய்ந்தொழிந்தேனே. (ரு)

மலைமாமுதநீரதர்படமலையால்
அணைசெய்துமகிழ்ந்தவன் தன்னை *
கல்லின்மீதியன்றகடிமதிளிலங்கை
கலங்கவோர்வாளிதொட்டானை *
செல்வநான்மறையோர்நாங்கைநன்னடுவுள்
செம்பொன்செய்கோயிலினுள்ளே *
அல்லிமாமலராள் தன்னொடும் அடியேன்
கண்டுகொண்டு அல்லல்தீர்ந்தேனே (சா)

வெஞ்சினக்களிறும்வில்லொடுமல்லும்
வெகுண்டிறுத்தடர்த்தவன் தன்னை *
கஞ்சனைக்காய்ந்தகாளையம்மானைக்
கருமுகில்திருநிறத்தவனை *
செஞ்சொல்நான்மறையோர்நாங்கைநன்னடுவுள்
செம்பொன்செய்கோயிலினுள்ளே *
அஞ்சனக்குன்றம்நின்றதொப்பானைக்
கண்டுகொண்டு அல்லல்தீர்ந்தேனே. (எ)

அறியவாணனாயிரம்தோளும்
துணிய அன்று ஆழிதொட்டானை *
மின்திகழ்குடுமிவேங்கடமலைமேல்
மேவியவேதநல்விளக்கை *
தென்திசைத்திலதமனையவர்நாங்கைச்
செம்பொன்செய்கோயிலினுள்ளே *
மன்றதுபொலியமகிழ்ந்துநின்றானை
வணங்கிநான்வாழ்ந்தொழிந்தேனே. (அ)

களங்கனிவண்ணா! கண்ணனே! என்தன்
கார்முகிலே! எனநினைந்திட்டு *
உளங்கனிந்திருக்கும்அடியவர்தங்கள்
உள்ளத்துள்ளூறியதேனை *

தெளிந்தநான்மறையோர்நாங்கைநன்னடுவுள்
செம்பொன்செய்கோயிலினுள்ளே *
வளங்கொள்பேரின்பம்மன்னிநின்றானை
வணங்கிநான்வாழ்ந்தொழிந்தேனே. (௯)

தேனமர்சோலைநாங்கைநன்னடுவுள்
செம்பொன்செய்கோயிலினுள்ளே *
வானவர்கோனைக்கண்டமைசொல்லும்
மங்கையாராவாட்கலிகன்றி *
ஊனமில்பாடலொன்பதோடொன்றும்
ஒழிவின்றிக்கற்றுவல்லார்கள் *
மானவெண்குடைக்கீழ்வையகம்ஆண்டு
வானவராகுவர்மகிழ்ந்தே. (௧0)

அடிவரவு—பேரணிந்து பிறப்பு திட வசை நீமனதது மல்லை வெஞ்சினம் அன்றிய களங்கனி தேனமர் மாற்றரசா.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## ச - ஆந் திருமொழி—மாற்றரசர்.



### எ. திருத்தெற்றியம்பலம்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

(செஞ்சுருட்டிராகம் - ரூபகதாளம்.)

மாற்றரசர்மணிமுடியும்திறலுமதேசும்
மற்றவர்தம்காதலிமார்குழையுமதந்தை
கால்தளையுமுடன்கழலவந்துதோன்றிக்
கதநாகம்காத்தளித்தகண்ணர்கண்டீர் *
நூற்றிதழ்கொளரவிந்தம்நுழைந்தபள்ளத்து
இளங்கமுகின்முதுபாளைபகுவாய்நண்டின் *
சேற்றளையில்வெண்முத்தம்சிந்தும்நாங்கூர்த்
திருத்தெற்றியம்பலத்து என்செங்கண்மாலே. (௧)

பொற்றொடித்தோள்மடமகள்தன்வடிவுகொண்ட
பொல்லாதவன்பேய்ச்சிகொங்கைவாங்கி *
பெற்றெடுத்ததாய்போலமடுப்ப ஆரும்
பேணாநஞ்சுண்டுகந்தபிள்ளைகண்டீர் *

நெல்தொடுத்தமலர்நீலம்நிறைந்தசூழல்
இருஞ்சிறையவண்டொலியும்நெடுங்கணார்தம் *
சிற்றடிமேலசிலம்பொலியும்மிழற்றும்நாங்கூர்த்
திருத்தெற்றியம்பலத்துஎனசெங்கண்மாலே. (௨)

படலடைத்தசிறுகுரம்பைநுழைந்துபுக்குப்
பசுவெண்ணெய்பதமாரப்பண்ணைமுற்றும் *
அடலடர்த்தவேறகண்ணார்தோக்கைபற்றி
அலந்தலைமைசெய்துழலும்ஐயன் கண்டீர *
மடலெடுத்தநெடுந்தெங்கின்பழங்கள்வீழ்
மாங்கனிகள்திரட்டுருட்டாவருநீர்ப்பொன்னி *
திடலெடுத்துமலர்சுமந்தங்குஇழியுமநாங்கூர்த்
திருத்தெற்றியம்பலத்துஎன்செங்கண்மாலே. (௩)

வாராரும்முலைமடவாள்பின்னைக்காகி
வளைமருப்பிற்கடுஞ்சினத்துவனதாளாரந்த *
காராதிண்விடையடர்த்துவதுவையாண்ட
கருமுகில்போல்திருநிறத்துஎன்கண்ணன்கண்டீர் *
ஏராரும்மலர்ப்பொழில்கள்தழுவி எங்கும்
எழிலமதியைககால்தொடரவிளங்குசோதி *
சீராரும்மணிமாடம்திகழும்நாங்கூர்த
திருத்தெற்றியம்பலத்துஎன்செங்கண்மாலே. (௪)

கலையிலங்கும்அகலல்குல்கமலப்பாவை
கதிர்முத்தவெண்ணகையாள்கருங்கண்ணாய்ச்சி *
முலையிலங்கும்ஒளிமணிப்பூண்வடமுமதேய்ப்ப
மூவாதவரைநெடுந்தோள்மூர்த்திகண்டீர் *
மலையிலங்குநிரைச்சந்திமாடவீதி
ஆடவரைமடமொழியார்முகத்து * இரண்டு
சிலையிலங்கிமனஞ்சிறைகொண்டிருக்குமநாங்கூர்த்
திருத்தெற்றியம்பலத்துஎன்செங்கண்மாலே. (௫)

தான்போலுமென்றெழுந்தான்தரணியாளன்
அதுகண்டுதரித்திருப்பான், அரக்கர்தங்கள் *
கோனபோலுமென்றெழுந்தான்குன்றமன்ன
இருபதுதோளுடன் துணித்தஒருவன்கண்டீர் *

மான்போலும்மென்னோக்கின்செய்யவாயார்
மரகதம்போல்மடக்கிளியைக்கைமேல்கொண்டு *
தேன்போலும்மென்மழலைபயிறுநாங்கூர்த்
திருத்தெற்றியம்பலத்துஎன்செங்கண்மாலே. (௬)

பொங்கிலங்குபுரிநூலும்தோலும் தாழப்
பொல்லாதகுறளுருவாய்ப்பொருந்தா வாணன் *
மங்கலம்சேர்மறைவேள்வியதனுள்புக்கு
மண்ணகலம்குறையிரந்தமைநதன்கண்டூர் *
கொங்கலர்ந்தமலர்க்குழலார்கொங்கைதோய்ந்த
குங்குமத்தின்குழம்பளைந்தகோலந்தன்னால் *
செங்கலங்கல்வெண்மணல்மேல்தவழும்நாங்கூர்த்
திருத்தெற்றியம்பலத்துஎன்செங்கண்மாலே. (௭)

சிலம்பினிடைச்சிறுபரல்போல்பெரியமேரு
திருக்குளம்பில்கணகணப்பத் திருவாகாரம்
குலுங்க * நிலமடந்தைதனை இடந்துபுல்கிக்
கோட்டிடைவைத்தருளியஎங்கோமான்கண்டூர் *
இலங்கியநான்மறையனைத்தும் அங்கமாறும்
ஏழிசையும்கேள்விகளும்எண்டிக்கெங்கும் *
சிலம்பியநற்பெருஞ்செல்வம்திகழும்நாங்கூர்த்
திருத்தெற்றியம்பலத்துஎன்செங்கண்மாலே. (௮)

ஏழுலகும்தாழ்வரையும் † எங்குமூடி
எண்திசையுமமண்டலமும்மண்டி * அண்டம்
மோழையெழுந்து ஆழிமிகுமூழிவெள்ளம்
முன்னகட்டிலொடுக்கியஎம்மூர்த்திகண்டூர் *
ஊழிதொறும்ஊழிதொறும்உயர்ந்தசெல்வத்து
ஓங்கியநான்மறையனைத்துமதாங்குநாவா *
சேழுயர்ந்தமணிமாடம்திகழும்நாங்கூர்த்
திருத்தெற்றியம்பலத்துஎன்செங்கண்மாலே. (௯)

❀ சீரணிந்தமணிமாடம்திகழும்நாங்கூர்த்
திருத்தெற்றியம்பலத்துஎன்செங்கண்மாலை *
கூரணிந்தவேல்வலவன் ஆலிநாடன்
கொடிமாடமங்கையர்கோன்குறையலாளி *

† 'எங்குமோடி' என்றும் கூறுவர்.

பாரணிந்ததொல்புகழான்கலியன்சொன்ன
பாமாலைஇவையைந்துமைந்தும்வல்லார் *
சீரணிந்தஉலகத்துமன்னராகிச்
சேண்விசும்பில்வானவராய்த்திகழ்வர்தாமே. (௧௦)

அடிவரவு:—யாற்றரசர் பொற்றொடி படல் வாராரும் கலை தான் பொங்கு சிலம்பின் ஏழுலகும் சீரணிந்த தூம்பு.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## ௫ - ஆந் திருமொழி—தூம்புடை



௮ திருமணிக்கூடம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (பிலஹரிராகம் - ஆதிதாளம்.)

தூம்புடைப † பனைக்கைவேழம் துயர்கெடுத்தருளி * மன்னு
காம்புடைக்குன்றமேந்திக் கடுமழைகாத்தஎந்தை *
பூம்புனற்பொன்னி ‡ முற்றும்புகுந்து பொன்வரண்ட * எங்கும்
தேம்பொழில்கமழும்நாங்கூர்த் திருமணிக்கூடத்தானே (௧)

கவ்வைவாளெயிற்றுவன்பேய் கதிர்முலைசுவைத்து * இலங்கை
§ வவ்வியஇடும்பைகூரக் கடுங்கணைதுரந்தஎந்தை *
கொவ்வைவாய்மகளிர்கொங்கைக் குங்குமங்கழுவிப்போந்த *
தெய்வநீர்கமழும்நாங்கூர்த் திருமணிக்கூடத்தானே. (௨)

மாத்தொழில்மடங்கச்செற்று மருதிறநடந்து * வன்தாள்
சேத்தொழில்சிதைத்துப் பின்னைசெவ்வித்தோள்புணர்ந்தஎந்தை *
நாத்தொழில்மறைவல்லார்கள் நயந்து அறம்பயந்த * வண்கைத்
தீத்தொழில்பயிலுமநாங்கூர்த் திருமணிக்கூடத்தானே. (௩)

தாங்கருஞ்சினத்துவன்தாள் தடக்கைமாமருப்புவாங்கி *
பூங்குருந்தொசித்துப்புள்வாய்பிளந்து எருதடர்த்தஎந்தை *
மாங்கனிநுகர்ந்தமந்தி வந்துவண்டிரிய * வாழைத்
தீங்கனிநுகரும்நாங்கூர்த் திருமணிக்கூடத்தானே. (௪)

கருமகளிலங்கையாட்டி பிலங்கொள்வாய்திறந்து * தன்மேல்
வருமவள்செவியும்மூக்கும் வாளினால்தடிந்தஎந்தை *
பெருமகள்பேதைமங்கைதன்னொடும் பிரிவிலாத *
திருமகள்மருவும்நாங்கூர்த் திருமணிக்கூடத்தானே. (௫)

† 'பணைக்கை' என்பதும் பாடம். ‡ 'முற்றம்' என்பதும் பாடம்.
§ 'வவ்வியவிடும்பைதீர' என்பதும் பாடாந்தரம்.

கெண்டையும்குறளும்புள்ளும் கேழலும் அரியும்மாவும் *
அண்டமும்சுடரும் அல்லாவாற்றலும்ஆயஎந்தை *
ஒண்திறல்தென்னனோட வடவரசோட்டம்கண்ட *
திண்திறலாளர்நாங்கூர்த் திருமணிக்கூடத்தானே. (௬)

குன்றமும்வானும்மண்ணும் குளிர்புனல்திங்களோடு *
நின்றவெஞ்சுடரும் அல்லாநிலைகளும்ஆயஎந்தை *
மன்றமும்வயலும்காவும் மாடமும்மணங்கொண்டு * எங்கும்
தென்றல்வந்துலவும்நாங்கூர்த் திருமணிக்கூடத்தானே. (௭)

சங்கையும்துணிவும்பொய்யும்மெய்யும் இத்தரணியோம்பும் *
பொங்கியமுகிலும் அல்லாப்பொருள்களும்ஆயஎந்தை *
பங்கயமுகுத்ததேறல் பருகியவாளைபாய *
செங்கயலுகளும்நாங்கூர்த் திருமணிக்கூடத்தானே. (௮)

பாவமும்அறமும்வீடும் இன்பமும்துன்பந்தானும் *
கோவமும்அருளும் அல்லாக்குணங்களும்ஆயஎந்தை *
மூவரிலெங்கள்மூர்த்தி இவனெனமுனிவரோடு *
தேவர்வந்திறைஞ்சும்நாங்கூர்த் திருமணிக்கூடத்தானே. (௯)

திங்கள்தோய்மாடநாங்கூர்த் திருமணிக்கூடத்தானை *
மங்கையார்தலைவன்வண்தார்க் கலியன்வாயொலிகள்வல்லார் *
பொங்குநீருலகமாண்டு பொன்னுலகாண்டு * பின்னும்
வெங்கதிர்ப்பரிதிவட்டத்தூடுபோய் விளங்குவாரே. (௧0)

அடிவரவு—தூம்பு கவ்வை மாத தொழில் தாங்கரும கருமகன் கெண்டை குன்றம் சங்கை பாவம் திங்கள் தாவளந்து.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## ௬ - ஆந் திருமொழி—தாவளந்து.



### ௯ திருக்காவளம்பாடி.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (மத்யமாவதிராகம்-ரூபகதாளம்.)

தாவளந்துலகமுற்றும் தடமலர்ப்பொய்கைபுக்கு *
நாவளம்நவின்றங்கேத்த நாகத்தின்நடுக்கந்தீர்த்தாய்! *
மாவளம்பெருகி மன்னுமறையவர்வாழுநாங்கை *
காவளம்பாடிமேய கண்ணனே! களைகண்நீயே. (௧)

மண்ணிடந்துஏனமாகி மாவலிவலிதொலைப்பான் *
விண்ணவர்வேண்டச்சென்று வேள்வியில்குறையிரந்தாய்! *
துண்ணெனமாற்றார்தம்மைத் தொலைத்தவர்நாங்கைமேய *
கண்ணனே! காவளந்தண்பாடியாய்! களைகண்நீயே. (உ)

உருத்தெழுவாலிமார்வில் ஒருகணைஉருவவோட்டி *
கருத்துடைத்தம்பிக்கு இன்பக்கதிர்முடியரசுஅளித்தாய்! *
பருத்தெழுபலவும்மாவும் பழம்விழுந்தொழுகும்நாங்கை *
கருத்தனே! காவளந்தண்பாடியாய்! களைகண்நீயே (௩)

முனைமுகத்துஅரக்கன்மாள முடிகள்பத்தறுத்துவீழ்த்து * ஆங்கு
அனையவற்கிளையவற்கே அரசளித்தருளினானே! *
சுனைகளில்கயல்கள்பாயச் சுரும்புதேன்நுகரும்நாங்கை *
கனைகழல்காவளந்தண்பாடியாய்! களைகண்நீயே. (௪)

படவரவுச்சிதன்மேல் பாய்ந்துபல்நடங்கள்செய்து *
மடவரல்மங்கைதன்னை மார்வகத்துஇருத்தினானே! *
தடவரைதங்குமாடத் தகுபுகழ்நாங்கைமேய *
கடவுளே! காவளந்தண்பாடியாய்! களைகண்நீயே. (௫)

மல்லரையட்டுமாளக் கஞ்சனைமலைந்துகொன்று *
பல்லரசுஅவிந்துவீழப் பாரதப்போர்முடித்தாய்! *
நல்லரண்காவின்நீழல் நறைகமழ்நாங்கைமேய *
கல்லரண்காவளந்தண்பாடியாய்! களைகண்நீயே. (௬)

மூத்தவற்குஅரசுவேண்டி முன்புதூதெழுந்தருளி *
மாத்தமர்பாகன்வீழ மதகரிமருப்பொசித்தாய்! *
பூத்தமர்சோலையோங்கி புனல்பரந்தொழுகும்நாங்கை *
காத்தனே! காவளந்தண்பாடியாய்! களைகண்நீயே. (௭)

ஏவிளங்கன்னிக்காகி இமையவர்கோனைச்செற்று *
காவளம்கடிதிறுத்துக் கற்பகம்கொண்டுபோந்தாய்! *
பூவளம்பொழில்கள்சூழ்ந்த புரந்தரன்செய்தநாங்கை *
காவளம்பாடிமேய கண்ணனே! களைகண்நீயே. (அ)

சந்தமாய்ச்சமயமாகிச் சமயவைம்பூதமாகி *
அந்தமாய்ஆதியாகி அருமறையவையும்ஆனாய்! *
மந்தமார்பொழில்கள்தோறும் மடமயிலாலும்நாங்கை *
கந்தமார்காவளந்தண்பாடியாய்! களைகண்நீயே. (௯)

❀ மாவளம்பெருகி மன்னுமறையவர்வாழும்நாங்கை
காவளம்பாடிமேய கண்ணனைக்கலியன்சொன்ன *
பாவளம்பத்தும்வல்லார் பாரமிசைஅரசராகி *
கோவிளமன்னர்தாழக் குடைநிழல்பொலிவர்தாமே. (௧0)

அடிவரவு:—தாவளந்து மண உருத்து மூனை படம் மல்லனை மூத்தவற்கு ஏவிளம் சந்தம் மாவளம் கண்ணார்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## எ - ஆந் திருமொழி—கண்ணார்கடல்.



### ௧0. திருவெள்ளக்குளம்.

கலிவிருத்தம். (தேசியராகம் - ஆதிதாளம்.)

❀ கண்ணார்கடல்போல் திருமேனிகரியாய்! *
நண்ணாமுனை வென்றிகொள்வார்மன்னுநாங்கூர்!
திண்ணார்மதிள்சூழ் திருவெள்ளக்குளத்துள்
அண்ணா! * அடியேனிடரைக்களையாயே. (௧)

கொந்தார்துளவமலர்கொண்டு அணிவானே! *
நந்தாதபெரும்புகழ் வேதியர்நாங்கூர் *
செந்தாமரைநீர்த் திருவெள்ளக்குளத்துள்
எந்தாய்! * அடியேனிடரைக்களையாயே (௨)

குன்றால்குளிர்மாரி தடுத்துகந்தானே! *
நன்றாயபெரும்புகழ் வேதியர்நாங்கூர் *
சென்றார்வணங்கும் திருவெள்ளக்குளத்துள்
நின்றாய்! * நெடியாய்! அடியேனிடர்நீக்கே (௩)

கானார்கரிகொம்பது ஒசித்தகளிறே! *
நானாவகைநல்லவர் மன்னியநாங்கூர் *
தேனார்பொழில்சூழ் திருவெள்ளக்குளத்து
ளானாய்! * அடியேனுக்கு அருள்புரியாயே. (௪)

❀ வேடார்திருவேங்கடம் மேயவிளக்கே! *
நாடார்புகழ் வேதியர்மன்னியநாங்கூர் *
சேடார்பொழில்சூழ் திருவெள்ளக்குளத்தாய்! *
பாடாவருவேன் வினையாயினபாற்றே. (௫)

கல்லால்கடலை அணைகட்டி உகந்தாய் ! *
நல்லார்பலர் வேதியர்மன்னியநாங்கூர் *
செல்வா ! திருவெள்ளக்குளத்துஉறைவானே ! *
எல்லாவிடரும் கெடுமாறுஅருளாயே. (சு)

கோலால்நிரைமேய்த்த எங்கோவலர்கோவே ! *
நாலாகியவேதியர் மன்னியநாங்கூர் *
சேலார்வயல்சூழ் திருவெள்ளக்குளத்துள்
மாலே ! * எனவல்வினை தீர்த்தருளாயே. (எ)

வாராகமதாகி இம்மண்ணை இடந்தாய் ! *
நாராயணனே ! நல்லவேதியர்நாங்கூர் *
சீரார்பொழில்சூழ் திருவெள்ளக்குளத்துள்
ஆராவமுதே ! * அடியேற்குஅருளாயே. (அ)

பூவார்திருமாமகள் புல்கியமார்பா ! *
நாவார்புகழ் வேதியர்மன்னியநாங்கூர் *
தேவா ! திருவெள்ளக்குளத்துஉறைவானே ! *
ஆவா ! அடியான் இவனென்றுஅருளாயே. (கூ)

நல்லன்புடை வேதியர்மன்னியநாங்கூர் *
செல்வன் திருவெள்ளக்குளத்துஉறைவானை ! *
கல்லின்மலிதோள் கலியன்சொன்னமாலை *
வல்லரெனவல்லவர் வானவர்தாமே. (௧0)

அடிவரவு:—கண்ணார் கொந்து குன்றால் கான் வேடு கல்லால் கோலால் வாராகமது பூவார் நல்லன்பு கவளயானை.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

## அ - ஆந் திருமொழி—கவளயானை.

### கக. திருப்பார்த்தன்பள்ளி.

[திருமாலினிடத்து ஈடுபட்ட தலைமகளது செயல் கண்டு நற்றாய் இரங்கிக்கூறிய பாசுரம்.]

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (தந்யாசிராகம் - அடதாளம்.)

கவளயானைக்கொம்பொசித்த கண்ணனென்றும் * காமருசீர்க்
குவளைமேகமன்னமேனி கொண்டகோன்என்னானையென்றும் *
தவளமாடநீடுநாங்கைத் தாமரையாள்கேள்வனென்றும் *
பவளவாயாள்என்மடந்தை பார்த்தன்பள்ளிபாடுவாளே. (க)

கஞ்சன்விட்டவெஞ்சினத்த களிறடர்த்தகாளையென்றும் *
வஞ்சமேவிவந்தபேயின் உயிரையுண்டமாயனென்றும் *
செஞ்சொலாளர்நீடுநாங்கைத் தேவதேவனென்றென்றோதி *
பஞ்சியன்னமெல்லடியாள் பார்த்தன்பள்ளிபாடுவாளே. (௨)

அண்டர்கோன்என்னானையென்றும் ஆயர்மாதர்கொங்கைபுல்கு
செண்டனென்றும் * நான்மறைகள்தேடியோடும் செல்வனென்றும் *
வண்டுலவுபொழில்கொள்நாங்கை மன்னுமாயனென்றென்றோதி *
பண்டுபோலன்றுஎன்மடந்தை பார்த்தன்பள்ளிபாடுவாளே. (௩)

கொல்லையானாள்பரிசழிந்தாள் கோல்வளையார்தம்முகப்பே *
மல்லைமுந்நீர்தட்டிலங்கை கட்டழித்தமாயனென்றும் *
செல்வம்மல்குமறையோர்நாங்கைத் தேவதேவனென்றென்றோதி *
பல்வளையாள்என்மடந்தை பார்த்தன்பள்ளிபாடுவாளே. (௪)

அரக்கராவிமாளஅன்று ஆழ்கடல்சூழிலங்கைசெற்ற *
குரக்கரசனென்றும் கோலவில்லியென்றும் * மாமதியை
நெருக்குமாடநீடுநாங்கை † நின்மலன்தானென்றென்றோதி *
பரக்கழிந்தாள்என்மடந்தை பார்த்தன்பள்ளிபாடுவாளே. (௫)

ஞாலமுற்றும்உண்டுமிழ்ந்த நாதனென்றும் * நானிலஞ்சூழ்
வேலையன்னகோலமேனி வண்ணனென்றும் * மேலெழுந்து
சேலுகளும்வயல்கொள்நாங்கைத் தேவதேவனென்றென்றோதி *
பாலின்நல்லமென்மொழியாள் பார்த்தன்பள்ளிபாடுவாளே. (௬)

நாடிஎன்தனுள்ளம்கொண்ட நாதனென்றும் * நான்மறைகள்
தேடிஎன்றும்காணமாட்டாச் செல்வனென்றும் * சிறைகொள்வண்டு
சேடுலவுபொழில்கொள்நாங்கைத் தேவதேவனென்றென்றோதி *
பாடகம்சேர்மெல்லடியாள் பார்த்தன்பள்ளிபாடுவாளே. (௭)

உலகமேத்தும்ஒருவனென்றும் ஒண்சுடரோடும்பரெய்தா *
நிலவும்ஆழிப்படையனென்றும் நேசனென்றும் * தென்திசைக்குத்
திலதமன்னமறையோர்நாங்கைத் தேவதேவனென்றென்றோதி *
பலருமேசஎன்மடந்தை பார்த்தன்பள்ளிபாடுவாளே. (௮)

கண்ணனென்றும் வானவர்கள்காதலித்துமலர்கள்தூவும் *
எண்ணனென்றும்இன்பனென்றும் ஏழுலகுக்காதியென்றும் *
திண்ணமாடநீடுநாங்கைத் தேவதேவனென்றென்றோதி *
பண்ணினன்னமென்மொழியாள் பார்த்தன்பள்ளிபாடுவாளே. (௯)

† 'நின்மலனென்றென்று' என்று கூறுவர்.

❀ பாருள்நல்லமறையோர்நாங்கைப் பார்த்தன்பள்ளிச்செங்கண்மா
வார்கொள்நல்லமுலைமடவாள்பாடலைத் தாய்மொழிந்தமாற்றம் * [லை*
கூர்கொள்நல்லவேல்கலியன் கூறுதமிழ்பத்தும்வல்லார் *
ஏர்கொள்நல்லவைகுந்தத்துள் இன்பம்நாளும்எய்துவாரே. (௧0)

அடிவரவு:—கவளம் கஞ்சன் அண்டர் கொல்லை அரக்கா ஞாலம் நாடி உலகம் கணணன் பாருள் நும்மை.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## ௯ - ஆந் திருமொழி—நும்மைத்தொழுதோம்.



### திருவிந்தளூர்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (தோடி ராகம்-ரூபகதாளம்.)

❀ நும்மைத்தொழுதோம்நுந்தம்பணிசெய்திருக்கும்நும்மடியோம் *
இம்மைக்குஇன்பம்பெற்றோம் எந்தாய்! இந்தளூரீரே! *
எம்மைக்கடிதாக்கருமமருளி ஆவா! என்றிரங்கி *
நம்மைஒருகால்காட்டிநடந்தால் நாங்கள்உய்யோமே? (௧)

❀ சிந்தைதன்னுள் நீங்காதிருந்ததிருவே! மருவினிய
மைந்தா! * அந்தணாலிமாலே! சோலைமழகளிறே! *
நந்தாவிளக்கின்சுடரே! நறையூர்நின்றநம்பீ! * என்
எந்தாய்! இந்தளூராய்! அடியேற்குஇறையும்இரங்காயே. (௨)

பேசுகின்றதுஇதுவே வையம்ஈரடியாலளந்த *
மூசிவண்டுமுரலும் கண்ணிமுடியீர்! * உம்மைக்காணும்
ஆசையென்னும்கடலில்வீழ்ந்து இங்குஅயர்த்தோம் * அயலாரும்
ஏசுகின்றதுஇதுவேகாணும் இந்தளூரீரே! (௩)

ஆசைவழுவாதேத்தும் எமக்கிங்கிழுக்காய்த்து * அடியோர்க்குத்
தேசமறிய உமக்கேஆளாய்த்திரிகின்றோமுக்கு *
காசினொளியில்திகழும்வண்ணம், காட்டீர் எம்பெருமான்! *
வாசிவல்லீர்! இந்தளூரீர்! வாழ்ந்தேபோம்நீரே. (௪)

தீஎம்பெருமான்நீர்எம்பெருமான் திசையும்இருநிலனு
மாய் * எம்பெருமானாகிநின்றால் அடியோம்காணோமால் *
தாயெம்பெருமான் தந்தைதந்தையாவீர் * அடியோமுக்
கேஎம்பெருமானல்லீரோ? நீர்இந்தளூரீரே! (௫)

சொல்லாதொழியகில்லேன் அறிந்தசொல்லில் * † நும்மடியார்
எல்லாரோடுமொக்க எண்ணியிருந்தீர் அடியேனை *
நல்லார்அறிவீர்தீயார்அறிவீர் நமக்குஇவ ‡ வுலகத்தில் *
எல்லாம்அறிவீர் ஈதேஅறியீர்இந்தளூரீரே ! (சு)

மாட்டீரானீர்பணிநீர்கொள்ள எம்மைப்பணியறியா
வீட்டீர் * இதனைவேறேசொன்னோம் இந்தளூரீரே ! *
காட்டீரானீர் நுந்தமடிக்கள்காட்டில் * உமக்குஇந்த
நாட்டேவந்துதொண்டரான நாங்கள்உய்யோமே ? (எ)

முன்னைவண்ணம்பாலின்வண்ணம் முழுதும்நிலைநின்ற *
பின்னைவண்ணம்கொண்டல்வண்ணம வண்ணம்எண்ணுங்கால் *
பொன்னின்வண்ணம்மணியின்வண்ணம் புரையுமதிருமேனி *
இன்னவண்ணமென்றுகாட்டீர் இந்தளூரீரே ! (அ)

எந்தைதந்தை ‡‡ தம்மானென்றென்று எமரேழேழளவும் *
வந்துநின்றதொண்டரோர்க்கே வாசிவல்லீரால் *
சிந்தைதன்னுள்முந்திநிற்றிர் சிறிதுமதிருமேனி *
இந்தவண்ணமென்றுகாட்டீர் இந்தளூரீரே ! (கூ)

❀ ஏரார்பொழில்சூழ் இந்தளூரிலெந்தைபெருமானை *
காரார்புறவினமங்கைவேந்தன் கலியனொலிசெய்த *
சீராரின்சொல்மாலை கற்றுததிரிவார்உலகத்தில *
ஆராரவரே அமரர்க்குஎன்றும்அமரராவாரே. (க0)

அடிவரவு:—நும்மை சிந்தை பேசுகின்றது ஆசை தீ சொல்லாது மாட்டீர் முன்னை எந்தை ஏரார ஆய்ச்சியா

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## க0 - ஆந் திருமொழி - ஆய்ச்சியர்.

### திருவெள்ளியங்குடி

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (மோஹநாகம் - அடதாளம்)

❀ ஆய்ச்சியரழைப்பவெண்ணெயுண்டுஒருகால்
ஆலிலைவளர்ந்தஎம்பெருமான் *
பேய்ச்சியைமுலையுண்டுஇணைமருதிறுத்துப
பெருநிலம்அளந்தவன்கோயில் *

---

† 'உம்மடியார்' எனவும் ஓதுவா ‡ 'உலகத்து' எனவும் ஓதுவர்.
‡‡ 'தம்மானென்றெமரேழளவும' என்றும் பாடம்.

காய்த்தநீள்கமுகும்கதலியும்தெங்கும்
எங்கும்மாம்பொழில்களின்நடுவே *
வாய்த்தநீர்பாயும்மண்ணியின்தென்பால்
திருவெள்ளியங்குடியதுவே. (௧)

ஆநிரைமேய்த்து அன்று அலைகடலடைத்திட்டு
அரக்கர்தம்சிரங்களையுருட்டி *
கார்நிறைமேகம்கலந்ததோருருவக்
கண்ணனார்கருதியகோயில் *
பூநிரைச்செருந்திபுன்னைமுத்தரும்பிப்
பொதும்பிடைவரிவண்டுமிண்டி *
தேனிரைத்துண்டு அங்கு இன்னிசைமுரலும்
திருவெள்ளியங்குடியதுவே. (௨)

கடுவிடமுடையகாளியன்தடத்தைக்
கலக்கிமுன் அலக்கழித்து * அவன்தன்
படமிறப்பாய்ந்துபல்மணிசிந்தப
பல்நடம்பயின்றவன்கோயில் *
படவரவல்குல்பாவைநல்லார்கள்
பயிற்றியநாடகத்தொலிபோய் *
அடைபுடைதழுவி அண்டம்நின்றதிரும்
திருவெள்ளியங்குடியதுவே. (௩)

கறவைமுன்காத்துக்கஞ்சனைக்காய்ந்த
காளமேகத்திருவுருவன் *
பறவைமுன்னுயர்த்துப்பாற்கடல்துயின்ற
பரமனார்பள்ளிகொள்கோயில் *
துறைதுறைதோறும்பொன்மணிசிதறும்
தொகுதிரைமண்ணியின்தென்பால் *
செறிமணிமாடக்கொடிகதிரணவும்
திருவெள்ளியங்குடியதுவே. (௪)

பாரினையுண்டுபாரினையுமிழ்ந்து
பாரதம்கையெறிந்து * ஒருகால்
தேரினையூர்ந்துதேரினைத்துரந்த
செங்கண்மால்சென்றுறைகோயில் *

ஏர்விரைவயலுள்வாளைகள்மறுகி
எமக்கிடமன்றிதென்றெண்ணி *
சீர்மலிபொய்கைசென்றணைகின்ற
திருவெள்ளியங்குடியதுவே. (௫)

காற்றிடைப்பூளைகரந்தெனஅரந்தை
யுறக் கடலரக்கர்தம்சேனை *
கூற்றிடைச்செல்லக்கொடுங்கணைதுரந்த
கோலவில்லிராமன்தன்கோயில் *
ஊற்றிடைநின்றவாழையின்கனிகள்
ஊழ்த்துவீழ்ந்தனஉண்டுமண்டி *
சேற்றிடைக்கயல்களுகள்திகழ்வயல்சூழ்
திருவெள்ளியங்குடியதுவே. (௬)

ஒள்ளியகருமம்செய்வனென் † றுணர்ந்த
மாவலிவேள்வியில்புக்கு *
தெள்ளியகுறளாய்மூவடிகொண்டு
திக்குறவளர்ந்தவன்கோயில் *
அள்ளியம்பொழில்வாய்இருந்துவாழ்குயில்கள்
அரியரியென்றவையழைப்ப *
வெள்ளியார்வணங்கவிரைந்துஅருள்செய்வான்
திருவெள்ளியங்குடியதுவே. (௭)

முடியுடைஅமரர்க்குஇடர்செய்யும்
அசுரர்தம்பெருமானை * அன்றுஅரியாய்
மடியிடைவைத்துமார்வைமுன்கீண்ட
மாயனார்மன்னியகோயில் *
படியிடைமாடத்தடியிடைத்தூணில்
பதித்தபன்மணிகளினொளியால் *
விடிபகலிரவென்றறிவரிதாய
திருவெள்ளியங்குடியதுவே. (௮)

குடிகுடியாகக்கூடிநின்றுஅமரர்
குணங்களேபிதற்றிநின்றேத்த *
அடியவர்க்குஅருளிஅரவணைத்துயின்ற
ஆழியான்அமருந்துறைகோயில *

† 'உணர்ந்து' என்பதும் பாடம்.

கடியுடைக்கமலம் அடியிடைமலரக்
கருமமொடுபெருஞ்செநநெல் அசைய *
வடிவுடை அன்னம்பெடையொடும்சேரும்
வயல்வெள்ளியங்குடியதுவே. (௯)

பண்டுமுன் ஏனமாகி அன்றொருகால்
பாரிடந்தெயிற்றினில்கொண்டு *
தெண்திரைவருடப்பாற்கடல்துயின்ற
திருவெள்ளியங்குடியானை *
வண்டறைசோலைமங்கையர் தலைவன்
மானவேற்கலியன்வாயொலிகள்
கொண்டிவைபாடும்தவமுடையார்கள்
ஆள்வர் இக்குரைகடலுலகே. (௧0)

அடிவரவு:—ஆய்சசியர் ஆநிரை கடு கறவை பாரினை காற்று ஒள்ளிய முடி குடி பணடு அறிவது

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## ஐந்தாம்பத்து.

### க- ஆந் திருமொழி—அறிவதரியான்.



திருப்புள்ளம்பூதங்குடி.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (பந்துவராளிராகம்-ரூபகதாளம்.)

அறிவதரியான் அனைத்துலகுமுடையான் என்னையாளுடையான் *
† குறியமாணியுருவாய கூத்தன் மன்னியமருமிடம் *
நறியமலர்மேல்சுரும்பார்க்க எழிலார்மஞ்ஞைநடமாட *
பொறிகொள்சிறைவண்டுஇசைபாடும் புள்ளம்பூதங்குடிதானே. (க)

கள்ளக்குறளாய்மாவலியைவஞ்சித்து உலகம்கைப்படுத்து *
பொள்ளைக்கரத்தபோதகத்தின் துன்பம்தவிர்த்தபுனிதனிடம் *
பள்ளச்செறுவில்கயலுகளப் பழனக்கழனியதனுள்போய் *
புள்ளுப்பிள்ளைக்கிரைதேடும் புள்ளம்பூதங்குடிதானே. (௨)

---

† 'குறியமாணுருவாகிய' என்றும் பாடம்.

மேவாஅரக்கர்தென்னிலங்கை வேந்தன்வீயச்சரம்துரந்து *
மாவாய்பிளந்துமல்லடர்த்து மருதம்சாய்த்தமாலதிடம் *
காவார்தெங்கின்பழம்வீழக் கயல்கள்பாயக்குருகிரியும் *
பூவார்கழனிஎழிலாரும் புள்ளம்பூதங்குடிதானே. (ரு)
வெற்பால்மாரிபழுதாக்கி விறல்வாளரக்கர்தலைவன்தன் *
வற்பார்திரள்தோள்ஐந்நான்கும் துணித்தவல்விலிராமனிடம் *
கற்பார்புரிசைசெய்குன்றம் கவினார் கூடம்மாளிகைகள் *
பொற்பார்மாடம்எழிலாரும் புள்ளம்பூதங்குடிதானே. (சா)
மையார்தடங்கண்கருங்கூந்தல் ஆய்ச்சிமறையவைத்ததயிர் *
நெய்யார்பாலோடுஅமுதுசெய்த நேமியங்கைமாயனிடம் *
செய்யார்ஆரல்இரைகருதிச் செங்கால்நாரைசென்றணையும் *
பொய்யாநாவின்மறையாளர் புள்ளம்பூதங்குடிதானே. (ரு)
மின்னினன்னநுணமருங்குல் வேயேய்தடநதோள்மெல்லியற்கா *
மன்னுசினத்தமழவிடைகள் ஏழ்அன்றடர்த்தமாலதிடம் *
மன்னுமுதுநீரரவிந்தமலர்மேல் வரிவண்டிசைபாட *
புன்னைபொன்னேய்தாதுதிர்க்கும் புள்ளம்பூதங்குடிதானே. (சா)
குடையாவிலங்கல்கொண்டேந்தி மாரிபழுதாநிரைகாத்து *
சடையான்ஓட அடல்வாணன் தடந்தோள்துணித்ததலைவனிடம் *
குடியாவண்டுகள்ளுண்ணக் கோலநீலமமட்டுகுக்கும் *
புடையார்கழனிஎழிலாரும் புள்ளம்பூதங்குடிதானே. (எ)
கறையார்நெடுவேல்மறமன்னர்வீய விசயன்தேர்கடவி *
இறையான்கையிலநிறையாத முண்டமநிறைத்தஎந்தையிடம் *
மறையால்முத்தீயவைவளர்க்கும் மன்னுபுகழால்வண்மையால் *
பொறையால்மிக்கஅந்தணர்வாழ் புள்ளம்பூதங்குடிதானே. (அ)
துன்னிமண்ணும்விண்ணுமடதோன்றாது இருளாய்மூடியநாள் *
அன்னமாகிஅருமறைகள் அருளிச்செய்தஅமலனிடம் *
மின்னுசோதிநவமணியும் வேயின்முத்தும்சாமரையும் *
பொன்னும்பொன்னிகொணர்ந்தலைக்கும் புள்ளம்பூதங்குடிதானே. ()
❀ கற்றுமறித்துககாளியன்தன் சென்னிநடுங்கநடம்பயின்ற *
பொற்றாமரையாள்தன்கேள்வன் புள்ளம்பூதங்குடிதன்மேல் *
கற்றார்பரவும்மங்கையர்கோன் காரார்புயற்கைக்கலிகன்றி *
சொலதான்ஈரைந்திவைபாடச் சோரநில்லா † துயர்தாமே. (கo)
அடிவரவு—அறிவது கள்ளம் மேவா வெற்பால் மையார் மின்னின் குடை கறை துன்னி கற்று தாம்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



† 'துயர்தானே' என்றும் பாடம்.

## ௨ - ஆந் திருமொழி—தாந்தம்.

### திருக்கூடலூர்.

கலிவிருத்தம். (அபநுபாரகம் - ஆதிதாளம்.)

தாம்தம்பெருமையறியார் * தூது
வேந்தர்க்காய வேந்தரூர்போல் *
காந்தள்விரல் மென்கலைநன்மடவார் *
கூந்தல்கமழும் கூடலூரே. (௧)

செறுந்திண் திமிலேறுடைய * பின்னை
பெறுந்தண்கோலம் பெற்றாரூர்போல் *
நறுந்தண்தீங்தேன் உண்டவண்டு *
குறிஞ்சிபாடும் கூடலூரே. (௨)

பிள்ளையுருவாய்த் தயிருண்டு * அடியே
னுள்ளம்புகுந்த ஒருவரூர்போல் *
கள்ளநாரை வயலுள் * கயல்மீன்
கொள்ளைகொள்ளும் கூடலூரே. (௩)

கூற்றேருருவின் குறளாய் * நிலம்நீர்
ஏற்றான் எந்தைபெருமானூர்போல் *
சேற்றேருழவர் கோதைப்போதூண் *
கோல்தேன்முரலும் கூடலூரே. (௪)

தொண்டர்பரவச் சுடர்சென்றணவ *
அண்டத்தமரும் அடிகளூர்போல் *
வண்டலலையுள் கெண்டைமிளிர *
கொண்டலதிரும் கூடலூரே. (௫)

தக்கன்வேள்வி தகர்த்ததலைவன் *
துக்கம்துடைத்த துணைவரூர்போல் *
எக்கலிடு நுண்மணல்மேல * எங்கும்
கொக்கின்பழம்வீழ் கூடலூரே. (௬)

கருந்தண்கடலும் மலையும்உலகும் *
அருந்தும்அடிகள் அமரும்ஊர்போல் *
பெருந்தண்முல்லைப் பிள்ளையோடி *
குருந்தம்தழுவும் கூடலூரே. (௭)

கலைவாழ்பிணையோடு அணையும் * திருநீர்
மலைவாழ்எந்தை மருவும்ஊர்போல் *
இலைதாழ்தெங்கின் மேல்நின்று * இளநீர்க்
குலைதாழ்கிடங்கின் கூடலூரே. (அ)

பெருகுகாதல அடியேனுள்ளம *
உருகபபுகுநத ஒருவரூாபோல *
அருகு கைதைமலர * கெண்டை
குருகென்றஞ்சும் கூடலூரே. (௯)

காவிப் பெருநீர்வண்ணன * கண்ணன்
மேவித்திகழும கூடலூர்மேல *
கோவைத்தமிழால் கலியன்சொன்ன *
பாவைப்பாடப் பாவம்போமே. (௧௦)

அடிவரவு—தாம் செறும் பிள்ளை கூற்றோ தொண்டர் தக்கன் கருந்தண கலை பெருகு காவி வென்றி

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## ௩ - ஆந் திருமொழி—வென்றி.



### திருவெள்ளறை

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

(சங்கராபரண ராகம் - ஆதி தாளம்)

வென்றிமாமழுவேந்திமுன்மண்மிசைமன்னரை மூவெழுகால்
கொன்றதேவ!*நின்குரைகழல்தொழுவது ஓர்வகைஎனக்கருள்புரியே *
மன்றில்மாம்பொழில்நுழைதந்து மல்லிகைமௌவலின்போது அலர்த்தி*
தென்றல்மாமணம்கமழ்தரவரு திருவெள்ளறைநின்றானே ! (௧)

வசையில்நான்மறைகெடுத்த அம்மலரயற்குஅருளி, முன்பரிமுகமாய் *
இசைகொள்வேதநூலென்றிவைபயந்தவனே ! எனக்குஅருள்புரியே *
உயர்கொள்மாதவிப்போதொடுலாவிய மாருதம்வீதியின்வாய் *
திசையெல்லாம்கமழும்பொழில்சூழ் திருவெள்ளறைநின்றானே ! (௨)

வெய்யனாய்உலகேழுடன்நலிந்தவன் உடலகம்இருபிளவா *
கையில்நீளுகிர்ப்படையதுவாய்த்தவனே ! எனக்குஅருள்புரியே *
மையினார்தருவராலினம்பாய வண்தடத்திடைக்கமலங்கள் *
தெய்வநாறும்ஒண்பொய்கைகள்சூழ் திருவெள்ளறைநின்றானே ! (௩)

வாம்பரியுகமன்னர்தம்முயிர்செக ஐவர்கட்கு அரசளித்த *
காம்பினார்திருவேங்கடப்பொருப்ப! நின்காதலை அருள்எனக்கு *
மாம்பொழில்தளிர்கோதியமடக்குயில் வாயதுதுவர்ப்பெய்த *
தீம்பலங்கனித்தேனதுநுகர் திருவெள்ளறைநின்றானே! (௪)

மானவேலொண்கண்மடவரல் மண்மகள் அழுங்கமுந்நீர்ப்பரப்பில் *
ஏனமாகிஅன்று இருநிலம்இடந்தவனே! எனக்குஅருள்புரியே *
கானமாமுல்லைக்கழைக்கரும்பேறி வெண்முறுவல்செய்து அலர்கின்ற *
தேனின்வாய்மலர்முருகுகுக்கும் திருவெள்ளறைநின்றானே! (௫)

பொங்குநீள்முடி அமரர்கள்தொழுதெழ அமுதினைகொடுத்தளிப்பான் *
அங்குஓராமையதாகிய ஆதி! நின்னடிமையை அருள்எனக்கு *
தங்குபேடையோடூடியமதுகரம் தையலார்குழலணைவான் *
திங்கள்தோய்சென்னிமாடம்சென்றணை திருவெள்ளறைநின்றானே!

ஆறினோடொருநான்குடைநெடுமுடி அரக்கன்தன்சிரமெல்லாம் *
வேறுவேறுகவில்லதுவளைத்தவனே! எனக்குஅருள்புரியே *
மாறில்சோதியமரதகப்பாசடைத் தாமரைமலர்வார்ந்த *
தேறல்மாந்திவண்டுஇன்னிசைமுரல திருவெள்ளறைநின்றானே! (௭)

முன்இவ்வேழுலகுஉணர்வின்றிஇருள்மிக உம்பர்கள்தொழுதேத்த *
அன்னமாகிஅன்றருமறைபயந்தவனே! எனக்குஅருள்புரியே *
மன்னுகேதகைசூதகம்என்றிவை வனத்திடைச்சுரும்பினங்கள் *
தென்னவென்றுவண்டுஇன்னிசைமுரல் திருவெள்ளறைநின்றானே!

ஆங்குமாவலிவேள்வியில்இரந்துசென்று அகலிடம்முழுதினையும் *
பாங்கினால்கொண்டபரம! நிற்பணிந்தெழுவேன் எனக்குஅருள்புரியே *
ஓங்குபிண்டியின்செம்மலரேறி வண்டுழிதர * மாவேறித்
தீங்குயில்மிழற்றும்படப்பைத் திருவெள்ளறைநின்றானே! (௯)

மஞ்சுலாமணிமாடங்கள்சூழ் திருவெள்ளறைதன்மேய *
அஞ்சனம்புரையும்திருவுருவனை ஆதியைஅமுதத்தை *
நஞ்சுலாவியவேல்வலவன் கலிகன்றிசொல்ஐயிரண்டும் *
எஞ்சலின்றிநின்றேத்தவல்லார் இமையோர்க்கரசுஆவர்களே. (௰)

அடிவரவு:—வென்றி வைசை வெய்ய வாம்பரி மானவேல் பொங்கு ஆறு முன் ஆங்கு மஞ்சு உந்திமேல்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



# ச - ஆந் திருமொழி—உந்திமேல்.

## திருவரங்கம். (க)

கலிநிலைத்துறை. (ஸஹாநாராகம் - அடதாளம்)

உந்திமேல்நான்முகனைப்படைத்தான் உலகுண்டவன்
எந்தைபெம்மான் * இமையோர்கள்தாதைக்கு இடமென்பரால் *
சந்திநோடுமணியுங்கொழிக்கும் புனல்காவிரி *
அந்திபோதுமிறைத்தார்வயல்சூழ் தென்னரங்கமே. (க)

வையமுண்டுஆலிலைமேவுமாயன், மணிநீள்முடி *
பைகொள்நாகத்தணையான் பயிலுமிடமென்பரால் *
தையல்நல்லார்குழல்மாலையும் மற்றவர்தடமுலை *
செய்யசாந்துங்கலந்திழிபுனல்சூழ் தெனனரங்கமே (உ)

பண்டுஇவ்வையமளப்பான்சென்று மாவலிகையில்நீர்
கொண்ட * ஆழித்தடக்கைக் குறளனிடமென்பரால *
வண்டுபாடும்மதுவார்புனல் வந்திழிகாவிரி *
அண்டநாறும்பொழில்சூழ்ந்து அழகாரதென்னரங்கமே. (ங)

விளைத்தவெம்போர் விறல்வாளரக்கனநகர்பாழ்பட *
வளைத்தவல்வில்தடக்கையவனுக்கு இடமென்பரால் *
துளைக்கையானைமருப்பும் அகிலுங்கொணர்ந்துந்தி * முன்
திளைக்கும்செல்வப்புனல்காவிரிசூழ் தென்னரங்கமே (ச)

வம்புலாம்கூந்தல்மண்டோதரிகாதலன் வான்புக *
அம்புதன்னால்முனிந்த அழகனிடமென்பரால் *
உம்பர்கோனும்உலகேழும் வந்தீண்டிவணங்கும * நல
செம்பொனாரும்மதிள்சூழ்ந்து அழகாரதெனனரங்கமே. (ரு)

கலையுடுத்தஅகலல்குல் வன்பேய்மகள்தாயென *
முலைகொடுத்தாளுயிருண்டவன் † வாழிடமென்பரால் *
குலையெடுத்தகதலிப் பொழிலூடும்வந்துஉந்தி * முன்
அலையெடுக்கும்புனல்காவிரிசூழ் தென்னரங்கமே. (சு)

கஞ்சன்நெஞ்சும்கடுமல்லரும் சகடமும்காலினால் *
துஞ்சவென்றசுடராழியான் † வாழிடமென்பரால *
மஞ்சுசேர்மாளிகை நீடகில்புகையும் * ‡ மாமறையோர்
செஞ்சொல்வேள்விப்புகையும்கமழும் தென்னரங்கமே. (எ)

† 'வாழுமிடம்' என்றும் பாடம். ‡ 'மறையோர்' என்றே ஓதுவர்.

ஏனமீனாமையோடு அரியும்சிறுகுறளுமாய் *
தானுமாய தரணித்தலைவனிடமென்பரால் *
வானும்மண்ணும்நிறையப் புகுந்தீண்டிவணங்கும் * நல்
தேனும்பாலும்கலந்தன்னவர்சேர் தென்னரங்கமே. (அ)

சேயனென்றும்மிகப்பெரியன் நுண்ணேர்மையினாய * இம்
† மாயையாருமறியாவகையான் இடமென்பரால் *
வேயின்முத்துமமணியும்கொணர்ந்து ஆர்புனல்காவிரி *
ஆயபொனமாமதிள்சூழ்ந்து அழகார்தென்னரங்கமே. (௯)

அல்லிமாதரமரும் திருமார்வனரங்கத்தை *
கல்லின்மன்னுமதிள் மங்கையர்கோன்கலிகன்றிசொல *
நல்லிசைமாலைகள் நாலிரண்டுமிரண்டும் * உடன்
வல்லவர்தாம்உலகாண்டு பின்வானுலகாள்வரே. (௰)

அடிவரவு:—உந்திமேல் வையம் பண்டு விளைத்த வம்பு கலை கஞ்சன் ஏனம் அல்லி சேயன் வெருவாதாள்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## ரு - ஆந் திருமொழி—வெருவாதாள்.



### திருவரங்கம் (௨)

[பிரிவாற்றது வருந்துந் தலைவியைக்குறித்துத் தாய் இரங்கிக்கூறிய பாசுரம்.]

அறுசீராசிரியவிருத்தம். (காம்போதிராகம் - ஆதிதாளம்)

வெருவாதாளவாய்வெருவி
வேங்கடமே! வேங்கடமே! என்கின்றாளால் *
மருவாளாலென்குடங்கால் வாள்நெடுங்கண்
துயில்மறந்தாள் * வண்டார்கொண்ட
லுருவாளன்வானவர்தமுயிராளன்
ஒலிதிரைநீர்ப்பௌவம்கொண்ட
திருவாளன் * என்மகளைச்செய்தனகள்
எங்ஙனம்நான்சிந்திக்கேனே? (க)

† 'மாயையை' என்றும் வழங்குவர்.

கலையாளா அகலல்குல் கனவளையும்கையாளா
என்செய்கேன்நான்? *
விலையாளா அடியேனை வேண்டுதியோ?
வேண்டாயோ? என்னும் * மெய்ய
மலையாளன்வானவர்தம்தலையாளன்
மராமரமேழெய்தவென்றிச்
சிலையாளன் * என்மகளைச்செய்தனகள்
எங்ஙனம்நான்சிந்திக்கேனே? (௨)

மானாயமென்னோக்கி வாள்நெடுங்கண்நீர்மல்கும்
வளையும்சோரும் *
தேனாயநறுந்துழாய் அலங்கலின்
திறம்பேசிஉறங்காள்காண்மின் *
கானாயன்கடிமனையில்தயிருண்டுநெய்பருக
நந்தன்பெற்ற
ஆனாயன் * என்மகளைச்செய்தனகள்
அம்மனைமீர்! அறிகிலேனே. (௩)

தாய்வாயிற்சொற்கேளாள்
தன்னாயத்தோடுஅணையாள் தடமென்கொங்கை
யே * ஆரச்சாந்தணியாள்
எம்பெருமான்திருவரங்கம்எங்கே? என்னும் *
பேய்மாயமுலையுண்டுஇவ்வுலகுண்ட
பெருவயிற்றன்பேசில்நங்காய்! *
மாமாயன்என்மகளைச்செய்தனகள்
மங்கைமீர்! மதிக்கிலேனே. (௪)

பூண்முலைமேல்சாந்தணியாள்
பொருகயற்கண்மையெழுதாள்பூவைபேணாள் *
ஏணறியாள்எத்தனையும்
எம்பெருமான்திருவரங்கமெங்கே? என்னும் *
நாண்மலராள்நாயகனாய்
நாமறியஆய்ப்பாடிவளர்ந்தநம்பி *
ஆண்மகனாய்என்மகளைச்செய்தனகள்
அம்மனைமீர்! அறிகிலேனே. (ரு)

தாதாடுவனமாலை தாரானோ?
என்றென்றேதளர்ந்தாள்காண்மின் *
யாதானுமொன்றுஉரைக்கில்
எம்பெருமான்திருவரங்கமென்னும் * பூமேல்
மாதாளன்குடமாடிமதுசூதன்
மன்னர்க்காய்முன்னம்சென்ற
தூதாளன் * என்மகளைச்செய்தனகள்
எங்ஙனம்நான்சொல்லுகேனே? (௬)

வாராளும்இளங்கொங்கை வண்ணம்
வேறாயினவாறுஎண்ணாள் * எண்ணில்
பேராளன்பேரல்லால்பேசாள்
இப்பெண்பெற்றேன்என்செய்கேன்நான்? *
தாராளன்தண்குடந்தைநகராளன்
ஐவர்க்காய்அமரிலுய்த்த
தேராளன் * என்மகளைச்செய்தனகள்
எங்ஙனம்நான்செப்புகேனே? (௭)

உறவாதுமிலளென்றென்று
ஒழியாதுபலரேசுமலராயிற்றால் *
மறவாதேஎப்பொழுதும்
மாயவனே! மாதவனே! என்கின்றாளால் *
பிறவாதபேராளன்பெண்ணாளன்மண்ணாளன்
விண்ணோர்தங்கள்
அறவாளன் * என்மகளைச்செய்தனகள்
அம்மனைமீர்! அறிகிலேனே. (௮)

பந்தோடுகழல்மருவாள் பைங்கிளியும்
பாலூட்டாள்பாவைபேணாள் *
வந்தானோ! திருவரங்கன் வாரானோ!
என்றென்றேவளையுஞ்சோரும் *
சந்தோகன்பௌழியன் ஐந்தழலோம்பு
தைத்திரியன்சாமவேதி
அந்தோ! † வந்துஎன்மகளைச்செய்தனகள்
அம்மனைமீர்! அறிகிலேனே. (௯)

---

† 'அந்தோவென்பொன்மகளை' என்பது பாடாந்தரம்.

✿ சேலுகளும்வயல்புடைசூழ்
திருவரங்கத்தம்மானைச்சிந்தைசெய்த *
நீலமலர்க்கண்மடவாள்நிறையழிவைத்
தாய்மொழிந்தஅதனை * நேரார்
காலவேல்பரகாலன்கலிகன்றி
யொலிமாலைகற்றுவல்லார் *
மாலைசேர்வெண்குடைக்கீழ்மன்னவராய்ப்
பொன்னுலகில்வாழ்வர்தாமே. (க0)

அடிவரவு:—வெருவாதாள் கலை மான் தாய் பூண் தாதாடு வாராளும் உறவு பந்தோடு சேல் கைம்மானம்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



கா - ஆந் திருமொழி—கைம்மானம்.



திருவரங்கம். (ரு)

கலிவிருத்தம் (பைரவிராகம் - ரூபகதாளம்.)

✿ கைம்மானமழகளிற்றைக் கடல்கிடந்தகருமணியை *
மைம்மானமரதகத்தை மறையுரைத்ததிருமாலை *
எம்மானைஎனக்குஎன்றும்இனியானைப் பனிகாத்த
அம்மானை * யான்கண்டது அணிநீர்தென்னரங்கத்தே. (க)

✿ பேரானைக் குறுங்குடியெம்பெருமானை * திருத்தண்கா
லூரானைக் கரம்பனூருத்தமனை * முத்திலங்கு
காரார்திண்கடலேழும் மலையேழிவ்வுலகேழுண்டும் *
ஆராதென்றிருந்தானைக் கண்டதுதென்னரங்கத்தே. (உ)

ஏனாகிஉலகிடந்து அன்றுஇருநிலனும்பெருவிசும்பும் *
தானாயபெருமானைத் தன்னடியார்மனத்துஎன்றும் *
தேனாகியமுதாகித்திகழ்ந்தானை * மகிழ்ந்தொருகால்
ஆனாயனானானைக் கண்டதுதென்னரங்கத்தே. (௩)

வளர்ந்தவனைத்தடங்கடலுள் வலியுருவில்திரிசகடம் *
† தளர்ந்ததிரஉதைத்தவனைத் தரியாதுஅன்றுஇரணியனைப்
பிளந்தவனை * பெருநிலம்ஈரடிநீட்டிப் பண்டொருநாள்
அளந்தவனை * யான்கண்டது அணிநீர்த்தென்னரங்கத்தே. (௪)

† 'தளர்ந்துதிர' என்றும் பாடாந்தரம்.

நீரழலாய் நெடுநிலனாய்நின்றானை * அன்றுஅரக்க
னூர்அழலா லுண்டானைக் கண்டார்பின்காணுமே *
பேரழலாய்ப்பெருவிசும்பாய்ப் பின்மறையோர்மந்திரத்தின் *
ஆரழலால்உண்டானைக் கண்டதுதென்னரங்கத்தே. (ரு)

தஞ்சினத்தைத்தவிர்த்தடைந்தார் தவநெறியை * தரியாது
கஞ்சனைக்கொன்று அன்றுஉலகமுண்டுஉமிழ்ந்தகற்பகத்தை *
வெஞ்சினத்தகொடுந்தொழிலோன் விசையுருவைஅசைவித்த *
அஞ்சிறைப்புட்பாகனை யான்கண்டதுதென்னரங்கத்தே. (சா)

சிந்தனையைத்தவநெறியைத் திருமாலை * பிரியாது
வந்துஎன்மனத்துஇருந்த வடமலையை * வரிவண்டார்
கொந்தணைந்தபொழிற்கோவல் உலகளப்பான் அடிநிமிர்த்த
அந்தணனை * யான்கண்டது அணிநீர்த்தென்னரங்கத்தே. (எ)

துவரித்தஉடையவர்க்கும் தூய்மையில்லாச்சமணர்க்கும் *
அவர்கட்குஅங்குஅருளில்லா அருளானை * தன்னடைந்த
எமர்கட்கும்அடியேற்கும் எம்மாற்கும்எம்மனைக்கும் *
அமரர்க்கும்பிரானாரைக் கண்டதுதென்னரங்கத்தே. (அ)

பொய்வண்ணம்மனத்தகற்றிப் புலனைந்தும்செலவைத்து *
மெய்வண்ணம்நினைந்தவர்க்கு மெய்ந்நின்றவித்தகனை *
மைவண்ணம்கருமுகில்போல் திகழ்வண்ணமரதகத்தின் *
அவ்வண்ணவண்ணனை யான்கண்டதுதென்னரங்கத்தே. (கூ)

❋ ஆமருவிநிரைமேய்த்த அணியரங்கத்தம்மானை *
காமருசீர்க்கலிகன்றி ஒலிசெய்தமலிபுகழ்சேர் *
நாமருவுதமிழ்மாலை நாலிரண்டோடிரண்டினையும் *
தாமருவிவல்லார்மேல் சாரா † தீவினைதானே. (௧௦)

அடிவரவு:—கைம்மானம் பேரானை எஞ்சி வளர்ந்தவனே நீர் தம் சிந்தனை துவரித்த பொய் ஆமருவி பண்டை.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



† 'தீவினைதாமே' எனவும் ஓதுவர்.

## எ - ஆந் திருமொழி—பண்டை.

திருவரங்கம். (௪)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (ஸாவேரிராகம்-ஆதிதாளம்.)

பண்டைநான்மறையும்வேள்வியும் கேள்விப்
பதங்களும்பதங்களின்பொருளும் *
பிண்டமாய்விரிந்தபிறங்கொளியனலும்
பெருகியபுனலொடுநிலனும் *
கொண்டல்மாருதமுங்குரைகடலேழும்
ஏழுமாமலைகளும்விசும்பும் *
அண்டமுந்தானாய்நின்றஎம்பெருமான்
அரங்கமாநகரமர்ந்தானே. (க)

இந்திரன்பிரமன்ஈசனென்றிவர்கள்
எண்ணில்பல்குணங்களேஇயற்ற *
தந்தையும்தாயும்மக்களும்மிக்க
சுற்றமும்சுற்றிநின்றகலாப்
பந்தமும்!* பந்தமறுப்பதோர்மருந்தும்
பான்மையும் பல்லுயிர்க்கெல்லாம் *
அந்தமும்வாழ்வுமாயஎம்பெருமான்
அரங்கமாநகரமர்ந்தானே. (உ)

மன்னுமாநிலனும்மலைகளும்கடலும்
வானமும்தானவருலகும் *
துன்னுமாயிருளாய்த்துலங்கொளிசுருங்கித்
தொல்லைநான்மறைகளும்மறைய *
பின்னும்வானவர்க்கும்முனிவர்க்கும்நல்கிப்
பிறங்கிருள்நிறங்கெட * ஒருநாள்
அன்னமாயன்றங்கருமறைபயந்தான்
அரங்கமாநகரமர்ந்தானே. (௩)

மாயிருக்குன்றமொன்றுமத்தாக
மாசுணமதனொடும்அளவி *
பாயிரும்பௌவம்பகடுவிண்டலறப்
படுதிரைவிசும்பிடைப்படர *

சேயிருவிசும்புந்திங்களுஞ்சுடரும்
தேவருந்தாமுடன்திசைப்ப *
ஆயிரந்தோளால்அலைகடல்கடைந்தான்
அரங்கமாநகரமர்ந்தானே. (௪)

எங்ஙனேயுய்வர்? தானவர்நினைந்தால்
இரணியனிலங்குபூணகலம் *
பொங்குவெங்குருதிபொன்மலைபிளந்து
பொழிதரும்அருவியொத்திழிய *
வெங்கண்வாளெயிற்றோர்வெள்ளிமாவிலங்கல்
விண்ணுறக்கனல்விழித்தெழுந்தது *
அங்ஙனேயொக்கஅரியுருவானான்
அரங்கமாநகரமர்ந்தானே. (ரு)

ஆயிரங்குன்றம்சென்றுதொக்கனைய
அடல்புரைஎழில்திகழ்திரள்தோள் *
ஆயிரந்துணியஅடல்மழுப்பற்றி
மற்றவனகல்விசும்பணைய *
ஆயிரம்பெயரால்அமரர்சென்றிறைஞ்ச
அறிதுயிலலைகடல்நடுவே *
ஆயிரஞ்சுடர்வாய்அரவணைத்துயின்றான்
அரங்கமாநகரமர்ந்தானே. (சு)

சுரிகுழல்கனிவாய்த்திருவினைப்பிரித்த
கொடுமையிற்கடுவிசையரக்கன் *
எரிவிழித்திலங்குமணிமுடிபொடிசெய்து
இலங்கைபாழ்படுப்பதற்கெண்ணி *
வரிசிலைவளையஅடுசரந்துரந்து
மறிகடல்நெறிபட * மலையால்
அரிகுலம்பணிகொண்டுஅலைகடலடைத்தான்
அரங்கமாநகரமர்ந்தானே. (எ)

ஊழியாய்ஓமத்துச்சியாய் ஒருகா
லுடையதேரொருவனாய் * உலகில்
சூழிமால்யானைத்துயர்கெடுத்து
இலங்கைமலங்கஅன்றுஅடுசரந்துரந்து *

பாழியால்மிக்கபார்த்தனுக்கருளிப்
பகலவனொளிகெட * பகலே
ஆழியால்அன்றங்குஆழியைமறைத்தான்
அரங்கமாநகரமர்ந்தானே. (அ)

பேயினார்முலையூண்பிள்ளையாய் ஒருகால்
பெருநிலம்விழுங்கி * அதுமிழ்ந்த
வாயனாய்மாலாய்ஆலிலைவளர்ந்து
மணிமுடிவானவர்தமக்குச்
சேயனாய் * அடியேற்குஅணியனாய்வந்து
என்சிந்தையுள்வெந்துயரறுக்கும் *
ஆயனாய்அன்றுகுன்றமொன்றெடுத்தான்
அரங்கமாநகரமர்ந்தானே. (கூ)

❁ பொன்னும்மாமணியும்முத்தமும்சுமந்து
பொருதிரைமாநதிபுடைசூழ்ந்து *
அன்னமாடுலவும்அலைபுனல்சூழ்ந்த
அரங்கமாநகரமர்ந்தானை *
மன்னுமாமாடமங்கையர் தலைவன்
மானவேற்கலியன்வாயொலிகள் *
பன்னியபனுவல்பாடுவார் நாளும்
பழவினைபற்றறுப்பாரே. (கo)

அடிவரவு:—பண்டை இந்திரன் மன்னு மாயிரும் எங்ஙனே ஆயிரம் சுரி ஊழி பேயினார் பொன்னும் ஏழை.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## அ - ஆந் திருமொழி—ஏழையேதலன்.



### திருவரங்கம். (ரு)

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (தந்யாசிராகம்-ஆதிதாளம்.)

❁ ஏழைஏதலன்கீழ்மகனென்னாது
இரங்கி மற்றவற்குஇன்னருள்சுரந்து *
மாழைமான்மடநோக்கிஉன்தோழி
உம்பிஎம்பியென்றொழிந்திலை * உகந்து

தோழன்நீஎனக்குஇங்கொழியென்ற
சொற்கள்வந்து அடியேன்மனத்திருந்திட *
ஆழிவண்ண ! நின்னடியிணையடைந்தேன்
அணிபொழில்திருவரங்கத்தம்மானே ! (க)

வாதமாமகன்மர்க்கடம்விலங்கு
மற்றோர்சாதியென்றொழிந்திலை * உகந்து
காதலாதரம்கடலினும்பெருகச் செய்
தகவினுக்குஇல்லைகைம்மாறென்று *
கோதில்வாய்மையினுயொடும் உடனே
உண்பன்நானென்றவொண்பொருள் * எனக்கும்
ஆதல்வேண்டுமென்று அடியிணையடைந்தேன்
அணிபொழில்திருவரங்கத்தம்மானே ! (உ)

கடிகொள்பூம்பொழில்காமருபொய்கை
வைகுதாமரைவாங்கியவேழம *
முடியும்வண்ணம்ஓர்முழுவலிமுதலை
பற்ற மற்றதுநின்சரண்நினைப்ப *
கொடியவாய்விலங்கின் னுயிர்மலங்கக்
கொண்டசீற்றமொன் றுண்டுளதறிந்து * உன்
அடியனேனும்வந்து அடியிணையடைந்தேன்
அணிபொழில்திருவரங்கத்தம்மானே ! (௩)

நஞ்சுசோர்வதோர்வெஞ்சினவரவம்
வெருவிவந்துநின்சரணெனச்சரண *
நெஞ்சில்கொண்டுநின்னஞ்சிறைப்பறவைக்கு
அடைக்கலம்கொடுத்து அருள்செய்ததறிந்து *
வெஞ்சொலாளர்கள்நமன்தமர்கடியர்
கொடியசெய்வனவுள * அதற்கு அடியேன்
அஞ்சிவந்துநின்னடியிணையடைந்தேன்
அணிபொழில்திருவரங்கத்தம்மானே ! (௪)

மாகமாநிலம்முழுதும்வந்திறைஞ்சும்
மலரடிகண்டமாமறையாளன் *
தோகைமாமயிலன்னவரின்பம்
துற்றிலாமையில் அத்த ! இங்குஒழிந்து *

போகம்நீயெய்திப்பின்னும்நம்மிடைக்கே
போதுவாயென்றபொன்னருள் * எனக்கும்
ஆகவேண்டுமென்று அடியிணையடைந்தேன்
அணிபொழில்திருவரங்கத்தம்மானே ! (ரு)

மன்னுநான்மறைமாமுனிபெற்ற
மைந்தனை மதியாதவெங்கூற்றந்
தன்னையஞ்சி * நின்சரணெனச்சரணாய்த்
தகவில்காலனையுகமுனிந்தொழியா *
பின்னைஎன்றும்நின் திருவடிபிரியாவண்ணம்
எண்ணியபேரருள் * எனக்கும்
அன்னதாகுமென்று அடியிணையடைந்தேன்
அணிபொழில்திருவரங்கத்தம்மானே (சு)

ஓதுவாய்மையும்உவனியப்பிறப்பும்
உனக்குமுன்தந்த அந்தணனொருவன் *
காதலென்மகன்புகலிடம்காணேன்
கண்டுநீதருவாயெனக்குஎன்று *
கோதில்வாய்மையினுன் உனை வேண்டிய
குறைமுடித்து அவன்சிறுவனைக்கொடுத்தாய் *
ஆதலால்வந்துஉன்னடியிணையடைந்தேன்
அணிபொழில்திருவரங்கத்தம்மானே ! (எ)

வேதவாய்மொழி அந்தணனொருவன்
எந்தை ! நின்சரண், என்னுடைமனைவி *
காதல்மக்களைப்பயத்தலும்காணாள்
† கடியதோர்தெய்வம்கொண்டொளிக்குமென்றழைப்ப *
ஏதலார்முன்னே இன்னருள் அவற்குச்செய்து
உன்மக்கள்மற்றிவரென்று கொடுத்தாய் *
ஆதலால்வந்துஉன்னடியிணையடைந்தேன்
அணிபொழில்திருவரங்கத்தம்மானே ! (அ)

❀ துளங்குநீண்முடியரசர்தம்குரிசில்
தொண்டைமன்னவன் திண்திறலொருவற்கு *
உளங்கொளன்பினோடு இன்னருள்சுரந்து
அங்கோடுநாழிகையேழுடனிருப்ப *

---

† 'கடியதெய்வம்' என்றும் பாடம்.

வளங்கொள்மந்திரம்மற்றவற்கு அருளிச்
செய்தவாறு அடியேனறிந்து * உலக
மளந்தபொன்னடியேயடைந்துய்ந்தேன்
அணிபொழில்திருவரங்கத்தம்மானே ! (கூ)

✽ மாடமாளிகைசூழ்திருமங்கை
மன்னன் ஒன்னலர்தங்களைவெலலும் *
ஆடல்மாவலவன்கலிகன்றி
அணிபொழில்திருவரங்கத்தம்மானை *
நீடுதொல்புகழாழிவல்லானை
எந்தையைநெடுமாலைநினைந்த *
பாடல்பத்திவைபாடுமின்தொண்டீர் !
பாட † நும்மிடைப்பாவம்நில்லாவே. (கo)

அடிவரவு—ஏழை வாதம் கடி நஞ்சு மாகம் மன்னு ஓது வேதம் துளங்கு மாடம் கை.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்



## கூ - ஆந் திருமொழி - கையிலங்கு.



திருப்பேர்நகர்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம் (அடாணாராகம் - ஜம்பைதாளம்.)

✽ கையிலங்காழி ‡ சங்கன் கருமுகிலதிருநிறத்தன் *
பொய்யிலன்மெய்யன தன்தாளடைவரேல அடிமையாக்கும் *
செய்யலர்கமலமோங்கு செறிபொழில்தென்திருப்பேர் *
பையரவணையான்நாமம் பரவிநானுய்ந்தவாறே ! (க)

வங்கமார்கடல்களேழும் மலையும்வானகமும்மற்றும் *
அங்கண்மாஞாலமெல்லாம் அமுதுசெய்துமிழ்ந்தஎந்தை *
திங்கள்மாமுகிலணவு செறிபொழிலதென்திருப்பேர் *
எங்கள்மால்இறைவன்நாமம் ஏத்திநானுய்ந்தவாறே ! (உ)

ஒருவனைஉந்திப்பூமேல் ஓங்குவித்து, ஆகந்தன்னால் *
ஒருவனைச்சாபம்நீக்கி உம்பராளென்றுவிட்டான் *
பெருவரைமதிள்கள்சூழ்ந்த பெருநகரரவணைமேல் *
கருவரைவண்ணன் $ தென்பேர் கருதிநானுய்ந்தவாறே ! (ங)

† 'நும்முடை' என்பதும் பாடம். ‡ 'சங்கம்' என்பது வ்யாக்யானபாடம். $ 'தன்பேர்' என்பது வ்யாக்யானபாடம்.

ஊனமர்தலையொன்றேந்தி உலகெலாம்திரியும்ஈசன் *
ஈனமர்சாபம்நீக்காயென்ன ஒண்புனலையீந்தான் *
தேனமர்பொழில்கள்சூழ்ந்த செறிவயல்தென்திருப்பேர் *
வானவர்தலைவன்நாமம் வாழ்த்திநானுய்ந்தவாறே ! (ச)

வக்கரன்வாய்முன்கீண்ட மாயனே ! என்றுவானோர்
புக்கு * அரண்தந்தருளாயென்னப் பொன்னாகத்தானை *
நக்கரியுருவமாகி நகம்கிளர்ந்திடந்துகந்த *
சக்கரச்செல்வன்தென்பேர்த் தலைவன்தாளடைந்துய்ந்தேனே. (ரு)

வில்கலால்கடலடைத்து விளங்கிழைபொருட்டு * வில்லால்
இலங்கைமாநகர்க்கிறைவன் இருபதுபுயம்துணித்தான் *
நலங்கொள்நான்மறைவல்லார்கள் ஓத்தொலியேத்தக்கேட்டு *
மலங்குபாய்வயல்திருப்பேர் மருவிநான்வாழ்நதவாறே ! (சா)

வெண்ணெய்தானமுதுசெய்ய வெகுண்டுமத்தாய்ச்சியோச்சி *
கண்ணியார்குறுங்கயிற்றால் கட்டவெட்டென்றிருந்தான் *
திண்ணமாமதிள்கள்சூழ்ந்த தென்திருப்பேருள் * வேலை
வண்ணனார்நாமம் நாளும்வாய்மொழிநதுய்ந்தவாறே ! (எ)

அம்பொனாருலகமேழுமறிய ஆய்ப்பாடிதன்னுள் *
கொம்பனார்பின்னைகோலம் கூடுதற்குஏறுகொன்றான் *
செம்பொனார்மதிள்கள்சூழ்ந்த தென்திருப்பேருள்மேவும் *
எம்பிரான்நாமம் நாளுமேத்திநானுய்ந்தவாறே ! (அ)

நால்வகைவேதம்ஐந்துவேள்வி ஆறங்கம்வல்லார் *
மேலைவானவரில்மிக்க வேதியர்ஆதிகாலம் *
சேலுகள்வயல்திருப்பேர்ச் செங்கண்மாலோடும்வாழ்வார் *
சீலமாதவத்தர்சிந்தையாளி என்சிந்தையானே. (கூ)

ஜ வண்டறைபொழில்திருப்பேர் வரியரவணையில் * பள்ளி
கொண்டுறைகின்றமாலை கொடிமதிள்மாடமங்கை *
திண்திறல்தோள்கலியன் செஞ்சொலால்மொழிந்தமாலை *
கொண்டிவைபாடியாடக் கூடுவாநீள்விசும்பே. (க0)

**அடிவரவு:— கை வக்கம் ஒருவனை ஊன் வக்கரன் வில்கலால் வெண்ணெய் அம்பொன் நால்வகை வண்டறை தீதறு.**

**திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.**



## க0 - ஆந் திருமொழி—தீதறு.

### திருநந்திபுரவிண்ணகரம்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (சுருட்டிராகம் - ஜம்பைதாளம்.)

தீதறுநிலத்தொடெரிகாலினொடு நீர்கெழுவிசும்புமவையாய் *
மாசறுமனத்தினொடுஉறக்கமொடிறக்கை யவையாயபெருமான் *
தாய் † செறஉளைந்துதயிருண்டுகுடமாடு தடமார்வர், தகைசேர் *
நாதன்உறைகின்றநகர் நந்திபுரவிண்ணகரம்நண்ணுமனமே! (க)

உய்யும்வகையுண்டுசொனசெய்யில் உலகேழும்ஒழியாமைமுனநாள் *
மெய்யினளவேஅமுதுசெய்யவல ஐயனவன்மேவுநகர்தான் *
மையவரிவண்டுமதுவுண்டுகிளையோடு மலர்கிண்டி, அதன்மேல் *
கைவளம்நவிற்றுபொழில் நந்திபுரவிண்ணகரம்நண்ணுமனமே! (உ)

உம்பருலகேழுகடலேழுமலையேழும் ஒழியாமைமுனநாள் *
தம்பொன்வயிறாரளவுமுண்டுஅவையுமிழ்ந்த தடமார்வர், தகைசேர் *
வம்புமலர்கின்றபொழில் பைம்பொனவருதும்பிமணிகங்குல்வயல்சூழ் *
நம்பன்உறைகின்றநகர் நந்திபுரவிண்ணகரம்நண்ணுமனமே! (ங)

பிறையினொளியெயிறிலகமுறுகியெதிர்பொருதுமென வந்தஅசுரர் *
இறைகளவைநெறுநெறெனவெறியஅவர்வயிறழல நின்றபெருமான் *
சிறைகொள்மயில்குயில்பயிலமலர்களுக அளிமுரலஅடிகொள்நெடுமா
நறைசெய்பொழில்மழைதவழும்நந்திபுரவிண்ணகரம் நண்ணுமனமே!

மூளஎரிசிந்திமுனிவெய்திஅமர்செய்துமென வந்தஅசுரர் *
தோளும்அவர்தாளும்முடியோடுபொடியாக நொடியாமளவெய்தான் *
வாளும்வரிவில்லும்வளையாழிகதைசங்கமிவை அங்கையுடையான் *
நாளும்உறைகின்றநகர் நந்திபுரவிண்ணகரம்நண்ணுமனமே! (ரு)

தம்பியொடுதாமொருவர்தன்துணைவி காதல்துணையாகமுனநாள் *
வெம்பியெரிகானகம்உலாவுமவர்தாம் இனிதுமேவுநகர்தான் *
கொம்புகுதிகொண்டுகுயில்கூவமயிலாலும் எழிலார்புறவுசேர் *
நம்பிஉறைகின்றநகர் நந்திபுரவிண்ணகரம்நண்ணுமனமே! (சா)

தந்தைமனமுந்துதுயர்நந்தஇருள்வந்தவிறல் நந்தன்மதலை *
எந்தையிவனென்றுஅமரர்கந்தமலர்கொண்டுதொழுகின்றநகர்தான் *
மந்தமுழவோசைமழையாகவெழுகார் மயில்களாடுபொழில்சூழ் *
நந்திபணிசெய்தநகர் நந்திபுரவிண்ணகரம்நண்ணுமனமே! (எ)

† 'சிற' என்று சிலர் பாடமோதுவர்; அப்பொழுது 'சீற' என்பது குறுகியதென்க.

எண்ணில்பல்லினைவெய்தியினியில்லையிறையென்று முனியாளர்திருவார் *
பண்ணில்மலிகீதமொடுபாடிஅவராடலொடு கூடஎழிலார் *
மண்ணிலிதுபோலநகரில்லையென வானவர்கள்தாம்மலர்கள்தூய் *
நண்ணியுறைகின்றநகர் நந்திபுரவிண்ணகரம்நண்ணுமனமே ! (அ)

வங்கமலிபௌவமதுமாமுகடினுச்சிபுக, மிக்கபெருநீர் *
அங்கமழியாரவனதாணைதலைசூடும் அடியார்அறிதியேல் *
பொங்குபுனலுந்துமணிகங்குலிருள்சீறுமொளி எங்குமுளதால் *
நங்கள்பெருமானுறையும் நந்திபுரவிண்ணகரம்நண்ணுமனமே ! (கூ)

நறைசெய்பொழில்மழைதவழும்நந்திபுரவிண்ணகரம்நண்ணியுறையும்*
உறைகொள்புகராழிசுரிசங்கமவைஅங்கையுடையானை * ஒளிசேர்
கறைவளருமவேல்வல்ல கலியனொலிமாலையிவைஐந்துமைந்தும் *
முறையிலிவைபயிலவல அடியவர்கள்கொடுவினைகள்முழுதகலுமே. ()

அடிவரவு:—தீது உய்யும் உம்பர் பிறை மூள தம்பியொடு தந்தை எண்ணில் வங்கம் நறைசெய் வண்டு.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## ஆறும்பத்து

## க - ஆந் திருமொழி—வண்டுணும்.



### திருவிண்ணகர். (க)

வஞ்சிவிருத்தம் (புன்னாகவராளிராகம் - அடதாளம்.)

வண்டுணுநறுமலரிண்டைகொண்டு
பண்டைநம்வினைகெடவென்று * அடிமேல்
தொண்டரும்அமரரும்பணியநின்று அங்கு
அண்டமொடுஅகலிடம் அளந்தவனே !*

† ஆண்டாய் ! உனைக்காண்பதோர் அருளெனக்கருளுதியேல் *
வேண்டேன்மனைவாழ்க்கையை விண்ணகர்மேயவனே ! (க)

அண்ணல்செய்துஅலைகடல்கடைந்து அதனுள்
கண்ணுதல்நஞ்சுண்ணக்கண்டவனே !*
விண்ணவரமுதுண அமுதில்வரும்
பெண்ணமுதுண்டஎம்பெருமானே ! *

† இந்த அளவடியிரண்டும் தனிமகுடம்.

ஆண்டாய்! உனைக்காண்பதோர் அருளெனக்கருளுதியேல் *
வேண்டேன்மனைவாழ்க்கையை விண்ணகர்மேயவனே! (உ)

குழல்நிறவண்ண! நின்கூறுகொண்ட
தழல்நிறவண்ணன் நண்ணார்நகரம்
விழ * நனிமலைசிலைவளைவுசெய்து அங்கு
அழல்நிறஅம்பதுவானவனே!
ஆண்டாய்! உனைக்காண்பதோர் அருளெனக்கருளுதியேல் *
வேண்டேன்மனைவாழ்க்கையை விண்ணகர்மேயவனே! (ந)

நிலவொடுவெயில்நிலவிருசுடரும்
உலகமும்உயிரும்உண்டுஒருகால் *
கலைதருகுழவியின்உருவினையாய்
அலைகடல்ஆலிலைவளர்ந்தவனே! *
ஆண்டாய்! உனைக்காண்பதோர் அருளெனக்கருளுதியேல் *
வேண்டேன்மனைவாழ்க்கையை விண்ணகர்மேயவனே! (ச)

பாரெழுகடலெழுமலையெழுமாய்
சீர்கெழும்இவ்வுலகேழுமெல்லாம் *
ஆர்கெழுவயிற்றினில்அடக்கிநின்று அங்கு
ஓரெழுத்துஓருருவானவனே! *
ஆண்டாய்! உனைககாண்பதோர் அருளெனக்கருளுதியேல் *
வேண்டேன்மனைவாழ்க்கையை விண்ணகர்மேயவனே! (ரு)

கார்கெழுகடல்களும்மலைகளுமாய்
ஏர்கெழும்உலகமுமாகி * முத
லார்களும்அறிவருநிலையினையாய்ச்
சீர்கெழுநான்மறையானவனே! *
ஆண்டாய்! உனைக்காண்பதோர் அருளெனக்கருளுதியேல் *
வேண்டேன்மனைவாழ்க்கையை விண்ணகர்மேயவனே! (சு)

உருக்குறுநறுநெய்கொண்டுஆரழலில்
இருக்குறும்அந்தணர்சந்தியின்வாய் *
பெருக்கமொடுஅமரர்களமரநல்கும்
இருக்கினில்இன்னிசையானவனே! *
ஆண்டாய்! உனைக்காண்பதோர் அருளெனக்கருளுதியேல் *
வேண்டேன்மனைவாழ்க்கையை விண்ணகர்மேயவனே! (எ)

காதல்செய்து இளையவர்கலவிதரும்
வேதனைவினையதுவெருவுதலாம் *
ஆதலின்உனதடியணுகுவன்நான்
போதலர்நெடுமுடிப்புண்ணியனே !*
ஆண்டாய் ! உனைக்காண்பதோர் அருளெனக்கருளுதியேல் *
வேண்டேன்மனைவாழ்க்கையை விண்ணகர்மேயவனே ! (அ)

சாதலும்பிறத்தலும்என்றிவற்றை
காதல்செய்யாதுஉனகழலடைந்தேன் *
ஓதல்செய்நான்மறையாகி உம்பர்
ஆதல்செய்மூவுருவானவனே ! *
ஆண்டாய் ! உனைக்காண்பதோர் அருளெனக்கருளுதியேல் *
வேண்டேன்மனைவாழ்க்கையை விண்ணகர்மேயவனே ! (கூ)

✠ பூமருபொழிலணி விண்ணகர்மேல் *
காமருசீர்க் கலிகன்றிசொன்ன *
பாமருதமிழிவை பாடவல்லார் *
வாமனனடியிணை மருவுவரே. (கஂ)

அடிவரவு:—வண்டு அண்ணல் குழல் நிலவொடு பார் கார் உருக்குறு காதல் சாதல் பூமரு பொறுத்தேன்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## உ - ஆந் திருமொழி - பொறுத்தேன்.



### திருவிண்ணகர் (உ)

கலிநிலைத்துறை. (நாதநாமக்கிரியைராகம் - ஆதிதாளம்.)

✠ பொறுத்தேன்புன்சொல்நெஞ்சில் பொருளின்பமென இரண்டும்
இறுத்தேன் * ஐம்புலன்கட்கிடனாயின வாயிலொட்டி
அறுத்தேன் * ஆர்வச்செற்றமவை † தம்மை மனத்தகற்றி
வெறுத்தேன் * நின்னடைந்தேன் திருவிண்ணகர்மேயவனே ! (க)

மறந்தேன்உன்னைமுன்னம் மறந்தமதியில்மனத்தால் *
இறந்தேன்எத்தனையும் அதனால்இடும்பைக்குழியில் *
பிறந்தேஎய்த்தொழிந்தேன் பெருமான் ! திருமார்பா ! *
சிறந்தேன்நின்னடிக்கே திருவிண்ணகர்மேயவனே ! (உ)

† 'தன்னை, எனச் சிலர் பாடமோதுவர்.

மானேய்நோக்கியர்தம் வயிற்றுக்குழியிலுழைக்கும் *
† ஊனேயாக்கைதன்னை உதவாமையுணர்ந்துணர்ந்து *
வானே! மாநிலமே! வந்துவந்தென்மனத்திருந்த
தேனே! * நின்னடைந்தேன் திருவிண்ணகர்மேயவனே! (௩)

பிறிந்தேன்பெற்றமக்கள்பெண்டிரென்றிவர் பின்னுதவாது
அறிந்தேன் * நீபணித்த அருளென்னும் ஒள்வாளுருவி
எறிந்தேன் * ஐம்புலன்கள் இடர்தீரஎறிந்துவந்து
செறிந்தேன் * ‡ நின்னடிக்கே திருவிண்ணகர்மேயவனே! (௪)

பாண்தேன்வண்டறையுங்குழலார்கள் பல்லாண்டிசைப்ப *
ஆண்டார்வையமெல்லாம் அரசாகி * முன்னாண்டவரே
மாண்டாரென்றுவந்தார் அந்தோ! மனைவாழ்க்கைதன்னை
வேண்டேன் * நின்னடைந்தேன் திருவிண்ணகர்மேயவனே! (௫)

கல்லாஐம்புலன்களவை கண்டவாறுசெய்யகில்லேன் *
மல்லா! மல்லமருள்மல்லர்மாள மல்லடர்த்த
மல்லா! * மல்லலம்சீர் மதிள்நீரிலங்கையழித்த
வில்லா! * நின்னடைந்தேன் திருவிண்ணகர்மேயவனே! (௬)

வேறாயானிரந்தேன் வெகுளாதுமனக்கொள்எந்தாய்! *
ஆறாவெந்நரகத்து அடியேனையிடக்கருதி *
கூறாஐவர்வந்து குமைக்கக்குடிவிட்டவரை *
தேறாதுஉன்னடைந்தேன் திருவிண்ணகர்மேயவனே! (௭)

தீவாய்வல்வினையார் உடன்நின்றுசிறந்தவர்போல் *
மேவாவெந்நரகத்து $ இடவுற்றுவிரைந்துவந்தார் *
மூவாவானவர்தம்முதல்வா! மதிகோள்விடுத்த
தேவா! * நின்னடைந்தேன் திருவிண்ணகர்மேயவனே! (௮)

போதார்தாமரையாள் புலவிக்குலவானவர்தம்
கோதா! * கோதில்செங்கோல் குடைமன்னரிடைநடந்த
தூதா! * தூமொழியாய்! சுடர்போலென்மனத்திருந்த
வேதா! * நின்னடைந்தேன் திருவிண்ணகர்மேயவனே! (௯)

---

† 'ஊனேராக்கை' என்பதும் பாடம்.

‡ 'நின்னடைந்தேன்' என்று சில ஸ்ரீகோசங்கள்.

$ 'இடருற்று' என்று ஓதுவர்.

✿ தேனார்பூம்புறவில் திருவிண்ணகர்மேயவனை *
வானாரும்மதிள்சூழ் வயல்மங்கையர்கோன், * மருவார்
ஊனார்வேற்கலியன் ஒலிசெய்தமிழ்மாலைவல்லார் *
கோனாய், வானவர்தம் கொடிமாநகர்கூடுவரே. (கO)

அடிவரவு:—பொறுத்தேன் மறந்தேன் மானேய் பிறிந்தேன் பாண் கல்லா
வேறா நீவாய் போதார் தேனார் துறப்பேன்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## ங - ஆந் திருமொழி—துறப்பேன்.



### திருவிண்ணகர். (ங)

கலிநிலைத்துறை. (ஆநந்தபைரவிராகம் - ஆதிதாளம்.)

✿ துறப்பேனல்லேன் இன்பம், துறவாது * நின்னுருவம்
மறப்பேனல்லேன் என்றும்மறவாது * யான்உலகில்
பிறப்பேனாகஎண்ணேன் பிறவாமைபெற்றது * நின்
திறத்தேனாதன்மையால் திருவிண்ணகரானே ! (க)

துறந்தேன்ஆர்வச்செறறச்சுற்றம் துறந்தமையால் *
சிறந்தேன்நின்னடிக்கே அடிமை, திருமாலே! *
அறந்தானாய்த்திரிவாய் ! உன்னைஎன்மனத்தகத்தே *
திறம்பாமல்கொண்டேன் திருவிண்ணகரானே ! (உ)

மானேய்நோக்குநல்லார் மதிபோல்முகத்துஉலவும் *
ஊனேய்கண்வாளிக்கு உடைந்தோட்டந்துஉன்னடைந்தேன் *
கோனே ! குறுங்குடியுள்குழகா ! திருநறையூர்த்
தேனே ! * வருபுனல்சூழ் திருவிண்ணகரானே ! (ங)

சாந்தேந்துமென்முலையார் தடந்தோள்புணரின்பவெள்ளத்து
ஆழ்ந்தேன் * அருநரகத்தழுந்தும் பயன்படைத்தேன் *
போந்தேன்புண்ணியனே ! உன்னையெய்திஎன் தீவினைகள்
தீர்ந்தேன் * நின்னடைந்தேன் திருவிண்ணகரானே ! (ச)

மற்றோர்தெய்வம்எண்ணேன் உன்னைஎன்மனத்துவைத்துப்
பெற்றேன் * பெற்றதுவும் பிறவாமைஎம்பெருமான் ! *
வற்றாநீர்கடல்சூழ் இலங்கையிராவணனைச்
செற்றாய் ! * கொற்றவனே ! திருவிண்ணகரானே ! (ரு)

மையொண்கருங்கடலும் நிலனும்மணிவரையும் *
செய்யசுடரிரண்டும் இவையாயநின்னை * நெஞ்சில்
உய்யும்வகைஉணர்ந்தேன் உண்மையால்இனி * யாதும்மற்றோர்
தெய்வம்பிறிதறியேன் திருவிண்ணகரானே ! (சு)

வேறேகூறுவதுண்டு அடியேன்விரித்துரைக்கு
மாறே * நீபணியாது அடை நின்திருமனத்து *
கூறேன்நெஞ்சுதன்னால் குணங்கொண்டு * மற்றோர்தெய்வம்
தேறேன்உன்னையல்லால் திருவிண்ணகரானே ! (எ)

முளிந்தீந்தவெங்கடத்து மூரிப்பெருங்களிற்றால் *
விளிந்தீந்தமாமரம்போல் வீழ்ந்தாரைநினையாதே *
அளிந்தோர்ந்தசிந்தை நின்பால்அடியேற்கு * வானுலகம்
தெளிந்தேஎன்றுஎய்துவது ? திருவிண்ணகரானே ! (அ)

சொல்லாய்திருமார்வா ! உனக்காகித்தொண்டுபட்ட
நல்லேனை * வினைகள்நலியாமை நம்புநம்பீ ! *
† மல்லா ! குடமாடீ ! மதுசூதனே !* உலகில்
செல்லாநல்லிசையாய் ! திருவிண்ணகரானே ! (கூ)

❁ தாரார்மலர்க்கமலத் தடம்சூழ்ந்ததண்புறவில் *
சீரார்நெடுமறுகில் திருவிண்ணகரானை *
காரார்புயல்தடக்கைக் கலியனொலிமாலை *
ஆரார்இவைவல்லார் அவர்க்குஅல்லல்நில்லாவே. (க0)

அடிவரவு:—துறப்பேன் துறந்தேன் மானேய் சாந்து மற்றோர் மை வேறே முளிந்தீந்த சொல்லாய் தாரார் கண்ணும்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## ச - ஆந் திருமொழி—கண்ணுஞ்சுழன்று.



### திருநறையூர். (க)

கலிநிலைத்துறை. (பந்துவராளிராகம் - ஜம்பைதாளம்.)

❁ கண்ணும்சுழன்று பீளையோடு ஈளைவந்தேங்கினால் *
பண்ணின்மொழியார் பையநடமினென்னாதமுன் *
விண்ணும்மலையும் வேதமும்வேள்வியுமாயினான் *
நண்ணுநறையூர் நாம்தொழுதும்எழுநெஞ்சமே ! (க)

† 'மல்லார்' என்பதும் பாடம்.

கொங்குண்குழலார் கூடியிருந்துசிரித்து * நீர்
இங்கென்? இருமி எம்பால்வந்ததென்றிகழாதமுன் *
திங்களெரிகால் செஞ்சுடராயவன்தேசுடை *
நங்கள்நறையூர் நாம்தொழுதும்எழுநெஞ்சமே! (உ)

கொங்கார்குழலார் கூடியிருந்துசிரித்து * எம்மை
எங்கோலம்ஐயா! என்? இனிக்காண்பதுஎன்னுதமுன் *
செங்கோல் ‡ வலவன்தான் பணிந்தேத்தித்திகழுமூர் *
நங்கோன்நறையூர் நாம்தொழுதும்எழுநெஞ்சமே! (ங)

கொம்பும்அரவமும் வல்லியும்வென்றநுண்ணேரிடை *
வம்புண்குழலார் வாசலடைத்துஇகழாதமுன் *
செம்பொன்கமுகினம் தான்கனியும்செழுஞ்சோலைசூழ் *
நம்பன்நறையூர் நாம்தொழுதும்எழுநெஞ்சமே! (ச)

விலங்கும்கயலும் வேலும்ஒண்காவியும்வென்றகண் *
சலங்கொண்டசொல்லார் தாங்கள்சிரித்துஇகழாதமுன் *
மலங்கும்வராலும் வாளையும்பாய்வயல்சூழ்தரு *
நலங்கொள்நறையூர் நாம்தொழுதும்எழுநெஞ்சமே! (ரு)

மின்னேரிடையார் வேட்கையைமாற்றியிருந்து *
என்நீர்இருமி எம்பால்வந்தது? என்றுஇகழாதமுன் *
தொன்னீரிலங்கைமலங்க விலங்கெரியூட்டினான் *
நன்னீர்நறையூர் நாம்தொழுதும்எழுநெஞ்சமே! (சா)

வில்லேர்நுதலார் வேட்கையைமாற்றிசிரித்து * இவன்
பொல்லான் திரைந்தானென்னும் புறனுரைகேட்பதன்முன் *
சொல்லார்மறைநான்கோதி உலகில்நிலாயவர் *
நல்லார்நறையூர் நாம்தொழுதும்எழுநெஞ்சமே! (எ)

வாளொண்கண்நல்லார்தாங்கள் மதனனென்றார்தம்மை *
கேண்மின்கள்ஈளையோடு ஏங்குகிழவனென்னுதமுன் *
வேள்வும்விழவும் வீதியில்என்றும்அறாதவூர் *
நாளும்நறையூர் நாம்தொழுதும்எழுநெஞ்சமே! (அ)

கனிசேர்ந்திலங்குநல்வாயவர் காதன்மைவிட்டிட *
குனிசேர்ந்துடலம் கோலில்தளர்ந்துஇளையாதமுன் *
பனிசேர்விசும்பில பால்மதிகோள்விடுத்தானிடம் *
நனிசேர்நறையூர் நாம்தொழுதும்எழுநெஞ்சமே! (கூ)

‡ 'வளவன்' என்றும் பாடம்.

பிறைசேர்நுதலார் பேணுதல்நம்மையிலாதமுன் *
நறைசேர்பொழில்சூழ் நறையூர்தொழுநெஞ்சமே! என்ற *
கறையார்நெடுவேல்மங்கையர்கோன் கலிகன்றிசொல் *
மறவாதுஉரைப்பவர் வானவர்க்குஇன்னரசாவரே. (கo)

அடிவரவு.—கணணும் கொங்குண் கொங்கார் கொம்பு விலங்கு மின் வில் வாள் கனி பிறை கலங்க.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## ரு - ஆந் திருமொழி—கலங்கமுந்நீர.



### திருநறையூர். (உ)

கலிநிலைத்துறை. (செஞ்சுருட்டிராகம் - அடதாளம்.)

கலங்கமுந்நீர்கடைந்து † அமுதம்கொண்டு * இமையோர்
துளங்கல்தீரநல்கு சோதிச்சுடராய *
வலங்கையாழிஇடங்கைசசங்கம் உடையானூர் *
நலங்கொள்வாய்மை அந்தணர்வாழும்நறையூரே. (க)

முனையார்சீயமாகி அவுணன்முரண்மார்வம் *
புனைவாளுகிரால் போழ்படஈர்ந்தபுனிதனூர் *
சினையார்தேமாஞ்செந்தளிர்கோதிக் குயில்கூவும் *
நனையார்சோலைசூழ்ந்து அழகாயநறையூரே. (உ)

ஆனைப்புரவி தேரொடுகாலாளணிகொண்ட *
சேனைதொகையைச்சாடி இலங்கைசெற்றானூர் *
மீனைத்தழுவிவீழ்நதெழும் மள்ளர்க்குஅலமந்து *
நானப்புதலில ஆமையொளிக்கும்நறையூரே. (ந)

உறியார்வெண்ணெயுண்டு உரலோடும்கட்டுண்டு *
வெறியார்கூந்தல்பின்னைபொருட்டு ஆன்வென்றானூர் *
பொறியார்மஞ்ஞை பூம்பொழில்தோறும்நடமாட *
நறுநாண்மலர்மேல் வண்டுஇசைபாடும்நறையூரே. (ச)

விடையேழ்வென்று மென்தோளாய்ச்சிக்குஅன்பனாய் *
நடையால்நின்றமருதம்சாய்த்த நாதனூர் *
பெடையோடுஅன்னம் பெய்வளையார்தம்பின்சென்று *
நடையோடியலி நாணியொளிக்கும் நறையூரே. (ரு)

† 'அமுதங்கொண்டே' என்ற பாடம் செய்யுளோசைக்குச் சேரும்.

பகுவாய்வன்பேய்கொங்கைசுவைத்து ஆருயிருண்டு *
புகுவாய்நின்ற போதகம்வீழப்பொருதானூர் *
நெகுவாய்நெய்தற்பூமதுமாந்திக் கமலத்தின் *
நகுவாய்மலர்மேல அன்னமுறங்கும்நறையூரே. (௬)

முந்து நூலும்முப்புரிநூலும் முன்னீந்த *
அந்தணாளன்பிள்ளையை அஞ்ஞான்றளித்தானூர் *
பொந்தில்வாழும் பிள்ளைக்காகிப புள்ளோடி *
நந்துவாரும் பைம்புனல்வாவிநறையூரே (௭)

வெள்ளைப்புரவித்தேர்விசயற்காய் விறல்விசும்பை
விள்ள * சிந்துக்கோன்விழவூர்ந்த விமலனூர் *
கொள்ளைக்கொழுமீ னுண்குருகுஓடிப்பெடையோடும் *
நள்ளககமலத்தேறலுகுக்கும் நறையூரே. (௮)

❀ பாரையூரும்பாரம்தீரப் பார்த்தன்தன் *
தேரையூரும் தேவதேவன்சேருமூர் *
தாரையூரும் தண்தளிர்வேலிபுடைசூழ *
நாரையூரும் நல்வயல்சூழ்ந்தநறையூரே. (௯)

❀ தாமத்துளப நீள்முடிமாயன் தான்நின்ற *
நாமத்திரள்மாமாளிகைசூழ்ந்த நறையூர்மேல் *
காமக்கதிர்வேல்வல்லான் கலியனொலிமாலை *
சேமததுணையாம் செப்புமவர்க்குததிருமாலே. (௧0)

அடிவரவு:—கலங்க முனை ஆனை உறியார் விடை பகுவாய் முந்து வெள்ளை பாரை தாமம் அம்பரம்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



௬ - ஆந் திருமொழி—அம்பரமும்.



திருநறையூர். (௩)

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (தோடிராகம் - ஆதிதாளம்)

❀ அம்பரமும்பெருநிலனும்திசைகளெட்டும்
அலைகடலும்குலவரையும்உண்டகண்டன் *
கொம்பமரும்வடமரத்தினிலைமேல்பள்ளி
கூடினான் திருவடியேகூடுகிற்பீர்! *

வம்பவிழும்செண்பகத்தின்வாசம்உண்டு
மணிவண்டுவகுளத்தின்மலர்மேல்வைகு *
செம்பியன்கோச்செங்கணான்சேர்ந்தகோயில்
திருநறையூர்மணிமாடம்சேர்மின்களே. (௧)

கொழுங்கயலாய்நெடுவெள்ளம்கொண்டகாலம்
குலவரையின்மீதோடிஅண்டத்தப்பால் *
எழுந்து இனிதுவிளையாடும்ஈசனெந்தை
இணையடிக்கீழ்இனிதிருப்பீர்! இனவண்டாலும் *
உழும்செறுவிலமணிகொணர்ந்துகரைமேல்சிந்தி
உலகெல்லாம்சந்தனமும்அகிலும்கொள்ள *
செழும்பொன்னிவளங்கொடுக்கும்சோழன்சேர்ந்த
திருநறையூர்மணிமாடம்சேர்மின்களே. (௨)

பவ்வநீருடைஆடையாகச்சுற்றிப்
பாரகலம்திருவடியாப்பவனம்மெய்யா *
செவ்விமாதிரமெட்டும்தோளா அண்டம்
திருமுடியாநின்றான்பால்செல்லகிற்பீர். *
கவ்வைமாகளிறுந்திவிண்ணியேற்ற
கழல்மன்னர்மணிமுடிமேல்காகமேற *
தெய்வவாள்வலங்கொண்டசோழன்சேர்ந்த
திருநறையூர்மணிமாடம்சேர்மின்களே. (௩)

பைங்கணாளரியுருவாய்வெருவநோக்கிப்
பருவரைத்தோளிரணியனைப்பற்றிவாங்கி *
அங்கைவாளுகிர்நுதியால்அவனதாகம்
அங்குருதிபொங்குவித்தானடிக்கீழ்நிற்பீர்! *
வெங்கண்மாகளிறுந்திவிண்ணியேற்ற
விறல்மன்னர்திறலழியவெம்மாவுய்த்த *
செங்கணான்கோச்சோழன்சேர்ந்தகோயில்
திருநறையூர்மணிமாடம்சேர்மின்களே. (௪)

அன்றுலகமூன்றினையும்அளந்து வேறோர்
அரியுருவாய்இரணியனதாகங்கீண்டு *
வென்றவனைவிண்ணுலகில்செலவுய்த்தாற்கு
விருந்தாவீர்! மேலெழுந்துவிலங்கல்பாய்ந்து*

பொன்சிதறிமணிகொணர்ந்துகரைமேல்சிந்திப்
புலம்பரந்துநிலம்பரக்கும்பொன்னிநாடன் *
தென்தமிழன்வடபுலககோன்சோழன்சோநத
திருநறையூர்மணிமாடம்சேர்மின்களே. (௫)

தன்னாலேதன்னுருவமபயநததானாய்த்
தயங்கொளிசேர்மூவுலகும்தானாய்வானாய் *
தன்னாலேதன்னுருவின்மூர்த்திமூன்றாய்த்
தானாயனாயினான்சரணென்றுஉய்வீர் ! *
மின்னாடுவேலேநதுவிளைந்தவேளை
விண்ணேறத்தனிவேலுய்த்துஉலகமாண்ட *
தென்னாடன்குடகொங்கனசோழன்சோநத
திருநறையூர்மணிமாடமசேர்மின்களே (௬)

முலைததடத்தநஞ்சுண்டுதுஞ்சப்பேய்ச்சி
முதுதுவரைக்குலபதியாககாலிப்பின்னே *
இலைத்தடத்தகுழலூதிஆயர்மாதர்
இனவளைகொண்டானடிக்கீழ்எய்துகிற்பீர் ! *
மலைத்தடத்தமணிகொணர்நதுவையம்உய்ய
வளங்கொடுக்கும்வருபுனலம்பொன்னிநாடன *
சிலைத்தடக்கைககுலச்சோழன்சேர்நதகோயில்
திருநறையூர்மணிமாடம்சேர்மின்களே. (௭)

முருககிலங்குகனித்துவர்வாய்ப்பின்னைகேள்வன்
மன்னெல்லாம்முன்னவியச்சென்று * வென்றிச
செருக்களத்துத்திறலழியசசெற்றவேந்தன்
சிரம்துணித்தான்திருவடிநும்சென்னிவைபபீர் ! *
இருககிலங்குதிருமொழிவாயெண்தோளீசற்கு
எழில்மாடம்எழுபதுசெய்துஉலகமாண்ட *
திருக்குலத்துவளச்சோழன்சேர்ந்தகோயில்
திருநறையூர்மணிமாடம்சேர்மின்களே. (௮)

தாராளன்தண்ணரங்கவாளன் பூமேல்
தனியாளன்முனியாளரேத்தநின்ற
பேராளன் * ஆயிரம்பேருடையவாளன்
பின்னைக்குமணவாளன்பெருமைகேட்பீர் ! *

பாராளர்இவரிவரென்று அழுந்தையேற்ற
படைமன்னருடல்துணியப்பரிமாவுய்த்த *
தேராளன்கோச்சோழன்சேர்ந்தகோயில்
திருநறையூர்மணிமாடம்சேர்மின்களே. (௯)

செம்மொழிவாய்நால்வேதவாணர்வாழும்
திருநறையூர்மணிமாடச்செங்கண்மாலை *
பொய்ம்மொழியொன்றில்லாதமெய்ம்மையாளன்
புலமங்கைகுலவேந்தன், புலமையார்ந்த *
அம்மொழிவாய்க்கலிகன்றிஇன்பப்பாடல்
பாடுவார், வியனுலகில்நமனூர்பாடி *
வெம்மொழிகேட்டுஅஞ்சாதேமெய்ம்மைசொல்லில்
விண்ணவர்க்குவிருந்தாகும்பெருந்தக்கோரே. (௧௦)

அடிவரவு—ம்அபரம் கொழு பவ்வம் பைங்கண் அன்று தன்னுலே முலை முருக்கு தாராளன் செம்மொழி ஆளும்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## எ - ஆந் திருமொழி—ஆளும்பணியும்.



### திருநறையூர். (௪)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (ஆரபிரர்கம் - ரூபகதாளம்.)

ஆளும்பணியும்அடியேனைக்கொண்டான் விண்டநிசாசரரை *
தோளும்தலையும்துணிவெய்தச் சுடுவெஞ்சிலைவாய்ச்சரம்துரந்தான் *
வேளும்சேயும்அனையாரும் வேற்கணாரும்பயில்வீதி *
நாளும்விழவினொலியோவா நறையூர்நின்றநம்பியே. (௧)

முனியாய்வந்துமூவெழுகால் முடிசேர்மன்னருடல்துணிய *
தனிவாய்மழுவின்படையாண்ட தாரார்தோளான், வார்புறவில் *
பனிசேர்முல்லைபல்லரும்பப் பானல்ஒருபால்கண்காட்ட *
† நனிசேர்கமலம்முகங்காட்டும் நறையூர்நின்றநம்பியே. (௨)

தெள்ளார்கடல்வாய்விடவாய சினவாளரவில்துயிலமர்ந்து *
துள்ளாவருமான்வீழ வாளிதுரந்தான், இரந்தான்மாவலிமண் *
புள்ளார்புறவில்பூங்காவி புலன்கொள்மாதர்கண்காட்ட *
கள்ளார்கமலம்முகங்காட்டும் நறையூர்நின்றநம்பியே. (௩)

† 'நனிசேர் வயலுள் முத்தலைக்கும்' என்பது வ்யாக்யாநபாடம்.

ஒளியாவெண்ணெயுண்டானென்றுஉரலோடாய்ச்சியொண்கயிற்றால் *
விளியாஆர்க்கஆப்புண்டு விம்மியழுதான், மென்மலர்மேல் *
களியாவண்டுகள்ளுண்ணக் காமர்தென்றல்அலர்தூற்ற *
நளிர்வாய்முல்லைமுறுவலிக்கும் நறையூர்நின்றநம்பியே (ச)

வில்லார்விழவில்வடமதுரை விரும்பிவிரும்பாமல்லடர்த்து *
கல்லார்திரள்தோள்கஞ்சனைக் காய்ந்தான்பாய்ந்தான்காளியன்மேல் *
சொல்லார்சுருதிமுறையோதிச் சோமுச்செய்யும்தொழிலினோர் *
நல்லார்மறையோர்பலர்வாழும் நறையூர்நின்றநம்பியே (ரு)

வள்ளிகொழுநன்முதலாய மக்களோடுமுக்கணனை
வெள்கியோட * விறல்வாணன்வியன்தோள்வனத்தைத்துணித்துகந்தான்*
பள்ளிகமலத்திடைப்பட்ட பகுவாயலவன்முகம்நோக்கி *
நள்ளியூடும்வயல்சூழ்ந்த நறையூர்நின்றநம்பியே. (சா)

மிடையாவந்தவேல்மன்னர்வீய விசயன்தேர்கடவி *
குடையாவரையொன்றெடுத்து ஆயர்கோவாய்நின்றான்கூராழிப்
படையான் * வேதம்நான்குமைந்துவேள்வி அங்கமாறுஇசையேழ்*
நடையாவல்ல அந்தணர்வாழ் நறையூர்நின்றநம்பியே. (எ)

பந்தார்விரலாள்பாஞ்சாலி கூந்தல்முடிக்க, பாரதத்து *
கந்தார்களிற்றுக்கழல்மன்னர்கலங்கச் சங்கம்வாய்வைத்தான் *
செந்தாமரைமேலயனோடு சிவனும்அனையபெருமையோர் *
நந்தாவண்கைமறையோர்வாழ் நறையூர்நின்றநம்பியே. (அ)

ஆறும்பிறையும்அரவமும்அடம்பும் சடைமேலணிந்து * உடலம்
நீறும்பூசியேறுமூர் இறையோன்சென்றுகுறையிரப்ப *
மாறொன்றில்லாவாசநீர் வரைமார்பகலத்தளித்துகந்தான் *
நாறும்பொழில்சூழ்ந்தழகாய நறையூர்நின்றநம்பியே. (கூ)

❁ நன்மையுடையமறையோர்வாழ் நறையூர்நின்றநம்பியை *
கன்னிமதிள்சூழ்வயல்மங்கைக் கலியனொலிசெய்தமிழ்மாலை *
பன்னிஉலகில்பாடுவார் பாடுசாரா பழவினைகள் *
மன்னிஉலகம்ஆண்டுபோய் வானோர்வணங்கவாழ்வாரே. (கO)

அடிவரவு:—ஆளும் முனி தெள்ளார் ஒளியா வில்லார் வள்ளி மிடையா பந்தார் ஆறும் நன்மை மான்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## அ - ஆந் திருமொழி—மான்கொண்ட.

### திருநறையூர். (ரு)

தரவுகொச்சகக்கலிப்பா. பைரவிராகம் - ஜம்பைதாளம்)

மான்கொண்டதோல்மார்வின் மாணியாய் * மாவலிமண்
தான்கொண்டு தாளாலளந்தபெருமானை *
தேன்கொண்டசாரல் திருவேங்கடத்தானை *
நான்சென்றுநாடி நறையூரில்கண்டேனே. (க)

முந்நீரைமுன்னாள் கடைந்தானை * மூழ்த்தநாள்
அந்நீரைமீனாய் அமைத்தபெருமானை *
தென்னாலிமேய திருமாலையெம்மானை *
நன்னீர்வயல்சூழ் நறையூரில்கண்டேனே. (உ)

தூவாயபுள்ளூர்ந்துவந்து துறைவேழம் *
மூவாமைநல்கி முதலைதுணித்தானை *
தேவாதிதேவனைச் செங்கமலக்கண்ணனை *
நாவாயுளானை நறையூரில்கண்டேனே. (ந)

ஓடாவரியாய் இரணியனையூனிடந்த *
சேடார்பொழில்சூழ் திருநீர்மலையானை *
வாடாமலர்த்துழாய் மாலைமுடியானை *
நாள்தோறும்நாடி நறையூரில்கண்டேனே. (ச)

கல்லார்மதிள்சூழ் கடியிலங்கைக்காரரக்கன் *
வல்லாகம்கீள வரிவெஞ்சரம்துரந்த
வில்லானை * செல்வவிபீடணற்கு வேறாக *
நல்லானைநாடி நறையூரில்கண்டேனே. (ரு)

உம்பருலகோடு உயிரெல்லாம் * உந்தியில்
வம்புமலர்மேல் படைத்தானைமாயோனை *
அம்பன்னகண்ணாள் அசோதைதன்சிங்கத்தை *
நம்பனைநாடி நறையூரில்கண்டேனே. (சு)

கட்டேறுநீள்சோலைக் காண்டவத்தைதீமூட்டி
விட்டானை * மெய்யம்அமர்ந்த பெருமானை *
மட்டேறுகற்பகத்தை மாதர்க்காய் * வண்துவரை
நட்டானைநாடி நறையூரில்கண்டேனே. (எ)

மண்ணின்மீபாரம்கெடுப்பான் மறமன்னா *
பண்ணின்மேல்வந்த படையெல்லாம்பாரதத்து *
விண்ணின்மீதேற விசயன்தேரூர்ந்தானை *
நண்ணிநான்நாடி நறையூரில்கண்டேனே. (அ)

பொங்கேறுநீள்சோதிப் பொன்னாழிதன்னோடும் *
சங்கேறுகோலத் தடக்கைப்பெருமானை *
கொங்கேறுசோலைக் குடந்தைக்கிடந்தானை *
நங்கோனைநாடி நறையூரில்கண்டேனே. (கூ)

மன்னுமதுரை வசுதேவர்வாழ்முதலை *
நன்னறையூர்நின்ற நம்பியை * வம்பவிழ்தார்க்
கன்னவிலும்தோளான் கலியனொலிவல்லார் *
பொன்னுலகில்வானவர்க்குப் புதுதேளிராகுவரே. (க0)

அடிவரவு:—மான் முந்நீரை தூவாய ஓடா கல்லார் உம்பர் கட்டேறு மணணின் பொஙகு மன்னு பெடை.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## கூ - ஆந் திருமொழி—பெடையடர்த்த.



### திருநறையூர். (சு)

தரவுகொச்சகக்கலிப்பா. (யமுநாகல்யாணிராகம் - ரூபகதாளம்)

பெடையடர்த்தமடவன்னம் பிரியாது * மலர்க்கமலம்
மடலெடுத்துமதுநுகரும் வயலுடுத்ததிருநறையூர் *
முடையடர்த்தசிரமேந்தி மூவுலகும்பலிதிரிவோன் *
இடர்கெடுத்ததிருவாளன் இணையடியே அடைநெஞ்சே! (க)

கழியாரும்கனசங்கம் கலந்துஎங்கும்நிறைந்தேறி *
வழியாரமுத்தீன்று வளங்கொடுக்கும்திருநறையூர் *
பழியாரும்விறலரக்கன் பருமுடிகளவைசிதற *
அழலாரும்சரம்துரந்தான் அடியிணையே அடைநெஞ்சே! (உ)

சுளைகொண்டபலங்கனிகள் தேன்பாய * கதலிகளின்
திளைகொண்டபழம்கெழுமு திகழ்சோலைத்திருநறையூர் *
வளைகொண்டவண்ணத்தன் பின்தோன்றல் * மூவுலகோடு
அளைவெண்ணெயுண்டான்தன் அடியிணையே அடைநெஞ்சே! (ங)

துன்றோளித்துகிற்படலம் துன்னிஎங்கும்மாளிகைமேல் *
நின்றாரவான்மூடும் நீள்செல்வத்திருநறையூர் *
மன்றாரக்குடமாடி வரையெடுத்துமழைதடுத்த *
குன்றாரும்திரள்தோளன் குரைகழலேஅடைநெஞ்சே! (௪)

அகிற்குறடும்சந்தனமும் அம்பொன்னும்அணிமுத்தும் *
மிகக்கொணர்ந்துதிரையுந்தும் வியன்பொன்னித்திருநறையூர் *
பகல்கரந்தசுடராழிப்படையான் இவ்வுலகேழும் *
புகக்கரந்ததிருவயிற்றன் பொன்னடியேஅடைநெஞ்சே! (௫)

பொன்முத்தும்அரியுகிரும் புழைக்கைம்மாகரிக்கோடும் *
மின்னத்தண்திரையுந்தும் வியன்பொன்னித்திருநறையூர் *
மின்னொத்தநுண்மருங்குல் மெல்லியலை * திருமார்பில்
மன்னத்தான்வைத்துகந்தான் மலரடியேஅடைநெஞ்சே! (௬)

சீர்தழைத்தகதிர்ச்செந்நெல் செங்கமலத்திடையிடையின் *
பார்தழைத்துக்கரும்போங்கி பயன்விளைக்கும்திருநறையூர் *
கார்தழைத்ததிருவுருவன் கண்ணபிரான்விண்ணவர்கோன் *
தார்தழைத்ததுழாய்முடியன் தளிரடியேஅடைநெஞ்சே! (௭)

❀ குலையார்ந்தபழுக்காயும் பசுங்காயும்பாளைமுத்தும் *
தலையார்ந்தஇளங்கமுகின் தடஞ்சோலைத்திருநறையூர் *
மலையார்ந்தகோலம்சேர் மணிமாடமிகமன்னி *
நிலையாரநின்றான்தன் நீள்கழலேஅடைநெஞ்சே ! (௮)

மறையாரும்பெருவேள்விக் கொழும்புகைபோய்வளர்ந்து * எங்கும்
நிறையாரவான்மூடும் நீள்செல்வத்திருநறையூர் *
பிறையாரும்சடையானும் பிரமனும்முன்தொழுதேத்த *
இறையாகிநின்றான்தன் இணையடியேஅடைநெஞ்சே ! (௯)

❀ திண்களகமதிள்புடைசூழ் திருநறையூர்நின்றானை *
வண்களகநிலவெறிக்கும் வயல்மங்கைநகராளன் *
பண்களகம்பயின்றசீர்ப் பாடலிவைபத்தும்வல்லார் *
விண்களகத்திமையவராய் வீற்றிருந்துவாழ்வாரே. (௧௦)

அடிவரவு:—பெடை கழி சுளை துன்று அகில் பொன் சீர் குலை மறை திண் கிடந்த.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## ௰ - ஆந் திருமொழி—கிடந்தநம்பி.

### திருநறையூர். (௭)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (கமாஸ்ராகம்-திரிபுடைதாளம்.)

ஸ்ரீ கிடந்தநம்பிகுடந்தைமேவிக் கேழலாய்உலகை
இடந்தநம்பி * எங்கள்நம்பி எறிஞரரணழிய *
கடந்தநம்பிகடியாரிலங்கை உலகைஈரடியால் *
நடந்தநம்பிநாமம்சொல்லில் நமோநாராயணமே. (௧)

விடந்தானுடையஅரவம்வெருவச் செருவில்முனநாள் * முன்
தடந்தாமரைநீர்ப்பொய்கைபுக்கு மிக்கதாடாளன் *
இடந்தான்வையம்கேழலாகி உலகைஈரடியால் *
நடந்தானுடையநாமம்சொல்லில் நமோநாராயணமே. (௨)

பூணாதனலும்தறுகண்வேழம்மறுக வளைமருப்பை *
பேணான்வாங்கி அமுதம்கொண்டபெருமான்திருமார்வன் *
பாணாவண்டுமுரலும்கூந்தல் ஆய்ச்சிதயிர்வெண்ணெய் *
நாணாதுஉண்டான்நாமம்சொல்லில் நமோநாராயணமே. (௩)

கல்லார்மதிள்சூழ் கச்சிநகருள்நச்சிப், பாடகத்துள் *
எல்லாவுலகும்வணங்க இருந்தஅம்மான் * இலங்கைக்கோன்
வல்லாளாகம் வில்லால்முனிந்தஎந்தை * விபீடணற்கு
நல்லானுடையநாமம்சொல்லில் நமோநாராயணமே. (௪)

குடையாவரையால்நிரைமுன்காத்தபெருமான் * மருவாத
விடைதானேழும்வென்றான் கோவல்நின்றான் * தென்னிலங்கை
அடையாஅரக்கர்வீயப்பொருது மேவிவெங்கூற்றம் *
நடையாவுண்ணக்கண்டான்நாமம் நமோநாராயணமே. (௫)

கானஎண்கும்குரங்கும் முசுவும்படையா * அடலரக்கர்
மானமழித்துநின்ற வென்றியம்மான் * எனக்குஎன்றும்
தேனும்பாலும்அமுதுமாய திருமால்திருநாமம் *
நானும்சொன்னேன்நமரும்உரைமின் நமோநாராயணமே. (௬)

நின்றவரையும்கிடந்தகடலும் திசையும்இருநிலனும் *
ஒன்றும்ஒழியாவண்ணம் எண்ணிநின்றஅம்மானார் *
குன்றுகுடையாஎடுத்த அடிகளுடையதிருநாமம் *
நன்றுகாண்மின்தொண்டீர்! சொன்னேன் நமோநாராயணமே. (௭)

கடுங்கால்மாரிகல்லேபொழிய அல்லேஎமக்கென்று
படுங்கால் * நீயேசரணென்று ஆயரஞ்ச, அஞ்சாமுன் *
நெடுங்காற்குன்றம்குடையொன்றேந்தி நிரையைச்சிரமத்தால் *
நடுங்காவண்ணம்காத்தான்நாமம் நமோநாராயணமே. (அ)

பொங்குபுணரிக்கடல்சூழாடை நிலமாமகள்மலர்மா
மங்கை * பிரமன்சிவன்இந்திரன் வானவர்நாயகராய *
எங்களடிகள் இமையோர்தலைவருடையதிருநாமம் *
நங்கள்வினைகள்தவிரஉரைமின் நமோநாராயணமே. (கூ)

ஜ வாவித்தடம்சூழ்மணிமுத்தாற்று நறையூர்நெடுமாலை *
நாவின்பரவிநெஞ்சில்கொண்டு நம்பிநாமத்தை *
காவித்தடங்கண்மடவார்கேள்வன் கலியனொலிமாலை *
மேவிசொல்லவல்லார்பாவம் நில்லாவீயுமே. (க0)

அடிவரவு:—கிடந்த விடம் பூணாது கல் குடை கானம் நின்ற கடுங்கால் பொங்கு வாவி கறவா.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்



## ஏழாம்பத்து.

### க - ஆந் திருமொழி—கறவாமடநாகு.



திருநறையூர். (அ)

கலிவிருத்தம். (முகாரிராகம் - ரூபகதாளம்.)

ஜ கறவாமடநாகு தன்கன்றுஉள்ளினற்போல் *
மறவாது அடியேன உன்னையேஅழைக்கின்றேன் *
நறவார்பொழில்சூழ் நறையூர்நின்றநம்பி! *
பிறவாமைஎனைப்பணி எந்தைபிரானே! (க)

வற்றாமுதுநீரொடு மாலவரையேழும் *
துற்றாகமுன துற்றிய தொலபுகழோனே! *
அற்றேன் அடியேன் உன்னையேஅழைக்கின்றேன் *
பெற்றேன்அருள்தந்திடு என்எந்தைபிரானே! (௨)

தாரேன்பிறர்க்கு உன்னருள்என்னிடைவைத்தாய் *
ஆரேன்அதுவே பருகிக்களிக்கின்றேன் *
காரேய்கடலேமலையே திருக்கோட்டி
யூரே * உகந்தாயை உகந்துஅடியேனே. (ங)

புள்வாய்பிளந்த புனிதா! என்றுஅழைக்க *
உள்ளேநின்று என்னுள்ளம்குளிரும்ஒருவா ! *
கள்வா ! கடல்மல்லைக்கிடந்தகரும்பே ! *
வள்ளால்! உன்னை எங்ஙனம்நான்மறக்கேனே ? (ரு)

வில்லேர்நுதல் வேல்நெடுங்கண்ணியும்நீயும் *
கல்லார்கடுங்கானம் திரிந்தகளிறே! *
நல்லாய் ! நரநாரணனே ! எங்கள்நம்பி ! *
சொல்லாய்உன்னை யான்வணங்கித்தொழுமாறே. (௬)

பனியேய்பரங்குன்றின் பவளத்திரளே ! *
முனியே! திருமூழிக்களத்துவிளக்கே! *
இனியாயதொண்டரோம் பருகுஇன்னமுதாய
கனியே! * உன்னைக்கண்டுகொண்டு உய்ந்தொழிந்தேனே. (௭)

கதியேலில்லை நின்னருளல்லதுஎனக்கு *
நிதியே! திருநீர்மலைநித்திலத்தொத்தே ! *
பதியே! பரவித்தொழும் தொண்டர்தமக்குக்
கதியே! * உன்னைக்கண்டுகொண்டு உய்ந்தொழிந்தேனே. (எ)

அத்தா! அரியே! என்று உன்னை அழைக்க *
பித்தாவென்றுபேசுகின்றார் பிறர்என்னை *
முத்தே! மணிமாணிக்கமே! முளைக்கின்ற
வித்தே! * உன்னைஎங்ஙனம்நான் விடுகேனே? (அ)

தாயாய்! சுடர்மாமதிபோல் உயிர்க்கெல்லாம் *
தாயாயளிக்கின்ற தண்தாமரைக்கண்ணா! *
ஆயா! அலைநீருலகேழும் முன்னுண்ட
வாயா! * உன்னைஎங்ஙனம் நான்மறக்கேனே? (௯)

❀ வண்டார்பொழில்சூழ் நறையூர்நம்பிக்கு * என்றும்
தொண்டாயகலியன் ஒலிசெய்தமிழ்மாலை *
தொண்டீர்! இவைபாடுமின் பாடிநின்றாட *
உண்டேவிசும்பு உந்தமக்குஇல்லைதுயரே. (௧0)

அடிவரவு:—கறவா வற்றா தாரேன் புள் வில் பனி கதி அத்தா தாயாய் வண்டார் புள்ளாய்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## உ - ஆந் திருமொழி—புள்ளாயேனமுமாய்.

### திருநறையூர். (௧)

கலிநிலைத்துறை. (கேதாரகௌளராகம் - ஆதிதாளம்.)

புள்ளாய்ஏனமுமாய்ப் புகுந்து * என்னையுள்ளங்கொண்ட
கள்வா! என்றலும் என்கண்கள்நீர்கள்சோர்தருமால் *
உள்ளேநின்றுருகி நெஞ்சம்உன்னையுளளியக்கால் *
நள்ளேன்உன்னையல்லால் நறையூர்நின்றநம்பியோ ! (௧)

ஓடாவாளரியின் உருவாய்மருவி * என்தன
மாடேவந்து அடியேன் மனங்கொள்ளவல்லமைந்தா! *
பாடேன்தொண்டர்தம்மைக் கவிதைப்பனுவல்கொண்டு *
நாடேன்உன்னையல்லால் நறையூர்நின்றநம்பியோ! (௨)

எம்மானும்எம்மனையும் என்னைப்பெற்றொழிந்ததற்பின் *
அம்மானும்அம்மனையும் அடியேனுக்காகிநின்ற *
நன்மானவொண்சுடரே! நறையூர்நின்றநம்பீ! * உன்
மைம்மானவண்ணமல்லால் மகிழ்ந்துஏத்தமாட்டேனே. (௩)

சிறியாய்ஓர்பிள்ளையுமாய் உலகுண்டுஓராலிலைமேல்
உறைவாய்! * என்நெஞ்சினுள்ளே உறைவாய், உறைந்ததுதான் *
அறியாதிருந்துஅறியேன் அடியேன், அணிவண்டுகிண்டும் *
நறைவாரும்பொழில்சூழ் நறையூர்நின்றநம்பியோ! (௪)

நீண்டாயைவானவர்கள் நினைந்துஏத்திககாண்பரிதால் *
ஆண்டாயென்றுஆதரிக்கப்படுவாய்க்கு நான்அடிமை
பூண்டேன் * என்நெஞ்சினுள்ளே புகுந்தாயைப்போகலொட்டேன் *
நாண்தான்உனக்கொழிந்தேன் நறையூர்நின்றநம்பியோ! (௫)

எந்தாதைதாதைஅப்பால் எழுவர்பழவடிமை
வந்தார் * என்நெஞ்சினுள்ளே வந்தாயைப்போகலொட்டேன் *
அந்தோ! என்னுருயிரே! அரசே! அருள்எனக்கு *
நந்தாமல்தந்தஎந்தாய்! நறையூர்நின்றநம்பியோ ! (௬)

மன்னஞ்சஆயிரந்தோள் மழுவில்துணித்தமைந்தா! *
என்னெஞ்சத்துள்ளிருந்து இங்குஇனிப்போய்ப்பிறரொருவர் *
வன்னெஞ்சம்புக்கிருக்கவொட்டேன் வளைத்துவைத்தேன் *
நன்னெஞ்சவன்னமன்னும் நறையூர்நின்றநம்பியோ ! (௭)

எப்போதும்பொன்மலரிட்டு இமையோர்தொழுது * தங்கள்
கைப்போதுகொண்டுஇறைஞ்சிக் கழல்மேல்வணங்கநின்றாய் *
இப்போதுஎன்னெஞ்சினுள்ளே புகுந்தாயைப்போகலொட்டேன் *
நற்போதுவண்டுகிண்டும் நறையூர்நின்றநம்பியே ! (அ)

ஊனேராக்கைதன்னை உழந்தோம்பிவைத்தமையால் *
யானாய்என்தனக்காய் அடியேன்மனம்புகுந்த
தேனே ! * தீங்கரும்பின்தெளிவே! என்சிந்தைதன்னால் *
நானேஎய்தப்பெற்றேன் நறையூர்நின்றநம்பியே ! (௯)

❀ நன்னீர்வயல்புடைசூழ் நறையூர்நின்றநம்பியை *
கன்னீரமால்வரைத்தோள் கலிகன்றிமங்கையர்கோன் *
சொன்னீரசொல்மாலை சொல்லுவார்கள் * சூழ்விசும்பில்
நன்னீர்மையால்மகிழ்ந்து நெடுங்காலம்வாழ்வாரே. (௧௦)

அடிவரவு:—புள் ஓடா எம்மானும் சிறியாய் நீண்டாய் எந்தாதை மன் எப்போதும் ஊனே நன்னீர் சினவில்.

**திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.**



## ௩ - ஆந் திருமொழி—சினவில்.



திருநறையூர். (௧௦)

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (மோஹநராகம்-ரூபகதாளம்.)

❀ சினவில்செங்கணரக்கருயிர்மாளச்
செற்றவில்லியென்றுகற்றவர்தந்தம்
மனமுள்கொண்டு * என்றும்எப்போதும்நின்றேத்தும்
மாமுனியை மரமேழெய்தவென்றனை *
நனவில்சென்றார்க்குநண்ணறகரியானை
நான்அடியேன்நறையூர்நின்றநம்பியை *
கனவிற்கண்டேன் இன்றுகண்டமையால் என்
கண்ணிணைகள்களிப்பக்களித்தேனே. (௧)

தாய்நினைந்தகன்றேயொக்க என்னையும்
தன்னையேநினைக்கச்செய்து * தான்எனக்காய்
நினைந்தருள்செய்யும்அப்பனை
அன்றுஇவ்வையகமுண்டுமிழ்ந்திட்ட

வாயனை * மகரக்குழைக்காதனை
மைந்தனை மதிட்கோவலிடைகழி
யாயனை * அமரர்க்கரியேற்றை என்
அன்பனையன்றி ஆதரியேனே. (உ)

வந்தநாள்வந்துஎன்நெஞ்சிடம்கொண்டான்
மற்றோர்நெஞ்சறியான் * அடியேனுடைச்
சிந்தையாய்வந்துதென்புலர்க்குஎன்னைச்
சேர்கொடான் இதுசிக்கெனப்பெறறேன் *
கொந்துலாம்பொழில்சூழ்குடந்தைத்தலைக்
கோவினைக் குடமாடியகூத்தனை *
எந்தையைஎநதைதந்தைதம்மானை
எம்பிரானைஎத்தால்மறக்கேனே ? (௩)

உரங்களால்இயன்றமன்னர்மாளப்
பாரதத்துஒருதேரைவர்க்காய்ச்சென்று *
இரங்கியூர்ந்துஅவர்க்குஇன்னருள்செய்யும்
எம்பிரானை வம்பார்புனல்காவிரி *
அரங்கமாளிஎன்னாளிவிண்ணாளி
ஆழிசூழிலங்கைமலங்கச்சென்று *
சரங்களாண்டதண்தாமரைக்கண்ணனுக்கன்றி
என்மனம்தாழ்ந்துநில்லாதே. (௪)

ஆங்குவெநநரகத்துஅழுந்தும்போது
அஞ்சேலென்றுஅடியேனைஅங்கேவநது
தாங்கு * தாமரையன்னபொன்னாரடி
எம்பிரானை உம்பர்க்கணியாய்நின்ற *
வேங்கடத்தரியைப்பரிகீறியை
வெண்ணெயுண்டுஉரலினிடையாப்புண்ட
தீங்கரும்பினை * தேனைநன்பாலினையன்றி
என்மனம்சிநதைசெய்யாதே. (௫)

எட்டனைப்பொழுதாகிலும் என்றும்
என்மனத்தகலாதிருக்கும்புகழ் *
தட்டலர்த்தபொன்னேயலர்கோங்கின்
தாழ்பொழில்திருமாலிருஞ்சோலையந

கட்டியை * கரும்பீன்றஇன்சாற்றைக
காதலால்மறைநான்கும்முன்னோதிய
பட்டனை * பரவைத்துயிலேற்றை என்
பண்பனையன்றிப்பாடல்செய்யேனே. (௬)

பண்ணினின்மொழியாழ்நரம்பில்பெற்ற
பாலையாகிஇங்கேபுகுந்து * என்
கண்ணும்நெஞ்சும்வாயும்இடங்கொண்டான்
கொண்டபின்மறையோர்மனந்தன்னுள்
விண்ணுளார்பெருமானைஎம்மானை
வீங்குநீர்மகரம்திளைக்கும்கடல்
வண்ணன் * மாமணிவண்ணன்எம்அண்ணல்
வண்ணமேயன்றிவாயுரையாதே. (௭)

இனிஎப்பாவம்வந்தெய்தும்? சொல்லீர்
எமக்குஇம்மையேஅருள்பெற்றமையால் * அடும்
துனியைத்தீர்த்துஇன்பமேதருகின்றதுஓர்
தோற்றத்தொன்னெறியை * வையம்தொழப்படும்
முனியைவானவரால்வணங்கப்படும்
முத்தினைப் பத்தர்தாமநுகர்கின்றதுஓர்
கனியை * காதல்செய்துஎன்னுள்ளம்கொண்ட
கள்வனை இன்றுகண்டுகொண்டேனே. (௮)

என்செய்கேன்அடியேன்? உரையீர்இதற்குஎன்றும
என்மனத்தே, இருக்கும்புகழ் *
தஞ்சையாளியைப்பொன்பெயரோன
நெஞ்சம்அன்றுஇடந்தவனைத்தழலேபுரை *
மின்செய்வாளரக்கன்நகர்பாழ்படச்
சூழ்கடல்சிறைவைத்து, இமையோர்தொழும் *
பொன்செய்மால்வரையைமணிக்குன்றினை அன்றி
என்மனம்போற்றியென்னாதே. (௯)

❁ தோடுவிண்டலர்பூம்பொழில்மங்கையர்
தோன்றல் வாள்கலியன்திருவாலி
நாடன் * நன்னறையூர்நின்றநம்பிதன்
நல்லமாமலர்ச்சேவடிசென்னியில்

சூடியும்தொழுதும்எழுந்தாடியும்
தொண்டர்கட்குஅவன்சொன்னசொல்மாலை *
பாடல்பத்திவைபாடுமின்தொண்டீர் !
பாடநுமமிடைப்பாவம்நில்லாவே. (கo)

அடிவரவு:—சினவில் தாய் வந்த உரக்கள் ஆங்கு எட்டனை பண்ணின் இனி என் செய்கேன் தோடு கண்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## ச - ஆந் திருமொழி - கண்சோர.



### திருச்சேறை

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

(அஸாவேரிராகம் - அடதாளம்)

கண்சோரவெங்குருதிவந்திழிய
வெந்தழல்போல்கூந்தலாளை *
மண்சேரமுலையுண்டமாமதலாய் !
வானவர்தம்கோவே ! என்று *
விண்சேரும் இளந்திங்கள் அகடுரிஞ்சு
மணிமாடமல்கு * செலவத்
தண்சேறையெம்பெருமான்தாள்தொழுவார்காண்மின்
என்தலைமேலாரே. (க)

அம்புருவவரிநெடுங்கண் அலர்மகளை
வரையகலத்தமர்ந்து * மல்லல
கொம்புருவவிளங்கனிமேல
இளங்கன்றுகொண்டெறிந்தகூத்தர்போலாம் *
வம்பலரும்தண்சோலை வண்சேறை
வானுந்துகோயில்மேய *
எம்பெருமான்தாள்தொழுவார்
எப்பொழுதும்என்மனத்தே இருக்கின்றாரே (உ)

மீதோடிவாளெயிறுமின்னிலக
முன்விலகுமஉருவினாளை *
காதோடுகொடிமூக்கன்றுடனறுத்த
கைத்தலத்தா ! என்றுநின்று *

தாதோடுவண்டலம்பும்
　　தண்சேறையெம்பெருமான்தாளையேத்தி *
போதோடுபுனல்தூவும்புண்ணியரே
　　விண்ணவரின்பொலிகின்றாரே. (௩)

தேராளும்வாளரக்கன்
　　தென்னிலங்கைவெஞ்சமத்துப்பொன்றிவீழ *
போராளும்சிலையதனால்பொருகணைகள்
　　போக்குவித்தாயென்று * நாளும்
தாராளும்வரைமார்பன்
　　தண்சேறையெம்பெருமான, உம்பராளும் *
பேராளன்பேரோதும்பெரியோரை
　　ஒருகாலும்பிரிகிலேனே. (௪)

வந்திக்கும்மற்றவர்க்கும் மாசுடம்பில
　　வல்லமணர்தமக்கும்அல்லேன் *
முந்திசென்றரியுருவாய்இரணியனை
　　முரணழித்தமுதல்வர்க்கல்லால் *
சநதப்பூமலர்ச்சோலைத
　　தண்சேறையெம்பெருமான்தாளை * நாளும
சிந்திப்பார்க்குஎன்னுள்ளம
　　தேனூறிஎபபொழுதும்தித்திக்குமே (௫)

பண்டுஏனமாய்உலகை அன்றிடந்த
　　பண்பாளாஎன்றுநின்று *
தொண்டானேன்திருவடியேதுணையல்லால்
　　துணையிலேன்சொல்லுகின்றேன் *
வண்டேந்தும்மலர்ப்புறவில்வண்சேறை
　　யெம்பெருமானடியார்தம்மை *
கண்டேனுக்குஇதுகாணீஎன்நெஞ்சும
　　கண்ணிணையும்களிக்குமாறே. (௬)

பைவிரியும்வரியரவில் படுகடலுள்
　　துயிலமர்ந்தபண்பா! என்றும் *
மைவிரியும்மணிவரைபோல்மாயவனே !
　　என்றென்றும், வண்டார் நீலம் *

செய்விரியும் தண்சேறையெம்பெருமான்
திருவடிவைச்சிந்தித்தேற்கு * என்
ஐயறிவும்கொண்டானுக்கு ஆளானார்க்கு ஆளாம
என் அன்புதானே. (எ)

உண்ணாதுவெங்கூற்றம்
ஓவாதபாவங்கள்சேரா * மேலை
விண்ணோரும்மண்ணோரும்வந்திறைஞ்சும்
மென்தளிர்போலடியினானை
பண்ணாரவண்டியம்பும
பைம்பொழில்சூழ்தண்சேறையம்மான்தன்னை *
கண்ணாரக் † கண்டுருகி
கையாரத்தொழுவாரைககருதுங்காலே. (அ)

கள்ளத்தேன்பொய்யகத்தேனாதலால்
‡ போதொருகால்கவலையென்னும் *
வெள்ளத்தேற்குஎன்கொலோ ?
விளைவயலுள் கருநீலம்களைஞாதாளால்
தள்ள * தேன்மணநாறும்
தண்சேறையெம்பெருமானதாளை * நாளும்
உள்ளத்தேவைப்பாருக்குஇதுகாணீர்
என்னுள்ளம்உருகுமாறே. (கூ)

பூமாண்சேர்கருங்குழலார்போல்நடந்து
வயல்நின்றபெடையோடு * அன்னம்
தேமாவினின்னிழலில்கண்துயிலும்
தண்சேறையம்மான்தன்னை *
வாமான்தேர்ப்பரகாலன்
கலிகன்றியொலிமாலைகொண்டுதொண்டீர் ! *
தூமாண்சேர்பொன்னடிமேல்சூட்டுமின்
நும் துணைக்கையால்தொழுதுநின்றே. (௧0)

அடிவரவு:—கண அம்பு மீதோடி தோளும் வந்திக்கும் பண்டு பைவிரியும் உண்ணாது கள்ளத்தேன் பூமாண் தந்தை.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



---

† 'கண்டிறைஞ்சி' என்றும் பாடம். ‡ 'போதருகால்' என்றும் பாடம்.

## ரு - ஆந் திருமொழி—தந்தைகாலில்.

### திருவழுந்தூர். (க)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம் (ஸௌராஷ்ட்ரராகம்-அடதாளம்.)
[தலைவனைப் புணர்ந்துபிரிந்த தலைவி தனதுபாங்கியர்க்குத் தலைவன்பதியுரைத்த பாசுரம்.]

ஸ்ரீ தந்தைகாலில்பெருவிலங்கு தாளவிழ * நள்ளிருட்கண்
வந்தஎந்தைபெருமானூர் மருவிநின்றஊர்போலும் *
முந்திவானம்மழைபொழியும் மூவாவுருவின்மறையாளர் *
அந்திமூன்றும்அனலோம்பும் அணியார்வீதிஅழுந்தூரே. (க)

பாரித்தெழுந்தபடைமன்னர்தம்மை மாள * பாரதத்துத்
தேரிலபாகனாயூர்ந்த தேவதேவனூர்போலும் *
நீரிலபணைத்தநெடுவாளைக்கு அஞ்சிப்போனகுருகினங்கள் *
ஆரல்கவுளோடுஅருகணையும் அணியார்வயல்சூழ்அழுந்தூரே. (௨)

செம்பொன்மதிள்சூழ்தென்னிலங்கைக்கிறைவன் சிரங்கள்ஐயிரண்டும் *
உம்பர்வாளிக்குஇலக்காக உதிர்த்தஉரவோன்ஊர்போலும் *
கொம்பிலார்ந்தமாதவிமேல் கோதிமேய்ந்தவண்டினங்கள் *
அம்பராவும்கண்மடவார் ஐம்பாலணையும்அழுந்தூரே. (௩)

வெள்ளத்துள்ஓராலிலைமேல் மேவிஅடியேன்மனம்புகுந்து * என்
உள்ளத்துள்ளும்கண்ணுள்ளும் நின்றார்நின்றஊர்போலும் *
புள்ளுப்பிள்ளைக்கிரைதேடிப் போனகாதல்பெடையோடும் *
அள்ளல்செறுவில்கயல்நாடும் அணியார்வயல்சூழ்அழுந்தூரே. (௪)

பகலும்இரவும்தானேயாய்ப் பாரும்விண்ணும்தானேயாய் *
நிகரில்சுடராய்இருளாகி நின்றார்நின்றஊர்போலும் *
துகிலின்கொடியும்தேர்த்துகளும் துன்னிமாதர்கூந்தல்வாய் *
அகிலின்புகையால்முகிலேய்க்கும் அணியார்வீதிஅழுந்தூரே. (ரு)

ஏடிலங்குதாமரைபோல் செவ்வாய்முறுவல்செய்தருளி *
மாடுவந்துஎன்மனம்புகுந்து நின்றார்நின்றஊர்போலும் *
நீடுமாடத்தனிச்சூலம்போழக் கொண்டல்துளிதூவ *
ஆடலரவத்தார்ப்புஓவா அணியார்வீதிஅழுந்தூரே. (௬)

மாலைப்புகுந்துமலரணைமேல்வைகி அடியேன்மனம்புகுந்து * என்
நீலக்கண்கள்பனிமல்க நின்றார்நின்றஊர்போலும் *
வேலைக்கடல்போல்நெடுவீதி விண்தோய்சுதைவெண்மணிமாடத்து *
ஆலைப்புகையால்அழற்கதிரைமறைக்கும் வீதிஅழுந்தூரே. (௭)

வஞ்சிமருங்குலிடைநோவ மணந்துநின்றகனவகத்து * என்
நெஞ்சுநிறையக்கைகூப்பிநின்றார் நின்றவூர்போலும் *
பஞ்சியன்னமெல்லடி நற்பாவைமார்கள் * ஆடகத்தின்
அஞ்சிலம்பினார்ப்புஓவா அணியார்வீதிஅழுந்தூரே. (அ)

என்னைம்புலனும்எழிலும்கொண்டு இங்கேநெருநல்எழுந்தருளி *
பொன்னங்கலைகள்மெலிவெய்தப்போன புனிதர்ஊர்போலும் *
மன்னுமுதுநீரரவிந்தமலர்மேல் வரிவண்டுஇசைபாட *
அன்னம்பெடையோடுஉடனாடும் அணியார்வயல்சூழ்அழுந்தூரே. ()

❀ நெல்லில்குவளைகண்காட்ட நீரில்குமுதம்வாய்காட்ட *
அல்லிக்கமலம்முகங்காட்டும் கழனிஅழுந்தூர்நின்றானை *
வல்லிப்பொதும்பில்குயில்கூவும் மங்கைவேந்தன்பரகாலன் *
சொல்லில்பொலிந்ததமிழ்மாலை சொல்லப்பாவம்நில்லாவே. (௧0)

அடிவரவு:—தந்தை பாரித்து செம்பொன் வெள்ளத்துள் பகல் எடு மாலை வஞ்சி என்னைம்புலனும் நெல்லில் சிங்கம்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## ௬- ஆந் திருமொழி—சிங்கமதாய்



### திருவழுந்தூர் (௨)

கலிநிலைத்துறை. (மத்யமாவதிராகம் - ரூபகதாளம்,)

❀ சிங்கமதாய்அவுணன் திறலாகம்முன்கீண்டுகந்த *
சங்கமிடத்தானைத் தழலாழிவலத்தானை *
செங்கமலத்தயனனையார் தென்னழுந்தையில்மன்னிநின்ற *
அங்கமலக்கண்ணனை அடியேன்கண்டுகொண்டேனே. (௧)

கோவானார்மடியக் கொலையார்மழுகொண்டருளும் *
மூவாவானவனை முழுநீர்வண்ணனை * அடியார்க்கு
ஆ! ஆ! என்றிரங்கித் தென்னழுந்தையில்மன்னிநின்ற *
தேவாதிதேவனை யான்கண்டுகொண்டுதிளைத்தேனே. (௨)

உடையானை ஒலிநீருலகங்கள்படைத்தானை *
விடையானோடுஅன்று விறலாழிவிசைத்தானை *
அடையார்தென்னிலங்கையழித்தானை அணியழுந்தூர்
உடையானை * அடியேன் அடைந்துய்ந்துபோனேனே. (௩)

குன்றால்மாரிதடுத்தவனைக் குலவேழம்அன்று
பொன்றாமை * அதனுக்குஅருள்செய்த போரேற்றை *
அன்றுஆவின்நறுநெய்யமர்ந்துண்ண அணியழுந்தூர்
நின்றானை * அடியேன் கண்டுகொண்டுநிறைந்தேனே. (ச)

கஞ்சனைக்காய்ந்தானைக் கண்ணமங்கையுள்நின்றானை *
வஞ்சனப்பேய்முலையூடு உயிர்வாய்மடுத்துண்டானை *
செஞ்சொல்நான்மறையோர், தென்னழுந்தையில்மன்னிநின்ற *
அஞ்சனக்குன்றந்தன்னை அடியேன்கண்டுகொண்டேனே. (ரு)

பெரியானை அமரர்தலைவற்கும்பிரமனுக்கும் *
உரியானையுகந்தானவனுக்கும் உணாவதனுக்கு
அரியானை * அழுந்தூர்மறையோர்கள் அடிபணியும்
கரியானை * அடியேன் கண்டுகொண்டுகளித்தேனே. (சு)

திருவாழ்மார்வன்தன்னைத் திசைமண்நீர்எரிமுதலா *
உருவாய்நின்றவனை ஒலிசேரும்மாருதத்தை *
அருவாய்நின்றவனைத் தென்னழுந்தையில்மன்னிநின்ற *
கருவார்கற்பகத்தைக் கண்டுகொண்டுகளித்தேனே. (எ)

நிலையாளாக என்னையுகந்தானை * நிலமகள்தன்
முலையாள்வித்தகனை முதுநான்மறைவீதிதொறும் *
† ஆலையாரும்கடல்போல்முழங்குமதென்னழுந்தையில்மன்னிநின்ற *
கலையார்சொற்பொருளைக் கண்டுகொண்டுகளித்தேனே. (அ)

❀ பேரானைக் குடந்தைப்பெருமானை * இலங்குஒளிசேர்
வாரார்வனமுலையாள் மலர்மங்கைநாயகனை *
ஆராவின்னமுதைத் தென்னழுந்தையில்மன்னிநின்ற *
காரார்கருமுகிலைக் கண்டுகொண்டுகளித்தேனே. (கூ)

❀ திறலமுருகனனையார் தென்னழுந்தையில்மன்னிநின்ற *
அறமுதல்வனவனை அணியாலியர்கோன், மருவார் *
கறைநெடுவேல்வலவன் கலிகன்றிசொல்ஐயிரண்டும் *
முறைவழுவாமைவல்லார் முழுதுஆள்வர்வானுலகே. (கo)

அடிவரவு:—சிங்கமது கோ உடையானை குன்றால் கஞ்சனை பெரியானை திருவாழ் நிலை பேரானை திறல் திரு.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



† 'அலையார்' என்ற பாடம் ஓசைக்குச் சேரும்.

## எ - ஆந் திருமொழி—திருவுக்கும்.

திருவழுந்தூர். (ரு)

எண்சீராசிரியவிருத்தம். (செஞ்சுருட்டிராகம் - ரூபகதாளம்.)

ஶ்ரீ திருவுக்குந்திருவாகியசெல்வா!
தெய்வத்துக்கரசே! செய்யகண்ணா! *
உருவச்செஞ்சுடராழிவல்லானே!
உலகுண்டஒருவா! திருமார்பா! *
ஒருவற்காற்றியுய்யும் † வகையின்றால்
உடன்நின்றுஐவர்என்னுள்புகுந்து * ஒழியாது
அருவித்தின்றிட அஞ்சிநின்னடைந்தேன்
அழுந்தூர்மேலதிசைநின்றஅம்மானே! (க)

பந்தார்மெல்விரல்நல்வளைத்தோளி
பாவைபூமகள்தன்னொடும்உடனே
வந்தாய் * என்மனத்தேமன்னிநின்றாய்
மால்வண்ணா! மழைபோலொளிவண்ணா! *
சந்தோகா! பௌழியா! தைத்திரியா!
சாமவேதியனே! நெடுமாலே! *
அந்தோ! நின்னடியன்றிமற்றறியேன்
அழுந்தூர்மேல்திசைநின்றஅம்மானே! (உ)

நெய்யாராழியுஞ்சங்கமுமேந்தும்
நீண்டதோளுடையாய்! * அடியேனைச்
செய்யாதவுலகத்திடைசெய்தாய்
சிறுமைக்கும்பெருமைக்கும்உள்புகுந்து *
பொய்யால்ஐவர்என்மெய்குடியேறிப்
போற்றிவாழ்வதற்குஅஞ்சிநின்னடைந்தேன் *
ஐயா! நின்னடியன்றிமற்றறியேன்
அழுந்தூர்மேல்திசைநின்றஅம்மானே! (ங)

பரனே! பஞ்சவன்பௌழியன்சோழன்
பார்மன்னர்மன்னர்தாம்பணிந்தேத்தும்
வரனே! * மாதவனே! மதுசூதா!
மற்றோர்நல்துணைநின்னலால்இலேன்காண் *

† 'வகையென்றால்' என்றும் வழங்குவர்.

நரனே ! நாரணனே ! திருநறையூர்நம்பீ !
எம்பெருமான் ! உம்பராளும்
அரனே ! * ஆதிவராகம்முனானாய் !
அழுந்தூர்மேல்திசைநின்றஅம்மானே! (௪)

விண்டான்விண்புகவெஞ்சமத்துஅரியாய்ப்
பரியோன்மார்வகம்பற்றிப்பிளந்து *
பண்டுஆனுய்யஓர்மால்வரையேந்தும்
பண்பாளா ! பரனே ! பவித்திரனே ! *
கண்டேன்நான்கலியுகத்ததன்தன்மை
கருமமாவதும்என்தனக்குஅறிந்தேன் *
அண்டா ! நின்னடியன்றிமற்றறியேன்
அழுந்தூர்மேல்திசைநின்றஅம்மானே ! (௫)

தோயாவின்தயிர்நெய்யமுதுண்ணச்
சொன்னார்சொல்லிநகும்பரிசே * பெற்ற
தாயால்ஆப்புண்டிருந்துஅழுதேங்கும்
தாடாளா! தரையோர்க்கும்விண்ணோர்க்கும்
சேயாய்! * கிரேததிரேதத்துவாபர
கலியுகம்இவைநான்கும்முனானாய்! *
ஆயா! நின்னடியன்றிமற்றறியேன்
அழுந்தூர்மேல்திசைநின்றஅம்மானே! (௬)

கறுத்துக்கஞ்சனை அஞ்சமுனிந்தாய்!
கார்வண்ணா! கடல்போலொளிவண்ணா! *
இறுத்திட்டான்விடையேழும்முன்வென்றாய் !
எந்தாய்! அந்தரமேழும்முனானாய் ! *
பொறுத்துக்கொண்டிருந்தால்பொறுக்கொணாப்
போகமேநுகர்வான்புகுந்து * ஐவர்
அறுத்துத்தின்றிட அஞ்சிநின்னடைந்தேன்
அழுந்தூர்மேல்திசைநின்றஅம்மானே! (எ)

நெடியானே! கடியார்கலிநம்பீ!
நின்னையேநினைந்து இங்குஇருப்பேனை *
கடியார்காளையரைவர்புகுந்து
காவல்செய்தஅக்காவலைப்பிழைத்து *

குடிபோகதுஉன் அடிக்கீழ்வந்துபுகுந்தேன்
கூறைசோறுஇவைதந்தெனக்கருளி *
அடியேனைப்பணியாண்டுகொள் எந்தாய் !
அழுந்தூர்மேல்திசைநின்றஅம்மானே! (அ)

கோவாய்ஐவர்என்மெய்குடியேறிக்
கூறைசோறிவைதாவென்றுகுமைத்துப்
போகார் * நான் அவரைப்பொறுக்ககிலேன்
புனிதா! புட்கொடியாய்! நெடுமாலே! *
தீவாயநாகணையில்துயில்வானே!
திருமாலே! இனிசசெய்வதொன்றுஅறியேன் *
ஆ! ஆ! என்றடியேற்குஇறைஇரங்காய்
அழுந்தூர்மேல்திசைநின்றஅம்மானே! (க)

அன்னமன்னுபைம்பொழில்சூழ்ந்த
அழுந்தூர்மேல்திசைநின்றஅம்மானை *
கன்னிமன்னுதிண்தோள்கலிகன்றி
ஆலிநாடன்மங்கைக்குலவேந்தன் *
சொன்னவின்தமிழ்நன்மணிக்கோவை
தூயமாலைஇவைபத்தும்வல்லார் *
மன்னிமன்னவராயுலகாண்டு
மானவெண்குடைக்கீழ்மகிழ்வாரே. (க0)

அடிவரவு—திருவுக்கும் பந்தார நெய் பரனே விண்டான் தோயா கறுத்து நெடியானே கோவாய் அன்னம் செங்கமலம்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## அ - ஆந் திருமொழி—செங்கமலம்.



### திருவழுந்தூர். (ச)

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (பியாகடைராகம்-ஆதிதாளம்.)

செங்கமலத்திருமகளும்புவியும்
செம்பொன் திருவடியினிணைவருடமுனிவரேத்த *
வங்கமலிதடங்கடலுள் அநந்தனென்னும்
வரியரவினணைத்துயின்றமாயோன்காண்மின் *

எங்குமலிநிறைபுகழ்நால்வேதம் ஐந்து
வேள்விகளும்கேள்விகளும் இயன்றதன்மை *
அங்கமலத்தயனனையார்பயிலும்செல்வத்து
அணியழுந்தூர்நின்றுகந்த அமரர்கோவே. (க)

முன் இவவுலகேழும் இருள் மண்டியுண்ண
முனிவரொடுதானவர்கள் திசைப்ப * வந்து
பன்னுகலைநால்வேதப்பொருளையெல்லாம்
பரிமுகமாய் அருளியஎம்பரமன்காண்மின் *
செந்நெல்மலிகதிர்க்கவரிவீச
சங்கமவைமுரலச்செங்கமலமலரையேறி *
அன்னம்மலிபெடையோடும் அமரும்செல்வத்து
அணியழுந்தூர்நின்றுகந்த அமரர்கோவே. (உ)

குலத்தலையமதவேழம்பொய்கைபுக்கு
கோள்முதலைபிடிக்க அதற்கு அனுங்கிநின்று *
நிலத்திகழும்மலர்ச்சுடரேய்சோதீ! என்ன
நெஞ்சிடர்தீர்த்தருளியஎன்நிமலன்காண்மின் *
மலைத்திகழ்சந்தகில்கனகமணியுங்கொண்டு
வந்துந்திவயல்கள்தொறும்மடைகள்பாய *
அலைத்துவரும்பொன்னிவளம்பெருகும்செல்வத்து
அணியழுந்தூர்நின்றுகந்த அமரர்கோவே (ங)

சிலம்புமுதல்கலனணிந்தோர் † செங்கண்குன்றம்
திகழ்ந்ததெனத்திருவுருவம்பன்றியாகி *
இலங்குபுவிமடந்தைதனை இடந்துபுல்கி
எயிற்றிடைவைத்தருளியஎம்மீசன்காண்மின் *
புலம்புசிறைவண்டொலிப்பப்பூகம்தொக்க
பொழில்கள்தொறும்குயில்கூவமயில்களால *
அலம்புதிரைப்புனல்புடைசூழ்ந்து அழகார்செல்வத்து
அணியழுந்தூர்நின்றுகந்த அமரர்கோவே (ச)

சினமேவும் அடலரியினுருவமாகித்
திறல்மேவும்இரணியனதாகம்கீண்டு *
மனமேவுவஞ்சனையால்வந்தபேய்ச்சி
மாள உயிர்வவ்வியஎம்மாயோன்காண்மின் *

---

† 'செங்கற்குன்றம்' என்று அரும்பதம்.

இனமேவுவரிவளைக்கையேந்தும் கோவை
‡ யேய்வாய்மரகதம்போல்கிளியினின்சொல் *
அனமேவுநடைமடவார்பயிலும்செல்வத்து
அணியழுந்தூர்நின்றுகந்த அமரர்கோவே. (ரு)

வானவர்தம்துயர்தீரவந்துதோன்றி
மாணுருவாய்மூவடிமாவலியைவேண்டி *
தானமரவேழுலகும்அளந்தவென்றித்
தனிமுதல் சக்கரப்படைஎன்தலைவன்காண்மின் *
தேனமரும்பொழில்தழுவும்எழில்கொள்வீதிச்
செழுமாடமாளிகைகள்கூடந்தோறும் *
ஆனதொல்சீர்மறையாளர்பயிலும்செல்வத்து
அணியழுந்தூர்நின்றுகந்த அமரர்கோவே. (சு)

பந்தணைந்தமெல்விரலாள்சீதைக்காகிப்
பகலவன்மீதியங்காத இலங்கைவேந்தன் *
அந்தமில்திண்கரஞ்சிரங்கள்புரண்டுவீழ
அடுகணையால்எய்துகந்த அம்மான்காண்மின் *
செந்தமிழும்வடகலையும்திகழ்ந்தநாவர்
திசைமுகனையனையவர்கள்செம்மைமிக்க *
அந்தணர்தம்ஆகுதியின் புகையார்செல்வத்து
அணியழுந்தூர்நின்றுகந்த அமரர்கோவே. (எ)

கும்பமிகுமதவேழம்குலையக்கொம்பு
பறித்து மழவிடையடர்த்துக்குரவைகோத்து *
வம்பவிழும்மலர்க்குழலாளாய்ச்சிவைத்த
தயிர்வெண்ணெய்உண்டுகந்தமாயோன்காண்மின் *
செம்பவளமரதகம்நன்முத்தம்காட்டத்
திகழ்பூகம்கதலிபலவளம்மிக்குளங்கும் *
அம்பொன்மதில்பொழில்புடைசூழ்ந்து அழகார்செல்வத்து
அணியழுந்தூர்நின்றுகந்த அமரர்கோவே. (அ)

ஊடேறுகஞ்சனொடுமல்லும்வில்லும்
ஒண்கரியும்உருள்சகடும்உடையச்செற்ற *
நீடேறுபெருவலித்தோளுடையவென்றி
நிலவுபுகழ்நேமியங்கைநெடியோன்காண்மின் *

---

‡ ‘ஏய்வாய’ என்றும் பாடம்.

சேடேறுபொழில்தழுவும்எழில்கொள்வீதித்
திருவிழவில்மணியணிந்ததிண்ணைதோறும் *
ஆடேறுமலர்க்குழலார்பயிலும்செல்வத்து
அணியழுந்தூர்நின்றுகந்த அமரர்கோவே. (௯)

பன்றியாய்மீனாகி அரியாய்ப் பாரைப்
படைத்துககாத்துண்டுமிழ்ந்தபரமன்தன்னை *
அன்றுஅமரர்க்கதிபதியும்அயனும்சேயும்
அடிபணிய அணியழுந்தூர்நின்றகோவை *
கன்றிநெடுவேல்வலவன் ஆலிநாடன்
கலிகன்றியொலிசெய்த இன்பப்பாடல் *
ஒன்றினொடுநான்கும்ஓரைந்தும்வல்லார்
ஒலிகடல்சூழுலகாளும்உம்பர்தாமே. (௰)

அடிவரவு:—செங்கமலம் முன் குலம் சிலம்பு சினம் வானவர் பந்து கும்பம் ஊடேறு பன்றி கள்ளம்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## கூ - ஆந் திருமொழி—கள்ளம்மனம்.



### திருச்சிறுபுலியூர்.

கலிவிருத்தம். (அபருபாகம் - ஆதிதாளம்.

கள்ளம்மனம்விள்ளும்வகை கருதிக்கழல்தொழுவீர் *
வெள்ளம்முதுபரவைத் திரைவிரிய * கரையெங்கும்
தெள்ளும்மணிதிகழும் சிறுபுலியூர்ச்சலசயனத்
துள்ளும் * எனதுள்ளத்துள்ளும் உறைவாரைஉள்ளீரே. (௧)

தெருவில்திரிசிறுநோன்பியர் செஞ்சோற்றொடுகஞ்சி
மருவி * பிரிந்தவர்வாய்மொழி மதியாதுவந்தடைவீர்! *
திருவிற்பொலிமறையோர் சிறுபுலியூர்ச்சலசயனத்து *
உருவக்குறளடிகள் அடியுணர்மின்உணர்வீரே. (௨)

பறையும்வினைதொழுதுஉய்ம்மினீர் பணியும்சிறுதொண்டீர்! *
அறையும்புனல்ஒருபால் வயல்ஒருபால்பொழில்ஒருபால்*
சிறைவண்டினமறையும் சிறுபுலியூர்ச்சலசயனத்து
உறையும் * இறையடியல்லதுஒன்றுஇறையும் அறியேனே. (௩)

வானார்மதிபொதியும்சடை மழுவாளியொடொருபால் *
தானாகியதலைவனவன் அமரர்க்கதிபதியாம் *
தேனார்பொழில்தழுவும் சிறுபுலியூர்ச்சலசயனத்து
ஆனாயனது * அடியல்லது ஒன்றுஅறியேன்அடியேனே. (௫)

நந்தாநெடுநரகத்திடை நணுகாவகை * நாளும்
எந்தாய் ! என இமையோர்தொழுதேத்தும்இடம் * எறிநீர்ச
செந்தாமரைமலரும் சிறுபுலியூர்ச்சலசயனத்து *
அந்தாமரையடியாய் ! உனதடியேற்கு அருள்புரியே. (௬)

முழுநீலமும்மலராம்பலும் அரவிந்தமும்விரவி *
கழுநீரொடுமடவாரவர் கண்வாய்முகமலரும் *
செழுநீர்வயல்தழுவும் சிறுபுலியூர்ச்சலசயனம் *
தொழுநீர்மையதுடையார் அடிதொழுவார்துயரிலரே. (௭)

❀ சேயோங்குதண் திருமாலிருஞ்சோலைமலைஉறையும
மாயா ! * எனக்குரையாய்இது மறைநான்கினுளாயோ ? *
தீயோம்புகைமறையோர் சிறுபுலியூர்ச்சலசயனத
தாயோ ? * உனதடியார்மனத்தாயோ ? அறியேனே. (௮)

மையார்வரிநீலம் மலர்க்கண்ணார்மனம்விட்டிட்டு *
உய்வான்உனகழலே தொழுதெழுவேன் * கிளிமடவார்
செவ்வாய்மொழிபயிலும் சிறுபுலியூர்ச்சலசயனத்து *
ஐவாயரவணைமேல் உறையமலா ! அருளாயே (௯)

❀ கருமாமுகிலுருவா ! கனலுருவா ! புனலுருவா ! *
பெருமால்வரையுருவா ! பிறவுருவா ! நினதுருவா ! *
திருமாமகள்மருவும் சிறுபுலியூர்சசலசயனதது *
அருமாகடலமுதே ! உனது அடியேசரணமே (௧0)

❀ சீரார்நெடுமறுகில் சிறுபுலியூர்ச்சலசயனத்து *
ஏரார்முகில்வண்ணன்தனை இமையோர்பெருமானை *
காரார்வயல்மங்கைககிறை கலியனொலிமாலை *
பாரார்இவைபரவித்தொழப் பாவம்பயிலாவே. (௧0)

அடிவரவு:—கள்ளம் தெருவில் பறையும் வான் நந்தா முழு சேயோங்கு மையார் கரு சீரார் பெரும்புறம்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## ௧௦ - ஆந் திருமொழி—பெரும்புறக்கடலை.

திருக்கண்ணமங்கை.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (தோடிராகம் - அடதாளம்.)

பெரும்புறக்கடலை அடலேற்றினைப்
பெண்ணை ஆணை * எண்ணில்முனிவர்க்கருள்
தருந்தவத்தைமுத்தின் திரள்கோவையைப்
பத்தராவியைநித்திலத்தொத்தினை *
அரும்பினை அலரை அடியேன்மனத்தாசையை
அமுதம்பொதியின்சுவை *
கரும்பினைக்கனியைச்சென றுநாடிக
கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே. (௧)

மெய்ந்நலத்தவத்தைத்திவத்தைத்தரும்
மெய்யைப்பொய்யினை, கையில்ஓர்சங்குடை *
மைந்நிறக்கடலைக்கடல்வண்ணனை மாலை
ஆலிலைபள்ளிகொள்மாயனை *
நென்னலைப்பகலைஇற்றைநாளினை
நாளையாய்வரும்திங்களை ஆண்டினை *
கன்னலைக்கரும்பினிடைத்தேறலைக்
கண்ணமஙகையுள் கண்டுகொண்டேனே. (௨)

எங்களுக்குஅருள் செய்கின்றஈசனை
வாசவார்குழலாள் மலைமஙகைதன்
பங்கனை * பங்கில்வைத்துகந்தான் தன்னைப்
பான்மையைப்பனிமாமதியம்தவழ் *
மங்குலைச்சுடரைவடமாமலை
யுச்சியை நச்சிநாம்வணங்கப்படும்
கங்குலை * பகலைச்சென்றுநாடிக்
கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே. (௩)

பேய்முலைத்தலைநஞ்சுண்டபிள்ளையைத்
தெள்ளியார்வணங்கப்படும்தேவனை
மாயனைமதிட்கோவலிடைகழிமைந்தனை
அன்றிஅந்தணர்சிந்தையுள்

ஈசனை * இலங்குஞ்சுடர்ச்சோதியை
எந்தையையெனக்குஎய்ப்பினில்வைப்பினை *
காசினைமணியைச்சென்றுநாடிக்
கண்ணமங்கையுள்கண்டுகொண்டேனே. (ச)

ஏற்றினை இமயத்துளெம்மீசனை
இம்மையையமறுமைக்குமருந்தினை *
ஆற்றலைஅண்டத்தப்புறத்துய்த்திடும்
ஐயனைக்கையிலாழியொன்றேந்திய
கூற்றினை * குருமாமணிக்குன்றினை
நின்றவூர்நின்றநித்திலத்தொத்தினை *
காற்றினைப்புனலைச்சென்றுநாடிக்
கண்ணமங்கையுள்கண்டுகொண்டேனே. (ரு)

துப்பனைத்துரங்கம்படச்சீறியதோன்றலைச்
சுடர்வான்கலன்பெய்ததோர்
செப்பினை * திருமங்கைமணாளனைத்
தேவனைத்திகழும்பவளத்தொளி
யொப்பனை * உலகேழினையூழியை
ஆழியேந்தியகையனை அந்தணர்
கற்பினை * கழுநீர்மலரும்வயல்
கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே. (சா)

திருத்தனைத்திசைநான்முகன்தந்தையைத்
தேவதேவனைமூவரில்முன்னிய
விருத்தனை * விளங்குஞ்சுடர்ச்சோதியை
விண்ணைமண்ணினைக் கண்ணுதல்கூடிய
அருத்தனை * அரியைப்பரிகீறிய அப்பனை
அப்பிலாரழலாய்நின்ற
கருத்தனை * களிவண்டறையும்பொழில்
கண்ணமங்கையுள்கண்டுகொண்டேனே. (எ)

வெஞ்சினக்களிற்றைவிளங்காய்வீழக்
கன்றுவீசியஈசனை * பேய்மகள்
துஞ்சநஞ்சுசுவைத்துண்டதோன்றலைத்
தோன்றல்வாளரக்கன்கெடத்தோன்றிய

நஞ்சினை * அமுதத்தினைநாதனை
நச்சுவாருச்சிமேல்நிற்கும்நம்பியை *
கஞ்சனைத்துஞ்சவஞ்சித்தவஞ்சனைக்
கண்ணமங்கையுள்கண்டுகொண்டேனே. (அ)

பண்ணினைப்பண்ணில்நின்றதோர்பான்மையைப
பாலுள்நெய்யினைமாலுருவாய்நின்ற
விண்ணினை * விளங்குஞ்சுடர்சசோதியை
வேள்வியைவிளக்கினொளிதன்னை *
மண்ணினைமலையையலைநீரினை
மாலைமாமதியைமறையோர்தங்கள்
கண்ணினை *' கண்களாரளவும்நின்று
கண்ணமங்கையுள்கண்டுகொண்டேனே. (கூ)

❀ கண்ணமங்கையுள்கண்டுகொண்டேனென்று
காதலால்கலிகன்றிஉரைசெய்த *
வண்ணவொண்தமிழொன்பதோடொன்றிவை
வல்லராய்உரைப்பார், மதியந்தவழ் *
விண்ணில்விண்ணவராய்மகிழ்வெய்துவர்
மெய்ம்மைசொல்லின்வெண்சங்கமொன்றேந்திய
கண்ண ! * நின்தனக்குங்குறிப்பாகில்
கற்கலாம் கவியின்பொருள்தானே. (கய)

அடிவரவு—பெரு மெய் எமக்களுக்கு பேய் எற்றினை துப்பனை திருத்தனை வெஞ்சினம் பண்ணினை கண்ணமங்கையுள் சிலை.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## எட்டாம்பத்து

### க - ஆந் திருமொழி—சிலையிலங்கு.



திருக்கண்ணபுரம். (க)

[தலைமகனிடத்து ஈடுபட்ட தலைமகளது செயல்கண்ட தாய் வியந்துகூறிய பாசுரம்.]

அறுசீராசிரியவிருத்தம். (காம்பூஜிராகம்-ரூபகதாளம்.)

❀ சிலையிலங்குபொன்னாழி
திண்படைதண்டொண்சங்கமென்கின்றாளால் *
மலையிலங்குதோள்நான்கே
மற்றவனுக்கெற்றேகாணென்கின்றாளால் *

முலையிலங்குபூம்பயலை
　　முன்போட அன்போடியிருக்கின்றாளால் *
கலையிலங்குமொழியாளர்
　　கண்ணபுரத்தம்மானைக்கண்டாள்கொலோ ? (க)

செருவரைமுன்னாசறுத்த சிலையன்றோ ?
　　கைத்தலத்ததென்கின்றாளால் *
பொருவரைமுன்போர்தொலைத்த
　　பொன்னாழிமற்றொருகையென்கின்றாளால் *
ஒருவரையும்நின்னொப்பா
　　ரொப்பிலாஎன்னப்பா ! என்கின்றாளால் *
கருவரைபோல்நின்றானைக்
　　கண்ணபுரத்தம்மானைக்கண்டாள்கொலோ ? (உ)

துன்னுமாமணிமுடிமேல்துழாயலங்கல்
　　தோன்றுமாலென்கின்றாளால் *
மின்னுமாமணிமகரகுண்டலங்கள்
　　வில்வீசுமென்கின்றாளால் *
பொன்னின்மாமணியாரம்
　　அணியாகத்திலங்குமாலென்கின்றாளால் *
கன்னிமாமதிள்புடைசூழ்
　　கண்ணபுரத்தம்மானைக்கண்டாள்கொலோ ? (ந)

தாராயதண்துளப
　　வண்டுழுதவரைமார்பனென்கின்றாளால் *
போரானைக்கொம்பொசித்த
　　புட்பாகனென்னம்மானென்கின்றாளால் *
ஆரானும்காண்மின்கள்
　　அம்பவளம்வாயவனுக்கென்கின்றாளால் *
கார்வானம்நின்றதிரும்
　　கண்ணபுரத்தம்மானைக்கண்டாள்கொலோ ? (ச)

அடித்தலமும்தாமரையே
　　அங்கைகளும்பங்கயமேயென்கின்றாளால் *
முடித்தலமும்பொற்பூணும்
　　என்நெஞ்சத்துள் † அகலாதென்கின்றாளால் *

† 'அகலாவென்கின்றாளால்' என்பதும் பாடம்.

வடித்தடங்கண்மலரவளோ
வரையாகத்துள்ளிருப்பாளென்கின்றாளால் *
கடிக்கமலங்கள்ளுகுக்கும்
கண்ணபுரத்தம்மானைக்கண்டாள்கொலோ ? (ரு)

பேராயிரமுடையபேராளன்
பேராளனென்கின்றாளால் *
ஏரார்கனமகரகுண்டலத்தன்
எண்டோளனென்கின்றாளால் *
நீரார்மழைமுகிலே
நீள்வரையேயொக்குமாலென்கின்றாளால் *
காரார் † வயலமரும
கண்ணபுரத்தம்மானைக்கண்டாள்கொலோ ? (சு)

செவ்வரத்தவுடையாடை
அதன்மேலோர்சிவளிகைக்கச்சென்கின்றாளால் *
அவ்வரத்தவடியிணையும்
அங்கைகளும்பங்கயமேயென்கின்றாளால் *
மைவளர்க்கும்மணியுருவம
மரகதமோ ! மழைமுகிலோ ! என்கின்றாளால் *
கைவளர்க்குமழலாளர்
கண்ணபுரத்தம்மானைக்கண்டாள்கொலோ ? (எ)

கொற்றப்புள்ளொன்றேறி
மன்றூடேவருகின்றானென்கின்றாளால் *
வெற்றிப்போரிந்திரற்கும்
இந்திரனேயொக்குமாலென்கின்றாளால் *
பெற்றக்காலவனாகம்
பெண்பிறந்தோமுய்யோமோ ! என்கின்றாளால் *
கற்றநூல்மறையாளர்
கண்ணபுரத்தம்மானைக்கண்டாள்கொலோ ? (அ)

வண்டமரும்வனமாலை
மணிமுடிமேல்மணநாறுமென்கின்றாளால் *
உண்டிவர்பாலன்பெனக்கென்று
ஒருகாலும்பிரிகிலேனென்கின்றாளால் *

† 'வயல்மருவும்' என்றும் பாடம.

பண்டிவரைக்கண்டறிவதுளவ்வூரில் ?
யாமென்றேபயில்கின்றாளால் *
கண்டவர்தம்மனம்வழங்கும்
கண்ணபுரத்தம்மானைக்கண்டாள்கொலோ ? (கூ)

✽ மாவளருமென்னோக்கி
மாதராள்மாயவனைக்கண்டாளென்று *
காவளரும்கடிபொழில்சூழ்
கண்ணபுரத்தம்மானைக்கலியன்சொன்ன *
பாவளரும்தமிழ்மாலை
பன்னியநூல்இவையைந்துமைந்தும்வல்லார் *
பூவளரும்கற்பகம்சேர்பொன்னுலகில்
மன்னவராய்ப்புகழ்தக்கோரே. (க0)

அடிவரவு:—சிலை செருவரை துன்னு தார் அடி பேர் செவ்வரத்த கொற்றம் வண்டு மாவளரும் தெள்ளியீர்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

## உ - ஆந் திருமொழி—தெள்ளியீர்.

### திருக்கண்ணபுரம். (உ)

[தலைவியின் நிலைகண்ட தாய் தலைமகனை இயற்பழித்தும், தலைமகளது இளமைக்கு இரங்கியும் கூறிய பாசுரம்.]

வெண்டளையால்வந்ததரவுகொச்சகக்கலிப்பா. (பைரவிராகம்-அடதாளம்.)

✽ தெள்ளியீர்! தேவர்க்கும் தேவர் திருத்தக்கீர்*
வெள்ளியீர் ! வெய்யவிழுநிதிவண்ணர்* ஓ!
துள்ளுநீர்க் கண்ணபுரம்தொழுதாளிவள்
கள்வியோ ! * கைவளைகொள்வதுதக்கதே ? (க)

நீணிலாமுற்றத்து நின்றுஇவள்நோக்கினாள் *
காணுமோ ! கண்ணபுரமென்றுகாட்டினாள்
பாணனார்திண்ணமிருக்க இனிஇவள்
நாணுமோ ? * நன்றுநன்றுநறையூரர்க்கே. (உ)

✽ அருவிசோர்வேங்கடம் நீர்மலையென்றுவாய்
வெருவினாள் * மெய்யம்வினவியிருக்கின்றாள் *
பெருகுசீர்க் கண்ணபுரமென்றுபேசினாள்
உருகினாள் * உள்மெலிந்தாள் இதுஎன்கொலோ? (௩)

உண்ணும்நாளில்லை உறக்கமும்தானில்லை *
பெண்மையும் சாலநிறைந்திலள் பேதைதான் *
கண்ணனூர் கண்ணபுரம்தொழும், கார்க்கடல்
வண்ணர்மேல் * எண்ணம்இவட்கு இதுஎன்கொலோ? (ச)

கண்ணனூர்கண்ணபுரம் தொழும்காரிகை *
பெண்மையும்தன்னுடை உண்மையுரைக்கின்றாள் *
வெண்ணெயுண்டுஊப்புண்ட வண்ணம்விளம்பினால் *
வண்ணமும் பொன்னிறமாவதுஒழியுமே. (ரு)

வடவரைநின்றும்வந்து இன்றுகணபுரம் *
இடவகைகொள்வது யாமென்றுபேசினாள் *
மடவரல்மாதர்என்பேதை இவர்க்குஇவள்
கடவதென்? * கண்துயில் இன்றுஇவர்கொள்ளவே. (சு)

தரங்கநீர்பேசினும் தண்மதிகாயினும் *
இரங்குமோ? எத்தனைநாளிருந்துஎள்கினாள்? *
துரங்கம்வாய்கீண்டுகந்தானது தொன்மையூர் *
அரங்கமேயென்பது இவள்தனக்குஆசையே (எ)

தொண்டெல்லாமநின்னடியே தொழுதுய்யுமா
கண்டு * தான்கணபுரம் தொழப்போயினாள் *
வண்டுலாம்கோதைஎன்பேதை மணிநிறம
கொண்டுதான் * கோயினமைசெய்வது தக்கதே? (அ)

முள்ளெயிறேந்தில கூழைமுடிகொடா *
தெள்ளியளென்பதோர்தேசிலள் என்செய்கேன்? *
கள்ளவிழ்சோலைக் கணபுரம்கைதொழும்
பிள்ளையை * பிள்ளையென்றெண்ணப்பெறுவரே? (க)

❀ கார்மலி கண்ணபுரத்தெம்மடிகளை *
பார்மலிமங்கையர்கோன் பரகாலன்சொல் *
சீர்மலிபாடல் இவைபத்தும்வல்லவர் *
நீர்மலிவையத்து நீடுநிற்பார்களே. (கo)

அடிவரவு:—தெள்ளியீர் நீணிலா அருவி உண்ணும் கண்ணன் வடவரை தரங்கம் தொண்டு முள் கார் கரை.

**திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.**



## ௩ - ஆந் திருமொழி—கரையெடுத்த.

### திருக்கண்ணபுரம். (௩)

[தலைமகனைப் பிரிந்த தலைவி இரங்கிக்கூறிய பாசுரம்; அறத்தோடு நிற்றல்.]

தரவுகொச்சகக்கலிப்பா. (கேதாரகௌளராகம்-ரூபகதாளம்.)

ஸ்ரீ கரையெடுத்தசுரிசங்கும் கனபவளத்தெழுகொடியும் *
திரையெடுத்துவருபுனல்சூழ் திருக்கண்ணபுரத்துறையும் *
விரையெடுத்ததுழாயலங்கல் விறல்வரைத்தோள்புடைபெயர *
வரையெடுத்தபெருமானுக்கு இழந்தேன்என்வரிவளையே. (க)

அரிவிரவுமுகிற்கணத்தால் அகிற்புகையால்வரையோடும் *
தெரிவரியமணிமாடத் திருக்கண்ணபுரத்துறையும் *
வரியரவினணைத்துயின்று மழைமதத்தசிறுதறுகண் *
கரிவெருவமருப்பொசித்தாற்கு இழந்தேன்என்கனவளையே. (உ)

துங்கமாமணிமாட நெடுமுகட்டின்சூலிகை * போம்
திங்கள்மாமுகில்துணிக்கும் திருக்கண்ணபுரத்துறையும் *
பைங்கண்மால்விடையடர்த்துப் பனிமதிகோள்விடுத்துகந்த *
செங்கண்மாலம்மானுக்கு இழந்தேன்என்செறிவளையே. (௩)

கணமருவுமயிலகவு கடிபொழில்சூழ்நெடுமறுகில *
திணமருவுகனமதிள்சூழ் திருக்கண்ணபுரத்துறையும் *
மணமருவுதோளாய்ச்சி ஆர்க்கப்போய் * உரலோடும்
புணர்மருதம்இறநடந்தாற்கு இழந்தேன்என்பொன்வளையே. (௪)

வாயெடுத்தமந்திரத்தால் அந்தணர்தம்செய்தொழில்கள் *
தீயெடுத்துமறைவளர்க்கும் திருக்கண்ணபுரத்துறையும் *
தாயெடுத்தசிறுகோலுக்கு உளைந்தோடி * தயிருண்ட
வாய்துடைத்தமைந்தனுக்கு இழந்தேன்என்வரிவளையே. (௫)

மடலெடுத்தநெடுந்தாழை மருங்கெல்லாம்வளர்பவளம் *
திடலெடுத்துச்சுடரிமைக்கும் திருக்கண்ணபுரத்துறையும் *
அடலடர்த்தன்றிரணியனை முரணழிய, அணியுகிரால் *
உடலெடுத்தபெருமானுக்கு இழந்தேன்என்னொளிவளையே. (௬)

வண்டமரும்மலர்ப்புன்னை வரிநீழல் அணிமுத்தம *
தெண்திரைகள்வரத்திரட்டும் திருக்கண்ணபுரத்துறையும் *
எண்திசையும் † எழுசுடரும் இருநிலனும்பெருவிசும்பும் *
உண்டுமிழ்ந்தபெருமானுக்கு இழந்தேன்என்னொளிவளையே. (௭)

---

† 'எழுகடலும்' என்றும் பாடம்.

கொங்குமலிகருங்குவளை கண்ணாக * தெண்கயங்கள்
செங்கமலமுகமலர்த்தும் திருக்கண்ணபுரத்துறையும் *
வங்கமலிதடங்கடலுள் வரியரவினணைத்துயின்ற *
செங்கமலநாபனுக்கு இழந்தேனென்செறிவளையே. (அ)

வாராரும்இளங்கொங்கை நெடும்பணைத்தோள்மடப்பாவை *
சீராரும்வரைமார்பன் திருக்கண்ணபுரத்துறையும் *
பேராளன்ஆயிரம்பேர் ஆயிரவாயரவணைமேல் *
பேராளர்பெருமானுக்கு இழந்தேனென்பெய்வளையே. (கூ)

தேமருவுபொழில்புடைசூழ் திருக்கண்ணபுரத்துறையும்
வாமனனை * மறிகடல்சூழ் வயலாலிவளநாடன் *
காமருசீர்க்கலிகன்றி கண்டுரைத்ததமிழ்மாலை*
நாமருவிஇவைபாட வினையாயநண்ணாவே. (கo)

அடிவரவு:—கரை அரி துங்கம் கணம் வாய் மடல் வண்டு கொங்கு வாரா
ரும் தேமருவு விண்ணவர்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## ச - ஆந் திருமொழி—விண்ணவர்.



### திருக்கண்ணபுரம். (ச)

[தலைமகனிடத்து ஈடுபட்ட தலைவி ஆற்றாது தும்பியைநோக்கிக்
கூறிய பாசுரம்.]

தரவுகொச்சகக்கலிப்பா. (கமாஸ்ராகம் - ஆதிதாளம்.)

விண்ணவர்தங்கள்பெருமான் திருமார்வன் *
மண்ணவரெல்லாம்வணங்கும் மலிபுகழ்சேர் *
கண்ணபுரத்தெம்பெருமான் கதிர்முடிமேல் *
வண்ணநறுந்துழாய் வந்தூதாய்கோல்தும்பீ ! (க)

வேதமுதல்வன் விளங்குபுரிநூலன் *
பாதம்பரவிப் பலரும்பணிந்தேத்தி *
காதன்மைசெய்யும் கண்ணபுரத்தெம்பெருமான் *
தாதுநறுந்துழாய் தாழ்ந்தூதாய்கோல்தும்பீ ! (உ)

விண்டமலரெல்லாம் ஊதிநீஎன்பெறுதி ? *
அண்டமுதல்வன் அமரர்களெல்லாரும் *
கண்டுவணங்கும் கண்ணபுரத்தெம்பெருமான் *
வண்டுநறுந்துழாய் வந்தூதாய்கோல்தும்பீ ! (ங)

நீர்மலிகின்றது ஓர்மீனாய்ஓராமையுமாய் *
சீர்மலிகின்றது ஓர்சிங்கவுருவாகி *
கார்மலிவண்ணன் கண்ணபுரத்தெம்பெருமான் *
தார்மலிதண்துழாய் தாழ்ந்ததாய்கோல்தும்பீ ! (௪)

ஏரார்மலரெல்லாம் ஊதிநீஎன்பெறுதி ? *
பாராருலகம் பரவ, பெருங்கடலுள் *
காராமையான கண்ணபுரத்தெம்பெருமான் *
தாரார்நறுந்துழாய் தாழ்ந்ததாய்கோல்தும்பீ ! (௫)

மார்வில்திருவன் வலனேந்துசக்கரத்தன் *
பாரைப்பிளந்த பரமன்பரஞ்சோதி *
காரில்திகழ் காயாவண்ணனகதிர்முடிமேல் *
தாரில்நறுந்துழாய தாழ்ந்ததாய்கோல்தும்பீ ! (௬)

வாமனன்கற்கி மதுசூதன்மாதவன் *
தார்மன்னுதாசரதியாய தடமார்வன் *
காமன்தன்தாதை கண்ணபுரத்தெம்பெருமான் *
தாமநறுந்துழாய் தாழ்ந்ததாய்கோல்தும்பீ ! (௭)

நீலமலர்கள் நெடுநீர்வயல்மருங்கில் *
சாலமலரெல்லாம் ஊதாதே * வாளரக்கர்
காலன் கண்ணபுரத்தெம்பெருமான்கதிர்முடிமேல் *
கோலநறுந்துழாய் கொண்டுதாய்கோல்தும்பீ ! (௮)

நந்தன்மதலை நிலமங்கைநலதுணைவன் *
அந்தமுதல்வன் அமரர்கள்தம்பெருமான் *
கந்தம்கமழ் காயாவண்ணனகதிர்முடிமேல் *
கொந்துநறுந்துழாய் கொண்டுதாய்கோல்தும்பீ ! (௯)

❁ வண்டமரும்சோலை வயலாலிநல்நாடன் *
கண்டசீர்வென்றிக் கலியனொலிமாலை *
கொண்டல்நிறவண்ணன் கண்ணபுரத்தானை *
தொண்டரோம்பாட நினைந்துதாய்கோல்தும்பீ ! (க௦)

அடிவரவு:—விண்ணவர் வேதம் விண்ட நீர் ஏரார் மார்வில் வாமனன் நீலம் நந்தன் வண்டமரும் தந்தை.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## ரு - ஆந் திருமொழி—தந்தை.

### திருக்கண்ணபுரம் (ரு)

அறுசீராசிரியவிருத்தம். (யதுகுலகாம்போதிராகம் - ஆதிதாளம்.)

[தலைவனைப் பிரிந்த தலைவி அந்திப்பொழுதில் தலைவன் வாராதுநீட்டிக்க, தென்றல் முதலியவற்றால் வருந்திக் கூறுதல்.]

தந்தைகாலில்விலங்கற வந்துதோன்றியதோன்றல்பின் * தமியேன்தன்
சிந்தைபோயிற்று திருவருளவனிடைப்பெறுமளவிருந்தேனை *
அந்திகாவலன் அமுதுறுபசுங்கதிரவை சுட, அதனோடும் *
மந்தமாருதம் வனமுலைதடவந்து வலிசெய்வதொழியாதே (க)

மாரிமாக்கடல்வளைவணற்கிளையவன் வரைபுரைதிருமார்பில் *
தாரினாசையில்போயின நெஞ்சமும் தாழ்ந்தது, ஓர்துணைகாணேன் *
ஊரும்துஞ்சிற்று உலகமும்துயின்றது ஒளியவன்விசும்பியங்கும் *
தேரும்போயிற்று திசைகளும்மறைந்தன செய்வதொன்றறியேனே.

ஆயன்மாயமேயன்றி, மற்றென்கையில் வளைகளும்இறைநில்லா *
பேயினாருயிருண்டிடும்பிள்ளை நம்பெண்ணுயிர்க்கு இரங்குமோ? *
தூயமாமதிக்கதிர்சுடத் துணையில்லை இணைமுலைவேகின்றதால் *
ஆயன்வேயினுக்கழிகின்றது உள்ளமும் அஞ்சேலென்பாரிலையே. ()

கயம்கொள்புண்தலைக்களிறுந்துவெந்திறல் கழல்மன்னர்பெரும்போரில் *
மயங்கவெண்சங்கம்வாய்வைத்தமைந்தனும் வந்திலன், மறிகடல்நீர் *
தயங்குவெண்திரைத்திவலைநுண்பனியெனும் தழல்முகந்து இளமுலைமேல் *
இயங்குமாருதம்விலங்கிலென்னாவியை எனக்கெனப்பெறலாமே ()

ஏழுமாமரம்துளைபடச்சிலைவளைத்து இலங்கையைமலங்குவித்த
ஆழியான் * நமக்கருளிய அருளொடும் பகலெல்லைகழிகின்றதால் *
தோழி! நாம்இதற்கென்செய்தும்? துணையில்லை, சுடர்படுமுதுநீரில் *
ஆழஆழ்கின்ற ஆவியை அடுவதோர் அந்திவந்தடைகின்றதே. (ரு)

முரியும்வெண்திரைமுதுகயம்தீப்பட முழங்கழலெரியம்பின் *
வரிகொள்வெஞ்சிலைவளைவித்த மைந்தனும்வந்திலன் என்செய்கேன்? *
எரியும்வெங்கதிர்துயின்றது பாவியேன் இணைநெடுங்கண்துயிலா *
கரியநாழிகைஊழியின்பெரியன கழியுமாறுஅறியேனே. (சு)

கலங்கமாக்கடல்கடைந்தடைத்து இலங்கையர்கோனது வரையாகம் *
மலங்க, வெஞ்சமத்து அடுசரம்துரந்த எம்மடிகளும்வாரானால் *
இலங்குவெங்கதிர் இளமதியதனொடும் விடைமணியடும் * ஆயன்
விலங்கலவேயினதோசையுமாய் இனிவிளைவதொன்றறியேனே. (எ)

முழுதிவ்வையகம்முறைகெடமறைதலும் முனிவனும்முனிவெய்தி *
மழுவினால்மன்னராருயிர்வவ்விய மைந்தனும்வாராஞல் *
ஒழுகுதுண்பனிக்கொடுங்கியபேடையை அடங்கஅஞ்சிறைகோலி *
தழுவுநள்ளிருள் தனிமையின்கடியது ஓர்கொடுவினையறியேனே. (அ)

கனஞ்செய்மாமதிள் கணபுரத்தவனொடும் கனவினில்அவன்தந்த *
மனஞ்செயின்பம்வந்துஉள்புகவெள்கி என்வளைநெகஇருந்தேனை *
சினஞ்செய்மால்விடைச்சிறுமணியோசை என்சிந்தையைச்சிந்துவிக்கும் *
அனந்தலன்றிலினரிகுரல் பாவியேனாவியை அடுகின்றதே. (கூ)

வார்கொள்மென்முலைமடந்தையர் தடங்கடல்வண்ணனைத்தாள்நயந்து *
ஆர்வத்தால் அவர்புலம்பியபுலம்பலை அறிந்துமுன்உரைசெய்த *
காரகொள்பைம்பொழில்மங்கையர்காவலன் கலிகன்றியொலிவல்லார் *
ஏர்கொள்வைகுந்தமாநகர்புக்கு இமையவரோடும்கூடுவரே. (க0)

அடிவரவு:—தந்தை மாரி ஆயன் கயம எழு முரியும் கலங்க முழுது கனஞ்செய் வாரகொள் தொண்டீர்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## சு -ஆந் திருமொழி—தொண்டீர்.



### திருக்கண்ணபுரம் (சு)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (நாதநாமக்கிரியை ராகம் - ரூபகதாளம்.)

தொண்டீர் ! உய்யும்வகைகண்டேன் துளங்கா அரக்கர்துளங்க *
திண்தோளநிமிரசசிலைவளையச சிறிதேமுனிந்ததிருமார்பன் * [முன்
வண்டாரகூந்தல்மலர்மங்கை வடிக்கண்மடந்தைமான்நோக்கம
கண்டான * கண்டுகொண்டுகந்த கணணபுரம்நாம்தொழுதுமே. (க)

பொருந்தா அரக்கர்வெஞ்சமததுப பொனறஅனறுபுள்ளூர்ந்து *
பெருந்தோள்மாலிதலைபுரளப போநத அரககனெனிலங்கை *
இருந்தார்தம்மையுடன்கொண்டு அங்குஎழிலார்பிலததுப்புக்கொளிப்ப *
கருந்தாள்சிலைகைக்கொண்டானூர் கண்ணபுரம்நாம்தொழுதுமே (உ)

வல்லியிடையாள்பொருட்டாக மதிள்நீரிலங்கையார்கோவை *
அல்லல்செய்துவெஞ்சமத்துள் ஆற்றல்மிகுததஆற்றலான் *
வல்லாளரககர்குலப்பாவை வாட முனிதன்வேள்வியை *
கல்விசசிலையால்காத்தானூர் கண்ணபுரமநாமதொழுதுமே. (ங)

மல்லைமுந்நீர் அதர்பட வரிவெஞ்சிலைகால்வளைவித்து *
கொல்லைவிலங்குபணிசெய்யக் கொடியோனிலங்கைபுகலுற்று *
தொல்லைமரங்களபுகப்பெய்து துவலைநிமிர்ந்துவானணவ *
கல்லால்கடலையடைத்தானூர் கண்ணபுரம்நாம்தொழுதுமே. (ச)

ஆமையாகிஅரியாகி அன்னமாகி * அந்தணர்தம்
ஓமமாகிஊழியாகி உலகுசூழ்ந்தநெடும்புணரி *
சேமமதிள்சூழிலங்கைக்கோன சிரமும்கரமும்துணித்து * முன்
காமற்பயந்தான்கருதுமூர் கண்ணபுரம்நாம்தொழுதுமே. (ரு)

வருந்தாதிருநீமடநெஞ்சே! நம்மேல்வினைகள்வாரா * முன்
திருந்தாஅரக்கர்தென்னிலங்கை செந்தீயுண்ணச்சிவந்து, ஒருநாள் *
பெருந்தோள்வாணற்குஅருள்புரிந்து பின்னைமணாளனாகி * முன்
கருந்தாள்களிறொன்றொசித்தானூர் கண்ணபுரம்நாம்தொழுதுமே ( )

இலையார்மலர்ப்பூம்பொய்கைவாய் முதலைதன்னால்அடர்ப்புண்டு *
கொலையார்வேழம்நடுக்குற்றுக்குலைய அதனுக்குஅருள்புரிந்தான் *
அலைநீரிலங்கைத்தசக்கிரீவற்கு இளையோற்குஅரசையருளி * முன்
கலைமாச்சிலையால்எய்தானூர் கண்ணபுரம்நாம்தொழுதுமே (எ)

மாலாய்மனமே! அருந்துயரில் வருந்தாதிருநீ * வலிமிக்க
காலார்மருதும்காய்சினத்தகழுதும் கதமாக்கழுதையும் *
மாலார்விடையும்மதகரியும் மல்லருயிருமமடிவித்து *
காலால்சகடம்பாய்ந்தானூர் கண்ணபுரம்நாம்தொழுதுமே. (அ)

குன்றால்மாரிபழுதாக்கிக் கொடியேரிடையாள்பொருட்டாக *
வன்தாள்விடையேழ்அன்றடர்த்த வானோர்பெருமான்மாமாயன் *
சென்றான்தூதுபஞ்சவர்க்காய்த் திரிகாற்சகடம்சினமழித்து *
கன்றால்விளங்காயெறிந்தானூர் கண்ணபுரம்நாம்தொழுதுமே (கூ)

கருமாமுகில்தோய்நெடுமாடக் கண்ணபுரத்தெம்மடிகளை *
திருமாமகளாலஅருள்மாரி செழுநீராலிவளநாடன் *
மருவார்புயற்கைக்கலிகன்றி மங்கைவேந்தனொலிவல்லார் *
இருமாநிலத்துக்கரசாகி இமையோரிறைஞ்சவாழ்வாரே. (கo)

அடிவரவு.—தொண்டீர் பொருந்தா வல்லி மல்லை ஆமை வருந்தாது இலை மால் குன்றால் கருமா வியம.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## எ - ஆந் திருமொழி—வியமுடை.

### திருக்கண்ணபுரம். (எ)

கலிவிருத்தம். (அபரூபராகம்-ஆதிதாளம்)

❀ வியமுடைவிடையினம் உடைதரமடமகள் *
† குயமிடைதடவரை அகலமதுடையவர் *
‡ நயமுடைநடையனம் இளையவர்நடைபயில *
கயமிடைகணபுரம் அடிகள்தமஇடமே. (க)

இணைமலிமருதினொடு எருதிறஇகல்செய்து *
துணைமலிமுலையவள மணமிகுகலவியுள் *
மணமலிவிழவினொடு அடியவரளவிய *
கணமலிகணபுரம் அடிகள்தமஇடமே (உ)

புயலுறுவரைமழை பொழிதர, மணிநிரை *
மயலுற, வரைகுடை எடுவியநெடியவர் *
முயலதுளாமிளைமுயலதுள வளவிளைவயல *
கயல்துளுகணபுரம் அடிகளதமஇடமே. (ங)

ஏதலர்நகைசெய இளையவரளைவெணெய் *
போதுசெய்தமரிய புனிதர், நல்விரைமலா *
கோதியமதுகரம் குலவியமலர்மகள *
காதல்செய்கணபுரம அடிகள்தம இடமே. (ச)

தொண்டரும்அமரரும் முனிவரும்தொழுதெழ *
அண்டமொடுஅகலிடம அளநதவா அமர்செய்து *
விண்டவாபட மதிளிலங்கைமுனெரியெழ *
கண்டவாகணபுரம அடிகள்தமஇடமே. (ரு)

மழுவியல்படையுடையவனிடம, மழைமுகில் *
தழுவியஉருவினா திருமகளமருவ ப *
கொழுவியசெழுமலா முழுசியபறவைபண் *
எழுவியகணபுரம் அடிகளதம்இடமே. (சா)

பரிதியொடுஅணிமதி பனிவரைதிசைநிலம் *
எரிதியொடெனவின இயல்வினாசெல்வினர் *
சுருதியொடுஅருமறை முறைசெய்லும்அடியவர் *
கருதியகணபுரம் அடிகள்தம்இடமே. (எ)

---

† 'குயமுடை' என்பது பாடாந்தரம்.

‡ 'நயமடநடை' என்பது அரும்பததின்பாடம்.

படிபுல்கும்அடியிணை பலர்தொழ, மலர்வைகு *
கொடிபுல்குதடவரை யகலமதுடையவர் *
முடிபுல்குநெடுவயல் படைசெல † அடிமலா *
கடிபுல்குகணபுரம அடிகள்தம்இடமே. (அ)

புலமனுமலர்மிசை மலாமகள்புணரிய *
நிலமகளென இனமகளிர்களிவரொடும் *
வலமனுபடையுடை மணிவணா, நிதிகுவை *
கலமனுகணபுரம அடிகள்தமஇடமே (கூ)

மலிபுகழ்கணபுரமுடைய எம்அடிகளை *
வலிகெழுமதிளயல வயலணிமங்கையா *
கலியனதமிழிவை விழுமியவிசையினொடு *
ஒலிசொலும்அடியவா உறுதுயரிலரே. (கO)

அடிவரவு—வியம் இணை புயல் ஏதலா தொண்டா மழு பரிதியொடு படி புலம் மலிபுகழ் வானோ.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## அ - ஆந் திருமொழி—வானோரளவும்.



### திருக்கண்ணபுரம் (அ) தசாவதாரம்

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (ஸாவேரிராகம் - ரூபகதாளம்.)

வானோரளவுமமுதுமுந்நீ வளாநதகாலம * வலியுருவின
மீனாய்வநதுவியநதுய்யககொண்ட தண்தாமரைககண்ணன *
ஆனாவுருவிலானாயன் அவனை அம்மாவிளைவயலுள *
கானார்புறவிறகண்ணபுரத்து அடியேன்கண்டுகொண்டேனே. (க)

மலங்குவிலங்குநெடுவெள்ளமமறுக அங்குஓா வரைநட்டு *
இலங்குசோதியாரமுதம எய்துமளவுஓராமையாய் *
விலங்கல்திரியததடங்கடலுள் சுமநதுகிடநதவித்தகனை *
கலங்கல்முந்நீர்ககண்ணபுரத்து அடியேன்கண்டுகொண்டேனே. (உ)

பாராரளவும்முதுமுந்நீா பரநதகாலம் * வளைமருப்பில
ஏராருருவத்தேனமாய் எடுத்தஆற்றலமமானை *
கூராராரலிரைகருதிக் குருகுபாயக்கயலிரியும *
காரார்புறவிறகண்ணபுரதது அடியேனகண்டுகொண்டேனே. (ங)

---

† 'வடிமலா' என்றும் எடுககலாம.

உளைந்தஅரியும்மானிடமும் உடனாய்த்தோன்றவொன்றுவித்து *
விளைந்தசீற்றம்விண்வெதும்ப வேற்றோனகலம்வெஞ்சமத்து *
பிளந்துவளைந்தஉகிரானைப் பெருந்தண்செந்நெற்குலைதடிந்து *
களஞ்செய்புறவிற்கண்ணபுரத்து அடியேன்கண்டுகொண்டேனே. ()

தொழுநீர்வடிவின்குறளுருவாய் வந்துதோன்றி, மாவலிபால் *
முழுநீர்வையம்முன்கொண்ட மூவாவுருவினம்மானை *
உழுநீர்வயலுள்பொன்கிளைப்ப ஒருபால்முலலைமுகையோடும் *
கழுநீர்மலரும்கண்ணபுரத்து அடியேன்கண்டுகொண்டேனே. (ரு)

வடிவாய்மழுவேபடையாக வந்துதோன்றி, மூவெழுகால் *
படியாரரசுகளைகட்ட பாழியானை அம்மானை *
குடியாவண்டுகொண்டுண்ணக் கோலநீலம்மட்டுகுக்கும் *
கடியார்புறவிற்கண்ணபுரத்து அடியேன்கண்டுகொண்டேனே. (சு)

வையமெல்லாம்உடன்வணங்க வணங்காமன்னனாய்த்தோன்றி *
வெய்யசீற்றக்கடியிலங்கை குடிகொண்டோடவெஞ்சமத்து *
செய்தவெம்போர்நம்பரனைச் செழுந்தண்கானலமணநாறும் *
கைதைவேலிக்கண்ணபுரத்து அடியேன்கண்டுகொண்டேனே (எ)

ஒற்றைக்குழையும்நாஞ்சிலும் ஒருபாலதோன்றத்தான்தோன்றி *
வெற்றித்தொழிலார்வேல்வேந்தர் விண்பாலசெல்ல, வெஞ்சமத்து*
செற்றகொற்றத்தொழிலானைச் செந்தீமூன்றும்இல்லிருப்ப *
கற்றமறையோர்கண்ணபுரத்து அடியேன்கண்டுகொண்டேனே (அ)

துவரிக்கனிவாய்நிலமங்கை துயர்தீர்ந்துய்ய, பாரதத்துள் *
இவரித்தரசர்தடுமாற இருளநாள்பிறந்தஅம்மானை *
உவரியோதமுத்துந்த ஒருபால்ஒருபாலொண்செந்நெல் *
கவரிவீசுமகண்ணபுரத்து அடியேன்கண்டுகொண்டேனே. (கூ)

❀ மீனோடுஆமைகேழல்அரிகுறளாய் முன்னும்இராமனாய்த்
தானாய் * பின்னும்இராமனாய்த் தாமோதரனாய்க்கற்கியும்
ஆனான்தன்னை * கண்ணபுரத்துஅடியன் கலியனொலிசெய்த *
தேனாரின்சொல்தமிழ்மாலை செப்பப்பாவம்நில்லாவே. (க0)

அடிவரவு:—வானோர் மலங்கு பார் உளைந்த தொழு வடி வையம் ஒற்றை துவரி மீனோடு கைம்மானம்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## க - ஆந் திருமொழி—கைம்மானம்.

திருக்கண்ணபுரம். (க)

தரவுகொச்சகக்கலிப்பா. (மோஹநராகம் - திரிபுடைதாளம்.)

❀ கைம்மானமதயானை இடர்தீர்த்தகருமுகிலை *
மைம்மானமணியை அணிகொள்மரதகத்தை *
எம்மானைஎம்பிரானைஈசனை என்மனத்துள்
அம்மானை * அடியேன் அடைந்துய்ந்துபோனேனே. (க)

கருமானமழைமுகிலைப் பிரியாதுதன்னடைந்தார் *
வருமானம்தவிர்க்கும் மணியை, அணியுருவில் *
திருமாலைஅம்மானை அமுதத்தைக் கடல்கிடந்த
பெருமானை * அடியேன் அடைந்துய்ந்துபிழைத்தேனே. (உ)

❀ விடையேழனறடர்த்து வெகுண்டுவிலங்கலுற *
படையாலஆழிதட்ட பரமன்பரஞ்சோதி *
மடையார்நீலமமல்கும்வயல்சூழ் கண்ணபுரமொன்று
உடையானுக்கு * அடியேன் ஒருவர்க்குஉரியேனோ? (ந)

❀ மிக்கானை மறையாய்விரிந்தவிளக்கை * என்னுள்
புக்கானைப் புகழ்சேர்பொலிகின்றபொன்மலையை *
தக்கானைக் கடிகைத்தடங்குன்றினமிசையிருந்த *
அக்காரக்கனியை அடைந்துய்ந்துபோனேனே. (ச)

வந்தாய்என்மனத்தே வந்துநீபுகுந்தபின்னை *
எந்தாய்! போயறியாய் இதுவேஅமையாதோ? *
கொந்தார்பைம்பொழில்சூழ் குடந்தைக்கிடந்துகந்த
மைந்தா! * உன்னைஎன்றும் மறவாமைப்பெற்றேனே. (ரு)

எஞ்சாவெந்நரகத்து அழுந்திநடுங்குகின்றேற்கு *
அஞ்சேலென்றுஅடியேனை ஆட்கொள்ளவல்லானை *
நெஞ்சே! நீநினையாது இறைப்பொழுதும்இருத்திகண்டாய் *
மஞ்சார்மாளிகைசூழ் வயலாலிமைந்தனையே. (சு)

பெற்றார்பெற்றொழிந்தார் பின்னும்நின்றுஅடியேனுக்கு *
உற்றானாய்வளர்த்து என்னுயிராகிநின்றானை *
முற்றாமாமதிகோள் விடுத்தானைஎம்மானை *
எத்தால்யான்மறக்கேன்? இதுசொல்என்ஏழைநெஞ்சே! (எ)

சற்றூர்பற்றறுக்கும் பிறவிப்பெருங்கடலே *
பற்றாவந்து அடியேன் பிறந்தேன், பிறந்தபின்னை *
வற்றாநீர்வயல்சூழ் வயலாலியம்மானைப்
பெற்றேன் * பெற்றதுவும் பிறவாமைப்பெற்றேனே. (அ)

கண்ணார்கண்ணபுரம் கடிகைகடிகமழும் *
தண்ணார்தாமரைசூழ் தலைச்சங்கமேல்திசையுள் *
விண்ணோர்நாண்மதியை விரிகின்றவெஞ்சுடரை *
கண்ணாரக்கண்டுகொண்டுகளிக்கின்றது இங்குஎன்றுகொலோ? (கூ)

செருநீரவேல்வலவன் கலிகன்றிமங்கையர்கோன் *
கருநீர்முகில்வண்ணன் கண்ணபுரத்தானை *
இருநீரின்தமிழ் இன்னிசைமாலைகள்கொண்டுதொண்டீர்! *
வருநீர்வையமஉய்ய இவைபாடியாடுமினே. (௧௦)

அடிவரவு—கைம்மானம் தரு விடை மிக்கானை வந்தாய் எஞ்சா பெற்றார் கற்றார் கண்ணார் செரு வண்டார்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## ௧௦ - ஆந் திருமொழி—வண்டார்.



### திருக்கண்ணபுரம். (௧௦)

தரவுகொச்சகக்கலிப்பா. (ஸௌராஷ்ட்ரராகம்-ரூபகதாளம்.)

வண்டார்பூமாமலாமங்கை மணநோக்க
முண்டானே! * உன்னைஉகந்துகந்து உன்தனக்கே
தொண்டானேற்கு * என்செய்கின்றாய்? சொல்லுநால்வேதம்
கண்டானே! * கண்ணபுரத்துறையம்மானே! (க)

பெருநீரும்விண்ணுமமலையும்உலகேழும் *
ஒருதாராநின்னுளொடுக்கிய நின்னையல்லால் *
வருதேவாமற்றுளரென்று என்மனத்துஇறையும்
கருதேன்நான் * கண்ணபுரத்துறையம்மானே! (உ)

மற்றும்ஓர்தெய்வம்உளதென்று இருப்பாரோடு
உற்றிலேன் * உற்றதும் உன்னடியார்க்கடிமை *
மற்றெல்லாம்பேசிலும் நின்திருவெட்டெழுத்தும்
கற்று * நான்கண்ணபுரத்துறையம்மானே! (ங)

பெண்ணானாள் பேரிளங்கொங்கையினாரழல்போல் *
உண்ணாநஞ்சுண்டுகந்தாயை உகந்தேன்நான் *
மண்ணாளா! வாள்நெடுங்கண்ணி மதுமலராள்
கண்ணாளா! * கண்ணபுரத்துறையம்மானே! (ச)

பெற்றாருஞ்சுற்றமுமென்று இவைபேணேன்நான் *
மற்றாரும்பற்றிலேன் ஆதலால்நின்னடைந்தேன் *
உற்றானென்றுஉள்ளத்துவைத்து அருள்செய்கண்டாய்*
கற்றார்சேர் கண்ணபுரத்துறையம்மானே! (ரு)

ஏத்திஉன்சேவடி எண்ணியிருப்பாரை *
பார்த்திருந்துஅங்கு நமனதமர்பற்றாது *
சோத்தநாமஞ்சுதுமென்று தொடாமைநீ
காத்திபோல் * கண்ணபுரத்துறையம்மானே! (சா)

வெள்ளைநீர்வெள்ளத்து அணைந்தஅரவணைமேல் *
துள்ளுநீர்மெள்ளத் துயின்றபெருமானே! *
வள்ளலே! உன்தமர்க்குஎன்றும் நமனதமர்
கள்ளர்போல் * கண்ணபுரத்துறையம்மானே! (எ)

மாணாகி வையமளந்ததுவும * வாளவுணன்
பூணாகங்கீண்டதுவும் ஈண்டுநினைந்திருந்தேன் *
பேணாதவல்வினையேன் இடரெத்தனையும
காணேன்நான் * கண்ணபுரத்துறையம்மானே! (அ)

நாட்டினாய்என்னை உனக்குமுன்தொண்டாக *
மாட்டினேன்அத்தனையே கொண்டென்வல்வினையை *
பாட்டினாலுன்னை என்நெஞ்சத்திருந்தமை
காட்டினாய் * கண்ணபுரத்துறையம்மானே! (கூ)

❀ கண்டசீர்க் கண்ணபுரத்துறையம்மானை *
கொண்டசீர்த்தொண்டன் கலியனொலிமாலை *
பண்டமாய்ப்பாடும் அடியவர்க்குஎஞ்ஞான்றும் *
அண்டம்போய்ஆட்சி அவர்க்கதறிந்தோமே. (கo)

அடிவரவு:—வண்டார பெரு மற்று பெணு:பெற்றார் ஏத்தி வெள்ளை மாண் நாட்டினாய் கண்டசீர் வங்கம்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



# ஒன்பதாம்பத்து.

## க - ஆந் திருமொழி—வங்கமாமுந்நீர்.

### திருக்கண்ணங்குடி.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (ஆபிராகம் - அடதாளம்.)

வங்கமாமுந்நீர்வரிநிறப்பெரிய
வாளரவினணைமேவி *
சங்கமார்அங்கைத்தடமலருந்திச்
சாமமாமேனிஎன்தலைவன் *
அங்கமாறைந்துவேள்விநால்வேதம்
அருங்கலைபயின்று * எரிமூன்றும்
செங்கையாலவளர்க்கும்துளக்கமிலமனத்தோர்
திருக்கண்ணங்குடியுள்நின்றானே. (க)

கவளமாகதத்தகரியுய்யப் பொய்கைக்
கராக்கொளககலங்கி * உள்நினைந்து
துவளமேல்வந்துதோன்றி வன்முதலை
துணிபடசசுடுபடைதுரந்தோன் *
குவளைநீள்முளரிகுமுதம்ஒண்கழுநீர்
கொய்ம்மலர்நெய்தலொண்கழனி *
திவளுமமாளிகைசூழ்செழுமணிப்புரிசைத்
திருககண்ணஙகுடியுள்நினறானே. (உ)

வாநதவநதடரவானமுமநிலனும்
மலைகளும்அலைகடலகுளிப்ப *
மீதுகொண்டுகளுமமீனுருவாகி
விரிபுனல்வரியகட்டொளிதநதோன் *
போதலாபுனலை மலலிகைமௌவல
புதுவிரைமதுமலரணைநது *
சீதவொண்தென்றல்திசைதொறுமகமழும்
திருககணணங்குடியுள்நின்றானே. (௩)

வென்றிசேர்திண்மைவிலங்கல்மாமேனி
வெள்ளெயிற்றொள்ளெரித்தறுகண் *
பனறியாய்அன்றுபார்மகள்பயலை
தீர்த்தவன் பஞ்சவர்பாகன் *

ஒன்றலாஉருவத்துஉலப்பில்பல்காலத்து
உயர்கொடிஒளிவளாமதியம் *
சென்றுசோசென்னிச்சிகரநனமாடத
திருக்கண்ணங்குடியுள்நின்றானே. (ச)

மன்னவன்பெரியவேள்வியிலகுறளாய்
மூவடிநீரொடும்கொண்டு *
பின்னும்ஏழுலகும்ஈரடியாகப
பெருந்திசையடங்கிடநிமிர்நதோன்
அன்னமென்கமலத்தணிமலர்ப்பீடத்து
அலைபுனலிலைக்குடைநீழல் *
செந்நெலொண்கவரியசையவீற்றிருக்கும்
திருககண்ணங்குடியுள்நின்றானே. (ரு)

மழுவினால்அவனியரசைமூவெழுகால
மணிமுடிபொடிபடுதது * உதிரக
குழுவுவாரபுனலுள்குளிகது வெங்
கோபமதவிர்ந்தவன, குலையலிகதலி *
குழுவம்வாகமுகும்குரவுமநறபலவும்
குளிர்தருசூதமாதவியும *
செழுமைபார்பொழிலகள்தழுவும்நன்மாடத்
திருக்கண்ணஙகுடியுள்நின்றானே. (சா)

வானுளாரவரைவலிமையால்நலியும
மறிகடலிலங்கையார்கோனை *
பானுநேர்சரத்தாலபனங்கனிபோலப
பருமுடியுதிரவில்வளைத்தோன
கானுலாமயிலின்கணஙகள்நின்றாடக
கணமுகில்முரசமநின்றதிர *
தேனுலாவரிவண்டுஇன்னிசைமுரலும
திருக்கண்ணங்குடியுள்நின்றானே. (எ)

அரவநீள்கொடியோன்அவையுள்ஆசனத்தை
அஞ்சிடாதேயிட * அதற்குப்
பெரியமாமேனிஅண்டமூடுருவப்
பெருநதிசையடங்கிடநிமிரநதோன் *

வரையின்மாமணியும்மரதகத்திரளும்
வயிரமும்வெதிருதிர்முத்தும் *
திரைகொணர்ந்துநதிவயல்தொறும்குவிக்கும்
திருக்கண்ணங்குடியுள்நின்றானே (அ)

பன்னியபாரம்பார்மகட்கொழியப்
பாரதமாபெரும்போரில் *
மன்னர்கள்மடியமணிநெடுந்திண்தேர்
மைத்துனற்குஉய்த்தமாமாயன *
துன்னுமாதவியுஞ்சுரபுன்னைப்பொழிலும்
சூழ்ந்தெழுசெண்பகமலர்வாய் *
தென்னவென்றுஅளிகள்முரன்றிசைபாடும்
திருக்கண்ணங்குடியுள்நின்றானே. (கூ)

※ கலையுலாவல்குலகாரிகைதிறத்துக்
கடறபெரும்படையொடும்சென்று *
சிலையினாலிலங்கைதீயெழச்செற்றான்
திருக்கண்ணங்குடியுள்நின்றானை *
மலைகுலாமாடமங்கையர்தலைவன
மானவேல்கலியன்வாயொலிகள *
உலவுசொல்மாலையொன்பதோடொன்றும்
வல்லவர்கருஇல்லைநல்குரவே. (கo)

அடிவரவு—வங்கம் களம் வாதை வென்று மன்னவன் மழுவினால் வானு ளார் அரவு பன்னிய கலை பொன்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## உ-ஆந் திருமொழி—பொன்னிவர்மேனி.



### திருநாகை.

எண்சீராசிரியவிருத்தம். (சாரங்கராகம் - ஆதிதாளம்.)

[தலைவனது உருவெளிப்பாடுகண்ட தலைவி தோழிக்குக்கூறிய பாசுரம்.]

※ பொன்னிவர்மேனிமரகதத்தின்
பொங்கிளஞ்சோதியகலத்துஆரம்
மின் * இவர்வாயில்நல்வேதமோதும்
வேதியர்வானவராவர்தோழீ! *

என்னையுமநோக்கிஎன்னல்குலும்நோக்கி
ஏந்திளங்கொங்கையுமநோக்குகின்றார் *
அன்னையென்னோக்குமென அஞ்சுகின்றேன்
அச்சோ ஒருவரழகியவா ! (க)

தோடவிழ்நீலமமணங்கொடுக்கும
சூழ்புனல்சூழ்குடந்தைக்கிடந்த *
சேடர்கொலென்றுதெரிக்கமாட்டேன
செஞ்சுடராழியும்சங்குமஏந்தி *
பாடகமெல்லடியார்வணங்கப்
பன்மணிமுத்தொடுஇலங்குசோதி *
ஆடகம்பூண்டுஒருநான்குதோளும்
அச்சோ ஒருவரழகியவா ! (உ)

வேயிருஞ்சோலைவிலங்கல்சூழ்ந்த
மெய்யமமணாளர், இவ்வையமெல்லாம் *
தாயினநாயகராவர்தோழீ !
தாமரைக்கண்களிருந்தவாறு *
சேயிருங்குன்றமதிகழ்ந்தகொப்பச
செவ்வியவாகிமலர்ந்தசோதி *
ஆயிரம்தோளொடுஇலங்குபூணும
அச்சோ ஒருவரழகியவா ! (ங)

வம்பவிழும்துழாய்மாலைதோள்மேல்
கையனஆழியும்சங்கும்ஏந்தி *
நம்பர்நம்இல்லம்புகுந்துநின்றார்
நாகரிகர்பெரிதுமஇளையா *
செம்பவளம்இவர்வாயினவண்ணம்
தேவரிவரதுஉருவம்சொல்லில் *
அம்பவளத்திரளேயும்ஒப்பர்
அச்சோ ஒருவரழகியவா ! (ச)

கோழியும்கூடலும்கோயிலகொண்ட
கோவலரேஒப்பர், குன்றமன்ன *
பாழியந்தோளும்ஓர்நான்குடையர்
பண்டுஇவர்தமமையும்கண்டறியோம் *

வாழியரோ இவர்வண்ணம் எண்ணில்
மாகடல்போன்றுளர், கையில்வெய்ய *
ஆழியொன்றேந்தி ஓர்சங்குபற்றி
அச்சோ ஒருவரழகியவா ! (௫)

வெஞ்சினவேழம்மருப்பொசித்த
வேந்தர்கொல்? ஏந்திழையார்மனத்தை *
தஞ்சுடையாளர்கொல் ? யான் அறியேன்
தாமரைக்கண்கள் இருந்தவாறு *
கஞ்சனைஅஞ்சமுன் கால்விசைத்த
காளையராவர், கண்டார்வணங்கும் *
அஞ்சனமாமலையேயும்ஒப்பர்
அச்சோ ஒருவரழகியவா ! (௬)

பிணியவிழ்தாமரைமொட்டலர்த்தும்
பேரருளாளர்கொல் ? யான் அறியேன் *
பணியும்என்னெஞ்சமிதென்கொல்? தோழீ !
பண்டுஇவர்தம்மையும்கண்டறியோம் *
அணிகெழுதாமரையன்னகண்ணும்
அங்கையும்பங்கயம், மேனிவானத்து *
அணிகெழுமாமுகிலேயும்ஒப்பர்
அச்சோ ஒருவரழகியவா ! (௭)

மஞ்சுயர்மாமதிதீண்டநீண்ட
மாலிருஞ்சோலைமணாளர்வந்து * என்
நெஞ்சுள்ளும்கண்ணுள்ளும்நின்றுநீங்கார்
நீர்மலையார்கொல் ? நினைக்கமாட்டேன் *
மஞ்சுயர்பொன்மலைமேலெழுந்த
மாமுகில்போன்றுளர்வந்துகாணீர் *
அஞ்சிறைப்புள்ளுமொன்றுஏறிவந்தார்
அச்சோ ஒருவரழகியவா ! (௮)

எண்திசையும்எறிநீர்க்கடலும்
ஏழுலகும்உடனேவிழுங்கி *
மண்டிஓராலிலைப்பள்ளிகொள்ளும்
மாயர்கொல் ? மாயம் அறியமாட்டேன் *

கொண்டல்நன்மால்வரையேயுமொப்பர்
கொங்கலர்தாமரைகண்ணுமவாயும் *
அண்டத்தமராபணியநின்றார்
அச்சோஒருவரழகியவா! (கூ)

❀ அன்னமும்கேழலும்மீனுமாய
ஆதியைநாகையழகியாரை *
கன்னிநன்மாமதிள்மங்கைவேந்தன
காமருசீர்க்கலிகன்றி * குன்றா
இன்னிசையாலசொன்னசெஞ்சொல்மாலை
ஏழுமிரண்டுமோரொன்றுமவல்லார் *
மன்னவராய்உலகாண்டு மீண்டும
வானவராய்மகிழ்வெய்துவரே. (கய)

அடிவரவு —பொன் தோடு வேய் வம்பு கோழி வெஞ்சினம் பிணி மஞ்சுயர் எண்திசை அன்னம் தன்னை.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## ரு - ஆந் திருமொழி—தன்னை.



### திருப்புல்லாணி. (க)

கலிநிலைத்துறை. (சங்கராபரணராகம் - ரூபகதாளம்.)

[தலைவனைப்பிரிந்த தலைவி ஆற்றமைமிகுதியால் தலைவனிடம் செல்லத் துணிந்து நெஞ்சையும் தோழியையும் துணைவேண்டிய பாசுரம்.]

❀ தன்னைநைவிக்கிலேன் வல்வினையேன்தொழுதும்எழு *
பொன்னைநைவிக்கும்அப்பூஞ்செருந்தி மணநீழல்வாய் *
என்னைநைவித்து எழில்கொண்டகன்றபெருமானிடம் *
புன்னைமுத்தம்பொழில்சூழ்ந்து அழகாயபுல்லாணியே. (க)

உருகிநெஞ்சே! கரைந்துஇங்குஇருந்தென்? தொழுதும்எழு *
முருகுவண்டுண்மலர்க்கைதையின் நீழலின்முன்னொருநாள் *
பெருகுகாதன்மை என்னுள்ளமெய்தப்பிரிந்தானிடம் *
பொருதுமுந்நீர்க்கரைக்கே மணியுந்துபுல்லாணியே (உ)

ஏதுசெய்தால்மறக்கேன்? மனமே! தொழுதும் எழு *
தாதுமல்குதடம்சூழ்பொழில் தாழ்வர்தொடர்ந்து * பின்
பேதைநின்னைப்பிரியேன் இனிஎன்று அகன்றானிடம் *
போதுநாளும்கமழும் பொழில்சூழ்ந்தபுல்லாணியே. (ரு)

கொங்குண்வண்டேகரியாகவந்தான் கொடியேற்கு * முன்
நங்களீசன் நமக்கே பணித்தமொழிசெய்திலன் *
மங்கைநல்லாய் ! தொழுதும்எழு போய் அவன்மன்னுமூர் *
பொங்குமுந்நீர்க்கரைக்கே மணியுந்துபுல்லாணியே (௪)

உணரில்உள்ளம்சுடுமால் வினையேன்தொழுதும்எழு *
துணரிஞாழல்நறும்போது நம்சூழ்குழல்பெய்து * பின்
தணரில்ஆவிதளருமென அன்புதந்தானிடம் *
புணரியோதம்பணிலம் மணியுந்துபுல்லாணியே. (௫)

எள்கிநெஞ்சே ! நினைந்திங்கிருந்தென் ? தொழுதும்எழு *
வள்ளல்மாயன்மணிவண்ணன்எம்மான் மருவுமிடம் *
கள்ளவிழும்மலர்க்காவியும் தூமடல்கைதையும் *
புள்ளும்அள்ளற்பழனங்களும்சூழ்ந்த புல்லாணியே (௬)

பரவிநெஞ்சே ! தொழுதுமஎழு போய்அவன்பாலமாய் *
இரவும்நாளும் இனிக்கண்துயிலாதிருந்தென்பயன் ? *
விரவிமுத்தம் நெடுவெண்மணல்மேற்கொண்டு * வெண்திரை
புரவியென்னப்புதம்செய்து வந்துந்துபுல்லாணியே. (௭)

அலமும்ஆழிப்படையும்உடையார் நமக்குஅன்பராய் *
சலமதாகித்தகவொன்றிலர் நாம்தொழுதும்எழு *
உலவுகால்நற்கழியோங்கு தண் பைம்பொழிலூடு * இசை
புலவுகானல் களிவண்டினமபாடுபுல்லாணியே. (௮)

ஓதிநாமங்குளித்துஉச்சிதன்னால் ஒளிமாமலா *
பாதம்நாளும்பணிவோம் நமக்கேநலமாதலின் *
ஆதுதாரானெனிலும்தரும் அன்றியுமஅன்பராய் *
போதும்மாதே! தொழுதும் அவனமன்னுபுல்லாணியே. (௯)

✿ இலங்குமுத்தும்பவளக்கொழுந்தும் எழில்தாமரை *
புலங்கள்முற்றும்பொழில்சூழ்ந்து அழகாயபுல்லாணிமேல் *
கலங்கலில்லாப்புகழான் கலியனொலி † மாலை *
வலங்கொள்தொண்டர்க்குஇடமாவது பாடில்வைகுந்தமே. (௧௦)

அடிவரவு:—தன்னை உருகி ஏது கொங்கு உணரில் எள்கி பரவி அலம் ஓதி இலங்கு காவார்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



† 'மாலைகள்' என்ற பாடம் செய்யுளோசைக்குச் சேரும்.

## ச - ஆந் திருமொழி—காவார்.

### திருப்புல்லாணி (உ)

தரவுகொச்சகக்கலிப்பா. (காம்போதிராகம் - அடதாளம்.)

[பிரிவாற்றாத தலைவி பறவைகளைத் தூதுவிட்டும், பிறை தென்றல் முதலியவற்றால் வருந்தியும் கூறிய பாசுரம்.]

காவார்மடல்பெண்ணை அன்றிலரிகுரலும் *
ஏவாயினூடியங்கும் எஃகின்கொடிதாலோ ! *
பூவார்மணம்கமழும் புல்லாணிகைதொழுதேன் *
பாவாய்! இதுநமக்கு ஓர்பான்மையேயாகாதே. (க)

முன்னம்குறளுருவாய் மூவடிமண்கொண்டளந்த *
மன்னன்சரிதைக்கே மாலாகிப்பொன்பயந்தேன் *
பொன்னங்கழிக்கானல் புள்ளினங்காள் ! புல்லாணி *
அன்னமாய்நூல்பயந்தாற்கு ஆங்குஇதனைச்செப்புமினே (உ)

வவ்வித்துழாயதன்மேல் சென்றதனிநெஞ்சம் *
செவ்வியறியாது நிற்குங்கொல் ? நித்திலங்கள் *
பவ்வத்திரையுலவு புல்லாணிகைதொழுதேன் *
தெய்வச்சிலையாற்கு என்சிந்தைநோய்செப்புமினே. (ந)

பரியஇரணியனது ஆகம் அணியுகிரால *
அரியுருவாய்க்கீண்டான் அருள்தந்தவா ! நமக்கு *
பொருதிரைகள்போந்துலவு புல்லாணிகைதொழுதேன் *
அரிமலர்க்கண்ணீர்ததும்ப அந்துகிலும்நில்லாவே. (ச)

வில்லால்இலங்கைமலங்கச் சரம்துரந்த *
வல்லாளன்பின்போன நெஞ்சம்வருமளவும் *
எல்லாரும்என்தன்னை ஏசிலும்பேசிடினும் *
புல்லாணியெம்பெருமான் பொய்கேட்டிருந்தேனே. (ரு)

சுழன்றிலங்குவெங்கதிரோன் தேரோடும்போய்மறைந்தான் *
அழன்றுகொடிதாகி அஞ்சுடரில்தானடுமால் *
செழுந்தடம்பூஞ்சோலைசூழ் புல்லாணிகைதொழுதேன் *
இழந்திருந்தேன்என்தன் எழில்நிறமும்சங்குமே. (சு)

கனையாரிடிகுரலின் கார்மணியின்நாவாடல் *
தினையேனும்நில்லாது தீயிற்கொடிதாலோ *
புனையாரமணிமாடப் புல்லாணிகைதொழுதேன் *
வினையேன்மேல்வேலையும் வெந்தழலேவீசுமே (எ)

தூம்புடைக்கைவேழம் வெருவமருப்பொசித்த *
பாம்பினணையான அருள்தந்தவா ! நமக்கு *
பூஞ்செருந்திபொன்சொரியும் புல்லாணிகைதொழுதேன் *
தேமபவிளம்பிறையும என்தனக்குஒர்வெந்தழலே (அ)

வேதமும்வேள்வியும் விண்ணும்இருசுடரும் *
ஆதியுமானான் அருள்தந்தவா ! நமக்கு *
போதலரும்புன்னைசூழ புல்லாணிகைதொழுதேன் *
ஓதமுமநானும் உறங்காதிருந்தேனே. (கூ)

பொன்னலருமபுன்னைசூழ் புல்லாணியம்மானை *
மின்னிடையார்வேட்கைநோய்கூர இருந்ததனை *
கலநவிலுமதிண்தோள் கலியனொலிவல்லார் *
மன்னவராயமண்ணாண்டு † வானாடுமுன்னுவரே. (க0)

அடிவரவு.—காவார் முன்னம் வல்லி பரிய வில் சுழன்று கனை தூம்புடை வேதம பொன்னலரும் தவளம.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## ரு - ஆந் திருமொழி—தவளவிளம்பிறை



### திருக்குறுங்குடி. (க)

[தலைவி தனது தலைமகனுள்ளவிடத்தில் கொண்டுவிடும்படி உற்றாரை வேண்டிக்கூறிய பாசுரம்.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (ஆனந்தபைரவிராகம்-அடதாளம்)

தவளவிளம்பிறைதுள்ளுமுந்நீர்த்
தண்மலர்த்தென்றலோடன்றிலொன்றித
துவள * என்னெஞ்சகம்சோரஈரும
சூழ்பனிநாள்துயிலாதிருப்பேன் *

---

† 'வானாளும்' 'வானாள்' என்பன பாடபேதங்கள்.

இவளும்ஓர்பெண்கொடியென்றிரங்கார்
என்னலமைந்துமுன்கொண்டுபோன *
குவளைமலர்நிறவண்ணர்மன்னு
குறுங்குடிக்கேஎன்னைஉய்த்திடுமின். (௧)

தாதவிழ்மல்லிகைபுல்லிவந்த
தண்மதியினிளவாடைஇன்னே *
ஊதைதிரிதந்துழறியுண்ண
ஓரிரவும்உறங்கேன் * உறங்கும்
பேதையர்பேதைமையால்இருந்து
பேசிலும்பேசுகபெய்வளையார் *
கோதைநறுமலர்மங்கைமார்வன்
குறுங்குடிக்கேஎன்னைஉய்த்திடுமின் (௨)

காலையும்மாலையொத்துண்டு
கங்குல்நாழிகைஊழியில்நீண்டுலாவும் *
போல்வதோர்தன்மைபுகுந்துநிற்கும்
பொங்கழலேயொக்கும்வாடைசொல்லி *
மாலவன்மாமணிவண்ணன்
மாயம்மற்றுமுள அவை வந்திடாமுன் *
கோலமயில்பயிலும்புறவின்
குறுங்குடிக்கேஎன்னைஉய்த்திடுமின். (௩)

கருமணிபூண்டுவெண்ணாகணைந்து
காரிமிலேற்றணர்தாழ்ந்துலாவும் *
ஒருமணியோசைஎன்னுள்ளந்தள்ள
ஓரிரவும்உறங்காதிருப்பேன் *
பெருமணிவானவருச்சிவைத்த
பேரருளாளன்பெருமை † பேசி *
குருமணிநீர்கொழிக்கும்புறவின்
குறுங்குடிக்கேஎன்னைஉய்த்திடுமின். (௪)

திண்திமிலேற்றின்மணியும்
ஆயன்தீங்குழலோசையும், தென்றலோடு *
கொண்டதோர்மாலையும்அந்தியீன்ற
கோலவிளம்பிறையோடுகூடி *

† 'பேச' என்றும் பாடம்.

இவளும்ஓர்பெண்கொடியென்றிரங்கார்
என்னலமைந்துமுன்கொண்டுபோன *
குவளைமலர்நிறவண்ணன்மன்னு
குறுங்குடிக்கேஎன்னைஉய்த்திடுமின். (க)

தாதவிழ்மல்லிகைபுல்லிவந்த
தண்மதியினிளவாடைஇன்னே *
ஊதைதிரிந்துழறியுண்ண
ஓரிரவும்உறங்கேன் * உறங்கும்
பேதையர்பேதைமையால்இருந்து
பேசிலும்பேசுகபெய்வளையார் *
கோதைநறுமலர்மங்கைமார்வன்
குறுங்குடிக்கேஎன்னைஉய்த்திடுமின். (உ)

காலையும்மாலையொத்துண்டு
கங்குல்நாழிகைஊழியில்நீண்டுலாவும் *
போல்வதோர்தன்மைபுகுந்துநிற்கும்
பொங்கழலேயொக்கும்வாடைசொல்லில் *
மாலவன்மாமணிவண்ணன்
மாயம்மற்றுமுள அவை வந்திடாமுன் *
கோலமயில்பயிலும்புறவின்
குறுங்குடிக்கேஎன்னைஉய்த்திடுமின். (ந)

கருமணிபூண்டுவெண்ணாகணைந்து
காரிமிலேற்றணர்தாழ்ந்துலாவும் *
ஒருமணியோசைஎன்னுள்ளம்தள்ள
ஓரிரவும்உறங்காதிருப்பேன் *
பெருமணிவானவருச்சிவைத்த
பேரருளாளன்பெருமை † பேசி *
குருமணிநீர்கொழிக்கும்புறவின்
குறுங்குடிக்கேஎன்னைஉய்த்திடுமின். (ச)

திண்திமிலேற்றின்மணியும்
ஆயன்தீங்குழலோசையும், தென்றலோடு *
கொண்டதோர்மாலையும்அந்தியீன்ற
கோலவிளம்பிறையோடுகூடி *

† 'பேச' என்றும் பாடம்.

மூத்திடுகின்றன
மற்றவனதனமொய்யகலமணையாதுவாளா *
கூத்தனிமையவர்கோனவிருமபும்
குறுங்குடிக்கேயென்னையுய்த்திடுமின். (கூ)

செற்றவன்தென்னிலங்கைமலங்கத்
தேவர்பிரான், திருமாமகளைப
பெற்றும் * என்னெஞ்சகமகோயிலகொணட
பேரருளாளன், பெருமைபேசக்
கற்றவன் * காமருசீர்க்கலியன்
கண்ணகத்தும்மனத்தும் அகலாக
கொற்றவன * முற்றுலகாளிநின்ற
குறுங்குடிக்கேயென்னை உய்த்திடுமின. (கo)

அடிவரவு:—தவளம தாதவிழ் காலை கருமணி திணதிமில் எல்லி செமகண கேவலம் சோத்தென செற்றவன் அக்கு.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## சு - ஆந் திருமொழி—அக்கும்புலியினதளும்.



### திருக்குறுங்குடி. (உ)

கலிநிலைத்துறை. (அடாணராகம் - ரூபகதாளம்.)

அக்கும்புலியினதளும உடையார்அவரொருவா *
பக்கம்நிற்கநின்ற பண்பரூரபோலும் *
தக்கமரத்தின் தாழ்சினையேறி * தாய்வாயில்
கொக்கின்பிள்ளை வெள்ளிறவுண்ணும்குறுங்குடியே. (க)

துங்காரரவத்திரைவந்துலவத் தொடுகடலுள் *
பொங்காரரவில்துயிலும புனிதரூரபோலும் *
செங்காலன்னம் திகழ்தண்பணையில்பெடையோடும் *
கொங்கார்கமலத்தலரில் சேரும்குறுங்குடியே. (உ)

வாழக்கண்டோம் வந்துகாண்மின்தொண்டீர்காள் !
கேழல்செங்கண் மாமுகில்வண்ணர்மருவுமூர் *
ஏழைச்செங்கால் இன்துணைநாரைக்குஇரைதேடி *
கூழைப்பார்வைக் கார்வயல்மேயும்குறுங்குடியே. (ங)

சிரமுனைந்துமைந்தும் சிந்தச்சென்று * அரக்கன்
உரமும்கரமும்துணித்த † உரவோனூர்போலும்
இரவும்பகலும் ஈனதேன் ‡ முரல * மனறெல்லாம்
குரவின்பூவேதான் மணநாறும்குறுங்குடியே. (௪)

கவ்வைகளிற்றுமன்னர்மாளக் கலிமான்தேர்
ஐவர்க்காய் * அன்றுஅமரில் § உய்த்தானூர்போலும் *
மைவைததிலங்குகண்ணார் தங்கள் மொழியொப்பான் *
கொவ்வைக்கனிவாய்க் கிள்ளைபேசும்குறுங்குடியே. (ரு)

தீநீரவண்ண மாமலர்கொண்டுவிரையேந்தி *
தூநீர்பரவித் தொழுமினெழுமின்தொண்டர்காள்! *
மாநீர்வண்ணர் மருவியுறையுமிடம் * வானில
கூனீர்மதியை மாடம்தீண்டும்குறுங்குடியே. (சு)

வல்லிச்சிறுநுண்ணிடையாரிடை நீர்வைக்கின்ற *
அல்லல்சிந்தைதவிர அடைமின் அடியீர்காள்! *
சொல்லில்திருவேயனையார கனிவாயெயிறொப்பான் *
கொல்லைமுல்லை மெல்லரும்பீனும்குறுங்குடியே (எ)

நாராரிண்டை நாண்மலர்கொண்டுநந்தமர்காள்! *
ஆராஅன்போடு எம்பெருமானூரடைமின்கள் *
தாராவாரும் வார்புனல்மேய்ந்துவயல்வாழும் *
கூர்வாய்நாரை பேடையொடாடும்குறுங்குடியே (அ)

நின்றவினையும்துயரும்கெட மாமலரேந்தி *
சென்றுபணிமின்எழுமின் தொழுமின்தொண்டர்காள்! *
என்றும்இரவும்பகலும் வரிவண்டுஇசைபாட *
குன்றின்முல்லை மன்றிடைநாறும்குறுங்குடியே. (கூ)

※ சிலையாலிலங்கைசெற்றான் மற்றோர்சினவேழம் *
கொலையார்கொம்புகொண்டானமேய குறுங்குடிமேல் *
சலையார்பனுவல்வல்லான் கலியனொலிமாலை *
நிலையார்பாடல்பாடப் பாவம்நில்லாவே. (கய)

அடிவரவு:—அக்கு தங்கார்வாழ சிரமுன் கவ்வை தீநீர் வல்லி நாரார் நின்ற சிலையால் தந்தை.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



---

† 'ஒருவன்', ‡ 'முரலும்' § 'உற்றான்' என்பன சிலர் பாடம்.

## எ - ஆந் திருமொழி—தந்தைதாய்.

### திருவல்லவாழ்.

எண்சீராசிரியவிருத்தம். (தந்யாசிராகம் - ரூபகதாளம்.)

தந்தைதாய்மக்களே சுற்றமென்றுஉற்றவர்பற்றிநின்ற *
பந்தமார்வாழ்க்கையை நொந்துநீபழியெனக்கருதினையேல் *
அந்தமாய்ஆதியாய் ஆதிக்குமாதியாய்ஆயனாய *
மைந்தனார்வல்லவாழ் சொல்லுமாவல்லையாய்மருவுநெஞ்சே! (க)

மின்னுமாவல்லியும்வஞ்சியும்வென்ற நுண்ணிடைநுடங்கும் *
அன்னமென்னடையினார்கலவியை அருவருத்தஞ்சினையேல் *
துன்னுமாமணிமுடிப்பஞ்சவர்க்காகி முனதூதுசென்ற *
மன்னனார்வல்லவாழ் சொல்லுமாவல்லையாய்மருவுநெஞ்சே! (உ)

பூணுலாமென்முலைப்பாவைமார் பொய்யினைமெய்யிதென்று *
பேணுவார்பேசும்அப்பேச்சை நீபிழையெனக்கருதினையேல் *
நீணிலாவெண்குடைவாணனார் வேள்வியில்மண்ணிரந்த *
மாணியார்வல்லவாழ் சொல்லுமாவல்லையாய்மருவுநெஞ்சே! (ங)

பண்ணுலாமென்மொழிப்பாவைமார் பணைமுலையணைதும்நாமென்று*
எண்ணுவாரெண்ணமதொழிந்து நீபிழைத்துயக்கருதினையேல் [நீர்
விண்ணுளார்விண்ணின்மீதியன்ற வேங்கடத்துளார்* வளங்கொள்முன்
வண்ணனார்வல்லவாழ் சொல்லுமாவல்லையாய்மருவுநெஞ்சே! (ச)

மஞ்சுதோய்வெண்குடைமன்னராய் வாரணம்சூழவாழ்ந்தார் *
துஞ்சினாரெனபதோர்சொல்லை நீதுயரெனக்கருதினையேல் *
நஞ்சுதோய்கொங்கைமேல் அங்கைவாய்வைத்துஅவள்நாளையுண்ட *
† மைந்தனார்வல்லவாழ் சொல்லுமாவல்லையாய்மருவுநெஞ்சே! (ரு)

உருவினார்பிறவிசேர் ஊன்பொதிநரம்புதோற்குரம்பையுள்புக்கு *
அருவிநோய்செய்துநின்றுஐவர்தாம் வாழ்வதற்குஅஞ்சினையேல் *
திருவினார்வேதம்நான்குஐந்துதீவேள்வியோடு அங்கமாறும் *
மருவினார்வல்லவாழ் சொல்லுமாவல்லையாய்மருவுநெஞ்சே! (சா)

நோயெலாம்பெய்ததோராக்கையை மெய்யெனக்கொண்டு * வாளா
பேயர்தாம்பேசும்அப்பேச்சை நீபிழையெனக்கருதினையேல் *
தீயுலாவெங்கதிர்த்திங்களாய் மங்குல்வானாகிநின்ற *
மாயனார்வல்லவாழ் சொல்லுமாவல்லையாய்மருவுநெஞ்சே! (எ)

---

† 'மஞ்சனார்' என்பதும் பாடம்.

மஞ்சுசேர்வானெரி நீர்நிலம்காலிவைமயங்கிநின்ற *
அஞ்சுசேராக்கையை அரணமன்றென்றுயக்கருதினையேல் *
சந்துசேர்மென்முலைப் பொன்மலர்ப்பாவையும்தாமும் * நாளும்
வந்துசேர்வல்லவாழ் சொல்லுமாவல்லையாய்மருவுநெஞ்சே ! (அ)

வெள்ளியார்பிண்டியார் போதியாரென்றிவர்ஓதுகின்ற *
கள்ளநூல்தன்னையும் கருமமன்றென்றுயக்கருதினையேல் *
தெள்ளியார்கைதொழும்தேவனார் மாமுநீரமுதுதந்த *
வள்ளலார்வல்லவாழ் சொல்லுமாவல்லையாய்மருவுநெஞ்சே ! (கூ)

❀ மறைவலார்குறைவிலாருறையுமூர் வல்லவாழடிகள்தம்மை *
சிறைகுலாவண்டறைசோலைசூழ் கோலநீளாலிநாடன் *
கறையுலாவேல்வல்ல கலியன்வாயொலியிவைகற்றுவல்லார் *
இறைவராய்இருநிலம்காவலபூண்டு இன்பம்நன்கெய்துவாரே. (கoO)

அடிவரவு:—தந்தை மின்னும் பூண் பண் மஞ்சு உருவின் நோய் மஞ்சுசேர் வெள்ளியார் மறை முந்துற.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## அ - ஆந் திருமொழி- முந்துற.



### திருமாலிருஞ்சோலை. (க)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம் (சுருட்டிராகம் - அடதாளம்.)

❀ முந்துறவுரைக்கேனவிரைகுழலமடவார்
கலவியைவிடு தடுமாறல் *
அந்தரமேழும்அலைகடலேழும்
ஆய எம்மடிகள்தம்கோயில் *
சந்தொடுமணியும்அணிமயில்தழையும்
தழுவிவந்து அருவிகள்நிரந்து *
வந்திழிசாரல்மாலிருஞ்சோலை
வணங்குதும்மடநெஞ்சே ! (க)

இண்டையும்புனலும்கொண்டிடையின்றி
எழுமினோதொழுதுமெனறு * இமையோர்
அண்டரும்பரவ அரவணைத்துயினற
சுடர்முடிக்கடவுள்தம்கோயில் *

விண்டலர்தூளிவேய்வளர்புறவில்
        விரைமலர்க்குறிஞ்சியின்நறுந்தேன *
வண்டமாசாரல்மாலிருஞ்சோலை
        வணங்குதும்வாமடநெஞ்சே ! (உ)

பிணிவளராக்கைநீங்கநின்றேத்தப்
        பெருநிலமருளின்முன்னருளி *
அணிவளர்குறளாய்அகலிடமுழுதும்
        அளந்தஎம் அடிகள்தமகோயில *
கணிவளர்வேங்கைநெடுநிலமதனில்
        குறவர்தம்கவணிடைத்துரந்த *
மணிவளர்சாரல்மாலிருஞ்சோலை
        வணங்குதுமவாமடநெஞ்சே ! (௩)

சூர்மையிலாயபேய்முலைசுவைத்துச
        சுடுசரமடுசிலைத்துரந்து *
நீர்மையிலாததாடகைமாள
        நினைந்தவர்மனம்கொண்ட கோயில *
கார்மலிவேங்கைகோங்கலர்புறவில
        கடிமலர்க்குறிஞ்சியின்நறுநதேன் *
வார்புனல்சூழ்தண்மாலிருஞ்சோலை
        வணங்குதும்வாமடநெஞ்சே ! (௪)

வணங்கலிலரக்கன்செருக்களத்தவிய
        மணிமுடி ஒருபதும்புரள *
அணங்கெழுந்தவன்தனகவந்தம்நின்றாட
        அமர்செய்த அடிகள் தமகோயில *
பிணங்கலில்நெடுவேயநுதிமுகம்கிழிப்பப்
        பிரசம்வந்திழிதர * பெருநதேன்
மணங்கமழசாரல்மாலிருஞ்சோலை
        வணங்குதும்வாமட நெஞ்சே ! (௫)

விடங்கலந்தமர்ந்த அரவணைத்துயின்று
        விளங்கனிக்குஇளங்கன்றுவிசிறி *
குடங்கலந்தாடிக்குரவைமுன்கோத்த
        கூத்தஎம்அடிகள்தம்கோயில் *

தடங்கடல்முகந்துவிசும்பிடைப்பிளிறத்
தடவரைகளிறென்றுமுனிந்து *
மடங்கல்நின்றதிரும்மாலிருஞ்சோலை
வணங்குதும்வாமடநெஞ்சே ! (சு)

தேனுகனாவிபோயுக அங்கு ஓர்
செழுந்திரள்பனங்கனியுதிர *
தானுகந்தெறிந்ததடங்கடல்வண்ணர்
எண்ணிமுன் இடங்கொண்டகோயில் *
வானகச்சோலைமரதகச்சாயல
மாமணிக்கல்லதர் † நிறைந்து
மானுகர்சாரல்மாலிருஞ்சோலை
வணங்குதும்வாமடநெஞ்சே ! (எ)

புதமிகுவிசும்பில்புணரிசென்றணவப்
பொருகடல்அரவணைத்துயின்று *
பதமிகுபரியின்மிகுசினம்தவிர்த்த
பனிமுகில்வண்ணர்தம்கோயில் *
கதமிகுசினத்தகடதடக்களிற்றின்
கவுள்வழிக்களிவண்டுபருக *
மதமிகுசாரல்மாலிருஞ்சோலை
வணங்குதும்வாமடநெஞ்சே ! (அ)

புந்தியில்சமணர்புத்தரென்றிவர்கள்
ஒத்தனபேசவும்உகந்திட்டு *
எந்தைபெருமானார் இமையவர்தலைவர்
எண்ணிமுன் இடங்கொண்டகோயில் *
சந்தனப்பொழிலின்தாழ்சினைநீழல்
தாழ்வரைமகளிர்கள்நாளும் *
மந்திரத்திறைஞ்சும்மாலிருஞ்சோலை
வணங்குதும்வாமடநெஞ்சே ! (கூ)

❀ வண்டமர்சாரல்மாலிருஞ்சோலை
மாமணிவண்ணரைவணங்கும் *
தொண்டரைப்பரவும்சுடரொளிநெடுவேல்
சூழ்வயலாலிநன்னாடன் *

---

† 'நுழைந்து' என்னும் பாடம் வ்யாக்யாநத்தோடு நன்குபொருந்தும்; 'நிரந்து' என்பதும் பாடம்.

கண்டல்நல்வேலிமங்கையர்தலைவன்
கலியன்வாயொலிசெய்தபனுவல் *
கொண்டுஇவைபாடும்தவமுடையார்கள்
ஆள்வர்இக்குரைகடலுலகே. (க0)

அடிவரவு:—முந்துற இண்டை பிணி சூர்மையில் வணங்கலில் விடம தேனு-
கன புதமிகு புந்தி வண்டமர் மூவர்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்



## கூ-ஆந் திருமொழி—மூவரில்.



### திருமாலிருஞ்சோலை. (உ)

கலிநிலைத்துறை. (கமாஸ்ராகம்-ரூபகதாளம்.)

[பிரிவாற்றாது தலைவனை நாடிச்சென்ற தலைவியின் நிலையைக்குறிந்துத்
தாய் இரங்கிக் கூறிய பாசுரம்.]

மூவரில்முன்முதல்வன் முழங்காகடலுள்கிடந்து *
பூவலருந்திதன்னுள் புவனம்படைத்துண்டுமிழ்ந்த *
தேவர்கள்நாயகனைத் திருமாலிருஞ்சோலைநின்ற *
கோவலர்கோவிந்தனைக் கொடியேரிடைகூடுங்கொலோ? (க)

புனைவளர்பூம்பொழிலார் பொன்னிசூழரங்கநகருள்
முனைவனை * மூவுலகும்படைத்த முதலமூர்த்திதன்னை *
சினைவளர்பூம்பொழில்சூழ் திருமாலிருஞ்சோலைநின்றான் *
கனைகழலகாணுங்கொலோ? கயறகண்ணிளமகாரிகையே (உ)

உண்டுஉலகேழினையும் ஒருபாலகன்ஆலிலைமேல *
கண்துயில்கொண்டுகந்த கருமாணிக்கமாமலையை *
திண்திறல்மாகரிசேர் திருமாலிருஞ்சோலைநின்ற *
அண்டாதம்கோவினை இன்றுஅணுகுங்கொல்? எனனுயிழையே (ங)

சிங்கமதாய்அவுணன் திறலாகம்முன்கீண்டுகந்த *
பங்கயமாமலர்க்கண் பரனைஎம்பரஞ்சுடரை *
திங்கள்நன்மாமுகில்சேர் திருமாலிருஞ்சோலைநின்ற *
நங்கள்பிரானை இன்றுநணுகுங்கொல்? என்நன்னுதலே. (ச)

தானவன்வேள்விதன்னில் தனியேகுறளாய்நிமிர்ந்து *
† வானமும்மண்ணகமும் அளந்ததிரிவிக்கிரமன் *
தேனமர்பூம்பொழில்சூழ் திருமாலிருஞ்சோலைநின்ற *
வானவர்கோனை இன்றுவணங்கித்தொழவல்லள்கொலோ? (ரு)

† 'வானகமும்' என்று சிலர்; இது, ஓசைக்குச்சேராது.

நேசமிலாதவர்க்கும் நினையாதவர்க்கும் அரியான் *
வாசமலர்ப்பொழில்சூழ் வடமாமதுரைப்பிறந்தான் *
தேசமெல்லாம்வணங்கும் திருமாலிருஞ்சோலைநின்ற *
கேசவநம்பிதன்னைக் கெண்டையொண்கண்ணிகாணுங்கொலோ? ()

புள்ளினைவாய்பிளந்து பொருமாகரிகொம்பொசித்து *
கள்ளச்சகடுதைத்த கருமாணிக்கமாமலையை *
தெள்ளருவிகொழிக்கும் திருமாலிருஞ்சோலைநின்ற *
வள்ளலை, வாணுதலாள் வணங்கித்தொழவல்லள்கொலோ? (எ)

பார்த்தனுக்கன்றருளிப் பாரதத்தொருதேர்முனைநின்று *
காத்தவன்தன்னை விண்ணோர்கருமாணிக்கமாமலையை *
தீர்த்தனைப்பூம்பொழில்சூழ் திருமாலிருஞ்சோலைநின்ற *
மூர்த்தியைக்கைதொழவும் முடியுங்கொல? என்மொய்குழற்கே (அ)

வலம்புரியாழியனை வரையார்திரள்தோளன்தன்னை *
புலம்புரிநூலவனைப் பொழில்வேங்கடவேதியனை *
சிலம்பியலாறுடைய திருமாலிருஞ்சோலைநின்ற *
நலந்திகழ்நாரணனை நணுகுங்கொல? என்நன்னுதலே. (கூ)

தேடற்கரியவனைத் திருமாலிருஞ்சோலைநின்ற *
ஆடற்பறவையனை அணியாயிழைகாணுமென்று *
மாடக்கொடிமதிள்சூழ் மங்கையார்கலிகன்றிசொன்ன *
பாடல்பனுவல்பத்தும் பயில்வார்க்கில்லைபாவங்களே. (கo)

அடிவரவு:—மூவரில் புனை உண்டு சிகைமது தானவன் நேசம் புள்ளினை பார்த்தனுக்கு வலம்புரி தேடற்கு எங்கள்

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## கo-ஆந் திருமொழி—எங்கள்



### திருக்கோட்டியூர்

ஆசிரியத்துறை. (யமுநாகல்யாணிராகம்-அடதாளம்.)

எங்களெம்மிறையெம்பிரான் இமையோர்க்குநாயகன்*ஏத்தடியவர்
தங்கள்தம்மனத்துப் பிரியாதருள்புரிவான் *
பொங்குதண்ணருவிபுதம்செய்யப் பொன்களேசிதறும், இலங்கொளி*
செங்கமலம்மலரும் திருக்கோட்டியூரானே. (க)

எவ்வநோய்தவிர்ப்பான் எமக்கிறைஇன்னகைத்துவர்வாய் * நிலமகள்
செவ்விதோயவல்லான திருமாமகட்கினியான *
மௌவல்மாலைவண்டாடும் மல்லிகைமாலையோடுமணந்து * மாருதம்
தெய்வநாறவரும் திருக்கோட்டியூரானே (௨)

வெள்ளியான்கரியான் மணிநிறவண்ணனெண்ணவா தமக்கிறை* எமக்கு
ஒள்ளியானுயர்ந்தான் உலகேழுமுண்டுமிழ்ந்தான *
துள்ளுநீர்மொண்டுகொண்டு சாமரைக்கற்றைசந்தனமுந்திவந்தசை *
தெள்ளுநீர்ப்புறவில் திருக்கோட்டியூரானே (௩)

ஏறுமேறிஇலங்குமொண்மழுப்பற்றும் ஈசற்குஇசைந்து* உடம்பிலோர்
கூறுதான்கொடுத்தான் குலமாமகட்கினியான *
நாறுசண்பகமல்லிகைமலர்புல்கி இன்னிளவண்டு * நல்நறும்
தேறல்வாய்மடுக்கும் திருக்கோட்டியூரானே. (௪)

வங்கமாகடல்வண்ணன் மாமணிவண்ணன்விண்ணவர்கோன் * மதுமல
தொங்கல்நீள்முடியான் நெடியான்படிகடந்தான் * [ர்த்
மங்குல்தோய்மணிமாடவெண்கொடி மாகமீதுயர்ந்தேறி * வானுயர்
திங்கள்தானணவும் திருக்கோட்டியூரானே. (௫)

காவலனிலங்கைக்கிறைகலங்கச் சரஞ்செலவுய்த்து * மற்றவன்
ஏவலம்தவிர்த்தான் என்னையாளுடைஎம்பிரான் *
நாவலம்புவிமன்னர்வந்துவணங்க மாலுறைகின்றது இங்கென *
தேவர்வந்திறைஞ்சும் திருக்கோட்டியூரானே. (௬)

கன்றுகொண்டுவிளங்கனியெறிந்து ஆநிரைக்கழிவென்று * மாமழை
நின்றுகாத்துகந்தான் நிலமாகட்கினியான் *
குன்றின்முல்லையின்வாசமும் குளிர்மல்லிகைமணமும்அளைந்து* இளந்
தென்றல்வந்துலவும் திருக்கோட்டியூரானே. (௭)

பூங்குருந்தொசித்துஆனைகாய்ந்து அரிமாச்செகுத்து* அடியேனையாளு
ஈங்குஎன்னுள் புகுந்தான் இமையோர்கள்தம்பெருமான் * [கந்து
தூங்குதண்பலவின்கனி தொகுவாழையின்கனியொடுமாங்கனி *
தேங்குதண்புனல்சூழ் திருக்கோட்டியூரானே. (௮)

கோவையின்தமிழ்பாடுவார் குடமாடுவார், தடமாமலர்மிசை *
மேவுநான்முகனில் விளங்குபுரிநூலர் *
மேவுநான்மறைவாணர் ஐவகைவேள்வி ஆறங்கம்வல்லவர்தொழும் *
தேவதேவபிரான் திருக்கோட்டியூரானே. (௯)

❀ ஆறுமாவலவன்கலிகன்றி மங்கையர்தலைவன் * அணிபொழில்
சேல்கள்பாய்கழனித் திருக்கோட்டியூரானை *
நீலமாமுகில்வண்ணனை நெடுமாலைஇன்தமிழால்நினைந்த * இந்
நாலுமாறும்வல்லார்க்கு இடமாகும்வானுலகே (க0)

அடிவரவு:—எங்கள் எவ்வம் வெள்ளியான் ஏறு வசைம் காவலன் கன்று பூங்குருந்து கோவை ஆறும் ஒருநல்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்



## பத்தாம்பத்து.

### க-ஆந் திருமொழி—ஒருநல்சுற்றம்.



பல திவ்வியதேசங்கள்

கலிவிருத்தம். (தர்ப்பார்ராகம் - அடதாளம்.)

❀ ஒருநல்சுற்றம் எனக்குயிர்ஒண்பொருள் *
வருநல்தொல்கதி ஆகியமைந்தனை *
நெருநல்கண்டது நீர்மலை, இன்றுபோய் *
கருநெல்சூழ் கண்ணமங்கையுள்காண்டுமே. (க)

❀ பொன்னைமாமணியை அணியார்ந்ததோர்
மின்னை * வேங்கடத்துஉச்சியில் கண்டுபோய் *
என்னையாளுடைஈசனை எம்பிரான்
தன்னை * யாம்சென்றுகாண்டும் தண்காவிலே. (உ)

வேலையாலிலைப் பள்ளிவிரும்பிய *
பாலையாரமுதத்தினைப் பைந்துழாய் *
மாலைஆலியில் கண்டுமகிழ்ந்துபோய் *
ஞாலமுன்னியைக்காண்டும் நாங்கூரிலே. (௩)

துளக்கமில்சுடரை * அவுணனுடல்
பிளக்குமமைந்தனைப் பேரில்வணங்கிப்போய் *
அளப்பிலாரமுதை அமரர்க்குஅருள்
விளக்கினை * சென்று வெள்ளறைக்காண்டுமே. (௪)

சுடலையில் சுடுநீறனமர்ந்தது * ஓர்
நடலைதீர்த்தவனை நறையூர்க்கண்டு * என்
உடலையுள்புகுந்து உள்ளமுருக்கியுண்*
விடலையைச்சென்றுகாண்டும் மெய்யத்துள்ளே. (௫)

வானை ஆரமுதம்தந்தவள்ளலை *
தேனைநீளவயல சேறையில்கண்டுபோய் *
ஆனைவாட்டியருளும் அமரர்தம்
கோனை * யாம்குடந்தைச்சென்றுகாண்டுமே. (௬)

கூந்தலார்மகிழ் கோவலனாய் * வெண்ணெய்
மாந்தழுந்தையில் கண்டுமகிழ்ந்துபோய் *
பாந்தள்பாழியில் பள்ளிவிரும்பிய *
வேந்தனைச்சென்றுகாண்டும வெஃகாவுளே. (௭)

❀ பத்தராவியைப் பாலமதியை * அணித்
தொத்தை மாலிருஞ்சோலைதொழுதுபோய் *
முத்தினைமணியை மணிமாணிக்க
வித்தினை * சென்று விண்ணகர்க்காண்டுமே (௮)

கம்பமாகளிறு அஞ்சிக்கலங்க * ஓர்
கொம்புகொண்ட குரைகழல்கூத்தனை *
கொம்புலாம்பொழில் கோட்டியூர்க்கண்டுபோய் *
நம்பனைச்சென்றுகாண்டும நாவாயுளே (௯)

❀ பெற்ற † மாளியைப பேரில்மணவாளனை *
கற்றநூல் கலிகன்றிஉரைசெய்த *
சொலதிறமிவை சொல்லியதொண்டர்கட்கு *
அற்றமில்லை அண்டம்அவர்க்குஆட்சியே (கO)

முடிவரவு:—ஒரு பொன்னை வேலை துளக்கம் சுடலையில் வானை கூந்தல் பத்தா கம்பம் பெற்றம இரக்கம.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## உ - ஆந் திருமொழி—இரக்கமின்றி.



இராமாவதாரத்தில் ஈடுபாடு. (க)

[தோல்வியுற்ற அரக்கர் அபயம்வேண்டிக் கூத்தாடுதல்.]

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (பியாகடைராகம்-அடதாளம்)

❀ இரக்கமின்றிஎங்கோன்செய்ததீமை
இம்மையே எமக்கெய்திற்றுக்காணீர் *
பரக்கயாமின்றுரைத்தென்? இராவணன
பட்டனன் இனியாவர்க்குஉரைக்கோம்? *

† 'மாளிகை' என்பதும் பாடம்.

குரக்குநாயகர்காள் ! இளங்கோவே !
கோலவல்விலிராமபிரானே ! *
அரக்கராடழைப்பாரில்லை நாங்கள்
அஞ்சினோம்தடம்பொங்கத்தம்பொங்கோ (க)

பத்துநீள்முடியும்அவற்றிரட்டிப்
பாழித்தோளும்படைத்தவன்செல்வம் *
சித்தம்மங்கையர்பால்வைத்துக்கெட்டான்
செய்வதொன்றறியா அடியோங்கள் *
ஒத்ததோளிரண்டும்ஒருமுடியும்
ஒருவர்தந்திறத்தோமன்றிவாழ்ந்தோம் *
அத்த ! எம்பெருமான் ! எம்மைக்கொல்லேல்
அஞ்சினோம்தடம்பொங்கத்தம்பொங்கோ. (உ)

தண்டகாரணியம்புகுந்து அன்று
தையலைத்தகவிலிஎங்கோமான் *
கொண்டுபோந்துகெட்டான்எமக்கு இங்குஓர்
குற்றமில்லை கொல்லேல்குலவேந்தே ! *
பெண்டிரால்கெடும்இக்குடிதன்னைப்
பேசுகின்றதென் ? தாசரதீ ! * உன்
அண்டவாணர்உகப்பதேசெய்தாய்
அஞ்சினோம்தடம்பொங்கத்தம்பொங்கோ. (ங)

எஞ்சலில்இலங்கைக்கிறை எங்கோன் தன்னை
முன்பணிந்து * எங்கள்கண்முகப்பே
நஞ்சுதான் அரக்கர்குடிக்கென்று
நங்கையை அவன்தம்பியேசொன்னான் *
விஞ்சைவானவர்வேண்டிற்றேபட்டோம்
வேரிவார்பொழில்மாமயிலன்ன *
அஞ்சலோதியைக்கொண்டுநடமின்
அஞ்சினோம்தடம்பொங்கத்தம்பொங்கோ. (ச)

செம்பொன்நீள்முடிஎங்களிராவணன்
சீதையென்பதோர்தெய்வம்கொணர்ந்து *
வம்புலாம்கடிகாவில்சிறையா
வைத்ததே குற்றமாயிற்றுக்காணீர் *

கும்பனோடுநிகும்பனும்பட்டான்
கூறறம்மானிடமாய்வநதுதோன்றி *
அம்பினால்எம்மைக்கொன்றிடுகின்றது
அஞசினோம்தடம்பொங்கத்தம்பொங்கோ. (ரு)

ஓதமாகடலைக்கடநதேறி
உயர்கொள்மாக்கடிகாவையிறுத்து *
காதலமக்களும்சுற்றமுமகொன்று
கடியிலஙகைமலஙகஎரித்து *
தூதுவநதகுரஙகுக்கே உஙகள்
தோன்றலதேவியைவிட்டுககொடாதே *
ஆதர்நின்றுபடுகின்றது அநதோ!
அஞசினோம்தடமபொஙகததம்பொங்கோ. (சு)

தாழுமின்றிமுந்நீரைஅஞ்ஞான்று
தகைநததேகண்டு, வஞசிநுணமருஙகுல் *
மாழைமான்மடநோககியைவிட்டு
வாழுகில்லாமதியிலமனத்தானை *
ஏழையைஇலங்கைககிறைதன்னை
எஙகளையொழியககொலைஅவனை *
சூழுமாநினை, மாமணிவண்ணா! *
சொல்லினோம்தடமபொங்கத்தம்பொங்கோ. (எ)

மனங்கொண்டேறும்மண்டோதரிமுதலா
அங்கயறகணணினார்கள இருப்ப * .
தனங்கொள்மெனமுலைநோககமொழிநது
தஞசமேசிலதாபதரென்று *
புனங்கொளமென்மயிலைசசிறைவைத்த
புன்மையாளன்நெஞசில்புகவெய்த *
அனங்கனன்னதிண்தோளெம்மிராமற்கு
அஞசினோமதடம்பொங்கத்தமபொஙகோ. (அ)

புரங்கள்மூன்றும்ஓர்மாத்திரைபபோதில
பொஙகெரிககுஇரைகண்டவனமபின் *
சரங்களேகொடிதாய்அடுகின்ற
சாம்பவான்உடனிற்கததொழுதோம் *

இரங்குநீஎமக்குஎந்தைபிரானே !
இலங்குவெங் † கதிரோன்சிறுவா ! *
குரங்குகட்கரசே ! எம்மைக்கொல்லேல்
கூறினோம்தடம்பொங்கத்தம்பொங்கோ. (கூ)

❀ அங்குஅவ்வானவர்க்குஆகுலம்தீர
அணியிலங்கையழித்தவன் தன்னை *
பொங்குமாவலவன் கலிகன்றி
புகன்றபொங்கத்தம்கொண்டு * இவ்வுலகில்
எங்கும்பாடிநின்றுஆடுமின்தொண்டீர் !
இம்மையேஇடரில்லை * இறந்தால்
தங்குமூர்அண்டமேகண்டுகொண்மின்
சாற்றினோம்தடம்பொங்கத்தம்பொங்கோ. (க0)

அடிவரவு:—இரக்கம் பத்து தண்டக எஞ்சல் செம்பொன் ஓதம் தாழும் மனம் புரங்கள் அங்கு ஏத்து.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## ௩ - ஆந் திருமொழி - ஏத்துகின்றோம்.



(இராமாவதாரத்தில் ஈடுபாடு : இதுவுமது - உ.)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (கல்யாணிராகம் - திரிபுடைதாளம்.)

❀ ஏத்துகின்றோம்பாத்தழும்ப இராமன்திருநாமம் *
சோத்தநம்பி ! சுக்கிரீவா ! உம்மைத்தொழுகின்றோம் *
வார்த்தைபேசீர்எம்மை உங்கள்வானரம்கொல்லாமே *
கூத்தர்போலஆடுகின்றோம் குழமணிதூரமே. (க)

எம்பிரானே ! என்னையாள்வாய் ! என்றென்றுஅலற்றாதே *
அம்பின்வாய்ப்பட்டாற்றகில்லாது இந்திரசித்தழிந்தான் *
நம்பிஅநுமா ! சுக்கிரீவா ! அங்கதனே ! நளனே ! *
கும்பகர்ணன்பட்டுப்போனான் குழமணிதூரமே. (உ)

ஞாலமாளும்உங்கள்கோமான் எங்களிராவணற்கு *
காலனாகிவந்தவா ! கண்டஞ்சிக் கருமுகில்போல் *
நீலன்வாழ்கசுடேணன்வாழ்க அங்கதன்வாழ்கவென்று *
கோலமாகஆடுகின்றோம் குழமணிதூரமே. (௩)

† 'கதிரோன்தன்சிறுவா' என்னும் பாடம் சந்தத்திற்குப் பொருந்தும்.

மணங்கள்நாறும்வார்குழலார் மாதர்களாதரத்தை *
புணர்ந்தசிந்தைப்புன்மையாளன் பொன்ற, வரிசிலையால் *
கணங்களுண்ணவாளியாண்ட காவலனுக்கிளையோன் *
குணங்கள்பாடிஆடுகின்றோம் குழமணிதூரமே. (ச)

வென்றிதந்தோம்மானம்வேண்டோம் தானம்எமக்காக *
இன்றுதம்மின்எங்கள்வாழ்வும் எம்பெருமான்தமர்காள்! *
நின்றுகாணீர்கண்களார நீர்எம்மைக்கொல்லாதே *
குன்றுபோலஆடுகின்றோம் குழமணிதூரமே. (ரு)

கல்லின்முந்நீர்மாற்றிவந்து காவல்கடந்து * இலங்கை
அல்லல்செய்தானுங்கள்கோமான் எம்மைஅமர்க்களத்து *
வெல்லகில்லாதுஅஞ்சினோங்காண் வெங்கதிரோன்சிறுவா! *
கொல்லவேண்டா ஆடுகின்றோம் குழமணிதூரமே. (சா)

மாற்றமாவதுஇத்தனையே வம்மின்அரக்கருள்ளீர்! *
சீற்றம்நும்மேல்தீரவேண்டின் சேவகம்பேசாதே *
ஆற்றல்சான்றதொல்பிறப்பில் அனுமனைவாழ்கவென்று *
கூற்றமன்னார்காணஆடீர் குழமணிதூரமே. (எ)

கவளயானைபாய்புரவி தேரொடுஅரக்கரெல்லாம்
துவள * வென்றவென்றியாளன்தன் தமர்கொல்லாமே *
தவளமாடநீடயோத்திக் காவலன்தன்சிறுவன் *
குவளைவண்ணன்காணஆடீர் குழமணிதூரமே. (அ)

ஏடொத்தேந்தும்நீளிலைவேல் எங்களிராவணனார்
ஓடிப்போனார் * நாங்களெய்த்தோம் உய்வதோர்காரணத்தால் *
கூடிப்போந்தோம்உங்கள்கோமானை தொடரேன்மின் *
கூடிக்கூடிஆடுகின்றோம் குழமணிதூரமே. (கூ)

வென்றதொல்சீர்த்தென்னிலங்கை வெஞ்சமத்து * அன்றரக்கர்
குன்றமன்னார்ஆடியுய்ந்த குழமணிதூரத்தை * [ககா
கன்றிநெய்ந்நீர்நின்றவேற்கைக் கலியனொலிமாலை *
ஒன்றுமொன்றுமைந்துமூன்றும் பாடிநின்றாடுமினே. (கo)

அடிவரவு:—ஏத்துகின்றோம் எம்பிரானே ஞாலம் மணங்கள் வென்றி கல்லின் மாற்றம் கவளம் ஏடு வென்ற சந்தம்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## ச - ஆந் திருமொழி—சந்தமலர்.

(கிருஷ்ணாவதாரத்தில் ஈடுபாடு - க.)

[கண்ணனை முலையுண்ண அழைத்தல்]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம் (புந்நாகவராளிராகம்-ரூபகதாளம்.)

சந்தமலர்க்குழல்தாழத் தானுகந்தோடித்தனியே
வந்து * என்முலைத்தடந்தன்னை வாங்கி நின்வாயில்மடுத்து *
நந்தன்பெறப்பெற்றநம்பீ ! நானுகந்துண்ணுமமுதே ! *
எந்தைபெருமானே ! உண்ணாய் என்னம்மம்சேமமுண்ணாயே. (க)

வங்கமறிகடல்வண்ணா ! மாமுகிலேயொக்குநம்பீ ! *
செங்கண்நெடியதிருவே ! செங்கமலம்புரையையா ! *
கொங்கைசுரந்திட உன்னைக் கூவியுங்காணாதிருந்தேன் *
எங்கிருந்து ஆயர்களோடும் என்விளையாடுகின்றாயே ? (உ)

திருவிற்பொலிந்தஎழிலார் ஆயர்தம்பிள்ளைகளோடு *
தெருவில்திளைக்கின்றநம்பீ! செய்கின்றதீமைகள்கண்டிட்டு *
உருகிஎன்கொங்கையின்தீம்பால் ஓட்டந்துபாய்ந்திடுகின்ற *
மருவிக்குடங்காலிருந்து வாய்முலையுண்ணநீவாராய். (ங)

மக்கள்பெறுதவம்போலும் வையத்துவாழும்மடவார் *
மக்கள்பிறர்கண்ணுக்கொக்கும் முதல்வா! மதக்களிறன்னாய் ! *
செக்கரிளம்பிறைதன்னைவாங்கி நின்கையில்தருவன் *
ஒக்கலைமேலிருந்து அம்மமுகந்து இனிதுண்ணநீவாராய். (ச)

மைத்தகருங்குஞ்சிமைந்தா ! மாமருதூடுநடந்தாய் ! *
வித்தகனே ! விரையாதே வெண்ணெய்விழுங்குமவிகிர்தா ! *
இத்தனைபோதன்றிஎன்தன் கொங்கைசுரந்திருக்கக்கில்லா *
உத்தமனே ! அம்மமுண்ணாய் உலகளந்தாய் ! அம்மமுண்ணாய். (ரு)

பிள்ளைகள்செய்வனசெய்யாய் பேசின்பெரிதும்வலியை *
கள்ளம்மனத்திலுடையை காணவேதீமைகள்செய்தி *
உள்ளமுருகிஎன்கொங்கை ஓட்டந்துபாய்ந்திடுகின்ற *
பள்ளிக்குறிப்புச்செய்யாதே பாலமுதுண்ணநீவாராய். (சு)

தன்மகனாகவன்பேய்ச்சி தான்முலையுண்ணக்கொடுக்க *
வன்மகனாய்அவளாவிவாங்கி முலையுண்டநம்பீ ! *
நன்மகளாய்மகளோடு நானிலமங்கைமணாளா ! *
என்மகனே ! அம்மமுண்ணாய் என்னம்மம்சேமமுண்ணாயே. (எ)

உந்தம் அடிகள் முனிவர் உன்னைநான் என்கையில்கோலால் *
நொந்திடமோதவுங்கில்லேன் நுங்கள்தம் ஆனிரையெல்லாம் *
வந்துபுகுதரும்போது வானிடைத்தெய்வங்கள்காண *
அந்தியம்போது அங்குநில்லேல் ஆழியங்கையனே! வாராய். (அ)

பெற்றத்தலைவனெங்கோமான் பேரருளாளன்மதலாய்! *
சுற்றக்குழாத்திளங்கோவே! தோன்றியதொல்புகழாளா! *
கற்றினந்தோறும்மறித்துக் கானம்திரிந்தகளிறே! *
எற்றுக்கென்னம்மமுண்ணாதே எம்பெருமான்! இருந்தாயே? (கூ)

❀ இம்மைஇடர்கெடவேண்டி ஏந்தெழில்தோள்கலிகன்றி *
செம்மைப்பனுவல்நூல்கொண்டு செங்கணெடியவன் தன்னை *
அம்மமுண்ணென்றுரைக்கின்ற பாடலிவையைந்துமைந்தும் *
மெய்ம்மைமனத்துவைத்தேத்த விண்ணவராகலுமாமே. (க0)

அடிவரவு:—சந்தம் வங்கம் திருவில் மக்கள் மைத்த பிள்ளைகள் தன்மகன் உந்தம் பெற்றம் இம்மை பூங்கோதை.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## ரு-ஆம் திருமொழி - பூங்கோதை.



(கிருஷ்ணாவதாரத்தில் ஈடுபாடு - உ.)

[கண்ணனைக் கைகொட்டிவிளையாடும்படி கூறுதல்.]

(கலித்தாழிசை. யமுநாகல்யாணிராகம் - ஆதிதாளம்.)

❀ பூங்கோதையாய்ச்சி கடைவெண்ணெய்புக்குண்ண *
ஆங்கவள் ஆர்த்துப்புடைக்கப் புடையுண்டு *
ஏங்கியிருந்து சிணுங்கிவிளையாடும் *
ஓங்கோதவண்ணனே! சப்பாணி ஒளிமணிவண்ணனே! சப்பாணி. ()

தாயர்மனங்கள் தடிப்பத் தயிர்நெய்யுண்
டேஎம்பிரான்கள், * இருநிலத்தெங்கள்தம *
ஆயரழக! † அடிகள் * அரவிந்த
வாயவனே! கொட்டாய்சப்பாணி ‡ மால்வண்ணனே! கொட்டாய்சப் [பாணி. (உ)

† 'அடிகளரவிந்தவாயவனே' என்பதும் பாடம்.
‡ 'மாலவனே' என்பதும் பாடம்

தாமோருருட்டித் தயிர்நெய்விழுங்கிட்டு *
தாமோதவழ்வரென்று ஆய்ச்சியர்தாம்பினால் *
† தாமோதரககையால் ஆர்க்கத்தழும்பிருநத *
தாமோதரா ! கொட்டாய்சப்பாணி தாமரைக்கண்ணனே ! சபபாணி.

பெற்றார்தளைகழலப் போந்தங்கயலிடத்து *
உற்றாரொருவரும்இன்றி உலகினில *
மற்றாரும்அஞசப்போய் வஞ்சப்பெண்நஞ்சுண்ட * [பாணி. (௪)
கற்றாயனே ! கொட்டாய்சபபாணி கார்வண்ணனே ! கொட்டாய்சப

சோதநெனநின்னைத் தொழுவன்வரம்தர *
பேய்ச்சிமுலையுண்டபிள்ளாய ! * பெரியன
ஆய்ச்சியர் அப்பம்தருவர் * அவர்ககாகச்
சாற்றியோராயிரம்சப்பாணி தடங்கைகளால்கொட்டாய்சப்பாணி. ()

கேவலமன்று உன்வயிறு * வயிற்றுக்கு
‡ நான்வலவபபம்தருவன * கருவிளைப
பூவலர்நீள்முடி நநதன்தனம்போரேறே ! *
கோவலனே ! கொட்டாய்சப்பாணி குடமாடீ ! கொட்டாய்சப்பாணி

புள்ளினைவாய்பிளந்து பூஙகுருநதம்சாய்த்து *
துள்ளிவிளையாடித தூங்குறிவெண்ணெயை *
அள்ளியகையால அடியேனமுலைநெருடும் * [பாணி. (௭)
பிள்ளைப்பிரான் ! கொட்டாய்சப்பாணி பேய்முலையுண்டானே ! சப்

யாயும்பிறரும் அறியாதயாமதது *
மாயவலவைபபெண் வநதுமுலைதர *
பேயென்றுஅவளைப பிடித்துஉயிரையுண்ட * [பாணி. (௮)
வாயவனே ! கொட்டாய்சப்பாணி மால்வண்ணனே ! கொட்டாய்சப்

கள்ளக்குழவியாய்க் காலால்சகடததை *
தள்ளியுதைத்திட்டுத் தாயாய்வருவாளை *
மெள்ளத்தொடர்ந்து பிடித்து ஆருயிருண்ட * [பாணி. (௯)
வள்ளலே ! கொட்டாய்சப்பாணி மால்வண்ணனே ! கொட்டாய்சப்

---

† 'தாமோதிரக்கையால்' என்பதும் பாடம்.
‡ 'நான்வலப்பம்' என்பதும் பாடபேதம்.

✿ காரார்புயற்கைக்கலிகன்றி மங்கையர்கோன *
பேராளன்நெஞ்சில பிரியாது இடங்கொண்ட
சீராளா! * செந்தாமரைக்கண்ணா! தண்துழாய்த
தாராளா! * கொட்டாய்சப்பாணி தடமாரவா!கொட்டாய்சப்பாணி.()

அடிவரவு:—பூவகோதை தாயர் தாமோர் பெற்றோர் சோத்தென கேவலம் புள்ளினை யாயும் கள்ளம் காரார் எங்கானும்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

## ஆந் திருமொழி - எங்கானும்.

(கிருஷ்ணவதாரத்தில் ஈடுபாடு - ந.)

[மற்றையவதாரங்களின் மேன்மையோடு கிருஷ்ணவதாரத்தின் ஸௌலப்யத்தை அனுபவித்தல்.]

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (ஸாவேரிராகம் - அடதாளம்.)

✿ எங்கானும்ஈதொப்பதோர்மாயமுண்டே?
நரநாரணனாய்உலகத்துஅறநூல *
சிங்காமைவிரித்தவன்எம்பெருமான்
அதுவன்றியுமசெஞ்சுடரும்நிலனும் *
பொங்கார்கடலும்பொருப்பும்நெருப்பும்நெருக்கிப
புகப் பொன்மிடறுஅத்தனைபோது *
அங்காந்தவன்காண்மின் இன்றுஆய்ச்சியரால்
அளைவெண்ணெயுண்டுஆப்புண்டிருந்தவனே. (க)

குன்றொன்றுமததாஅரவமளவிக
குரைமாகடலைக்கடைந்திட்டு * ஒருகால்
நின்றுஉண்டைகொண்டோட்டிவன்கூன்நிமிர
நினைத்தபெருமான், அதுவன்றியும்முன் *
நன்றுண்டதொல்சீர்மகரக்கடலேழ்
மலையேழ்உலகேழ்ஒழியாமைநம்பி *
அன்றுண்டவன்காண்மின் இன்றுஆய்ச்சியரால்
அளைவெண்ணெயுண்டுஆப்புண்டிருநதவனே. (உ)

உளைந்திட்டெழுந்தமதுகைடவர்கள்
உலப்பில்வலியாரவர்பால் * வயிரம
விளைந்திட்டதென்றெண்ணிவிண்ணோர்பரவ
அவர்நாளொழித்தபெருமான், முனநாள் *

வளைந்திட்டவில்லாளிவல்வாளெயிற்று
மலைபோல்அவுணனுடல் வள்ளுகிரால் *
அளைந்திட்டவன்காண்மின் இன்று ஆய்ச்சியரால
அளைவெண்ணெயுண்டு ஆப்புண்டிருந்தவனே. (ங)

தளர்ந்திட்டுஇமையோர்சரண்தாவெனத்
தான்சரணாய், முரணாயவனை * உகிரால
பிளந்திட்டுஅமரர்க்கருள்செய்துகந்த
பெருமான் திருமால், விரிநீருலகை *
வளர்ந்திட்டதொல்சீர்விறலமாவலியை
மண்கொள்ள வஞ்சித்துஒருமாண்குறளாய் *
அளந்திட்டவன்காண்மின் இன்று ஆய்ச்சியரால்
அளைவெண்ணெயுண்டு ஆப்புண்டிருந்தவனே. (ச)

நீண்டான்குறளாய்நெடுவானளவும்
அடியார்படும்ஆழ்துயராயவெல்லாம் *
தீண்டாமைநினைந்துஇமையோரளவும்
செலவைத்தபிரான், அதுவன்றியுமமுன் *
வேண்டாமைநமன்தமர்என்தமரை
வினவப்பெறுவாரலரென்று * உலகேழ்
ஆண்டானவன்காண்மின் இன்று ஆய்ச்சியரால்
அளைவெண்ணெயுண்டு ஆப்புண்டிருந்தவனே. (ரு)

பழித்திட்டஇன்பப்பயன்பற்றறுத்துப்
பணிந்தேத்தவல்லார்துயராயவெல்லாம் *
ஒழித்திட்டுஅவரைத்தனக்காக்கவல்ல
பெருமான் திருமால், அதுவன்றியும்முன் *
தெழித்திட்டெழுந்தேஎதிர்நின்றமன்னன்
சினத்தோளவையாயிரமும் * மழுவால்
அழித்திட்டவன்காண்மின் இன்று ஆய்ச்சியரால்
அளைவெண்ணெயுண்டு ஆப்புண்டிருந்தவனே. (சு)

படைத்திட்டது இவ்வையமுய்யமுனநாள்
பணிந்தேத்தவல்லார்துயராயவெல்லாம் *
துடைத்திட்டுஅவரைத்தனக்காக்கவென்னத்
தெளியாஅரக்கர்திறல்போயவிய

மிடைத்திட்டெழுந்தகுரங்கைப்படையா
விலங்கல்புகப்பாய்ச்சிவிமம் கடலை
அடைத்திட்டவன்காண்மின் இன்றுஆய்ச்சியரால்
அளைவெண்ணெயுண்டுஆப்புண்டிருந்தவனே. (எ)

நெறித்திட்டமென்கூழைநல்நேரிழையோடு
உடனாயவில்லென்னவல்லேயதனை *
இறுத்திட்டுஅவளின்பம்அன்போடணைந்திட்டு
இளங்கொற்றவனாய், துளங்காதமுந்நீர் *
செறித்திட்டுஇலங்கைமலங்கஅரக்கன்
செழுநீள்முடிதோளொடுதாள்துணிய *
அறுத்திட்டவன்காண்மின் இன்றுஆய்ச்சியரால்
அளைவெண்ணெயுண்டுஆப்புண்டிருந்தவனே. (அ)

சுரிந்திட்டசெங்கேழுளைப்பொங்கரிமாத்
தொலையப்பிரியாதுசென்றெய்தி எய்தாது
இரிந்திட்டிடங்கொண்டடங்காததன்வாய்
இருகூறுசெய்தபெருமான், முனநாள் *
வரிந்திட்டவில்லால்மரமேழுமெய்து
மலைபோலுருவத்துஒரிராக்கதமூக்கு *
அரிந்திட்டவன்காண்மின் இன்றுஆய்ச்சியரால்
அளைவெண்ணெயுண்டுஆப்புண்டிருநதவனே. (கூ)

❁ நின்றூர்முகப்புச்சிறிதும்நினையான்
வயிற்றைநிறைபபானுறிப்பால்தயிர்நெய் *
அன்றுஆய்சசியர்வெண்ணெய்விழுங்கி உரலோடு
ஆப்புண்டிருந்தபெருமானடிமேல் *
நன்றாயதொல்சீர்வயல்மங்கையர்கோன்
கலியனொலிசெய்தமிழ்மாலைவல்லார் *
என்றானும்எய்தார்இடா இன்பமெய்தி
இமையோர்ககுமப்பால்செலவெய்துவாரே. (கo)

அடிவரவு.—எங்கானும் குன்று உளைந்த தளர்ந்த நீண்டான் பழித்திட்ட படை நெறி சுரி நின்றூர் மானம்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## எ - ஆந் திருமொழி—மானமுடைத்து.

(கிருஷ்ணவதாரத்தில் ஈடுபாடு-ஈ.)

[கண்ணன் செய்தியைக்குறித்து ஆய்ச்சியரும் யசோதையும் முறையிடுதல்.]

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (கேதாரகௌளராகம் - அடதாளம்)

மானமுடைத்துஉங்களாயர்குலம்
அதனால்பிறர்மக்கள்தம்மை *
ஊனமுடையனசெய்யப்பெறுமென்று
இரப்பன்உரப்பகில்லேன் *
நானுமுரைத்திலேன்நந்தன்பணித்திலன்
நங்கைகாள்! நானென்செய்கேன? *
தானும்ஓர்கன்னியுங்கீழையகத்துத
தயிர்கடைகின்றான்போலும். (க)

காலையெழுந்துகடைந்தஇம்மோர்விற்கப்போகின்றேன்
கண்டேபோனேன் *
மாலைநறுங்குஞ்சிநந்தன்மகனலலால
மற்றுவந்தாரும்இல்லை *
மேலையகத்துநங்காய்! வந்துகாண்மின்கள்
வெண்ணெயேயன்று * இருந்த
பாலும்பதின்குடமகண்டிலேன்
பாவியேன்என்செய்கேன? என்செய்கேனோ? (உ)

தெள்ளியவாய்ச்சிறியான்நங்கைகாள்!
உறிமேலைத்தடாநிறைநத *
வெள்ளிமலையிருந்தாலொத்தவெண்ணெயை
வாரிவிழுங்கியிட்டு *
கள்வனுறங்குகின்றான்வநதுகாண்மின்கள்
கையெல்லாம்நெய், வயிறு
பிள்ளைபரமன்று * இவ்வேழுலகம்கொள்ளும்
பேதையேன்என்செய்கேனோ? (ங)

மைந்நம்புவேற்கணல்லாள்
முன்னம்பெற்றவளேவண்ணநன்மாமேனி *
தன்னம்பிநம்பியும்இங்குவளர்ந்தது
அவன் இவைசெய்தறியான் *
பொய்ந்நம்பிபுள்ளுவன்கள்வம்பொதியறை
போகின்றவா தவழ்ந்திட்டு *
இந்நம்பிநம்பியாஆய்ச்சியர்க்குய்வில்லை
என்செய்கேன் ? என்செய்கேனோ ? (௪)

தந்தைபுகுந்திலன்நான் இங்கிருந்திலேன
தோழிமார் ஆருமில்லை *
சந்தமலர்க்குழலாள்
தனியேவிளையாடுமிடம்குறுகி *
பந்துபறித்துத்துகில்பற்றிக்கீறிப்
படிறன்படிறுசெய்யும் *
நந்தன்மதலைக்கிங்கென்கடவோம ? நங்காய் !
என்செய்கேன் ? என்செய்கேனோ ? (ரு)

மண்மகள்கேள்வன்மலர்மங்கைநாயகன்
நந்தன்பெற்றமதலை *
அண்ணல்இலைக்குழலூதிநம்சேரிக்கே
† அலலில்தான்வந்தபின்னை *
கண்மலர்சோர்ந்துமுலைவந்துவிம்மிக
கமலச்செவ்வாய்வெளுப்ப *
என்மகள்வண்ணம்இருக்கின்றவாநங்காய் !
எனசெய்கேன ? என்செய்கேனோ ? (சு)

ஆயிரங்கண்ணுடை இந்திரனுக்கென்று
ஆயர்விழவெடுப்ப *
பாசனநல்லனபண்டிகளால்
புகப்பெய்தஅதனையெல்லாம் *
போயிருந்துஅங்கொருபூதவடிவுகொண்டு
உன்மகன் இன்றுநங்காய் ! *
மாயன்அதனையெல்லாம்முற்றவாரி
வளைத்துண்டிருந்தான்போலும். (எ)

† 'அல்லுத்தான்' என்பதும் படம்.

தோய்த்த தயிரும் நறுநெய்யும்பாலும்
ஓரோர்குடம் துற்றிடுமென்று *
ஆய்ச்சியர்கூடியழைக்கவும்
நான் இதற்கெள்கி இவனைநங்காய் ! *
சோத்தம்பிரான் ! இவைசெய்யப்பெறாயென்று
இரப்பன் உரப்பகில்லேன் *
பேய்ச்சிமுலையுண்டபின்னை
இப்பிள்ளையைப்பேசுவது அஞ்சுவனே. (அ)

சுடும்வலியுமுடைய
இந்நம்பிபிறந்த எழுதிங்களில் *
ஏடலர் கண்ணியினானை வளர்த்தி
யமுனைநீராடப்போனேன் *
சேடன் திருமறுமார்பன்கிடந்து
திருவடியால் * மலைபோல்
ஓடும்சகடத்தைச்சாடியபின்னை
உரப்புவது அஞ்சுவனே. (கூ)

அஞ்சுவன்சொல்லியழைத்திட நங்கைகாள் !
ஆயிரநாழிநெய்யை *
பஞ்சியமெல்லடிப் † பிள்ளைகளுண்கின்று
பாகந்தான்வையார்களோ *
கஞ்சன்கடியன் கறவெட்டுநாளில
என்கைவலத்தாதுமில்லை *
நெஞ்சத்திருப்பனசெய்துவைத்தாய்நம்பீ !
என்செய்கேன் ? என்செய்கேனோ ? (கО)

‡ அங்ஙனம்தீமைகள்செய்வார்களோ ?
நம்பீ ! ஆயர்மடமக்களை *
பங்கயநீர்குடைந்தாடுகின்றார்கள்
பின்னேசென்றொளித்திருந்து *
அங்கு அவர்பூந்துகில்வாரிக்கொண்டிட்டு
அரவேரிடையார் இரப்ப *
மங்கைநல்லீர் ! வந்துகொண்மினென்று
மரமேறியிருந்தாய்போலும். (கக)

† 'பிள்ளைகளுண்கின்ற' எனவும். ‡ 'அங்ஙனும்' எனவும் ஓதுவர்.

அச்சம்தினைத்தனையில்லைஇப்பிள்ளைக்கு
ஆண்மையும்சேவகமும் *
உச்சியில்முத்திவளர்த்தெடுத்தேனுக்கு
உரைத்திலன்தானின்றுபோய் *
பச்சிலைப்பூங்கடம்பேறி
விசைகொண்டுபாய்ந்துபுக்கு * ஆயிரவாய்
நச்சழற்பொய்கையில்நாகத்தினோடு
பிணங்கிநீவந்தாய்போலும் (கஉ)

தம்பரமல்லனஆண்மைகளைத்
தனியேநின்றுதாம்செய்வரோ ? *
எம்பெருமான் ! உன்னைப்பெற்றவயிறுடையேன்
இனியானென்செய்கேன் ? *
அம்பரமேழும்அதிரும்இடிக்குரல்
அங்கணழற்செங்கணுடை *
வம்பவிழ்கானத்துமால்விடையோடு
பிணங்கிநீவந்தாய்போலும். (கஙு)

❀ அன்னநடைமடவாய்ச்சிவயிறடித்துஅஞ்ச
அருவரைபோல் *
மன்னுகருங்களிறாருயிர்வவ்விய
மைந்தனை, மாகடல்சூழ் *
கன்னிநன்மாமதிள்மங்கையர்காவலன்
காமருசீர்க்கலிகன்றி *
இன்னிசைமாலைகளீரேழும்வல்லவர்க்கு
ஏதும்இடரில்லையே. * (கச)

அடிவரவு:—மானம் காலை தெள்ளிய மை தந்தை மணமகள் ஆயிரம் தோய்த்த ஈமை அஞ்சுவன் அங்ஙனம் அச்சம் தம்பரம் அன்னம் காதில்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## அ - ஆந் திருமொழி—காதிற்கடிப்பு.

(கிருஷ்ணவதாரத்தில் ஈடுபாடு - ரு.)

[ஆய்ச்சியொருத்தி கண்ணனோடு ஊடுதல்.]

கலிவிருத்தம். (உசேனிராகம்-ரூபகதாளம்)

ஸ்ரீ காதில்கடிப்பிட்டுக் கலிங்கமுடுத்து *
தாதுநல்லதண்ணந்துழாய் கொடணிந்து *
போதுமறந்தொடு புறமேவந்துநின்றீர் *
ஏதுக்குஇதுவென்? இதுவென்? இதுவென்னோ? (க)

துவராடையுடுத்து ஒருசெண்டுசிலுப்பி *
கவராகமுடித்துக் கலிக்கச்சுக்கட்டி *
சுவரார்கதவின்புறமே வந்துநின்றீர் *
இவரார்? இதுவென்? இதுவென்? இதுவென்னோ? (உ)

கருளக்கொடியொன்றுடையீர்! தனிப்பாகீர்! *
உருளச்சகடமது † உறக்கில்நிமிர்த்தீர்! *
மருளைக்கொடுபாடிவந்து இல்லம்புகுந்தீர் *
இருளத்துஇதுவென்? இதுவென? இதுவென்னோ? (ங)

நாமம்பலவுமுடை நாரணநம்பீ! *
தாமத்துளபம் மிகநாறிடுகின்றீர் *
காமனெனப்பாடிவந்து இல்லம்புகுந்தீர் *
ஏமத்துஇதுவென்? இதுவென்? இதுவென்னோ? (ச)

சுற்றும்குழல்தாழச் சுரிகையணைத்து *
மற்றும்பல மாமணிபொன்கொடணிந்து *
முற்றம்புகுந்து முறுவல்செய்துநின்றீர் *
எற்றுக்குஇதுவென்? இதுவென்? இதுவென்னோ? (ரு)

ஆனாயருமானிரையும் அங்கொழிய *
கூனாயதோர் கொற்றவில்லொன்றுகையேந்தி *
போனார்இருந்தாரையும் பார்த்துப்புகுதீர் *
ஏனோர்கள்முன்னென? இதுவென்? இதுவென்னோ? (௬)

மல்லேபொருததிரள்தோள் மணவாளீர்! *
அல்லேயறிந்தோம் நும்மனத்தின்கருத்தை *
சொல்லாதொழியீர் சொன்னபோதினால்வாரீர் *
எல்லே! இதுவென்? இதுவென்? இதுவென்னோ? (எ)

† 'உறுக்கி' என்றும் பாடம்.

புக்காடரவம் பிடித்தாட்டும்புனிதீர்! *
இக்காலங்கள் யாமுமக்குஏதொன்றுமலலோம் *
தக்கார்பலர் தேவிமாராலவுடையீர் *
எக்கே! இதுவென்? இதுவென்? இதுவென்னோ? (அ)

ஆடியசைந்து ஆய்மடவாரொடுநீபோய் *
கூடிக்குரவைபிணை கோமளப்பிள்ளாய்! *
தேடித்திருமாமகள் மண்மகள்நிற்ப *
ஏடி! இதுவென்? இதுவென்? இதுவென்னோ? (கூ)

❀ அல்லிக்கமலக்கண்ணனை அங்குஓராய்ச்சி *
எல்லிப்பொழுதூடிய ஊடல்திறத்தை *
கல்லின்மலிதோள் கலியன்சொன்னமாலை
சொல்லித்துதிப்பாரவர் துக்கமிலரே (க௦)

அடிவரவு:—காதில் துவர் கருளககொடி நாமம் சுற்றும் ஆனயர் மல்லே புக்கு ஆடி அல்லி புள்ளுரு.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## கூ - ஆந் திருமொழி—புள்ளுருவாகி.



(கிருஷ்ணவதாரத்தில் ஈடுபாடு - கூ.) (பழமொழி)

[தலைவியினாற்றமைக்குத் தாய் இரங்கித் தலைவனைவேண்டும் பாசுரம்.]

எழுசீராசிரியவிருத்தம். (செஞ்சுருட்டிராகம் - திரிபுடைதாளம்.)

❀ புள்ளுருவாகிநள்ளிருள்வந்த
பூதனைமாள * இலங்கை
ஒள்ளெரிமண்டியுண்ணப்பணித்த
ஊக்கமதனைநினைந்தோ? *
கள்ளவிழ்கோதைகாதலும்
எங்கள்காரிகைமாதர்கருத்தும் *
பிள்ளைதன்கையில்கிண்ணமேயொக்கப்
பேசுவதுஎந்தைபிரானே! (க)

மன்றில்மலிந்துகூத்துவந்தாடி
மால்விடையேழுமடர்த்து * ஆயர்
அன்றுநடுங்கஆனிரைகாத்த
ஆண்மைகொலோ? அறியேன்நான் *

நின்றபிரானே ! நீள்கடல்வண்ணா !
நீ இவள் தன்னை நின்கோயில *
முன்றிலெழுந்தமுருங்கையிலதேனும்
முன்கைவளைகவர்ந்தாயே. (உ)

ஆர்மலியாழிசங்கொடுபற்றி
ஆற்றலைஆற்றல்மிகுத்து *
கார்முகில்வண்ணா ! கஞசனை முன்னம்
கடந்தநின் கடுந்திறல்தானோ ? *
நேரிழைமாதைநித்திலத்தொத்தை
நெடுங்கடலமுதனையாளை *
ஆரெழில்வண்ணா ! அங்கையில் வட்டாம்
இவளெனக்கருதுகின்றாயே. (ந.)

மல்கியதோளுமானுரியதளும
உடையவர் தமக்கும்ஓர்பாகம் *
நல்கியநலமோ ? நரகனைத்தொலைத்த
கரதலத்தமைதியின்கருத்தோ ? *
அல்லியங்கோதையணிநிறங்கொண்டு வந்து
முன்னேநின்றுபோகாய் *
சொல்லியென ? நமபி ! இவளைநீ
உங்கள்தொண்டாக்கைக்கொண்டென்றவாறே. (ச)

செருவழியாதமன்னர்கள்மாளத்
தேர்வலங்கொண்டு அவர்செல்லும் *
அருவழிவானம்அதரிடக்கண்ட
ஆண்மைகொலோ ? அறியேன்நான் *
திருமொழிஎங்கள்தேமலர்க்கோதை
சீர்மையைநினைந்திலைஅந்தோ ! *
பெருவழிநாவற்கனியினும்எளியள
இவளெனப்பேசுகின்றாயே. (ரு)

அரக்கியராகம்புல்லெனவில்லால்
அணிமதிளிலங்கையார்கோனை *
செருக்கழித்தது அமரர்பணியமுன்னின்றசேவகமோ ?
செய்ததின்று *

புருக்கிதழ்வாய்ச்சிமுன் கைவெண்சங்கங்கொண்டு
முன்னேநின்றுபோகாய் *
ருக்கிலைக்காகளறிமழுவோச்சல்
என்செய்வது? எந்தைபிரானே! (சு)

ஆழியந்திண்தேரரசர்வந்திறைஞ்ச
அலைகடலுலகம்முன்றாண்ட *
பாழியந்தோளோராயிரம்வீழப்
படைமழுப்பற்றியவலியோ? *
மாழைமென்னோக்கிமணிநிறங்கொண்டுவந்து
முன்னே நின்றுபோகாய் *
கோழிவெண்முட்டைக்குஎன்செய்வது? எந்தாய்!
குறுந்தடிநெடுங்கடல்வண்ணா! (எ)

பொருந்தலன் ஆகம்புள்ளுவநதேற
வள்ளுகிரால்பிளந்து * அன்று
பெருந்தகைக்கிரங்கிவாலியைமுனிந்த
பெருமைகொலோ? செய்ததின்று *
பெருங்கடங்கண்ணிநரம்புறுகோதை
பெருமையை நினைந்திலை பேசில் *
கருங்கடல்வண்ணா! கவுள்கொண்டநீராம்
இவளெனக்கருதுகின்றாயே. (அ)

நீரழல்வானாய்நெடுநிலம்காலாய்
நின்றநின்நீர்மையை நினைந்தோ? *
சீர்கெழுகோதைஎன்னலதிலளென்று
அன்னதோர்தேற்றன்மைதானோ? *
பார்கெழுபவ்வத்தாரமுதனைய
பாவையைப்பாவம்செய்தேனுக்கு *
ஆரழலோம்பும்அந்தணன்தோட்டமாக
நின்மனத்துவைத்தாயே (கூ)

❀ வேட்டத்தைக்கருதாதடியிணைவணங்கி
மெய்ம்மைநின்றஎம்பெருமானை *
வாள்திறல்தானைமங்கையர்தலைவன்
மானவேல்கலியன்வாயொலிகள் *

தோட்டலர்பைந்தார்ச்சுடர்முடியானைப்
பழமொழியால்பணிந்துரைத்த *
பாட்டிவைபாடப்பத்திமைபெருகிச்
சித்தமும்திருவொடுமிகுமே. (கO)

அடிவரவு:—புள் மன்றில் ஆர் மல்கிய செரு அரக்கியர் ஆழி பொருந்தலன் தீர் வேட்டத்தை திருத்தாய்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## கO - ஆந் திருமொழி - திருத்தாய்.



[தலைமகனைப்பிரிந்த தலைமகள் ஆற்றாது கூறிய பாசுரம்.]

(வெண்டுறை.) (பாசுராகம் - ஆதிதாளம்.)

❀ திருத்தாய் செம்போத்தே! *
திருமாமகள்தன் கணவன் *
மருத்தார்தொல்புகழ் மாதவனை
திருத்தாய்செம்போத்தே! [வர *

கரையாய் காக்கைப்பிள்ளாய்! *
கருமாமுகில்போல் நிறத்தன் *
உரையார்தொல்புகழுத்தமனைவர
கரையாய் காக்கைப்பிள்ளாய்! [*

கூவாய்பூங்குயிலே! *
குளிர்மாரி தடுத்துகந்த * [வர *
மாவாய்கீண்ட மணிவண்ணனை
கூவாய் பூங்குயிலே! (௩)

கொட்டாய் பல்லிக்குட்டி! *
குடமாடி உலகளந்த *
மட்டார்பூங்குழல்மாதவனைவர *
கொட்டாய் பல்லிக்குட்டி! (௪)

❀ சொல்லாய் பைங்கிளியே! *
சுடராழி வலனுயர்த்த * [வர *
மல்லார்தோள் வடவேங்கடவனை
சொல்லாய் பைங்கிளியே! (௫)

கோழி கூவென்னுமால் *
தோழி! நான்என்செய்கேன்? *
ஆழிவண்ணர் வரும்பொழுதாயி
கோழி கூவென்னுமால். [ற்று *

காமற்கு என்கடவேன்? *
கருமாமுகில்வண்ணற்கல்லால் *
பூமேலைங்கணை கோத்துப்புகுந்
காமற்கு என்கடவேன்? [தெய்ய *

இங்கே போதுங்கொலோ? *
இனவேல் நெடுங்கண்களிப்ப *
கொங்கார் சோலைக்குடந்தைக்கிடந்த
இங்கே போதுங்கொலோ? [மால் *

இன்றுவென்றறியேன் *
அன்னே! ஆழியொடும் * [கனே*
பொன்னார்சார்ங்கமுடைய அடி
இன்னாரென்றறியேன். (கூ)

✿ தொண்டீர்! பாடுமினோ *
சுரும்பார்பொழில்மங்கையாகோன் *
ஒண தார்வேல்கலியனொலிமாலைகள் *
தொண்டீர்! பாடுமினோ. (கo)

அடிவரவு:—திருத்தாய் கரையாய் கூவாய் கொட்டாய் சொல்லாய் கோழி காமற்கு இங்கே இன்னா தொண்டீர் குன்றமொன்று.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## பதினோராம்பத்து.

### க - ஆந் திருமொழி—குன்றமொன்று



[பிரிவாற்றாத தலைவி இரங்கிக்கூறும் பாசுரம்.]

கலிவிருத்தம். (கானடா ராகம் - ஆதிதாளம்.)

✿ குன்றமொன்றெடுத்தேந்தி * மாமழை
அன்றுகாத்தஅம்மான * அரக்கரை
வென்றவில்லியார் வீரமேகொலோ? *
தென்றலவந்து தீவீசும்என்செய்கேன்? (க)

காருமவார்பனிக் கடலும, அன்னவன *
தாருமார்வமும் கண்டதண்டமோ? *
சோருமாமுகில் துளியினூடுவந்து *
ஈரவாடைதான் ஈருமென்னையே. (உ)

சங்கும்மாமையும் தளரும்மேனிமேல் *
திங்கள்வெங்கதிர் சீறும்எனசெய்கேன? *
பொங்குவெண்திரைப் புணரிவண்ணனார் *
கொங்கலர்ந்ததார் கூவும்என்னையே. (ங)

அங்கோராய்க்குலத்துள் வளர்ந்துசென்று *
அங்கோர் தாயுருவாகிவந்தவள் *
கொங்கைநஞ்சுண்ட சோதியின்மைகொலோ? *
திங்கள்வெங்கதிர் சீறுகின்றதே. (ச)

அங்கோராளரியாய் அவுணனை *
பங்கமா இருகூறுசெய்தவன் *
மங்குல்மாமதி வாங்கவேகொலோ? *
பொங்குமாகடல் புலம்புகின்றதே. (ரு)

சென்றுவார்சிலைவளைத்து இலங்கையை *
வென்றவில்லியார் வீரமேகொலோ ? *
முன்றில்பெண்ணைமேல் முளரிக்கூட்டகத்து *
அன்றிலின்குரல் அடருமென்னையே. (௬)

பூவைவண்ணனார் புள்ளின்மேல்வர *
மேவிநின்றுநான் கண்டதண்டமோ ? *
வீவிலங்கனை வில்லிஅம்புகோத்து *
ஆவியே இலக்காகஎய்வதே ! (௭)

மால்இனந்துழாய் வருமென்நெஞ்சகம் *
மாலின்அந்துழாய் வந்துஎன்னுள்புக *
கோலவாடையும் கொண்டுவந்தது * ஓர்
ஆலிவந்ததால் அரிதுகாவலே (௮)

கெண்டையொண்கணும் துயிலும் * என்நிறம்
பண்டுபண்டுபோலொக்கும் * மிகசீர்த
தொண்டரிட்ட பூந்துளவின்வாசமே *
வண்டுகொண்டுவந்து ஊதுமாகிலே. (௯)

அன்றுபாரதத்து ஐவர்தூதனாய் *
சென்றமாயனைச் செங்கண்மாலினை *
மன்றிலார்புகழ் மங்கைவாட்கலி
கன்றி * சொல்வல்லார்க்கு அல்லலில்லையே. (௧0)

அடிவரவு:—குன்றம் காரும் சங்கு ஆங்கோரராய் அங்கோராளரி சென்று பூவை மால கெண்டை அன்று குன்றமெடுத்து.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## உ - ஆந் திருமொழி—குன்றமெடுத்து.



[தலைவி பிரிவாற்றது வருந்திக்கூறும் பாசுரம்.]

(கலிநிலைத்துறை. கௌளிபந்துராகம் - ஆதிதாளம்.)

குன்றமெடுத்துமழைதடுத்து இளையாரொடும *
மன்றில்குரவைபிணைந்தமால் என்னைமால்செய்தான் *
முன்றில்தனிநின்றபெண்ணைமேல் கிடந்தீர்கின்ற *
அன்றிலின்கூட்டைப் பிரிக்ககிற்பவர் ஆர்கொலோ ? (௧)

பூங்குருந்தொசித்து ஆனைகாய்ந்து அரிமாச்செகுத்து *
ஆங்குவேழத்தின் கொம்புகொண்டு * வன்பேய்முலை
வாங்கியுண்ட அவ்வாயனநிற்க இவ்வாயன்வாய் *
ஏங்குவேய்ங்குழல் என்னோடாடும்இளமையே. (உ)

பல்லொடுகஞ்சனும் துஞ்சவென்றமணிவண்ணன் *
அல்லிமலர்த்தண் துழாய் நினைந்திருநதேனையே *
எல்லியில்மாருதம் வநதடும, அதுவன்றியும் *
கொல்லைவல்லேற்றின்மணியும் கோயின்மைசெய்யுமே. (௩)

பொருந்துமாமரம ஏழும்எய்தபுனிதனார் *
திருநதுசேவடி என்மனத்துநினைதொறும் *
கருந்தண்மாகடல கங்குலார்க்கும், அதுவன்றியும் *
வருந்தவாடைவரும் இதற்குஇனிஎன்செய்கேன ? (௪)

அன்னைமுனிவதும் அன்றிலினகுரலீரவதும் *
மன்னுமறிகடலார்ப்பதும் வளைசோர்வதும *
பொன்னங்கலையல்குல் அன்னமென்னடைபபூங்குழல் *
பின்னைமணாளர் திறத்தமாயினபின்னையே (ரு)

ஆழியும்சங்குமுடைய நங்களடிகள்தாம் *
பாழிமையானகனவில் நம்மைப்பகர்விதரா *
தோழியும்நானும் ஒழிய வையம்துயின்றது *
கோழியும்கூகின்றதில்லைக கூரிருளாயிற்றே! (௬)

காமன்தனக்குமுறையல்லேன் கடல்வண்ணனார் *
மாமணவாளர் எனக்குததானும்மகனசொலலில் *
யாமங்கள்தோறுஎரிவீசும் என்னிளங்கொஙகைகள் *
மாமணிவண்ணர் திறத்தவாய்வளர்கின்றவே. (௭)

மஞ்சுறுமாலிருஞ்சோலை நின்றமணாளனார் *
நெஞ்சம்நிறைகொண்டுபோயினார் நினைகின்றிலர் *
வெஞ்சுடர்போய்விடியாமல எவ்விடம்புக்கதோ! *
நஞ்சுஉடலம்துயின்றால் நமக்குஇனிநல்லதே. (அ)

காமன்கணைக்குஓரிலக்கமாய் நலத்தின்மிகு *
பூமருகோல நம்பெண்மைசிந்தித்திராதுபோய் *
தூமலர்நீர்கொடு தோழி! நாம்தொழுதேத்தினால் *
கார்முகில்வண்ணரைக் கண்களால்காணலாங்கொலோ ? (௯)

வென்றிவிடையுடன் ஏழடர்த்த அடிகளை *
மன்றில்மலிபுகழ் மங்கைமன் கலிகன்றிசொல் *
ஒன்றுநின்றஒன்பதும் உரைப்பவர்தங்கள்மேல் *
என்றும்நில்லாவினை ஒன்றும்சொல்லில்உலகிலே. (௰)

அடிவரவு:—குன்றம் பூ மல்லொடு பொருந்து அன்னை ஆழி காமன் தனக்கு மஞ்சுறு காமன் கணைக்கு வென்றி மன்னிலங்கு.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## ௩ - ஆந் திருமொழி— † மன்னிலங்கு



[தலைவி இரங்கிக்கூறிய பாசுரம், அறத்தொடுநிற்றல்]

தரவுகொச்சகக்கலிப்பா. (ஸ்ரீராகம் - ரூபகதாளம்.)

மன்னிலங்குபாரதத்துத் தேரூர்ந்து * மாவலியைப்
பொன்னிலங்குதிண்விலங்கில்வைத்து, பொருகடல்சூழ் *
தென்னிலங்கையீடழித்த தேவர்க்குஇதுகாணீர் *
என்னிலங்குசங்கோடு எழில்தோற்றிருந்தேனே. (௧)

இருந்தான்என்னுள்ளத்து இறைவன் * கறைசேர்
பருந்தாட்களிற்றுக்கு அருள்செய்த * செங்கண்
பெருந்தோளநெடுமாலைப் பேர்பாடியாட *
வருந்தாதுஎன்கொங்கை ஒளிமன்னும் அன்னே! (௨)

அன்னே! இவரை அறிவன் * மறைநான்கும்
முன்னேயுரைத்த முனிவர்இவர்வந்து *
பொன்னேய்வளைகவர்ந்துபோகார் மனம்புகுந்து *
என்னே? இவரெண்ணும்எண்ணம் அறியோமே (௩)

அறியோமேயென்று உரைக்கலாமே? எமக்கு *
வெறியார்பொழில்சூழ் வியன்குடந்தைமேவி *
சிறியான்ஓர்பிள்ளையாய் மெள்ளநடந்திட்டு *
உறியார்நறுவெண்ணெய் உண்டுகந்தார்தம்மையே. (௪)

தம்மையேநாளும் வணங்கித்தொழுவார்க்கு *
தம்மையேயொக்க அருள்செய்வராதலால் *
தம்மையேநாளும் வணங்கித்தொழுதிறைஞ்சி *
தம்மையேபற்றா மனத்துஎன்றும்வைத்தோமே. (௫)

† இத்திருமொழி அந்தாதித்தொடைகொண்டு வந்தது.

வைத்தார் அடியார் மனத்தினில்வைத்து * இன்பம்
உற்றார் ஒளிவிசும்பில் ஓரடிவைத்து * ஓரடிக்கும்
எய்த்தாது மண்ணென்று இமையோர் † தொழுதிறைஞ்சி *
கைத்தாமரை குவிக்கும் கண்ணன் என் கண்ணனையே. (சா)

கண்ணன் மனத்துள்ளே நிற்கவும் * கைவளைகள்
என்னோகழன்ற? இவைஎன்னமாயங்கள்? *
பெண்ணானோம் பெண்மையோம்நிற்க * அவன்மேய
அண்ணல்மலையும் அரங்கமும்பாடோமே. (எ)

பாடோமே? எந்தைபெருமானை * பாடிநின்று
ஆடோமே? ஆயிரம்பேரானை * பேர்நினைந்து
சூடோமே? சூடுந்துழாயலங்கல்சூடி * நாம்
கூடோமே? கூடக்குறிப்பாகில் நன்னெஞ்சே! (அ)

நன்னெஞ்சே! நம்பெருமான் நாளுமினிதமரும் *
அன்னம்சேர்கானல் அணியாலிகைதொழுது *
முன்னம்சேர் வல்வினைகள்போக முகில்வண்ணன் *
பொன்னஞ்சேர்சேவடிமேல் போதணியப்பெற்றோமே. (கூ)

பெற்றார் ஆயிரம்பேரானை * பேர்பாடப்
பெற்றான் கலியனொலிசெய்தமிழ்மாலை *
கற்றீர்காள்! முற்றுலகாள்வர் இவைகேட்க
லுற்றார்க்கு * உறுதுயரில்லை உலகத்தே (கo)

அடிவரவு—மன்னிலங்கு இருந்தான் அன்னே அறியோம் தம்மை வைத்தார் கண்ணன் பாடோமே நன்னெஞ்சே பெற்றார் நிலை.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## ச - ஆந் திருமொழி—நிலையிடம்.



[அவதாரங்களின் மகிமை]

எண்சீராசிரியவிருத்தம் (அடாணாராகம் - திரிபுடைதாளம்.)

நிலையிடமெங்குமின்றி, நெடுவெள்ளம்உம்பர்
வளநாடுமூட, இமையோர் *
தலையிடமற்றெமக்கோர்சரணில்லையென்ன
அரணாவனென்னும்அருளால் *

† 'தொழுதேத்தி' என்றும் பாடம்.

அலைகடல்நீர்குழம்ப அகடாடவோடி
அகல்வானுரிஞ்ச * முதுகில்
மலைகளை மீதுகொண்டுவருமீனை மாலை
மறவாது இறைஞ்சு என்மனனே ! (க)

செருமிகுவாளெயிற்ற அரவொன்றுசுற்றித்
திசைமண்ணும்விண்ணும்உடனே *
வெருவரவெள்ளைவெள்ளம்முழுதும்குழம்ப
இமையோர்கள்நின்றுகடைய *
பருவரையொன்றுநின்றுமுதுகில்பரந்து
சுழலக்கிடந்துதுயிலும் *
அருவரையன்னதன்மையடலாமையான
திருமால்நமக்குஓரரணே. (உ)

தீதறுதிங்கள்பொங்குசுடரும்பரும்பர்
உலகேழினோடும்உடனே *
மாதிரமண்சுமந்தவடகுன்றும் நின்ற
மலையாறும்ஏழுகடலும் *
பாதமர்சூழ்குளம்பினகமண்டலத்தின்
ஒருபாலொடுங்க, வளர்சேர் *
ஆதிமுன் ஏனமாகி அரணாயமூர்த்தி
யது நமமையாளுமரசே (௩)

தளையவிழ்கோதைமாலைஇருபால்தயங்க
எரிகான்றிரண்டுதறுகண் *
அளவெழவெம்மைமிக்க அரியாகி
அன்றுபரியோன்சினங்களவிழ *
வளையுகிராளிமொய்ம்பின்மறவோனதாகம்
மதியாதுசென்றுஒருகிரால் *
பிளவெழவிட்டகுட்டமது, வையமூடு
பெருநீரின்மும்மைபெரிதே. (ச)

வெஃதிறல்வாணன்வேள்வியிடமெய்தி
அங்குஓர் குறளாகிமெய்ம்மையுணர *
செங்தொழில்வேதநாவின்முனியாகி
வையம்அடிமூன்றிரந்துபெறினும் *

மந்தரமீதுபோகிமதிநின்றிறைஞ்ச
மலரோன்வணங்க, வளர்சேர் *
அந்தரமேழினூடுசெலவுய்த்தபாத
மது நம்மையாளுமரசே. (௫)

இருநிலமன்னர்தம்மைஇருநாலுமெட்டும்
ஒருநாலுமொன்றும்உடனே *
செருநுதலூடுபோகிஅவராவிமங்க
மழுவாளில்வென்றதிறலோன் *
பெருநிலமங்கைமன்னர்மலர்மங்கைநாதர்
புலமங்கைகேள்வர்புகழ்சேர *
பெருநிலமுண்டுமிழ்ந்தபெருவாயராகி
அவர்நம்மைஆள்வர்பெரிதே. (௬)

இலைமலிபள்ளியெய்திஇதுமாயமென்ன
இனமாயமான்பின், எழில்சேர் *
அலைமலிவேற்கணாளை அகல்விப்பதற்கு
ஒருருவாயமானையமையா *
கொலைமலியெய்துவித்தகொடியோனிலங்கை
பொடியாக, வென்றியமருள் *
சிலைமலிசெஞ்சரங்கள்செலவுய்த்த நங்கள்
திருமாலநமகுஓரரணே (௭)

முன்னுலகங்களேழும்இருள்மண்டியுண்ண
முதலோடுவீடுமறியாது *
என்னிது? வந்ததென்ன இமையோர்திசைப்ப
எழிலவேதமின்றிமறைய *
† பின்னும்வானவர்கரும்முனிவர்க்கும்நல்கி
இருள்தீர்ந்துஇவ்வையம்மகிழ *
அன்னமதாயிருந்துஅங்கறநூலுரைத்த
அதுநம்மையாளுமரசே. (௮)

துணைநிலைமற்றெமக்கொருளதென்றிராது
தொழுமின்கள்தொண்டர்! தொலைய *
உணமுலைமுன்கொடுத்தஉரவோளதாவி
உகவுண்டுவெண்ணெய்மருவி *

---

† 'பின்னையும்' என்று பாடபேதம்.

பணைமுலையாயர்மாதர் உரலோடுகட்ட
அதனோடுமோடி, அடல்சேர் *
இணைமருதிற்றுவீழநடைகற்றதெற்றல்
வினைபற்றறுக்கும்விதியே. (கூ)

❁ கொலைகெழுசெம்முகத்தகளிறொன்றுகொன்று
கொடியோனிலங்கைபொடியா *
சிலைகெழுசெஞ்சரங்களசெலவுய்த்த நங்கள்
திருமாலை, வேலைபுடைசூழ் *
கலிகெழுமாடவீதிவயல்மங்கைமன்னு
கலிகன்றிசொன்னபனுவல் *
ஒலிகெழுபாடலபாடியுழல்கின்றதொண்டரவர்
ஆள்வர்உம்பருலகே. (க0)

அடிவரவு:—நிலை செரு மிகு தீதறு தளை வெந்திறல் இருநிலம் இலைமலி முன் துணை கொலை மான்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## ரு - ஆந் திருமொழி—மானமரும்.



[இரண்டுதோழியர் எம்பெருமானது ஸௌலப்யத்தையும் பரத்வத்தையும் எதிரேதிராகக் கூறுதல்.]

தரவுகோச்சகக்கலிப்பா. (கண்டாராகம் - ஆதிதாளம்.)

❁ மானமருமென்னோக்கி வைதேவியின் துணையா *
கானமருமகல்லதர்போயகாடுறைந்தான்காணேடீ ! *
கானமரும்கல்லதர்போய்க காடுறைந்தபொன்னடிககள் *
வானவர்தம சென்னிமலர்கண்டாய்சாழலே ! (க)

நந்தைதன்னைசழலத தோன்றிபபோய் * ஆய்ப்பாடி
நந்தன்குலமதலையாய் வளர்ந்தான்காணேடீ ! *
நந்தன்குலமதலையாய்வளர்ந்தான் நான்முகற்குத
தந்தைகாண் * எந்தைபெருமான்காண் சாழலே ! (உ)

ஆழ்கடல்சூழ்வையகத்தார் ஏசப்போய் * ஆய்ப்பாடித்
தாழ்குழலார்வைத்த தயிருண்டான்காணேடீ ! *
தாழ்குழலார்வைத்த தயிருண்டபொன்வயிறு * இவ்
வேழுலகுமுண்டும் இடமுடைத்தால்சாழலே ! (ங)

அறியாதார்க்கு ஆனாயனாகிப்போய் * ஆய்ப்பாடி
உறியார்நறுவெண்ணெய் உண்டுகந்தான்காணேடீ! *
உறியார்நறுவெண்ணெய் உண்டுகந்தபொன்வயிற்றுக்கு *
எறிநீருலகனைத்தும் எய்தாதால்சாழலே! (ச)

வண்ணக்கருங்குழல் ஆய்ச்சியால்மொத்துண்டு *
கண்ணிக்குறுங்கயிற்றால் கட்டுண்டான்காணேடீ! *
கண்ணிக்குறுங்கயிற்றால் கட்டுண்டானாகிலும் *
எண்ணற்கரியன் இமையோர்க்கும்சாழலே! (ரு)

கன்றப்பறைகறங்கக் கண்டவர்தம்கண்களிப்ப *
மன்றில்மரக்கால்கூத்தாடினான்காணேடீ! *
மன்றில்மரக்கால்கூத்தாடினானாகிலும் *
என்றும் அரியன் இமையோர்க்கும்சாழலே! (சு)

கோதைவேல்ஐவர்க்காய் மண்ணகலம்கூறிடுவான் *
தூதனாய், மன்னவனால் சொல்லுண்டான்காணேடீ! *
தூதனாய், மன்னவனால் சொல்லுண்டானாகிலும் *
ஓதநீர்வையகம் முன்னுண்டுஉமிழ்ந்தான்சாழலே! * (எ)

பார்மன்னர்மங்கப் படைதொட்டுவெஞ்சமத்து *
தேர்மன்னர்க்காய் அன்றுதேரூர்ந்தான்காணேடீ! *
தேர்மன்னர்க்காய் அன்றுதேரூர்ந்தானாகிலும் *
தார்மன்னர்தங்கள் தலைமேலான்சாழலே! (அ)

கண்டார்இரங்கக் கழியக்குறளுருவாய் *
வண்தாரான்வேள்வியில் மண்ணிரந்தான்காணேடீ! *
வண்தாரான்வேள்வியில் மண்ணிரந்தானாகிலும் *
விண்டேழுலகுக்கும் மிக்கான்காண்சாழலே! (கூ)

❀ கள்ளத்தால்மாவலியை மூவடிமண்கொண்டளந்தான் *
வெள்ளத்தான்வேங்கடத்தான் என்பரால்காணேடீ! *
வெள்ளத்தான் வேங்கடத்தானேலும் * கலிகன்றி
உள்ளத்தினுள்ளே உளன்கண்டாய்சாழலே! (க0)

அடிவரவு:—மானமரும் தந்தை ஆழ்கடல் அறியாதார்க்கு வண்ணம் கன்ற கோதை பார்மன்னர் கண்டார் கள்ளத்தால் மைந்நின்ற.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

## சு - ஆந் திருமொழி—மைந்நின்ற.



[ப்ரளயாபத்தில் பாதுகாத்த எம்பெருமானையே ஆஸ்ரயிக்கும்படி உலகத்தார்க்கு உபதேசித்தல் ]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (நீலாம்புரிராகம் - அடதாளம்.)

மைந்நின்றகருங்கடல்வாயுலகின்றி
வானவரும்யாமுமெல்லாம் *
நெய்ந்நின்றசக்கரத்தன் திருவயிற்றில்
நெடுங்காலங்கிடந்ததுஓரீர் *
எந்நன்றிசெய்தாரா
ஏதிலோர்தெய்வத்தையேத்துகின்றீர் ? *
செய்ந்நன்றிகுன்றேன்மின்
தொண்டர்காள் ! அண்டனையேஏத்தீர்களே. (க)

நில்லாதபெருவெள்ளம்
நெடுவிசும்பின்மீதோடிநிமிர்ந்தகாலம் *
மல்லாண்டதடக்கையால
பகிரண்டமகப்படுத்தகாலத்து * அன்று
எல்லாரும்அறியாரோ ?
எம்பெருமானுண்டுமிழ்ந்தஎச்சில்தேவர் *
அல்லாதார்தாமுளரே ?
அவனருளேஉலகாவது அறியீர்களே ? (௨)

நெற்றிமேலகண்ணானும் நிறைமொழிவாய்நான்முகனும
நீண்டநால்வாய் *
ஒற்றைக்கைவெண்பகட்டினொருவனையும்
உள்ளிட்டஅமரரோடும *
வெற்றிப்போர்க்கடலரையனவிழுங்காமல
தான்விழுங்கிஉய்யக்கொண்ட *
கொற்றப்போராழியான் குணம்பரவாசசிறுதொண்டர்
கொடியவாறே ! (௩)

பனிப்பரவைத்திரைததும்ப
பாரெல்லாம்நெடுங்கடலேயானகாலம் *
இனிக்களைகணிவர்க்கில்லையென்று
உலகமேழினையும்ஊழில்வாங்கி *

முனித்தலைவனை, முழங்கொளிசேர் திருவயிற்றில்வைத்து
உம்மையுய்யக்கொண்ட *
கனிக்களவத்திருவுருவத்தொருவனையே
கழல்தொழுமா கல்லீர்களே. (௪)

பாராரும்காணாமே
பரவைமாநெடுங்கடலேயானகாலம் *
ஆரானும் அவனுடையதிருவயிற்றில
நெடுங்காலம்கிடந்தது * உள்ளத்
தோராதவுணர்விலீர் ! உணருதிரேல்,
உலகளந்தஉம்பாகோமான *
பேராளன்பேரான
பேர்களாயிரங்களுமேபேசீர்களே. (௫)

பேயிருக்கும்நெடுவெள்ளம்
பெருவிசும்பின்மீதோடிப்பெருகுகாலம் *
தாயிருக்கும்வண்ணமே
உம்மைத்தன்வயிற்றிருத்திஉய்யக்கொண்டான் *
போயிருக்க, மற்றிங்கோர்புதுத்தெய்வம்
கொண்டாடும்தொண்டீர் ! * பெற்ற
தாயிருக்கமணைவெந்நீராட்டுதிரோ?
மாட்டாததகவற்றீரே. (௬)

மண்ணாடும்விண்ணாடும்
வானவரும்தானவருமற்றுமெல்லாம் *
உண்ணாதபெருவெள்ளம்
உண்ணாமல்தான்விழுங்கிஉய்யக்கொண்ட *
கண்ணாளன்கண்ணமங்கைநகராளன்
கழல்சூடி * அவனைஉள்ளத்து
எண்ணாதமானிடத்தை
எண்ணாதபோதெல்லாம்இனியவாறே. (௭)

மறம்கிளர்ந்துகருங்கடல்நீர்
உரந்துரந்துபரந்தேறி அண்டத்தப்பால் *
புறம்கிளர்ந்தகாலத்துப்
பொன்னுலகமேழினையும்ஊழில்வாங்கி *

அறம்கிளர்ந்ததிருவயிற்றின்
அகம்படியில்வைத்துஉம்மைஉய்யக்கொண்ட *
நிறம்கிளர்ந்தகருஞ்சோதிநெடுந்தகையை
நினையாதார்நீசர்தாமே. (அ)

அண்டத்தினமுகடழுந்த
அலைமுந்நீர்த்திரைததும்ப ஆ! ஆ! வென்று *
தொண்டர்க்கும்அமரர்க்கும்
முனிவர்க்குமதானருளி * உலகமேழும
உண்டொத்ததிருவயிற்றின
அகம்படியில்வைத்துஉம்மைஉய்யக்கொண்ட *
கொண்டற்கைமணிவண்ணன
தண்குடநதைநகர்பாடியாடீர்களே (கூ)

தேவரையும்அசுரரையும்
திசைகளையும்கடல்களையும்மற்றும்முற்றும் *
யாவரையும்ஒழியாமே
எம்பெருமானுண்டுமிழ்ந்ததறிந்துசொன்ன *
காவளரும்பொழில்மங்கைக
கலிகன்றியொலிமாலைகற்றுவல்லார் *
பூவளரும்திருமகளாலருள்பெற்றுப்
பொன்னுலகிற்பொலிவர்தாமே. (கo)

அடிவரவு —மை நில்லாத நெற்றி பணி பாராரும் பேய் மண் மறம் அண்டத்தின் தேவரை நீள்நாகம்

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



## எ—ஆந் திருமொழி—நீள் நாகம்.



['எம்பெருமான்திறத்தில் உதவாத அவயவங்கள் பயனற்றன' என்றல்.]
தரவுகொச்சகக்கலிப்பா (வராளி ராகம் - ரூபகதாளம்.)

நீள்நாகம்சுற்றி நெடுவரைநட்டு * ஆழ்கடலைப்
பேணான்கடைந்து அமுதம்கொண்டுஉகந்தபெம்மானை *
பூணாரமார்வனைப் புள்ளூரும்பொன்மலையை
காணாதார்கண் என்றும் கண்ணல்லகண்டாமே. (க)

நீள்வான்குறளுருவாய் நின்றிரந்துமாவலிமண் *
தாளால்அளவிட்ட தக்கணைக்குமிக்கானை *
தோளாதமாமணியைத் தொண்டர்க்கினியானை *
கேளாதசெவிகள் செவியல்லகேட்டாமே. (உ)

தூயானைத் தூயமறையானை * தென்னாலி
மேயானை மேவாளுயிருண்டுஅமுதுண்ட
வாயானை * மாலைவணங்கி அவன்பெருமை
பேசாதார் * பேச்சுஎன்றும் பேச்சல்லகேட்டாமே. (ங)

கூடாஇரணியனைக் கூருகிரால்மார்விடந்த *
ஓடாஅடலரியை உம்பரார்கோமானை *
தோடார்நறுந்துழாய் மார்வனை, ஆர்வத்தால் *
பாடாதார்பாட்டுஎன்றும் பாட்டல்லகேட்டாமே. (ச)

மையார்கடலும் மணிவரையும்மாமுகிலும் *
கொய்யார்குவளையும் காயாவும்போன்றுஇருண்ட
மெய்யானை * மெய்யமலையானைச் சங்கேந்தும்
கையானை * கைதொழாக் கையல்லகண்டாமே (ரு)

கள்ளார்துழாயும் கணவலரும்கூவிளையும் *
முள்ளார்முளரியும் ஆம்பலுமுன்கண்டக்கால் *
புள்ளாய்ஓரேனமாய்ப் புக்கிடந்தான்பொன்னடிக்கென்று *
உள்ளாதாருள்ளத்தை உள்ளமாகக்கொள்ளோமே (சு)

கனையார்கடலும் கருவிளையும்காயாவும்
அனையானை * அன்பினால் ஆர்வத்தால் * என்றும்
சுனையார்மலரிட்டுத் தொண்டராய்நின்று
நினையாதார் * நெஞ்சுஎன்றும் நெஞ்சல்லகண்டாமே. (எ)

வெறியார்கருங்கூந்தல் ஆய்ச்சியர்வைத்த *
உறியார்நறுவெண்ணெய் தானுகந்துஉண்ட
சிறியானை * செங்கணெடியானைச் சிந்தித்து
அறியாதார் * என்றும் அறியாதார்கண்டாமே. (அ)

ஸ்ரீ தேனொடுவண்டாலும் திருமாலிருஞ்சோலை *
தானிடமாக்கொண்டான் தடமலர்க்கண்ணிக்காய் *
ஆனிடையேழன்றடர்த்தாற்கு ஆளானாரல்லாதார் *
மானிடவரல்லரென்று என்மனத்தேவைத்தேனே. (கூ)

❀ மெய்ந்நின்ற பாவம்அகல * திருமாலைக்
கைந்நின்றஆழியான் சூழும்கழல்சூடி *
கைந்நின்றவேற்கைக் கலியனொலிமாலை *
ஐயொன்றுமைந்தும் இவைபாடியாடுமினே. (௧0)

அடிவரவு.—நீள்நாகம் நீள்வான் தாயான் கூடா மையார் கள்ளார் கனை வெறி தேனொடு மெய் மாற்றம்

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

## அ - ஆந் திருமொழி—மாற்றமுள

['தேஹஸம்பந்தத்தை அறுத்துத் தந்தருளவேண்டும்' என்று ஆழ்வார் எம்பெருமானைப் பிரார்த்தித்தல்.]

கலிவிருத்தம். (மாஞ்சிராகம் - அடதாளம்.)

❀ மாற்றமுள ஆகிலும்சொல்லுவன் * மக்கள்
தோற்றக்குழி தோற்றுவிப்பாய்கொல? என்றுஇன்னம் *
ஆற்றங்கரைவாழ்மரம்போல அஞ்சுகின்றேன *
நாற்றச்சுவை ஊறுஒலியாகியநம்பீ ! (௧)

சீற்றமுள ஆகிலும்செப்புவன் * மக்கள்
தோற்றக்குழி தோற்றுவிப்பாய்கொலென்றஞ்சி *
காற்றத்திடைப்பட்ட கலவர்மனம்போல் *
ஆற்றத்துளங்காநிற்பன் ஆழிவலவா ! (௨)

தூங்கார்பிறவிக்கள் இன்னம்புகப்பெய்து *
வாங்காயென்றுசிந்தித்து நான்அதற்குஅஞ்சி *
பாம்போடுஒருகூரையிலே பயின்றாற்போல் *
தாங்காதுஉள்ளம்தள்ளும் என்தாமரைக்கண்ணா ! (௩)

உருவார்பிறவிகள் இன்னம்புகப்பெய்து *
திரிவாயென்றுசிந்தித்தி என்றதற்கஞ்சி *
இருபாடெரிகொள்ளியினுள் எறும்பேபோல் *
உருகாநிற்கும் என்னுள்ளம்ஊழிமுதல்வா ! (௪)

கொள்ளக்குறையாத இடும்பைக்குழியில் *
தள்ளிப்புகப்பெய்திகொல் ? என்றுஅதற்குஅஞ்சி *
வெள்ளத்திடைப்பட்ட நரியினம்போலே *
உள்ளம்துளங்காநிற்பன் ஊழிமுதல்வா ! (௫)

படைநின்ற பைந்தாமரையோடு * அணிநீலம்
மடைநின்று அலரும் வயலாலிமணாளா! *
இடையன் எறிந்தமரமே ஒத்திராமே *
உடைய அருளாய் எனக்குஉன்தனருளே. (௬)

வேம்பின்புழு வேம்பன்றியுண்ணாது * அடியேன்
நான்பின்னும் உன்சேவடியன்றிநயவேன் *
தேம்பலிளந்திங்கள் சிறைவிடுத்து * ஐவாய்ப்
பாம்பினணைப் பள்ளிகொண்டாய்பரஞ்சோதீ! (௭)

அணியார்பொழில்சூழ் அரங்கநகரப்பா! *
துணியேன் இனி நின்னருளல்லதுஎனக்கு *
மணியே! மணிமாணிக்கமே! மதுசூதா! *
பணியாய்எனக்குஉய்யும்வகை பரஞ்சோதீ! (அ)

நந்தாநரகத்து அழுந்தாவகை * நாளும்
எந்தாய்! தொண்டரானவர்க்கு இன்னருள்செய்வாய்! *
சந்தோகா! தலைவனே! தாமரைக்கண்ணா! *
அந்தோ! அடியேற்கு அருளாய்உன்னருளே. (௯)

குன்றமெடுத்து ஆநிரைகாத்தவன்தன்னை *
† மன்றில்புகழ் மங்கைமன்கலிகன்றிசொல் *
ஒன்றுநின்றஒன்பதும் வல்லவர்தம்மேல் *
என்றும்வினையாயின சாரகில்லாவே (௧௦)

அடிவரவு—மாற்றம் சீற்றம் தூமகார் உருவார் கொள்ள படை வேம்பின் அணியார் நந்தா குன்றம் நிதியினை.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

பெரியதிருமொழி ஸம்பூர்ணம்.



† 'மன்றில்மலிபுகழ்' என்றும் பாடம் வழங்குகின்றது.

திருமங்கையாழ்வார் அருளிச்செய்த

# திருக்குறுந்தாண்டகம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம். (தோடிராகம்-ரூபகதாளம்.)

நிதியினைப்பவளத்தூணை நெறிமையால்நினையவல்லார் *
கதியினைக்கஞ்சன்மாளக் கண்டுமுன் அண்டமாளும் *
மதியினைமாலைவாழ்த்தி வணங்கிஎன்மனத்துவந்த *
விதியினைக்கண்டுகொண்ட தொண்டனேன்விடுகிலேனே. (க)

காற்றினைப்புனலைத்தீயைக் கடிமதிளிலங்கைசெற்ற
ஏற்றினை * இமயம்மேய எழில்மணித்திரளை * இன்ப
வாற்றினை அமுதந்தன்னை அவுணனாருயிரையுண்ட
கூற்றினை * குணங்கொண்டு உள்ளம்! கூறுநீகூறுமாறே. (உ)

பாயிரும்பரவைதன்னுள் பருவரைதிரித்து * வானோர்க்
காயிருந்து அமுதம்கொண்ட அப்பனைஎம்பிரானை *
வேயிருஞ்சோலைசூழ்ந்து விரிகதிரிரியநின்ற *
மாயிருஞ்சோலைமேய மைந்தனைவணங்கினேனே. (ங)

கேட்கயானுற்றதுண்டு கேழலாய்உலகைகொண்ட *
பூக்கெழுவண்ணனாரைப் போதரக்கனவில்கண்டு *
வாக்கினால்கருமந்தன்னால் மனத்தினால்சிரத்தைதன்னால் *
வேட்கைமீதூரவாங்கி விழுங்கினேற்குஇனியவாறே. (ச)

இரும்பனன்றுண்டநீர்போல் எம்பெருமானுக்கு * என்தன்
அரும்பெறலன்புபுக்கிட்டு அடிமைபூண்டுய்ந்துபோனேன் *
வரும்புயல்வண்ணனாரை மருவிஎன்மனத்துவைத்து *
கரும்பினின்சாறுபோலப் பருகினேற்குஇனியவாறே. (ரு)

மூவரில்முதல்வனாய ஒருவனை, உலகம்கொண்ட *
கோவினைக்குடந்தைமேய குருமணித்திரளை * இன்பப்
பாவினைப்பச்சைத்தேனைப் பைம்பொன்னைஅமரர்சென்னிப்
பூவினை * புகழும்தொண்டர் என்சொல்லிப்புகழ்வர்தாமே? (சா)

இம்மையைமறுமைதன்னை எமக்குவீடாகின்ற *
மெய்ம்மையைவிரிந்தசோலை வியன்திருவரங்கம்மேய *
செம்மையைக்கருமைதன்னைத் திருமலையொருமையானை *
தன்மையைநினைவார் என்தன் தலைமிசைமன்னுவாரே. (௭)

வானிடைப்புயலைமாலை வரையிடைப்பிரசமீன்ற *
தேனிடைக்கரும்பின்சாற்றைத் திருவினைமருவிவாழார் *
மானிடப்பிறவிஅந்தோ! மதிக்கிலர்கொள்க * தந்தம்
ஊனிடைக்குரம்பைவாழ்க்கைக்கு உறுதியேவேண்டினாரே. (௮)

உள்ளமோ † ஒன்றில்நில்லாது ஓசையிலெரிநின்றுண்ணும் *
கொள்ளிமேலெறும்புபோலக் குழையுமால்என்தனுள்ளம் *
தெள்ளியீர்! தேவர்க்கெல்லாம் தேவராய்உலகம்கொண்ட *
ஒள்ளியீர்! உம்மையல்லால் எழுமையும்துணையிலோமே. (௯)

சித்தமும்செவ்வைநில்லாது என்செய்கேன்தீவினையேன்? *
பத்திமைக்கன்புடையேனாவதே? பணியாய்எந்தாய்! *
முத்தொளிமரகதமே! முழங்கொளிமுகில்வண்ணா! * என்
அத்த! நின்னடிமையல்லால் யாதுமொன்றறிகிலேனே. (௧0)

தொண்டெல்லாம்பரவிநின்னைத் தொழுது அடிபணியுமாறு
கண்டு * தான்கவலைதீர்ப்பான் ஆவதே? பணியாய்எந்தாய்! *
அண்டமாய்எண்திசைக்கும் ஆதியாய்! நீதியான *
பண்டமாம்பரமசோதி! நின்னையேபரவுவேனே. (௧௧)

ஆவியைஅரங்கமாலை அழுக்குடம்பெச்சில்வாயால் *
தூய்மையில்தொண்டனேன்நான் சொல்லினேன்தொல்லைநாமம் *
பாவியேன்பிழைத்தவாறென்று அஞ்சினேற்குஅஞ்சலென்று *
காவிபோல்வண்ணர்வந்து என்கண்ணுளேதோன்றினாரே. (௧௨)

இரும்பனன்றுண்டநீரும் போதரும்கொள்க * என்தன்
அரும்பிணிபாவமெல்லாம் அகன்றனஎன்னைவிட்டு *
சுரும்பமர்சோலைசூழ்ந்த அரங்கமாகோயில்கொண்ட *
கரும்பினைக்கண்டுகொண்டு என்கண்ணிணைகளிக்குமாறே! (௧௩)

காவியைவென்றகண்ணார் கலவியேகருதி * நாளும்
பாவியேனாகஎண்ணி அதனுள்ளேபழுத்தொழிந்தேன் *
தூவிசேரன்னம்மன்னும் சூழ்புனல்குடந்தையானை *
பாவியேன்பாவியாது பாவியேனாயினேனே. (௧௪)

† 'ஒன்றிநில்லாது' என்றும் பாடம்.

† முன்பொலா இராவணன் தன் முதுமதிளிலங்கைவேவித்து *
அன்பினால் அனுமன் வந்து ஆங்கடியிணைபணியநின்றார்க்கு *
என்பெலாம் உருகியுக்கிட்டு என்னுடைநெஞ்சமென்னும் *
அன்பினால் ஞானநீர்கொண்டு ஆட்டுவன் அடியனேனே. (கரு)

† மாயமான் மாயச்செற்று மருதிறநடந்து * வையம்
தாயமாபரவைபொங்கத் தடவரைதிரித்து * வானோர்க்கு
ஈயுமால் எம்பிரானார்க்கு என்னுடைச்சொற்களென்னும் *
தூயமாமாலைகொண்டு சூட்டுவன் தொண்டனேனே. (கசு)

பேசினார் பிறவிநீத்தார் பேருளான் பெருமைபேசி *
ஏசினார் உய்ந்துபோனார் என்பது இவ்வுலகின் வண்ணம் *
பேசினேன் ஏசமாட்டேன் பேதையேன் பிறவிநீத்தற்கு *
ஆசையோ பெரிதுகொள்க அலைகடல்வண்ணர்பாலே. (கஎ)

இளைப்பினை இயக்கம்நீக்கி இருந்து முன் இமையைக்கூட்டி *
அளப்பிலைம்புலனடக்கி அன்பு அவர்கண்ணே வைத்து *
துளக்கமில் சிந்தைசெய்து தோன்றலும் சுடர்விட்டு * ஆங்கே
விளக்கினை விதியின்காண்பார் மெய்ம்மையைக்காண்கிற்பாரே. (கஅ)

※ பிண்டியார் மண்டையேந்திப் பிறர்மனை திரிதந்துண்ணும்
‡ முண்டியான் * சாபம்தீர்த்த ஒருவனூர் * உலகமேத்தும்
கண்டியூர் அரங்கம் மெய்யம் கச்சிபேர் மல்லையென்று
மண்டினார் * உய்யலல்லால் மற்றையார்க்குஉய்யலாமே? (கசு)

※ வானவர் தங்கள்கோனும் மலர்மிசையயனும் * நாளும்
தேமலர் தூவியேத்தும் சேவடிச்செங்கண்மாலை *
மானவேல்கலியன்சொன்ன வண்தமிழ்மாலைநாலைந்தும் *
ஊனமதின்றியல்லார் ஒளிவிசும்பாள்வர்தாமே. (உ0)

அடிவரவு:—நிதியினை காற்றினை பாயிரும் கேட்க இரும்பு மூவரில் இம்மையை வானிடை உள்ளம் சித்தம் தொண்டு ஆவியை இரும்பு காவியை முன்பொலா மாயம் பேசினார் இளைப்பினை பிண்டியார் வானவர் மின்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



† இந்த இரண்டு பாசுரங்களும்-திருமஞ்சனகாலத்தில் ஸேவிக்கப்படுவன.
‡ 'உண்டியான்' என்றும் கூறுவர்.

திருமங்கையாழ்வார் அருளிச்செய்த

# திருநெடுந்தாண்டகம்.

[முதற் பத்துப்பாசுரங்கள் - ஆழ்வார் தாமானதன்மையில் அருளிச் செய்வன.]

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

(கல்யாணிராகம் - அடதாளம்.)

மின்னுருவாய்முன்னுருவில்வேதம்நான்காய்
விளக்கொளியாய்முளைத்தெழுந்ததிங்கள்தானாய் *
பின்னுருவாய்முன்னுருவிற்பிணிமூப்பில்லாப்
பிறப்பிலியாய்இறப்பதற்கேஎண்ணாது * எண்ணும்
பொன்னுருவாய்மணியுருவிற்பூதமைந்தாய்ப்
புனலுருவாய் அனலுருவில்திகழும்சோதி *
தன்னுருவாய்என்னுருவில்நின்றஎந்தை
தளிர்புரையும்திருவடிஎன்தலைமேலவே. (க)

பாருருவிநீரெரிகால்விசும்புமாகிப்
பல்வேறுசமயமுமாய்ப்பரந்துநின்ற *
ஏருருவில்மூவருமேயெனநின்ற *
இமையவர்தம்திருவுருவேறெண்ணும்போது *
ஓருருவம்பொன்னுருவம்ஒன்றுசெந்தீ
ஒன்றுமாகடலுருவம்ஒத்துநின்ற *
மூவுருவும்கண்டபோதுஒன்றாம்சோதி
முகிலுருவம்எம்மடிகளுருவந்தானே. (உ)

(தோடிராகம் - ரூபகதாளம்.)

திருவடிவிற்கருநெடுமால்சேயனென்றும்
திரேதைக்கண்வளையுருவாய்த்திகழ்ந்தானென்றும் *
பெருவடிவிற்கடலமுதம்கொண்டகாலம்
பெருமானைக்கருநீலவண்ணன்தன்னை *
ஒருவடிவத்தோருருவென்றுணரலாகாது
ஊழிதோறூழிநின்றேத்தலல்லால் *
கருவடிவிற்செங்கண்ணவண்ணன்தன்னைக்
கட்டுரையேயாரொருவர்காண்கிற்பாரே? (ங)

இந்திரற்கும்பிரமற்கும்முதல்வன் தன்னை
இருநிலம்கால்தீநீர்விண் பூதமைந்தாய் *
செந்திறத்ததமிழோசைவடசொல்லாகித்
திசைநான்குமாய்த்திங்கள் ஞாயிறாகி *
அந்தரத்தில்தேவர்க்கும் அறியலாகா
அந்தணனை அந்தணர்மாட்டு அந்திவைத்த
மந்திரத்தை * மந்திரத்தால்மறவாது என்றும்
வாழுதியேல் வாழலாம்மடநெஞ்சமே! (௪)

(தோடிராகம் - திரிபுடைதாளம்.)

ஒண்மிதியிற்புனலுருவிஒருகால்நிற்ப
ஒருகாலும்காமருசீரவுணனுள்ளத்து *
எண்மதியும்கடந்து அண்டமீதுபோகி
இருவிசும்பினூடுபோயெழுந்து * மேலைத்
தண்மதியும்கதிரவனும்தவிரவோடித்
தாரகையின்புறம்தடவி அப்பால்மிக்கு *
மண்முழுதும் அகப்படுத்துநின்றஎந்தை
மலர்புரையும்திருவடியேவணங்கினேனே. (௫)

அலம்புரிந்தநெடுந்தடக்கை அமரர்வேந்தன்
அஞ்சிறைப்புள் தனிப்பாகன், அவுணர்க்குஎன்றும் *
சலம்புரிந்தங்கருளில்லாத்தன்மையாளன்
தானுகந்தவூரெல்லாம்தன் தாள்பாடி *
நிலம்பரந்துவருமகலுழிப்பெண்ணையீர்த்த
நெடுவேய்கள்படுமுத்தமுந்தவுந்தி *
புலம்பரந்துபொன்விளைக்கும்பொய்கைவேலிப்
பூங்கோவலூர்தொழுதும்போதுநெஞ்சே! (௬)

வற்புடையவரைநெடுந்தோள் மன்னர்மாள
வடிவாயமழுவேந்திஉலகமாண்டு *
வெற்புடையநெடுங்கடலுள் தனிவேலுய்த்த
வேள்முதலாவென்றானூர், விந்தம்மேய *
கற்புடையமடக்கன்னிகாவல்பூண்ட
கடிபொழில்சூழ்நெடுமறுகில்கமலவேலி *
பொற்புடையமலையரையன்பணியநின்ற
பூங்கோவலூர்தொழுதும்போதுநெஞ்சே! (௭)

ஊரகத்தாய் நெடுவரையினுச்சிமேலாய்!
நிலாத்திங்கள் துண்டத்தாய்! நிறைந்தகச்சி
ஊரகத்தாய்! * ஒண்துறைநீர்வெஃகாவுள்ளாய்!
உள்ளுவாருள்ளத்தாய்! * உலகமேத்தும்
காரகத்தாய்! கார்வானத்துள்ளாய்! கள்வா!
காமருபூங்காவிரியின்தென்பால்மன்னு
பேரகத்தாய்! * பேராதுஎன்னெஞ்சினுள்ளாய்!
பெருமான்! உன்திருவடியேபேணினேனே. (அ)

(சங்கராபரணராகம் - ஆதிதாளம்.)

வங்கத்தால்மாமணிவந்துந்துமுந்நீர்
மல்லையாய்! மதிள்கச்சியூராய்! பேராய்! *
கொங்கத்தாவளங்கொன்றையலங்கல்மார்வன்
குலவரையன்மடப்பாவைஇடப்பால்கொண்டான்
பங்கத்தாய்! * பாற்கடலாய்! பாரின்மேலாய்!
பனிவரையினுச்சியாய்! பவளவண்ணா! *
எங்குற்றாய்? எம்பெருமான்! உன்னைநாடி
ஏழையேன்இங்ஙனமேஉழிதருகேனே. (கூ)

பொன்னானாய்! பொழிலேழும்காவல்பூண்ட
புகழானாய்! இகழ்வாயதொண்டனேன்நான் *
என்னானாய்! என்னானாய்! என்னலல்லால்
என்னறிவன்ஏழையேன்? * உலகமேத்தும்
தென்னானாய்! வடவானாய்! குடபாலானாய்!
குணபாலமதயானாய்! இமையோர்க்குஎன்றும்
முன்னானாய்! * பின்னானார்வணங்கும்சோதி!
திருமூழிக்களத்தானாய்! முதலானாயே! (க0)

[இதுமுதல் பத்துப்பாசுரங்கள் - தலைவனைப்பிரிந்த தலைவியின்
ஆற்றாமை கண்ட தாய் இரங்கிக்கூறியன.

(பந்துவராளிராகம் - அடதாளம்.)

பட்டுடுக்கும்அயர்த்திரங்கும்பாவைபேணாள்
பனிநெடுங்கண்ணீர்ததும்பப்பள்ளிகொள்ளாள் *
எள்துணைப்போதுஎன்குடங்காலிருக்ககில்லாள்
எம்பெருமான்திருவரங்கம்எங்கே? என்னும் *

மட்டுவிக்கிமணிவண்டுமுரலும்கூந்தல்
மடமானை இதுசெய்தார் தம்மை * மெய்யே
கட்டுவிச்சிசொல்லென்னச்சொன்னாள், நங்காய் !
கடல்வண்ணர் இதுசெய்தார்காப்பாராரே? (கக)

நெஞ்சுருகிக்கண்பனிப்பநிற்கும்சோரும்
நெடிதுயிர்க்கும்உண்டறியாள்உறக்கம்பேணாள் *
நஞ்சரவில் துயிலமர்ந்தநம்பீ! என்னும் *
வம்பார் † பூம்வயலாலிமைந்தா! என்னும் *
அஞ்சிறையபுட்கொடியேஆடும்பாடும்
அணியரங்கமாடுதுமோ? தோழீ! என்னும் *
என்சிறகின்கீழடங்காப்பெண்ணைப்பெற்றேன்
இருநிலத்துஓர்பழிபடைத்தேன்ஏ! பாவமே. (கஉ)

கல்லெடுத்துக்கல்மாரிகாத்தாய்! என்றும்
காமருபூங்கச்சியூரகத்தாய்! என்றும் *
வில்லிறுத்துமெல்லியலதோள்தோய்ந்தாய் ! என்றும்
வெஃகாவில் துயிலமர்ந்தவேந்தே! என்றும் *
மல்லடர்த்துமல்லரை அன்று அட்டாய்! என்றும்
மாகீண்டகைத்தலத்துஎன்மைந்தா! என்றும் *
சொல்லெடுத்துத்தன்கிளியைச்சொல்லேயென்று
துணைமுலைமேல்துளிசோரசசோர்கின்றாளே. (கங)

(ஸாவேரிராகம் - ரூபகதாளம்.)

முளைக்கதிரைக்குறுங்குடியுள்முகிலை மூவா
மூவுலகும்கடந்து அப்பால்முதலாய்நின்ற *
அளப்பரிய ஆராமுதை அரங்கம்மேய
அந்தணனை அந்தணர்தம்சிந்தையானை *
விளக்கொளியைமரதகத்தைத்திருத்தண்காவில்
வெஃகாவில்திருமாலைப்பாடக்கேட்டு *
வளர்த்ததனால்பயன்பெற்றேன்வருகவென்று
மடக்கிளியைக்கைகூப்பிவணங்கினாளே. (கச)

கல்லுயர்ந்தநெடுமதிள்சூழ்கச்சிமேய
களிறு! என்றும் கடல்கிடந்தகனியே! என்றும் *
அல்லியம்பூமலர்ப்பொய்கைப்பழனவேலி
அணியழுந்தூர்நின்றுகந்த அம்மான்! என்றும் *

† 'பூவயலாலி' என்று இருப்பின் நலம்.

சொல்லுயர்ந்தநெடுவீணைமுலைமேல்தாங்கித்
தூமுறுவல்நகைஇறையேதோன்றநக்கு *
மெல்விரல்கள்சிவப்பெய்தத்தடவிஆங்கே
மென்கிளிபோல்மிகமிழற்றும்என்பேதையே. (௧௫)

❀ கன்றுமேய்த்துஇனிதுகந்தகாளாய்! என்றும்
கடிபொழில்சூழ்கணபுரத்துஎன்கனியே! என்றும் *
மன்றமரக்கூத்தாடிமகிழ்ந்தாய்! என்றும்
வடதிருவேங்கடம்மேயமைந்தா! என்றும் *
வென்றசுரர்குலங்களைந்தவேந்தே! என்றும்
விரிபொழில்சூழ்திருநறையூர்நின்றாய்! என்றும் *
துன்றுகுழல்கருநிறத்துஎன்துணையே! என்றும்
துணைமுலைமேல்துளிசோரச்சோர்கின்றாளே. (௧௬)

(யதுகுலகாம்போதிராகம் - ஜம்பைதாளம்)

பொங்கார்மெல்லிளங்கொங்கைபொன்னேபூப்பப்
பொருகயல்கண்ணீரரும்பப்போந்துநின்று *
செங்காலமடப்புறவம்பெடைக்குப்பேசும்
சிறுகுரலுக்குஉடலுருகிச்சிந்தித்து * ஆங்கே
தண்காலும்தண்குடந்தைநகரும்பாடித்
தண்கோவலூர்பாடியாடக்கேட்டு *
நங்காய்! நங்குடிக்குஇதுவோநன்மை? என்ன
நறையூரும்பாடுவாள்நவில்கின்றாளே. (௧௭)

(பந்துவராளிராகம் - திரிபுடைதாளம்.)

கார்வண்ணம்திருமேனிகண்ணும்வாயும்
கைத்தலமும்அடியிணையும்கமலவண்ணம் *
பார்வண்ணமடமங்கைபத்தர் பித்தர்
பனிமலர்மேற்பாவைக்குப்பாவம்செய்தேன்! *
ஏர்வண்ணஎன்பேதைஎன்சொல்கேளாள்
எம்பெருமான்திருவரங்கம்எங்கே? என்னும் *
நீர்வண்ணன்நீர்மலைக்கேபோவேனென்னும்
இதுவன்றோ † நிறையழிந்தார்நிற்குமாறே! (௧௮)

---

† 'நிறைவு' என்று வழங்குவர்.

முற்றாராவனமுலையாள்பாவை மாயன்
மொய்யகலத்துள்ளிருப்பாள் அஃதும்கண்டு
அற்றாள் * தன் † நிறையழிந்தாள் ஆவிக்கின்றாள்
அணியரங்கமாடுதுமோ? தோழீ! என்னும் *
பெற்றேன்வாய்ச்சொல்இறையும்பேசக்கேளாள்
பேர்பாடித்தண்குடந்தைநகரும்பாடி *
பொற்றாமரைக்கயம்நீராடப்போனாள்
பொருவற்றாள்என்மகள்உம்பொன்னும்அஃதே. (௧௯)

(அடாணாராகம் - ஆதிதாளம்.)

தோராளும்வாளரக்கன்செல்வம்மாளத்
தென்னிலங்கைமுன்மலங்கச்செந்தீயொல்கி *
போராளுயிரநதோள்வாணன்மாளப்
பொருகடலைஅரண்கடந்துபுக்குமிக்க
பாராளன் * பாரிடந்துபாரையுண்டு
பாருமிழ்ந்துபாரளந்து பாரையாண்ட
பேராளன் * பேரோதும்பெண்ணை மண்மேல்
பெருந்தவத்தளென்றல்லால்பேசலாமே? (௨0

[இதுமுதல் ஐந்துபாசுரங்கள்-தலைவி தோழிக்கு அறத்தொடுநிற்றல்.]

மைவண்ணநறுங்குஞ்சிக்குழல்பின்தாழ
மகரம்சேர்குழைஇருபாடுஇலங்கியாட *
எய்வண்ணவெஞ்சிலையேதுணையா இங்கே
இருவராய்வந்தார்என்முன்னேநின்றார் *
கைவண்ணம்தாமரைவாய்கமலம்போலும்
கண்ணிணையும்அரவிந்தம் அடியும்அஃதே *
அவ்வண்ணத்தவர்நிலைமைகண்டுமதோழீ!
அவரைநாம்தேவரென்று அஞ்சினோமே. (௨௧

(ஆநந்தபைரவிராகம் - திரிபுடைதாளம்)

நைவளமொன்றாராயாநம்மைநோக்கா
நாணினார்போல்இறையேநயங்கள்பின்னும் *
செய்வளவில்என்மனமும்கண்ணும்ஓடி
எம்பெருமான்திருவடிக்கீழணைய * இப்பால்

† 'நிறைவு' என்று வழங்குவர்.

கைவளையும்மேகலையும்காணேன் கண்டேன்
கனமகரக்குழையிரண்டும்நான்குதோளும் *
எவ்வளவுண்டெம்பெருமான்கோயில்? என்றேற்கு *
இதுவன்றோஎழிலாலிஎன்றார்தாமே. (௨௨)

(காம்பூஜிராகம் - திரிபுடைதாளம்.)

உள்ளூரும்சிந்தைநோய்எனக்கேதந்து என்
ஒளிவளையும்மாநிறமும்கொண்டார் இங்கே *
தெள்ளூரும்இளந்தெங்கின்தேறல்மாந்திச்
சேலுகளுமதிருவரங்கம் † நம்மூரென்ன *
கள்ளூரும்பைந்துழாய்மாலையானைக்
கனவிடத்தில்யான்காண்பன், கண்டபோது *
புள்ளூரும்கள்வா! நீபோகேலென்பன்
என்றாலும்இதுநமக்கோர்புலவிதானே. (௨௩)

(வராளிராகம் - ரூபகதாளம்.)

இருகையில்சங்கிவைநில்லாஎல்லேபாவம்!
இலங்கொலிநீர்ப்பெரும்பௌவம்மண்டியுண்ட *
பெருவயிற்றகருமுகிலேயொப்பாவண்ணம்
பெருந்தவத்தர் அருந்தவத்துமுனிவர்சூழ *
ஒருகையில்சங்குஒருகைமற்றாழியேந்தி
உலகுண்டபெருவாயர்இங்கேவந்து * என்
பொருகயற்கண்ணீரரும்பப்புலவிதந்து
புனலரங்கமூரென்றுபோயினாரே. (௨௪)

மின்னிலங்குதிருவுருவும்பெரியதோளும்
கரிமுனிந்தகைத்தலமும்கண்ணும்வாயும் *
தன்னலர்ந்தநறுந்துழாய்மலரின்கீழே
தாழ்ந்திலங்குமகரம்சேர்குழையும்காட்டி *
என்னலனும்என்னிறைவும்என்சிந்தையும்
என்வளையும்கொண்டு என்னையாளும்கொண்டு *
பொன்னலர்ந்தநறுஞ்செருந்திப்பொழிலினூடே
புனலரங்கமூரென்றுபோயினாரே. (௨௫)

† 'நம்மூரென்ற' என்றும் பாடம்.

[வண்டுவிடுதூது.]

(கேதாரகௌளராகம் - ரூபகதாளம்)

தேமருவுபொழிலிடத்துமலர்ந்தபோதைத்
தேனதனைவாய்மடுத்து, உன்பெடையும்நீயும் *
பூமருவிஇனிதமர்ந்துபொறியிலார்ந்த
அறுகாலசிறுவண்டே! தொழுதேன்உன்னை *
ஆமருவிநிரைமேய்த்தஅமரர்கோமான்
அணிபொழில்சூழ்திருநறையூர்நின்றானுக்குஇன்றேசென்று *
நீமருவிஅஞ்சாதேநின்றுஓர்மாது
நின்நயந்தாளென்றுஇறையேஇயம்பிக்காணே (உ௬)

[நாரைவிடுதூது.]

(சாரங்கராகம் - ரூபகதாளம்.)

செங்காலமடநாராய்! இன்றேசென்று
திருக்கண்ணபுரம்புக்குஎன்செங்கண்மாலுக்கு *
என்காதல்என்துணைவர்க்குஉரைத்தியாகில்
இதுவொப்பதுஎமக்கின்பமில்லை * நாளும்
பைங்கானமீதெல்லாமுனதேயாகப்
பழனமீன்கவர்ந்துண்ணத்தருவன் * தந்தால்
இங்கேவந்துஇனிதிருந்துஉன்பெடையும்நீயும்
இருநிலத்திலினிதின்பமெய்தலாமே. (உ௭)

[பறவைகளைத் தூதுவிடுத்த தலைவி தலைவன்வரக் காணாமையால் அவனைப்பற்றி ஊடல்கொண்டு தோழிக்குக் கூறிய பாசுரம்.]

(மோஹனராகம் - அடதாளம்)

தென்னிலங்கையரண்சிதறிஅவுணன்மாளச்
சென்றுஉலகம்மூன்றினையும்திரிந்தோர்தேரால் *
மன்னிலங்குபாரதத்தைமாளவூர்ந்த
வரையுருவின்மாகளிற்றைத்தோழீ! * என்தன்
பொன்னிலங்குமுலைக்குவட்டில்பூட்டிக்கொண்டு
போகாமைவல்லேனாய்ப்புலவியெய்தி *
என்னிலங்கமெல்லாம்வந்துஇன்பமெய்த
எப்பொழுதும்நினைந்துருகியிருப்பன்நானே. (உ௮)

[இந்த இரண்டு பாசுரங்களும் ஆழ்வார் தாமான தன்மையில் அருளிச்செய்வன.]

(மோஹநராகம் - ஜம்பைதாளம்.)

❁ அன்றாயர்குலமகளுக்கரையன் தன்னை
அலைகடலைக்கடைந்தடைத்த அம்மான் தன்னை *
குன்றாதவலியரக்கர்கோனைமாளக்
கொடுஞ்சிலைவாய்ச்சரந்துரந்துகுலங்களைந்து
வென்றானை * குன்றெடுத்ததோளினானை
விரிதிரைநீர்விண்ணகரம்மருவிநாளும்
நின்றானை * தண்குடந்தைக்கிடந்தமாலை
நெடியானை அடிநாயேன்நினைந்திட்டேனே (௨௯)

❁ மின்னுமாமழைதவழும்மேகவண்ணா!
விண்ணவர்தம்பெருமானே! அருளாயென்று *
அன்னமாய்முனிவரோடுஅமரரேத்த
அருமறையைவெளிப்படுத்தஅம்மான் தன்னை *
மன்னுமாமணிமாடமங்கைவேந்தன்
மானவேல்பரகாலன்கலியன்சொன்ன *
பன்னியநூல்தமிழ்மாலைவல்லார் தொல்லை
பழவினையைமுதலரியவல்லார்தாமே (௩௦)

அடிவரவு.—மின் பார் திருவடிவில் இந்திரற்கும் ஒண்மிதி அலம் வற்பு நீரகம் வங்கத்தால் பொன் பட்டு நெஞ்சு கல் முளை கல்லுயர்ந்த கன்று பொங்கு கார் முற்று தேராளும் மை நைவளம் உள்ளூ-ரும் இருகை மின் தேமருவு செங்கால தென்னிலங்கை அன்-றாயர் மின்னுமா வையம்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

திருநெடுந்தாண்டகம் ஸம்பூர்ணம்.



# பெரியதிருமொழிச்செய்யுளகராதி

பெரியதிருமொழிச் செய்யுளகராதி ஸம்பூர்ணம்



ஸ்ரீ

## க. பொய்கையாழ்வார் வைபவம்.

𑌤𑍁𑌲𑌾𑌯𑌾𑌂 𑌶𑍍𑌰𑌵𑌣𑍇 𑌜𑌾𑌤𑌂 𑌕𑌾𑌞𑍍𑌚𑍍𑌯𑌾𑌂 𑌕𑌾𑌞𑍍𑌚𑌨𑌵𑌾𑌰𑌿𑌜𑌾𑌤𑍍 ।
𑌦𑍍𑌵𑌾𑌪𑌰𑍇 𑌪𑌾𑌞𑍍𑌚𑌜𑌨𑍍𑌯𑌾𑌂𑌶𑌂 𑌸𑌰𑍋𑌯𑍋𑌗𑌿𑌨𑌮𑌾𑌶𑍍𑌰𑌯𑍇 ॥

*துலாயாம்ஸ்ரவணேஜாதம் காஞ்ச்யாம்காஞ்சநவாரிஜாத்-*
*த்வாபரேபாஞ்சஜந்யாம்ஸம் ஸரோயோகிநமாஸ்ரயே.*

*நிலவளம் சலவளம் முதலிய பலவளங்களும் மலிந்து இந்நிலவுலகத்துக்குத் திலகம்போன்றுள்ள தொண்டைமண்டலத்திலே, புண்ணியக்ஷேத்திரங்கள் பலவற்றுள்ளும் மிகச்சிறந்த ஸத்யவ்ரதக்ஷேத்ரத்திலே, "காசிமுதலாகிய நன்னகரியெல்லாம் கார்மேனியருளாளர் கச்சிக்கு ஒவ்வா" என்றபடி முத்திதரும் நகரமேழனுள் முக்கியமானதாய் வேகவதியென்னும் புனிதநதி பாயப்பெற்றுக் கண்டவர்கண்கவருங் கச்சித்திருப்பதியிலே, திருவெஃகாவென்னுந் திவ்விய தலத்தின் வடபுறத்தில், சான்றோருள்ளம்போல ஆழ்ந்து தெளிந்துள்ளதொரு பொற்றாமரைப்பொய்கை உண்டு. அதில் பூத்ததொரு கமலமலரிலே, ஐப்பசி மாதத்தில் விஷ்ணுநக்ஷத்திரமான திருவோணத்திலே தேவிற் சிறந்த திருமாலின் திவ்வியபஞ்சாயுதங்களுள் பாஞ்சஜந்ய மென்னுந திருச்சங்கின் அம்சமாய், ஒருவர் அன்புவெள்ளத்தினகத்திருந்து தியானிக்கின்ற அடியார்களது உள்ளப்பதுமப்போதில் அவர் நினைந்த வடிவோடு எம்பெருமான் விரைந்து தோன்றுதல் போலவும், பிரளயப்பெருங்கடலில் மலர்ந்த அப்பெருமானது உந்தியந்தாமரையில் நான்முககடவுள் உற்பவித்தது போலவும் திருவவதரித்தார.*

*அத்தத்தின்பததாநாள் தோன்றிய இவர்க்கு, பொய்கையில் அவதரித்தது காரணமாக 'பொய்கையாழ்வார்' என்று திருநாமமாயிற்று*

*செய்யதுலாவோணத்திற்செகத்துதித்தான்வாழியே*
*திருக்கச்சிமாநகரம்செழிக்கவந்தோன்வாழியே*
*வையந்தகளிநூறும்வகுத்துரைத்தான்வாழியே*
*வனசமலாககருவதனில்வளாநதமைந்தன்வாழியே*
*வெய்யகதிரோன்தன்னைவிளக்கிட்டான்வாழியே*
*வேங்கடவர்திருமலையைவிரும்புமவன்வாழியே*
*பொய்கைமுனிவடிவழகும்பொற்பதமும்வாழியே*
*பொன்முடியும்திருமுகமும்இப்பூதலத்தில்வாழியே.*

## உ. பூதத்தாழ்வார் வைபவம்.

𑌤𑍁𑌲𑌾𑌧𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌸𑌮𑍍𑌭𑍂𑌤𑌂 𑌭𑍂𑌤𑌂 𑌕𑌲𑍍𑌲𑍋𑌲𑌮𑌾𑌲𑌿𑌨𑌃 ।
𑌤𑍀𑌰𑍇 𑌫𑍁𑌲𑍍𑌲𑍋𑌤𑍍𑌪𑌲𑍇 𑌮𑌲𑍍𑌲𑌾𑌪𑍁𑌰𑍍𑌯𑌾𑌮𑍀𑌡𑍇 𑌗𑌦𑌾𑌂𑌶𑌕𑌮𑍍 ॥

*துலாதநிஷ்டாஸம்பூதம் பூதம்கல்லோலமாலிந:-*
*தீரேபுல்லோத்பலேமல்லா புர்யாமீடேகதாம்ஸகம்.*

"தெண்ணீர் வயல் தொண்டைநன்னாடு சான்றோருடைத்து" என்று ஔவையார் பாடியபடி கல்வி கேள்வி யறிவொழுக்கங்களா லான்றவர் பலரை யுடையதும், "ஆறேழிரெட்டுத் தொண்டை" என்றவாறு நூற்றெட்டுத்திரு மால்திருப்பதிகளுள் இருபத்திரண்டுள்ளது மான அந்தத் தொண்டைவள நாட்டிலே, கீழ்கடற்கரையிலுள்ள திருக்கடல்மல்லை யென்கிற மஹாபலிபுரத் திலே, குருக்கத்திப்பந்தரிலே, ஒருகுருக்கத்திமலரிலே, கௌமோதகி யென் னுங் கதாயுதத்தின் அம்சமாய், ஐப்பசிமாதத்தில் அவிட்டநக்ஷத்திரத்திலே, ஒருவர் திருவவதாரஞ் செய்தார் "கடல்வண்ணன்பூதம்," "மறுத்திருமார்ப னவன்தன்பூதம்" என்றவாறு எம்பெருமானை அறிதலாலே தமது உளறு கையையுடையவ ராதலால், இவர்க்கு 'பூதத்தாழ்வார்' என்று திருநாமம்.

*அன்பேதகளிநூறுமருளினான்வாழியே*
*ஐப்பசியிலவிட்டத்திலவதரித்தான்வாழியே*
*நன்புகழ்சேர்குருக்கத்திநாண்மலரோன்வாழியே*
*நல்லதிருக்கடல்மல்லைநாதனார்வாழியே*
*இன்புருகுசிந்தைதிரியிட்டபிரான்வாழியே*
*எழில்ஞானச்சுடர்விளக்கையேற்றினான்வாழியே*
*பொன்புரையும்திருவரங்காபுகழுரைத்தான்வாழியே*
*பூதத்தார்தாளிணைகள்இப்பூதலத்திலவாழியே.*

---

## ங. பேயாழ்வார் வைபவம்.

𑌤𑍁𑌲𑌾𑌶𑌤𑌭𑌿𑌷𑌗𑍍𑌜𑌾𑌤𑌂 𑌮𑌯𑍂𑌰𑌪𑍁𑌰𑌿𑌕𑍈𑌰𑌵𑌾𑌤𑍍 ।
𑌮𑌹𑌾𑌨𑍍𑌤𑌂 𑌮𑌹𑌦𑌾𑌖𑍍𑌯𑌾𑌤𑌂 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌶𑍍𑌰𑍀𑌨𑌨𑍍𑌦𑌕𑌾𑌂𑌶𑌕𑌮𑍍 ॥

*துலாஶதபிஷக்ஜாதம் மயூரபுரிகைரவாத்*
*மஹாந்தம்மஹதாக்யாதம் வந்தே ஸ்ரீநந்தகாம்ஶகம்.*

துண்டீரமண்டலமென்று ப்ரஸித்தமான அத்தொண்டைநன்னாட்டிலே, ப்ருந்தாரண்யக்ஷேத்ரத்திலே, "குரவமே கமழுங் குளிர்பொழிலூடு குயிலொடு

மயில்கள் நின்று ஆல, இரவியின்கதிர்கள் நுழைதலசெய்தறியா" த திருவல்லிக்கேணியென்னுந் திவ்வியதேசததுககுத் தென்திசையிலுள்ள திருமயிலைநகரியில், ஆதிகேசவப்பெருமாள் கிணற்றிலே யுண்டான தொரு செவ்வல்லிப்பூவிலே நந்தகமென்கிற வாட்படையின் அம்சமாய, ஒருவர், ஐப்பசிமாதததுச் சதயதாரகையிலே அவதரித்தார.

இவா, பகவத்பகதியாற் பரவசப்பட்டு நெஞ்சழிதல கண்சுழலுதல் அழுதல் சிரித்தல தொழுதல மகிழ்தல ஆடுதல் பாடுதல அலறுதல முதலிய தொழிலகளையே அரவாதஞ செய்துகொணடு, காணபவா பேயபிடித்தவ ரென்னும்படியிருந்ததனால், 'பேயாழ்வார்' என்று பெயாபெற்றனா பரமபகதி தலையெடுத்தலா லுணடாகின்ற பகவதநுபவாதிசயம மற்றையாவரினும இவாககு மகததாயிருநததனாலும, இவா தாம எமபிரானுககு ஆட்பட்டது மாததிரமேயன்றித திருமழிசையாழ்வாரைத் திருததிப் பணிகொணட மகானதலாலும, இவாக்கு 'மஹதாஹ்வயா' என றும ஒருதிருநாமம் உணடு

திருககண்டேனெனுநூறுமசெப்பினனவாழியே
சிறநதவைபபசியிலசதயமசனிததவளளலவாழியே
மருக்கமழுமயிலைநகாவாழவநதோனவாழியே
மலாககரியநெய்தலதனிலவநதுதிததானவாழியே
நெருககிடவேயிடைகழியிலகினற்செலவனவாழியே
நேமிசஙகனவடிவழகைநெஞசில்வைப்போனவாழியே
பெருககமுடன்திருமழிசைபபிரானதொழுவோன்வாழியே
பேயாழ்வாரதாளிணைஇப்பெருநிலததிலவாழியே.

---

அயோநிஜரும ஸ்ரீராமபரதலக்ஷ்மணாபோல அடுத்த நாள்களில அவதரித்தவாகளுமாகிய இவாகள் மூவாககும, ஸ்ரீவைகுணடநாதனது நியமனததின்படி, பரமபததிலுள்ள நிதயமுகதாகளின் திரளுககுத தலைவராதலாற சேனைமுதலியா ரென்று சிறப்பிததுச *சொலலபபடுகின்ற விஷ்வகஸேநா, பெருஙகருணையுடன் அங்குநின்று இஙகுவநது, பஞ்சஸமஸ்காரங்களை யிட்டருளி, பெரிய திருமநதிரம முதலாக எலலாமந்திரவிசேஷஙகளையும, அவற்றின் விசேஷாததஙகளனைததையும குறைவற உபதேசிததருளினர். அதனால் இவர்கள் ராஜஸதாமஸ குணங்களின் தொடர்பில்லாமல சுததஸாத்விக குணமே தலையெடுதது அநதக குணமயனை புண்டரீகாக்ஷனுககு அடிமை செய்தலையே பணியாககொண்டு ஞான பகதி வைராககியங்கள் மிககுத துறவறவொழுக்கம பூண்டு அநநபாநாதிகளை யொழித்துப் பகவததியானமே தாரகமாக உண்டியே யுடையே உகந்தோடும இம்மண்டலததாரோடு கலவாமல ஒருநாளிருந்த விடத்தில் மற்றொரு நாளிராதபடி கராமைகராத்ரமாய்த் தமமில ஒருவரையொருவர் அறியாமல் தனிததனியே சஞ்சரித்துக் கொண்டிருககிற காலத

தில் ஸர்வேஶ்வரன் இம்மூவரையும் ஓரிடத்திலே சேர்த்து ஆட்கொண்டு இவர்களால் உலகத்தை உய்விக்க வேண்டுமென்று நினைத்தருளினன்.

ஸத்யஸங்கல்பனான அந்த முகுந்தனது திருவுள்ளக் கொள்கையின்படி ஒருநாள் ஸூர்யாஸ்தமனமானபின் பொய்கையாழ்வார் நடுநாட்டுத் திருப்பதிகளிற் பெண்ணையாற்றங்கரையி லுள்ள திருக்கோவலூரை யடைந்து அங்கு மிருகண்டுமகாமுனிவரது திருமாளிகையிற் சென்று அதன் இடைகழியிற் சயனித்துக் கொண்டிருந்தார் பின்னர்ப் பூதத்தாழ்வாரும் அவ்விடத்திலே சென்று சேர, இருவரும் ஒருவரை யொருவர் கண்டபொழுதே முறைப்படி வந்தனை வழிபாடுகள் செய்தவுடன், பொய்கையாழ்வார் 'இவ்விடம் ஒருவர் படுக்கலாம், இருவர் இருக்கலாம்' என்று விண்ணப்பஞ் செய்தபின்பு, அவ்வாறே அவ்விருவரும் அங்கு இருந்தனர். அதன்பிறகு பேயாழ்வாரும் அவ்விடத்தையே அடைந்திட, ஒருவர்க்கொருவர் ப்ரணாமம் முதலியன நிகழ்ந்தபின், முன்னையிருவரும் 'இவ்விடம் ஒருவர் படுக்கலாம், இருவர் இருக்கலாம், மூவர் நிற்கலாம்' என்று கூற, இவரும் அதற்கு உடன்படலும், இம்மூவரும் அவ்விடத்திலே நின்றுகொண்டு, பரஸ்பரம் பகவத்குணங்களைச் சொல்லுதலும் கேட்டலும் செய்து மகிழ்ந்திருந்தனர். அப்பொழுது, திரிவிக்கிரம மூர்த்தி அவர்களை அநுக்கிரகித்தற்பொருட்டுப் பேரிருளையும் பெருமழையையும் உண்டாக்கி, பெரிய வடிவத்தோடு அவர்களிடத்திற் சென்று நின்று, பொறுக்க வொண்ணாத மிக்க நெருக்கத்தைச் செய்தருளினன். இவர்கள் முன்பு இல்லாத நெருக்கம் இப்பொழுது உண்டாயது என்னை? பிறரெவரேனும் புகுந்தவ ருண்டோ?" என்று சங்கிக்கையில், பொய்கையாழ்வார் பூமியாகிய தகழியில் கடல்நீரையே நெய்யாகக் கொண்டு சூரியனை விளக்காக ஏற்ற, பூதத்தாழ்வார் அன்பாகிய தகழியில் ஆர்வத்தை நெய்யாகவும் சிந்தையைத் திரியாகவும் கொண்டு ஞானதீபத்தை ஏற்ற, இவ்விரண்டி னொளியாலும் இருளற்றதனால், பேயாழ்வார் பெருமானைத் தாம் கண்டமை கூறியவளவிலே, மூவரும் ஆழியஞ்செல்வனுடைய சொரூபத்தை அறிந்து அனுபவித்து ஆனந்தமடைந்து, அப்பெருங்களிப்பு உள்ளடங்காமையால் அதனைப் பிரபந்த முகமாக வெளியிட்டு உலகத்தாரை வாழ்விக்கக் கருதினார்கள்.

அப்பொழுது, பொய்கையாழ்வார்,—"வையந்தகளியா" என்று தொடங்கி முதல்திருவந்தாதியைப் பாடியருளினார்.

பூதத்தாழ்வார்,—"அன்பேதகளியா" என்று தொடங்கி இரண்டாந் திருவந்தாதியை அருளிச்செய்தார்.

பேயாழ்வார்,—"திருக்கண்டேன்" என்று தொடங்கி மூன்றாந்திருவந்தாதியைத் திருவாய்மலர்ந்தருளினார்.

பின்பு இந்தயோகிகள் மூவரும தேகளீசனைத திருவடிதொழுது விடைபெற்றுப் பலகாலம் திவ்ய தேசயாததிரை செய்துகொண்டு சென்று, திருமழிசை யாழ்வாரைக கண்டு பேசி அவரோடு கூடிக களிதது யோகுசெய்துநின்று, இஙஙனம் மண்ணுலகததில் மூவாயிரத்து முநநூறறு இருபததைந்துவருஷம் யோகபலத்தால வாழ்நதிருநது, முடிவில திருககோவலூரையேயடைநது, முடிவில் பேரின்பதது அழிவில வீட்டை யுறறனா.

இவாகள் மூவரும, ஆழ்வார்களெலலார்ககும முன்னே திருவவதரித்ததனாலும, பின்பு உணடாகும பிரபநதஙகட்கெலலாம இலககணமாமபடி ஆதியில் திருவந்தாதிததிவ்வியப்ரபநதஙகளைத திருவாய்மலாநதருளியதனாலும், முதலாழ்வார்கள் என்று பெயாபெற்றனா

---





# இயற்பா.

பொய்கையாழ்வார் அருளிச்செய்த

## முதல் திருவந்தாதி.

### தனியன்.

(முதலியாண்டான் அருளிச்செய்தது.)

நேரிசைவெண்பா

கைதைசேர் பூம்பொழில்சூழ் கச்சிநகர்வந்துதித்த *
பொய்கைப்பிரான் கவிஞர்போரேறு *—வையத்து
அடியவர்கள்வாழ † அருந்தமிழ்நூற்றந்தாதி *
படிவிளங்கச்செய்தான் பரிந்து.

(ஸஹாநாராகம் - திரிபுடைதாளம்)

வையம்தகளியா வார்கடலேநெய்யாக *
வெய்யகதிரோன் விளக்காக *—செய்ய
சுடராழியானடிக்கே சூட்டினேன்சொல்மாலை *
இடராழி ‡ நீங்குகவேயென்று. (க)

என்றுகடல்கடைந்தது ? எவ்வுலகம்நீரேற்றது ? *
ஒன்றும்அதனைஉணரேன்நான் *—அன்றுஅது
அடைத்துடைத்துக் கண்படுத்தஆழி * இதுநீ
படைத்திடந்துஉண்டுமிழ்ந்தபார். (உ)

பாரளவும்ஓரடிவைத்து ஓரடியும்பாருடுத்த *
நீரளவும்செல்லநிமிர்ந்ததே *—சூருருவின்
பேயளவுகண்ட பெருமான்! அறிகிலேன் *
நீயளவுகண்டநெறி. (௩)

† இங்கு வெண்டளை தவறுகின்றது; ‘அருந்தமிழந்தாதி’ என்னும் பாடம் தளைக்குப் பொருந்தும். ‡ ‘நீங்கவே’ என்பதும் பாடம்.

நெறிவாசல் தானேயாய்நின்றானை * ஐந்து
பொறிவாசல் † போர்க்கதவம்சார்த்தி *— அறிவானும்
ஆலமரநீழல் அறம்நால்வர்க்கு அன்றுரைத்த *
ஆலமமர்கண்டத்தரன். (௪)

அரன்நாரணன்நாமம் ஆன்விடைபுள்ளூர்தி *
உரைநூல்மறையுறையும்கோயில் *— வரைநீர்
கருமம்அழிப்புஅளிப்புக் கையதுவேல்நேமி *
உருவமெரிகார்மேனியொன்று. (௫)

ஒன்றும்மறந்தறியேன் ஓதநீர்வண்ணனைநான் *
இன்றுமறப்பனோ? ஏழைகாள்! *— அன்று
கருவரங்கத்துள்கிடந்து கைதொழுதேன்கண்டேன் *
திருவரங்கமேயான்திசை. (௬)

திசையும் திசையுறுதெய்வமும் * தெய்வத்
திசையும்கருமங்களெல்லாம் *— அசைவில்சீர்க்
கண்ணன்நெடுமால் கடல்கடைந்த * காரோத
வண்ணன்படைத்தமயக்கு. (௭)

மயங்கவலம்புரி வாய்வைத்து * வானத்து
இயங்கும்எறிகதிரோன்தன்னை *— முயங்கமருள்
தேராழியால்மறைத்தது என்? நீ திருமாலே! *
போராழிக்கையால் பொருது. (௮)

பொருகோட்டோரேனமாய்ப் புக்கிடந்தாய்க்கு * அன்றுஉன்
ஒருகோட்டின்மேல்கிடந்ததன்றே * — விரிதோட்ட
சேவடியைநீட்டித் திசைநடுங்கவிண்துளங்க *
மாவடிவின்நீயளந்தமண். (௯)

மண்ணும்மலையும் மறிகடலும்மாருதமும் *
விண்ணும்விழுங்கியதுமெய்யென்பர் *— எண்ணில்
அலகளவுகண்ட சீராழியாய்க்கு * அன்றுஇவ்
வுலகளவும்உண்டோ? உன்வாய். (௧௦)

வாய்அவனையல்லது வாழ்த்தாது * கைஉலகம்
தாயவனையல்லது தாம்தொழா *— பேய்முலைநஞ்சு
ஊணாகவுண்டான் உருவொடுபேரல்லால் *
காணாகண் கேளாசெவி. (௧௧)

† 'போர்கதவம்' என்று பாடம்.

செவிவாய்கண்மூக்கு உடலென்றைம்புலனும் * செந்தீ
புவிகால் நீர்விண்பூதமைந்தும் *— அவியாத
ஞானமும்வேள்வியும் நல்லறமும்என்பரே *
ஏனமாய்நின்றாற்குஇயல்வு. (கஉ)

இயல்வாக ஈன்துழாயானடிக்கேசெல்ல *
முயல்வார்இயலமரர்முன்னம் *— இயல்வாக
நீதியாலோதி நியமங்களால்பரவ *
ஆதியாய்நின்றாரவர். (கங)

அவரவர்தாம்தாம் அறிந்தவாறேத்தி *
இவரிவரெம்பெருமானென்று *— சுவர்மிசைச்
சார்த்தியும் வைத்தும்தொழுவர் * உலகளந்த
மூர்த்தியுருவேமுதல். (கச)

முதலாவார்மூவரே * அம்மூவருள்ளும்
முதலாவான் மூரிநீர்வண்ணன் *— முதலாய
நல்லானருளல்லால் நாமநீர்வையகத்து *
பல்லாரருளும்பழுது. (கரு)

பழுதேபலபகலும் போயினவென்று * அஞ்சி
அழுதேன் அரவணைமேல்கண்டு— தொழுதேன் *
கடலோதம்காலலைப்பக் கண்வளரும் * செங்கண்
அடலோதவண்ணரடி. (கசு)

அடியும் படிகடப்பத் தோள்திசைமேல்செல்ல *
முடியும்விசும்பளந்ததென்பா *— வடியுகிரால்
ஈர்ந்தான் இரணியனதாகம் * இருஞ்சிறைப்புள்
ஊர்ந்தான் உலகளந்தநான்று. (கஎ)

நான்றமுலைத்தலை நஞ்சுண்டு * உறிவெண்ணெய்
தோன்றஉண்டான் வென்றிசூழ்களிற்றை— ஊன்றி *
பொரு † துடைவுகண்டானும் ‡ புள்ளின்வாய்கீண்டானும் *
மருதிடைபோய்மண்ணளந்தமால். (கஅ)

மாலும்கருங்கடலே! என்னோற்றாய் ? * வையகமுண்டு
ஆலினிலைத்துயின்றஆழியான் *— கோலக்
கருமேனிச் செங்கண்மால்கண்படையுள் * என்றும்
திருமேனி நீதீண்டப்பெற்று. (ககூ)

---

† 'இடைவு' என்பதும் பாடம்.
‡ 'புள்வாய்' என்னும் பாடமே வெண்டளைக்குப் பொருந்தும்.

பெற்றார்தளைகழலப் † பேர்ந்தோர்குறளுருவாய் *
செற்றார்படிகடந்தசெங்கண்மால்*—நற்றா
மரைமலர்ச்சேவடியை வானவர்கைகூப்பி *
நிரைமலர்கொண்டு ‡ ஏத்துவரால் நின்று. (௨௦)

நின்றுநிலமங்கை நீரேற்றுமூவடியால் *
சென்றுதிசையளந்தசெங்கண்மாற்கு *—என்றும்
படையாழிபுள்ளூர்தி பாம்பணையான்பாதம் *
அடையாழிநெஞ்சே! அறி. (௨௧)

அறியும்உலகெல்லாம் யானேயுமல்லேன் *
பொறிகொள்சிறையுவணமூர்ந்தாய் *—வெறிகமழும்
காம்பேய்மென்தோளிகடைவெண்ணெயுண்டாயை *
தாம்பேகொண்டார்த்ததழும்பு. (௨௨)

தழும்பிருந்தசார்ங்கநாண் தோய்ந்தவாமங்கை *
தழும்பிருந்த தாள்சகடம்சாடி *—தழும்பிருந்த
பூங்கோதையாள்வெருவப் பொன்பெயரோன்மார்பிடந்த *
வீங்கோதவண்ணர்விரல். (௨௩)

விரலோடுவாய்தோய்ந்த வெண்ணெய்கண்டு * ஆய்ச்சி
உரலோடுறப்பிணித்தநான்று—* குரலோவாது
ஏங்கிநினைந்து அயலார்காணஇருந்திலையே? *
ஓங்கோதவண்ணா! உரை. (௨௪)

உரைமேல்கொண்டு என்னுள்ளம்ஓவாது * எப்போதும்
வரைமேல் மரதகமேபோல *—திரைமேல்
கிடந்தானைக் கீண்டானை * கேழலாய்ப்பூமி
யிடந்தானை யேத்தியெழும். (௨௫)

எழுவார்விடைகொள்வார் ஈன்துழாயானை *
வழுவாவகைநினைந்து வைகல்—தொழுவார் *
வினைச்சுடரைநந்துவிக்கும் வேங்கடமே * வானோர்
மனச்சுடரைத் தூண்டும்மலை. (௨௬)

மலையால்குடைகவித்து மாவாய்பிளந்து *
சிலையால் மராமரமேழ்செற்று *—கொலையானைப்
போர்க்கோடொசித்தனவும் பூங்குருந்தம்சாய்த்தனவும் *
கார்க்கோடுபற்றியான்கை. (௨௭)

† 'பிறந்து' 'என்பதும், ‡ ஏத்துவாராம்' என்பதும் பாடம்.

கையவலம்புரியும்நேமியும் * கார்வண்ணத்து
ஐய ! மலர்மகள்நின் ஆகத்தாள் *—செய்ய
மறையான்நின்உந்தியான் மாமதிள்மூன்றெய்த *
இறையான் நின்னாகத்திறை. (உஅ)

இறையும்நிலனும் இருவிசும்புங்காற்றும் *
அறைபுனலும்செந்தீயுமாவான் * —பிறைமருப்பின்
பைங்கண்மால்யானை படுதுயரங்காத்தளித்த *
செங்கண்மால்கண்டாய்தெளி. (உகூ)

தெளிதாக உள்ளத்தைச்செந்நிறீஇ * ஞானத்
தெளிதாக நன்குணர்வார்சிந்தை *—எளிதாகத்
தாய்நாடுகன்றேபோல் தண் † துழாயானடிக்கே *
போய்நாடிக்கொள்ளும் புரிந்து. (௩O)

புரியொருகைபற்றி ஓர்பொன்னாழியேந்தி *
அரியுருவும ஆளுருவுமாகி *—எரியுருவ
வண்ணத்தான்மார்பிடந்த மாலடியையல்லால் * மற்று
எண்ணத்தானாமோ ? இமை. (௩க)

இமையாதகண்ணால் இருளகலநோக்கி *
அமையாப்பொறிபுலன்க ளைந்தும்—நமையாமல்*
ஆகத்தணைப்பார் அணைவரே * ஆயிரவாய்
நாகத்தணையான்நகர். (௩உ)

நகரமருள்புரிந்து நான்முகற்குப்பூமேல் *
பகரமறைபயந்தபண்பன் *—பெயரினையே
புந்தியால்சிந்தியாது ஓதியுருவெண்ணும *
அந்தியாலாம்பயனங்கென் ? (௩௩)

என்னொருவர்மெய்யென்பர் ஏழுலகுண்டு * ஆலிலையில்
முன்னொருவனாய முகில்வண்ணா! *—நின்னுருகிப
பேய்த்தாய்முலைதந்தாள பேர்ந்திலளால் * பேரமர்க்கண்
ஆய்த்தாய் முலைதந்தவாறு ! (௩௪)

ஆறியவன்பில் அடியார்தமார்வத்தால் *
கூறிய குற்றமாக்கொள்ளல்நீ—தேறி *
நெடியோய்! அடி அடைதற்கன்றே * ஈரைந்து
முடியான்படைத்தமுரண். (௩௫)

† 'துழாயானடியே' என்றும் பாடம்.

† முரணவலி தொலைதற்கு † ஆமென்றே * முன்னம்
தரணிதனதாகத்தானே *—இரணியனைப்
புண்ணிரந்தவள்ளுகிரால் பொன்னாழிக்கையால் *
மண்ணிரந்து கொண்டவகை. (௩௬)

வகையறுநுண்கேள்வி வாய்வார்கள் * நாளும்
புகைவிளக்கும் பூம்புனலுமேந்தி *——திசைதிசையின்
வேதியர்கள் சென்றிறைஞ்சும்வேங்கடமே * வெண்சங்கம்
ஊதியவாய் மாலுகந்தவூர். (௩௭)

ஊரும்வரியரவம் ஒண்குறவர்மால்யானை *
பேரவெறிந்த பெருமணியை *—காருடைய
மின்னென்று புற்றடையும்வேங்கடமே * மேலசுரர்
‡ எம்மென்னுமாலதிடம். (௩௮)

இடந்ததுபூமி எடுத்ததுகுன்றம் *
கடந்ததுகஞ்சனைமுன்னஞ்ச *—கிடந்ததுவும்
நீரோதமாகடலேநின்றதுவும் வேங்கடமே *
பேரோதவண்ணர்பெரிது. (௩௯)

பெருவில்பகழிக் குறவர்கைச்செந்தீ *
வெருவிப்புனம்துறந்தவேழம் *—இருவிசும்பில்
மீன்வீழக் கண்டஞ்சும்வேங்கடமே * மேலசுரர்
கோன்வீழக்கண்டுகந்தான்குன்று. (௪௰)

குன்றனையகுற்றம்செயினும் குணங்கொள்ளும் *
இன்றுமுதலாகஎன்னெஞ்சே ! *—என்றும்
புறனுரையேயாயினும் பொன்னாழிக்கையான் *
திறனுரையேசிந்தித்திரு. (௪௧)

திருமகளும்மண்மகளும் ஆய்மகளும்சேர்ந்தால் *
திருமகற்கேதீர்ந்தவாறு என்கொல் ? *—§ திருமகள்மேல்
பாலோதம்சிந்தப் படநாகணைக்கிடந்த *
மாலோதவண்ணர்மனம். (௪௨)

மனமாசுதீரும் அருவினையும்சாரா *
தனமாய $ தானே கைகூடும்*—புனமேய
பூந்துழாயானடிக்கே போதொடுநீரேந்தி *
தாம்தொழாநிற்பார்தமர். (௪௩)

† 'முரணை' 'என்றும் † 'ஆமன்றே' என்றும் பாடம் ஓதுவர். ‡ 'எம்மென்ற' 'என்னென்ற' 'என்னென்னும்' என்பன - பாடபேதங்கள். § 'திருமுகமேல்' என்ற பாடம் வ்யாக்யானத்துக்குச் சேரும். $ 'தாமே' எனவும் பாடமோதுவர்.

தமருகந்ததெவ்வுருவம் அவ்வுருவம்தானே *
தமருகந்ததெப்பேர் மற்றப்பேர் *—தமருகந்து
எவ்வண்ணம்சிந்தித்து இமையாதிருப்பரே *
அவ்வண்ணமாழியானும். (சச)

ஆமே அமரர்க்கு அறிய? அது நிற்க *
நாமே அறிகிற்போம் நல்நெஞ்சே! *—பூமேய
மாதவத்தோன் தாள்பணிந்த வாளரக்கன்நீள்முடியை *
பாதமத்தால்எண்ணினான்பண்பு. (சரு)

பண்புரிந்தநான்மறையோன் சென்னிப்பலியேற்ற *
வெண்புரிநூல்மார்பன்வினைதீர *—புண்புரிந்த
ஆகத்தான் தாள்பணிவார்கண்டீர் * அமரர்தம
† போகத்தால் பூமியாள்வார். (சசு)

வாரிசுருக்கி மதக்களிறைந்தினையும் *
சேரிதிரியாமல் செந்நிறீஇ *—கூரிய
மெய்ஞ்ஞானத்தால் உணர்வார்காண்பரே * மேலொருநாள்
கைந்நாகம்காத்தான்கழல். (சஎ)

கழலொன்றெடுத்து ஒருகைசுற்றிஓர்கைமேல் *
சுழலும்சுராசுரர்கள் அஞ்ச *—அழலும்
செருவாழியேந்தினான் சேவடிக்கேசெல்ல *
மருவாழிநெஞ்சே! மகிழ். (சஅ)

மகிழலகொன்றேபோல் மாறும்பல்யாக்கை *
நெகிழமுயல்கிற்பார்க்கல்லால் *—முகிழ்விரிந்த
சோதிபோல்தோன்றும் சுடர்பொன்நெடுமுடி * எம்
ஆதிகாண்பார்க்கும்அரிது. (சகூ)

அரியபுலனைந்தடக்கி ஆய்மலர்கொண்டு * ஆர்வம்
‡ புரியப் பரிசினால்புல்கில் *—பெரியனாய்
மாற்றாதுவீற்றிருந்த மாவலிபால் * வண்கைநீர்
ஏற்றானைக் காண்பதெளிது. (ருo)

எளிதில்இரண்டடியும் காண்பதற்கு * என்னுள்ளம்
தெளியத் தெளிந்தொழியும்செவ்வே *—களியில்
பொருந்தாதவனைப் பொரலுற்று * அரியாய்
இருந்தான் திருநாமம்எண். (ருக)

† 'போகத்தார்' என்ற பாடம் பொருந்தும். ‡ 'புரிந்த' என்ற பாடம் சேரும்.

எண்மர்பதினொருவர் ஈராறுவர்ஓரிருவர் *
வண்ணமலரேந்திவைகலும் *—நண்ணி
ஒருமாலையால் பரவியோவாது * எப்போதும்
திருமாலைக்கைதொழுவர்சென்று. (௫௨)

சென்றால்குடையாம் இருந்தால்சிங்காசனமாம் *
நின்றால்மரவடியாம் நீள்கடலுள் *—என்றும
புணையாம்மணிவிளக்காம பூம்பட்டாம்புல்கும
அணையாம் * திருமாற்குஅரவு. (௫௩)

அரவம்அடல்வேழம் ஆன்குருந்தம்புள்வாய் *
குரவைகுடமுலைமற்குன்றம *—கரவின்றி
விட்டிறுத்துமேய்த்தொசித்தது கீண்டுகோத்தாடி * உண்
டட்டெடுத்தசெங்கணவன். (௫௪)

அவன்தமர் எவ்வினையராகிலும் * எங்கோ
னவன்தமரே என்றொழிவதல்லால் * —நமன்தமரால்
ஆராயப்பட்டு அறியார்கண்டீர் *அரவணைமேல்
பேராயற்குஆட்பட்டார்பேர். (௫௫)

பேரேவரப் பிதற்றலல்லால, என்பெம்மானை *
ஆரேயறிவார்? அதுநிற்க *—நேரே
கடிக்கமலத்துள்ளிருந்தும காண்கிலான் * கண்ணன்
அடிக்கமலந்தன்னை அயன். (௫௬)

அயல்நின்றவல்வினையை அஞ்சினேன் அஞ்சி *
உயநின்திருவடியேசேர்வான் *—நயம்நின்ற
நன்மாலைகொண்டு நமோநாரணாவென்னும் *
சொல்மாலைகற்றேன்தொழுது. (௫௭)

தொழுதுமலர்கொண்டு தூபம்கையேந்தி *
எழுதும் எழுவாழிநெஞ்சே! *—பழுதின்றி
மந்திரங்கள் கற்பனவும் மாலடியேகைதொழுவான் *
அந்தரமொன்றில்லையடை. (௫௮)

அடைந்தஅருவினையோடு அல்லல்நோய்பாவம் *
மிடைந்தவைமீண்டொழியவேண்டில் *—நுடங்கிடையை
முன்இலங்கைவைத்தான் முரணழிய *முன்னொருநாள்
தன்வில் அங்கைவைத்தான் சரண். (௫௯)

சரணாமறைபயந்த தாமரையானோடு *
மரணாயமன்னுயிர்கட்கெல்லாம் *—அரணாய
பேராழிகொண்ட பிரானன்றிமற்றறியாது *
ஓராழிசூழ்ந்தஉலகு. (௬0)

உலகும்உலகிறந்தவூழியும் * ஒண்கேழ்
விலகுகருங்கடலும்வெற்பும் *—உலகினில்
செந்தீயும் மாருதமும்வானும * திருமால்தன
புந்தியிலாயபுணர்ப்பு. (௬க)

புணர்மருதினூடுபோய்ப் பூங்குருந்தம்சாய்த்து *
மணமருவமால்விடையேழ்செற்று —கணம்வெருவ
ஏழுலகும்தாயினவும் எண்திசையும்போயினவும் *
சூழரவப்பொங்கணையான்தோள். (௬உ)

தோள் அவனையல்லால்தொழா * என்செவியிரண்டும்
கேளவனது இன்மொழியேகேட்டிருக்கும் *— நாநாளும்
கோணாகணையான் குரைகழலேகூறுவதே *
நாணாமைநள்ளேன்நயம். (௬௩)

நயவேன்பிறர்பொருளை நள்ளேன்கீழாரோடு *
உயவேன்உயர்ந்தவரோடல்லால் *—வியவேன்
திருமாலையல்லது தெய்வமென்றேத்தேன் *
† வருமாறுஎன்நம்மேல்வினை ? (௬௪)

வினையால்அடர்ப்படார் வெந்நரகில்சேரார் *
தினையேனும்தீக்கதிக்கண்செல்லார் *—நினைதற்
கரியானைச் சேயானை * ஆயிரம்பேர்ச்செங்கண்
கரியானைக் கைதொழுதக்கால் (௬௫)

காலையெழுந்து உலகம்கற்பனவும் * கற்றுணர்ந்த
மேலைத்தலைமறையோர் வேட்பனவும் *—வேலைக்கண்
ஓராழியானடியே ஓதுவதும் ஓர்ப்பனவும் *
பேராழிகொண்டான்பெயர். (௬௬)

பெயரும்கருங்கடலே நோக்கும்ஆறு * ஒண்பூ
உயரும்கதிரவனேநோக்கும் *—உயிரும்
தருமனையேநோக்கும் ஒண்தாமரையாள்கேள்வன் *
ஒருவனையேநோக்கும்உணர்வு. (௬எ)

† 'வருமாறென்னென்மேல்வினை' என்றும் பாடம்.

உணர்வாரார்உன்பெருமை? ஊழிதோறூழி *
உணர்வாரார் உன்னுருவந்தன்னை? —* உணர்வாரார்?
விண்ணகத்தாய்! மண்ணகத்தாய்! வேங்கடத்தாய்! * நால்வேதப்
பண்ணகத்தாய்! நீகிடந்தபால். (௬௮)

பாலன் தனதுருவாய ஏழுலகுண்டு * ஆலிலையின்
மேலன்று நீவளர்ந்தமெய்யென்பர் *— ஆலன்று
வேலைநீருள்ளதோ? விண்ணதோ? மண்ணதோ? *
சோலைசூழ்குன்றெடுத்தாய்! † சொல்லு. (௬௯)

சொல்லுந்தனையும் தொழுமின்விழுமுடம்பு *
செல்லுந்தனையும்திருமாலை *— நல்லிதழ்த்
தாமத்தால்வேள்வியால் தந்திரத்தால்மந்திரத்தால் *
நாமத்தால்ஏத்துதிரேல்நன்று. (௭௦)

நன்றுபிணிமூப்புக் கையகற்றிநான்கூழி *
நின்றுநிலமுழுதும் ஆண்டாலும் *— என்றும்
விடலாழிநெஞ்சமே! வேண்டினேன்கண்டாய் *
அடலாழிகொண்டான்மாட்டன்பு. (௭௧)

அன்பாழியானை அணுகென்னும் * நா அவன்தன்
பண்பாழித்தோள்பரவி யேத்தென்னும் *— முன்பூழி
காணானைக்காணென்னுங்கண் செவி கேளென்னும் *
பூணாரம்பூண்டான்புகழ். (௭௨)

புகழ்வாய்பழிப்பாய்நீ பூந்துழாயானை *
இகழ்வாய்கருதுவாய் ‡ நெஞ்சே! *— திகழ்நீர்க்
கடலும்மலையும் இருவிசும்பும்காற்றும் *
உடலும்உயிருமேற்றான். (௭௩)

ஏற்றான்புள்ளூர்ந்தான் எயிலெரித்தான்மார்விடந்தான் *
நீற்றான்நிழல்மணிவண்ணத்தான் *— கூற்றொருபால்
மங்கையான் பூமகளான்வார்சடையான் * நீள்முடியான்
கங்கையான் நீள்கழலான்காப்பு. (௭௪)

காப்புஉன்னையுன்னக் கழியும் * அருவினைகள்
ஆப்புஉன்னையுன்ன அவிழ்ந்தொழியும் *— மூப்புஉன்னைச்
சிந்திப்பார்க்கில்லை திருமாலே! * நின்னடியை
வந்திப்பார் காண்பர்வழி. (௭௫)

† 'சொல்' எனவும் ஓதுவர். ‡ 'என்னெஞ்சே' என்றும் பாடம்.

வழிநின்று நின்னைத்தொழுவார் * வழுவா
மொழிநின்ற மூர்த்தியரேயாவர் *—பழுதொன்றும்
வாராதவண்ணமே விண்கொடுக்கும் * மண்ணளந்த
சீரான்திருவேங்கடம். (எசு)

வேங்கடமும் விண்ணகரும்வெஃகாகவும் * அஃகாத
பூங்கிடங்கின் நீள்கோவல்பொன்னகரும் *—நான்கிடத்தும்
நின்றான்இருந்தான் கிடந்தான்நடந்தானே *
என்றால்கெடுமாம்இடர். (எஎ)

இடர் ஆர்படுவார்? எழுநெஞ்சே * வேழம்
தொடர்வான் கொடுமுதலைசூழ்ந்த *—படமுடைய
பைந்நாகப்பள்ளியான் பாதமேகைதொழுதும் *
கொய்ந்நாகப்பூம்போதுகொண்டு. (எஅ)

கொண்டானையல்லால் கொடுத்தாரையார்பழிப்பார் ?*
மண்தாவெனவிரந்து மாவலியை *—ஒண்தாரை
நீரங்கைதோய நிமிர்ந்திலையே? * நீள்விசும்பில்
ஆரங்கைதோயவடுத்து. (எகூ)

அடுத்தகடும்பகைஞற்கு ஆற்றேனென்றோடி *
படுத்தபெரும்பாழிசூழ்ந்த—விடத்தரவை *
வல்லாளன் கைக்கொடுத்த மாமேனிமாயவனுக்கு *
அல்லாதுமாவரோ ஆள்? (அ0)

ஆளமர்வென்றி அடுகளத்துள் அஞ்ஞான்று *
வாளமர்வேண்டிவரைநட்டு *—நீளரவைச்
சுற்றிக்கடைந்தான் பெயரன்றே? * தொல்நரகைப்
பற்றிக்கடத்தும்படை. (அக)

படையாரும் வாட்கண்ணார் பாரசிநாள் * பைம்பூந்
தொடையலோடு ஏந்தியதூபம் *—இடையிடையில்
மீன்மாய மாசூணும்வேங்கடமே * மேலொருநாள்
மான்மாயவெய்தான்வரை. (அஉ)

வரைகுடைதோள்காம்பாக ஆநிரைகாத்து * ஆயர்
நிரைவிடையேழ்செற்றவாறென்னே ! *—உரவுடைய
நீராழியுள்கிடந்து நேராநிசாசரர்மேல் *
பேராழிகொண்டபிரான் ! (அங)

பிரான்! உன்பெருமை பிறர்ஆர் அறிவார்? *
உராய்உலகளந்தநான்று *—வராகத்
தெயிற்றளவு போதாவாறென்கொலோ? * எந்தை
அடிக்களவுபோந்தபடி. (அச)

படிகண்டறிதியே? பாம்பணையினான் * புள்
கொடிகண்டறிதியே? கூறாய் *—வடிவிற்
பொறியைந்துமுள்ளடக்கிப் போதொடுநீரேந்தி *
நெறிநின்றநெஞ்சமே! நீ. (அரு)

நீயுந்திருமகளும் நின்றாயால் * குன்றெடுத்துப்
பாயும் பனி † மறைத்தபண்பாளா! *—‡ வாசல்
கடைகழியாஉள்புகாக் காமர்பூங்கோவல் *
இடைகழியேபற்றியினி. (அசு)

இனியார்புகுவார் எழுநரகவாசல்? *
முனியாதுமூரித்தாள்கோமின் *—கனிசாயக்
கன்றெறிந்ததோளான் கனைகழலேகாண்பதற்கு *
நன்கறிந்தநாவலஞ்சூழ்நாடு. (அஎ)

நாடிலும் நின்னடியேநாடுவன் * நாள்தோறும்
பாடிலும் நின்புகழேபாடுவன் *—சூடிலும்
பொன்னாழியேந்தினான் பொன்னடியேசூடுவேற்கு *
என்னாகில்என்னேஎனக்கு? (அஅ)

எனக்காவார் ஆரொருவரே!* எம்பெருமான்
தனக்காவான் தானேமற்றல்லால் *—புனக்காயாம்
பூமேனிகாணப் பொதியவிழும்பூவைப்பூ *
மாமேனிகாட்டும்வரம். (அகூ)

வரத்தால்வலிநினைந்து மாதவ! நின்பாதம் *
சிரத்தால் § வணங்காணுமென்றே? *—உரத்தினால்
ஈரரியாய் நேர்வலியோனாயஇரணியனை *
ஓரரியாய் நீயிடந்த தூன். (கூ0)

ஊனக்குரம்பையின் உள்புக்குஇருள்நீக்கி *
ஞானச்சுடர்கொளீஇ நாள்தோறும் *—ஏனத்
துருவாயுலகிடந்த ஊழியான்பாதம் *
மருவாதார்க்குஉண்டாமோவான்? (கூக)

வானாகித்தீயாய் மறிகடலாய்மாருதமாய் *
தேனாகிப்பாலாம் திருமாலே! *—ஆனாய்ச்சி
வெண்ணெய்விழுங்க நிறையுமே? * முன்னொருநாள்
மண்ணையுமிழ்ந்தவயிறு. (கூஉ)

---

† 'மறுத்த' என்பதும் பாடம். ‡ 'வாயில்' என்றும் ஓதுவர்.
§ 'வணங்காணுமென்னே!' என்ற பாடம் சேரும்.

வயிறழலவாளுருவி வந்தானையஞ்ச *
எயிறிலகவாய்மடித்ததென்நீ ? *—பொறியுகிரால்
பூவடிவையீடழித்தபொன்னாழிக்கையா ! * நின்
சேவடிமேலீடழியச்செற்று. (கூங)

செற்றெழுந்துதீவிழித்துச் சென்றவிந்தவேழுலகும் *
† மற்றிவை ஆவென்று வாயங்காந்து *—முற்றும்
‡ மறையவற்குக்காட்டிய மாயவனையல்லால் *
இறையேனும்ஏத்தாதுஎன்நா. (கூச)

நாவாயிலுண்டே நமோநாரணாவென்று *
ஓவாதுரைக்கும்உரையுண்டே *—மூவாத
மாக்கதிக்கண்செல்லும் வகையுண்டே * என்னொருவர்
தீக்கதிக்கண்செல்லுந்திறம் ? (கூரு)

திறம்பாதுஎன்னெஞ்சமே ! செங்கண்மால்கண்டாய் *
அறம்பாவமென்றிரண்டுமாவான்*—புறந்தான்இம்
மண்தான் மறிகடல்தான்மாருதந்தான் * வான்தானே
கண்டாய் கடைக்கட்பிடி. (கூசு)

பிடிசேர் களிறளித்தபேராளா ! * உன்தன்
அடிசேர்ந்தருள்பெற்றாளன்றே *—பொடிசேர்
அனற்கங்கையேற்றான் அவிர்சடைமேல்பாய்ந்த *
புனற்கங்கையென்னும்பேர்ப்பொன். (கூஎ)

பொன்திகழுமேனிப் புரிசடையம்புண்ணியனும் *
நின்றுலகம்தாயநெடுமாலும் *—என்றும்
இருவரங்கத்தால் திரிவரேலும் * ஒருவன்
ஒருவனங்கத்துஎன்றுமுளன். (கூஅ)

உளன்கண்டாய்நன்னெஞ்சே ! உத்தமனென்றும்
உளன்கண்டாய் * உள்ளுவாருள்ளத்து—உளன்கண்டாய் *
வெள்ளத்தினுள்ளானும் வேங்கடத்துமேயானும் *
உள்ளத்தினுள்ளானென்றுஓர். (கூகூ)

ஓரடியும்சாடுதைத்த ஒண்மலர்ச்சேவடியும் *
ஈரடியும்காணலாம் என்னெஞ்சே ! *—ஓரடியின்
தாயவனைக்கேசவனைத் தண்துழாய்மாலைசேர் *
மாயவனையேமனததுவை. (க00)

தசகமுடிவாவு:—வையம் வாய் நின்று புரி குன்று எளிதில் உலகும் நன்று ஆள் ஊன் அன்பு

பொய்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

---

† 'மற்றிவையாமென்று' என்பதும் பாடம். ‡ 'மறையவர்க்கு' என்றும் பாடம்.

பூதத்தாழ்வார், அருளிச்செய்த

# இரண்டாந்திருவந்தாதி.

## தனியன்.

(திருக்குருகைப்பிரான்பிள்ளான் அருளிச்செய்தது.)

நேரிசைவெண்பா

என்பிறவிதீர இறைஞ்சினேன் இன்னமுதா *
அன்பேதகளியளித்தானை *—நன்புகழ்சேர்
சீதத்தார்முத்துக்கள்சேரும் * கடல்மல்லைப்
பூததத்தார்பொன்னங்கழல்.

(பைரவிராகம் - திரிபுடைதாளம்.)

அன்பேதகளியா ஆர்வமேநெய்யாக *
இன்புருகுசிந்தையிடுதிரியா *—நன்புருகி
ஞானச்சுடர்விளக்கேற்றினேன், நாரணற்கு *
ஞானத்தமிழ்புரிந்தநான். (க)

ஞானத்தால்நன்குணர்ந்து நாரணன்தன்நாமங்கள் *
தானத்தால்மற்றவன்பேர்சாற்றினால் *—வானத்
தணியமரர் ஆக்குவிக்குமஃதன்றே? * நங்கள்
பணியமரர்கோமான்பரிசு. (உ)

பரிசுநறுமலரால் பாற்கடலான்பாதம் *
புரிவார்புகப்பெறுவர்போலாம் *—புரிவார்கள்
தொல்லமரர்கேள்வித் துலங்கொளிசேர்தோற்றத்து *
நல்லமரர்கோமான்நகர். (ங)

நகரிழைத்துநித்திலத்து நாண்மலர்கொண்டு * ஆங்கே
திகழுமணிவயிரம்சேர்த்து *—நிகரில்லாப்
பைங்கமலமேந்திப் பணிந்தேன்பனிமலராள் *
அங்கம்வலங்கொண்டானடி. (ச)

அடிமூன்றில்இவ்வுலகம் அன்றுஅளந்தாய்போலும் *
அடிமூன்றிரந்துஅவனிகொண்டாய் *—படிநின்ற
நீரோதமேனி நெடுமாலே! * நின்னடியை
யாரோதவல்லார்அறிந்து? (ரு)

அறிந்துஐந்தும்உள்ளடக்கி ஆய்மலர்கொண்டு * ஆர்வம்
செறிந்தமனத்தராய்ச்செவ்வே*—அறிந்துஅவன்தன்
பேரோதியேத்தும் பெருந்தவத்தோர்காண்பரே *
காரோதவண்ணன்கழல். (சா)

கழலெடுத்துவாய்மடித்துக் கண் †சுழன்று * மாற்றார்
அழலெடுத்த சிந்தையராய்அஞ்ச *—தழலெடுத்த
போராழியேந்தினான் பொன்மலர்ச்சேவடியை *
ஓராழிநெஞ்சே! உகந்து. (எ)

உகந்துஉன்னைவாங்கி ஒளிநிறங்கொள்கொங்கை *
அகங்குளிரஉண்ணென்றாளாவி*—உகந்து
மூலையுண்பாய்போலே முனிந்துண்டாய் * நீயும்
அலை ‡ பண்பாலானமையாலன்று. (அ)

அன்றதுகண்டஞ்சாத ஆய்ச்சிஉனக்கிரங்கி *
நின்றுமுலைதந்த இந்நீர்மைக்கு*—அன்று
வரன்முறையால்நீயளந்த மாகடல்சூழ்ஞாலம்*
பெருமுறையாலெய்துமோபேர்த்து? (கூ)

பேர்த்தனை மாசகடம் பிள்ளையாய் * மண்ணிரந்து
காத்தனை பல்லுயிரும்காவலனே!—*ஏத்திய
நாவுடையேன்பூவுடையேன் நின்னுள்ளிநின்றமையால் *
காஅடியேன்பட்டகடை. (க0)

கடைநின்றுஅமரர் கழல்தொழுது * நாளும்
இடைநின்ற இன்பத்தராவர் *—புடைநின்ற
நீரோதமேனி நெடுமாலே! * நின்னடியை
யாரோதவல்லாரவர்? (கக)

அவரிவரென்றில்லை அரவணையான்பாதம் *
எவர்வணங்கி யேத்தாதாரெண்ணில் *—பவரும்
செழுங்கதிரோன்ஒண்மலரோன் கண்ணுதலோனன்றே?*
தொழுந்தகையார் நாளும்தொடர்ந்து. (கஉ)

† 'சுழன்ற' என்ற பாடம் சேரும். ‡ 'பண்பாய்' என்றும் பாடம்.

தொடரெடுத்தமால்யானை சூழ்கயம்புக்கஞ்சி *
படரெடுத்தபைங்கமலங்கொண்டு *—அன்றுஇடரடுக்க
ஆழியான் பாதம்பணிந்தன்றே? * வானவர்கோன்
பாழிதா னெய்திற்றுப்பண்டு. (கங)

பண்டுஇப்பெரும்பதியையாக்கி * பழிபாவம்
கொண்டுஇங்குவாழ்வாரைக்கூறுமே*—எண்திசையும்
பேர்த்தகரம்நான்குடையான் பேரோதிப்பேதைகாள்! *
தீர்த்தகராமின்திரிந்து. (கச)

திரிந்ததுவெஞ்சமத்துத் தேர்கடவி * அன்று
பிரிந்தது சீதையைமான்பின்போய் *—புரிந்ததுவும்
கண்பள்ளிகொள்ள, அழகியதே! *நாகத்தின்
தண்பள்ளிகொள்வான்தனக்கு. (கரு)

தனக்கடிமைபட்டது தானறியானேலும் *
மனத்தடைய வைப்பதாம்மாலை*—வனத்திடரை
ஏரியாம்வண்ணம் இயற்றுமிதுவல்லால் *
மாரியார்பெய்கிற்பார்மற்று? (கசு)

மற்றாரியலாவார்? வானவர்கோன்மாமலரோன் *
சுற்றும்வணங்குமதொழிலானை*—ஒற்றைப்
பிறையிருந்த செஞ்சடையான்பின்சென்று * மாலைக்
குறையிரந்து தான்முடித்தான்கொண்டு. (கஎ)

கொண்டதுலகம் குறளுருவாய், கோளரியாய் *
ஒண்திறலோன்மார்வததுகிர்வைத்தது*—உண்டதுவும்
தான்கடந்தவேழுலகே தாமரைக்கண்மால்ஒருநாள் *
வான்கடந்தான் செய்தவழக்கு. (கஅ)

வழக்கன்றுகண்டாய் வலிசகடம்செற்றாய் *
வழக்கென்றுநீமதிக்கவேண்டா*—குழக்கன்று
தீவிளவின்காய்க்கெறிந்த தீமைதிருமாலே! *
பார்விளங்கச்செய்தாய்பழி. (கக)

பழிபாவமகையகற்றிப் பல்காலும்நின்னை *
வழிவாழ்வார் வாழ்வராம்மாதோ*—வழுவின்றி
நாரணன்தன்நாமங்கள் நன்குணர்ந்துநன்கேத்தும் *
† காரணங்கள்தாமுடையார்தாம். (உ0)

† 'தாரணங்கள்' என்று பாடாந்தரம்.

தாமுளரே தம்முள்ளமுள்ளுளதே * தாமரையின்
பூவுளதே ஏத்தும்பொழுதுண்டே *—வாமன்
திருமருவு தாள்மருவுசென்னியரே *செவ்வே
அருநரகம்சேர்வதரிது. (௨௧)

அரியதுஎளிதாகும் ஆற்றலால்மாற்றி *
பெருகமுயல்வாரைப் பெற்றால்*—கரியதோர்
வெண்கோட்டுமால்யானை † வென்றிமுடித்தன்றே *
‡ தண்கோட்டுமாமலரால்தாழ்ந்து. (௨௨)

தாழ்ந்துவரங்கொண்டு தக்கவகைகளால் *
வாழ்ந்துகழிவாரை வாழ்விக்கும்*—தாழ்ந்த
விளங்கனிக்குக் கன்றெறிந்துவேறுருவாய் * ஞாலம்
அளந்துஅடிக்கீழ்க்கொண்டஅவன். (௨௩)

அவன்கண்டாய்நன்னெஞ்சே ! ஆருளும்கேடும் *
அவன்கண்டாய் ஐம்புலனாய்நின்றான்*—அவன்கண்டாய்
காற்றுததீநீர்வான் கருவரைமண்காரோதச் *
சீற்றத்தீயாவானும்சென்று. (௨௪)

சென்றதுஇலங்கைமேல் செவ்வேதன்சீற்றத்தால் *
கொன்றதுஇராவணனைககூறுங்கால்* —நின்றதுவும
வேயோங்குதண்சாரல் வேங்கடமே * விண்ணவர்தம்
வாயோங்குதொல்புகழான்வந்து. (௨௫)

வந்திததவனை வழிநின்றவைம்பூதம் *
ஐந்தும்அகத்தடக்கி ஆர்வமாய் * — உந்திப்
படியமரர்வேலையான் பண்டுஅமரர்க்கீந்த *
படியமரர்வாழும்பதி. (௨௬)

பதியமைந்துநாடிப பருததெழுந்தசிந்தை *
மதியுரிஞ்சிவான்முகடுநோக்கி * — § கதிமிகுததுஅம்
கோல்தேடியோடும் கொழுந்ததேபோன்றதே *
மால்தேடியோடும்மனம். (௨௭)

மனத்துள்ளான்வேஙகடததான் மாகடலான் * மற்றும்
நினைப்பரிய நீளரங்கத்துள்ளான் *—எனைப்பலரும்
தேவாதிதேவ னெனப்படுவான் * முன்னொருநாள்
மாவாய்பிளந்தமகன். (௨௮)

† 'வென்று' என்று சிலர். ‡ 'தண்தோட்டு' என்பதும் பாடம்.
§ 'கதிர்' என்பதும் பாடம்.

மகனாகக்கொண்டெடுத்தாள் மாண்பாயகொங்கை *
அகனாரவுண்பனென்றுண்டு *—மகனைத்தாய்
தேறாதவண்ணம் திருத்தினாய் * தென்னிலங்கை
நீறாகவெய்தழித்தாய் ! நீ. (உ௯)

நீயன்றுலகளந்தாய் நீண்டதிருமாலே! *
நீயன்றுலகிடந்தாயென்பரால் *—நீயன்று
காரோதம்முன்கடைந்து பின்னடைத்தாய்மாகடலை *
பேரோதமேனிப்பிரான் ! (௩0)

பிரானென்றுநாளும் பெரும்புலரியென்றும் *
குராநற்செழும்போதுகொண்டு —*வராகத்து
அணியுருவன் பாதமபணியுமவர்கண்டீர் *
மணியுருவம்காண்பார்மகிழ்ந்து. (௩க)

மகிழ்ந்ததுசிந்தை திருமாலே! * மற்றும்
மகிழ்ந்தது உன்பாதமேபோற்றி *—மகிழ்ந்தது
அழலாழிசங்க மவைபாடியாடும் *
தொழிலாகம் சூழ்ந்துதுணிந்து. (௩உ)

துணிந்ததுசிந்தை துழாயலங்கல் * அங்கம்
அணிந்தவன்பேர் உள்ளத்துப்பல்கால் *— பணிந்ததுவும்
வேய்பிறங்குசாரல் விறல்வேங்கடவனையே *
வாய்திறங்கள்சொல்லும்வகை. (௩௩)

வகையால்அவனி இரந்தளந்தாய்பாதம் *
புகையால்நறுமலரால்முன்னே *—மிகவாய்ந்த
அன்பாக்கியேத்தி அடிமைப்பட்டேன்உனக்கு *
என்பாக்கியத்தால்இனி. (௩௪)

இனிதென்பர்காமம் அதனிலும்ஆற்ற *
இனிதென்பர் தண்ணீரும்எந்தாய் !— * இனிதென்று
காமநீர்வேளாது நின்பெருமைவேட்பரேல் *
சேமநீராகும்சிறிது. (௩௫)

சிறியார்பெருமை சிறிதின்கணெய்தும் *
அறியாரும் தாமறியாராவர் *—அறியாமை
மண்கொண்டுமண் ணுண்டு மண் ணுமிழ்ந்தமாயனென்று *
எண்கொண்டுஎன்னெஞ்சே ! இரு. (௩௬)

இருந்தண்கமலத் திருமலரினுள்ளே *
திருந்துதிசைமுகனைத்தந்தாய் !—பொருந்தியநின்
பாதங்களேத்திப் பணியாவேல் * பல்பிறப்பும்
ஏதங்களெல்லாமெமக்கு. (௩எ)

எமக்கென்றுஇருநிதியம் ஏமாந்திராதே *
தமக்கென்றும் † சார்வமறிந்து *— நமக்கென்றும்
மாதவனேயென்னும் மனம்படைத்து * மற்றவன்பேர்
ஓதுவதே நாவினாலோத்து. (௩அ)

ஓத்தின்பொருள்முடிவும் இத்தனையே * உத்தமன்பேர்
ஏத்தும் திறமறிமின்ஏழைகாள் ! * ஓத்ததனை
வல்லீரேல் நன்று, அதனைமாட்டீரேல் * மாதவன்பேர்
சொல்லுவதே ஓத்தின்சுருக்கு. (௩௯)

சுருக்காகவாங்கிச் சுலாவிநின்று * ஐயார்
நெருக்காமுன் நீர்நினைமின்கண்டீர் * —திருப்பொலிந்த
ஆகத்தான் பாதமறிந்தும்அறியாத *
போகத்தாலில்லைபொருள். (சo)

பொருளால்அமருலகம் புக்கியலலாகாது *
‡ அருளாள்அறமருளுமன்றே? *—அருளாலே
மாமறையோர்க்கீந்த மணிவண்ணன்பாதமே *
நீமறவேல்நெஞ்சே ! நினை. (சக)

நினைப்பன்திருமாலை நீண்டதோள்காண *
நினைப்பார் $ பிறப்பொன்றும்நேரார் *—மனைப்பால்
பிறந்தார்பிறந்தெய்தும் பேரின்பமெல்லாம் *
துறந்தார்தொழுதாரத்தோள். (சஉ)

தோளிரண்டெட்டேழும் மூன்றும்முடியனைத்தும் *
தாளிரண்டும்வீழச் சரந்துரந்தான்—தாளிரண்டும் *
ஆர்தொழுவார் பாதமவைதொழுவதன்றே ? * என்
சீர்கெழுதோள் செய்யுமசிறப்பு. (ச௩)

சிறந்தார்க்கெழுதுணையாம் செங்கண்மால்நாமம் *
மறந்தாரைமானிடமாவையேன் *—அறந்தாங்கும்
மாதவனே ! என்னும் மனம்படைத்து * மற்றவன்பேர்
ஓதுவதே நாவினால்உள்ளு. (சச)

---

† 'சாவென்றறிந்து' என்னும் பாடம் பொருந்தும். ‡ 'அருளான்' என்றும்பாடம். $ 'பிறப்பென்றும்' என்றும்பாடம்.

உளதென்றிறுமாவார் உண்டில்லையென்று *
தளர்தலதனருகுஞ்சாரார் *—அளவரிய
வேதத்தான்வேங்கடத்தான் விண்ணோர்முடிதோயும் *
பாதத்தான் பாதம்பயின்று. (சரு)

பயின்றது அரங்கம் திருக்கோட்டி * பன்னாள்
பயின்றதுவும் வேங்கடமே * பன்னாள்—பயின்றது
அணிதிகழும்சோலை அணிநீர்மலையே *
மணிதிகழும்வண் தடக்கைமால். (சசு)

மாலையரியுருவன் பாதமலரணிந்து *
காலைதொழுதெழுமின் கைகோலி *—ஞாலம்
அளந்திடந்துஉண்டுமிழ்ந்த அண்ணலை† மற்றல்லால் *
உளங்கிடந்தவாற்றால்உணர்ந்து. (சஎ)

உணர்ந்தாய்மறைநான்கும் ஓதினாய்நீதி *
மணந்தாய்மலர்மகள்தோள்மாலே! *—மணந்தாய்போய்
வேயிருஞ்சாரல் வியலிருஞாலம்சூழ் *
மாயிருஞ்சோலைமலை. (சஅ)

மலையேழும் மாநிலங்களேழும் அதிர *
குலைசூழ் குரைகடல்களேழும் *—முலைசூழ்ந்த
நஞ்சுரத்துப்பெண்ணை நவின்றுண்டநாவனென்று *
அஞ்சாதுஎன்னெஞ்சே! அழை. (சகூ)

அழைப்பன் திருமாலை ஆங்குஅவர்கள்சொன்ன *
பிழைப்பில் பெரும்பெயரேபேசி *—இழைப்பரிய
ஆயவனே! யாதவனே! என்றவனையார்முகப்பும் *
மாயவனே! என்றுமதித்து. (டுo)

மதிக்கண்டாய்நெஞ்சே! மணிவண்ணன்பாதம் *
மதிக்கண்டாய் மற்றவன்பேர்தன்னை *—மதிக்கண்டாய்
பேராழிநின்று பெயர்ந்துகடல்கடைந்த *
நீராழிவண்ணன்நிறம். (டுக)

நிறம்கரியன் செய்யநெடுமலராள்மார்வன் *
அறம்பெரியன்ஆரதறிவார்? *—மறம்புரிந்த
வாளரக்கன்போல்வானை வானவர்கோன்தானத்து *
நீளிருக்கைக்குய்த்தான்நெறி. (டுஉ)

† 'மற்றெல்லாம்' என்றும் பாடம்.

செறியார்குழற்கற்றை முன்னின்றுபின்தாழ்ந்து *
அறியாதிளங்கிரியென்றெண்ணி *—பிறியாது
பூங்கொடிக்கள்வைகும் பொருபுனற்குன்றென்னும் *
வேங்கடமே யாம்விரும்பும்வெற்பு. (ருந)

வெற்பென்றிருஞ்சோலை வேங்கடமென்றிவ்விரண்டும் *
நிற்பென்று நீமதிக்கும்நீர்மைபோல் *—நிற்பென்று
உளங்கோயில் உள்ளம்வைத்துள்ளினேன் * வெள்ளத்
திளங்கோயில் கைவிடேலென்று. (ருச)

என்றும்மறந்தறியேன் ஏழ்பிறப்புமெப்பொழுதும் *
நின்றுநினைப்பொழியா நீர்மையால் *—வென்றி
அடலாழிகொண்ட அறிவனே ! * இன்பக்
கடலாழி நீயருளிக்காண். (ருரு)

காணக்கழிகாதல் கைமிக்குக்காட்டினால் *
நாணப்படுமென்றால்நாணுமே? *—பேணிக்
கருமாலைப் பொன்மேனிகாட்டாமுன்காட்டும் *
திருமாலை நங்கள்திரு. (ருசா

திருமங்கைநின்றருளும்தெய்வம் நாவாழ்த்தும் *
கருமம் கடைப்பிடிமின்கண்டீர் *—உரிமையால்
ஏத்தினோம்பாதம் இருந்தடக்கையெந்தைபேர் *
நால்திசையும்கேட்டீரே? நாம். (ருஎ)

நாம்பெற்றநன்மையும் நாமங்கைநன்னெஞ்சத்து *
ஓம்பியிருந்தஎம்மையோதுவித்து *—வேம்பின்
பொருள்நீர்மையாயினும் பொன்னாழிபாடென்று *
அருள்நீர்மைதந்த அருள். (ருஅ)

அருள்புரிந்தசிந்தை அடியார்மேல்வைத்து *
பொருள்தெரிந்துகாண்குற்ற அப்போது *—† இருள்திரிந்து
நோக்கினேன்நோக்கி நினைந்தேனதொண்கமலம் *
ஓக்கினேன் என்னையுடன்கோர்ந்து. (ருசு)

ஒருருவனல்லை ஒளியுருவம்நின்னுருவம் *
ஈருருவனென்பர் இருநிலத்தோர் *—ஒருருவம்
ஆதியாம்வண்ணம் அறிந்தாரவர்கண்டீர் *
நீதியால் மண்காப்பார்நின்று. (சுO)

---

† 'இருளிரிந்து' என்னும் பாடம் வ்யாக்யாநத்துக்கு நன்கு பொருந்தும்.

நின்றனேர்பாதம் நிலம்புதைப்ப * நீண்டதோள்
சென்றளந்ததென்பர் திசையெல்லாம் *—அன்று
கருமாணியாய்இரந்தகள்வனே ! * உன்னைப்
பிரமாணித்தார் பெற்றபேறு ! (சுக)

பேறொன்றுமுன்னறியேன் பெற்றறியேன்பேதைமையால் *
மாறென்றுசொல்லி வணங்கினேன் *—ஏறின்
பெருத்தெருத்தங்கோடொசியப் பெண்ணசையின்பின்போய் *
எருத்திறுத்தநல்லாயரேறு. (சுஉ)

ஏறேழும் வென்றுஅடர்த்தஎந்தை * எரியுருவத்து
ஏறேறி பட்டவிடுசாபம் *—பாறேறி
உண்டதலைவாய்நிறையக் கோட்டங்கையொண்குருதி *
கண்டபொருள்சொல்லின்கதை. (சுங)

† கதையின்பெரும்பொருளும் கண்ணா ! * நின்பேரே
இதயமிருந்தவையேயேத்தில் *—கதையும்
திருமொழியாய் நின்றதிருமாலே! * உன்னைப்
பருமொழியால்காணப்பணி. (சுச)

பணிந்தேன் திருமேனி பைங்கமலம்கையால் *
அணிந்தேன்உன்சேவடிமேல் அன்பாய் *—துணிந்தேன்
புரிந்தேத்தி உன்னைப்புகலிடம்பார்த்து * ஆங்கே
இருந்தேததிவாழுமிது. (சுரு)

இதுகண்டாய்நன்னெஞ்சே ! இப்பிறவியாவது *
இதுகண்டாய் எல்லாம்நாமுற்றது *—இதுகண்டாய்
நாரணன்பேரோதி நரகத்தருகணையா *
காரணமும்வல்லையேல்காண். (சுசு)

கண்டேன் திருமேனி யான்கனவில் * ஆங்கவன்கைக்
கண்டேன் கனலும்சுடராழி—கண்டேன் *
உறுநோய்வினையிரண்டும் ஓட்டுவித்து * பின்னும்
மறுநோய்செறுவான்வலி. (சுஎ)

வலிமிக்கவாளெயிற்று வாளவுணர்மாள *
வலிமிக்க வாள்வரைமத்தாக *—வலிமிக்க
வாள்நாகம்சுற்றி மறுகக்கடல்கடைந்தான் *
கோள்நாகங்கொம்பொசித்தகோ. (சுஅ)

† 'கதையும்' என்பதும் பாடம்.

கோவாகி மாநிலங்காத்து * நங்கண்முகப்பே
மாவேகிச்செல்கின்ற மன்னவரும் *—† பூமேவும்
செங்கமலநாபியான் சேவடிக்கேயேழ்பிறப்பும் *
தண்கமலமேய்ந்தார்தமர். (௬௯)

தமருள்ளம்தஞ்சை தலையரங்கம்தண்கால் *
தமருள்ளுந்தண்பொருப்புவேலை *—தமருள்ளும்
மாமல்லைகோவல் மதிட்குடந்தையென்பரே *
ஏவல்லஎந்தைக்குஇடம். (௭0)

இடங்கை வலம்புரிநின்றார்ப்ப * எரிகான்று
அடங்கார் ஒடுங்குவித்ததாழி *—விடங்காலும்
தீவாயரவணைமேல்தோன்றல், திசையளப்பான் *
பூவாரடி நிமிர்த்தபோது. (௭௧)

போதறிந்துவானரங்கள் பூஞ்சுனைபுக்கு * ஆங்கலர்ந்த
போதரிந்துகொண்டேத்தும் * போதுஉள்ளம் !—போது
மணிவேங்கடவன் மலரடிக்கேசெல்ல *
அணிவேங்கடவன்பேராய்ந்து. (௭௨)

ஆய்ந்துரைப்பன்ஆயிரம்பேர் ஆதிநடுவந்திவாய் *
வாய்ந்தமலர் தூவிவைகலும் *—ஏய்ந்த
பிறைக்கோட்டுச் செங்கண்கரிவிடுத்தபெம்மான் *
இறைக்குஆட்படத்துணிந்தயான். (௭௩)

யானேதவஞ்செய்தேன் ஏழ்பிறப்புமெப்பொழுதும் *
யானேதவமுடையேன் எம்பெருமான் ! *—யானே
இருந்தமிழ்நன்மாலை இணையடிக்கேசொன்னேன் *
பெருந்தமிழன்நல்லேன்பெரிது. (௭௪)

பெருகுமதவேழம் மாப்பிடிக்குமுன்னின்று *
இருகணிளமூங்கில்வாங்கி *—அருகிருந்த
தேன்கலந்துநீட்டும் திருவேங்கடம்கண்டீர் *
வான்கலந்தவண்ணன்வரை. (௭௫)

வரைச்சந்தனக்குழம்பும் வான்கலனும்பட்டும் *
விரைப்பொலிந்த வெண்மல்லிகையும்—நிரைத்துக்கொண்டு *
ஆதிக்கண்நின்ற அறிவனடியிணையே *
ஓதிப்பணிவதுறும். (௭௬)

† 'பூவேகும்' என்று உரையின் பாடம்.

உறுங்கண்டாய்நன்னெஞ்சே ! உத்தமன்நற்பாதம் *
உறுங்கண்டாய் ஒண்கமலந்தன்னால் *—உறுங்கண்டாய்
ஏத்திப்பணிந்தவன்பேர் ஈரைஞ்ஞூறெப்பொழுதும் *
† சாத்தியுரைத்தல்தவம். (எஎ)

தவஞ்செய்து நான்முகனேபெற்றான் * தாரணி
நிவந்தளப்ப நீட்டியபொற்பாதம் *—சிவந்ததன்
கையனைத்தும் ஆரக்கழுவினான் * கங்கைநீர்
பெய்தனைத்துப்பேர்மொழிந்துபின். (எஅ)

பின்னின்று தாபிரப்பக்கேளான் * பெரும்பணைத்தோள்
முன்னின்று தானிரப்பாள்மொய்ம்மலராள் *—சொல்நின்ற
தோள்நலந்தான் நேரில்லாத்தோன்றல் * அவனளந்த
நீள்நிலந்தான் அத்தனைக்கும்நேர். (எகூ)

நேர்ந்தேன்அடிமை நினைந்தேனதொண்கமலம் *
ஆர்ந்தேன்உன்சேவடிமேலன்பாய் *—ஆர்ந்த
அடிக்கோலம் கண்டவர்க்குஎன்கொலோ ? * முன்னைப்
படிக்கோலம்கண்டபகல். (அ0)

பகல்கண்டேன் நாரணனைக்கண்டேன் * கனவில்
மிகக்கண்டேன் மீண்டுஅவனைமெய்யே—மிகக்கண்டேன் *
ஊன்திகழும்நேமி ஒளிதிகழுமசேவடியான் *
வான்திகழும் சோதிவடிவு. (அக)

வடிக்கோலவாள்நெடுங்கண் மாமலராள் * செவ்வியப
படிக்கோலம்கண்டு அகலாள்பல்நாள் *—அடிக்கோலி
ஞாலத்தாள் பின்னுமநலம்புரிந்ததுஎன்கொலோ ? *
கோலத்தால்இல்லைகுறை. (அஉ)

குறையாகவெஞ்சொற்கள் கூறினேன்கூறி *
மறையாங்கெனவுரைத்தமாலை *—இறையேனும்
ஈயுங்கொல் ! என்றே இருந்தேன்எனைப்பகலும் *
மாயன்கண்சென்றவரம். (அ௩)

வரங்கருதித்தன்னை வணங்காதவன்மை *
உரங்கருதிமூர்க்கத்தவனை *—நரங்கலந்த
சிங்கமாய்க்கீண்ட திருவனடியிணையே *
அங்கண்மாஞாலத்துஅமுது. (அ௪)

† 'சாற்றி' என்று சிலர்.

அமுதென்றும்தேனென்றும் ஆழியானென்றும் *
அமுதன்றுகொண்டுகந்தானென்றும் *—அமுதன்ன
சொல்மாலையேத்தித் தொழுதேன்சொலப்பட்ட *
நன்மாலையேத்திநவின்று. (௮௫)

நவின்றுரைத்தநாவலர்கள் நாள்மலர்கொண்டு * ஆங்கே
பயின்றதனால் பெற்றபயனென்கொல்? *—பயின்றார்தம்
மெய்த்தவத்தால் காண்பரியமேகமணிவண்ணனை * யான்
எத்தவத்தால்காண்பன்கொல் இன்று? (௮௬)

இன்றா அறிகின்றேனல்லேன் * இருநிலத்தைச்
சென்று ஆங்களந்த திருவடியை *—அன்று
கருக்கோட்டியுள்கிடந்து கைதொழுதேன், கண்டேன் *
திருக்கோட்டியெந்தைதிறம் (௮௭)

திறம்பிற்றினியறிந்தேன் தென்னரங்கத்தெந்தை *
திறம்பாவழிசென்றார்க்கல்லால் *—திறம்பாச்
செடிநரகைநீக்கித் தாம்செல்வதன்முன் * வானோர்
கடிநகரவாசற்கதவு. (௮௮)

கதவிக் † கதஞ்சிறந்த கஞ்சனைமுன்காய்ந்து *
அதவிப்போர்யானையொசித்து *—பதவியாய்ப்
பாணியால்நீரேற்றுப் பண்டொருகால்மாவலியை *
மாணியாய்க்கொண்டிலையேமண்? (௮௯)

மண்ணுலகம் ஆளேனே? வானவர்க்கும்வானவனாய் *
விண்ணுலகந்தன்னகத்ததுமேவேனே? *—நண்ணித்
திருமாலைச் செங்கண்நெடியானை * எங்கள்
பெருமானைக் கைதொழுதபின். (௯0)

பின்னால்அருநரகம் சேராமல், பேதுறுவீர் *
முன்னால்வணங்கமுயன்மினோ *—பன்னூல்
‡ அளந்தானைக் கார்க்கடல்சூழ்ஞாலத்தை * எல்லாம்
அளந்தானவன்சேவடி. (௯௧)

அடியால் முன்கஞ்சனைச்செற்று * அமரரேத்தும்
படியான் கொடிமேல்புள்கொண்டான் *—நெடியான்தன்
நாமமே ஏத்துமின்கள், ஏத்தினால் * தாம்வேண்டும்
காமமே காட்டும்கடிது. (௯௨)

---

† 'கதஞ்சிறந்து' என்பதும் பாடம். ‡ 'அளந்தானிக்கார்க்கடல்' என்பதும் பாடம்.

கடிதுகொடுநரகம் பிற்காலும்செய்கை *
கொடிதென்று † அதுகூடாமுன்னம் *—வடிசங்கம்
கொண்டானைக் கூந்தல்வாய்கீண்டானை * கொங்கைநஞ்சு
உண்டானைஏத்துமினோஉற்று. (௯௩)

உற்றுவணங்கித்தொழுமின் * உலகேழும்
முற்றும்விழுங்கும் முகில்வண்ணன் *—பற்றிப்
பொருந்தாதான்மார்பிடந்து பூம்பாடகத்துள்
இருந்தானை * ஏத்துமென்னெஞ்சு. (௯௪)

என்னெஞ்சம்மேயான் என்சென்னியான் * தானவனை
வன்னெஞ்சம்கீண்ட மணிவண்ணன் *—முன்னம்சேய்
ஊழியான் ஊழிபெயர்த்தான் * உலகேத்தும்
ஆழியான் அத்தியூரான். (௯௫)

அத்தியூரான் புள்ளையூர்வான் * அணிமணியின்
துத்திசேர் நாகத்தின்மேல்துயில்வான் *—‡ முத்தீ
மறையாவான் மாகடல்நஞ்சுண்டான்தனக்கும் *
இறையாவான் எங்கள்பிரான். (௯௬)

எங்கள்பெருமான் ! இமையோர்தலைமகன் ! நீ *
செங்கண்நெடுமால் ! திருமார்பா ! *—பொங்கு
படமூக்கினாயிரவாய்ப் பாம்பணைமேல்சேர்ந்தாய் !
§ குடமூக்குக் கோயிலாக்கொண்டு. (௯௭)

கொண்டுவளர்க்கக் குழவியாய்த்தான்வளர்ந்தது *
உண்டதுஉலகேழும் உள்ளொடுங்க *—கொண்டு
குடமாடிக் கோவலனாய்மேவி * என்னெஞ்சம்
இடமாகக்கொண்டஇறை. (௯௮)

இறையெம்பெருமான் ! அருளென்று * இமையோர்
முறைநின்று மொய்ம்மலர்கள்தூவ *—அறைகழல
சேவடியான் செங்கணெடியான் * குறளுருவாய்
$ மாவடிவில்மண்கொண்டான்மால். (௯௯)

மாலே ! நெடியோனே ! கண்ணனே ! விண்ணவர்க்கு
மேலா ! * வியன்துழாய்க்கண்ணியனே ! *—மேலால்
விளவின்காய் கன்றினால்வீழ்த்தவனே ! * என்தன்
அளவன்றால் யானுடையஅன்பு. (௧00)

தசகஅடிவரவு:—அன்பு கடை தாம் பிரான் பொருள் மதி நின்றது இடங்கை பகல் பின்னால் திரு.

பூதத்தாழ்வார் திருவடிகளே சரணம்.

---

† 'அவை' என்ற பாடம் ஏற்கும் ‡ 'முத்தி' என்றும் பாடம். § 'குடமூக்கில்' என்றும் பாடம் $ 'மாவலியை' என்பதும் பாடம்.

பேயாழ்வார் அருளிச்செய்த

# மூன்றாந்திருவந்தாதி.

## தனியன்.

(குருகைகாவலப்பன் அருளிச்செய்தது.)

நேரிசைவெண்பா.

சீராரும்மாடத்திருக்கோவலூரதனுள் *
காரார்கருமுகிலைக்காணப்புக்கு *—ஓரத்
திருக்கண்டேனென்றுரைத்த சீரான்கழலே *
உரைக்கண்டாய்நெஞ்சே! உகந்து.

(மோஹநராகம் - திரிபுடைதாளம்.)

திருக்கண்டேன் பொன்மேனிகண்டேன் * திகழும்
அருக்கனணிநிறமுங்கண்டேன் *—செருக்கிளரும்
பொன்னாழிகண்டேன் புரிசங்கம்கைக்கண்டேன் *
என்னாழிவண்ணன்பால்இன்று. (க)

இன்றேகழல்கண்டேன் ஏழ்பிறப்பும்யானறுத்தேன் *
பொன்தோய்வரைமார்பில்பூந்துழாய் *—அன்று
திருக்கண்டுகொண்ட திருமாலே! * உன்னை
மருக்கண்டுகொண்டென்மனம். (உ)

மனத்துள்ளான் மாகடல்நீருள்ளான் * மலராள்
தனத்துள்ளான் தண்துழாய்மார்பன் *—சினத்துச்
செருநருகச்செற்றுகந்த தேங்கோதவண்ணன் *
வருநரகம்தீர்க்கும்மருந்து. (ந)

மருந்தும்பொருளும் அமுதமும்தானே *
திருந்தியசெங்கண்மாலாங்கே *—† பொருந்தியும்
நின்றுலகமுண்டுமிழ்ந்தும் நீரேற்றும்மூவடியால் *
அன்றுலகந்தாயோனடி. (ச)

† 'பொருந்திய' என்றும் வழங்குவர்.

அடிவண்ணம்தாமரை அன்றுலகம்தாயோன் *
படிவண்ணம் † பார்க்கடல்நீர்வண்ணம் *—முடிவண்ணம்
ஓராழிவெய்யோன் ஒளியும்அஃதன்றே *
ஆராழிகொண்டாற்குஅழகு. (௫)

அழகன்றேஆழியாற்கு ஆழிநீர்வண்ணம் *
அழகன்றேஅண்டங்கடத்தல் *—அழகன்றே
அங்கைநீரேற்றாற்கு அலர்மேலோன்கால்கழுவ *
கங்கைநீர்கான்றகழல். (௬)

கழல்தொழுதும்வாநெஞ்சே! கார்க்கடல்நீர்வேலை *
பொழிலளந்தபுள்ளூர்திச்செல்வன் *— ‡ எழிலளந்தங்கு
எண்ணற்கரியானை எப்பொருட்கும்சேயானை *
நண்ணற்கரியானைநாம். (௭)

நாமம்பலசொல்லி நாராயணாவென்று *
நாமங்கையால்தொழுதும்நன்னெஞ்சே!—வா * மருவி
மண்ணுலகமுண்டுமிழ்ந்த வண்டறையுந்தண்துழாய் *
கண்ணனையேகாண்கநங்கண். (௮)

கண்ணும்கமலம் கமலமேகைத்தலமும் *
மண்ணளந்தபாதமும் மற்றவையே *—எண்ணின்
கருமாமுகில்வண்ணன் கார்க்கடல்நீர்வண்ணன் *
திருமாமணிவண்ணன்தேசு. (௯)

தேசும்திறலும் திருவும்உருவமும் *
மாசில்குடிப்பிறப்பும் மற்றவையும்—பேசில் *
வலம்புரிந்தவான்சங்கம் கொண்டான்பேரோத *
நலம்புரிந்துசென்றடையும்நன்கு. (௧௦)

நன்கோதும் நால்வேதத்துள்ளான் * நறவிரியும்
பொங்கோதருவிப்புனல்வண்ணன் *—சங்கோதப்
பாற்கடலான் பாம்பணையின்மேலான் * பயின்றுரைப்பார்
நூற்கடலான் நுண்ணறிவினான். (௧௧)

அறிவென்னும்தாள்கொளுவி ஐம்புலனும்தம்மில் *
செறிவென்னும்திண்கதவம்செம்மி *—மறையென்றும்
நன்கோதி நன்குணர்வார்காண்பரே * நாள்தோறும்
பைங்கோதவண்ணன்படி. (௧௨)

† 'பாற்கடல்' என்பதும் பாடம். ‡ 'எழிலளந்தும்' என்றும் பாடம்.

படிவட்டத்தாமரை பண்டுலகம்நீரேற்று *
அடிவட்டத்தாலளப்ப நீண்ட—முடிவட்டம் *
ஆகாயமூடறுத்து அண்டம்போய்நீண்டதே *
மாகாயமாய்நின்றமாற்கு. (௧௩)

மாற்பால்மனஞ்சுழிப்ப மங்கையர்தோள்கைவிட்டு *
நூற்பால்மனம்வைக்கநொய்விதாம் *—நாற்பால
வேதத்தான்வேங்கடத்தான் விண்ணோர்முடிதோயும் *
பாதத்தான்பாதம்பணிந்து. (௧௪)

பணிந்துயர்ந்தபௌவப் படுதிரைகள்மோத *
பணிந்தபணமணிகளாலே—அணிந்து * அங்கு
அனந்தனணைக் கிடக்கும்அம்மான் * அடியேன்
மனந்தனணைக் கிடக்கும்வந்து. (௧௫)

வந்துதைத்தவெண்திரைகள் செம்பவளம் வெண்முத்தம் *
அந்திவிளக்குமணிவிளக்காம் *—எந்தை
ஒருவல்லித்தாமரையாள் ஒன்றியசீர்மார்வன் *
திருவல்லிக்கேணியான்சென்று. (௧௬)

சென்றநாள்செல்லாத செங்கண்மால்எங்கள்மால் *
என்றநாளெந்நாளும்நாளாகும் *—என்றும்
இறவாதஎந்தை இணையடிக்கேயாளாய் *
மறவாதுவாழ்த்துகஎன்வாய். (௧௭)

வாய்மொழிந்துவாமனனாய் மாவலிபால் * மூவடிமண்
நீயளந்துகொண்டநெடுமாலே! *—தாவியநின்
எஞ்சாஇணையடிக்கே ஏழ்பிறப்பும்ஆளாகி *
அஞ்சாதிருக்கஅருள். (௧௮)

அருளாதொழியுமே? ஆலிலைமேல் * அன்று
தெருளாதபிள்ளையாய்ச்சேர்ந்தான் *—இருளாத
சிந்தையராய்ச்சேவடிக்கே செம்மலர்தூய்க்கைதொழுது *
முந்தையராய் நிற்பார்க்குமுன். (௧௯)

முன்னுலகம் உண்டுமிழ்ந்தாய்க்கு * அவ்வுலகம்ஈரடியால்
பின்னளந்துகோடல் பெரிதொன்றே? *—என்னே!
திருமாலே! செங்கணெடியானே! * எங்கள்
பெருமானே! நீஇதனைப்பேசு. (௨0)

பேசுவார் எவ்வளவுபேசுவர் * அவ்வளவே
வாசமலர்த்துழாய்மாலையான் *—தேசுடைய
சக்கரத்தான் சங்கினான்சார்ங்கத்தான் * பொங்கரவ
வக்கரனைக்கொன்றான்வடிவு. (உக)

வடிவார்முடிகோட்டி வானவர்கள் * நாளும்
கடியார்மலர்தூவிக்காணும்—படியானை *
செம்மையால்உள்ளுருகிச் செவ்வனே நெஞ்சமே!
மெய்ம்மையேகாணவிரும்பு. (உஉ)

விரும்பிவிண்மண்ணளந்த அஞ்சிறையவண்டார் *
சுரும்புதொளையில்சென்றூத *—அரும்பும்
புனந்துழாய்மாலையான் பொன்னங்கழற்கே *
மனம்துழாய்மாலாய்வரும். (உ௩)

வருங்கால்இருநிலனும் மால்விசும்பும்காற்றும் *
நெருங்குதீநீருருவுமானான் *—பொருந்தும்
சுடராழி யொன்றுடையான்சூழ்கழலே * நாளும்
தொடராழிநெஞ்சே! தொழுது. (உ௪)

தொழுதால்பழுதுண்டே? தூநீருலகம் *
முழுதுண்டுமொய்குழலாளாய்ச்சி *—† இழுதுண்ட
வாயானை மால்விடையேழ்செற்றானை * வானவர்க்கும்
சேயானை நெஞ்சே! சிறந்து. (உ௫)

சிறந்தவென்சிந்தையும் செங்கணரவும *
நிறைந்த சீர்நீள்கச்சியுள்ளும் *—உறைந்ததுவும
வேங்கடமும்வெஃகாவும் வேளுக்கைப்பாடியுமே *
தாங்கடவார் தண்துழாயார். (உ௬)

ஆரே துயருழந்தார்? துன்புற்றாராண்டையார் *
காரேமலிந்தகருங்கடலை *—நேரே
கடைந்தானைக் காரணனை * நீரணைமேல்பள்ளி
அடைந்தானை நாளுமடைந்து. (உ௭)

அடைந்ததரவணைமேல் ஐவர்க்காய் * அன்று
மிடைந்தது பாரதவெம்போர் *—உடைந்ததுவும்
ஆய்ச்சிபால்மத்துக்கே அம்மனே *! வாளெயிற்றுப்
பேய்ச்சிபாலுண்டபிரான். (உ௮)

† 'விழுது' என்றும் கூறுவர்.

பேய்ச்சிபாலுண்ட பெருமானைப்பேர்ந்தெடுத்து *
ஆய்ச்சிமுலைகொடுத்தாள் அஞ்சாதே *—வாய்த்த
இருளார்திருமேனி இன்பவளச்செவ்வாய் *
தெருளாமொழியானைச்சேர்ந்து. (உகூ)

சேர்ந்ததிருமால் கடல்குடந்தைவேங்கடம் *
நேர்ந்தவென்சிந்தை நிறை † விசும்பு *—வாய்ந்த
மறைபாடகம்அனந்தன் வண்துழாய்க்கண்ணி *
இறைபாடியாயஇவை. (ஙo)

இவையவன்கோயில் இரணியனதாகம் *
அவைசெய்தரியுருவமானான் *—செவிதெரியா
நாகத்தான் நால்வேதத்துள்ளான் * நறவேற்றான்
பாகத்தான்பாற்கடலுளான். (ஙக)

பாற்கடலும்வேங்கடமும் பாம்பும்பனிவிசும்பும் *
நூற்கடலும் நுண்ணூலதாமரைமேல் *—பாற்பட்
டிருந்தார்மனமும் இடமாகக்கொண்டான் *
குருந்தொசித்தகோபாலகன். (ஙஉ)

பாலகனாய் ஆலிலைமேல்பைய * உலகெல்லாம்
மேலொருநாள்உண்டவனே ! மெய்ம்மையே *—மாலவனே !
மந்தரத்தால் மாநீர்க்கடல்கடைந்து * வானமுதம்
அந்தரத்தார்க்குஈந்தாய்நீ அன்று. (ஙங)

அன்றிவ்வுலகம் அளந்தஅசைவேகொல் ? *
நின்றிருந்துவேளுக்கைநீள்நகர்வாய் *—அன்று
கிடந்தானைக் கேடில்சீரானை * முன்கஞ்சைக்
கடந்தானை நெஞ்சமே ! காண். (ஙச)

காண்காணென விரும்புங்கண்கள் * கதிரிலகு
பூண்தாரகலத்தான் பொன்மேனி *—பாண்கண்
தொழில்பாடி வண்டறையும் தொங்கலான் * செம்பொன்
கழல்பாடியாம்தொழுதும்கை. (ஙரு)

கையகனலாழி கார்க்கடல்வாய்வெண்சங்கம் *
வெய்யகதைசார்ங்கம் வெஞ்சுடர்வாள் *—செய்ய
படைபரவைபாழி பனிநீருலகம் *
அடியளந்த ‡ மாயரவர்க்கு. (ஙசா)

---

† 'விசும்பும்' என்றும் பாடமோதுவார்கள்

‡ 'மாயனவற்கு' என்பதும் பாடமாம.

அவற்கு அடிமைப்பட்டேன் அகத்தான்புறத்தான் *
உவர்க்குங்கருங்கடல்நீருள்ளான் *— துவர்க்கும்
பவளவாய்ப்பூமகளும் பன்மணிப்பூணாரம் *
திகழும்திருமார்பன்தான். (௩௭)

தானேதனக்குவமன் தன்னுருவேஎவ்வுருவும் *
தானேதவவுருவும்தாரகையும் *— தானே
எரிசுடரும்மால்வரையும் எண்டிசையும் * அண்டத்து
இருசுடருமாயஇறை. (௩௮)

இறையாய்நிலனாகி எண்டிசையும்தானாய் *
மறையாய்மறைப்பொருளாய்வானாய் *—பிறைவாய்ந்த
வெள்ளத்தருவி விளங்கொலிநீர்வேங்கடத்தான் *
உள்ளத்தினுள்ளேஉளன். (௩௯)

உளன்கண்டாய்நல்நெஞ்சே ! உத்தமனென்றும்
உளன்கண்டாய் * உள்ளுவாருள்ளத்து—உளன்கண்டாய் *
விண்ணொடுங்கக்கோடுயரும் வீங்கருவிவேங்கடத்தான் *
மண்ணொடுங்கத்தானளந்தமன். (௪௦)

மன்னுமணிமுடிநீண்டு அண்டம்போய்எண்டிசையும் *
துன்னுபொழிலனைத்தும்சூழ்கழலே *—மின்னை
உடையாகக்கொண்டு அன்றுலகளந்தான் * குன்றம்
குடையாகஆகாத்தகோ. (௪௧)

கோவலனாய் ஆநிரைகள்மேய்த்துக்குழலூதி *
மாவலனாய்க்கீண்ட மணிவண்ணன் *—மேவி
† அரியுருவமாகி இரணியனதாகம் *
தெரியுகிரால்கீண்டான்சினம். (௪௨)

சினமாமதகளிற்றின் திண்மருப்பைச்சாய்த்து *
புனமேயபூமியதனை —தனமாகப்
பேராகலத்துள்ளொடுக்கும் பேராரமார்வனார் *
ஓராகலத்துள்ளதுஉலகு. (௪௩)

உலகமும் ஊழியும்ஆழியும் * ஒண்கேழ்
அலர்கதிரும்செந்தீயுமாவான் *—பலகதிர்கள்
பாரித்த பைம்பொன்முடியானடியிணைக்கே *
பூரித்துஎன்னெஞ்சே ! புரி. (௪௪)

† 'எரியுருவம்' என்பதும் பாடம்.

புரிந்துமதவேழம் மாப்பிடியோடூடி *
திரிந்துசினத்தால்பொருது *—விரிந்தசீர்
வெண்கோட்டு முத்துதிர்க்கும் வேங்கடமே * மேலொருநாள்
மண்கோட்டுக்கொண்டான்மலை. (சரு)

மலைமுகடுமேல்வைத்து வாசுகியைச்சுற்றி *
தலைமுகடுதானொருகைபற்றி *—அலைமுகட்டு
அண்டம்போய்நீர்தெறிப்ப அன்றுகடல்கடைந்தான் *
பிண்டமாய்நின்றபிரான். (சசு)

நின்றபெருமானே! நீரேற்று * உலகெல்லாம்
சென்றபெருமானே! செங்கண்ணா! *—அன்று
துரகவாய்கீண்ட துழாய்முடியாய்! * நங்கள்
நரகவாய்கீண்டாயும்நீ. (சஎ)

நீயன்றேநீரேற்று உலகம்அடியளந்தாய்?*
நீயன்றே நின்றுநிரைமேய்த்தாய்? *—நீயன்றே
மாவாயுரம்பிளந்து மாமருதினூடுபோய் *
தேவாசுரம்பொருதாய்செற்று? (சஅ)

செற்றதுவும் சேராஇரணியனை * சென்றேற்றுப்
பெற்றதுவும் மாநிலம் பின்னைக்காய் *— முற்றல்
முரியேற்றின் முன்னின்றுமொய்ம்பொழித்தாய்! * மூரிச்
சுரியேறுசங்கினாய்! சூழ்ந்து. (சகூ)

சூழ்ந்ததுழாயலங்கல் சோதிமணிமுடிமால் *
தாழ்ந்தஅருவித்தடவரைவாய் *—ஆழ்ந்த
மணிநீர்ச்சுனைவளர்ந்த மாமுதலைகொன்றான *
அணிநீலவண்ணத்தவன். (ருo)

அவனேஅருவரையால் ஆநிரைகள்காத்தான் *
அவனே அணிமருதம்சாய்த்தான் *—அவனே
கலங்காப்பெருநகரம் காட்டுவான்கண்டீர்
இலங்காபுரமெரித்தானெய்து. (ருக)

எய்தான்மராமர மேழும்இராமனாய் *
எய்தானம்மான் † மறியையெந்திழைக்காய் *—எய்ததுவும்
தென்னிலங்கைக்கோன்வீழ, சென்றுகுறளுருவாய் *
முன்னிலங்கைக்கொண்டான்முயன்று. (ருஉ)

---

† 'மரிய' என்று சிலர் பாடங்கூறுவர்.

முயன்றுதொழுநெஞ்சே! மூரிநீர்வேலை *
இயன்றமரத்தாலிலையின்மேலால் *—பயின்றங்கோர்
மண்ணலங்கொள்வெள்ளத்து மாயக்குழவியாய் *
தண்ணலங்கல்மாலையான்தாள். (ருங)

தாளால்சகடம் உதைத்துப்பகடுந்தி *
கீளாமருதிடைபோய்க்கேழலாய் *—மீளாது
மண்ணகலம்கீண்டு அங்கோர் மாதுகந்தமார்வற்கு *
பெண்ணகலம்காதல்பெரிது. (ருச)

பெரியவரைமார்பில் பேராரம்பூண்டு *
கரியமுகிலிடைமின்போல *—† தெரியுங்கால்
பாணொடுங்க வண்டறையும்பங்கயமே * மற்றவன்தன்
நீள்நெடுங்கண்காட்டும்நிறம். (ருரு)

நிறம்வெளிதுசெய்து பசிதுகரிதென்று *
இறையுருவம்யாமறியோம்எண்ணில் *—‡ நிறைவுடைய
நாமங்கைதானும் நலம்புகழவல்லளே? *
பூமங்கைகேள்வன்பொலிவு. (ருசு)

பொலிந்திருண்டகார்வானில் மின்னேபோல்தோன்றி *
மலிந்துதிருவிருந்தமார்வன் *—$ பொலிந்த
கருடன்மேல்கொண்ட கரியான்கழலே *
தெருடன்மேல்கண்டாய்தெளி. (ருஎ)

தெளிந்தசிலாதலத்தின் மேலிருந்தமந்தி *
அளிந்தகடுவனையேநோக்கி *—விளங்கிய
வெண்மதியம் தாவென்னும்வேங்கடமே * மேலொருநாள்
மண்மதியில்கொண்டுகந்தான்வாழ்வு. (ருஅ)

வாழும்வகையறிந்தேன் மைபோல்நெடுவரைவாய் *
தாழுமருவிபோல்தார்கிடப்ப *—சூழும்
திருமாமணிவண்ணன் செங்கண்மால் * எங்கள்
பெருமானடிசேரப்பெற்று. (ருகூ)

பெற்றம்பிணைமருதம் பேய்முலைமாச்சகடம் *
முற்றக்காத்தூடுபோயுண்டுதைத்து *—கற்றுக்
குணிலை விளங்கனிக்குக்கொண்டெறிந்தான் * வெற்றிப்
பணிலம்வாய்வைத்துகந்தான்பண்டு. (கூ0)

---

† 'திரியுங்கால்' என்பது பாடாந்தரம். ‡ 'நிறமுடைய' என்பதும் பாடம்.
$ 'பொலிந்து' என்றும் பாடம்.

பண்டெல்லாம்வேங்கடம் பாற்கடல்வைகுந்தம் *
கொண்டங்குறைவார்க்குக்கோயில்போல் *—வண்டு
வளங்கிளரும்நீள்சோலை வண்பூங்கடிகை *
இளங்குமரன்தன்விண்ணகர். (௬௧)

விண்ணகரம்வெஃகா விரிதிரைநீர்வேங்கடம் *
மண்ணகரம்மாமாடவேளுக்கை *—மண்ணகத்த
தென்குடந்தை தேனார்திருவரங்கம்தென்கோட்டி *
தன்குடங்கைநீரேற்றான்தாழ்வு. (௬௨)

தாழ்சடையும்நீள்முடியும் ஒள்மழுவும்சக்கரமும் *
சூழரவும்பொன்னாணும் தோன்றுமால் *—சூழும்
திரண்டருவிபாயும் திருமலைமேலெந்தைக்கு *
இரண்டுருவுமொன்றாயிசைந்து. (௬௩)

இசைந்தஅரவமும் வெற்பும்கடலும் *
பசைந்தங்கமுது † படுப்ப *—அசைந்து
கடைந்தவருத்தமோ ? கச்சிவெஃகாவில் *
கிடந்திருந்துநின்றதுவும்அங்கு. (௬௪)

‡ அங்கற்கிடரின்றி அந்திப்பொழுதத்து *
மங்கஇரணியனதாகத்தை *—பொங்கி
அரியுருவமாய்ப்பிளந்த அம்மானவனே *
கரியுருவம்கொம்பொசித்தான்காய்ந்து. (௬௫)

காய்ந்திருளைமாற்றிக் கதிரிலகுமாமணிகள் *
ஏய்ந்தபணக்கதிர்மேல்வெவ்வுயிர்ப்ப *—வாய்ந்த
மதுகைடவரும் வயிறுருகிமாண்டார் *
அதுகேடவர்க்கிறுதியாங்கு. (௬௬)

ஆங்குமலரும் குவியுமாலுந்திவாய் *
ஓங்கு $ கமலத்தினொண்போது *— ஆங்கைத்
திகிரிசுடரென்றும் வெண்சங்கம் * வானில்
பகருமதியென்றும்பார்த்து. (௬௭)

பார்த்தகடுவன் சுனைநீர்நிழல்கண்டு *
பேர்த்தோர்கடுவனெனப்பேர்ந்து *—கார்த்த
களங்கனிக்குக் கைநீட்டும்வேங்கடமே * மேல்நாள்
விளங்கனிக்குக் கன்றெறிந்தான்வெற்பு. (௬௮)

---

† 'படைப்ப' என்பதும் பாடம். ‡ 'அங்கக்கிடரின்றி' என்பதும் பாடம்.
$ 'கமலத்தி னொண்போது' என்னும் பாடத்தில் வெண்டளைசிதையும்.

வெற்பென்று வேங்கடம்பாடும் * வியன்துழாய்
கற்பென்றுசூடும் கருங்குழல்மேல் * — மல்பொன்ற
நீண்டதோள்மால்கிடந்த நீள்கடல்நீராடுவான் *
பூண்டநாளெல்லாம்புகும். (௬௯)

புகுமதத்தால் வாய்பூசிக்கீழ்தாழ்ந்து * அருவி
உகுமதத்தால் கால்கழுவிக்கையால் * —மிகுமதத்தேன்
விண்டமலர்கொண்டு விறல்வேங்கடவனையே *
கண்டுவணங்கும்களிறு. (௭0)

களிறுமுகில்குத்தக் கையெடுத்தோடி *
ஒளிறுமருப்பொசிகையாளி—பிளிறி
விழ * கொன்றுநின்றதிரும் வேங்கடமே * மேல்நாள்
குழக்கன்றுகொண்டெறிந்தான்குன்று. (௭௧)

குன்றொன்றினாய குறமகளிர்கோல்வளைக்கை *
சென்றுவிளையாடும்தீங்கழைபோய் * — வென்று
விளங்குமதிகோள்விடுக்கும் வேங்கடமே * மேலை
இளங்குமரர்கோமானிடம். (௭௨)

இடம்வலமேழ்பூண்ட இரவித்தேரோட்டி *
வடமுகவேங்கடத்துமன்னும் *—குடம்நயந்த
கூத்தனாய்நின்றான் குரைகழலேகூறுவதே *
நாத்தன்னாலுள்ளநலம். (௭௩)

நலமேவலிதுகொல்? நஞ்சூட்டுவன்பேய் *
நிலமேபுரண்டுபோய்வீழ * — சலமேதான்
வெங்கொங்கையுண்டானை மீட்டாய்ச்சியூட்டுவான் *
தன்கொங்கைவாய்வைத்தாள்சார்ந்து. (௭௪)

சார்ந்தகடுதேய்ப்பத் தடாவியகோட்டுச்சிவாய் *
ஊர்ந்தியங்கும் வெண்மதியின்ஒண்முயலை *—சேர்ந்து
சினவேங்கைபார்க்கும் திருமலையே * ஆயன்
புனவேங்கைநாறும்பொருப்பு. (௭௫)

பொருப்பிடையேநின்றும் புனல்குளித்தும் * ஐந்து
நெருப்பிடையேநிற்கவும் நீர்வேண்டா *—விருப்புடைய
வெஃகாவேசேர்ந்தானை † மெய்ம்மலர்தூய்க்கைதொழுதால் *
அஃகாவேதீவினைகள்ஆய்ந்து. (௭௬)

† 'மென்மலர்' என்பது சிலர்பாடம்

MAHAMAHOPADHYAYA
C - 6 DR. U.V.S. IYER LIBRARY

ஆய்ந்தஅருமறையோன் நான்முகத்தோன்நன்குறங்கில் *
வாய்ந்தகுழவியாய்வாளரக்கன் *—ஏய்ந்த
முடிப்போது மூன்றேழென்றெண்ணினான் * ஆர்ந்த
அடிப்போதுநங்கட்கு அரண். (எஎ)

அரணாம்நமக்கென்றும் ஆழிவலவன் *
முரணாள்வலஞ் † சுழிந்தமொய்ம்பன் *—சரணாமேல்
ஏதுகதி? ஏதுநிலை? ஏதுபிறப்பு? என்னாதே *
ஓதுகதி ‡ மாயனையேஓர்த்து. (எஅ)

ஓர்த்தமனத்தராய் ஐந்தடக்கிஆராய்ந்து *
பேர்த்தால்பிறப்பேழும்பேர்க்கலாம் *—கார்த்த
விரையார்நறுந்துழாய் வீங்கோதமேனி *
நிரையாரமார்வனையேநின்று. (எகூ)

நின்றெதிராய நிரைமணித்தேர்வாணன்தோள் *
ஒன்றியஈரைஞ்ஞூறுடன்துணிய *—வென்றிலங்கும்
ஆர்படுவான் நேமியரவணையான் * சேவடிக்கே
நேர்படுவான்தான்முயலும்நெஞ்சு. (அ0)

நெஞ்சால் நினைப்பரியனேலும் * நிலைபெற்றுஎன்
நெஞ்சமே ! பேசாய் நினைக்குங்கால் *—நெஞ்சத்துப்
பேராதுநிற்கும் பெருமானைஎன்கொலோ? *
ஓராதுநிற்பதுஉணர்வு. (அக)

உணரில்உணர்வரியன் உள்ளம்புகுந்து *
புணரிலும்காண்பரியன்உண்மை *—இணரணையக்
கொங்கணைந்துவண்டறையும் தண்துழாய்க்கோமானை *
எங்கணைந்துகாண்டும்இனி? (அஉ)

இனியவன்மாயன் எனவுரைப்பரேலும் *
இனியவன்காண்பரியனேலும் *—இனியவன்
கள்ளத்தால்மண்கொண்டு விண்கடந்தபைங்கழலான் *
உள்ளத்தினுள்ளேஉளன். (அங)

உளனாய நான்மறையின்உட்பொருளை *உள்ளத்
துளனாகத் தேர்ந்துணர்வரேலும் *—உளனாய
வண்தாமரைநெடுங்கண் மாயவனையாவரே? *
கண்டாருகப்பர்கவி. (அச)

† 'சுழித்த' என்ற பாடம் ஏற்கும். ‡ ' மாதவனை ' என்று சிலவிடங்களில் பாடம்.

கவியினார்கைபுனைந்து கண்ணார்கழல்போய் *
செவியினார்கேள்வியராய்ச்சேர்ந்தார் *—புவியினார்
போற்றியுரைக்கப் பொலியுமே? * பின்னைக்கா
ஏற்றுயிரையட்டானெழில். (அ௫)

† எழில்கொண்டு மின்னுக்கொடியெடுத்து * வேகத்
தொழில்கொண்டு தான்முழங்கித்தோன்றும்*—எழில்கொண்ட
நீர்மேகமன்ன நெடுமால்நிறம்போல *
கார்வானம்காட்டும்கலந்து. (அ௬)

கலந்துமணியிமைக்கும் கண்ணா! * நின்மேனி
மலர்ந்து மரதகமேகாட்டும் *—நலந்திகழும்
கொந்தின்வாய்வண்டறையும் தண்துழாய்க்கோமானை *
அந்திவான்காட்டுமது. (அ௭)

அதுநன்றுஇதுதீதென்று ஐயப்படாதே *
மதுநின்றதண்துழாய்மார்வன் *—பொதுநின்ற
பொன்னங்கழலேதொழுமின் * முழுவினைகள்
முன்னம்கழலும்முடிந்து. (அஅ)

முடிந்தபொழுதில் குறவாணர் * ஏனம்
படிந்துழுசால் பைந்தினைகள்வித்த *—தடிந்தெழுந்த
வேய்ங்கழைபோய் விண்திறக்கும்வேங்கடமே * மேலொருநாள்
தீங்குழல்வாய்வைத்தான்சிலம்பு. (அ௯)

சிலம்புமசெறிகழலும் சென்றிசைப்ப * விண்ணாறு
அலம்பியசேவடிபோய் * அண்டம்—புலம்பியதோள்
எண்திசையும்சூழ இடம்போதாதென்கொலோ ?*
வண்துழாய்மாலளந்தமண். (௯0)

மண்ணுண்டும் பேய்ச்சிமுலையுண்டுமாற்றாதாய் *
வெண்ணெய்விழுங்கவெகுண்டு * ஆய்ச்சி—கண்ணிக்
கயிற்றினால்கட்டத் தான்கட்டுண்டிருந்தான் *
வயிற்றினோடாற்றாமகன். (௯௧)

மகனொருவர்க்கல்லாத மாமேனிமாயன் *
மகனாம் அவன்மகன்தன்காதல்—மகனை *
சிறைசெய்தவாணன்தோள் செற்றான்கழலே *
நிறைசெய்துஎன்நெஞ்சே! நினை. (௯௨)

† 'எழில்கொண்ட' என்பதும் பாடம்.

நினைத்துஉலகில்ஆர்தெளிவார்? நீண்டதிருமால் *
அனைத்துலகுமுள்ளொடுக்கிஆல்மேல் *—கனைத்துலவு
வெள்ளத்தோர்பிள்ளையாய் மெள்ளத்துயின்றானை *
உள்ளத்தேவைநெஞ்சே! உய்த்து. (கூ௩)

உய்த்துணர்வென்னும் ஒளிகொள்விளக்கேற்றி *
வைத்தவனைநாடிவலைப்படுத்தேன் *—மெத்தெனவே
நின்றான்இருந்தான் கிடந்தான்என்னெஞ்சத்து *
பொன்றாமைமாயன்புகுந்து. (கூ௪)

புகுந்திலங்கும் அந்திப்பொழுதத்து * அரியாய்
இகழ்ந்தஇரணியனதாகம் *—சுகிர்ந்தெங்கும்
சிந்தப்பிளந்த திருமால்திருவடியே *
வந்தித்துஎன்நெஞ்சமே! வாழ்த்து. (கூ௫)

வாழ்த்தியவாயராய் வானோர்மணிமகுடம் *
தாழ்த்திவணங்கத்தழும்பாமே *—கேழ்த்த
அடித்தாமரை மலர்மேல்மங்கைமணாளன் *
அடித்தாமரையாமலர். (கூ௬)

அலரெடுத்தஉந்தியான் ஆங்கெழிலாய *
மலரெடுத்தமாமேனிமாயன் *—அலரெடுத்த
வண்ணத்தான் மாமலரான்வார்சடையான் * என்றிவர்கட்கு
எண்ணத்தானாமோ? இமை. (கூ௭)

இமம்சூழ்மலையும இருவிசும்புமகாற்றும் *
அமஞ்சூழ்ந் தறவிளங்கித்தோன்றும் *—நமன்சூழ்
நரகத்து நம்மைநணுகாமல்காப்பான் *
துரகத்தைவாய்பிளந்தான்தொட்டு. (கூ௮)

தொட்டபடையெட்டும தோலாதவென்றியான் *
அட்டபுயகரத்தான்அஞ்ஞான்று *—குட்டத்துக்
கோள்முதலைதுஞ்சக் குறித்தெறிந்தசக்கரத்தான் *
தாள்முதலேநங்கட்குச்சார்வு. (கூகூ)

சார்வுநமக்கென்றும சக்கரத்தான் * தண்துழாய்த்
தார்வாழ்வரைமார்பன் தான்முயங்கும *—காரார்ந்த
வானமருமின்னிமைக்கும் வண்தாமரைநெடுங்கண் *
தேனமரும்பூமேல்திரு (க00)

தசகஅடிவரவு—திரு நன்கு பேசுவார் இவை மன்னும் அவனே பண்டு களிறு நெஞ்சால் மண்ணுண்டும நான்முகன்.

பேயாழ்வார் திருவடிகளே சரணம்

திருமழிசைப்பிரான் அருளிச்செய்த

# நான்முகன் திருவந்தாதி.

---

## தனியன்.

(சீராமப்பிள்ளை அருளிச்செய்தது.)

நேரிசைவெண்பா

நாராயணன்படைத்தான் நான்முகனை * நான்முகனுக்கு
ஏரார்சிவன்பிறந்தான் என்னுஞ்சொல் *— சீரார்
மொழிசெப்பிவாழலாம் நெஞ்சமே! * மொய்பூ
மழிசைப்பரனடியேவாழ்த்து.

(அடாணாராகம் - அடதாளம்)

நான்முகனை நாராயணன்படைத்தான் * நான்முகனும்
தான்முகமாய்ச்சங்கரனைத் தான்படைத்தான் *— யான்முகமாய்
அந்தாதிமேலிட்டு அறிவித்தேன் ஆழ்பொருளை *
சிந்தாமல்கொண்மின்நீர்தேர்ந்து. (க)

தேருங்கால் தேவன் ஒருவனே என்றுரைப்பர் *
ஆருமறியார் அவன்பெருமை *— ஓரும்
பொருள்முடிவும் இத்தனையே, எத்தவம்செய்தார்க்கும் *
அருள்முடிவது ஆழியான்பால். (உ)

பாலில்கிடந்ததுவும் பண்டரங்கம்மேயதுவும் *
ஆலில்துயின்றதுவும் ஆரறிவார்? *— ஞாலத்து
ஒருபொருளை வானவர்தம்மெய்ப்பொருளை * அப்பில்
அருபொருளை யான்அறிந்தவாறு. (ங)

ஆறுசடைக்கரந்தான் அண்டர்கோன்தன்னோடும் *
கூறுடையனென்பதுவும் கொள்கைத்தே *— வேறொருவர்
இல்லாமைநின்றானை எம்மானை * எப்பொருட்கும்
சொல்லானைச் சொன்னேன்தொகுத்து. (ச)

தொகுத்தவரத்தனாய்த் தோலாதான்மார்வம் *
வகிர்த்தவளையுகிர்த்தோள்மாலே! *— உகத்தில்
ஒருநான்றுநீயுயர்த்தி உள் † வாங்கிநீயே *
அருநான்குமானாய்அறி. (ரு)

† 'வாங்கினையே' என்றும் பாடம்.

அறியார்சமணர் அயர்த்தார்பவுத்தர் *
சிறியார்சிவப்பட்டார்செப்பில் *—வெறியாய
மாயவனைமாலவனை மாதவனையேத்தாதார் *
ஈனவரேயாதலால் இன்று. (கூ)

இன்றாக நாளையேயாக * இனிச்சிறிதும்
நின்றாக நின்னருளென்பாலதே *—நன்றாக
நான்உன்னை அன்றி இலேன்கண்டாய் * நாரணனே!
நீயென்னையன்றியிலை. (எ)

இலைதுணைமற்றென்னெஞ்சே! ஈசனைவென்ற *
சிலைகொண்டசெங்கண்மால்சேரா *—குலைகொண்ட
ஈரைந்தலையான் இலங்கையையீடழித்த *
கூரம்பனல்லால்குறை. (அ)

குறைகொண்டுநான்முகன் குண்டிகைநீர்பெய்து *
மறைகொண்டமந்திரத்தால் வாழ்த்தி *—கறைகொண்ட
கண்டத்தான் சென்னிமேலேறக்கழுவினான் *
அண்டத்தான்சேவடியையாங்கு. (கூ)

ஆங்காரவாரமதுகேட்டு * அழலுமிழும்
பூங்காரரவணையான் பொன்மேனி *—யாம்காண
வல்லமேயல்லமே? மாமலரான்வார்சடையான் *
வல்லரேயல்லரோ? வாழ்த்து. (கo)

வாழ்த்துகவாய காண்ககண்கேட்கசெவி * மகுடம்
தாழ்த்திவணங்குமின்கள் தண்மலரால *—சூழ்த்த
துழாய்மன்னுநீள்முடி என்தொல்லைமால்தன்னை *
வழாவண்கைகூப்பிமதித்து. (கக)

மதித்தாய்போய்நான்கின் மதியார்போய்வீழ *
மதித்தாய், மதிகோள்விடுத்தாய்! *—மதித்தாய்
மடுக்கிடந்த மாமுதலைகோள்விடுப்பான் * ஆழி
விடற்கிரண்டும்போயிரண்டின்வீடு. (கஉ)

வீடாக்கும் பெற்றியறியாது * மெய்வருத்திக்
கூடாக்கி நின்றுண்டுகொண்டுழல்வீர்! *—வீடாக்கும்
மெய்ப்பொருள்தான வேதமுதற்பொருள்தான்* விண்ணவர்க்கு
நற்பொருள்தான் நாராயணன். (கஙு)

நாராயணன் என்னையாளி * நரகத்துச்
சேராமல்காக்கும்திருமால்தன் *—பேரான
பேசப்பெறாத பிணச்சமயர்பேசக்கேட்டு *
ஆசைப்பட்டுஆழ்வார்பலர். (கச)

பலதேவரேத்தப் படிகடந்தான்பாதம் *
மலரேறவிட்டிறைஞ்சிவாழ்த்த—வலராகில் *
மார்க்கண்டன்கண்டவகையே வரும்கண்டீர் *
நீர்க்கண்டன்கண்டநிலை. (கரு)

நிலைமன்னும்என்னெஞ்சம் அந்நான்று * தேவர்
தலைமன்னர்தாமே மாற்றாக *—பலமன்னர்
போர்மாள வெங்கதிரோன்மாயப்பொழில்மறைய *
தேராழியால்மறைத்தாரால். (கசு)

ஆலநிழற்கீழ் அறநெறியை * நால்வர்க்கு
மேலையுகத்துரைத்தான் மெய்த்தவத்தோன் *—ஞால
மளந்தானை ஆழிக்கிடந்தானை * ஆல்மேல்
வளர்ந்தானைத் தான்வணங்குமாறு. (கஎ)

மாறாயதானவனை வள்ளுகிரால் * மார்விரண்டு
கூறாகக் கீறியகோளரியை *—வேறாக
வேத்தியிருப்பாரை வெல்லுமே * மற்றவரைச்
† சார்த்தியிருப்பார்தவம். (கஅ)

தவம்செய்து நான்முகனால்பெற்றவரத்தை *
அவஞ்செய்த ஆழியாயன்றே *—உவந்துஎம்மைக்
காப்பாய்நீ காப்பதனையாவாய்நீ * வைகுந்தம்
ஈப்பாயும்எவ்வுயிர்க்கும்நீ. (கசு)

நீயேஉலகெல்லாம் நின்னருளேநிற்பனவும் *
நீயே தவத்தேவதேவனும் *—நீயே
எரிசுடரும்மால்வரையும் எண்திசையும் * அண்டத்து
இருசுடருமாயஇவை. (உ௦)

இவையா! பிலவாய் திறந்தெரிகான்ற *
இவையா! எரிவட்டக்கண்கள் *—இவையா!
எரிபொங்கிக்காட்டும் இமையோர்பெருமான் *
அரிபொங்கிக்காட்டியழகு. (உக)

† 'சாற்றி' என்றும் ஓதுவர்.

அழகியான்தானே அரியுருவன்தானே *
பழகியான்தாளேபணிமின் *—குழவியாய்த்
தானேழுலகுக்கும் தன்மைக்குந்தன்மையனே *
மீனாய்உயிரளிக்கும்வித்து. (உஉ)

வித்துமிடவேண்டுங்கொல்லோ? விடையடர்த்த *
பத்தியுழவன்பழம்புனத்து *—மொய்த்தெழுந்த
கார்மேகமன்ன கருமால்திருமேனி *
நீர்வானம்காட்டும்நிகழ்ந்து. (உ௩)

நிகழ்ந்தாய் பால்பொன்பசுப்புக் கார்வண்ணம்நான்கும் *
இகழ்ந்தாய்இருவரையும்வீய *—புகழ்ந்தாய்
சினப்போர்ச்சுவேதனைச் சேனாபதியாய் *
மனப்போர்முடிக்கும்வகை. (உச)

வகையால்மதியாது மண்கொண்டாய் * மற்றும்
வகையால் வருவதொன்றுண்டே ? *—வகையால்
வயிரங்குழைத்துண்ணும் மாவலிதானென்னும் *
வயிரவழக்கொழித்தாய்மற்று. (உ௫)

மற்றுத்தொழுவார் ஒருவரையும்யானின்மை *
கற்றைச்சடையான்கரிக்கண்டாய் *—எற்றைக்கும்
கண்டுகொள்கண்டாய் கடல்வண்ணா! * யான்உன்னைக்
கண்டுகொள்கிற்குமாறு. (உ௬)

மால்தானபுகுந்த மட † நெஞ்சம் * மற்றதுவும
பேறாகக்கொள்வனோ? பேதைகாள்! *—நீறாடி
தான்காணமாட்டாத தாரகலச்சேவடியை *
யான்காணவல்லேற்குஇது. (உஎ)

இதுவிலங்கையீடழியக் கட்டியசேது *
இதுவிலங்குவாலியை ‡ வீழ்த்ததுவும் *—இதுவிலங்கை
தானொடுங்கவில்நுடங்கத் தண்தாரிராவணனை *
ஊனொடுங்கஎய்தானுகப்பு. (உஅ)

உகப்புருவன்தானே ஒளியுருவன்தானே *
மகப்புருவன்தானேமதிக்கில் *—மிகப்புருவம்
ஒன்றுக்கொன்று ஓசனையான்வீழ * ஒருகணையால்
அன்றிக்கொண்டெய்தானவன். (உ௯)

† 'நெஞ்சன்' என்று பாடங்கொள்ள இடமுண்டு.
‡ இங்கே தளை தட்டுகின்றது.

அவன்என்னையாளி அரங்கத்து * அரங்கில்
அவன்என்னையெய்தாமல்காப்பான் *—அவன்என்னது
உள்ளத்து நின்றான்இருந்தான்கிடக்குமே *
வெள்ளத்தரவணையின்மேல். (௬௦)

மேல்நான்முகன் அரனையிட்டவிடுசாபம் *
தான்நாரணன்ஒழித்தான் † தாரகையுள் *—வானோர்
பெருமானை ஏத்தாதபேய்காள் ! * பிறக்கும்
கருமாயம்பேசின்கதை. (௬௧)

கதைப்பொருள்தான் கண்ணன்திருவயிற்றினுள்ள *
உதைப்பளவு போதுபோக்கின்றி *—வதைப்பொருள்தான்
வாய்ந்தகுணத்துப் படாததுஅடைமினோ *
ஆய்ந்தகுணத்தானடி. (௬௨)

அடிச்சகடம்சாடி அரவாட்டி * யானை
பிடித்தொசித்துப் பேய்முலைநஞ்சுண்டு *— வடிப்பவள
வாய்ப்பின்னைதோளிக்கா வல்லேற்றெருத்திறுத்து *
கோப்பின்னுமானான்குறிப்பு. (௬௩)

குறிப்புஎனக்குக் கோட்டியூர்மேயானையேத்த *
குறிப்புஎனக்கு நன்மையயக்க *—வெறுப்பனோ ?
வேங்கடத்துமேயானை ‡ மெய்வினைநோய்எய்தாமல் *
தான்கடத்தும்தன்மையான்தாள். (௬௪)

தாளால் உலகம்அளந்தஅசைவேகொல் ? *
வாளாகிடந்தருளும் வாய்திறவான் *—நீளோதம்
வந்தலைக்கும்மாமயிலை மாவல்லிக்கேணியான் *
ஐந்தலைவாய்நாகத்தணை. (௬௫)

நாகத்தணைக்குடந்தை வெஃகாதிருவெவ்வுள் *
நாகத்தணையரங்கம் பேரன்பில் *—நாகத்
தணைப்பாற்கடல்கிடக்கும் ஆதிநெடுமால் *
அணைப்பார்கருத்தனாவான். (௬௬)

வானுலவுதீவளி மாகடல்மாபொருப்பு *
தானுலவுவெங்கதிரும் தண்மதியும் *—மேல்நிலவு
கொண்டல்பெயரும் திசையெட்டும்சூழ்ச்சியும் *
அண்டந்திருமாலகைப்பு. (௬௭)

† 'தாரணியுள்' என்ற பாடம் சேரும். ‡ 'வெவ்வினைநோய்' என்பதும் பாடம்.

அழைப்பில்மணிசரை ஆறுசமயம்
புகைத்தான் * பொருகடல்நீர்வண்ணன் *—உகைக்குமேல்
எத்தேவர்வாலாட்டும் எவ்வாறுசெய்கையும் *
அப்போதொழியுமழைப்பு. (௩௮)

அழைப்பன் திருவேங்கடத்தானைக்காண *
இழைப்பன் திருக்கூடல்கூட * மழைப்பே
ரருவி மணி † வரன்றிவந்திழிய * யானை
வெருவியரவொடுங்கும்வெற்பு. (௩௯)

வெற்பென்று வேங்கடம்பாடினேன் * வீடாக்கி
நிற்கின்றேன் நின்றுநினைக்கின்றேன் *—கற்கின்ற
நூல்வலையில்பட்டிருந்த நூலாட்டிகேள்வனார் *
கால்வலையில்பட்டிருந்தேன்காண். (௪௦)

காணலுறுகின்றேன் கல்லருவிமுத்துதிர *
ஓணவிழவிலொலியதிர *—பேணி
வருவேங்கடவா! என்னுள்ளம்புகுந்தாய் *
திருவேங்கடமதனைச்சென்று. (௪௧)

சென்றுவணங்குமினோ சேணுயர்வேங்கடத்தை *
நின்றுவினைகெடுக்கும் நீர்மையால *—என்றும்
கடிக்கமலநான்முகனும் கண்மூன்றத்தானும் *
அடிக்கமலமிட்டேத்தும்அங்கு. (௪௨)

மங்குல்தோய்சென்னி வடவேங்கடத்தானை *
கங்குல்புகுந்தார்கள் காப்பணிவான் *—திங்கள்
சடையேறவைத்தானும் தாமரைமேலானும் *
குடையேறத்தாங்குவித்துக்கொண்டு. (௪௩)

கொண்டுகுடங்கால் மேல்வைத்தகுழவியாய் *
தண்டவரக்கன்தலைதாளால்—பண்டெண்ணி *
போம்குமரன்நிற்கும் பொழில்வேங்கடமலைக்கே *
போம்குமரருள்ளீர்! புரிந்து. (௪௪)

புரிந்துமலரிட்டுப் புண்டரீகப்பாதம் *
பரிந்துபடுகாடுநிற்ப *—தெரிந்தெங்கும்
தானோங்கிநிற்கின்றான் தண்ணருவிவேங்கடமே *
வானோர்க்கும்மண்ணோர்க்கும்வைப்பு. (௪௫)

† 'வரண்டி' என்று வழங்குவர்.

வைப்பன்மணிவிளக்கா மாமதியை * மாலுக்கென்று
எப்பொழுதும் கைநீட்டும்யானையை *—எப்பாடும்
வேடுவளைக்கக் குறவர்வில்லெடுக்கும்வேங்கடமே *
நாடுவளைத் † தாடுமேல்நன்று. (௪௬)

நன்மணிவண்ணனூர் ஆளியும்கோளரியும் *
பொன்மணியும்முத்தமும் பூமரமும் *—பன்மணிநீ
ரோடு பொருதுருளும்கானமும்வானரமும் *
வேடுமுடைவேங்கடம். (௪௭)

வேங்கடமே விண்ணோர்தொழுவதுவும் * மெய்ம்மையால்
வேங்கடமே மெய்வினைநோய்தீர்ப்பதுவும் *—வேங்கடமே
தானவரைவீழத் தன்னாழிப்படைதொட்டு *
வானவரைக்காப்பான்மலை. (௪௮)

மலையாமைமேல்வைத்து வாசுகியைச்சுற்றி *
தலையாமைதானொருகைபற்றி *—அலையாமல்
பீறக்கடைந்த பெருமான்திருநாமம் *
கூறுவதேயாவர்க்கும்கூற்று. (௪௯)

கூற்றமும்சாரா கொடுவினையும்சாரா * தீ
மாற்றமும்சாராவகையறிந்தேன் *—ஆற்றங்
கரைக்கிடக்கும் கண்ணன்கடல்கிடக்கும் * மாயன்
உரைக்கிடக்கும்உள்ளத்துஎனக்கு. (௫௰)

எனக்காவார் ஆரொருவரே? * எம்பெருமான்
தனக்காவான் தானேமற்றல்லால் *—புனக்காயா
வண்ணனே! உன்னைப்பிறரறியார் * என்மதிக்கு
விண்ணெல்லாமுண்டோவிலை? (௫௧)

விலைக்காட்படுவர் விசாதியேற்றுண்பர் *
தலைக்காட்பலிதிரிவர்தக்கோர் *—முலைக்கால்
விடமுண்டவேந்தனையே ‡ வேறாவேத்தாதார் *
கடமுண்டார்கல்லாதவர். (௫௨)

கல்லாதவர் இலங்கைகட்டழித்த * காகுத்த
னல்லால் ஒருதெய்வம்யானிலேன் *—பொல்லாத
தேவரைத் தேவரல்லாரை * திருவில்லாத
தேவரைத் தேறேன்மின்தேவு. (௫௩)

† 'ஆடுதுமேல்' என்று வழங்குவர். ‡ 'வேறாக வேத்தாதார்' என்ற பாடம் தளைதவறும்

தேவராய்நிற்கும் அத்தேவும் * அத்தேவரில்
மூவராய்நிற்கும் முதுபுணர்ப்பும் *—யாவராய்
நிற்கின்றதெல்லாம் நெடுமாலென்றோராதார் *
கற்கின்றதெல்லாம்கடை. (ருச)

கடைநின்றமரர் கழல்தொழுது * நாளும்
இடைநின்றவின்பத்தராவர் *—புடைநின்ற
நீரோதமேனி நெடுமாலே! * நின்னடியை
யாரோதவல்லாரவர்? (ருரு)

அவரிவரென்றில்லை அனங்கவேள்தாதைக்கு *
எவரும்எதிரில்லைகண்டீர் *—உவரிக்
கடல்நஞ்சமுண்டான் கடனென்று * வாணற்கு
உடன்நின்றுதோற்றான் ஒருங்கு. (ருசு)

ஒருங்கிருந்தநல்வினையும் தீவினையுமாவான் *
பெருங்குருந்தம்சாய்த்தவனே பேசில் *—மருங்கிருந்த
வானவர்தாம்தானவர்தாம் தாரகைதான் * என்னெஞ்ச
மானவர்தாம் அல்லாததென்? (ருஎ)

என்னெஞ்சமேயான் இருள்நீக்கிஎம்பிரான் *
மன்னஞ்சமுன்னொருநாள் மண்ணளந்தான் *— என்னெஞ்சம்
மேயானை இல்லாவிடையேற்றான் * வெவ்வினைதீர்த்து
ஆயானுக்காக்கினேன் அன்பு. (ருஅ)

அன்பாவாய் ஆரமுதமாவாய் * அடியேனுக்கு
இன்பாவாய் எல்லாமும்நீயாவாய் *—பொன்பாவை
கேள்வா! கிளரொளியென்கேசவனே! * கேடின்றி
ஆள்வாய்க்குஅடியேன்நானாள். (ருகூ)

ஆட்பார்த்துழிதருவாய் கண்டுகொளென்று * நின்
தாட்பார்த்துழிதருவேன் தன்மையை *—கேட்பார்க்கு
அரும்பொருளாய் நின்றஅரங்கனே! * உன்னை
விரும்புவதே விள்ளேன்மனம். (சூ0)

மனக்கேதம்சாரா மதுசூதன்தன்னை *
தனக்கேதான் தஞ்சமாக்கொள்ளில் *—எனக்கேதான்
இன்றொன்றிநின்றுஉலகையேழ் ஆணையோட்டினான் *
சென்றொன்றிநின்றதிரு. (சூக)

திருநின்றபக்கம் திறவிதென்றோரார் *
கருநின்றகல்லார்க்குரைப்பர் *—திருவிருந்த
மார்பின் சிரீதரன் தன்வண்டுலவுதண்துழாய் *
தார்தன்னைச் சூடித்தரித்து. (௩௨)

தரித்திருந்தேனாகவே தாராகணப்போர் *
விரித்துரைத்தவெந்நாகத்துன்னை *—தெரிதலெழுதி
வாசித்தும்கேட்டும் வணங்கிவழிபட்டும் *
பூசித்தும் போக்கினேன்போது. (௩௩)

போதான இட்டிறைஞ்சியேத்துமினோ * பொன்மகரக்
காதானை ஆதிப்பெருமானை *—நாதானை
நல்லானைநாரணனை நமமேழ்பிறப்பறுக்கும்
சொல்லானை * சொல்லுவதேசூது. (௩௪)

சூதாவது என்நெஞ்சத்து எண்ணினேன் * சொல்மாலை
மாதாய † மாலவனைமாதவனை *—யாதானும்
வல்லவா சிந்தித்திருப்பேற்கு * வைகுந்தத்து
இல்லையோசொல்லீர் இடம்? (௩௫)

இடமாவது என்நெஞ்சம்இன்றெல்லாம் * பண்டு
படநாகணை நெடியமாற்கு * —திடமாக
வைப்பேன் மதிசூடிதன்னோடு * அயனைநான்,
வைப்பேன் ஆட்செய்யேன்வலம். (௩௬)

வலமாக மாட்டாமைதானாக * வைகல்
குலமாக குற்றந்தானாக *—நலமாக
நாரணனைநாபதியை ஞானப்பெருமானை *
சீரணனை யேத்துந்திறம். (௩௭)

திறம்பேன்மின்கண்டீர் திருவடிதனநாமம் *
மறந்தும்புறந்தொழாமாந்தர் *—இறைஞ்சியும்
சாதுவராய்ப் போதுமின்களென்றான் * நமனும்தன்
தூதுவரைக்கூவிச்செவிக்கு. (௩௮)

செவிக்கின்பமாவதுவும் செங்கண்மால்நாமம் *
புவிக்கும்புவியதுவேகண்டீர் *—கவிக்கு
‡ நிறைபொருளாய்நின்றானை நேர்பட்டேன் * பார்க்கில்
மறைப்பொருளும் அத்தனையேதான். (௩௯)

† 'மாயவனை' என்பது சிலர் பாடம்.

‡ 'நிறைப்பொருளாய்' என்ற பாடம செய்யுளோசைக்குச்சேரும்.

தானொருவனாகித் தரணியிடந்தெடுத்து *
ஏனொருவனாய் எயிற்றில்தாங்கியதும் *—யானொருவன்
இன்றா அறிகின்றேனல்லேன் * இருநிலத்தைச்
சென்றாங்கடிப்படுத்தசேய். (எ௦)

சேயன் அணியன் சிறியன்மிகப்பெரியன் *
ஆயன் துவரைக்கோனாய்நின்ற—மாயன் * அன்று
ஓதிய வாக்கதனைக்கல்லார் * உலகத்தில்
ஏதிலராய் மெய்ஞ்ஞானமில். (எக)

† இல்லறமல்லேல் துறவறமில்லென்னும் *
சொல், அறமல்லனவுமசொல்லல்ல *—நல்லற
மாவனவும் நால்வேதமாத்தவமும் * நாரணனே
யாவது, ஈதன்றென்பாரார்? (எஉ)

ஆரேயறிவார்? அனைத்துலகும்உண்டுமிழ்ந்த *
பேராழியான்தன்பெருமையை *—கார்செறிந்த
கண்டத்தான் எண்கண்ணன்காணான் * அவன்வைத்த
பண்டைத்தானத்தின்பதி. (எந)

பதிப்பகைஞர்க்காற்றாது பாய்திரைநீர்ப்பாழி *
மதித்தடைந்தவாளரவந்தன்னை *—மதித்தவன்தன்
வல்லாகத்தேற்றிய மாமேனிமாயவனை *
அல்லாது ஒன்றேத்தாதுஎன்நா. (எச)

நாக்கொண்டு மானிடம்பாடேன் * நலமாகத்
தீக்கொண்ட செஞ்சடையான்சென்று * என்றும்—பூக்கொண்டு
வல்லவாறு ஏத்தமகிழாத * வைகுந்தச்
செல்வனார்சேவடிமேல்பாட்டு. (எரு)

பாட்டும்முறையும் படுகதையுமபல்பொருளும் *
ஈட்டியதீயும் இருவிசும்பும் *—கேட்ட
மனுவும் சுருதிமறைநான்கும் * மாயன்
தனமாயையில்பட்டதற்பு. (எசு)

தற்பென்னைத் தானறியானேனும் * தடங்கடலைக்
கற்கொண்டு தூர்த்தகடல்வண்ணன் *—எற்கொண்ட
வெவ்வினையும்நீங்க விலங்காமனம்வைத்தான் *
எவ்வினையும்மாயுமால்கண்டு. (எஎ)

† 'இல்லறமில்லேல்' என்றும் பாடம்.

கண்டுவணங்கினார்க்கு என்னாங்கொல்? * காமனுடல்
கொண்டதவத்தாற்கு உமையுணர்த்த *—வண்டலம்பும்
தாரலங்கல்நீள்முடியான்தன் பெயரேகேட்டிருந்து * அங்
காரலங்கலானமையாலாய்ந்து. (எஅ)

ஆய்ந்துகொண்டு ஆதிப்பெருமானை * அன்பினால்
வாய்ந்தமனத்து இருத்தவல்லார்கள் *—ஏய்ந்ததம்
மெய்குந்தமாக விரும்புவரே * தாமும்தம்
வைகுந்தம்காண்பார்விரைந்து. (எகூ)

விரைந்தடைமின்மேலொருநாள் வெள்ளம்பரக்க *
கரந்துலகம் காத்தளித்தகண்ணன் *—பரந்துலகம்
பாடின, ஆடினகேட்டு * படுநரகம்
வீடினவாசற்கதவு. (அ0)

கதவுமனமென்றும் காணலாமென்றும் *
குதையும்வினையாவிதீர்ந்தேன் *—விதையாக
நல்தமிழைவித்தி என்னுள்ளத்தைநீவிளைத்தாய் *
கற்றமொழியாகிக்கலந்து. (அக)

கலந்தான்என்னுள்ளத்துக் காமவேள்தாதை *
நலந்தானும்ஈதொப்பதுண்டே? *—அலர்ந்தலர்கள்
இட்டேத்தும் ஈசனும்நான்முகனும் * என்றிவர்கள்
விட்டேத்தமாட்டாதவேந்து. (அஉ)

வேந்தராய்விண்ணவராய் விண்ணாகித்தண்ணளியாய் *
மாந்தராய்மாதாய் மற்றெல்லாமாய் *—சார்ந்தவர்க்குத்
தன்னாற்றான்நேமியான் மால்வண்ணன்தான்கொடுக்கும் *
பின்னால்தான்செய்யும்பிதிர். (அங)

பிதிரும்மனமிலேன் பிஞ்ஞகன்தன்னோடு *
எதிர்வன் அவன்எனக்குநேரான் *—அதிரும்
கழற்காலமன்னனையே கண்ணனையே * நாளும்
தொழக்காதல்பூண்டேன்தொழில். (அச)

தொழில்எனக்குத் தொல்லைமால்தன்னாமமேத்த *
பொழுதெனக்கு மற்றதுவேபோதும் *—கழிசினத்த
வல்லாளன் † வானரக்கோன்வாலிமதனழித்த *
வில்லாளன்நெஞ்சத்துளன். (அரு)

---

† 'வானரர்கோன்' என்பதும் பாடம்.

உளன்கண்டாய் நன்னெஞ்சே ! உத்தமனென்றும்
உளன்கண்டாய் * உள்ளுவாருள்ளத்து—உளன்கண்டாய் *
தன்னொப்பான்தானாய் உளன்காண்தமியேற்கும் *
என்னொப்பார்க்கீசனிமை. (௮௬)

இமயப்பெருமலைபோல் இந்திரனார்க்கிட்ட *
சமயவிருந்துண்டு ஆர்காப்பார் ? *—சமயங்கள்
கண்டான் அவைகாப்பான் கார்க்கண்டன்நான்முகனோடு *
உண்டானுலகோடுயிர். (௮௭)

உயிர்கொண்டுடலொழிய ஓடும்போதோடி *
அயர்வென்றதீர்ப்பான் பேர்பாடி *—செயல்தீரச்
சிந்தித்து வாழ்வாரேவாழ்வார் * சிறுசமயப்
பந்தனையார்வாழ்வேல்பழுது. (௮௮)

பழுதாகாதொன்றறிந்தேன் பாற்கடலான்பாதம் *
வழுவாவகைநினைந்து வைகல்—தொழுவாரை *
கண்டிறைஞ்சிவாழ்வார் கலந்தவினைகெடுத்து *
விண்திறந்துவீற்றிருப்பார்மிக்கு. (௮௯)

வீற்றிருந்து விண்ணாளவேண்டுவார் * வேங்கடத்தான்
பால்திருந்துவைத்தாரே பல்மலர்கள் *—மேல்திருந்தி
வாழ்வார் வருமதிபார்த்துஅன்பினராய் * மற்றவர்க்கே
தாழ்வாயிருப்பார்தமர். (௯௦)

தமராவார்யாவர்க்கும் தாமரைமேலார்க்கும் *
அமரர்க்கும் † ஆடரவார்த்தார்க்கும் *—அமரர்கள்
தாள்தாமரை மலர்களிட்டிறைஞ்சி * மால்வண்ணன்
தாள்தாமரையடைவோமென்று. (௯௧)

என்றும்மறந்தறியேன் என்னெஞ்சத்தேவைத்து *
நின்றும்இருந்தும் நெடுமாலை *—என்றும்
திருவிருந்தமார்பன் சிரீதரனுக்காளாய் *
கருவிருந்தநாள்முதலாக்காப்பு. (௯௨)

காப்புமறந்தறியேன் கண்ணனேயென்றிருப்பன் *
ஆப்புஅங்கொழியவும் பல்லுயிர்க்கும் *—ஆக்கை
கொடுத்தளித்த கோனே ! குணப்பரனே ! * உன்னை
விடத்துணியார் மெய்தெளிந்தார்தாம். (௯௩)

---

† 'ஆடரவத்தார்க்கும்' என்று சிலர் பாடமோதுவர்.

மெய்தெளிந்தார் என்செய்யார்? வேறானார்நீறாக *
கைதெளிந்துகாட்டிக் களப்படுத்து *—பைதெளிந்த
பாம்பினணையாய்! அருளாயடியேற்கு *
வேம்பும்கறியாகுமென்று. (கூச)

என்றேன் அடிமை இழிந்தேன்பிறப்பிடும்பை *
ஆன்றேன் அமரர்க்கமராமை *—ஆன்றேன்
கடனாடும்மண்ணாடும் கைவிட்டு * மேலை
இடநாடுகாண இனி. (கூரு)

இனியறிந்தேன் ஈசற்கும்நான்முகற்கும்தெய்வம் *
இனியறிந்தேன் எம்பெருமான்! உன்னை *—இனியறிந்தேன்
காரணன்நீகற்றவைநீ கற்பவைநீ * நற்கிரிசை
நாரணன்நீ நன்கறிந்தேன்நான். (கூகூ)

தசகஅடிவரவு—நான்முகன் வாழ்த்துக இவை மேல் காணல் எனக்கு
மனக்கேதம் சேயன் கதவு தமராவார் பொய்ந்நின்ற.

திருமழிசைப்பிரான் திருவடிகளே சரணம்.

———

நம்மாழ்வார் அருளிச்செய்த

ருக்வேதஸாரமான

# திருவிருத்தம்.

† (கிடாம்பியாச்சான் அருளிச்செய்தது.)

கட்டளைக்கலித்துறை.

கருவிருத்தக்குழிநீத்தபின் காமக்கடுங்குழிவீழ்ந்து *
ஒருவிருத்தம்புக்குழலுறுவீர்! உயிரின் ‡ பொருள்கட்கு *
ஒருவிருத்தம்புகுதாமல் குருகையர்கோனுரைத்த *
திருவிருத்தத்து ஓரடிகற்றிரீர் திருநாட்டகத்தே.

---

தாமான தன்மையில் அருளிச்செய்தது

பொய்ந்நின்றஞானமும் பொல்லாவொழுக்குமழுக்குடம்பும் *
இந்நின்றநீர்மைஇனியாமுறாமை * உயிரளிப்பான்
எந்நின்றயோனியுமாய்ப்பிறந்தாய்! இமையோர்தலைவா!
மெய்ந்நின்றுகேட்டருளாய் * அடியேன்செய்யும்விண்ணப்பமே. (க)

தலைவியின்வேறுபாடுகண்ட தோழி வியந்துரைத்தல்

செழுநீர்த்தடத்துக் கயல்மிளிர்ந்தாலொப்ப * சேயரிக்கண்
அழுநீர்துளும்பஅலமருகின்றன * வாழியரோ
முழுநீர்முகில்வண்ணன்கண்ணன்விண்ணாட்டவர்மூதுவராம்
தொழுநீரிணையடிக்கே * அன்புசூட்டியசூழ்குழற்கே. (உ)

பிரிவாற்றாத தலைவி நெஞ்சழிந்து உரைத்தல்.

குழற்கோவலர் மடப்பாவையும் மண்மகளும் * திருவும்
நிழற்போல்வனர்கண்டுநிற்குங்கொல்? மீளுங்கொல்? * தண்ணந்துழாய்
அழற்போலடுஞ்சக்கரத்தண்ணல்விண்ணோர்தொழக்கடவும்
தழற்போற்சினத்த * அப்புள்ளின்பின்போனதனிநெஞ்சமே. (௩)

தலைவனைப்பிரிந்த தலைவி வாடைக்கு ஆற்றாது வருந்திக்கூறுதல்.

தனிநெஞ்சம்முன்னவர் புள்ளேகவர்ந்தது * தண்ணந்துழாய்க்கு
இனிநெஞ்சம் இங்குக்கவர்வதுயாமிலம் * நீநடுவே
$ முனிவஞ்சப்பேய்ச்சிமுலைசுவைத்தான்முடிசூடுதுழாய்ப்
பனிநஞ்சமாருதமே! * எம்மதாவிபனிப்பியல்வே? (௪)

---

† சீராமப்பிள்ளை எனவும், ஆளவந்தார் எனவும் கூறுவாருமுளர்.

‡ 'பொருளுக்கு' என்பதும் பாடம். $ 'முனிநஞ்சப்பேய்ச்சி' என்பதும் பாடம்.

வாடைக்கு நலிந்த தலைவியின் மாமைகண்டு தோழி இரங்குதல்.

பனிப்பியல்வாக உடையதண்வாடை * இக்காலம்இவ்வூர்ப்
பனிப்பியல்வெல்லாம் தவிர்ந்துஎரிவீசும் * அந்தண்ணந்துழாய்ப்
பனிப்புயல்சோரும்தடங்கண்ணிமாமைத்திறததுக்கொலாம்?
பனிப்புயல்வண்ணன் * செங்கோல்ஒருநான்றுதடாவியதே. (ரு)

தலைவியினெழில்கண்டு வியந்த தலைவன்வார்த்தை.

தடாவியஅம்பும் முரிந்தசிலைகளும் போகவிட்டு *
கடாயினகொண்டொல்கும் வல்லியீதேனும் * அசுரர்மங்கக்
கடாவியவேகப்பறவையின் பாகன்மதனசெங்கோல்
நடாவியகூற்றம்கண்டீர் : உயிர்காமின்கள்ஞாலத்துள்ளே. (சு)

காலமயக்கு

ஞாலம்பனிப்பச்செறித்து * நன்னீரிட்டுக்கால்சிதைந்து
நீலவல்லேறுபொராநின்றவானமிது * திருமால்
கோலஞ்சுமந்துபிரிந்தார்கொடுமைகுழறுதண்பூங்
காலங்கொலோ? அறியேன் *வினையாட்டியேன்காண்கின்றவே. (எ)

தலைவன் பொருள்வயிற்பிரிதலைக் குறிப்பாலறிந்த தலைவி தோழிக்கு உரைத்தல்

காண்கின்றனகளும கேட்கின்றனகளுமகாணில் * இந்நாள்
பாண்குன்றநாடர்பயில்கின்றன * இதெல்லாம்அறிந்தோம
மாண்குன்றமேந்திதண்மாமலைவேங்கடத்துஉம்பர்நம்பும்
சேண்குன்றம்சென்று * பொருள்படைப்பான்கற்றதிண்ணனவே.(அ)

தலைவன் தலைவியின் நீங்கலருமை கூறுதல்.

திண்பூஞ்சுடர்நுதி நேமியஞ்செலவர் * விண்ணாடனைய
வண்பூமணிவல்லி யாரேபிரிபவர்தாம்? * இவையோ
கண்பூங்கமலம்கருஞ்சுடராடி வெண்முத்தரும்பி
வண்பூங்குவளை * மடமான்விழிக்கின்றமாயிதழே. (கூ)

மதியுடம்படுக்கலுற்ற தலைவன் குறையுறவுரைத்தல்.

மாயோன் வடதிருவேங்கடநாட * வல்லிக்கொடிகாள்!
நோயோஉரைக்கிலும் கேட்கின்றிலீர்உரையீர் * நுமது
வாயோ? அதுவன்றிவல்வினையேனும்கிளியுமெள்கும்
ஆயோ? அடும்தொண்டையோ? * அறையோ! இதறிவரிதே. (க0)

பிரிவாற்றாத தலைவியின் வேறுபாடு கண்டு தலைவன் உரைத்தல்.

அரியனயாம்இன்றுகாண்கின்றன * கண்ணன்விண்ணனையாய்!
பெரியனகாதம் பொருட்கோ? பிரிவென * ஞாலமெய்தற்கு
உரியனவொண்முத்தும்பைம்பொன்னுமேந்திஒரோகுடங்கைய
பெரியனகெண்டைக்குலம் * இவையோவந்து பேர்கின்றவே. (கக)

தலைவி நெஞ்சோடு கலாய்த்துத் தன் ஆற்றாமை கூறுதல்.

பேர்கின்றது மணிமாமை * பிறங்கியள்ளற்பயலை
ஊர்கின்றது கங்குலூழிகளே * இதெல்லாமினவே
ஈர்கின்றசக்கரத்தெம்பெருமான்கண்ணன்தண்ணந்துழாய்
சார்கின்றநன்னெஞ்சினார் * தந்துபோனதனிவளமே. (கஉ)

பிரிவாற்றாத தலைவி இருளுக்கும் வாடைக்கும் இரங்குதல்.

தனிவளர்செங்கோல்நடாவு * தழல்வாயரசவியப்
பனிவளர்செங்கோலிருள்வீற்றிருந்தது * பார்முழுதும்
துனிவளர்காதல்துழாயைத்துழாவுதண்வாடைதடிந்து
இனிவளைகாப்பவரார்? * எனையூழிகளீர்வனவே. (கஙு)

நலம்பாராட்டு.

ஈர்வனவேலும்அஞ்சேலும் * உயிர்மேல்மிளிர்ந்திவையோ
பேர்வனவோவல்ல தெய்வநல்வேள்கணை * பேரொளியே
சோர்வனநீலச்சுடர்விடுமேனியம்மான் விசும்பூர்
தேர்வன தெய்வமன்னீரகண்ணோ? இச்செழுங்கயலே. (கச)

தோழி தலைவனது கருத்தறிந்து உரைத்தல்.

கயலோ நுமகண்கள்? என்று களிறுவினவிநிற்றீர் *
அயலோரறியிலும் ஈதென்னவார்த்தை? * கடல்கவர்ந்த
புயலோடுலாங்கொண்டல்வண்ணன்புனவேங்கடத்தெம்மொடும்
பயலோவிலீர் * கொல்லைகாக்கின்றநாளும்பலபலவே. (கரு)

தலைவனைப்பிரிந்த தலைவி பாங்கியைநோக்கி இருள்வியந்துரைத்தல்.

பலபலவூழிகளாயிடும * அன்றி ஓர்நாழிகையைப
பலபலகூறிட்டகூறாயிடும் * கண்ணன்விண்ணனையாய்!
பலபலநாள்அன்பர்கூடிலும்நீங்கிலும்யாம்மெலிதும்
பலபலசூழலுடைத்து * அம்ம! வாழிஇப்பாயிருளே. (கசு)

தலைவி கடலைநோக்கித் தேர்வழி தூரா லென்றல்.

இருள்விரிந்தாலன்ன * மாநீர்த்திரைகொண்டுவாழியரோ
இருள்பிரிந்தாரன்பர் தேர்வழிதூரல் * அரவணைமேல்
இருள்விரிநீலக்கருநாயிறுசுடர்காலவதுபோல்
இருள்விரிசோதி * பெருமானுறையுமெறிகடலே! (கஎ)

கார்கண்டு நலிந்த தலைவியின் ஆற்றாமைகண்டு பாங்கி இரங்குதல்.

கடல்கொண்டெழுந்தவானம் * அவ்வானத்தையன்றிச்சென்று
கடல்கொண்டொழிந்தவதனால் இது * கண்ணன்மண்ணும்விண்ணும
கடல்கொண்டெழுந்தஅக்காலங்கொலோ? புயற்காலங்கொலோ?
கடல்கொண்டகண்ணீர் * அருவிசெய்யாநிற்கும † காரிகையே. (௧௮)

செவிலி பழித்துஇரங்குதல், பாங்கி இரங்குதலுமாம்

காரிகையார் நிறைகாப்பவர்யாரென்று * கார்கொண்டுஇன்னே
மாரிகையேறி அறையிடுங்காலத்தும் * வாழியரோ
சாரிகைப்புள்ளர்அந்தண்ணந்துழாயிறைகூயருளார்
சேரிகையேறும் * பழியாய்விளைந்ததென்சின்மொழிக்கே. (௧௯)

வெறிவிலக்கு.

சின்மொழிநோயோ கழிபெருந்தெய்வம் * இந்நோயினதென்று
இன்மொழிகேட்கும் இளந்தெய்வமன்றிது * வேல! நில்நீ
என்மொழிகேண்மின்என்னம்மனைமீர்! உலகேழுமுண்டான்
சொல்மொழி * மாலையந்தண்ணந்துழாய்கொண்டுசூட்டுமினே. (௨௦)

ஏறுகோள்கூறி வரைவுகடாதல்.

‡ சூட்டுநன்மாலைகள் தூயனவேந்தி * விண்ணோர்கள்நன்னீர்
ஆட்டி அந்தூபந்தராநிற்கவேஅங்கு * ஓர்மாயையினால்
ஈட்டியவெண்ணெய்தொடுவுண்ணப்போந்திமிலேற்றுவன்கூன்
கோட்டிடையாடினைகூத்து * அடலாயர்தம்கொம்பினுக்கே. (௨௧)

தோழி தலைவனை நகையாடுதல்

கொம்பார்தழைகை சிறுநாணெறிவிலம் * வேட்டைகொண்டாட்டு
அம்பார்களிறு வினவுவதுஐயர் * புள்ளூருமகள்வர்
தம்பாரகத்துஎன்றுமாடாதன தம்மில்கூடாதன
வம்பார்வினச்சொல்லவோ *எம்மைவைத்ததுஇவ்வான்புனத்தே (௨௨)

தலைவன் குறையுறவுரைத்தல்.

புனமோ? புனத்தயலே வழிபோகும்அருவினையேன் *
மனமோ? மகளிர்! நுங்காவல்சொல்லீர் * புண்டரீகத்தங்கேழ்
வனமோரனையகண்ணான்கண்ணன்வானாடமரும் தெய்வத்
தினமோரனையீர்களாய் * இவையோநும்மியல்வுகளே? (௨௩)

---

† 'காரிகைகமே' என்பதும் பாடம்

‡ இது, திருமஞ்சனகாலத்தில ஸேவிக்கப்படுவது

பிரிவாற்றாத தலைவியின் ஈடுபாடுகண்ட செவிலி இரங்குதல்

இயல்வாயின வஞ்சநோய்கொண்டுலாவும் * ஓரோகுடங்கைக்
கயல்பாய்வன பெருநீர்க்கண்கள்தம்மொடும் * குன்றமொன்றால்
புயல்வாயினநிரைகாத்தபுள்ளூர்திகள்ளூருந்துழாய்க்
கொயல்வாய்மலர்மேல் * மனத்தொடுஎன்னாங்கொல் எங்கோல்வளைக்கே? (௨௪)

தலைமகனது தாரில் ஈடுபட்ட தலைவி ஆற்றாது கூறுதல்.

எங்கோல்வளைமுதலாக் கண்ணன்மண்ணும்விண்ணும்அளிக்கும் *
செங்கோல்வளைவுவிளைவிக்குமால் * திறல்சேரமரர்
தங்கோனுடையதங்கோன் உம்பரெல்லாயவர்க்குந்தங்கோன்
நங்கோனுகக்கும்துழாய் * என்செய்யாதுஇனிநானிலத்தே? (௨௫)

நகர்காட்டுதல்

நானிலம்வாய்க்கொண்டு நன்னீரறமென்றுகோதுகொண்ட *
வேனிலஞ்செல்வன்சுவைத்துமிழ்பாலை * கடந்தபொன்னே!
கால்நிலந்தோய்ந்து விண்ணோர்தொழும்கண்ணன்வெஃகாவுது அம்பூந்
தேனிளஞ்சோலைஅப்பாலது * எப்பாலைக்கும்சேமத்ததே. (௨௬)

தலைவி தார்பெற்று மகிழ்தல்.

சேமம்செங்கோனருளே * செறுவாரும்நட்பாகுவரென்று
ஏமம்பெறவையம்சொல்லும்மெய்யே * பண்டெல்லாம்அறைகூய்
யாமங்கள்தொறெரிவீசும்நங்கண்ணனந்தண்ணந்துழாய்த்
தாமம்புனைய * அவ்வாடைஈதோவந்துதண்ணென்றதே. (௨௭)

தலைவனைப்பிரிந்த தலைவி வாடைக்கு வருந்தி யிரங்குதல்

தண்ணந்துழாய் வளைகொள்வதுயாமிழப்போம * நடுவே
வண்ணந்துழாவி ஓர்வாடையுலாவும் * வள்வாயலகால்
புள்நந்துழாமேபொருநீர்த்திருவரங்கா! அருளாய்
எண்ணந்துழாவுமிடத்து * உளவோபண்டும்இன்னன்னவே? (௨௮)

தலைவி அன்னத்தை வெறுத்துரைத்தல்

இன்னன்ன தூதுஎம்மை ஆளற்றப்பட்டிரந்தாளஇவளென்று *
அன்னன்னசொல்லாப்பெடையொடும் போய்வரும் * நீலமுண்ட
மின்னன்னமேனிப்பெருமானுலகில்பெண்தூதுசெல்லா
அன்னன்னநீர்மைகொலோ? * குடிச்சீர்மையிலன்னங்களே! (௨௯)

தலைவி அன்னங்களையும் வண்டானங்களையும் தூதுவேண்டுதல்.

அன்னம்செல்வீரும் வண்டானம்செல்வீரும்தொழுதிரந்தேன் *
முன்னம்செல்வீர்கள் மறவேன்மினோ * கண்ணன்வைகுந்தனோடு
என்னெஞ்சினாரைக்கண்டால்என்னைச்சொல்லி அவரிடைநீர்
இன்னம்செல்லீரோ? * இதுவோதகவென்றுஇசைமின்களே! (௩௦)

தூதுசெல்லாத மேகங்களைக்குறித்துத் தலைவி இரங்குதல்.

இசைமின்கள்தூதென்று இசைத்தால்இசையிலம் * என்தலைமேல்
அசைமின்களென்றால் அசையுங்கொலாம்? * அம்பொன்மாமணிகள்
திசைமின்மிளிரும்திருவேங்கடத்துவன்தாள் சிமய
மிசைமின்மிளிரியபோவான் * வழிக்கொண்டமேகங்களே ! (௩௧)

தலைவி போலிகண்டு உரைத்தல்.

மேகங்களோ! உரையீர் * திருமால்திருமேனியொக்கும்
யோகங்கள் உங்களுக்குஎவ்வாறுபெற்றீர்? * உயிரளிப்பான்
மாகங்களெல்லாம்திரிந்துநன்னீர்கள்சுமந்து நுந்தம்
ஆகங்கள்நோவ * வருத்தும்தவமாம்அருள்பெற்றதே. (௩௨)

தலைவியினாற்றாமைகண்ட தோழி தலைவனை வெறுத்துரைத்தல்.

அருளார்திருச்சக்கரத்தால் அகல்விசும்பும்நிலனும் *
இருளார்வினைகெடச் செங்கோல்நடாவுதிர் * ஈங்கோர்பெண்பால்
பொருளோவெனும்இகழ்வோ? இவற்றின்புறத்தாளென்றெண்ணோ?
தெருளோம்அரவணையீர்! * இவள்மாமைசிதைக்கின்றதே. (௩௩)

கூடலிழைத்துவருந்தும் தலைவியின்நிலையைப் பாங்கி தலைவற்கு உணர்த்தல்

சிதைக்கின்றதாழி என்று ஆழியைச்சீறி * தன் † சீறடியால்
உதைக்கின்றநாயகந்தன்னொடுமாலே! * உனதுதண்தார்
ததைக்கின்றதண்ணந்துழாயணிவான் அதுவேமனமாய்ப்
பதைக்கின்றமாதின்திறத்து * அறியேன்செயற்பாலதுவே. (௩௪)

தலைவி மாலைக்கு ஆற்றாமையின்மேல் வாடைக்கு இரங்குதல்

பால்வாய்ப்பிறைப்பிள்ளை ஒக்கலைக்கொண்டு * பகலிழந்த
மேல்பால்திசைப்பெண் புலம்புறுமாலை * உலகளந்த
மால்பால்துழாய்க்குமனமுடையார்க்குநல்கிற்றையெல்லாம்
சொல்வான்புகுந்து * இதுவோர்பனிவாடை துழாகின்றதே. (௩௫)

தோழி தலைவன் கொடுமை கூறுதல்.

துழாநெடுஞ்சூழிருளென்று * தன்தண்தாரது, பெயரா
எழாநெடுவூழியெழுந்தஇக்காலத்தும் * ஈங்குஇவளோ!
வழாநெடுந்துன்பத்தளென்றிரங்கார்அம்மனோ! இலங்கைக்
குழாநெடுமாடம் * இடித்தபிரானார்கொடுமைகளே! (௩௬)

† 'சீரடி' என்பதும் பாடம்.

நற்றாய் நன்மகள் சென்ற சுரத்தருமை கூறி இரங்குதல்

கொடுங்கால்சிலையர் நிரைகோளுழவர் * கொலையில்வெய்ய
கடுங்காவிளைஞர் துடிபடும்கவ்வைத்து * அருவினையேன்
நெடுங்காலமும்கண்ணன்நீள்மலர்ப்பாதம்பரவிப்பெற்ற
தொடுங்காலொசியுமிடை * இளமான்சென்றசூழ்கடமே. (கஎ)

தலைவனைப்பிரிந்த தலைவி போலிகண்டு மகிழ்தல்.

கடமாயினகள்கழித்துத் † தன்கால்வன்மையால் * பலநாள்
தடமாயினபுக்கு நீர்நிலைநின்றதவம்இதுகொல்? *
குடமாடிஇம்மண்ணும்விண்ணும்குலுங்கஉலகளந்து
நடமாடியபெருமான் * உருவொத்தனநீலங்களே. (கஅ)

தலைவனது உருவெளிப்பாடு கண்ட தலைவி தோழிக்குக் கூறுதல்

நீலத்தடவரைமேல் புண்டரீகநெடுந்தடங்கள்
போல * பொலிந்துஎமக்குஎல்லாவிடத்தவும் * பொங்குமுந்நீர்
ஞாலப்பிரான்விசும்புக்கும்பிரான்மற்றும்நல்லோர்பிரான்
கோலங்கரியபிரான் * எம்பிரான்கண்ணின்கோலங்களே. (கசு)

இருள் கண்டிரங்கிய தலைவி தோழிக்கு வரைவு விருப்புரைத்தல்.

கோலப்பகல்களிறொன்றுகற்புய்ய * குழாம்விரிந்த
நீலக்கங்குல்களிறெல்லாம் ‡ நிறைந்தன * நேரிழையீர்!
ஞாலப்பொன்மாதின்மணாளன்துழாய்நங்கள் சூழ்குழற்கே
ஏலப்புனைந்துஎன்னைமார் * எம்மைநோக்குவதுஎன்றுகொலோ? (உ0)

வாடைக்குவருந்திய தலைமகள் வார்த்தை

என்றும்புன்வாடையிதுகண்டறிதும் * இவ்வாறுவெம்மை
ஒன்றும்உருவும்சுவடும்தெரியிலம் * ஓங்கசுரர்
பொன்றும்வகைபுள்ளையூர்வான்அருளருளாதஇந்நாள்
மன்றில்நிறைபழிதூற்றி * நின்றுஎன்னைவன்காற்றுஅடுமே. (உக)

தலைவி தலைவனது கண்ணழகில் ஈடுபட்டு வியந்துரைத்தல்.

வன்காற்றறைய ஒருங்கேமறிந்துகிடந்தலர்ந்த *
மென்கால்கமலத்தடம்போல்பொலிந்தன * மண்ணும்விண்ணும்
என்காற்குஅளவின்மைகாண்மினென்பானொத்துவான்நிமிர்ந்த
$ தன்காற்பணிந்தஎன்பால் * எம்பிரானதடங்கண்களே. (உஉ)

---

† 'தம்' என்பதும் பாடம். ‡ 'நிரந்தன' என்பதும் பாடம்.
$ 'தன்பால்' என்றதும் பாடம்.

தலைவனது உருவெழிலுரைத்த தலைமகள் வார்த்தை

கண்ணும்செந்தாமரை கையும்அவைஅடியோஅவையே *
வண்ணங்கரியதோர்மால்வரைபோன்று * மதிவிகற்பால்
விண்ணும்கடந்துஉம்பரப்பால்மிக்குமற்றெப்பாலெவர்க்கும்
எண்ணுமிடத்ததுவோ ? * எம்பிரானதெழில்நிறமே. (௪௩)

தலைவி தலைவனது பெருமையுரைத்தல்.

நிறமுயர்கோலமும் பேரும்உருவும்இவையிவையென்று *
அறமுயல்ஞானச்சமயிகள்பேசிலும் * அங்கங்கெல்லாம்
உறவுயர்ஞானச்சுடர்விளக்காய்நின்றதன்றி ஒன்றும்
பெறமுயன்றாரில்லையால் * எம்பிரானபெருமையையே. (௪௪)

தலைவி தலைவனது நீர்மையுதவியை நினைந்துரைத்தல்.

பெருங்கேழலார் தம்பெருங்கண்மலர்ப்புண்டரீகம் * நம்மேல்
ஒருங்கேபிறழவைத்தார் இவ்வகாலம் * ஒருவர்நம்போல்
வருங்கேழ்பவருளரே ? தொல்லைவாழியம்சூழ்பிறப்பு
மருங்கேவரப்பெறுமே ? * சொல்லுவாழிமடநெஞ்சமே ! (௪௫)

நெஞ்சைத்தூதுவிட்ட தலைவி இரங்குதல்

மடநெஞ்சமென்றும் தமதென்றும் * ஓர்கருமம்கருதி
விடநெஞ்சையுற்றார் விடவோ அமையும * அப்பொன்பெயரோன்
தடநெஞ்சம்கீண்டபிரானார்தமதடிக்கீழ்விடப்போய்த
திடநெஞ்சமாய் * எமமைநீத்துஇன்றுதாறும்திரிகின்றதே. (௪௬)

பிரிவாற்றது வருந்தும் தலைவிநிலைகண்டு செவிலிஇரங்குதல்

திரிகின்றது வடமாருதம் * திங்கள்வெந்தீமுகந்து
சொரிகின்றது அதுவும் அது * கண்ணன்விண்ணூர்தொழவே
சரிகின்றதுசங்கம்தண்ணந்துழாய்க்குவண்ணம்பயலை
விரிகின்றது முழுமெய்யும் * என்னாங்கொல்என்மெல்லியற்கே ? (௪௭)

நன்னிமித்தங் கண்டு தான் ஆற்றியிருந்தலைத் தலைவி தோழிக்குக் கூறுதல்.

மெல்லியலாக்கைக்கிருமி * குருவில்மிளிர்தந்து ஆங்கே
செல்வியசெல்கைத்து உலகைஎன்காணும் ? * என்னாலும்தன்னைச்
சொல்லியசூழல்திருலவன்கவியாதுகற்றேன் ?
பல்லியின்சொல்லும்சொல்லா * கொள்வதோவுண்டுபண்டுபண்டே. ()

இருளுக்கு ஆற்றாத தலைவி தோழிக்குக் கூறுதல்

பண்டும்பலபல வீங்கிருள்காண்டும் * இப்பாயிருள்போல்
கண்டுமறிவதும் கேட்பதும்யாமிலம் * காளவண்ண
வண்டுண்துழாய்ப்பெருமான்மதுசூதனன்தாமோதரன்
உண்டுமுமிழ்ந்துங்கடாய * மண்ணோரன்னவொண்ணுதலே! (௪௯)

தலைவன் மீண்டுவருகையில் பாகனோடு கூறுதல்.

ஒண்ணுதல்மாமை யொளிபயவாமை * விரைந்துநந்தேர்
நண்ணுதல்வேண்டும் வலவ! கடாகின்று * தேன்நவின்ற
விண்முதல்நாயகன்நீள்முடிவெண்முத்தவாசிகைத்தாய்
மண்முதல்சேர்வுற்று * அருவிசெய்யாநிற்கும்மாமலைக்கே. (௫௦)

கடலோசைக்கு ஆற்றாத தலைவி இரங்குதல்.

மலைகொண்டுமத்தா அரவால்சுழற்றிய மாயப்பிரான் *
அலைகண்டுகொண்ட அமுதம்கொள்ளாதுகடல் * பரதர்
விலைகொண்டுதந்தசங்கம்இவைவேரித்துழாய்துணையாத்
துலைகொண்டுதாயம்கிளர்ந்து*கொள்வானொத்தழைக்கின்றதே. (௫௧)

காலமயக்கு.

அழைக்கும்கருங்கடல் † வெண்திரைக்கைக்கொண்டுபோய்* அலர்வாய்
மழைக்கண்மடந்தை அரவணையேற * மண்மாதர்விண்வாய்
அழைத்துப்புலம்பிமுலைமலைமேல்நின்றும்ஆறுகளாய்
மழைக்கண்ணநீர் * திருமால்கொடியானென்றுவார்கின்றதே! (௫௨)

கட்டுவிச்சி கூறுதல்

வாராயினமுலையாளிவள் வானோர்தலைமகனாம் *
சீராயின தெய்வநன்னோயிது * தெய்வத்தண்ணந்துழாய்த்
தாராயினும்தழையாயினும்தண்கொம்பதாயினும் கீழ்
வேராயினும் * நின்றமண்ணாயினும்கொண்டு வீசுமினே. (௫௩)

வண்டுவிடுதூது

வீசும்சிறகால்பறத்திர் * விண்ணாடுநுங்கட்குஎளிது
பேசும்படி யன்னபேசியும்போவது * நெய்தொடுவுண்டு
ஏசும்படியன்னசெய்யும்எம்மீசர்விண்ணோர்பிரானார்
மாசில்மலரடிக்கீழ் * எம்மைச்சேர்விக்கும்வண்டுகளே! (௫௪)

---

† 'வெண்டிரைக்கே' என்று சேவிப்பர்.

நலம்பாட்டு.

வண்டுகளோ! வம்மின் நீர்ப்பூநிலப்பூமரத்திலொண்பூ *
உண்டுகளித்துழல்வீர்க்கு ஒன்றுரைக்கியம் * ஏனமொன்றாய்
மண்துகளாடி வைகுந்தமன்னாள் குழல்வாய்விரைபோல்
விண்டுகள்வாரும் * மலருளவோ நும் வியலிடத்தே? (ருரு)

தலைவன் இரவிடைக் கலந்தமையைத் தலைவி தோழிக்கு உரைத்தல்

வியலிடமுண்டபிரானார் விடுத்ததிருவருளால் *
உயலிடம்பெற்றுய்ந்தம் அஞ்சலம்தோழி! * ஓர்தண்தென்றல்வந்து
அயலிடையாரும்அறிந்திலர் அம்பூந்துழாயின்இன்தேன்
புயலுடைநீர்மையினால் * தடவிற்றென் † புலன்கலனே. (ருசு)

தலைவன் பாங்கனுக்குக் கழற்றெதிர்மறுத்தல்.

‡ புலக்குண்டலப் புண்டரீகத்தபோர்க்கெண்டை * வல்லியொன்றால்
விலக்குண்டுலாகின்று வேல்விழிக்கின்றன * கண்ணன்கையால்
மலக்குண்டுஅமுதம்சுரந்தமறிகடல்போன்றவற்றால்
கலக்குண்டநான்றுகண்டார் * எமமையாரும்கழறலரே. (ருள)

தோழி தலைவன் பெருமையை யுரைத்துத் தலைவியை ஆற்றுதல்.

கழல்தலமொன்றே நிலமுழுதாயிற்று * ஒருகழல்போய்
நிழல்தர எல்லாவிசும்பும்நிறைந்தது * நீண்டவண்டத்து
உழறலர்ஞானச்சுடர்விளக்காய்உயர்ந்தோரையில்லா
அழளலர்தாமரைக்கண்ணன் * என்னோஇங்கு அளக்கின்றதே? (ருஅ)

இரவு நீடுதற்கு ஆற்றாத தலைவியைப்பற்றிச் செவிலி இரங்குதல்.

அளப்பருந்தன்மைய ஊழியங்கங்குல் * அந்தண்ணந்துழாய்க்கு
உளப்பெருங்காதலின் நீளியவாயுள * ஓங்குமுந்நீர்
வளப்பெருநாடன்மதுசூதனனென்னும்வல்வினையேன்
தளப்பெருநீள்முறுவல் * செய்யவாயதடமுலையே. (ருகூ)

தலைமகளிளமைக்குச் செவிலிஇரங்குதல்

முலையோ முழுமுற்றும்போந்தில * மொய்பூங்குழல்குறிய
கலையோஅரையில்லை நாவோகுழறும் * கடல்மண்ணெல்லாம்
விலையோவெனமிளிருமகண் இவள்பரமே? பெருமான்
மலையோ * திருவேங்கடமென்று கற்கின்றவாசகமே. (சுo)

† 'பொலன்கலனே' என்பதும பாடம ‡ 'பொலக்குண்டலம்' என்பதும பாடம.

தோழி தலைவனது நீர்மையைத் தலைவிக்குக் கூறுதல்.

வாசகம்செய்வது நம்பரமே? * தொல்லைவானவர்தம்
நாயகன் நாயகரெல்லாம்தொழுமவன் * ஞாலமுற்றும்
வேயகமாயினும்சோராவகை இரண்டேயடியால்
தாயவன் * ஆய்க்குலமாய்வந்துதோன்றிற்றுநம்மிறையே. (கூக)

தலைவியின் ஆற்றாமையைத் தோழி தலைவனுக்குக் கூறுதல்.

இறையோஇரக்கினும்ஈங்கோர்பெண்பால் எனவும்இரங்காது *
அறையோ! என நின்றதிரும்கருங்கடல் * ஈங்குஇவள்தன்
நிறையோஇனியுன் திருவருளாலன்றிக் காப்பரிதால்
முறையோ? * அரவணைமேல்பள்ளிகொண்ட முகில்வண்ணனே. (கூஉ)

தலைவனை இயற்பழித்த தோழிக்குத் தலைவி இயற்பட மொழிதல்.

வண்ணம்சிவந்துள வானாடமரும்குளிர்விழிய *
தண்மென்கமலத்தடம்போல பொலிந்தன * தாமிவையோ
கண்ணன் திருமால்திருமுகந்தன்னொடும்காதல்செய்தேற்கு
எண்ணம்புகுந்து * அடியேனொடுஇக்காலமிருக்கின்றதே. (கூங)

தலைவன்பேர்கூறித்தரித்திருந்தலைத் தலைவி தோழிக்குக் கூறி இரங்கல்.

இருக்கார்மொழியால் நெறியிழுக்காமை * உலகளந்த
திருத்தாளிணைநிலத்தேவர்வணங்குவர் * யாமும்அவா
ஒருக்காவினையொடும்எம்மொடுமநொந்துகனியின்மையின்
கருக்காய் கடிப்பவர்போல் * திருநாமச்சொல்கற்றனமே. (கூச)

தலைமகள் நோக்கில் ஈடுபட்ட தலைவன் பாங்கனொடு கூறுதல்.

கற்றுப்பிணைமலர் கண்ணின்குலம்வென்று * ஓரோகருமம்
முற்றுப்பயின்று செவியொடுசாவி * உலகமெல்லாம
முற்றும்விழுங்கியுமிழ்ந்தபிரானார் திருவடிக்கீழ்
உற்றும்உறாதும் * மிளிர்ந்தகண்ணாய் எம்மை யுண்கின்றவே. (கூரு)

தலைவன் பாங்கனுக்குக் கழற்றெதிர்மறுத்தல்.

உண்ணாதுஉறங்காது உணர்வுறுமெனத்தனையோகியர்க்கும் *
எண்ணாய்மிளிரு மியல்வினவாம் * *எரிநீர்வளிவான்
மண்ணாகியஎம்பெருமான் தனதுவைகுந்தமன்னாள்
கண்ணாய்அருவினையேன் * உயிரான காவிகளே. (கூசா)

தலைவன் பாங்கனுக்குத் தன்வலியழிவு உரைத்தல்.

காவியும்நீலமும்வேலும்கயலும் பலபலவென்று *
ஆவியின்தன்மை அளவல்லபாரிப்பு * † அசுரைச்செற்ற
மாவியம்புள்வல்லமாதவன்கோவிந்தன்வேங்கடம்சேர்
தூவியம்பேடையன்னாள் * கண்களாயதுணைமலரே. (௬௭)

காலமயக்கு

மலர்ந்தேயொழிந்தில மாலையும்மாலைப்பொன்வாசிகையும் *
புலந்தோய்தழைப்பந்தர் தண்டுறநாற்றி * பொருகடல்சூழ்
நிலந்தாவியஎம்பெருமான்தனதுவைகுந்தமன்னாய்!
கலந்தார்வரவெதிர்கொண்டு * வன்கொன்றைகள்கார்த்தனவே. (௬௮)

மாலைக்கிரங்கிய தலைவியைத் தோழி ஆற்றுதல்

காரேற்றிருள்செகிலேற்றின் சுடருக்குளைந்து * வெல்வான்
போரேற்றெதிர்ந்தது புன்தலைமாலை * புவனியெல்லாம்
நீரேற்றளந்தநெடியபிரான் அருளாவிடுமே ?
வாரேற்றிளமுலையாய்! * வருந்தேல்உன்வளைத்திறமே. (௬௯)

தலைவி இரவின் நெடுமைக்கு இரங்குதல்

வளைவாய்த்திருச்சக்கரத்து எங்கள்வானவனார்முடிமேல் *
தளைவாய்நறுங்கண்ணித் தண்ணந்துழாய்க்குவண்ணம்பயலை *
விளைவான்மிகவந்துநாள்திங்களாண்டூழிநிற்க எம்மை
உளைவான்புகுந்து * இதுவோர்கங்குல்ஆயிரமூழிகளே. (௭௰)

செவிலி வெறுத்தலைத் தலைவி தோழியர்க்கு உரைத்தல்

ஊழிகளாய் உலகேழுமுண்டானென்றிலம் * பழங்கண்டு
ஆழிகளாம்பழவண்ணமென்றேற்கு * அஃதேகொண்டுஅன்னை
நாழிவளோவென்னுமஞாலமுண்டான்வண்ணம் சொல்லிற்றென்னும்
தோழிகளோ! உரையீர் * எம்மைஅம்மனைசூழ்கின்றவே. (௭௧)

இருளுக்கு ஆற்றாத தலைவி இளம்பிறைகண்டு தளர்ந்து உரைத்தல்

சூழ்கின்றகங்குல் சுருங்காவிருளின்கருந்திணிம்பை *
போழ்கின்றதிங்களம்பிள்ளையும்போழ்க * துழாய்மலர்க்கே
தாழ்கின்றநெஞ்சத்தொருதமியாட்டியேன்மாமைக்குஇன்று
வாழ்கின்றவாறுஇதுவோ ? * வந்துதோன்றிற்றுவாடையதே. (௭௨)

---

† 'அசுரரைச்செற்ற' என்பதும் பாடம்.

பிறையுடைமாலைக்காற்றததலைவியின் தளர்ச்சிக்குப் பாங்கி இரங்கல்.

வால்வெண்ணிலவுஉலகாரச்சுரக்கும் வெண்திஙகளென்னும் *
பால்விண்சுரவி சுரமுதிர்மாலை * பரிதிவட்டம்
போலும்சுடரடலாழிப்பிரான் பொழிமேலழுளிக்கும்
சால்பின்தகைமைகொலாம்? * தமியாட்டிதளர்ந்ததுவே. (எக)

தலைவனது தார்மணங் கொண்டுவருந் தென்றலைத் தலைவி மகிழ்ந்து உரைத்தல்.

தளர்ந்தும்முறிந்தும வருதிரைப்பாயல் * திருநெடுஙகண்
வளர்ந்தும்அறிவுற்றும் வையம்விழுங்கியும் * மால்வரையைக்
கிளர்ந்துமறிதரக்கீண்டெடுத்தான்முடிசூடுதுழாய்
அளைந்துண்சிறுபசுந்தென்றல் * அந்தோ! வந்துலாகின்றதே. (எ௨)

மதியுடம்படுக்கலுற்ற தலைவன் தலைவிதோழியைப் பதிவினுதல்.

உலாகின்றகெண்டையொளியமபு * எம்மாவியை ஊடுருவகு
குலாகின்ற வெஞ்சிலைவாள்முகததீர்! * குனிசஙகிடறிப
புலாகின்ற வேலைப்புணரியமபளளியம்மான் அடியார்
நிலாகின்றவைகுந்தமோ? * வையமோ? நும்நிலையிடமே. (எ௩)

மாலைபெறது வருந்தும் தலைவி மதிக்குவருந்தி நெஞ்சொடு கூறுதல்

இடம்போய்விரிந்துஇவ்வுலகளநதான் எழிலார்தண்துழாய் *
வடம்போதினையும்மடநெஞசமே! * நஙகளவெள்வளைக்கே
விடம்போல்விரிதல்இதுவியபபே? வியன்தாமரையின
தடம்போதொடுக்க * மெலலாமபலலர்விக்கும் வெண்திஙகளே. (எ௪)

தலைவி மாலைப்பொழுதுகண்டு வருந்துதல்.

திஙகளம்பிள்ளைபுலம்ப * தன்செங்கோலரசுபட்ட
செங்களம்பற்றி நின்றெள்குபுன்மாலை * தென்பாலிலஙகை
வெங்களம்செய்தநம்விண்ணோர்பிரானார் துழாய்துணையா
நங்களைமாமைகொள்வான் * வந்துதோன்றிகலிகின்றதே. (எரு)

பிரிவாற்றத தலைவி தலைவனுற்றலைக் கருதி நெஞ்சழிந்து இரங்குதல்.

கலியும்நரகனை வீட்டிற்றும் * வாணன்திண்தோள் துணித்த
வலியும்பெருமையும் யான்சொல்லும்நீர்த்தல்ல * மைவரைபோல்
பொலியுமுருவிற்பிரானார்புனைபூநதுழாய்மலர்க்கே
மெலியும்மடநெஞ்சினார் * தந்துபோயினவேதனையே. (எசு)

தலைவனைப் பிரியாத மகளிரது சிறப்பைக் கூறித் தலைவி இரங்குதல்.

வேதனை வெண்புரிநூலனை * விண்ணோர்பரவநின்ற
நாதனை ஞாலம்விழுங்கும்அநாதனை * ஞாலந்தத்தும்
பாதனைப்பாற்கடல்பாம்பணைமேல்பள்ளிகொண்டருளும்
சீதனையேதொழுவார் * விண்ணுளாரிலும்சீரியரே. (எகூ)

பிரிவாற்றாத தலைவி மாலைப்பொழுதுகண்டு இரங்குதல்.

சீரரசாண்டுதன்செங்கோல் சிலநாள்செலீஇக்கழிந்த *
பாரரசொத்து மறைந்ததுநாயிறு * பாரளந்த
பேரரசே! எம்விசும்பரசே! எம்மைநீத்துவஞ்சித்த
ஓரரசே! அருளாய் * இருளாய்வந்துஉறுகின்றதே. (அ0)

வெறிவிலக்குவிக்க நினைந்த தோழி இரங்குதல்.

உறுகின்றகன்மங்கள் மேலனஓர்ப்பிலராய் * இவளைப்
பெறுகின்றதாயார் மெய்ந்நொந்துபெறார்கொல்? * துழாய்குழல்வாய்த்
துறுகின்றிலர்தொல்லைவேங்கடமாட்டவும்சூழ்கின்றிலர்
இறுகின்றதால்இவளாகம் * மெல்லாவியெரிகொள்ளவே. (அக)

உருவெளிப்பாடு கண்ட தலைவி தலைவன் கண்ணழகுக்கு இரங்குதல்

எரிகொள்செந்நாயிறு இரண்டுடனேஉதயமலைவாய் *
விரிகின்றவண்ணத்த எம்பெருமான்கண்கள் * மீண்டவற்றுள்
எரிகொள்செந்தீவீழசுரரைப்போலஎம்போலியர்க்கும்
விரிவசொல்லீர்இதுவோ? * வையமுற்றும்விளரியதே. (அஉ)

அன்றிலின் குரலுக்கு ஆற்றாததலைவியின் தளர்ச்சிகண்டு தோழி இரங்கல்

விளரிக்குரலன்றில்மென்பெடைமேகின்ற முன்றில்பெண்ணை *
முளரிக்குரம்பைஇதுஇதுவாக * முகில்வண்ணன்பேர்
கிளரிக்கிளரிப்பிதற்றும்மெல்லாவியும்நைவுமெல்லாம்
தளரிற்கொலோ? அறியேன் * உய்யலாவது இத்தையலுக்கே. (அங)

தலைவி தலைவனைக் காண விரைதல்

தையல்நல்லார்கள்குழாங்கள்குழியகுழுவினுள்ளும் *
ஐயநல்லார்கள் குழியவிழவினும் * அங்கங்கெல்லாம்
கையபொன்னாழிவெண்சங்கொடும்காண்பான்அவாவுவன்நான்
மையவண்ணா! மணியே! * முத்தமே! என்தன்மாணிக்கமே! (அச)

மாலைப்பொழுது கண்டு வருந்திய தலைவி இரங்குதல்.

மாணிக்கங்கொண்டுகுரங்கெறிவொத்து இருளோடுமுட்டி *
ஆணிப்பொன்னன்ன சுடர்படுமாலை * உலகளந்த
மாணிக்கமே! என்மரதகமே! மற்றொப்பாரையில்லா
ஆணிப்பொன்னே! * † அடியேனடியாவியடைக்கலமே! (அரு)

தலைவனைப் பிரிந்த தலைவி இரங்குதல்.

அடைக்கலத்தோங்குகமலத்தலரயன் சென்னியென்னும் *
முடைக்கலத்தூண் முன்அரனுக்குநீக்கியை * ஆழிசங்கம்
படைக்கலமேந்தியை வெண்ணெய்க்குஅன்றுய்ச்சிவன்தாம்புகளால்
‡ புடைக்கலந்தானைஎம்மானை * என்சொல்லிப்புலம்புவனே? (அசு)

அன்றிற்கும் ஆழிக்கும் ஆற்றாத தலைவிக்குத் தோழி இரங்குதல்.

புலம்பும் $ கனைகுரல் போழ்வாயவன்றிலும் * பூங்கழிபாய்ந்து
அலம்புங்கனைகுரல் சூழ்திரையாழியும் * ஆங்கவைநின்
வலம்புள்ளதுநலம்பாடுமிதுகுற்றமாக வையம்
சிலம்பும்படிசெய்வதே? * திருமால்இத்திருவினையே. (அஎ)

போலிகண்டு அழிகிற தலைவி ஆற்றாமைக்குஇரங்குதல்.

திருமாலுருவொக்கும்மேரு * அம்மேருவில்செஞ்சுடரோன்
திருமால்திருக்கைத் திருச்சக்கரமொக்கும * அன்னகண்டும
திருமாலுருவோடுஅவன்சின்னமேபிதற்றுநிற்பது ஓர்
திருமால்தலைக்கொண்டநங்கட்கு * எங்கேவரும்தீவினையே? (அஅ)

தலைவன் கலவிக்கு விரைகிற தலைவி இரங்குதல்.

§ தீவினைக்கு அருநஞ்சை நல்வினைக்கு இன்னமுதத்தினை *
பூவனைமேவிய தேவிமணாளனை * புன்மையெள்காது
ஆவினை மேய்க்கும்வல்லாயனை அன்றுலகீரடியால்
தாவினஏற்றைஎம்மானை * எஞ்ஞான்றுதலைப்பெய்வனே? (அகூ)

---

† 'அடியேனுடை' என்பதும் பாடம். ‡ 'புடைக்கலந்தானை' என்றும் பாடமுண்டு. $ 'கனைகுரல்' என்பது சிலர் பாடம். § இங்குத தளை சிதைகின்றது, 'தீவினைகட்கருநஞ்சினை நல்வினைக் கின்னமுதை' எனவும், 'தீவினைக்காருநஞ்சைச் நலவினைக்கின்னமுதத்தினை' எனவும் பாடங் கொள்ளலுமாம்.

தலைவனைப்பிரிந்த தலைவி காலநீட்டிப்புக்கு ஆற்றாது உரைத்தல்.

தலைப்பெய்துயான் உன்திருவடிச்சூடும் தகைமையினால்
நிலைப்பெய்தவாக்கைக்கு நோற்றஇம்மாயமும் * மாயம்செவ்வே
நிலைப்பெய்திலாதநிலைமையும்காண்தோறு அசுரர்குழாம்
தொலைப்பெய்தநேமியெந்தாய்! * தொல்லையூழிசுருங்கலதே. (கூ0)

தோழிக்குத் தலைவி தன்கற்புணர்த்தி அறத்தொடுநிற்றல்.

சுருங்குறிவெண்ணெய் தொடுவுண்டகள்வனை * வையம்முற்றும்
ஒருங்குறவுண்டபெருவயிற்றாளனை * மாவலிமாட்டு
இருங்குறளாகிஇசையவோர்மூவடிவேண்டிச்சென்ற
பெருங்கிறியானையல்லால் * அடியேன்நெஞ்சம்பேணலதே. (கூக)

வேந்தற்குற்றுழிப் பிரிவில் தலைவனைக்குறித்துத் தலைவி இரங்குதல்.

பேணலமில்லா அரக்கர் முந்நீரபெரும்பதிவாய்*
நீள்நகர்நீளெரிவைத் தருளாயென்று * நின்னைவிண்ணோர்
தாள்நிலம்தோய்ந்துதொழுவர்நின்மூர்த்திபல்கூற்றிலொன்று
காணலுமாங்கொல்? என்றே * வைகல்மாலையும் காலையுமே. (கூஉ)

இருள்கண்டு அஞ்சுகிற தலைவி தோழிசெவிலியரை வெறுத்தல்.

காலைவெய்யோற்குமுன்னோட்டுக்கொடுத்த கங்குல்குறும்பர் *
மாலைவெய்யோன்பட வையகம்பரவுவர் * அன்னகண்டும்
காலைநல்ஞானத்துறைபடிந்தாடிக்கண்போதுசெய்து
மாலைநல்நாவில்கொள்ளார் * நினையார் அவன்மைப்படியே. (கூங)

தலைவியைக்கண்ட பாங்கன் தலைவனையடுத்து வியந்துகூறுதல்.

மைப்படிமேனியும் செந்தாமரைக்கண்ணும்வைதிகரே *
மெய்ப்படியால் உன்திருவடிச்சூடுந்தகைமையினார் *
எப்படிஊராமிலைக்கக்குருட்டாமிலைக்குமென்னும்
அப்படியானும்சொன்னேன் * அடியேன்மற்றுயாதென்பனே? (கூச)

தலைவி அறத்தொடுநிற்கத் துணிதல்.

யாதானும் ஓராக்கையில்புக்கு * அங்காப்புண்டும்ஆப்பவிழ்ந்தும்
மூதாவியில்தடுமாறும் உயிர்முன்னமே * அதனால்
யாதானும்பற்றிநீங்கும்விரதத்தைநல்வீடுசெய்யும்
மாதாவினைப்பிதுவை * திருமாலைவணங்குவனே. (கூரு)

தலைவி வெறிவிலக்குவிக்க நினைத்தல்.

வணங்கும்துறைகள் பலபலவாக்கி * மதிவிகற்பால்
பிணங்குஞ்சமயம் பலபலவாக்கி * அவையவைதோறு
அணங்கும்பலபலவாக்கிநின்மூர்த்திபரப்பிவைத்தாய்
இணங்குநின்னோரையில்லாய் ! * நின்கண்வேட்கையெழுவிப்பனே.

தலைவன்பிரிவில் துயில்கொள்ளாத தலைவி இரங்குதல்.

எழுவதும்மீண்டே படுவதும்பட்டு * எனையூழிகள்போய்க்
கழிவதும் கண்டுகண்டுஎள்கலல்லால் * இமையோர்கள்குழாம்
தொழுவதும்சூழ்வதும்செய்தொல்லைமாலைக்கண்ணாரக்கண்டு
கழிவதோர்காதலுற்றார்க்கும் * உண்டோகண்கள்துஞ்சுதலே ? (சுஎ)

தலைவனதருமைநினைந்து கவல்கிற தலைவிக்குத் தோழிகூறுதல்.

அஞ்சாமுனிவரும்அல்லாதவரும் தொடாநின்ற *
எஞ்சாப்பிறவி யிடர்கடிவான் * இமையோர்தமக்கும்
† தன்சார்விலாததனிப்பெருமூர்த்திதன்மாயம்செவ்வே
நெஞ்சால்நினைப்பரிதால் * வெண்ணெயூணென்னும்ஈனச்சொல்லே.

தலைவி தனக்குத்தலைவனிடத்துள்ள அன்புறுதியைத்தோழிக்குக்கூறுதல்.

ஈனச்சொல்லாயினுமாக * எறிதிரைவையம்முற்றும்
ஏனத்துருவாய் இடந்தபிரான் * இருங்கற்பகம்சேர்
வானத்தவர்க்கும்அல்லாதவர்க்கும்மற்றெல்லாயவர்க்கும்
ஞானப்பிரானையல்லாலில்லை * நான்கண்டநல்லதுவே. (சுகூ)

நூற்பயன்.

நல்லார் நவில்குருகூர்நகரான் * திருமால்திருப்பேர்
வல்லா ரடிக்கண்ணிசூடிய * மாறன்விண்ணப்பம்செய்த
சொல்லார்தொடையல்இந்நூறும்வல்லார் அழுந்தார்பிறப்பாம்
பொல்லாவருவினை * மாயவன்சேற்றுஅள்ளல்பொய்ந்நிலத்தே. (கOO)

தசக அடி வாவு—பொய் அரியன சூட்டு இசை என்றும் மலைவாசகம் ஊழி
உறுகின்ற சுருங்கு செககர்.

நம்மாழ்வார் திருவடிகளேசரணம்.

---

† 'தஞ்சார்வு' 'தன்சால்பு' என்பன பாடபேதங்கள்.

நம்மாழ்வார் அருளிச்செய்த

யஜுர்வேதஸாரமான

# திருவாசிரியம்.

## தனியன்.

(அருளாளப்பெருமாளெம்பெருமானார் அருளிச்செய்தது.)

கலிவிருத்தம்

காசினியோர்தாம்வாழக் கலியுகத்தேவந்துதித்து *
ஆசிரியப்பாவதனால் அருமறைநூல்விரித்தானை *
தேசிகனைப்பராங்குசனைத் திகழ்வகுளத்தாரானை *
மாசடையாமனத்துவைத்து மறவாமல்வாழ்த்துதுமே.

ஆசிரியப்பா. (தேசியாகம் - ஆதிதாளம்.)

செக்கர்மாமுகிலுடுத்து மிக்கசெஞ்சுடர்ப்
பரிதிசூடி * அஞ்சுடர்மதியம் பூண்டு *
பலசுடர்புனைந்த பவளச்செவ்வாய் *
திகழ்பசுஞ்சோதி மரகதக்குன்றம் *
கடலோன்கைமிசைக் கண்வளர்வதுபோல் *
பீதகவாடை முடிபூண்முதலா *
‡ மேதகுபல்கலனணிந்து * சோதி
வாயவும் கண்ணவும்சிவப்ப * மீதிட்டுப்
பச்சைமேனி மிகப்பகைப்ப *
நச்சுவினைக்கவர்தலை யரவினமளியேறி *
எறிகடல்நடுவுள் அறிதுயிலமர்ந்து *
சிவனயனிந்திர னிவர்முதலனைத்தோர் *
தெய்வக்குழாங்கள் கைதொழக்கிடந்த *
தாமரையுந்தித் தனிப்பெருநாயக! *
மூவுலகளந்த சேவடியோயே! (க)

உலகுபடைத்துண்டஎந்தை * அறைகழல்
சுடர்ப்பூந் தாமரைசூடுதற்கு * அவாவுஆ
ருயிருருகியுக்க * நேரியகாத
லன்பிலின்பீன்தேறல் * அமுத

---

† இத்திருவாசிரியம் அந்தாதித்தொடையாய்வந்தது.

‡ 'மெய்தகு' என்றும் பாடம்.

வெள்ளத்தானும்சிறப்புவிட்டு * ஒருபொருட்கு
அசைவோர்அசைக * திருவொடுமருவிய
இயற்கை * மாயாப்பெருவிறலுலகம்
மூன்றினொடு நல்வீடுபெறினும் *
கொள்வதெண்ணுமோ தெள்ளியோர்குறிப்பே? (உ)

குறிப்பில்கொண்டு நெறிப்பட * உலகம்
மூன்றுடன்வணங்கு தோன்றுபுகழ், ஆணை *
மெய்பெறநடாய தெய்வம்மூவரில்
முதல்வனாகி * சுடர்விளங்ககலத்து *
வரைபுரைதிரை †பொர பெருவரை ‡ வெருவர *
உருமுரலொலிமலிநளிர்கடல் படவர
வரசுஉடல்தடவரைசுழற்றிய * தனிமாத்
தெய்வத்தடியவர்க்கு இனிநாம் ஆளாகவே
இசையுங்கொல்? * ஊழிதோறூழி யோவாதே. (ங)

ஊழிதோறூழி ஓவாது * வாழிய
வென்று யாம்தொழஇசையுங்கொல்? *
யாவகையுலகமும் யாவருமில்லா *
மேல்வரும பெரும்பாழ்க்காலத்து * இரும்பொருட்
கெல்லாம் அரும்பெறல்தனிவித்து * ஒருதா
னாகித்தெய்வநான்முகக் கொழுமுளை
யீன்று * முக்கணீசனொடு தேவுபலநுதலி *
மூவுலகம் விளைத்தஉந்தி *
மாயக்கடவுள் மாமுதலடியே. (ச)

மாமுதலடிப்போதொன்று கவிழ்த்தலர்த்தி *
மண்முழுது மகப்படுத்து * ஒண்சுடரடிப்போது
ஒன்றுவிண்செலீஇ * நான்முகப்புத்தேள்
நாடுவியந்துவப்ப * வானவர்முறைமுறை
வழிபடநெறீஇ * தாமரைக்காடு
மலர்க்கண்ணொடு கனிவாயுடையது
மாய் * இருநாயிறு ஆயிரம்மலர்ந்தன்ன *
கற்பகக்காவு பற்பலவன்ன *
முடிதோ ளாயிரந்தழைத்த *
நெடியோய்க் $ கல்லது அடியதோஉலகே? (ரு)

†'பொரு' என்று வழங்குவர். ‡ 'வெருவுற' என்றும்பாடம்.
$'அல்லதுமடியதோ' என்பதும் பாடம்.

ஓஓ ! உலகினதியல்வே ! * ஈன்றோளிருக்க
மணைநீராட்டி * படைத்திடந்துஉண்டுமிழ்ந்
தளந்து * தேர்ந்துஉலகளிக்கும் முதற்பெருங்
கடவுள்நிற்ப * புடைப்பலதானறி
தெய்வம்பேணுதல் * தனாது
புல்லறிவாண்மை பொருந்தக்காட்டி *
கொல்வனமுதலா அல்லனமுயலும் *
இனையசெய்கை இன்புதுன்பளி *
தொல்மாமாயப் பிறவியுள்நீங்கா *
பல்மாமாயத் தழுந்துமாநளிர்ந்தே. (௬)

நளிர்மதிச்சடையனும் நான்முகக்கடவுளும் *
தளிரொளியிமையவர் தலைவனும்முதலா *
யாவகையுலகமும் யாவரும்அகப்பட *
நிலம்நீர்தீகால் சுடரிருவிசும்பும் *
மலர்சுடர்பிறவும் சிறிதுடன்மயங்க *
ஒருபொருள்புறப்பாடின்றி முழுவதும்
அகப்படக்கரந்து * ஓராலிலைச்சேர்ந்தஎம்
பெருமாமாயனையல்லது *
ஒருமாதெய்வம் மற்றுடையமோயாமே ? (௭)

அடிவரவு — செக்கர் உலகு குறிப்பு ஊழி யாமுதல் ஓஓஉலகு நளிர் முயற்றி

நம்மாழ்வார் திருவடிகளே சரணம்.

நம்மாழ்வார் அருளிச்செய்த

அதாவணவேதஸாரமான

# பெரிய திருவந்தாதி.

## தனியன்.

(எம்பெருமானார் அருளிச்செய்தது)

நேரிசைவெண்பா.

முந்துற்றநெஞ்சே! முயற்றிதரித்துரைத்து *
வந்தித்து † வாயாரவாழ்த்தியே *—சந்த
முருகூரும்சோலைசூழ் மொய்பூம்பொருநல் *
குருகூரன்மாறன்பேர்கூறு.

(செஞ்சுருட்டிராகம் - ரூபகதாளம்.)

முயற்றிசுமந்தெழுந்து முந்துற்றநெஞ்சே! *
இயற்றுவாய் எம்மொடுநீகூடி *—நயப்புடைய
நாவின்தொடைக்கிளவியுள் பொதிவோம் * நற்பூவைப்
பூவின்றவண்ணன்புகழ். (௧)

புகழ்வோம்பழிப்போம் புகழோம்பழியோம் *
இகழ்வோம்மதிப்போம் மதியோம்—இகழோம் * மற்று
எங்கள்மால்! செங்கண்மால்! சீறல்நீ தீவினையோம் *
எங்கள்மால் கண்டாய்இவை. (௨)

இவையன்றேநல்ல இவையன்றேதீய *
இவையென்றிவைஅறிவனேலும் *—இவையெல்லாம்
என்னால்அடைப்புநீக்கொண்ணாது இறையவனே! *
என்னால்செயற்பாலதுஎன்? (௩)

என்னின் மிகுபுகழார்யாவரே? * பின்னையும்மற்று
எண்ணில் மிகுபுகழேன்யானல்லால் *—என்ன
கருஞ்சோதிக் கண்ணன்,கடல்புரையும் * சீலப்
பெருஞ்சோதிக்கு என்நெஞ்சுஆள்பெற்று. (௪)

---

† 'வாயாரவாழ்த்தி' என்ற பாடம் வெண்டளைக்குச்சேராது.

பெற்றதாய்நீயே பிறப்பித்ததந்தைநீ *
மற்றையாராவாரும் நீபேசில் *—எற்றேயோ!
மாய! மாமாயவளைமாய முலைவாய்வைத்த *
நீயம்மா! காட்டும்நெறி. (ரு)

நெறிகாட்டி நீக்குதியோ? * நின்பால்கருமா
முறிமேனி காட்டுதியோ? * மேல்நாள்—அறியோமை
என்செய்வான்எண்ணினாய்? கண்ணனே! * ஈதுரையாய்
என்செய்தால் என்படோம்யாம்? (சு)

யாமே அருவினையோம்சேயோம் * என்நெஞ்சினார்
தாமே அணுக்கராய்ச்சார்ந்தொழிந்தார் *—பூமேய
செம்மாதை நின்மார்வில்சேர்வித்து * பாரிடந்த
அம்மா! நின்பாதத்தருகு. (எ)

அருகும்சுவடும் தெரிவுணரோம் * அன்பே
பெருகும்மிக இதுவென்? பேசீர் *—பருகலாம்
பண்புடையீர்! பாரளந்தீர்! பாவியேம்கண்காண்பரிய *
நுண்புடையீர்! நம்மைநுமக்கு. (அ)

நுமக்கடியோமென்றென்று நொந்துரைத்தென்? * மாலார்
தமக்குஅவர்தாம் சார்வரியரானால் *—எமக்குஇனி
யாதானும் ஆகிடுகாண்நெஞ்சே! * அவர் திறத்தே
யாதானும் சிந்தித்திரு. (கூ)

இருநால்வர் ஈரைந்தின்மேலொருவர் * எட்டோ
டொருநால்வர் ஓரிருவரல்லால் *—திருமாற்கு
யாமார்? வணக்கமார்? ஏபாவம்நன்னெஞ்சே! *
நாமாமிகவுடையோம்நாழ். (கo)

நாழாலமர்முயன்ற வல்லரக்கனின்னுயிரை *
வாழாவகைவலிதல் நின்வலியே *— ஆழாத
பாரும்நீவானும்நீ காலும்நீதீயும்நீ *
நீரும்நீயாய்நின்றநீ. (கக)

நீயன்றேஆழ்துயரில் வீழ்விப்பான்நின்றுஉழன்றாய்? *
போயொன்றுசொல்லியென்? போநெஞ்சே! *—நீயென்றும்
காழ்த்துஉபதேசந்தரினும் கைக்கொள்ளாய் * கண்ணன்தாள்
வாழ்த்துவதே கண்டாய்வழக்கு. (கஉ)

வழக்கொடுமாறுகொளன்று, அடியார்வேண்ட *
இழக்கவும்காண்டும் இறைவ !—இழப்புண்டே ? *
எம்மாட்கொண்டாகிலும் யான்வேண்ட * என்கண்கள்
தம்மால் காட்டுன்மேனிச்சாய். (கங)

சாயால்கரியானை உள்ளறியாராய்நெஞ்சே ! *
பேயார்முலைகொடுத்தார் பேயராய் *—நீயார் ? போய்த்
தேம்பூண்சுவைத்து ஊனறிந்தறிந்தும் * தீவினையாம்
பாம்பார்வாய்க் கைநீட்டல்பார்த்தி. (கச)

பார்த்தோர்எதிரிதா நெஞ்சே ! * படுதுயரம்
பேர்த்தோதப் பீடழிவாம்பேச்சில்லை *—ஆர்த்துஓதம்
தம்மேனிதாள்தடவத் தாம்கிடந்து * தம்முடைய
செம்மேனிக் கண்வளர்வார்சீர். (கரு)

சீரால்பிறந்து சிறப்பால்வளராது *
பேர்வாமனாகாக்கால் பேராளா !—*மார்பாரப்
புல்கிநீயுண்டுமிழ்ந்த பூமிநீரேற்பரிதே ? *
சொல்லுநீயாமறியச்சூழ்ந்து. (கசு)

சூழ்ந்தடியார்வேண்டினக்கால் தோன்றுதுவிட்டாலும் *
வாழ்ந்திடுவர்பின்னும்தம்வாய்திறவார் *— சூழ்ந்தெங்கும்
வாள்வரைகள்போலரக்கன் வன்தலைகள்தாம்இடிய *
தாள்வரை வில்லேந்தினார்தாம். (கஎ)

தாம்பாலாப்புண்டாலும் அத்தழும்புதானிளக *
பாம்பாலாப்புண்டுபாடுற்றாலும் *—சோமபாதுஇப்
பல்லுருவையெல்லாம் படர்வித்த வித்தா ! * உன்
தொல்லுருவை யாரறிவார் ? சொல்லு. (கஅ)

சொல்லில்குறையில்லை சூதறியாநெஞ்சமே ! *
எல்லிபகலென்னாது எப்போதும் *—தொல்லைக்கண்
மாத்தானைக்கெல்லாம் ஓரைவரையேமாறாக *
காத்தானைக் காண்டும்நீகாண். (கசு)

காணப்புகில்அறிவு கைக்கொண்டநல்நெஞ்சம் *
நாணப்படுமன்றே ? நாம்பேசில் *—மாணி
யுருவாகிக்கொண்டு உலகம்நீரேற்றசீரான் *
திருவாகம்தீண்டிற்றுச்சென்று. (உo)

சென்றங்குவெந்நரகில் சேராமல்காப்பதற்கு *
இன்றிங்கென்னெஞ்சால் இடுக்குண்ட *—அன்றங்குப்
பாருருவும்பார்வளைத்தநீருருவும் கண்புதைய *
காருருவன் தான்நிமிர்த்தகால். (உக)

காலேபொதத்திரிந்து கத்துவராம் † இந்நாள் *
மாலார்குடிபுகுந்தாரென்மனத்தே *—மேலால்
தருக்குமிடம்பாட்டினொடும் வல்வினையார்தாம் * வீற்
றிருக்குமிடம் காணாதிளைத்து. (உஉ)

இளைப்பாய்இளையாப்பாய் நெஞ்சமே! சொன்னேன் *
இளைக்கநமன்தமர்கள் பற்றி—இளைப்பெய்த *
நாய்தந்துமோதாமல் நல்குவான்நல்காப்பான் *
தாய்தந்தை எவ்வுயிர்க்குந்தான். (உந)

தானேதனித்தோன்றல் தன்னளப்பொன்றில்லாதான் *
தானேபிறர்கட்கும் தற்றோன்றல் *—தானே
இளைக்கில்பார்கீழ்மேலாம் மீண்டமைப்பானானால் *
அளக்கிற்பார் பாரின்மேல்ஆர்? (உச)

ஆரானும் ஆதானும்செய்ய * அகலிடத்தை
ஆராய்ந்து அதுதிருத்தலாவதே? *—சீரார்
மனத்தலை வன்துன்பத்தை மாற்றினேன் * வானோ
ரினத்தலைவன் கண்ணனால்யான். (உரு)

யானும்என்நெஞ்சும் இசைந்தொழிந்தோம் * வல்வினையைக்
கானும்மலையும் புகக்கடிவான் *—தானோர்
இருளன்னமாமேனி எம்மிறையார்தந்த *
அருளென்னுந்தண்டால் அடித்து. (உசு)

அடியால் படிகடந்தமுத்தோ? * அதன்றேல்
முடியால் விசும்பளந்தமுத்தோ? *—நெடியாய்!
செறிகழல்கள்தாள்நிமிர்த்துச்சென்று உலகமெல்லாம் *
அறிகிலமால்நீயளந்தஅன்று. (உஎ)

அன்றேநங்கண்காணும் ஆழியான்காருருவம் *
இன்றேநாம் காணாதிருப்பதுவும் *—என்றேனும்
கட்கண்ணால் காணாதஅவ்வுருவை * நெஞ்சென்னும்
உட்கண்ணேல் காணும்உணர்ந்து. (உஅ)

† 'இனநாள்' என்பதும் பாடம்.

உணரவொருவர்க்கு எளியனே? செவ்வே *
இணரும்துழாயலங்க லெந்தை *—உணரத்
தனக்கெளியர்எவ்வளவர் அவ்வளவன்ஆனால் *
எனக்கெளியன்எம்பெருமான்இங்கு. (௨௯)

இங்கில்லை பண்டுபோல்வீற்றிருத்தல் * என்னுடைய
செங்கண்மால்சீர்க்கும் சிறிதுள்ளம் *—அங்கே
மடியடக்கிநிற்பதனில் வல்வினையார்தாம் * மீண்டு
அடியெடுப்பதன்றே அழகு? (௩௦)

அழகுமறிவோமாய் † வல்வினையைத்தீர்ப்பான் *
நிழலும்அடிதாறுமானோம் *—சுழலக்
குடங்கள் தலைமீதெடுத்துக்கொண்டாடி * அன்றுஅத்
தடங்கடலை மேயார்தமக்கு. (௩௧)

தமக்குஅடிமைவேண்டுவார் தாமோதரனார்
தமக்கு * அடிமைசெய்யென்றால் செய்யாது *— ‡ எமக்கென்று
தாம்செய்யும்தீவினைக்கே தாழ்வுறுவர்நெஞ்சினார் *
யாம்செய்வதுஇவ்விடத்திங்குயாது? (௩௨)

யாதானுமொன்றறியில் தன்னுகக்கில்என்கொலோ? *
யாதானும்நேர்ந்தணுகாவாறுதான் *—யாதானும்
தேறுமாசெய்யா அசுரர்களை * நேமியால்
பாறுபாறாக்கினான்பால். (௩௩)

பாலாழி நீகிடக்கும்பண்பை * யாம்கேட்டேயும்
காலாழும்நெஞ்சழியும் கண்சுழலும் *—நீலாழிச்
சோதியாய்! ஆதியாய்! தொல்வினையெம்பால்கடியும் *
நீதியாய்! நிற்சார்ந்துநின்று. (௩௪)

நின்றும்இருந்தும் கிடந்தும்திரிதந்தும் *
ஒன்றுமோ ஆற்றான் என்நெஞ்சகலான் *—அன்றங்கை
வன்புடையால்பொன்பெயரோன் வாய்தகர்த்துமார்விடந்தான் *
அன்புடையனன்றே அவன்? (௩௫)

அவனும்இவனும்உவனும் * மற்றுஉம்ப
ரவனும் அவனென்றிராதே *—அவனும்
அவனேயெனத்தெளிந்து கண்ணனுக்கேதீர்ந்தால் *
அவனே எவனேனுமாம். (௩௬)

---

'வல்வினையும்' என்பதும் பாடம் ‡ 'எமக்கென்றும்' என்று உரையிற் பாடம்'

ஆமாறு அறிவுடையாராவது அரிதன்றே? *
நாமே அதுவுடையோம் நன்னெஞ்சே! *—பூமேய்
மதுகரமே தண்துழாய்மாலாரை * வாழ்த்தாம்
அதுகரமே அன்பாலமை. (௩௭)

அமைக்கும்பொழுதுண்டே? ஆராயில்நெஞ்சே! *
இமைக்கும்பொழுதும் இடைச்சி—குமைதிறங்கள் *
ஏசியேயாயினும் ஈன்துழாய்மாயனையே *
பேசியேபோக்காய்பிழை. (௩௮)

பிழைக்கமுயன்றோமோ? நெஞ்சமே! பேசாய் *
தழைக்கும்துழாய் மார்வன்தன்னை *—அழைத்து ஒருகால்
போயுபகாரம் பொலியக்கொள்ளாது * அவன்புகழே
வாயுபகாரம்கொண்டவாய்ப்பு. (௩௯)

வாய்ப்போ இதுவொப்ப மற்றில்லைவாநெஞ்சே! *
போய்ப்போஒய் வெந்நரகில்பூவியேல் *— தீப்பால
பேய்த்தாய் உயிர்கலாய்ப்பாலுண்டு * அவளுயிரை
மாய்த்தானை வாழ்த்தேவலி (௪0)

வலியமெனநினைந்து வந்தெதிர்ந்தமல்லர் *
வலியமுடியிடியவாங்கி *—வலியநின்
பொன்னாழிக்கையால் புடைத்திடுதிகிளாதே *
பல்நாளும்நிற்குமிப்பார். (௪௧)

பாருண்டான்பாருமிழ்ந்தான் பாரிடந்தான்பாரளந்தான் *
பாரிடமுன்படைத்தானென்பரால் *—பாரிட
மாவானும்தானானால் ஆரிடமே? * மற்றொருவர்க்கு
ஆவான் புகாவாலவை. (௪௨)

அவயமெனநினைந்து வந்தசுரர்பாலே *
நவையை நளிர்விப்பான்தன்னை *—கவையில்
மனத்துயரவைத்திருந்து வாழ்த்தாதார்க்குஉண்டோ? *
மனத்துயரை மாய்க்குமவகை. (௪௩)

வகைசேர்ந்தநல்நெஞ்சும் நாவுடையவாயும் *
மிகவாய்ந்து வீழாவெனிலும் *— மிகவாய்ந்து
மாலைத்தாம் வாழ்த்தாதிருப்பர்இதுவன்றே? *
மேலைத்தாம்செய்யும்வினை. (௪௪)

வினையார்தரமுயலும் வெம்மை அஞ்சி *
தினையாம்சிறிதளவும் செல்ல—நினையாது *
வாசகத்தால்ஏத்தினேன் வானோர்தொழுதிறைஞ்சும் *
நாயகத்தான்பொன்னடிக்கள் நான். (சரு)

நான்கூறும்கூற்றாவது இத்தனையே * நாள்நாளும்
தேங்கோதநீருருவன் செங்கண்மால் *—நீங்காத
மாகதியாம்வெந்நரகில் சேராமல்காப்பதற்கு *
நீகதியா நெஞ்சே! நினை. (சசா)

நினைத்திறைஞ்சிமானிடவர் ஒன்றிரப்பரென்றே *
நினைத்திடவும்வேண்டாநீநேரே *—நினைத்திறைஞ்ச
எவ்வளவர்எவ்விடத்தோர்மாலே! * அதுதானும்
எவ்வளவும்உண்டோ? எமக்கு. (சஎ)

எமக்குயாம்விண்ணாட்டுக்கு உச்சமதாம்வீட்டை *
அமைத்திருந்தோம் அஃதன்றேயாமாறு? *—அமைப்பொலிந்த
மென்தோளிகாரணமா வெங்கோட்டேறேழுடனே *
கொன்றானையே மனத்துக்கொண்டு. (சஅ)

கொண்டல்தான்மால்வரைதான் மாகடல்தான்கூரிருள்தான் *
வண்டறாப்பூவைதான் மற்றுத்தான் *—கண்டநாள்
காருருவம்காண்தோறும் நெஞ்சுஓடும் * கண்ணனார்
பேருருவென் றெம்மைப்பிரிந்து. (சகூ)

பிரிந்தொன்றுநோக்காது தம்முடையபின்னே *
திரிந்துழலும் சிந்தனையார்தம்மை *—புரிந்தொருகால்
ஆவா! எனஇரங்கார் அந்தோ! வலிதேகொல்? *
மாவாய்பிளந்தார்மனம். (ருo)

மனமாளும்ஓரைவர் வன்குறும்பர்தம்மை *
சினமாள்வித்து ஓரிடத்தேசேர்த்து *—புனமேய
தண்துழாயானடியைத் தான்காணுமஃதன்றே? *
வண்துழாஞ்சீரார்க்கு மாண்பு. (ருக)

மாண்பாவித்துஅந்நான்று மண்ணிரந்தான் * மாயவள்நஞ்சு
ஊண்பாவித்துண்டானது ஓருருவம் *—காண்பான்நம்
கண்ணவா மற்றொன்றுகாணுறா * சீர்பரவாது
உண்ணவாய் தானுறுமோஒன்று? (ருஉ)

ஒன்றுண்டுசெங்கண்மால்! யானுரைப்பது * உன்னடியார்க்கு
என்செய்வனென்றே இருத்திநீ *—நின்புகழில்
வைகும் தம்சிந்தையிலும்மற்றினிதோ? * நீ அவர்க்கு
வைகுந்தமென்றருளும்வான். (ருங)

வானோ? மறிகடலோ? மாருதமோ? தீயகமோ? *
கானோ? ஒருங்கிற்றும்கண்டிலமால் *—ஆனீன்ற
கன்றுயரத்தாமெறிந்துகாயுதிர்த்தார் தாள்பணிந்தோம் *
வன்துயரை யாவா! மருங்கு. (ருச)

மருங்கோதம்மோதும் மணிநாகணையார் *
மருங்கே வரவரியரேலும *—ஒருங்கே
எமக்குஅவரைக்காணலாம் எப்பொழுதும்உள்ளால் *
மனக்கவலைதீர்ப்பார்வரவு. (ருரு)

வரவாறொன்றில்லையால் வாழ்வினிதால் * எல்லே! *
ஒருவாறு ஒருவன்புகாவாறு *—உருமாறும
ஆயவர்தாம்சேயவர்தாம் அன்றுஉலகம்தாயவர்தாம் *
மாயவர்தாம்காட்டும்வழி. (ருசு)

வழித்தங்குவல்வினையை மாற்றானோ? நெஞ்சே! *
தழீஇக்கொண்டு போரவுணன்தன்னை *—சுழித்தெங்கும
தாழ்விடங்கள்பற்றிப் புலால்வெள்ளந்தானுகள *
வாழ்வடங்க மார்விடந்தமால். (ருஎ)

மாலே! படிச்சோதிமாற்றேல் * இனிஉனது
பாலேபோல்சீரில் பழித்தொழிந்தேன் *—மேலால்
பிறப்பின்மைபெற்று அடிக்கீழ்க்குற்றேவலன்று *
மறப்பின்மை யான்வேண்டும்மாடு. (ருஅ)

மாடே வரப்பெறுவராமென்றே * வல்வினையார்
காடானுமாதானும் கைக்கொள்ளார் *—ஊடேபோய்ப்
பேரோதம்சிந்து திரைக்கண்வளரும் * பேராளன்
பேரோதச் சிந்திக்கப்பேர்ந்து. (ருகூ)

பேர்ந்தொன்றுநோக்காது பின்னிற்பாய்நில்லாப்பாய் *
ஈன்துழாய்மாயனையே என்னெஞ்சே! *—பேர்ந்தெங்கும
தொல்லைமாவெந்நரகில் சேராமல்காப்பதற்கு *
இல்லைகாண்மற்றோரிறை. (கூ0)

இறைமுறையான்சேவடிமேல் மண்ணளந்தஅந்நாள் *
மறைமுறையால் வானாடர்கூடி *—முறைமுறையின்
தாதிலகு பூத்தெளித்தால்ஒவ்வாதே ? * தாழ்விசும்பின்
மீதிலகித் தான்கிடக்கும்மீன். (௬௧)

மீனென்னுங்கம்பில் வெறியென்னும்வெள்ளிவேய் *
வானென்னும் கேடிலா வான்குடைக்கு *—தானோர்
மணிக்காம்புபோல் நிமிர்ந்துமண்ணளந்தான் * நங்கள்
பிணிக்காம் பெருமருந்துபின். (௬௨)

பின்துரக்கும்காற் † றிழந்த சூற்கொண்டல் பேர்ந்தும்போய் *
வன்திரைக்கண் வந்தணைந்தவாய்மைத்தே *—அன்று
திருச்செய்யநேமியான் தீயரக்கிமூக்கும் *
பருச்செவியும் ஈர்ந்தபரன். (௬௩)

பரனாம்அவனாதல் பாவிப்பராகில் *
உரனால்ஒருமூன்றுபோதும *—மரமேழன்று
எய்தானைப் புள்ளின்வாய்கீண்டானையே * அமரர்
கைதான் தொழாவேகலந்து ? (௬௪)

கலந்துநலியும் கடுந்துயரைநெஞ்சே ! *
மலங்கவடித்து மடிப்பான் *—விலங்கல்போல்
தொல்மாலைக்கேசவனை நாரணனைமாதவனை *
சொல்மாலை எப்பொழுதும்சூட்டு. (௬௫)

சூட்டாயநேமியான் தொல்லரக்கனின்னுயிரை *
மாட்டேதுயரிழைத்த மாயவனை *—ஈட்ட
வெறிகொண்ட தண்துழாய்வேதியனை * நெஞ்சே !
அறிகண்டாய் சொன்னேன்அது. (௬௬)

அதுவோநன்றென்று அங்கமருலகோவேண்டில் *
அதுவோ பொருளில்லையன்றே ? *—அதுவொழிந்து
மண்நின்றுஆள்வேனெனினும் கூடும்மடநெஞ்சே ! *
கண்ணன்தாள்வாழ்த்துவதேகல். (௬௭)

கல்லுமகனைகடலும வைகுந்தவானாடும *
புல்லென்றொழிந்தனகொல் ? ஏபாவம் ! *—வெல்ல
நெடியான்நிறம்கரியான் உள்புகுந்துநீங்கான் *
அடியேனது உள்ளத்தகம். (௬௮)

---

† 'இழிந்த' என்பதும் பாடம்.

அகம்சிவந்தகண்ணினராய் வல்வினையராவார் *
முகம்சிதைவராமன்றே? முக்கி *—மிகுந்திருமால்
சீர்க்கடலையுள்பொதிந்த சிந்தனையேன்தன்னை *
ஆர்க்குஅடலாம் செவ்வேயடர்த்து? (௬௯)

அடர்பொன்முடியானை ஆயிரம்பேரானை *
சுடர்கொள் சுடராழியானை *—இடர்கடியும்
மாதாபிதுவாக வைத்தேன்எனதுள்ளே *
யாதாகில் யாதேஇனி? (௭0)

இனிநின்றுநின்பெருமை யானுரைப்பது என்னே? *
தனிநின்ற சார்விலாமூர்த்தி! *—பனிநீர்
அகத்துலவு செஞ்சடையான் ஆகத்தான் * நான்கு
முகத்தான் நின்னுந்திமுதல். (௭௧)

முதலாம்திருவுருவம் மூன்றென்பர் * ஒன்றே
முதலாகும் மூன்றுக்குமென்பர் *—முதல்வா!
நிகரிலகுகாருருவா! நின்னகத்த தன்றே? *
புகரிலகுதாமரையின்பூ. (௭௨)

பூவையும்காயாவும் நீலமும்பூக்கின்ற *
காவிமலரென்றும் காண்டோறும் *—பாவியேன்
மெல்லாவி மெய்மிகவேபூரிக்கும் * அவ்வவை
யெல்லாம் பிரானுருவேயென்று. (௭௩)

என்றும்ஒருநாள் ஒழியாமையானிரந்தால் *
ஒன்றும்இரங்கார்உருக்காட்டார் *—குன்று
குடையாக ஆகாத்தகோவலனார் * நெஞ்சே!
புடைதான் பெரிதேபுவி. (௭௪)

புவியும்இருவிசும்பும் நின்னகத்த * நீயென்
செவியின்வழிபுகுந்து என்னுள்ளாய் *—அவிவின்றி
யான்பெரியன்நீபெரியை என்பதனையாரறிவார்? *
ஊன்பருகுநேமியாய்! உள்ளு. (௭௫)

உள்ளிலும்உள்ளம்தடிக்கும் வினைப்படலம் *
விள்ள, விழித்துஉன்னை மெய்யுற்றால் *—உள்ள
உலகளவும் யானும்உளனாவனென்கொலோ? *
உலகளந்தமூர்த்தி! உரை. (௭௬)

உரைக்கிலோர்சுற்றத்தார் உற்றாரென்றுஆரே? *
இரைக்கும் கடல்கிடந்தஎந்தாய்! *—உரைப்பெல்லாம்
நின்னன்றி மற்றிலேன்கண்டாய் * எனதுயிர்க்கு ஓர்
சொல்நன்றியாகும்துணை. (எஎ)

துணைநாள்பெருங்கிளையும் தொல்குலமும் *சுற்றத்
திணைநாளும் இன்புடைத்தாமேலும் *—கணைநாணில்
ஓவாத்தொழிற்சார்ங்கன் தொல்சீரைநல்நெஞ்சே! *
ஓவாதுணருகஉண். (எஅ)

உள்நாட்டுத்தேசன்றே! ஊழ்வினையைஅஞ்சுமே? *
விண்ணாட்டை ஒன்றாகமெச்சுமே? *—மண்ணாட்டில்
ஆராகி எவ்விழிவிற்றாலும் * ஆழியங்கைப்
பேராயற்கு ஆளாம்பிறப்பு. (எகூ)

பிறப்பிறப்புமூப்புப் பிணிதுறந்து * பின்னும்
இறக்கவும் இன்புடைத்தாமேலும் *—மறப்பெல்லாம்
ஏதமே என்றல்லால்எண்ணுவனே? * மண்ணளந்தான்
பாதமே யேத்தாப்பகல். (அ0)

பகலிராவென்பதுவும் பாவியாது * எம்மை
இகல்செய்து இருபொழுதும்ஆள்வர் *—தகவாத்
தொழும்பரிவர்சீர்க்கும் துணையிலரென்றோரார்*
செழும்பரவைமேயார் தெரிந்து. (அக)

தெரிந்துணர்வொன்றின்மையால் தீவினையேன் * வாளா
இருந்தொழிந்தேன் கீழ்நாள்களெல்லாம் *—கரந்துருவின்
அம்மானை அந்நான்றுபின்தொடர்ந்த * ஆழியங்கை
அம்மானை யேத்தாதுஅயர்த்து. (அஉ)

அயர்ப்பாய்அயராப்பாய் நெஞ்சமே! சொன்னேன் *
உயப்போம்நெறி இதுவேகண்டாய் *—செயற்பால
வல்லவேசெய்கிறுதி நெஞ்சமே? அஞ்சினேன் *
மல்லர்நாள்வவ்வினனை வாழ்த்து. (அந)

வாழ்த்திஅவனடியைப் பூப்புனைந்து * நின்தலையைத்
தாழ்த்திருகைகூப்பென்றால் கூப்பாத—பாழ்த்தவிதி! *
எங்குற்றாயென்றவனை ஏத்தாதுஎன்னெஞ்சமே! *
தங்கத்தானாமேலுந் தங்கு. (அச)

தங்காமுயற்றியவாய்த் தாழ்விசும்பின்மீதுபாய்ந்து *
எங்கேபுக்கு எத்தவம்செய்திட்டனகொல்? * —பொங்கோதத்
தண்ணம்பால்வேலைவாய்க் கண்வளரும் * என்னுடைய
கண்ணன்பால் நல்நிறம் கொள்கார். (அரு)

கார்கலந்தமேனியான் கைகலந்தஆழியான் *
பார்கலந்தவல்வயிற்றான் பாம்பணையான் *—சீர்கலந்த
சொல்நினைந்துபோக்காரேல் சூழ்வினையினாழ்துயரை *
என்நினைந்துபோக்குவர் இப்போது? (அசு)

இப்போதும்இன்னும் இனிச்சிறிதுநின்றாலும் *
எப்போதும்ஈதேசொல் என்நெஞ்சே! *—எப்போதும்
கைகழலாநேமியான் நம்மேல்வினைகடிவான் *
மொய்கழலேஏத்தமுயல். (அஎ)

தசகஅடிவரவு:—முயற்றி நாழ் சென்று அழகு வலியம் மனமாளும் இறை முறையான் இனி பகல் ஒருபேர்.

நம்மாழ்வார் திருவடிகளே சரணம்.

---

திருமங்கையாழ்வார் அருளிச்செய்த

# திருவெழுகூற்றிருக்கை.

(எம்பெருமானார் அருளிச்செய்தது.)

வாழிபரகாலன் வாழிகலிகன்றி *
வாழிகுறையலூர்வாழ்வேந்தன் *—வாழியரோ
மாயோனைவாள்வலியால் மந்திரங்கொள்மங்கையர்கோன் *
தூயோன்சுடர்மானவேல்.

† சீரார்திருவெழுகூற்றிருக்கையென்னும் செந்தமிழால் *
ஆராவமுதன்குடந்தைப்பிரான்தனடியிணைக்கீழ் *
ஏரார்மறைப்பொருளெல்லாமெடுத்திவ்வுலகுய்யவே *
சோராமல்சொன்னஅருண்மாரிபாதம்துணைநமக்கே.

ஆசிரியப்பா (தேசியாரகம் - ஆதிதாளம்.)

ஒருபேருந்தி இருமலர்த்தவிசில் *
ஒருமுறை அயனையீன்றனை * ஒருமுறை
இருசுடர் மீதினில்இயங்கா * மும்மதிள்
இலங்கை இருகால்வளைய * ஒருசிலை
யொன்றியஈரெயிற்றழல்வாய் வாளியின்
அட்டனை * மூவடி நானிலம்வேண்டி *
முப்புரிநூலொடு மானுரியிலங்கு
மார்வினின் * இருபிறப்பு ஒருமாணாகி *
ஒருமுறைஈரடி மூவுலகளந்தனை *
நால்திசைநடுங்க அஞ்சிறைப்பறவை
யேறி * நால்வாய்மும்மதத்து இருசெவி
ஒருதனிவேழத்துஅரந்தையை * ஒருநாள்
இருநீர் மடுவுள்தீர்த்தனை * முத்தீ
நான்மறை ஐவகைவேள்வி * அறுதொழில்
அந்தணர் வணங்கும்தன்மையை * ஐம்புலன்
அகத்தினுள்செறுத்து * நான்குடனடக்கி
முக்குணத்துஇரண்டவையகற்றி * ஒன்றினில்

---

† இத்தனியன் மிகுதியாக வழங்குவதில்லை.

ஒன்றிநின்று * ஆகக்குஇருபிறப்பறுப்போர்
அறியும்தன்மையை * முக்கண்நால்தோள்
ஐவாய்அரவோடு * ஆறுபொதிசடையோன்
அறிவருந்தன்மைப்பெருமையுள்நின்றனை *
ஏழுலகுஎயிற்றினில்கொண்டனை * கூறிய
அறுசுவைப்பயனுமாயினை * சுடர்விடும்
ஐம்படைஅங்கையுள்அமர்ந்தனை * சுந்தர
நால்தோள்முந்நீர்வண்ண ! * நின்னீரடி
ஒன்றியமனத்தால் * ஒருமதிமுகத்து
மங்கையரிருவரும் † மலரன * அங்கையின்
முப்பொழுதும்வருடஅறிதுயிலமர்ந்தனை *
நெறிமுறைநால்வகைவருணமுமாயினை *
மேதகும்ஐம்பெரும்பூதமும்நீயே *
அறுபதமுரலும்கூந்தல்காரணம் *
ஏழ்விடையடங்கச்செற்றனை * அறுவகைச்
சமயமும்அறிவருநிலையினை * ஐம்பால்
ஓதியைஆகத்திருத்தினை * அறம்முதல்
நான்கவையாய்மூர்த்திமூன்றாய் *
இருவகைப்பயனாய்ஒன்றாய்விரிந்து
நின்றனை * குன்றாமதுமலர்ச்சோலை
வண்கொடிப்படப்பை * வருபுனல்பொன்னி
மாமணிஅலைக்கும் * செந்நெலொண்கழனித்
திகழ்வனமுடுத்த * கற்போர்புரிசைக்
கனகமாளிகை * நிமிர்கொடிவிசும்பில்
இளம்பிறைதுவக்கும் * செல்வம்மல்குதென்
திருக்குடந்தை * அந்தணர்மந்திரமொழியுடன்
வணங்க * ஆடரவமளியில்அறிதுயில்
அமர்ந்தபரம ! * நின்னடியிணைபணிவன்
வருமிடரகலமாற்றோவினையே. (க)

கட்டளைக்கலித்துறை

‡ இடங்கொண்டநெஞ்சத்திணங்கிக்கிடப்பன * என்றும் பொன்னித்
தடங்கொண்டதாமரைசூழும்மலர்ந்ததண் பூங்குடந்தை *
விடங்கொண்டவெண்பல் கருந்துத்திசெங்கண் தழலுமிழ்வாய் *
படங்கொண்டபாம்பணைப்பள்ளிகொண்டான் திருப்பாதங்களே.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

---

† 'மலரென' எனவும் ஓதுவர்.
‡ இப்பாட்டு கம்பநாட்டாழ்வார் செய்ததென்பர்.

திருமங்கையாழ்வார் அருளிச்செய்த

# சிறிய திருமடல்.

## தனியன்.

(பிள்ளை திருநறையூரரையர் அருளிச்செய்தது.)

நேரிசை வெண்பா.

முள்ளிச்செழு † மலரோதாரான் முளைமதியம் *
கொள்ளிக்குளென்னுள்ளம்கொதியாமே *—வள்ளல்
திருவாளன்சீர்க்கலியன் கார்க்கலியைவெட்டி *
மருவாளன்தந்தான்மடல்.

கலிவெண்பா.

(நாதநாமக்கிரியை ராகம் - ஆதிதாளம்.)

காரார்வரைக்கொங்கை கண்ணார்கடலுடுக்கை *
சீரார்சுடர்ச்சுட்டி செங்கலுழிப்பேராற்று * (௧)
பேராரமார்பின் பெருமாமழைக்கூந்தல் *
நீராரவேலி நிலமங்கையென்னும் * இப் (௨)
பாரோர்சொலப்பட்ட மூன்றன்றே*—அம்மூன்றும்
ஆராயில்தானே அறம்பொருளின்பமென்று * (௩)
ஆரார்இவற்றி னிடையதனையெய்துவார் *
சீரா ரிருகலையும்எய்துவர் *—சிக்கெனமற்று (௪)
ஆரானுமுண்டென்பார் என்பதுதானதுவும் *
ஓராமையன்றே? உலகத்தார்சொல்லும்சொல் * (௫)
ஓராமையாமாறு அதுவுரைக்கேன் ‡ கேளாமே *
காரார்புரவியேழ் பூண்டதனியாழி * (௬)
தேரார்நிறைகதிரோன் மண்டலத்தைக்கீண்டுபுக்கு *
ஆராவமுதமங்கெய்தி *—அதினின்றும் (௭)
வாராதொழிவதொன்றுண்டே? * அதுநிற்க,
ஏரார்முயல்விட்டுக் காக்கைப்பின்போவதே? * (௮)
ஏராரிளமுலையீர் ! என்தனக்குஉற்றதுதான் *
காரார்குழலெடுத்துக்கட்டி *—கதிர்முலையை (௯)

† 'மலரோர்' 'மலரோன்' என்பன பாடபேதங்கள்.
‡ 'கேளாமோ' என்று சிலர்.

வாராரவீக்கி மணிமேகலைதிருத்தி *
ஆராரயில்வேற்கண் அஞ்சனத்தின்நீறணிந்து * (௧0)
சீரார்செழும்பந்து கொண்டடியாநின்றேன்நான் *
நீரார்கமலம்போல் செங்கண்மாலென்றொருவன் * (௧௧)
பாரோர்களெல்லாம் மகிழப்பறைகறங்க *
சீரார்குடமிரண்டேந்தி *—செழுந்தெருவே (௧௨)
ஆராரெனச்சொல்லி ஆடுமதுகண்டு *
ஏராரிளமுலையார் என்னையருமனைல்லாரும் * (௧௩)
வாராயோவென்றார்க்குச் சென்றேன்என்வல்வினையால் *
காரார்மணிநிறமும் கைவளையும்காணேன்நான் * (௧௪)
ஆரானும்சொல்லிற்றும்கொள்ளேன் *—அறிவழிந்து
தீராவுடம்பொடு பேதுறுவேன்கண்டிரங்கி * (௧௫)
ஏரார்கிளிக்கிளவி எம்மனைதான்வந்தென்னை *
சீரார்செழும்புழுதிக்காப்பிட்டு *—செங்குறிஞ்சித் (௧௬)
தாரார்நறுமாலைச் சாத்தற்கு * தான்பின்னும்
நேராதனவொன்றுநேர்ந்தாள் *—அதனாலும் (௧௭)
தீராதுஎன்சிந்தைநோய் தீராதுஎன்பேதுறவு *
வாராதுமாமை அதுகண்டுமற்றாங்கே * (௧அ)
ஆரானும்மூதறியும் அம்மனைமார்சொல்லுவார் *
பாரோர்சொலப்படும் கட்டுப்படுத்திரேல் * (௧௯)
ஆரானும்மெய்ப்படுவனென்றார் *—அதுகேட்டுக
காரார்குழற்கொண்டைக் கட்டுவிச்சிகட்டேறி * (௨0)
சீரார்சுளகில் சிலநெல்பிடித்தெறியா *
வேராவிதிர்விதிரா மெய்சிலிராக்கைமோவா * (௨௧)
பேராயிரமுடையான் என்றாள் *— பேர்த்தேயும்,
காரார்திருமேனிகாட்டினாள் * கையதுவும் (௨௨)
சீரார்வலம்புரியேஎன்றாள் *—திருத்துழாய்த
தாரார்நறுமாலை கட்டுரைத்தாள்கட்டுரையா * (௨௩)
நீரேதும்அஞ்சேன்மின் நும்மகளைநோய்செய்தான் *
ஆரானுமல்லன் அறிந்தேன்அவனைநான் * (௨௪)
கூரார்வேற்கண்ணீர் ! உமக்குஅறியக்கூறுகேனோ ? *
ஆரால்இவ்வையம் அடியளப்புண்டதுதான் ? * (௨௫)

ஆரால்இலங்கை பொடிபொடியாவீழ்ந்தது? * மற்று
ஆராலேகன்மாரிகாத்ததுதான்? *—ஆழிநீர் (௨௬)
ஆரால்கடைந்திடப்பட்டது? * அவன்காண்மின்
ஊரானிரைமேய்த்து உலகெல்லாம்உண்டுமிழ்ந்தும் * (௨௭)
ஆராதகன்மையனாய் ஆங்கொருநாள் ஆய்ப்பாடி *
சீரார்கலையல்குல் சீரடிசெந்துவர்வாய் * (௨௮)
வாரார்வனமுலையாள் மத்தாரப்பற்றிக்கொண்டு
ஏராரிடைநோவ எத்தனையோர்போதுமாய் * (௨௯)
சீரார்தயிர்கடைந்து வெண்ணெய்திரண்டதனை *
வேரார்நுதல்மடவாள் வேறோர்கலத்திட்டு * (௩௰)
நாராருறியேற்றி நன்கமையவைத்ததனை *
போரார்வேற்கண்மடவாள் போந்தனையும்பொய்யுறக்கம் * (௩௧)
ஓராதவன்போல் உறங்கியறிவுற்று *
தாரார்தடந்தோள்கள் உள்ளளவும்கைநீட்டி * (௩௨)
ஆராதவெண்ணெய்விழுங்கி *—அருகிருந்த
மோரார்குடமுருட்டி முன்கிடந்ததானத்தே * (௩௩)
ஓராதவன்போல்கிடந்தானைக் கண்டவளும் *
வாராத்தான்வைத்ததுகாணாள் *—வயிறடித்துஇங்கு (௩௪)
ஆரார்புகுதுவார்? ஐயரிவரல்லால் *
நீராம்இதுசெய்தீர் என்றுஓர்நெடுங்கயிற்றால் * (௩௫)
ஊரார்களெல்லாரும் காண உரலோடே *
தீராவெகுளியளாய்ச் சிக்கெனவார்த்தடிப்ப * (௩௬)
ஆராவயிற்றினோடு ஆற்றாதான் *—அன்றியும்,
நீரார்நெடுங்கயத்தைச் சென்றலைக்கநின்றுரப்பி * (௩௭)
ஓராயிரம்பணவெங் கோவியல்நாகத்தை *
வாராயெனக்கென்று மற்றதன்மத்தகத்து * (௩௮)
சீரார்திருவடியால்பாய்ந்தான் *—தன்சீதைக்கு
நேராவனென்று ஓர்நிசாசரிதான்வந்தாளை * (௩௯)
கூரார்ந்தவாளால் கொடிமூக்கும் காதிரண்டும் *
ஈராவிடுத்து அவட்குமூத்தோனை *—வெந்நரகம் (௪௦)
சேராவகையே சிலைகுனித்தான் * செந்துவர்வாய்
வாரார்வனமுலையாள் வைதேவிகாரணமா * (௪௧)

ஏரார்தடந்தோளிராவணனை *— ஈரைந்து
சீரார்சிரமறுத்துச் செற்றுகந்தசெங்கண்மால் * (௪௨)
போரார்நெடுவேலோன் பொன்பெயரோனாகத்தை *
கூரார்ந்தவள்ளுகிரால்கீண்டு *—குடல்மாலை (௪௩)
சீரார்திருமார்பின்மேல்கட்டி * செங்குருதி
சோராக்கிடந்தானைக் குங்குமத்தோள்கொட்டி * (௪௪)
ஆராவெழுந்தான் அரியுருவாய் *—அன்றியும்,
பேர்வாமனனாகியகாலத்து மூவடிமண் (௪௫)
தாராய்எனக்கென்று வேண்டிச்சலத்தினால் *
நீரேற்றுஉலகெல்லாம் நின்றளந்தான்மாவலியை * (௪௬)
ஆராதபோரில் அசுரர்களுந்தானுமாய் *
காரார்வரைநட்டு நாகம்கயிறாக * (௪௭)
பேராமல்தாங்கிக்கடைந்தான் *—திருத்துழாய்த்
தாரார்ந்தமார்வன் தடமால்வரைபோலும் * (௪௮)
போரானைபொய்கைவாய்க் கோட்பட்டுநின்றலறி *
நீரார்மலர்க்கமலம்கொண்டு ஓர்நெடுங்கையால் * (௪௯)
நாராயணாவோ ! மணிவண்ணா ! நாகணையாய் ! *
வாராய்என்னாரிடரைநீக்காய் *—எனவெகுண்டு (௫0)
தீராதசீற்றத்தால் சென்றுஇரண்டுகூறாக *
ஈராஅதனை இடர்கடிந்தான்எம்பெருமான் * (௫௧)
பேராயிரமுடையான் பேய்ப்பெண்டீர் ! நும்மகளை *
தீராநோய்செய்தான் எனஉரைத்தாள் *—சிக்கெனமற்று (௫௨)
ஆரானுமல்லாமைகேட்டு எங்களம்மனையும் *
போரார்வேற்கண்ணீர் ! அவனாகில்பூந்துழாய் * (௫௩)
தாராதொழியுமே ? தன்னடிச்சியல்லளே ? * மற்று
ஆரானுமல்லனேயென்றொழிந்தாள் *—நான்அவனைக் (௫௪)
காரார்திருமேனி கண்டதுவேகாரணமா *
பேராப்பிதற்றாத் திரிதருவன் *—பின்னையும் (௫௫)
ஈராப்புகுதலும் இவ்வுடலைத்தண்வாடை
சோராமறுக்கும்வகையறியேன் *—சூழ்குழலார் (௫௬)
ஆரானுமேசுவ ரென்னுமதன்பழியை *
வாராமல்காப்பதற்கு வாளாஇருந்தொழிந்தேன் * (௫௭)

வாராய்மடநெஞ்சே! வந்து *—மணிவண்ணன்
சீரார்திருத்துழாய்மாலை நமக்கருளி * (௫௮)
தாரான்தருமென்று இரண்டத்திலொன்றதனை *
ஆரானுமொன்றாதார் கேளாமேசொன்னக்கால் * (௫௯)
ஆராயுமேலும் பணிகேட்டுஅதன்றெனிலும் *
போராதொழியாதே போந்திடுநீயென்றேற்கு * (௬0)
காரார்கடல்வண்ணன் பின்போனநெஞ்சமும் *
வாராதே என்னைமறந்ததுதான் *—வல்வினையேன் (௬௧)
ஊராருகப்பதேயாயினேன் *—மற்றெனக்கிங்கு
ஆராய்வாரில்லை அழல்வாய்மெழுகுபோல் * (௬௨)
நீராய்உருகும் என்னாவி *—நெடுங்கண்கள்
ஊராருறங்கிலும் தானுறங்கா * உத்தமன்தன் (௬௩)
பேராயினவே பிதற்றுவன் *—பின்னையும்,
காரார்கடல்போலும் காமத்தராயினார் * (௬௪)
ஆரேபொல்லாமையறிவார்? * அதுநிற்க,
ஆரானுமாதானும் அல்லளவள்காணீர் * (௬௫)
வாரார்வனமுலை வாசவதத்தையென்று *
ஆரானும்சொல்லப்படுவாள் *—அவளும்தன் (௬௬)
பேராயமெல்லாம் ஒழியப் பெருந்தெருவே *
தாரார்தடந்தோள் தளைக்காலன்பின்போனாள் * (௬௭)
ஊராரிகழ்ந்திடப்பட்டாளே? *—மற்றெனக்கிங்கு
ஆரானும்கற்பிப்பார்நாயகரே? * நானவனைக் (௬௮)
காரார்திருமேனி காணுமளவும்போய் *
சீரார்திருவேங்கடமே திருக்கோவ (௬௯)
லூரே * மதிட்கச்சியூரகமே பேரகமே *
பேராமருதிறுத்தான் வெள்ளறையேவெஃகாவே * (௭0)
பேராலிதண்கால் நறையூர்திருப்புலியூர் *
ஆராமஞ்சூழ்ந்த அரங்கம் *—கணமங்கை (௭௧)
காரார்மணிநிறக் கண்ணனூர்விண்ணகரம் *
சீரார்கணபுரம் சேறைதிருவழுந்தூர் * (௭௨)
காரார்குடந்தை கடிகைகடல்மல்லை *
ஏரார்பொழில்சூழ் இடவெந்தைநீர்மலை * (௭௩)

சீராரும்மாலிருஞ்சோலை திருமோகூர் *—
பாரோர்புகழும் வதரிவடமதுரை * (எச)

ஊராயவெல்லாம் ஒழியாமேநான் அவனை *
ஓரானைகொம்பொசித்து ஓரானைகோள்விடுத்த (எரு)

சீரானை * செங்கணெடியானைத் தேன்துழாய்த்
தாரானை * தாமரைபோல்கண்ணனை *—எண்ணருஞ்சீர்ப் (எசு)

பேராயிரமும்பிதற்றி *—பெருந்தெருவே
ஊராரிகழிலும் ஊராதொழியேன்நான் * (எஎ)

வாரார்பூம்பெண்ணைமடல். †

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

---

நேரிசைவெண்பா.

‡ ஊராதொழியேன் உலகறியவொண்ணுதலீர்! *
சீரார்முலைத்தடங்கள்சேரளவும் *—பாரெல்லாம்
அன்றோங்கிநின்றளந்தான் நின்றதிருநறையூர் *
மன்றோங்கவூர்வன்மடல்.

---

† சிறியதிருமடலும் பெரியதிருமடலும் யாப்பிலக்கணத்தின்படி தனித்தனி ஒரு பாட்டு. ‡ இது கம்பர் பாடியதென்பர்.

திருமங்கையாழ்வார் அருளிச்செய்த

# பெரிய திருமடல்.

## தனியன்

(பிள்ளைதிருநறையூரரையர் அருளிச்செய்தது.)

நேரிசை வெண்பா.

பொன்னுலகில்வானவரும் † பூமகளும்போற்றிசெய்யும் *
நல்நுதலீர்! நம்பிநறையூரர் *—மன்னுலகில்
என்னிலைமைகண்டும் இரங்காரேயாமாகில் *
மன்னுமடலூர்வன்வந்து.

(கலிவெண்பா. நாதநாமக்கிரியை ராகம் - ஆதிதாளம்)

மன்னியபல்பொறிசேர் ஆயிரவாய்வாளரவின் *
சென்னிமணிக்குடுமித் தெய்வச்சுடர்நடுவுள் * (க)
மன்னியநாகத்தணைமேல் ஓர்மாமலைபோல் *
மின்னுமணிமகரகுண்டலங்கள்வில்வீச * (உ)
துன்னியதாரகையின் பேரொளிசேர்ஆகாசம் *
என்னும்விதானத்தின்கீழால் *—இருசுடரை (ங)
மன்னும்விளக்காகவேற்றி * மறிகடலும்
பன்னுதிரைக்கவரிவீச *—நிலமங்கை (ச)
தன்னைமுனநாள் அளவிட்டதாமரைபோல் *
மன்னியசேவடியை வானியங்குதாரகைமீன் * (ரு)
என்னும்மலர்ப்பிணையலேய்ந்த *—மழைக்கூந்தல்
தென்னனுயர்பொருப்பும் தெய்வவடமலையும் * (சா)
என்னும்இவையே முலையாவடிவமைந்த *
அன்னநடையஅணங்கே *—அடியிணையைத் (எ)
தன்னுடையஅங்கைகளால் தான்தடவத்தான்கிடந்து * ஓர்
உன்னியயோகத்து உறக்கம்தலைக்கொண்ட (அ)
பின்னை * தன்நாபிவலயத்துப் பேரொளிசேர் *
மன்னியதாமரை மாமலர்பூத்து * அம்மலர்மேல் (கூ)
முன்னம்திசைமுகனைத் தான்படைக்க * மற்றவனும்
முன்னம்படைத்தனன்நான்மறைகள் *—அம்மறைதான் (கo)

---

† 'பூமகனும்' என்றும் பாடம்.

மன்னும்அறம்பொருளின்பம வீடென்றுஉலகில் *
நன்னெறிமேம்பட்டன நான்கன்றே *—நான்கினிலும (௧௧)
பின்னையதுபின்னைப் பெயர்தருமென்பது * ஓர்
தொன்னெறியைவேண்டுவார் வீழ்கனியும்ஊழிலையும் * (௧௨)
என்னும்இவையேநுகர்ந்து உடலம்தாம்வருந்தி *
துன்னும்இலைக்குரம்பைத் துஞ்சியும் *—வெஞ்சுடரோன் (௧௩)
மன்னும்அழல்நுகர்ந்தும் வண்தடத்தினுட்கிடந்தும் *
இன்னதோர்தன்மையராய் ஈங்குஉடலம்விட்டெழுந்து * (௧௪)
தொன்னெறிக்கண்சென்றா ரெனப்படும்சொல்லல்லால் *
இன்னதோர்காலத்து இனையார்இதுபெற்றார் * (௧௫)
என்னவும்கேட்டறிவதில்லை *—உளதென்னில்
மன்னும்கடுங்கதிரோன் மண்டலத்தின்நன்னடுவுள் * (௧௬)
அன்னதோரில்லியினூடுபோய் *—வீடென்னும்
தொன்னெறிக்கண்சென்றாரைச்சொல்லுமின்கள், சொல்லாதே*
அன்னதேபேசும் அறிவில்சிறுமனதது * ஆங்கு
அன்னவரைக் கற்பிப்போம்யாமே *—அதுநிற்க, (௧௭)
முன்னம்நான்சொன்ன அறததின்வழிமுயன்ற *
அன்னவர்தாம்கண்டீர்கள் ஆயிரக்கண்வானவர்கோன் * (௧௮)
பொன்னகரம்புக்குஅமரர்† போற்றிசெப்ப*—பொங்கொளிசேர்
கொல்நவிலும்கோளரிமாத் தான்சுமந்தகோலம்சேர் * (௨௦)
மன்னியசிங்காசனத்தின்மேல் * —வாள்நெடுங்கண்
கன்னியரால்இட்ட கவரிப்பொதியவிழ்ந்து * ஆங்கு (௨௧)
இன்னிளம்பூந்தென்றலியங்க *—மருங்கிருந்த
மின்னனைய நுண்மருங்குல் மெல்லியலார்வெண்முறுவல் * (௨௨)
முன்னம்முகிழ்த்த முகிழ்நிலாவந்தரும்ப *
அன்னவர்தம்மானோக்க முண்டாங் கணிமலர்சேர் * (௨௩)
பொன்னியல்கற்பகத்தின் காடுடுததமாடெல்லாம் *
மன்னியமந்தாரம் பூத்தமதுததிவலை * (௨௪)
இன்னிசைவண்டமரும் சோலைவாய்மாலைசேர் *
மன்னியமாமயில்போல்கூந்தல் *—மழைத்தடங்கண் (௨௫)
மின்னிடையாரோடும் விளையாடிவேண்டிடத்து *
மன்னுமணித்தலத்து மாணிக்கமஞ்சரியின் * (௨௬)

† 'போற்றிசைப்ப' என்று பாடாந்தரம்.

மின்னினொளிசேர் பளிங்குவிளிம்படுத்த *
மன்னும்பவளக்கால் செம்பொன்செய்மண்டபத்துள் * (உ௭)
அன்னநடைய அரம்பையர்தம்கைவளர்த்த *
இன்னிசையாய்ப்பாடல்கேட்டு இன்புற்று *—இருவிசும்பில் ()
மன்னுமழைதவழும் வாணிலாநீள்மதிதோய் *
மின்னினொளிசேர் விசும்பூரும்மாளிகைமேல் * (உ௯)
மன்னுமணிவிளக்கைமாட்டி *—மழைக்கண்ணார்
பன்னுவிசித்திரமாப் பாப்படுத்தபள்ளிமேல் * (௩0)
துன்னியசாலேகம் சூழ்கதவம்தாள்திறப்ப *
அன்னம்உழக்க நெரிந்துக்கவாள்நீலச் * (௩௧)
சின்னநறுந்தாதுசூடி *—ஓர்மந்தாரம்
துன்னுநறுமலரால் தோள்கொட்டி * கற்பகத்தின் (௩௨)
மன்னுமலர்வாய் மணிவண்டுபின்தொடர *
இன்னிளம்பூந்தென்றல் புகுந்தீங்கிளமுலைமேல் * (௩௩)
நன்னறுஞ்சந்தனச்சேறு புலர்த்த *—தாங்கருஞ்சீர்
மின்னிடைமேல்கைவைத் திருந்தேந்திளமுலைமேல் * (௩௪)
பொன்னரும்பாரம்புலம்ப *—அகங்குழைந்தாங்கு
இன்னவுருவின் இமையாத்தடங்கண்ணார் * (௩௫)
அன்னவர்தம்மானோக்கமுண்டு ஆங்குஅணிமுறுவல் *
இன்னமுதம் மாந்தியிருப்பர் *—இதுவன்றே (௩௬)
அன்னஅறத்தின் பயனாவது * ஒண்பொருளும்
அன்னதிறத்தே யாதலால் *—காமத்தின் (௩௭)
மன்னும்வழிமுறையே நிற்றும்நாம் * மானோக்கின்
அன்னநடையார் அலரேசஆடவர்மேல் * (௩௮)
மன்னுமடலூரா ரென்பதோர்வாசகமும் *
தென்னுரையில் கேட்டறிவதுண்டு *—அதனையாம்தெளியோம்
மன்னும்வடநெறியேவேண்டினோம் * வேண்டாதார்
தென்னன்பொதியில் செழுஞ்சந்தனக்குழம்பின் * (௪0)
அன்னதோர்தன்மை அறியாதார் *—ஆயன்வேய்
இன்னிசையோசைக்கு இரங்காதார் * மால்விடையின் (௪௧)
மன்னுமணிபுலம்ப வாடாதார் *—பெண்ணைமேல்
பின்னும்அவ்வன்றிற் † பேடைவாய்ச்சிறுகுரலுக்கு * (௪௨)

† 'பெடைவாய்' என்று பாடங் கொள்வாருமுளர்.

உன்னியுடலுருகி நையாதார் *— உம்பர்வாய்த்
துன்னுமதியுகுத்த தூநிலாநீள்நெருப்பில் * (௪௩)
தம்முடலம்வேவத் தளராதார் *—காமவேள்
மன்னும்சிலைவாய் மலர்வாளிகோத்தெய்ய * (௪௪)
பொன்னெடுவீதி புகாதார் *—தம்பூவணைமேல்
சின்னமலர்க்குழலும் அல்குலும்மென்முலையும் * (௪௫)
இன்னிளவாடைதடவத் தாம்கண்துயிலும் *
பொன்னனையார் பின்னும்திருவுறுக *—போர்வேந்தன் (௪௬)
தன்னுடையதாதை பணியால்அரசொழிந்து *
பொன்னகரம் பின்னேபுலம்ப, வலங்கொண்டு * (௪௭)
மன்னும்வளநாடு கைவிட்டு *—மாதிரங்கள்
மின்னுருவில்விண்தேர் திரிந்துவெளிப்பட்டு * (௪௮)
† கல்நிறைந்துதீந்து கழையுடைந்து கால்சுழன்று *
பின்னும்திரைவயிற்றுப் பேயேதிரிந்துலவா * (௪௯)
கொன்னவிலும்வெங்கானத்தூடு *— கொடுங்கதிரோன்
துன்னுவெயில்வறுத்த வெம்பரல்மேல்பஞ்சடியால் * (௫0)
மன்னன இராமன்பின் வைதேவியென்றுரைக்கும் *
அன்னநடைய அணங்குநடந்திலளே ? * (௫௧)
பின்னும்கருநெடுங்கண் செவ்வாய்பிணைநோக்கின் *
மின்னனையநுண்மருங்குல் வேகவதியென்றுரைக்கும் (௫௨)
கன்னி * தன்இன்னுயிராம் காதலனைக்காணாது *
தன்னுடையமுன்தோன்றல் கொண்டேகத்தான்சென்று *அங்கு
அன்னவனைநோக்காது அழித்துரப்பி *—வாளமருள்
கல்நவில்தோள்காளையைக் கைப்பிடித்துமீண்டும்போய் * (௫௪)
பொன்னவிலும்ஆகம் புணர்ந்திலளே ? *—பூங்கங்கை
முன்னம் புனல்பரக்கும் நல்நாடன் * மின்னாடும் (௫௫)
கொன்னவிலும்நீள்வேல் குருக்கள்குலமதலை *
தன்னிகரொன்றில்லாத வென்றித்தனஞ்சயனை * (௫௬)
பன்னாகராயன் மடப்பாவை *—பாவைதன்
மன்னியநாணச்சம் மடமென்றிவையகல * (௫௭)
தன்னுடைய கொங்கைமுகம்நெரிய *—தான்அவன்தன்
‡ பொன்வரையாகம் தழீஇக்கொண்டுபோய் * தனது (௫௮)

---

† 'கன்னிரைந்து' என்பதும் பாடம். ‡ 'பொன்னவரை' என்பதும் பாடம்.

நல்நகரம்புக்கு நயந்துஇனிதுவாழ்ந்ததுவும் *
முன்னுரையில் கேட்டறிவதில்லையே? *—சூழ்கடலுள் (௫௯)
பொன்னகரம்செற்ற புரந்தரனோடொக்கும் *
மன்னவன்வாணன் அவுணர்க்குவாள்வேந்தன் * (௬௦)
தன்னுடையபாவை உலகத்துத்தன்னொக்கும் *
கன்னியரையில்லாத காட்சியாள் *—தன்னுடைய (௬௧)
இன்னுயிர்த்தோழியால் எம்பெருமானீன்துழாய் *
மன்னுமணிவரைத்தோள் மாயவன் *—பாவியேன் (௬௨)
என்னைஇதுவிளைத்த ஈரிரண்டுமால்வரைத்தோள் *
மன்னவன்தன்காதலனை மாயத்தால்கொண்டுபோய் * (௬௩)
கன்னிதன்பால்வைக்க மற்றவனோடெத்தனையோ *
மன்னியபேரின்பமெய்தினாள் *—மற்றிவைதான் (௬௪)
என்னாலேகேட்டீரே? ஏழைகாள்! என்னுரைக்கேன்? *
மன்னுமலையரையன் பொற்பாவை *—வாள்நிலா (௬௫)
மின்னுமணிமுறுவல செவ்வாயுமையென்னும் *
அன்னநடையஅணங்கு, நுடங்கிடைசேர் * (௬௬)
பொன்னுடம்புவாடப் புலனைந்தும்நொந்தகல *
தன்னுடையகூழைச் சடாபாரம்தான்தரித்து * ஆங்கு (௬௭)
அன்னஅருந்தவத்தி னூடுபோய் *—ஆயிரந்தோள்
மன்னுகரதலங்கள் மட்டித்து * மாதிரங்கள் (௬௮)
மின்னியெரிவீச மேலெடுத்தசூழ்கழற்கால் *
பொன்னுலகமேழும் கடந்துஉம்பர்மேல்சிலும்ப * (௬௯)
மன்னுகுலவரையும் மாருதமும்தாரகையும் *
தன்னினுடனே சுழலச்சுழன்றாடும் * (௭௦)
கொல்நவிலும்மூவிலைவேல் கூத்தன்பொடியாடி *
அன்னவன்தன்பொன்னகலம் சென்றாங்கணைந்திலளே? * (௭௧)
பன்னியுரைக்குங்கால் பாரதமாம் *—பாவியேற்கு
என்னுறுநோய் யான்உரைப்பக்கேண்மின் * இரும்பொழில்சூழ்
மன்னுமறையோர் திருநறையூர்மாமலைபோல் *
பொன்னியலும்மாடக் கவாடம்கடந்துபுக்கு * (௭௩)
என்னுடையகண்களிப்ப நோக்கினேன் *—நோக்குதலும்
மன்னன்திருமார்பும் வாயும்அடியிணையும் * (௭௪)

பன்னுகரதலமும் கண்களும் *—பங்கயத்தின்
பொன்னியல்காடு ஓர்மணிவரைமேல்பூத்ததுபோல் * (௭௫)
மின்னியொளிபடைப்ப வீழ்நாணும்தோள்வளையும் *
மன்னியகுண்டலமும் ஆரமும்நீள்முடியும் * (௭௬)
துன்னுவெயில்விரித்த சூளாமணியிமைப்ப *
மன்னுமரகதக் குன்றின்மருங்கே *—ஓர் (௭௭)
இன்னிளவஞ்சிக்கொடியொன்று நின்றதுதான் *
அன்னமாய்மானாய் அணிமயிலாய் ஆங்கிடையே * (௭௮)
மின்னாய்இளவேயிரண்டாய் இணைச்செப்பாய் *
முன்னாயதொண்டையாய்க் கெண்டைக்குலமிரண்டாய் * (௭௯)
அன்னதிருவுருவம் நின்றதுஅறியாதே *
என்னுடையநெஞ்சும் அறிவும்இனவளையும் * (௮௦)
பொன்னியலும்மேகலையும் ஆங்கொழியப்போந்தேற்கு *
மன்னுமறிகடலும் ஆர்க்கும் *—மதியுகுத்த (௮௧)
இன்னிலாவின்கதிரும் என்தனக்கேவெய்தாகும் *
தன்னுடையதன்மை தவிரத்தானென்கொலோ? * (௮௨)
தென்னன்பொதியில் செழுஞ்சந்தின்தாதளைந்து *
மன்னிவ்வுலகை மனங்களிப்பவந்தியங்கும் * (௮௩)
இன்னிளம்பூந்தென்றலும் வீசும்எரிஎனக்கே *
முன்னியபெண்ணைமேல் முள்முளரிக்கூட்டகத்து * (௮௪)
பின்னும்அவ்வன்றில் பேடைவாய்ச்சிறுகுரலும் *
என்னுடையநெஞ்சுக்கு ஓர்ஈர்வாளாம் என்செய்கேன்? * (௮௫)
கல்நவில்தோள்காமன் கருப்புச்சிலைவளைய *
கொல்நவிலும்பூங்கணைகள் கோத்துப்பொதவணைந்து * (௮௬)
தன்னுடையதோள்கழியவாங்கி *—தமியேன்மேல்
என்னுடையநெஞ்சே இலக்காஎய்கின்றான் * (௮௭)
பின்னிதனைக் † காப்பீர்தாம்இல்லையே *—பேதையேன்
கல்நவிலும்காட்டகத்து ஓர்வல்லிக்கடிமலரின் * (௮௮)
நல்நறுவாசம் மற்றாரானும்எய்தாமே *
மன்னும்வறுநிலத்து வாளாங்குகுத்ததுபோல் * (௮௯)
என்னுடையபெண்மையும் என்நலனும்என்முலையும் *
மன்னுமலர்மங்கைமைந்தன் *—கணபுரத்துப் (௯௦)

† 'காப்பார்தாம்' என்றும் பாடமுண்டு.

பொன்மலைபோல்நின்றவன்தன் பொன்னகலம்தோயாவேல் *
என்னிவைதான் ? வாளாஎனக்கேபொறையாகி * (௯௧)
முன்னிருந்துமூக்கின்று மூவாமைக்காப்பதோர் *
மன்னுமருந்தறிவாரில்லையே ? *—மால்விடையின் (௯௨)
துன்னுபிடரெருத்துத் தூக்குண்டு * வன்றொடரால்
கன்னியர்கண்மிளிரக் கட்டுண்டு * மாலைவாய்த் (௯௩)
தன்னுடையநாவொழியாது ஆடும்தனிமணியின் *
இன்னிசையோசையும் வந்துஎன்செவிதனக்கே * (௯௪)
கொல்நவிலும்எஃகின் கொடிதாய்நெடிதாகும் *
என்னிதனைக்காக்குமா ? சொல்லீர் *—இதுவிளைத்த (௯௫)
மன்னன்நறுந்துழாய் வாழ்மார்பன் * மாமதிகோள்
முன்னம்விடுத்த முகில்வண்ணன் * காயாவின் (௯௬)
சின்னநறும்பூந் திகழ்வண்ணன் * வண்ணம்போல்
அன்னகடலை மலையிட்டணைகட்டி * (௯௭)
மன்னனிராவணனை மாமண்டுவெஞ்சமத்து *
பொன்முடிகள்பத்தும் புரளச்சரம்துரந்து * (௯௮)
தென்னுலகமேற்றுவித்த சேவகனை *—ஆயிரக்கண்
மன்னவன்வானமும் வானவர்தம்பொன்னுலகும் * (௯௯)
தன்னுடையதோள்வலியால் கைக்கொண்டதானவனை *
பின்னோரரியுருவமாகி எரிவிழித்து * (௧00)
கொல்நவிலும்வெஞ்சமத்துக் கொல்லாதே *—வல்லாளன்
மன்னுமணிக் குஞ்சிபற்றிவரவீர்த்து * (௧0௧)
தன்னுடையதாள்மேல்கிடாத்தி—* அவனுடைய
பொன்னகலம்வள்ளுகிரால் போழ்ந்து புகழ்படைத்த * (௧0௨)
மின்னிலங்கும்ஆழிப் படைத்தடக்கைவீரனை *
மன்னிவ்வகலிடத்தை மாமுதுநீர்தான்விழுங்க * (௧0௩)
பின்னும்ஓரேனமாய்ப் புக்குவளைமருப்பில் *
கொல்நவிலும்கூர்நுதிமேல் வைத்தெடுத்தகூத்தனை * (௧0௪)
மன்னும்வடமலையை மத்தாகமாசுணத்தால் *
மின்னும்இருசுடரும் விண்ணும்பிறங்கொளியும் * (௧0௫)
தன்னினுடனேசுழல மலைதிரித்து * ஆங்கு
இன்னமுதம் வானவரையூட்டி * அவருடைய (௧0௬)

மன்னும்துயர்கடிந்த வள்ளலை *—மற்றன்றியும்,
தன்னுருவம்ஆரும்அறியாமல் தானங்கோர் * (கoஎ)
மன்னும்குறளுருவின் மாணியாய் *—மாவலிதன்
பொன்னியலும்வேள்விக்கண் புக்கிருந்து * போர்வேந்தர் (கoஅ)
மன்னைமனங்கொள்ள வஞ்சித்துநெஞ்சுருக்கி *
என்னுடையபாதத்தால் யானளப்பமூவடிமண் * (கoகூ)
மன்னா! தருகென்று வாய்திறப்ப *—மற்றவனும்
என்னால்தரப்பட்டது என்றலுமே * அத்துணைக்கண் (ககo)
மின்னார்மணிமுடிபோய் விண்தடவ *—மேலெடுத்த
பொன்னார்கனைகழற்கால் ஏழுலகும்போய்க்கடந்து * அங்கு (ககக)
ஒன்னாஅசுரர் துளங்கச்செலநீட்டி *
மன்னிவ்வகலிடத்தை மாவலியை வஞ்சித்து * (ககஉ)
தன்னுலகமாக்குவித்த தாளானை *—தாமரைமேல்
மின்னிடையாள்நாயகனை விண்ணகருள்பொன்மலையை * (ககங)
பொன்னிமணிகொழிக்கும் பூங்குடந்தைப்போர்விடையை *
தென்னன்குறுங்குடியுள் செம்பவளக்குன்றினை * (ககச)
மன்னியதண்சேறை வள்ளலை *—மாமலர்மேல்
அன்னம்துயிலும் அணிநீர்வயலாலி * (ககரு)
என்னுடையஇன்னமுதை எவ்வுள்பெருமலையை *
கன்னிமதிள்சூழ் கணமங்கைக்கற்பகத்தை * (ககசு)
மின்னைஇருசுடரை வெள்ளறையுள்கல்லறைமேல்
பொன்னை * மரதகத்தைப் புட்குழியெம்போரேற்றை (ககஎ)
மன்னுமரங்கத்து எம்மாமணியை *—வல்லவாழ்ப்
பின்னைமணாளனைப் பேரில்பிறப்பிலியை * (ககஅ)
தொன்னீர்க்கடல்கிடந்த தோளாமணிச்சுடரை *
என்மனத்துமாலை இடவெந்தையீசனை * (ககக)
மன்னுங்கடல்மல்லை மாயவனை *—வானவர்தம்
சென்னிமணிச்சுடரைத் தண்கால்திறல்வலியை * (கஉo)

தன்னைப்பிறரறியாத் தத்துவத்தைமுத்தினை *
அன்னத்தைமீனை அரியைஅருமறையை * (கஉக)

முன்னிவ்வுலகுண்ட மூர்த்தியை *—கோவலூர்
மன்னும்இடைகழி யெம்மாயவனை * பேயலறப் (கஉஉ)

பின்னும்முலையுண்ட பிள்ளையை *—அள்ளல்வாய்
அன்னம்இரைதேர் அழுந்தூரெழுஞ்சுடரை * (கஉ௩)

தென்தில்லைச் சித்திரகூடத்துஎன்செல்வனை *—
மின்னிமழைதவழும் வேங்கடத்துஎம்வித்தகனை * (கஉ௪)

மன்னனை மாலிருஞ்சோலைமணாளனை *
கொல்நவிலும்ஆழிப்படையானை *—கோட்டியூர் (கஉ௫)

அன்னவுருவினரியை * திருமெய்யத்து
இன்னமுதவெள்ளத்தை இந்தளூரந்தணனை * (கஉ௬)

மன்னுமதிள்கச்சி வேளுக்கையாளரியை *
மன்னியபாடகத்து எம்மைந்தனை *—வெஃகாவில் (கஉ௭)

உன்னியயோகத்துறக்கத்தை * ஊரகத்துள்
அன்னவனை அட்டபுயகரத்தெம்மானேற்றை * (கஉ௮)

என்னைமனங்கவர்ந்தஈசனை *—வானவர்தம்
முன்னவனை மூழிக்களத்து † விளக்கினை * (கஉ௯)

அன்னவனை ஆதனூராண்டளக்குமையனை *
நென்னலைஇன்றினை நாளையை *—நீர்மலைமேல் (க௩0)

மன்னுமறைநான்குமானானை * புல்லாணித்
தென்னன்தமிழை வடமொழியை * நாங்கூரில் (க௩க)

மன்னுமணிமாடக் கோயில்மணாளனை *
நல்நீர்த் தலைச்சங்கநாண்மதியை *—நான்வணங்கும் (க௩உ)

கண்ணனைக் கண்ணபுரத்தானை * தென்னறையூர்
மன்னுமணிமாடக் கோயில்மணாளனை * (க௩௩)

கல்நவில்தோள்காளையைக் கண்டாங்குக்கைதொழுது *
என்நிலைமையெல்லாம் அறிவித்தால் எம்பெருமான் * (க௩௪)

---

† ‘வளத்தினை’ என்பது சிலர் பாடம்.

தன் அருளும் ஆகமும் தாரானேல் *— தன்னைநான்
மின்னிடையார்சேரியிலும் வேதியர்கள்வாழ்விடத்தும் * (௧௩௫)
தன்னடியார்முன்பும் தரணிமுழுதாளும் *
கொல்நவிலும்வேல்வேந்தர் கூட்டத்தும்நாட்டகத்தும் * (௧௩௬)
தன்னிலைமையெல்லாம் அறிவிப்பன் *— தான்முனநாள்
மின்னிடையாய்ச்சியர்தம் சேரிக்களவின்கண் * (௧௩௭)
துன்னுபடல்திறந்துபுக்கு *— தயிர்வெண்ணெய்
தன்வயிறாரவிழுங்க * கொழுங்கயற்கண் (௧௩௮)
மன்னுமடவோர்கள் பற்றியோர்வான்கயிற்றால் *
பின்னுமுரலோடு கட்டுண்டபெற்றிமையும் * (௧௩௯)
அன்னதோர்பூதமாய் ஆயர்விழவின்கண் *
துன்னுசகடத்தால் புக்கபெருஞ்சோற்றை * (௧௪0)
முன்னிருந்துமுற்றத்தான் துற்றியதெற்றெனவும் *
மன்னர்பெருஞ்சவையுள் வாழ்வேந்தர்தூதனாய் * (௧௪௧)
தன்னையிகழ்ந்துரைப்பத் தான்முனநாள்சென்றதுவும் *
மன்னுபறைகறங்க மங்கையர்தம்கண்களிப்ப * (௧௪௨)
கொன்னவிலுங்கூத்தனாய்ப் பெயர்த்துங்குடமாடி *
என்னிவன்? என்னப்படுகின்றஈடறவும் * (௧௪௩)
தென்னிலங்கையாட்டி அரக்கர்குலப்பாவை *
மன்னனிராவணன் தன் நல்தங்கை *— வாளெயிற்றுத (௧௪௪)
துன்னுசுடுசினத்துச் சூர்ப்பணகா சோர்வெய்தி *
பொன்னிறங்கொண்டு புலர்ந்தெழுந்தகாமத்தால் * (௧௪௫)
தன்னைநயந்தாளைத் தான்முனிந்துமூக்கரிந்து *
மன்னியதிண்ணெனவும், வாய்த்தமலைபோலும் * (௧௪௬)
தன்னிகரொன்றில்லாத தாடகையை *— மாமுனிக்காத்
தென்னுலகமேற்றுவித்த திண்திறலும் * மற்றிவைதான் (௧௪௭)
உன்னியுலவாவுலகறிய ஊர்வன்நான் *
முன்னிமுளைத்தெழுந்து ஓங்கியொளிபரந்த * (௧௪௮)
மன்னியபூம்பெண்ணைமடல். (௧௪௯)

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

### நேரிசைவெண்பா.

† என்னிலைமையெல்லாம்அறிவித்தால் எம்பெருமான் *
தன்னருளுமாகமும்தாரானேல் *—பின்னைப்போய்
‡ ஒண்துறைநீர்வேலை உலகறியவூர்வன்நான் *
வண்டறைபூம்பெண்ணைமடல்.

* மண்ணிற்பொடிப்பூசி வண்டிரைக்கும்பூச்சூடி *
பெண்ணைமடல்பிடித்துப் § பின்னே *—அண்ணல்
திருநறையூர்நின்றபிரான் நேர்போகும்வீதி *
பொரு $ முறையால்செல்வம்புரிந்து.

---

† இப்பாட்டுக் கம்பர் பாடியதென்பர். ‡'ஒண்டிரை' என்பதும் பாடம்.
§ 'பின்பின்னே', $ 'மறையாய்' என்பன பாடபேதங்கள்.
* இது மிகுதியாக வழங்குவதில்லை.

---

## இயற்பா.

# இயற்பாச் செய்யுளகராதி.

இயற்பாச் செய்யுளகராதி ஸம்பூர்ணம்.

---

நோபில் அச்சுக்கூடம், திருவல்லிக்கேணி, சென்னை.

ஸ்ரீ

# நம்மாழ்வார் வைபவம்.

𑌵𑍃𑌷𑌭𑍇𑌤𑍁𑌵𑌿𑌶𑌾𑌖𑌾𑌯𑌾𑌂 𑌕𑍁𑌰𑍁𑌕𑌾𑌪𑍁𑌰𑌿𑌕𑌾𑌰𑌿𑌜𑌂 ।
𑌪𑌾𑌣𑍍𑌡𑍍𑌯𑌦𑍇𑌶𑍇𑌕𑌲𑍇𑌰𑌾𑌦𑍌 𑌶𑌠𑌾𑌰𑌿𑌂𑌸𑍈𑌨𑍍𑌯𑌪𑌂𑌭𑌜𑍇 ॥

வ்ருஷபேதுவிஶாகாயாம் குருகாபுரிகாரிஜம -
பாண்ட்யதேஶேகலேராதௌ ஶடாரிம்ஸைந்யபம்பஜே

"பூழியர்கோன் தென்னாடு முத்துடைத்து" என்ற முதியாமொழியின் படி முத்துவளத்தை மிகுதியாகவுடையதும், செந்தமிழ்நாடென்று சிறப்புற்றதும், "ஈரொன்பதாம பாண்டி" என்றவாறு பதினெட்டுத் திருப்பதிகளையுடையதுமான பாண்டிநாட்டிலே, கஙகை யமுனை முதலிய புண்யநதிகள் பலவற்றினும் மகிமையுடைய தாம்ரபாணியென்னும் பொருநையாற்றின் கரையில் திருநகரியென்பது ஒரு திவ்யதேசம. அததிருககுருகூரிலே வேளாளவருணத்திலே வம்சபாம்பரையாகத் திருமாலடிக்கே தொண்டுபூண்டொழுகுஞ் சிறந்த குலத்திலே திருவழுதிவளநாடரென்னும பாகவதரது புத்திரரான அறந்தாங்கியா ரீன்ற சககரபாணியாரது தநயராகிய அசசுதரைத தந்தையாகவுடையவா செந்தாமரைககண்ணர். அவர்பா லுதித்த செங்கண்ணரது குமாரரான பொற்காரியாா, தமதுபுதலவராய்த தோன்றிய காரியார்கருக் கல்யாணஞ்செய்விககக கருதி மலையமாநாட்டில, திருவண்பரிசாரமென்னுந திருப பதியிலுள்ள திருவாழ்மார்பரென்னும் பகவத்பக்தரது தநயையான உடைய நங்கையாரை மணம்பேசி முடிகக, இருவாககும் அவ்வூரில் வெகு ஸம்ப்ரமமாக விவாகமஹோத்ஸவம நடந்தேறிற்று.

பின்னர் இத்தம்பதிகள் திருக்குருகூர்க்குவந்து சிறப்பாகப் பலவாண்டு இல்லறம் நடத்துகையில், ஒருநாள், மாமனார்வேண்டுகோளின்படி, காரியார் தமதுவாழககைத்துணைவியுடனே திருவண்பரிசாரத்தை யடைந்து, அங்குச் சிலகாலம் வசித்திருந்தார். பிறகு தமது இல்லாளோடு தமமூர்க்கு மீண்டு வருகையில், திருக்குறுங்குடியென்னுந்திருப்பதியை யடைநது அஙகு எழுந்தருளியிருக்கிற நம்பியென்னுந் திருநாமமுடைய எம்பெருமானை வந்தித்து வாழ்த்தி 'அடியேஙகளுக்கு ஒருமகப்பேற்றை அளித்தருளவேணும்' என்று பிரார்த்திக்க, அவ்வாதிமூர்த்தி 'நாமே வந்து பிறக்கிறோம்' என்று பெருங் கருணையுடன் அர்ச்சகமுகமாகச் சொல்லியருளித் தமது தீர்த்தம் திருமாலை பரியட்டம் முதலியவற்றைப் பிரசாதித்தருளினன். இஙஙனம் பெற்ற அவர், திருநகரியிற் சென்று வாழ்கையில், உடையநங்கையார் கர்ப்பவதியாக, அவரது திருவயிற்றினின்று, பகவானது அம்சமும் ஸ்ரீகௌஸ்துபத்தினது அம்ச

மும் சேனைமுதலியாரது அம்சமுமாக, ஒருகுமாரா, கலியுகம்பிறந்த நாற் பத்துமூன்றும் நாளான பிரமாதிவருஷத்து வைகாசி மாதத்துப் பௌர்ணமி கூடிய வெள்ளிக்கிழமையில கடகலக்நததில் திருவவதரித்தார.

இப்படி ஒருவர் மூவரது அமசமாக இருக்கக்கூடுமோவென்னில்?—சக் கரவர்த்தியான அரசன் அஷ்டதிக்பாலகர்களின் அமசங்கள் கூடிப் பிறந்தவ னென்றும், இளையபெருமாளும் நம்பிமூத்தபிரானும் தனித்தனி ஆதிசேஷாம் சத்தோடு பகவானது அமசமும் பொருந்தியவரென்றும், அநுமான் வாயுவின் அம்சத்துடன் ருத்ராம்சமு முடையவ ரென்றும நூல்கள் கூறுதலால், அவை போலவே இதுவும் ஒக்கு மென்க.

இப்படி பகவான் அவதாரஞ்செய்தற்கு முன்னமே, அவனுக்குப் பல வாற்றாலும் அடிமைசெய்தலையே உரியதொழிலாகக்கொண்ட திருவனந்தாழ் வான் இக்குமாரர்மீது வெயில் மழை முதலியன படாதிருக்குமாறு வந்து ஒரு புளியமரமாக அவதரித்து வளர்ந்திருந்தனா.

நம்பி தந்தருளிய வரத்தின்படி யுதித்த குமாரா பிறந்தபொழுதே தொடங்கி அழுதல் பாலுண்ணுதல் முதலிய லோகவியாபாரமொன்று மின்றி யும் வாட்டமிலலாது பரிபூர்ணராயிருகக, அவ்வதிசயததைக் கண்ட தாய் தந்தையா எம்பெருமான்பககலில பாரத்தை வைததிட்டுத் தாம் சிறிதும் கவலைப்படாமல், பிறந்த பன்னிரண்டாநாளில் அத்திருநகரியிலுள்ள திருக் கோயிலுக்கு அக்குழந்தையை எடுத்துக்கொண்டுபோய், அங்கு எழுந்தருளி யிருக்கின்ற பொலிந்துநின்றபிரானைச சேவிககப் பண்ணுவிதது, அப்பெரு மானது திருமுன்பே, அந்தத தெய்வக்குழவிககு, உலகநடைககு மாறாக இருந்ததனால், 'மாறன்' என்று திருநாமம் சாத்தி, அருகிலிருநத திருப்புளிய மாத்தி னடியிலே ஆணிப்பொன்னாற்செய்த வணணச்சிறுத்தொட்டிலில் வளாததிப் போற்றி வந்தாாகள்.

கர்ப்பத்திலிருக்கும்பொழுது ஞானமுடையனவாயிருககின்ற குழந்தை களைப் பிறநதவுடனே தனதுபரிசததால அஜ்ஞாநததுககு உள்ளாக்கி அழுதல் ஆரற்றுதல் முதலியன செய்யும்படி பண்ணிவிடுந் தன்மையதான சடமென் னும் வாயு இவரையும் பிறந்தபொழுது தொடுதற்கு வா அப்பொழுது இவர் அதனை ஹுங்காரத்தால் ஒறுத்து ஓட்டி ஒழிததனால், இவர்க்கு 'சடகோபர்' என்று திருநாமமாயிற்று.

"நம்சடகோபனைப்பாடினையோ வென்று நம்பெருமாள், விஞ்சியவாதரத் தாற்கேட்ப" என்று பின்புள்ளாரும் கொண்டாடும்படி இவர் நம்பெருமா ளால் 'நம்ஆழ்வார்' என்று அபிமானித்து விசேஷகடாக்ஷஞ் செய்யப்பட்டு மற்றையாழ்வாாகளனைவரினும் உயாவுற்றதனால், 'நம்மாழ்வார்' என்று ஒரு திருப்பெயர் பெறறனா.

இத்தன்மையரான ஆழ்வார் பதினாறுபிராயமளவும கண்விழியாமல் மௌனத்தோடு எழுந்தருளியிருகக, அதுநோக்கிய நங்கையாரும் அவர்கொழு

நரும், 'இவர், தம்மைப்போன்ற நிலையுடையா ரெவரையும் உலகத்திற் காணாமை யால, யாரோடும் பேசாமலிருக்கின்றா' என்று அறியாமல 'எம்பெருமான் விஷயத்தில் நாம் செய்த அபராதம ஏதேனும உண்டோ?' என்று கருதிக் கலங்கியிருந்தனா.

அப்பொழுது பரமபதநாதனது நியமனத்தாற் சேனைத்தலைவர் ஏகாந்த மாக எழுந்தருளி இவாக்குத திருவிலச்சினைசெய்து ஸகல மந்திரார்த்தங்களை யும உபதேசித்தருளினா.

இப்படி பெறற இவா பதினாறுகலைகளும நிறைந்த சந்திரன்போலப் பதினாறுபருவம நிரமபி உறஙகாபபுளிநிழலிலே பதுமாசனங் கொண்டு வீற றிருநது பாததவத்தைத தியானஞ்செயது ஞானமுததிரை கைககொண்டி ருந்த காலத்தில், திவ்வியதேசயாத்திரையாகச சென்றிருந்த மதுரகவியாழ் வாா, இவரது வைபவத்தைக கேட்டும இவாது திவ்விய ஒளியைக கண்டும் திருவயோத்தியினின்று புறப்பட்டு வநது அருகில நின்று 'இவாக்கு உணாச்சி உளதோ? இலதோ?' என்று சோதித்தறபொருட்டு இவா முன்னிலையிலே ஒரு சிறுகலலை யெடுத்துப் போகட, அது விழுந்த ஒலியைக் கேட்டவுடனே இவா திருக்கண்களை விழித்துப் பாாததருளினா. உடனே மதுரகவிகள் 'இவாக்கு வாஃகு உண்டோ? இன்றோ? அறியோம்' என்று எண்ணி இவரை நோக்கி 'அசித்தாகிய சரீரத்திலே அணுவளவினதான ஆதமா சமபந்தித்தால், அது எதனை அனுபவித்து எஙகு இருக்கும?' என்னுங கருததை யமைத்து 'செத்ததின்வயிற்றிற சிறியது பிறநதால, எததைத தின்று எங்கே கிடக் கும?' என்று வினவ, ஆழ்வாா 'அசசரீரததைச சாாந்த சுகதுககஙகளை அனு பவித்துககொண்டு அதனையே ஆசிரயித்திருககும' எனற கருததை யமைத்து 'அத்தைததினறு அங்கே கிடககும' என்று விடையருளிசசெயதாா. அது கேட்டு மதுரகவிகள் மிக மகிழ்ந்து சடகோபமுனிவாது ஞானததைக கொண் டாடி, இவரையடைந்து தாம கடைத்தேறக கருதி, இவர் திருவடிகளிலே ஸாஷ்டாஙகபரணும மாகத தாளும தடகையும கூப்பி விழுந்து தண்ட னிட்டு இவாது இணையடித்தாமரைகளைத தியானித்தலும திருநாமங்களை வழுத்துதலும செய்துகொண்டு இவரை ஆசிரயித்து 'அடியேனுக்குத் தத்வ ஹித புருஷாாத்தஙகளை விளககியருளவேண்டும்' என்று பிராாத்தித்தாா.

அவவாறிருககையில், ஸ்ரீவைகுண்டநாதன் ஆழ்வாரது ஞானககண்ணுக் குச் சேவைசாதிககத திருவுளஙகொண்ட வளவிலே, பெரியதிருவடியும் தனது பக்ஷபாதம் தோன்ற முன்வநது நிற்றலும, பெருமான் பிரியாப்பிரிய முடைய பிராட்டியுடனே கருடவாகனுருடனுய எழுந்தருளி எதிர்வந்துநிற்க, கருமுகில தாமரைக்காடுபூதது நீடிருசுடர் இருபுறத்தேந்தி ஏடவிழ்திரு வொடும பொலிய ஓா செமபொற்குன்றின்மேல வருவபோல் கலுழன்மேல் வநது தோன்றிய அமமுகில்வண்ணனது திருமேனியழகைச் சேவித்துக் கண்கள் ஆனநதவருவி சொரிய உடமபு உரோமாஞ்சங்கொள்ள ஆனந்த வெள்ளத்தில் ஆழ்ந்தார். அநந்தரம் நூற்றெட்டுத்திருப்பதியெம்பெருமான்

களும் அங்கு எழுந்தருளிக் காட்சிகொடுக்க, அவர்களைத் தரிசித்து அவர்கள் திவ்யகுணங்களை அனுபவித்து அவ்வனுபவத்தாலுண்டான பிரீதி உள்ளடங்காமல் அதனைப் பிரபந்த முகமாக வெளியிடக்கருதி, நான்கு வேதங்களுள் இருக்கு யஜுஸ் அதாவணம் என்ற மூன்று வேதங்களின் ஸாரார்த்தத்தைத் திருவிருத்தம் திருவாசிரியம் பெரியதிருவந்தாதி யென்ற மூன்று பிரபந்தங்களின் மூலமாக வெளியிட்டு, அவ்வேதங்களுள் சிறந்ததும் பகவானதுசொரூபமாகவே யுள்ளதுமான ஸாம வேதத்தின் தத்துவப்பொருளைச் சரமப்ரபந்தமான திருவாய்மொழியால் அருளிச்செய்து, அவற்றை மதுரகவிகளுக்கு உபதேசித்தருளினார்.

அக்காலத்தில் நித்யஸூரிகளும், சுவேததவீபவாஸிகளான ஸ்ரீவைஷ்ணவ சிரேஷ்டர்களும் காரிமாறப்பிரானது மகிமையைக் காணுதற்பொருட்டு முன்வந்து சேர, மாறனார் அவர்களைத் தமது பிரபந்தத்திலே "பொலிக பொலிக" என்று வாழ்த்தியருளினார்.

தம்பக்கல் திருவுள்ளமுவந்து பொலிந்துநின்றபிரான் பிரசாதித்தருளின மகிழமலர்மாலையைத் தரித்ததனால் 'வகுளாபரணர்' என்றும், பிறமதங்களாகிய யானைகளைத் தமது பிரபந்தங்களிற் கூறிய தத்துவார்த்தங்களாற் செருக்கடக்கி அவற்றிற்கு மாவெட்டியென்னும் கருவிபோல இருத்தலால் 'பராங்குசர்' என்றும் திருநாமம்பெற்ற குருகைப்பிரான் பரப்ரஹ்ம ஸ்வரூபமும், ஜீவாத்மாவினது தன்மையும், பரமாத்மாவையடையும் உபாயமும், அங்ஙனம் அடைதலின் பயனும், அச்சரணாகதிக்குப்பகையும் என்று ஸகலவேதசாஸ்திரங்களிலும் ஸாரமாகச்சொல்லப்பட்ட அர்த்தபஞ்சகத்தையும், மந்திர சிரேஷ்டமான த்வயமென்னும் சரணாகதி மந்திரத்தின் அர்த்தத்தையும் பிரபந்தரூபமாக யாவரும் எளிதில் அறியத் தெரிவித்தருளி, "நளிர்மதிச்சடையனும் நான்முகக்கடவுளும், தளிரொளி யிமையவர் தலைவனும் முதலா, யாவகையுலகமும் யாவரு மகப்பட, நிலம்நீர் தீகால் சுடரிருவிசும்பும், மலர்சுடர்பிறவுஞ் சிறிதுடன்மயங்க, ஒருபொருள்புறப்பாடின்றி முழுவதும், அகப்படக்கரந்தோராலிலைச்சேர்ந்த எம், பெருமா மாயனையல்லது, ஒருமாதெய்வம் மற்றுடையமோயாமே?" என்று தமது சித்தாந்தத்தின் தத்துவத்தை நன்குவெளியிட்டுத் தமது வாழ்நாள்முழுவதிலும் பிறிதொன்றில் சிந்தைசெலுத்தாது பரமனையே சிந்தித்துப் பரபக்தி பரஜ்ஞாந பரமபக்திகளை யுடையராய்க்கொண்டு, உலகநடையாட்டம் சற்றுந் தொடராது, முப்பத்தைந்து திருநக்ஷத்திரம் வாழ்ந்திருந்து, அப்பால், இமையவர் எதிர்கொள்ள, கின்னரகந்தருவாதியர் கீதம்பாட, தேவர்கள் தோத்திரஞ்செய்ய, வைகுந்தமாநகர்புக்குத் திருமாமணிமண்டபத்தில் அந்தமில்பேரின்பத்து அமர்ந்தனர்.

இவர், மற்றையாழ்வார்கள்போல இவ்வுலகவுணர்ச்சி நடையாடாநிற்க எம்பிரானருளால் ஒருகாலவிசேஷத்தில் தத்துவஞானம் முதலியன தோன்றப்பெற்று அனுபவித்தவரன்றி, திருத்துழாய் பரிமளத்தோடே அங்குரிக்கு

மாபோல அவதரிக்கும்பொழுதே இயற்கையில் ஞானபக்திகளையுடையராய் அங்ஙிலை என்றும் மாறாதிருந்ததனால் தலைவராகக் கூறப்படுவர். இதுவே, இவரை அவயவியாகவும், மற்றையாழ்வார்களை இவர்க்கு அவயவமாகவும் நிரூபித்தற்கு ஏற்ற காரணம்.

அங்ஙனம் உருவகப்படுத்துமிடத்து, இவர்க்கு, பூதத்தாழ்வாரைச் சிர மாகவும், பொய்கையேயாழ்வார்களைக் கண்களாகவும், பெரியாழ்வாரை முக மாகவும், திருமழிசையாழ்வாரைக் கழுத்தாகவும், குலசேகராழ்வாரையும் திருப் பாணாழ்வாரையும் கைகளாகவும், தொண்டரடிப்பொடியாழ்வாரை மார்பாக வும், திருமங்கையாழ்வாரைக் கொப்பூழாகவும் மதுரகவியாழ்வாரைப் பாத மாகவும் உரைப்பது மரபு.

இப்படி ஒப்புயர்வற்ற இவ்வாழ்வார் எம்பெருமானது திருவடிகளுக்கு மிகவும் அந்தரங்கராக இருந்ததனால், பெருமானது பாதுகை, 'ஸ்ரீ சடகோ பன்' என்று இவரது திருநாமத்தையிட்டு வழங்கப்படுகின்றது.

ஆன திருவிருத்தம்நூறும் அருளினான் வாழியே
ஆசிரியமேழுபாட்டும் அளித்தபிரான் வாழியே *
ஈனமறவந்தாதி யெண்பத்தேழீந்தான் வாழியே
இலகுதிருவாய்மொழி யாயிரத்தொரு நூறறிரண்டுரைத்தான் வாழியே *
வானணியும்மாமாடக் குருகைமன்னன் வாழியே
வைகாசி விசாகத்தில வந்துதித்தான் வாழியே *
சேனையர்கோனவதாரம் செய்த வள்ளல் வாழியே
திருக்குருகைச் சடகோபன் திருவடிகள் வாழியே.

மேதினியில் வைகாசி விசாகத்தோன் வாழியே
வேதத்தைச் செந்தமிழால் விரித்துரைத்தான் வாழியே *
ஆதிகுருவாய் அம்புவியி லவதரித்தான் வாழியே
அனவரதம் சேனையர்கோ னடிதொழுவோன் வாழியே *
நாதனுக்கு நாலாயிர முரைத்தான் வாழியே
நன்மதுரகவிவணங்கும நாவீறன் வாழியே *
மாதவன் பொற்பாதுகையாய் வளர்ந்தருள்வோன் வாழியே
மகிழ்மாறன் சடகோபன் வையகத்தில் வாழியே.

திருக்குருகைப் பெருமாள்தன் திருத்தாள்கள் வாழியே
திருவான திருமுகத்துச் செவியென்றும் வாழியே *
இருக்குமொழி என்னெஞ்சில் தேக்கினான் வாழியே
எந்தை யெதிராசர்க் கிறைவனார் வாழியே *
கருக்குழியில் புகாவண்ணம காத்தருள்வோன் வாழியே
காசினியில் ஆரியனைக் காட்டினான் வாழியே *
வருத்தமற வந்தென்னை வாழ்வித்தான் வாழியே
மதுரகவிதம்பிரான் வாழி வாழி வாழியே.

ஸ்ரீ



## நம்மாழ்வார்

𑌵𑌕𑌳𑌾𑌭𑌰𑌣𑌂 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌜𑌗𑌦𑌾𑌭𑌰𑌣𑌂 𑌮𑍁𑌨𑌿𑌮𑍍 ।
𑌯𑌶𑍍𑌶𑍍𑌰𑍁𑌤𑍇𑌰𑍁𑌤𑍍𑌤𑌰𑌂 𑌭𑌾𑌗𑌂 𑌚𑌕𑍍𑌰𑍇 𑌦𑍍𑌰𑌾𑌵𑌿𑌡𑌭𑌾𑌷𑌯𑌾 ॥

*வகுளாபரணம் வந்தே ஜகதாபரணம்முநிம் -*
*யஸ்ஸ்ருதேருத்தரம்பாகம் சகரே தராவிடபாஷயா.*

நம்மாழ்வார் அருளிச்செய்த

# திருவாய்மொழி.

---

## தனியன்கள்.

---

(நாதமுனிகள் அருளிச்செய்தது).

𑌭𑌕𑍍𑌤𑌾𑌮𑍃𑌤𑌂 𑌵𑌿𑌶𑍍𑌵𑌜𑌨𑌾𑌨𑍁𑌮𑍋𑌦𑌨𑌂
𑌸𑌰𑍍𑌵𑌾𑌰𑍍𑌥𑌦𑌂 𑌶𑍍𑌰𑍀𑌶𑌠𑌕𑍋𑌪𑌵𑌾𑌙𑍍𑌮𑌯𑌂 ।
𑌸𑌹𑌸𑍍𑌰𑌶𑌾𑌖𑍋𑌪𑌨𑌿𑌷𑌤𑍍𑌸𑌮𑌾𑌗𑌮𑌂
𑌨𑌮𑌾𑌮𑍍𑌯𑌹𑌂 𑌦𑍍𑌰𑌾𑌵𑌿𑌡𑌵𑍇𑌦𑌸𑌾𑌗𑌰𑌂 ॥

## தனியன்கள்.

பக்தாம்ருதம்விஸ்வஜநாநுமோதநம்
ஸர்வார்த்ததம் ஸ்ரீ ஶடகோபவாங்மயம் -
ஸஹஸ்ரஶாகோபநிஷத்ஸமாகமம்
நமாம்யஹம்த்ராவிடவேதஸாகரம்.

---

(ஈச்வரமுனிகள் அருளிச்செய்தது.)

இருவிகற்ப நேரிசை வெண்பா

திருவழுதிநாடென்றும் தென்குருகூரென்றும் *
மருவினிய வண்பொருநலென்றும் *—அருமறைகள்
அந்தாதி செய்தானடியிணையே எப்பொழுதும் *
சிந்தியாய் நெஞ்சே! தெளிந்து.

(சொட்டைநம்பிகள் அருளிச்செய்தது.)

மனத்தாலும் வாயாலும் வண்குருகூர்பேணும் *
இனத்தாரையல்லா திறைஞ்சேன் *—தனத்தாலும்
ஏதும்குறைவிலேன் * எந்தைசடகோபன்
பாதங்கள் யாமுடையபற்று.

(அனந்தாழ்வான் அருளிச்செய்தது.)

ஏய்ந்தபெருங்கீர்த்தி யிராமானுசமுனிதன் *
வாய்ந்தமலர்ப்பாதம் வணங்குகின்றேன் *—ஆய்ந்தபெருஞ்
சீரார்சடகோபன் செந்தமிழ்வேதம்தரிக்கும் *
பேராதவுள்ளம்பெற.

(பட்டர் அருளிச்செய்தது.)

வான்திகழும்சோலை மதிளரங்கர் வண்புகழ்மேல் *
ஆன்றதமிழ்மறைகளாயிரமும் *—ஈன்ற
முதல்தாய் சடகோபன் * மொய்ம்பால் வளர்த்த
இதத்தாய் இராமானுசன்.

மிக்க விறைநிலையும் மெய்யாமுயிர்நிலையும் *
தக்கநெறியும் தடையாகித்—தொக்கியலும் *
ஊழ்வினையும் வாழ்வினையும் ஓதும் குருகையர்கோன் *
யாழினிசை வேதத்தியல்.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

மணவாளமாமுனிகள் அருளிச்செய்த

# திருவாய்மொழி நூற்றந்தாதி.

---

## தனியன்கள்.

### நேரிசைவெண்பா.

அல்லும்பகலும் அனுபவிப்பார்தங்களுக்கு *
சொல்லும்பொருளும் தொகுத்துரைத்தான் *—நல்ல
மணவாளமாமுனிவன் மாறன்மறைக்கு *
தணவா நூற்றந்தாதிதான்.

மன்னுபுகழ்சேர் மணவாளமாமுனிவன் *
தன்னருளால் உட்பொருள்கள் † தம்முடனே —சொன்ன *
திருவாய்மொழி நூற்றந்தாதியாம்தேனை *
ஒருவாதருந்து நெஞ்சே! உற்று.

சீயர் திருவடிகளே சரணம்.

---

† 'தன்னுடனே' என்று வழங்குவர்.

ஸ்ரீ

# முதற்பத்து.

கைங்கர்யமே புருஷார்த்த மென்று அறுதியிடுதல்.

## † க-ஆந் திருவாய்மொழி—உயர்வறவுயர்நலம்.

[எம்பெருமான் திருவடிகளிலே நித்ய கைங்கர்யம் பண்ணும்படி ஆழ்வார் தம் திருவுள்ளத்துக்கு உபதேசித்தல்.]

கலிவிருத்தம்

பண் - முதிர்ந்ததறிஞ்சி தாளம் - ஏழொத்து. கமாஸ்ராகம் - ஆதிதாளம்.

உயர்வறவுயர்நலம் உடையவன் ‡ யவனவன் *
மயர்வறமதிநலம் அருளினன்யவனவன் *
அயர்வறுமமரர்கள் அதிபதியவனவன் *
துயரறுசுடரடி தொழுதெழுஎன்மனனே ! (க)

மனனகமலமற மலர்மிசையெழுதரும் *
மனனுணர்வளவிலன் பொறியுணர்வவையிலன் *
இனனுணர்முழுநலம் எதிர்நிகழ்கழிவினும் *
இனனிலனெனனுயிர் மிகுநரையிலனே. (உ)

இலனதுஉடையனிது எனநினைவரியவன் *
நிலனிடைவிசும்பிடை உருவினன்அருவினன் *
புலனொடுபுலனலன் ஒழிவிலன்பரந்த * அந்
நலனுடையொருவனை நணுகினம்நாமே. (ங)

நாமவனிவனுவன் அவளிவளுவளெவள் *
தாமவரிவருவர் அதுவிதுவுதுவெது *
வீமவையிவையுவை அவைநலமதீங்கவை *
ஆமவையாயவை ஆய்நின்றஅவரே. (ச)

அவரவர்தமதமது அறிவறிவகைவகை *
அவரவர்இறையவர் எனஅடியடைவர்கள் *
அவரவர்இறையவர் குறைவிலர்இறையவர் *
அவரவர்விதிவழி அடையநின்றனரே. (ரு)

---

† இந்தத்திருவாய்மொழி, கோயில்திருவாய்மொழியைச் சேர்ந்தது
‡ 'எவனவன்' என்றும் பாடம் கூறுவர்; மேலும் இப்படியே.

நின்றனர்இருந்தனர் கிடந்தனர்திரிந்தனர் *
நின்றிலர்இருந்திலர் கிடந்திலர்திரிந்திலர் *
என்றுமொரியல்வினர் எனநினைவரியவர் *
என்றுமொரியல்வொடு நின்றவெந்திடரே. (௬)

திடவிசும்பெரிவளி நீர்நிலம்இவைமிசை *
படர்பொருள்முழுவதுமாய் அவையவைதொறும் *
உடல்மிசைஉயிரெனக் கரந்துஎங்கும்பரந்துளன் *
சுடர்மிகுசுருதியுள் இவையுண்டசுரனே. (எ)

சுரரறிவருநிலை விண்முதல்முழுவதும் *
வரன்முதலாயவை முழுதுண்டபரபரன் *
புரமொருமூன்றெரித்து அமரர்க்கும்அறிவியந்து *
அரனயனென உலகழித்தமைத்துளனே. (அ)

உளனெனில்உளன் அவனுருவம்இவ்வுருவுகள் *
உளனலனெனில் அவனருவம்இவ்வருவுகள் *
உளனெனஇலனென இவைகுணமுடைமையில் *
உளனிருதகைமையொடு ஒழிவிலன்பரந்தே. (௯)

பரந்ததண்பரவையுள் நீர்தொறும்பரந்துளன் *
பரந்தஅண்டமிதென நிலவிசும்பொழிவற *
கரந்தசிலிடந்தொறும் இடம்திகழ்பொருள்தொறும் *
கரந்தெங்கும்பரந்துளன் இவையுண்டகரனே. (௧0)

கரவிசும்பெரிவளி நீர்நிலமிவைமிசை *
வரனவில்திறல்வலி அளிபொறையாய்நின்ற *
பரனடிமேல் குருகூர்ச்சடகோபன்சொல் *
நிரனிறையாயிரத்து இவைபத்தும்வீடே. (௧௧)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

உயர்வேபரன்படியை உள்ளதெல்லாமதான்கண்டு *
உயர்வேதம்நேர்கொண்டுரைத்து *—மயர்வேதும்
வாராமல் மானிடரைவாழ்விக்கும்மாறன்சொல் *
வேராகவேவிளையும்வீடு. (௧)

சீயர் திருவடிகளே சரணம்.

---

## † உ - ஆந் திருவாய்மொழி—வீடுமின்.

[‘பகவத்பக்தியைப்பண்ணி ஆஸ்ரயியுங்கோள்’ என்று
பரோபதேசஞ் செய்தல்.]

வஞ்சித்துறை

பண் - முதிர்ந்தகுறிஞ்சி தாளம் - ஏழொத்து. செஞ்சுருட்டிராகம்-அடதாளம்.

வீடுமின்முற்றவும் *
வீடுசெய்து * உம்முயிர்
வீடுடையானிடை *
‡ வீடுசெய்ம்மினே. (க)

மின்னின்நிலையில *
மன்னுயிராக்கைகள *
என்னுமிடத்து * இறை
உன்னுமின்நீரே. (உ)

நீர்நுமதென்றிவை *
வேர்முதல்மாய்த்து * இறை
சேர்மின், உயிர்க்கு * அதன்
நேர்நிறையில்லே. (ந)

இல்லதும்உள்ளதும் *
அல்லது அவனுரு *
எல்லையில்அந்நலம் *
புல்குபற்றற்றே. (ச)

அற்றதுபற்றெனில *
உற்றதுவீடுஉயிர் *
செற்றதுமன்னுறில *
அற்றிறைபற்றே. (ரு)

பற்றிலன்ஈசனும் *
முற்றவும்நின்றனன் *
பற்றிலையாய் * அவன்
முற்றிலடங்கே. (சு)

அடங்கெழில் சம்பத்து *
அடங்கக்கண்டு * ஈசன்
அடங்கெழில்அஃதென்று *
அடங்குகஉள்ளே. (எ)

உள்ளமஉரைசெயல் *
உள்ளஇம்மூன்றையும *
உள்ளிக்கெடுத்து * இறை
யுள்ளிலொடுங்கே. (அ)

ஒடுங்கஅவன்கண் *
ஒடுங்கலும்எல்லாம் *
விடும்பின்னும்ஆக்கை *
விடும்பொழுதுஎண்ணே. (கூ)

எண்பெருக்குஅந்நலத்து *
ஒண்பொருள்ஈறில *
வண்புகழ் நாரணன் *
திண்கழல்சேரே. (கO)

சேர்த்தடத் * தென்குரு
கூர்ச்சடகோபன்சொல் *
சீர்த்தொடையாயிரத்து *
ஓர்த்தஇப்பத்தே. (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

வீடுசெய்துமற்றெவையும் மிக்கபுகழ்நாரணன்தாள் *
நாடுநலத்தாலடையநன்குரைக்கும் *—நீடுபுகழ்
வண்குருகூர்மாறன் இந்தமாநிலத்தோர்தாம்வாழ *
பண்புடனேபாடியருள்பத்து. (உ)

சீயர் திருவடிகளே சரணம்.

† இது, கோயில்திருவாய்மொழி. ‡ ‘வீடிசைமினே’ என்று பாடாந்தரம்.

## ௩-ஆந் திருவாய்மொழி—பத்துடை.

---

[எம்பெருமானது ஸௌலப்யத்தை அருளிச்செய்தல்.]

கலிநிலைத்துறை.

பண்-நட்டபாடை. தாளம் - ஏழொத்து. அபநுபாரகம் - ரூபகதாளம்.

பத்துடையடியவர்க்கெளியவன் பிறர்களுக்கரிய
வித்தகன் * மலர்மகள்விரும்பும் நம்அரும்பெறலடிகள் *
மத்துறுகடைவெண்ணெய் களவினில்உரவிடையாப்புண்டு *
எத்திறம்!உரலினோடு இணைந்திருந்தேங்கியஎளிவே. (க)

எளிவரும்இயல்வினன் நிலைவரம்பிலபலபிறப்பாய் *
ஒளிவருமுழுநலம் முதலிலகேடிலவீடாம் *
தெளிதருநிலைமையது ஒழிவிலன்முழுவதும்இறையோன் *
அளிவரும்அருளினோடு அகத்தனன்புறத்தனன்அமைந்தே. (௨)

அமைவுடைஅறநெறிமுழுவதும் உயர்வற†வுயர்ந்து *
அமைவுடைமுதல்கெடல் ஒடிவிடையறநிலமதுவாம் *
அமைவுடைஅமரரும் யாவையும்யாவரும்தானும் *
அமைவுடைநாரணன்மாயையை அறிபவர்யாரே? (௩)

யாரும்ஓர்நிலைமையனென அறிவரியஎம்பெருமான் *
யாரும்ஓர்நிலைமையனென அறிவெளியஎம்பெருமான் *
பேரும்ஓராயிரம் பிறபலவுடையஎம்பெருமான் *
பேரும்ஓருருவமும் உளதில்லைஇலதில்லைபிணக்கே. (௪)

பிணக்கறஅறுவகைச்சமயமும் நெறியுள்ளியுரைத்த *
கணக்கறுநலத்தனன் அந்தமிலாதியம்பகவன் *
வணக்குடைத்தவநெறி வழிநின்றுபுறநெறிகளைகட்டு *
உணக்குமின்பசையற அவனுடையுணர்வுகொண்டுணர்ந்தே. (௫)

உணர்ந்துணர்ந்திழிந்தகன்று உயர்ந்துருவியந்தஇந்நிலைமை *
உணர்ந்துணர்ந்துணரிலும் இறைநிலைஉணர்வரிதுஉயிர்காள்! *
உணர்ந்துணர்ந்துரைத்துரைத்து அரியயனரனென்னும்இவரை *
உணர்ந்துணர்ந்துரைத்துரைத்து இறைஞ்சுமின்மனப்பட்டதொன்றே.

ஒன்றெனப்பலவென அறிவரும்வடிவினுள்நின்ற *
நன்றெழில்நாரணன் நான்முகன்அரனென்னுமிவரை *
ஒன்றநும்மனத்துவைத்து உள்ளிநும்இருபசையறுத்து *
நன்றெனநலஞ்செய்வது அவனிடைநம்முடைநாளே. (௭)

---

† 'உயர்ந்த' என்பது உரையின் பாடம்.

நாளும்நின்றடுநமபழமை அங்கொடுவினையுடனே
மாளும் * ஓர்குறைவில்லை மனனகமலமறக்கழுவி *
நாளும்நம்திருவுடையடிகள்தம நலஙகழல் † வணஙகி *
மாளும்ஓரிடத்திலும் வணக்கொடுமாள்வதுவலமே. (அ)

வலத்தனன்திரிபுரமெரித்தவன் இடம்பெறததுந்தித்
தலதது * எழுதிசைமுகன்படைதத நல்லுலகமும்தானும
புலப்பட * பின்னும்தன்னுலகத்தில் அகததனன்தானே
சொலப்புகில் * இவைபின்னும்வயிற்றுள இவைஅவன்துயக்கே. (கூ)

துயக்கறுமதியில்நல்ஞானத்துள் அமரரைத்துயக்கும *
மயக்குடைமாயைகள் வானிலும்பெரியனவல்லன் *
புயற்கருநிறத்தனன் பெருநிலம்கடந்தநல்லடிப்போது *
அயர்ப்பிலன்அலற்றுவன் தழுவுவன்வணங்குவனஅமர்ந்தே. (கO)

அமரர்கள்தொழுதெழ அலைகடல்கடைந்தவன்தன்னை *
அமர்பொழில்வளஙகுருகூர்ச் சடகோபன் ‡ குற்றேவல்கள் *
அமர்சுவையாயிரத்து அவற்றினுளஇவைபததும்வல்லார் *
அமரரோடுஉயர்வில்சென்று அறுவர்தமபிறவியஞ்சிறையே (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

பததுடையோர்க்குஎன்றும பரனெளியனும்பிறபபால் *
முததிதரும்மாநிலத்தீர் ! மூண்டுஅவன்பால *— பத்திசெய்யும்
என்றுரைத்த மாறன்தனின்சொல்லால்போம * நெடுகச்
சென்றபிறப்பாமஞ்சிறை. (ரு)

சீயர் திருவடிகளே சரணம்.

---

## ச- ஆந் திருவாய்மொழி—அஞ்சிறைய.

[எம்பெருமானது பிழைபொறுத்தலைப் பற்றுசீர்க்கொண்டு தலைமகள் பறவை முதலியவற்றைத் தூதுசெல்ல விடும் பாசுரம்.]

தரவுகொச்சகக்கலிப்பா

பண் - நட்டபாடை. தாளம்-ஏழொத்து. கண்டாராகம் - ஆதிதாளம்.

அஞ்சிறையமடநாராய் ! அளியத்தாய் ! * நீயும்நின்
அஞ்சிறையசேவலுமாய் ஆவா ! என்றுஎனக்கருளி *
வெஞ்சிறைப்புள்ளுயர்த்தார்க்கு என்விடுதூதாய்ச்சென்றக்கால் *
வன்சிறையில்அவன்வைக்கில் வைப்புண்டால்என்செய்யுமோ ? (க)

† 'வணங்கின்' என்பது உரை. ‡ 'குற்றேவல' என்னும பாடம செய்யுளிசைக்குச சேரும்.

என்செய்யதாமரைக்கண் பெருமானார்க்குஎன் தூதாய் *
என்செய்யும்உரைத்தக்கால் ? இனக்குயில்காள் ! நீரலிரே ? *
முன்செய்தமுழுவினையால் திருவடிக்கீழ்க்குற்றேவல் *
முன்செய்யமுயலாதேன் அகல்வதுவோ ? விதியினமே. (உ)

விதியினால்பெடைமணக்கும் மென்னடையஅன்னங்காள் ! *
மதியினால்குறள்மாணாய் உலகிரந்தகள்வர்க்கு *
மதியிலேன்வல்வினையே மாளாதோ ? என்று * ஒருத்தி
மதியெலாம்உள்கலங்கி மயங்குமால்என்னீரே. (ரு)

என்நீர்மைகண்டிரங்கி இதுதகாதென்னாத *
என்நீலமுகில்வண்ணற்கு என்சொல்லியான்சொல்லுகேனோ ? *
நன்னீர்மையினியவர்கண் தங்காதென்றொருவாய்ச்சொல் *
நன்னீலமகன்றில்காள் ! நல்குதிரோ ? நல்கீரோ ? (ச)

நல்கித்தான்காத்தளிக்கும் பொழிலேழுமவினையேற்கே *
நல்கததானாகாதோ ? நாரணனைக்கண்டக்கால் *
மல்குநீர்ப்புனற்படப்பை இரைதேர்வண்சிறுகுருகே ! *
மல்குநீர்க்கண்ணேற்கு ஓர்வாசகங்கொண்டருளாயே. (ரு)

அருளாதநீர்அருளி அவராவிதுவராமுன் *
அருளாழிப்புள்கடவீர் அவர்வீதிஒருநாளென்று *
அருளாழியம்மானைக் கண்டக்கால்இதுசொல்லி
யருள் * ஆழிவரிவண்டே ! யாமும்என்பிழைத்தோமே ? (சு)

என்பிழைகோப்பதுபோலப் பனிவாடை † ஈர்கின்றது *
என்பிழையேநினைந்தருளி அருளாததிருமாலார்க்கு *
என்பிழைத்தாள்திருவடியின் தகவினுக்கு என்றுஒருவாய்ச்சொல் *
என்பிழைக்கும்இளங்கிளியே ! யான்வளர்த்தநீயலையே ? (எ)

நீயலையே ? சிறுபூவாய் ! நெடுமாலார்க்குஎன் தூதாய் *
நோயெனதுநுவலென்ன நுவலாதேஇருந்தொழிந்தாய் *
சாயலொடுமணிமாமை தளர்ந்தேன்நான் * இனிஉனது
வாயலகில்இன்னடிசில் வைப்பாரைநாடாயே. (அ)

நாடாதமலர்நாடி நாள்தோறும்நாரணன்தன் *
வாடாதமலரடிக்கீழ் வைக்கவேவகுக்கின்று *
வீடாடிவீற்றிருத்தல் வினையற்றதென்செய்வதோ ? *
ஊடாடுபனிவாடாய் ! உரைத்தீராய்எனதுடலே. (கூ)

---

† 'ஈாகின்ற' என்று வழங்குவர்.

உடலாழிப்பிறப்புவீடு உயிர்முதலாமுற்றுமாய் *
கடலாழிநீர்தோற்றி அதனுள்ளேகண்வளரும் *
அடலாழியம்மானைக் கண்டக்கால்இதுசொல்லி *
விடல்ஆழிமடநெஞ்சே ! வினையோம்ஒன்றாமளவே. (க0)

அளவியன்றவேழுலகத்தவர் பெருமான்கண்ணனை *
வளவயல்சூழ்வண்குருகூர்ச் சடகோபன்வாய்ந்துரைத்த *
அளவியன்றஅந்தாதி ஆயிரத்துள்இப்பத்தின் *
வளவுரையால்பெறலாகும் வானோங்குபெருவளமே. (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

அஞ்சிறையபுட்கள்தமை ஆழியானுக்கு * நீர்
என்செயலைச் சொல்லுமெனஇரந்து *—விஞ்ச
நலங்கியதும் மாறன்இங்கேநாயகனைத்தேடி *
மலங்கியதும்பத்திவளம். (ச)

சீயர் திருவடிகளே சரணம்

---

## ரு - ஆந் திருவாய்மொழி—வளவேழ்.

---

[ஆழ்வார் எம்பெருமானது பரத்வத்தை அநுஸந்தித்து அகலத் தேட, எம்பெருமான் தன்னுடைய சீலகுணத்தாலே ஆழ்வாரைச் சேர்த்துக்கொள்ளுதல்.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பண். செந்துருத்தி - தாளம் - ஏழொத்து. கல்யாணிராகம் - ஆதிதாளம்.

வளவேழுலகின்முதலாய வானோரிறையை, அருவினையேன் *
களவேழ்வெண்ணெய்தொடுவுண்ட கள்வா ! என்பன்பின்னையும் *
தளவேழ்முறுவல்பின்னைக்காய் வல்லானாயர்தலைவனாய் *
இளவேறேழும்தழுவிய எந்தாய் ! என்பன் நினைந்துநைந்தே. (க)

நினைந்துநைந்துஉள்கரைந்துருகி இமையோர்பலரும்முனிவரும் *
புனைந்தகண்ணிநீர்சாந்தம் புகையோடேந்திவணங்கினால் *
நினைந்தஎல்லாப்பொருள்கட்கும் வித்தாய்முதலில்சிதையாமே *
மனம்செய்ஞானத்துஉன்பெருமை மாசூணாதோ ? மாயோனே ! (உ)

மாயோனிகளாய்நடைகற்ற வானோர்பலரும்முனிவரும் *
நீயோனிகளைப்படையென்று நிறைநான்முகனைப்படைத்தவன் *
சேயோன்எல்லாவறிவுக்கும் திசைகளெல்லாம்திருவடியால்
தாயோன் * எல்லாவெவ்வுயிர்க்கும் தாயோன்தானோருருவனே. (ங)

தானோருருவேதனிவித்தாய்த் தன்னில்மூவர்முதலாய *
வானோர்பலரும்முனிவரும் மற்றும்மற்றும்முற்றுமாய் *
தானோர்பெருநீர்தன்னுள்ளேதோற்றி அதனுள்கண்வளரும் *
வானோர்பெருமான்மாமாயன் வைகுந்தன்எம்பெருமானே. (ச)

மானேய் † நோக்கிமடவாளை மார்வில்கொண்டாய்! மாதவா! *
கூனேசிதையஉண்டைவில் நிறத்தில்தெறித்தாய்! கோவிந்தா! *
வானார்சோதிமணிவண்ணா! மதுசூதா! நீயருளாய் * உன்
தேனேமலரும்திருப்பாதம் சேருமாறுவினையேனே. (ரு)

வினையேன்வினைதீர்மருந்தானாய்! விண்ணோர்தலைவா! கேசவா! *
மனைசேர்ஆயர்குலமுதலே! மாமாயனே! மாதவா! *
சினையேய்தழையமராமரங்கள் ஏழும்எய்தாய்! சிரீதரா! *
இனையாய்! இனையபெயரினாய்! என்றுனைவன்அடியேனே. (சு)

அடியேன்சிறியஞானத்தன் அறிதல்ஆர்க்குமஅரியானை *
கடிசேர்தண்ணந்துழாய்க் கண்ணிபுனைந்தான்தன்னைக்கண்ணனை *
செடியாராக்கைஅடியாரைச் சேர்தல்தீர்க்கும்திருமாலை *
அடியேன்காண்பானலற்றுவன் இதனில்மிக்கோரயர்வுண்டே? (எ)

உண்டாய்உலகேழ்முன்னமே உமிழ்ந்துமாயையால்புக்கு *
உண்டாய்வெண்ணெய்சிறுமனிசர் உவலையாக்கைநிலையெய்தி *
மண்தான்சோர்ந்ததுண்டேலும மனிசர்க்காகும்பீர் * சிறிதும்
அண்டாவண்ணம்மண்கரைய நெய்யூண்மருந்தோ? மாயோனே! (அ)

மாயோம்தீயவலவலைப் பெருமாவஞ்சப்பேய்வீய *
தூயகுழவியாய்விடப்பாலமுதா அமுதுசெய்திட்ட
மாயன் * வானோர்தனிததலைவன்மலராள்மைந்தன் எவ்வுயிர்க்கும்
தாயோன் * தம்மான்என்னம்மான் அம்மாமூர்த்தியைச்சார்ந்தே. (கூ)

சார்ந்தஇருவல்வினைகளுமசரித்து மாயப்பற்றறுத்து *
தீர்ந்துதன்பால்மனமவைக்கத்திருத்தி வீடுதிருத்துவான *
ஆர்ந்தஞானச்சுடராகி அகலம்கீழ்மேலளவிறந்து *
நேர்ந்தஉருவாய்அருவாகும் இவற்றினுயிராம்நெடுமாலே! (க0)

மாலே! மாயப்பெருமானே! மாமாயனே! என்றென்று *
மாலேயேறிமாலருளால் மன்னுகுருகூர்ச்சடகோபன் *
பாலேய்தமிழர்இசைகாரர் பத்தர்பரவும்ஆயிரதின்
பாலேபட்ட * இவைபத்தும்வல்லார்க்கு இல்லைபரிவதே. (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

† 'நோக்கின்' என்பதும் சிலர் பாடம்.

வளம்மிக்கமால்பெருமை மன்னுயிரின்தண்மை *
உளமுற்று அங்கூடுருவவோர்ந்து * — தளர்வுற்று
நீங்கநினைமாறனைமால் நீடிலகுசீலத்தால் *
பாங்குடனே சேர்த்தான்பரிந்து. (ரு)

சீயர் திருவடிகளே சரணம்.

---

## சு-ஆந் திருவாய்மொழி—பரிவதில்.

---

['எம்பெருமான் ஸுகமாக ஆராதிக்கத்தக்கவன்' என்று உபதேசித்தல்.]

வஞ்சிவிருத்தம்.

பண்-முதிர்ந்தகுறிஞ்சி, தாளம்-ஏழொத்து.

நாதநாமக்ரியைராகம் - அடதாளம்.

ஓ பரிவதில்ஈசனைப்பாடி *
விரிவதுமேவலுறுவீர் *
பிரிவகையின்றிநன்னீர் தூய் *
புரிவதுவும்புகைபூவே. (க)

† மதுவார்தண்ணந்துழாயான் *
முதுவேதமுதல்வனுக்கு *
எதுவேது? என்பணி? என்னாது *
அதுவே ஆட்செய்யுமீடே. (உ)

ஈடும்எடுப்பும்இல்ஈசன் *
மாடுவிடாதுஎன்மனனே *
பாடும்என்நா அவன்பாடல் *
ஆடும்என் அங்கம்அணங்கே. (ங)

அணங்கென ஆடும்எனங்கம் *
வணங்கிவழிபடும்ஈசன் *
பிணங்கிஅமரர்பிதற்றும் *
குணங்கெழுகொள்கையினனே. (௪)

கொள்கைகொளாமைஇலாதான் *
எள்கல்இராகம்இலாதான் *
விள்கைவிள்ளாமைவிரும்பி *
உள்கலந்தார்க்குஓர்அமுதே. (ரு)

அமுதம்அமரர்கட்கீந்த *
நிமிர்சுடர் ஆழிநெடுமால் *
அமுதிலும் ஆற்றஇனியன் *
நிமிர்திரைநீள்கடலானே. (சு)

நீள்கடல்சூழ்இலங்கைக்கோன் *
தோள்கள்தலைதுணிசெய்தான் *
தாள்கள் தலையில்வணங்கி *
நாள்கடலைக்கழிமினே. (எ)

கழிமின்தொண்டர்கள்! கழித்து *
தொழுமின் அவனைத்தொழுதால் *
வழிநின்றவல்வினைமாள்வித்து *
அழிவின்றி ஆக்கம்தருமே. (அ)

---

† 'வதுவார்' என்பதும் பாடம்.

தருமவரும்பயனாய *
திருமகளார்தனிக்கேள்வன் *
பெருமையுடையபிரானார் *
இருமைவினைகடிவாரே. (கூ)

கடிவார்தீயவினைகள் *
கொடியாரும்அளவைக்கண் *
கொடியாஅடுபுள்உயர்த்த *
வடிவார்மாதவனாரே. (க0)

மாதவன்பால் சடகோபன் *
தீதவமின்றிஉரைத்த *
ஏதமில்ஆயிரத்துஇப்பத்து *
ஓதவல்லார்பிறவாரே. (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

பரிவதிலீசன்படியைப் பண்புடனேபேசி *
அரியனலன் ஆராதனைக்கென்று *—உரிமையுடன்
ஓதியருள்மாறன் ஒழிவித்தான்இவ்வுலகில் *
பேதையர்கள்தங்கள்பிறப்பு. (கூ)

சீயர் திருவடிகளே சரணம்.

---

## எ-ஆந் திருவாய்மொழி—பிறவித்துயர்.

---

[ஈச்வரனுடைய ஆச்ரயணம் போகரூபமா யிருக்கு மெனல்.]

கலிவிருத்தம்.

பண்-வியந்தம், தாளம் - ஏழொத்து மத்யமாவதிராகம் - அடதாளம்.

பிறவித்துயரற ஞானத்துள்நின்று *
துறவிச்சுடர்விளக்கம் தலைப்பெய்வார் *
அறவனை ஆழிப்படைஅந்தணனை *
மறவியையின்றி மனத்துவைப்பாரே. (க)

வைப்பாம்மருந்தாம் அடியரை * வல்வினைத்
துப்பாம்புலனைந்தும் துஞ்சக்கொடான்அவன் *
எப்பால்யவர்க்கும் நலத்தால்உயர்ந்துயர்ந்து *
அப்பாலவன் எங்களாயர்கொழுந்தே. (உ)

ஆயர்கொழுந்தாய் அவரால்புடையுண்ணும் *
மாயப்பிரானை என்மாணிக்கச்சோதியை *
தூயஅமுதைப் பருகிப்பருகி * என்
மாயப்பிறவி மயர்வறுத்தேனே. (ங)

மயர்வறஎன்மனத்தே மன்னினான்தன்னை *
உயர்வினையேதரும் ஒண்சுடர்க்கற்றையை *
அயர்வில்அமரர்கள் ஆதிக்கொழுந்தை * என்
இசைவினை என்சொல்லியான்விடுவேனோ ? (ச)

விடுவேனோ? என்விளக்கை என்னுவினை *
நடுவேவந்து உய்யக்கொள்கின்றநாதனை *
தொடுவேசெய்து இளவாய்ச்சியர்கண்ணினுள் *
விடவேசெய்து விழிக்குமபிரானையே. (ஙு)

பிரான் பெருநிலம்கீண்டவன் * பின்னும
விராய்மலர்த்துழாய் வேய்ந்தமுடியன் *
மாமரம் எய்தமாயவன் + என்னுள்
இரானெனில் பின்னையானொட்டுவேனோ? (சு)

யானொட்டி என்னுள்இருத்துவமென்றிலன் *
தானொட்டிவந்து என்தனிநெஞ்சைவஞ்சித்து *
ஊனொட்டிநின்று என்னுயிரில்கலந்து * இயல்
வானொட்டுமோ? இனிஎன்னைநெகிழ்க்கவே. (எ)

என்னைநெகிழ்க்கிலும் என்னுடைநல்நெஞ்சந
தன்னை * அகல்விக்கத் தானும்கில்லான்இனி *
பின்னைநெடும்பணைத்தோள் மகிழ்பீடுடை *
முன்னைஅமரர் † முழுமுதலானே. (அ)

அமரர்முழுமுதல் ஆகியஆதியை *
அமரர்க்குஅமுதீந்த ஆயர்கொழுந்தை *
அமரவழும்பத் துழாவிஎன்னாவி *
அமரதழுவிற்று இனிஅகலுமோ? (கூ)

அகலில்அகலும் அணுகில்அணுகும *
புகலும்அரியன் பொருவல்லன்எமமான *
நிகரில்அவன்புகழ் பாடிஇளைப்பிலம *
பகலும்இரவும் படிநதுகுடைநதே. (கO)

குடைநதுவண்டுண்ணும் துழாய்முடியானை *
அடைநத தென்குருகூர்ச்சடகோபன் *
மிடைநதசொல்தொடை ஆயிரத்துஇப்பதது *
உடைந்துநோய்களை ஓடுவிக்குமே. * (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

பிறவியற்றுநீள்விசும்பில் பேரின்பமுய்க்கும் *
திறம்அளிக்கும் சீலத்திருமால் + —அறவினியன்
பற்றுமவர்க்குஎன்று பகர்மாறன்பாதமே *
உற்றதுணையென்று உள்ளமே! ஓடு. (எ)

சீயர் திருவடிகளே சரணம்.

---

† 'முழுமுதல்தானே' என்பதும் பாடம்.

# அ-ஆந் திருவாய்மொழி—ஓடும்புள்.

[ஈச்வரன் யாவரிடத்திலும் வாசியில்லாமல் ஆர்ஜவகுணமுடையவ னென்று அருளிச்செய்தல்.]

வஞ்சித்துறை.

பண் - இந்தளம், தாளம் - ஏழொத்து. தேசியராகம் - ஆதிதாளம்.

ஓடும்புள்ளேறி *
சூடும்தண்துழாய் *
நீடுநின்றுஅவை *
ஆடும்அம்மானே. (க)

அம்மானாய்ப்பின்னும் *
எம்மாண்பும்ஆனான் *
வெம்மாவாய்கீண்ட *
செம்மாகண்ணனே. (உ)

கண்ணாவான்என்றும் *
மண்ணோர்விண்ணோர்க்கு *
தண்ணார்வேங்கட *
விண்ணோர்வெற்பனே. (௩)

வெற்பையொன்றெடுத்து *
ஒற்கமின்றியே *
நிற்கும்அம்மான்சீர் *
கற்பன்வைகலே. (௪)

வைகலும்வெண்ணெய் *
கைகலந்துஉண்டான் *
பொய்கலவாது * என்
மெய்கலந்தானே. (௫)

கலந்துஎன்னாவி *
நலங்கொள்நாதன் *
புலன்கொள்மாணாய் *
நிலங்கொண்டானே (௬)

கொண்டான்ஏழ்விடை *
உண்டான்ஏழ்வையம் *
தண்தாமம்செய்து * என்
எண்தானானே. (௭)

ஆனானாயன் *
மீனோடுஏனமும் *
தானானான்என்னில் *
தானாயசங்கே. (அ)

சங்குசக்கரம் *
அங்கையில்கொண்டான் *
எங்கும்தானாய *
நங்கள்நாதனே. (௯)

நாதன்ஞாலம்கொள *
பாதன்என்னம்மான் *
ஓதம்போல்கிளர் *
வேதநீரனே. (க0)

நீர்புரைவண்ணன் *
சீர்சடகோபன் *
நேர்தலாயிரத்து *
ஓர்தலிவையே. (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

ஓடுமனம்செய்கை யுரையொன்றினில்லாதாருடனே *
கூடிநெடுமால் அடிமைகொள்ளுமநிலை *—நாடிய
ஓர்ந்தவன்தன்செம்மை உரைசெய்தமாறனென *
ஏய்ந்துநிற்கும் வாழ்வாமிவை. (அ)

சீயர் திருவடிகளே சரணம்.

## கூ - ஆந் திருவாய்மொழி—இவையுமவையும்.

[ஈச்வரன் தம்மோடு கலந்து அநுபவித்த கலவியை ஆழ்வார் அருளிச்செய்தல்.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

பண்-கொல்லி, தாளம் - ஏழொத்து. மோஹநராகம் - ஆதிதாளம்.

இவையும்அவையும்உவையும் இவரும்அவரும்உவரும் *
எவையும்யவரும்தன்னுள்ளே ஆகியும்ஆக்கியும்காக்கும் *
அவையுள்தனிமுதல்எம்மான் கண்ணபிரான்என்னமுதம் *
சுவையன்திருவின்மணாளன் என்னுடைச்சூழலுளானே. (க)

சூழல்பலபலவல்லான் தொல்லையங்காலத்துஉலகை *
கேழலொன்றாகியிடந்த கேசவன்என்னுடைஅம்மான் *
வேழமருப்பையொசித்தான் விண்ணவர்க்குஎண்ணலரியான் *
ஆழநெடுங்கடல்சேர்ந்தான் அவன்என்னருகலிலானே. (உ)

அருகலிலாயபெருஞ்சீர் அமரர்களாதிமுதல்வன் *
கருகியநீலநன்மேனிவண்ணன் செந்தாமரைக்கண்ணன் *
பொருசிறைப்புள்ளுவந்தேறும் பூமகளார்தனிக்கேள்வன் *
ஒருகதியின்சுவைதந்திட்டு ஒழிவிலன்என்னோடுடனே. (ங)

உடனமர்காதல்மகளிர் திருமகள்மண்மகள்ஆயர்
மடமகள் * என்றிவர்மூவர் ஆளுமஉலகமும்மூன்றே *
உடனவையொக்கவிழுங்கி ஆலிலைச்சேர்ந்தவன்எம்மான் *
கடல்மலிமாயப்பெருமான் கண்ணன்என்னொக்கலையானே. (ச)

ஒக்கலைவைத்துமுலைப்பாலுண்ணென்று தந்திடவாங்கி *
செக்கஞ்செகஅன்று அவள்பால்உயிர்செகஉண்டபெருமான் *
நக்கபிரானோடு அயனுமஇந்திரனும்முதலாக *
ஒக்கவும்தோற்றியஈசன் மாயன்என்நெஞ்சினுளானே. (ரு)

மாயன்என்னெஞ்சினுள்ளான் மற்றுமயவர்க்குமஃதே † அஃதே *
காயமும்சீவனும்தானே காலும்எரியும்அவனே *
சேயன்அணியன்யவர்க்கும சிந்தைக்குமகோசரமல்லன் *
தூயன்துயக்கன்மயக்கன் என்னுடைததோளிணையானே. (சு)

---

† 'அதுவே' என்பதும் பாடம்.

தோளிணைமேலும்நன்மார்பின்மேலும் சுடர்முடிமேலும் *
தாளிணைமேலும்புனைந்த தண்ணந்துழாயுடையம்மான் *
கேளிணையொன்றுமிலாதான் கிளரும்சுடரொளிமூர்த்தி *
நாளணைந்தொன்றும்அகலான் என்னுடைநாவினுளானே. (௭)

நாவினுள்நின்றுமலரும் ஞானக்கலைகளுக்கெல்லாம் *
ஆவியும்ஆக்கையும்தானே அழிப்போடுஅளிப்பவன்தானே *
பூவியல்நால்தடந்தோளன் பொருபடையாழிசங்கேந்தும் *
காவிநன்மேனிக்கமலக்கண்ணன் என்கண்ணினுளானே. (௮)

கமலக்கண்ணன்என்கண்ணினுள்ளான் காண்பன்அவன்கண்களாலே *
அமலங்களாகவிழிக்கும் ஐம்புலனும்அவன்மூர்த்தி *
கமலத்தயன்நம்பிதன்னைக் கண்ணுதலானொடும்தோற்றி *
அமலத்தெய்வத்தோடுஉலகமாக்கி என்நெற்றியுளானே. (௯)

நெற்றியுள்நின்றுஎன்னையாளும் நிரைமலர்ப்பாதங்கள்சூடி *
[illegible]
ஒற்றைப்பிறையணிந்தானும் நான்முகனும்இந்திரனும் *
மற்றையமரரும்எல்லாம்வந்து எனதுஉச்சியுளானே. (௧௦)

❀ உச்சியுள்ளேநிற்கும்தேவதேவற்குக் கண்ணபிராற்கு *
இச்சையுள்செல்லஉணர்த்தி வண்குருகூர்ச்சடகோபன் *
இச்சொன்ன ஆயிரத்துள் இவையும்ஓர்பத்துஎம்பிராற்கு *
நிச்சலும்விண்ணப்பம்செய்ய நீள்கழல்சென்னிபொருமே. (௧௧)

ஆழ்வார் திருவடிகளே சரணம்

இவையறிந்தோர்தம்மளவில் ஈசனுவந்தாற்ற *
அவயவங்கள்தோறு மணையும—சுவையதனைப்
பெற்று * ஆர்வத்தால்மாறன் பேசினசொலபேச * மால்
பொன்தாள நம்சென்னிபொரும். (௯)

சீயர் திருவடிகளே சரணம்.

## ௧௦ - ஆந் திருவாய்மொழி—பொருமாநீள்படை.

[ஈச்வரனுடைய நிர்ஹேதுக உபகாரத்வத்தை அருளிச்செய்தல்.]

கலிவிருத்தம்.

பண் - தக்கராகம், தாளம் - ஏழொத்து. பைரவிராகம் - ஆதிதாளம்.

❀ பொருமாநீள்படை ஆழிசங்கத்தொடு *
திருமாநீள்கழல் ஏழுலகும்தொழ *
ஒருமாணிக் குறளாகிநிமிர்ந்த * அக்
கருமாணிக்கம் என்கண்ணுளதாகுமே. (௧)

கண்ணுள்ளேநிற்கும் காதன்மையால்தொழில் *
எண்ணிலும்வரும் என்இனிவேண்டுவம்? *
மண்ணும்நீரும் எரியும்நல்வாயுவும் *
விண்ணுமாய்விரியும் எமபிரானையே. (உ)

எம்பிரானை எந்தைதந்தைதந்தைக்கும்
தம்பிரானை * தண்தாமரைக்கண்ணனை *
கொம்பராவு நுண்ணேரிடைமார்வனை *
எமபிரானைத்தொழாய் மடநெஞ்சமே! (ந)

நெஞ்சமே! நல்லைநல்லை உன்னைப்பெற்றால்
என்செய்யோம்? * இனிஎன்னகுறைவினம்? *
மைந்தனை மலராள்மணவாளனை *
துஞ்சும்போதும் விடாதுதொடர்கண்டாய். (ச)

கண்டாயேநெஞ்சே! கருமங்கள்வாய்க்கின்று * ஓர்
எண்தானும்இன்றியே வந்தியலுமாறு *
உண்டானைஉலகேழும் ஓர்மூவடி
கொண்டானை * கண்டுகொண்டனை நீயுமே. (ரு)

நீயும்நானும் இந்நேர்நிற்கில் * மேல்மற்றோர்
நோயும்சார்கொடான் நெஞ்சமே! சொன்னேன் *
தாயும்தந்தையுமாய் இவ்வுலகினில் *
வாயும்ஈசன் மணிவண்ணன்எந்தையே. (சு)

எந்தையே! என்றும் எம்பெருமான! என்றும் *
சிந்தையுள்வைப்பன் சொல்லுவன்பாவியேன் *
எந்தை! எமபெருமான்! என்றுவானவர் *
சிந்தையுள்வைத்துச் சொல்லும்செல்வனையே. (எ)

செல்வநாரணனென்ற சொல்கேட்டலும் *
மல்கும்கண்பனி நாடுவன்மாயமே *
அல்லும்நன்பகலும் இடைவீடின்றி
நல்கி * என்னைவிடான் நம்பிநம்பியே. (அ)

நம்பியைத் தென்குறுங்குடிநின்ற * அச்
செம்பொனேதிகழும் திருமூர்த்தியை *
உம்பர்வானவர் ஆதியஞ்சோதியை *
எம்பிரானை என்சொல்லிமறப்பனோ? (கூ)

மறப்பும்ஞானமும் நானொன்றுணர்ந்திலன் *
மறக்குமென்று செந்தாமரைக்கண்ணொடு *
மறப்பறஎன்னுள்ளே மன்னினான்தன்னை *
மறப்பனோ? இனி யானஎன்மணியையே. (க0)

மணியைவானவர்கண்ணனைத் தன்னதோ
ரணியை * தென்குருகூர்ச்சடகோபன் * சொல்
பணிசெயாயிரத்துள் இவைபத்துடன் *
தணிவிலர்கற்பரேல் கல்விவாயுமே. (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

பொருமாழிசங்குடையோன் பூதலத்தேவந்து *
தருமாறேரேதுவறத்தன்னை *—திரமாகப்
பார்த்துஉரைசெய்மாறன் பதம்பணிகஎன்சென்னி * (க0)
வாழ்த்திடுக என்னுடையவாய்.

சீயர் திருவடிகளே சரணம்.

---

# இரண்டாம்பத்து.

பகவத்கைங்கர்யத்தில் நேர்ந்த களையை அறுத்தல்.

---

## க - ஆந் திருவாய்மொழி—வாயும்திரை.

---

[எம்பெருமான் மறையகிற்க, ஆழ்வார் ஒரு பிராட்டியவஸ்தை யடைந்து அசேதநங்களையும் திர்யக்குக்களையும் தம்மோடு ஸம துஃகிகளாக எண்ணி ப்ரலாபித்தல்.]

தரவுகொச்சகக்கலிப்பா.

பண் - புறநீர்மை, தாளம் - இடையொத்து

யதுகுலகாம்போதிராகம் - ஆதிதாளம்.

வாயும்திரையுகளும் கானல்மடநாராய்! *
ஆயும்அமருலகும் துஞ்சிலும்நீ துஞ்சாயால் *
நோயும்பயலைமையும் மீதூரஎம்மேபோல் *
நீயும்திருமாலால் நெஞ்சங்கோட்பட்டாயே? (க)

கோட்பட்டசிந்தையையாய்க் கூர்வாயஅன்றிலே! *
சேட்பட்டயாமங்கள் சேராதுஇரங்குதியால் *
ஆட்பட்டஎம்மேபோல் நீயும்அரவணையான் *
தாட்பட்டதண்துழாய்த்தாமம் காமுற்றாயே? (உ)

காமுற்றகையறவோடு எல்லே! இராப்பகல் *
நீமுற்றக்கண்துயிலாய் நெஞ்சுருகிஏங்குதியால் *
தீமுற்றத்தென்னிலங்கை ஊட்டினான் தாள்நயந்த *
யாமுற்றதுஉற்றாயோ? வாழிகனைகடலே! (ங)

கடலும்மலையும் விசும்பும்துழாய்எம்போல் *
சுடர்கொள்இராப்பகல் துஞ்சாயால்தண்வாடாய்! *
அடல்கொள்படையாழி அம்மானைக்காண்பான்நீ *
உடலம்நோயுற்றாயோ? ஊழிதோறூழியே. (ச)

ஊழிதோறூழி உலகுக்குநீர்கொண்டு *
தோழியரும்யாமும்போல் நீராய்நெகிழ்கின்ற *
வாழியவானமே! நீயும்மதுசூதன் *
பாழிமையில்பட்டு அவன்கண்பாசத்தால்நைவாயே? (ரு)

நைவாயஎம்மேபோல நாள்மதியே! நீஇந்நாள் *
மைவானிருளகற்றாய் மாழாந்துதேம்புதியால் *
ஐவாயரவணைமேல் ஆழிப்பெருமானார் *
மெய்வாசகம்கேட்டு உன்மெய்ந்நீர்மைதோற்றாயே? (சா)

தோற்றோம்மடநெஞ்சம் எம்பெருமான்நாரணற்கு * எம்
ஆற்றாமைசொல்லி அழுவோமைநீநடுவே *
வேற்றோர்வகையில் கொடிதாய்எனையூழி *
மாற்றாண்மைநிற்றியோ? வாழிகனையிருளே! (எ)

இருளின்திணிவண்ணம் மாநீர்க்கழியே! போய் *
மருளுற்றுஇராப்பகல் துஞ்சிலும்நீதுஞ்சாயால் *
உருளும்சகடம் உதைத்தபெருமானார் *
அருளின்பெருநசையால் ஆழாந்துநொந்தாயே? (அ)

நொந்தாராக்காதல்நோய் மெல்லாவியுள்ளுலர்த்த *
நந்தாவிளக்கமே! நீயும் அளியத்தாய் *
செந்தாமரைத்தடங்கண் செங்கனிவாயெம்பெருமான் *
அந்தாமத்தண்துழாய் ஆசையால்வேவாயே? (கூ)

வேவாராவேட்கைநோய் மெல்லாவியுள்ளுலர்த்த *
ஓவாதுஇராப்பகல் உன்பாலேவீழ்த்தொழிந்தாய் *
மாவாய்பிளந்து மருதிடைபோய்மண்ணளந்த *
மூவாமுதல்வா ! இனிஎம்மைச்சோரேலே. (கo)

சோராதஎப்பொருட்கும் ஆதியாம்சோதிக்கே *
ஆராதகாதல் குருகூர்ச்சடகோபன் *
ஓராயிரம்சொன்ன அவற்றுள்இவைபத்தும் *
சோரார்விடார்கண்டீர் வைகுந்தம்திண்ணனவே. (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

வாயும்திருமால் மறையநிற்க * ஆற்றாமை
போய்விஞ்சி மிக்கபுலம்புதலாய் *—ஆய
அறியாதவற்றோடு அணைந்தழுதமாறன் *
செறிவாரைநோக்கும்தினிந்து. (கக)

சீயர் திருவடிகளே சரணம்.

## உ - ஆந் திருவாய்மொழி—திண்ணன்வீடு.

---

[எம்பெருமானுடைய பரத்வத்தை அவதாரத்திலே அநுஸந்தித்துப் பரோபதேசம்செய்தல்.]

கலிவிருத்தம்.

பண் - தக்காகம், தாளம் - ஏழொத்து. சுருட்டிராகம் - ரூபகதாளம்.

திண்ணன்வீடு முதல்முழுதுமாய் *
எண்ணின்மீதியன் எம்பெருமான் *
மண்ணும்விண்ணுமெல்லாம உடனுண்ட * நம்
கண்ணன்கண்ணல்லது இல்லையோர்கண்ணே. (க)

ஏபாவம் ! பரமே ! ஏழுலகும் *
ஈபாவம்செய்து அருளால்அளிப்பாரார் ? *
மாபாவம்விட அரற்குப்பிச்சைபெய் *
கோபாலகோளரி ஏறன்றியே. (உ)

ஏறனைப்பூவனைப் பூமகள்தன்னை *
வேறின்றிவிண்தொழத் தன்னுள்வைத்து *
மேல்தன்னைமீதிட நிமிர்ந்துமண்கொண்ட *
மால்தனில்மிக்கும் ஓர்தேவும்உளதே ? (ங)

தேவும் எப்பொருளும்படைக்க *
பூவில் நான்முகனைப்படைத்த *
தேவன் எம்பெருமானுக்கல்லால் *
பூவும் பூசனையும்தகுமே ? (ச)

தரும்சீர்த் தன்தனிமுதலினுள்ளே *
மிகுந்தேவும் எப்பொருளும்படைக்க *
தரும்கோலத் தாமரைக்கண்ணனெம்மான் *
மிகுஞ்சோதி மேலறிவார்யவரே ? (ரு)

யவரும்யாவையும் எல்லாப்பொருளும் *
கவர்வின்றித் தன்னுளொடுங்கநின்ற *
பவர்கொள்ஞான வெள்ளச்சுடர்மூர்த்தி *
அவர் எம்மாழியம்பள்ளியாரே. (சு)

பள்ளியாலிலை ஏழுலகும்கொள்ளும் *
வள்ளல் வல்வயிற்றுப்பெருமான் *
உள்ளுளார் அறிவார் ? அவன்தன் *
கள்ளமாய மனக்கருத்தே. (எ)

கருத்தில்தேவும் எல்லாப்பொருளும் *
வருத்தித்த மாயப்பிரானையன்றி * ஆரே
திருத்தித் திண்ணிலைமூவுலகும் * தமமுள்
இருத்திக்காக்கும் இயல்வினரே ? (அ)

காக்கும்இயல்வினன் கண்ணபெருமான் *
சேர்க்கைசெய்து தன்னுந்தியுள்ளே *
வாய்த்ததிசைமுகன் இந்திரன்வானவர் *
ஆக்கினான் தெய்வவுலகுகளே. (கூ)

கள்வா ! எம்மையும ஏழுலகும * நின்
னுள்ளேதோற்றிய இறைவ ! என்று *
வெள்ளேறன்நான்முகன் இந்திரன்வானவர் *
புள்ளூர்தி கழலபணிந்தேத்துவரே. (கO)

ஏதமிலேழுலகும்கொண்ட கோலக்
கூத்தனை * குருகூர்ச்சடகோபன்சொல் *
வாய்த்தஆயிரத்துள் இவைபத்துடன் *
ஏத்தவல்லவர்க்கு இல்லையோரூனமே. (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

திண்ணிதாமாறன் திருமால்பரத்துவத்தை *
நண்ணிஅவதாரத்தே நன்குரைத்த *—வண்ணமறிந்து
அற்றார்கள்யாவர் அவரடிக்கேஆங்கவர்பால் *
உற்றாரைமேவிடாதான். (கஉ)

சீயர் திருவடிகளே சரணம்.

---

## ங - ஆந் திருவாய்மொழி—ஊனில்வாழ்.

[ஆழ்வார் பகவதநுபவத்தைப் பூர்ணமாகப் பெற்று, உசாத்துணையான நித்யஸூரிகளோடு எப்போது கூடப்போகிறே மென்று ப்ரார்த்தித்தல்.]

கலிவிருத்தம்.

பண் - நாட்டம், தாளம் - ஏழொத்து. முகாரிராகம் - அடதாளம்.

ஓ ஊனில்வாழுயிரே ! நல்லைபோ உன்னைப்பெற்று *
வானுளார்பெருமான் மதுசூதனென்னம்மான் *
தானும்யானுமெல்லாம் தன்னுள்ளேகலந்தொழிந்தோம் *
தேனும்பாலும்நெய்யும் கன்னலும்அமுதுமொத்தே. (க)

ஒத்தார்மிக்காரை இலையாயமாமாயா ! *
ஒத்தாய் எப்பொருட்கும்உயிராய் * என்னைபெற்ற
அத்தாயாய்த்தந்தையாய் அறியாதன † அறிவிதத *
அத்தா ! நீசெய்தன அடியேன்அறியேனே. (உ)

அறியாக்காலத்துள்ளே அடிமைக்கண்அன்புசெய்வித்து *
அறியாமாமாயத்து அடியேனைவைததாயால் *
அறியாமைக்குறளாய் நிலம்மாவலி ! மூவடியென்று *
அறியாமைவஞ்சித்தாய் எனதாவியுள்கலந்தே. (ங)

எனதாவியுள்கலந்த பெருநல்லுதவிக்கைம்மாறு *
எனதாவிதந்தொழிந்தேன் இனிமீளவதென்பதுண்டே ? *
எனதாவியாவியும்நீ பொழிலேழுமுண்டஎந்தாய் ! *
எனதாவியார் ? யான்ஆர் ? தந்தநீகொண்டாக்கினையே. (௪)

இனியார்ஞானங்களால் எடுக்கலெழாதஎந்தாய் *
கனிவார்வீட்டின்பமே ! என்கடலபடாஅமுதே ! *
தனியேன்வாழ்முதலே ! பொழிலேழும்ஏனமொன்றாய் *
நுனியார்கோட்டில்வைத்தாய் ! உனபாதம்சேர்ந்தேனே. (ரு)

சேர்ந்தார்தீவினைகட்கு அருநஞ்சைத்திண்மதியை *
தீர்ந்தார்தம்மனத்துப் பிரியாதவருயிரை *
சோர்ந்தேபோகல்கொடாச்சுடரை அரக்கியைமூக்கு
ஈர்ந்தாயை * அடியேன்அடைந்தேன் முதல்முன்னமே. (சா)

முன்நல்யாழ்பயில்நூல் நரம்பின்முதிர்சுவையே ! *
பன்னலார்பயிலும் பரனே ! பவித்திரனே ! *
கன்னலே!அமுதே! கார்முகிலே! என்கண்ணா! *
நின்னலால்இலேன்காண் என்னைநீகுறிக்கொள்ளே. (எ)

† 'அறிவித்து' என்றும் பாடம்.

குறிக்கொள்ஞானங்களால் எனையூழிசெய்தவமும் *
கிறிக்கொண்டுஇப்பிறப்பே சிலநாளில்எய்தினன்யான் *
உறிக்கொண்டவெண்ணெய்பால் ஒளித்துண்ணுமம்மான்பின் *
நெறிக்கொண்டநெஞ்சனாய்ப் பிறவித்துயர்கடிந்தே. (அ)

கடிவார்தண்ணந்துழாய்க் கண்ணன்விண்ணவர்பெருமான் *
படிவானமிறந்த பரமன்பவித்திரன்சீர் *
செடியார்நோய்கள்கெடப் படிந்துகுடைந்தாடி *
அடியேன்வாய்மடுத்துப் பருகிக்களித்தேனே. (கூ)

களிப்பும்கவர்வும்அற்றுப் பிறப்புப்பிணிமூப்பிறப்பற்று *
ஒளிக்கொண்டசோதியமாய் உடன்கூடுவதென்றுகொலோ? *
துளிக்கின்றவானிந்நிலம் சுடராழிசங்கேந்தி *
அளிக்கின்றமாயப்பிரான் அடியார்கள்குழாங்களையே. (கo)

குழாங்கொள்பேரரக்கன் குலம்வீயமுனிந்தவனை *
குழாங்கொள்தென்குருகூர்ச் சடகோபன்தெரிந்துரைத்த *
குழாங்கொளாயிரத்துள் இவைபத்தும்உடன்பாடி *
குழாங்களாய்அடியீருடன் கூடிநின்றாடுமினே. (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

ஊனமறவேவந்து உள்கலந்தமாலினிமை
யானது * அனுபவித்தற் காமதனையா *—வானில்
அடியார்குழாமகூட ஆசையுற்றமாறன் *
அடியாருடன் நெஞ்சே! ஆடு. (கங)

சீயர் திருவடிகளே சரணம்.

---

## ச-ஆந் திருவாய்மொழி—ஆடியாடி.

---

[தலைவனைப் பிரிந்த தலைவியின் ஆற்றாமை கண்ட தாய் தலைவனைநோக்கி இரங்கிக்கூறும் பாசுரம்.]

வஞ்சிவிருத்தம்.

பண்-நாட்டம். தாளம்-ஏகதாளம். யழநாகல்யாணிராகம் - திரிபுடைதாளம்.

ஆடியாடி அகம்கரைந்து * இசை
பாடிப்பாடிக் கண்ணீர்மல்கி * எங்கும
நாடிநாடி நரசிங்கா! என்று *
வாடிவாடும் இவ்வாணுதலே. (க)

வாணுதல் இம்மடவரல் * உம்மைக்
காணும்ஆசையுள் நைகின்றாள் * விறல்
வாணன் ஆயிரம்தோள்துணித்தீர்! * உம்மைக்
காணநீர் இரக்கமிலீரே. (உ)

இரக்கமனத்தோடு எரியணை *
அரக்கும்மெழுகும் ஒக்குமஇவள் *
இரக்கமெழீர் இதற்குஎன்செய்கேன்? *
அரக்கனிலங்கை செற்றீருக்கே. (௩)

இலங்கைசெற்றவனே! என்னும் * பின்னும்
வலங்கொள் புள்ளுயர்த்தாய்! என்னும் * உள்ளம்
மலங்க வெவ்வுயிர்க்கும் * கண்ணீர்மிகக்
கலங்கிக் கைதொழும்நின்றுஇவளே. (ச)

இவள்இராப்பகல் வாய்வெரீஇ * தன
குவளையொண் கண்ணநீர்கொண்டாள * வண்டு
திவளும் தண்ணந்துழாய்கொடீர் * என
தவளவண்ணர் தகவுகளே. (ரு)

தகவுடையவனே! என்னும் * பின்னும
மிகவிரும்பும் பிரான்என்னும * எனது
அகவுயிர்க்கு அமுதே! என்னும் * உள்ளம்
உகஉருகிநின்று உள்ளுளே. (௬)

உள்ளுளாவி உலர்ந்துலர்ந்து * என
வள்ளலே! கண்ணனே! என்னும் * பின்னும்
வெள்ளநீர்க் கிடந்தாய்! என்னும * என
கள்விதான்பட்ட வஞ்சனையே! (எ)

வஞ்சனே! என்னும கைதொழும * தன
நெஞ்சம்வேவ நெடிதுயிர்க்கும * விறல
கஞ்சனை வஞ்சனைசெய்தீர்! * உமமைத்
தஞ்சமென்று இவள்பட்டனவே! (அ)

பட்டபோது எழுபோதறியாள * விரை
மட்டலர் தண்துழாயென்னும * சுடர்
வட்டவாய் நுதிநேமியீர்! * நுமது
இட்டம்என்கொல் இவ்வேழைக்கே? (௯)

ஏழைபேதை இராப்பகல் * தன
கேழில் ஒண்கண்ணநீர்கொண்டாள் * கிளர்
வாழ்வைவேவ இலங்கைசெற்றீர்! * இவள்
மாழைநோக்கு ஒன்றும்வாட்டேன்மினே. (௧௦)

வாட்டமில்புகழ் வாமனனை * இசை
கூட்டி வண்சடகோபன்சொல் * அமை
பாட்டு ஓராயிரத்துஇப்பத்தால் * அடி
சூட்டலாகும் அந்தாமமே. (௧௧)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

ஆடிமகிழ்வானில் அடியார்குழாங்களுடன் *
கூடியின்பமெய்தாக் குறையதனால் *—வாடிமிக
அன்புற்றார்தமநிலைமை ஆய்ந்துரைக்கமோகித்து *
துன்புற்றான்மாறன்அந்தோ! (௧௪)

சீயர் திருவடிகளே சரணம்.

---

## ௫-ஆந் திருவாய்மொழி—அந்தாமத்தன்பு.

[ஈச்வரன் தனது திவ்யபூஷண திவ்யாயுத திவ்யாவயவ ஸௌந்தர்யங்களோடு வந்து கலக்க, அதனால் ஆழ்வார் ஹ்ருஷ்டராதல்.]

தரவுகொச்சககலிப்பா.

பண் - சீகாமரம்; தாளம் - நடையொத்து, பைரவிராகம் - ஆதிதாளம்.

அந்தாமத்தன்புசெய்து என்னாவிசேர்அம்மானுக்கு *
அந்தாம † வாழ்முடிசங்கு ஆழிநூல்ஆரமுள *
செந்தாமரைத்தடங்கண் செங்கனிவாய்செங்கமலம் *
செந்தாமரையடிக்கள் செம்பொன்திருவுடம்பே. (௧)

திருவுடம்புவான்சுடர் செந்தாமரைகண்கைகமலம் *
திருவிடமேமார்பம் அயனிடமேகொப்பூழ் *
ஒருவிடமும் எந்தைபெருமாற்கு அரனேயோ! *
ஒருவிடமொன்றின்றி என்னுள்கலந்தானுக்கே. (௨)

என்னுள்கலந்தவன் செங்கனிவாய்செங்கமலம் *
மின்னும்சுடர்மலைக்குக் கண்பாதம்கைகமலம் *
மன்னுமுழுவேழுலகும் வயிற்றினுள *
தன்னுள்கலவாதது எப்பொருளும்தானிலையே. (௩)

எப்பொருளும்தானாய் மரதகக்குன்றமொக்கும் *
அப்பொழுதைத்தாமரைப்பூக் கண்பாதம்கைகமலம் *
எப்பொழுதும்நாள்திங்கள் ஆண்டூழியூழிதொறும் *
அப்பொழுதைக்கப்பொழுது என்னாராவமுதமே. (௪)

---

† 'வாண்முடி' என்பதும் பாடம்.

ஆராவமுதமாய் அல்லாவியுள்கலந்த *
காரார்கருமுகில்போல் என்னம்மான்கண்ணனுக்கு *
நேராவாய்செம்பவளம் கண்பாதம்கைகமலம் *
பேராரநீள்முடிநாண் பின்னும்இழைபலவே. (ரு)

பலபலவேஆபரணம் பேருமபலபலவே *
பலபலவேசோதிவடிவு பண்புஎண்ணில் *
பலபலகண்டுண்டு கேட்டுற்றுமோந்தின்பம் *
பலபலவேஞானமும் பாம்பணைமேலாற்கேயோ ! (௬)

பாம்பணைமேல்பாற்கடலுள் பள்ளியமர்ந்ததுவும் *
காம்பணைதோள்பின்னைக்கா ஏறுடனேழ்செற்றதுவும் *
தேம்பணையசோலை மராமரமேழெய்ததுவும் *
பூம்பிணையதண்துழாய்ப் பொன்முடியம்போரேறே. (எ)

பொன்முடியம்போரேற்றை எம்மானை, நால்தடந்தோள் *
தன்முடிவொன்றில்லாத தண்துழாய்மாலையனை *
என்முடிவுகாணாதே என்னுள்கலந்தானை *
சொல்முடிவுகாணேன்நான் சொல்லுவதுஎன் ? சொல்லீரே. ()

சொல்லீர்என்னம்மானை என்னாவியாவிதனை *
எல்லையில்சீர என்கருமாணிக்கச்சுடரை *
நல்ல † அமுதம பெறற்கரியவீடுமாய் *
அல்லிமலர்விரையொத்து ஆணல்லன்பெண்ணல்லனே. (௯)

ஆணல்லன்பெண்ணல்லன் அல்லாஅலியுமல்லன் *
காணலுமாகான் உளனல்லன்இல்லையல்லன் *
பேணுங்கால்பேணும் உருவாகும்அல்லனுமாம் *
கோணைபெரிதுடைத்து எமபெம்மானைக்கூறுதலே. (௧௦)

கூறுதலொன்றாராக் குடக்கூத்தஅம்மானை *
கூறுதலேமேவிக் குருகூர்சசடகோபன் *
கூறினஅந்தாதி ஓராயிரத்துள்இப்பத்தும் *
கூறுதல்வல்லாருளரேல் கூடுவர்வைகுந்தமே. (௧௧)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

அந்தாமத்தன்பால் அடியார்களோடுஇறைவன் *
வந்தாரத்தான்கலந்தவண்மையினால் *—சந்தாபம்
தீர்ந்தசடகோபன் திருவடிக்கேநெஞ்சமே ! *
வாய்ந்தஅன்பை நாள்தோறும்வை. (௧ரு)

சீயர் திருவடிகளே சரணம்.

---

† 'அமுதும்' என்பதும் பாடம்.

## ௬ - ஆந் திருவாய்மொழி—வைகுந்தா.

[ஆழ்வாரது நைச்யத்தைக் கண்டு எம்பெருமான் இவரது பிரிவைச் சங்கிக்க, ஆழ்வார் அச்சங்கையைப் போக்குதல்.]

ஆசிரியத்துறை.

பண் - பழந்தக்காரகம், தாளம் - ஏழொத்து
ஆநந்தபைரவிராகம் - ஆதிதாளம்.

வைகுந்தா ! மணிவண்ணனே ! என்பொல்லாத்திருக்குறளா ! என்
வைகும்வைகல்தோறும் அமுதாயவானேறே ! * [னுள்மன்னி *
செய்குந்தாவருந்தீமை உன்னடியார்க்குத்தீர்த்து அசுரர்க்குத்தீமைகள்
செய்குந்தா ! * உன்னைநான்பிடித்தேன்கொள் சிக்கெனவே. (க)

சிக்கெனச்சிறிதோரிடமும் புறப்படாத்தன்னுள்ளே * உலகுகள்
ஒக்கவேவிழுங்கிப் புகுந்தான்புகுந்ததற்பின் *
மிக்கஞானவெள்ளச்சுடர்விளக்காய்த் துளக்கற்றுஅமுதமாய் *எங்கும்
பக்கம்நோக்கறியான் என்பைந்தாமரைக்கண்ணனே. (உ)

தாமரைக்கண்ணனை விண்ணோர்பரவும்தலைமகனை * துழாய்விரைப்
பூமருவுகண்ணி எம்பிரானைப்பொன்மலையை *
நாமருவிநன்கேத்தி உள்ளிவணங்கிநாம்மகிழ்ந்தாட * நாவலர்
பாமருவிநிற்கத்தந்த † பான்மையேவள்ளலே ! (ங)

வள்ளலே ! மதுசூதனா ! என்மரதகமலையே ! * உனைநினைந்து
எள்கல்தந்தஎந்தாய் ! உன்னைஎங்ஙனம்விடுகேன் ? *
வெள்ளமேபுரைநின்புகழ்குடைந்தாடிப்பாடிக் களித்துஉகந்துகந்து *
உள்ளநோய்களெல்லாம்துரந்து உய்ந்துபோந்திருந்தே. (ச)

உய்ந்துபோந்துஎன்னுலப்பிலாத வெந்தீவினைகளைநாசஞ்செய்து *
அந்தமிலடிமைஅடைந்தேன் விடுவேனோ ? * [உனது
ஐந்துபைந்தலையாடரவணைமேவிப் பாற்கடல்யோகநித்திரை *
சிந்தைசெய்தஎந்தாய் ! உன்னைச்சிந்தைசெய்துசெய்தே. (ரு)

உன்னைச்சிந்தைசெய்துசெய்து உன்நெடுமாமொழிஇசைபாடியாடி *
முன்னைத்தீவினைகள் முழுவேரரிந்தனன்யான் * [என்
உன்னைச்சிந்தையினாலிகழ்ந்த இரணியனகல்மார்வம்கீண்ட * என்
முன்னைக்கோளரியே ! முடியாததென்னெனக்கே ? (௬)

---

† 'பான்மையேய்' என்றும் பாடம்.

முடியாததென்னெனக்கேலினி? முழுவேழுலகும்உண்டான் * உகந்துவந்து
அடியேனுள்புகுந்தான் அகல்வானுமல்லன்இனி * [வந்து
செடியார்நோய்களெல்லாம்துரந்து எமர்கீழ்மேலெழுபிறப்பும் *
விடியாவெந்நரகத்து என்றும்சேர்தல்மாறினரே. (௭)

மாறிமாறிப்பலபிறப்பும்பிறந்து அடியையடைந்துஉள்ளம்தேறி *
ஈறிலின்பத்திருவெள்ளம் யான்மூழ்கினன் *
பாறிப்பாறிஅசுரர்தம் பல்குழாங்கள்நீறெழ * பாய்பறவையொன்று
ஏறிவீற்றிருந்தாய்! உன்னைஎன்னுள்நீக்கேல்எந்தாய்! (௮)

எந்தாய்! தண்திருவேங்கடத்துள்நின்றாய்! இலங்கைசெற்றாய்! *மராமரம்
பைந்தாளேழுருவ ஒருவாளிகோத்தவில்லா! * [மரம்
கொந்தார்தண்ணந்துழாயினாய்! அமுதே! உன்னைஎன்னுள்ளேகுழைத்தஎம்
மைந்தா! * வானேறே! இனிஎங்குப்போகின்றதே? [ழைத்தஎம்

போகின்றகாலங்கள்போயகாலங்கள் போகுகாலங்கள் * தாய்தந்தையுயிராகின்றாய்
ராகின்றாய்! உன்னைநான்அடைந்தேன்விடுவேனோ? * [யுயி
பாகின்றதொல்புகழ்மூவுலகுக்கும் நாதனே? பரமா! * தண்வேங்கடம்
மேகின்றாய்! தண்துழாய்விரைநாறுகண்ணியனே! (௧௦)

௸ கண்ணித்தண்ணந்துழாய்முடிக் கமலத்தடம்பெருங்கண்ணனை *
நண்ணித்தென் குருகூர்ச்சடகோபன் மாறன்சொன்ன * [புகழ்
எண்ணில்சோர்விலந்தாதிஆயிரத்துள் இவையும் ஒபத்திசையொடும் *
பண்ணின்பாடவல்லாரவர் கேசவன்தமரே. (௧௧)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

வைகுந்தன்வந்து கலந்ததற்பின் வாழ்மாறன் *
செய்கின்றநைச்சியத்தைச் சிந்தித்து *—நைகின்ற
தன்மைதனைக்கண்டு உன்னைத்தான்விடேனென்றுரைக்க *
வன்மையடைந்தான் கேசவன். (௧௬)

சீயர் திருவடிகளே சரணம்

---

## ௭ - ஆந் திருவாய்மொழி—கேசவன்தமர்.

---

[எம்பெருமானது திருவருளால் தமது ஏழேழு தலைமுறையோரும் பெருமைபெற்றா ரெனல்.]

கலிநிலைத்துறை

பண் - தக்கராகம், தாளம்-ஏழொத்து. கல்யாணிராகம்-ரூபகதாளம்

௸ கேசவன்தமர் கீழ்மேலெமரேழெழுபிறப்பும் *
மாசதிரிதுபெற்று நம்முடைவாழ்வுவாய்க்கின்றவா! *
ஈசன்என்கருமாணிக்கம் என்செங்கோலக்கண்ணன்விண்ணோர்
நாயகன் * எம்பிரான்எம்மான் நாராயணனாலே. (௧)

நாரணன்முழுவேழுலகுக்கும்நாதன் வேதமயன் *
காரணம்கிரிசைகருமமிவை முதல்வன்எந்தை *
சீரணங்கமரர்பிறர்பலரும் தொழுதேதநின்று *
வாரணத்தைமருப்பொசித்தபிரான் என்மாதவனே. (உ)

மாதவனென்றதேகொண்டு என்னையினிஇப்பால்பட்டது *
யாதவங்களும்சேர்கொடேனென்று என்னுளபுகுந்திருந்து *
தீதவங்கெடுக்கும்அமுதம் செந்தாமரைககண்குன்றம் *
கோதவமிலென்கன்னற்கட்டி எமமான்என்கோவிந்தனே. (௩)

கோவிந்தன்குடக்கூத்தன் கோவலனென்றென்றேகுனித்து *
தேவும்தன்னையும் பாடியாடததிருத்தி* என்னைக்கொண்டுஎன்
பாவந்தன்னையும்பாறக்கைத்து எமரேழேழுபிறப்பும் *
மேவும்தன்மையமாக்கினான் வல்லன்எம்பிரான்விட்டுவே. (௪)

விட்டிலங்குசெஞ்சோதித் தாமரைபாதம்கைகள்கண்கள் *
விட்டிலங்குகருஞ்சுடர் மலையேதிருவுடம்பு *
விட்டிலங்குமதியம்சீர்சங்கு சக்கரம்பரிதி *
விட்டிலங்குமுடியம்மான் மதுசூதனன்தனக்கே. (௫)

மதுசூதனையன்றிமற்றிலேனென்று எத்தாலும்கருமமின்றி *
துதிசூழ்ந்தபாடல்கள் பாடியாடநின்றுஊழியூழிதொறும் *
எதிர்சூழலபுக்குஎனைத்தோர்பிறபபும எனக்கேஅருள்கள்செய்ய *
விதிசூழ்ந்ததால்எனக்கேல்அமமான் திரிவிக்கிரமனையே. (௬)

திரிவிக்கிரமன்செந்தாமரைக்கண்எமமான் என்செங்கனிவாய் *
உருவிற்பொலிந்தவெள்ளைப்பளிங்கு நிறத்தனனென்றென்று * உள்
பரவிப்பணிந்து பல்லூழியூழிநின்பாதபங்கயமே * [ளிப்
மருவித்தொழும்மனமேதந்தாய் வல்லைகாண்என்வாமனனே! (எ)

வாமனன்! என்மரதகவண்ணன்! தாமரைக்கண்ணினன்!
காமனைப்பயந்தாய்! * என்றென்று உன்கழல்பாடியேபணிந்து *
தூமனத்தனனாய்ப் பிறவித்துழதிநீங்க * என்னைத
தீமனம்கெடுத்தாய் உனக்குஎன்செய்கேன்? என்சிரீதரனே! (அ)

சிரீஇதரன்செய்யதாமரைக்கண்ணன் என்றென்றுஇராப்பகல்வாய்
வெரீஇ * அலமந்துகண்கள்நீர்மல்கி வெவ்வுயிர்த்துயிர்தது *
மரீஇயதீவினைமாளஇன்பம்வளர வைகல்வைகல்
இரீஇ * உன்னைஎன்னுள்வைத்தனை என்இருடீகேசனே! (௯)

இருடீகேசன்எம்பிரான் இலங்கையரக்கர்குலம *
முருடுதீர்த்தபிரான்எம்மான் அமரர்பெம்மானென்றென்று *
தெருடியாகில்நெஞ்சே! வணங்கு திண்ணம்அறிஅறிந்து *
மருடியேலும்விடேல்கண்டாய் நம்பிபற்பநாபனையே. (௧௦)

பற்பநாபன் உயர்வறவுயரும்பெருந்திறலோன் *
எற்பரன்என்னையாக்கிக்கொண்டு எனக்கேதன்னைத்தந்த
கற்பகம் * என்அமுதம்கார்முகில்போலும் வேங்கடநல்
வெற்பன் * விசும்போர்பிரான் எந்தைதாமோதரனே. (௧௧)

தாமோதரனைத்தனிமுதல்வனை ஞாலமுண்டவனை *
ஆமோதரமறிய ஒருவர்க்கென்றேதொழுமவர்கள் *
தாமோதரனுருவாகிய சிவற்கும்திசைமுகற்கும் *
ஆமோதரமறிய? எம்மானை என்னாழிவண்ணனையே. (௧௨)

வண்ணமாமணிச்சோதியை அமரர்தலைமகனை *
கண்ணனைநெடுமாலைத் தென்குருகூர்ச்சடகோபன் *
பண்ணியதமிழ்மாலை ஆயிரத்துள்இவைபன்னிரண்டும *
பண்ணிற்பன்னிருநாமபபாட்டு அண்ணல்தாள்அணைவிக்குமே. (௧௩)

ஆழ்வார் திருவடிகளே சரணம்

---

கேசவனுல்எந்தமர்கள் கீழ்மேலெழுபிறப்பும *
தேசடைந்தார்என்று சிறநதுரைதத *---வீசுபுகழ்
மாறன்மலரடியே மன்னுயிர்க்கெல்லாமஉய்கைககு *
ஆறென்று நெஞ்சே! அணை. (௧௪)

சீயர் திருவடிகளே சரணம்

---

## அ-ஆந் திருவாய்மொழி—அணைவது.

---

[எம்பெருமானது மோக்ஷமளிக்குந் தன்மையை உலகத்தார்க்கு உபதேசித்தல்.]

தாவுகோச்சகக்கலிப்பா

பண் - இந்தளம், தாளம் - ஏழொத்து. ஸௌராஷ்ட்ராகம் - அடதாளம்.

அணைவதுஅரவணைமேல் பூம்பாவையாகம்
புணர்வது * இருவரவர்முதலும் தானே *
இணைவனும்எப்பொருட்கும், வீடுமுதலாம் *
புணைவன் பிறவிக்கடல்நீந்துவார்க்கே. (௧)

நீந்தும்துயர்ப்பிறவி உட்படமற்றெவ்வெவையும் *
நீந்தும்துயரில்லா வீடுமுதலாம் *
பூந்தண்புனல்பொய்கை யானையிடர்கடிந்த *
பூந்தண்துழாய் என்தனிநாயகன்புணர்ப்பே. (௨)

புணர்க்கும்அயனும் அழிக்கும்அரனும் *
புணர்த்ததன்னுந்தியோடு ஆகத்துமன்னி *
புணர்த்ததிருவாகித் தன்மார்வில்தான்சேர் *
புணர்ப்பன்பெரும்புணர்ப்பு எங்கும்புலனே. (௩)

புலனைந்துமேயும் பொறியைந்தும்நீங்கி *
நலமந்தமில்லது ஓர்நாடுபுகுவீர் *
அலமந்துவீய † அசுரரைச்செற்றான் *
பலமுந்துசீரில் படிமின்ஓவாதே. (௪)

ஓவாத்துயர்ப்பிறவி உட்படமற்றெவ்வெவையும் *
மூவாத்தனிமுதலாய் மூவுலகும்காவலோன் *
மாவாகிஆமையாய் மீனாகிமானிடமாம் *
தேவாதிதேவபெருமான் என்தீர்த்தனே. (௫)

தீர்த்தனுலகளந்த சேவடிமேல்பூந்தாமம் *
சேர்த்திஅவையே சிவன்முடிமேல்தான்கண்டு *
பார்த்தன்தெளிந்தொழிந்த பைந்துழாயான்பெருமை *
பேர்த்தும்ஒருவரால் பேசக்கிடந்ததே? (௬)

கிடந்திருந்துநின்றளந்து கேழலாய்க்கீழ்ப்புக்கு
இடந்திடும் * தன்னுள்கரக்கும் உமிழும் *
தடம்பெருந்தோளாரத்தழுவும் பாரென்னும்
மடந்தையை * மால்செய்கின்றமால் ஆர்காண்பாரே? (௭)

காண்பாரார்? எம்மீசன் கண்ணனைஎன்காணுமாறு? *
ஊண்பேசில் எல்லாவுலகும்ஓர்துற்றாற்றா *
சேண்பாலவீடோ உயிரோமற்றெப்பொருட்கும *
ஏண்பாலும்சோரான் பரந்துளனும்எங்குமே. (௮)

எங்குமுளன்கண்ணனென்ற மகனைக்காய்ந்து *
இங்கில்லையாலென்று இரணியன்தூண்புடைப்ப *
அங்குஅப்பொழுதே அவன்வீயத்தோன்றிய * என்
சிங்கப்பிரான்பெருமை ஆராயும்சீர்மைத்தே? (௯)

சீர்மைகொள்வீடு சுவர்க்கம்நரகீறா *
ஈர்மைகொள்தேவர்நடுவா மற்றெப்பொருட்கும் *
வேர்முதலாய்வித்தாய்ப் பரந்துதனிநின்ற *
கார்முகில்போல்வண்ணன் என்கண்ணனைநான்கண்டேனே. (௧௦)

† 'அசுரைச்செற்றான்' என்பது சிலா பாடம்.

ஓ கண்தலங்கள்செய்ய கருமேனியம்மானை *
வண்டலம்பும்சோலை வழுதிவளநாடன் *
பண்தலையில்சொன்னதமிழ் ஆயிரத்துஇப்பத்தும்வல்லார் *
விண்தலையில்வீற்றிருந்தாள்வர் எம்மாவீடே. (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்

---

அணைந்தவர்கள்தம்முடனே ஆயனருட்காளாம் *
குணந்தனையேகொண்டு உலகைக்கூட்ட *—இணங்கிமிக
மாசிலுபதேசம்செய் மாறன்மலரடியே *
வீசுபுகழ் எம்மாவீடு. (கஅ)

சீயர் திருவடிகளே சரணம்.

---

## ௯-ஆந் திருவாய்மொழி—எம்மாவீடு.

---

[புருஷார்த்த நிஷ்கர்ஷம் பண்ணுதல்.]

கலிவிருத்தம்.

பண் - முதிர்ந்தகுறிஞ்சி, தாளம் - ஏழொத்து. ஆநந்தபைரவிராகம் - ஆதிதாளம்.

ஓ எம்மாவீட்டுத் திறமும்செப்பம் * நின்
செம்மாபாதபற்புத் தலைசேர்த்துஒல்லை *
கைம்மாதுன்பம் கடிந்தபிரானே ! *
அம்மா! அடியேன் வேண்டுவதுஈதே. (க)

† ஈதேயானுன்னைக் கொள்வதுஎஞ்ஞான்றும் * என்
மைதோய்சோதி மணிவண்ணா! எந்தாய்! *
எய்தாநின்கழல் யானெய்த * ஞானக
கைதா காலக்கழிவுசெய்யேலே. (உ)

செய்யேல்தீவினையென்று அருள்செய்யும் * என்
கையார்சக்கரக் கண்ணபிரானே! *
ஐயார் கண்டம்அடைக்கிலும் * நின்கழல்
எய்யாதுஏத்த அருள்செய்எனக்கே. (௩)

எனக்கேயாட்செய் எக்காலத்தும்என்று * என்
மனக்கேவந்து இடைவீடின்றிமன்னி *
தனக்கேயாக எனைக்கொள்ளுமீதே *
எனக்கேகண்ணனை யான்கொள்சிறப்பே. (௪)

---

† 'இதேயான்' என்ற பாடம் செய்யுளிலக்கணத்துக்குச் சேரு மென்பர்.

சிறப்பில்வீடு சுவர்க்கம்நரகம் *
இறப்பிலெய்துக எய்தற்க * யானும்
பிறப்பில் பல்பிறவிப்பெருமானை *
மறப்பொன்றின்றி என்றும்மகிழ்வேனே (ரு)

மகிழ்கொள்தெய்வம் உலோகமலோகம் *
மகிழ்கொள்சோதி மலர்ந்தவம்மானே! *
மகிழ்கொள்சிந்தை சொல்செய்கைகொண்டு * என்றும்
மகிழ்வுற்று உன்னைவணங்கவாராயே. (சு)

வாராய் உன் திருப்பாதமலர்க்கீழ் *
பேராதேயான்வந்து அடையும்படி
தாராதாய் ! * உன்னைஎன்னுள்வைப்பில் என்றும்
ஆராதாய் ! * எனக்குஎன்றும எக்காலே. (எ)

எக்காலத்தெந்தையாய் என்னுள்மன்னில் * மற்று
எக்காலத்திலும் யாதொன்றும்வேண்டேன் *
மிக்கார் வேதவிமலர்விழுங்கும் * என்
அக்காரக்கனியே ! உன்னையானே. (அ)

யானேஎன்னை அறியகிலாதே *
யானேஎன்தனதே என்றிருந்தேன் *
யானேநீ என்னுடைமையும்நீயே *
வானேயேத்தும் † எமவானவரேறே ! (கூ)

ஏறேல்ஏழும்வென்று ஏர்கொளிலங்கையை *
நீறேசெய்த நெடுஞ்சுடர்ச்சோதி ! *
தேறேல்என்னை உன்பொன்னடிச்சேர்த்துஒல்லை *
வேறேபோக எஞ்ஞான்றும்விடலே. (கO)

விடலில் சக்கரத்தண்ணலை * மேவல்
விடலில் வண்குருகூர்ச்சடகோபன்சொல் *
கெடலிலாயிரத்துள் இவைபத்தும் *
கெடலில்வீடுசெய்யும் கிளர்வார்க்கே. (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

எம்மாவீடும்வேண்டா என்தனக்குஉன்தாளிணையே *
அம்மாஅமையுமென ஆய்ந்துரைத்த *—நம்முடைய
வாழ்முதலாம்மாறன் மலர்த்தாளிணைசூடி *
கீழ்மையற்று நெஞ்சே ! கிளர். (கஉ)

சீயர் திருவடிகளே சரணம்.

---

† 'அவ்வானவரேறே' என்று உரைப்பாடம்.

## † ௧௦ - ஆந் திருவாய்மொழி—கிளரொளி.

[கீழ் நிஷ்கர்ஷித்த புருஷார்த்தத்தைப் பெறும்பொருட்டுத் திருமாலிருஞ்சோலைமலையை ஆச்ரயிக்கும்படி பரோபதேசஞ்செய்தல்.]

கலிவிருத்தம்.

பண் - நாட்டம், தாளம் - ஏழொத்து. (கேதாரகௌளராகம் - ஆதிதாளம்

*கிளரொளியிளமை கெடுவதன்முன்னம் **
*வளரொளிமாயோன் மருவியகோயில் **
*வளரிளம்பொழில்சூழ் மாலிருஞ்சோலை **
*தளர்விலராகில் ‡ சார்வதுசதிரே.* (௧)

*சதிரிளமடவார் தாழ்ச்சியைமதியாது **
*அதிர்குரல்சங்கத்து அழகர்தம்கோயில் **
*மதிதவழ்குடுமி மாலிருஞ்சோலை **
*பதியதுஏத்தி எழுவதுபயனே.* (௨)

*பயனல்லசெய்து பயனில்லைநெஞ்சே! **
*புயல்மழைவண்ணர் புரிந்துறைகோயில் **
*மயல்மிகுபொழில்சூழ் மாலிருஞ்சோலை **
*அயல்மலையடைவது அதுகருமமே.* (௩)

*கருமவன்பாசம் கழித்துழன்றுய்யவே **
*பெருமலையெடுத்தான் பீடுறைகோயில் **
*வருமழைதவழும் மாலிருஞ்சோலை **
*திருமலையதுவே அடைவதுதிறமே.* (௪)

*திறமுடைவலத்தால் தீவினைபெருக்காது **
*அறமுயலாழிப் படையவன்கோயில் **
*மறுவில்வண்சுனைசூழ் மாலிருஞ்சோலை **
*புறமலைசாரப் போவதுகிறியே.* (௫)

*கிறியெனநினைமின் கீழ்மைசெய்யாதே **
*உறியமர்வெண்ணெய் உண்டவன்கோயில் **
*மறியொடுபிணைசேர் மாலிருஞ்சோலை **
*நெறிபடஅதுவே நினைவதுநலமே.* (௬)

† இது, கோயில்திருவாய்மொழி. ‡ 'ஆகி' என்பது உரையின் பாடம்.

நலமெனநினைமின் நரகழுந்தாதே *
நிலமுனமிடந்தான் நீடுறைகோயில் *
மலமறுமதிசேர் மாலிருஞ்சோலை +
வலமுறையெய்தி மருவுதல்வலமே. (எ)

வலஞ்செய்துவைகல் வலங்கழியாதே *
வலஞ்செய்யும் ஆயமாயவன்கோயில் *
வலஞ்செய்யும்வானோர் மாலிருஞ்சோலை *
வலஞ்செய்துநாளும் மருவுதல்வழக்கே. (அ)

வழக்கெனநினைமின் வல்வினைமூழ்காது *
அழக்கொடியட்டான் அமர்பெருங்கோயில் *
மழக்களிற்றினம்சேர் மாலிருஞ்சோலை +
தொழக்கருதுவதே துணிவதுசூதே. (௯)

சூதென்று களவும்சூதும்செய்யாதே *
வேதமுன்விரித்தான் விரும்பியகோயில் *
மாதுறுமயில்சேர் மாலிருஞ்சோலை *
போதவிழ்மலையே புகுவதுபொருளே. (க௦)

பொருளென்றுஇவ்வுலகம் படைத்தவன்புகழ்மேல் *
மருளில்வண்குருகூர் வண்சடகோபன் *
தெருள்கொள்ளச்சொன்ன ஓராயிரத்துள்இப்பத்து *
அருளுடையவன்தான் அணைவிக்கும்முடித்தே. (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

கிளரொளிசேர் கீழுரைத்தபேறுகிடைக்க *
வளரொளிமால் சோலைமலைக்கே *— தளர்வறவே
நெஞ்சைவைத்துச்சேருமெனும் நீடுபுகழ்மாறன்தாள் *
முன்செலுத்துவோம் எம்முடி. (உ௦)

சீயர் திருவடிகளே சரணம்

---

## மூன்றாம்பத்து.

கைங்கர்யஸ்வரூபம் - பாகவதசேஷத்வ பர்யந்தமான பகவத் கைங்கர்ய மேன்னுதல்.

## க - ஆந் திருவாய்மொழி—முடிச்சோதி.

[திருமாலிருஞ்சோலைஅழகரது திவ்யஸௌந்தர்யத்தை அனுபவித்தல்.]

தரவுகொச்சகக்கலிப்பா

பண்-இந்தளம், தாளம் - நடையொத்து  குண்டக்கிரியைராகம் - ரூபக தாளம்.

முடிச்சோதியாய் உனதுமுகச்சோதிமலர்ந்ததுவோ? *
அடிச்சோதிநீநின்ற தாமரையாய்அலர்ந்ததுவோ? *
படிச்சோதியாடையொடும் பல்கலனாய் * நின்பைம்பொன்
கடிச்சோதிகலந்ததுவோ? திருமாலே! கட்டுரையே. (க)

கட்டுரைக்கில்தாமரை நின்கண்பாதம்கையொவ்வா *
சுட்டுரைத்தநன்பொன் உன்திருமேனியொளியொவ்வாது *
ஒட்டுரைத்துஇவ்வுலகுஉன்னைப் புகழ்வெல்லாம்பெரும்பாலும் *
பட்டுரையாய்ப்புற்கென்றே காட்டுமால்பரஞ்சோதீ! (௨)

பரஞ்சோதிநீபரமாய் நின்னிகழ்ந்துபின் * மற்றோர்
பரஞ்சோதியின்மையின் படியோவிநிகழ்கின்ற *
பரஞ்சோதிநின்னுள்ளே படருலகம்படைத்த * எம்
பரஞ்சோதி! கோவிந்தா! பண்புரைக்கமாட்டேனே. (௩)

மாட்டாதேயாகிலும் இம்மலர்தலைமாஞாலம் * நின்
மாட்டாயமலர்புரையும் திருவுருவம்மனம்வைக்க *
மாட்டாதபலசமய மதிகொடுத்தாய் * மலர்த்துழாய்
மாட்டேநீமனம் † வைத்தாய் மாஞாலம்வருந்தாதே? (௪)

வருந்தாதஅருந்தவத்த மலர்கதிரின்சுடருடம்பாய் *
வருந்தாதஞானமாய் வரம்பின்றிமுழுதியன்றாய்! *
வருங்காலம்நிகழ்காலம் கழிகாலமாய் * உலகை
ஒருங்காகஅளிப்பாய்! சீர் எங்குஉலக்கஓதுவனே? (௫)

ஓதுவாரோத்தெல்லாம் எவ்வுலகத்துஎவ்வெவையும் *
சாதுவாய்நின்புகழின் தகையல்லால்பிறிதில்லை *
போதுவாழ்புனந்துழாய் முடியினாய்! * பூவின்மேல்
மாதுவாழ்மார்பினாய்! என்சொல்லியான்வாழ்த்துவனே? (௬)

† 'வைத்தால்' என்று உரையின்பாடம்.

வாழ்த்துவார்பலராக நின்னுள்ளேநான்முகனை *
மூழ்த்தநீருலகெல்லாம் படையென்றுமுதல்படைத்தாய் ! *
கேழ்த்தசீர்அரன்முதலாக் கிளர்தெய்வமாய்க்கிளர்ந்து *
சூழ்த்தமரர்துதித்தால் உன்தொல்புகழ்மாசூணாதே ? (௭)

மாசூணாச்சுடருடம்பாய் மலராதுகுவியாது *
மாசூணாஞானமாய் முழுதுமாய்முழுதியன்றாய் ! *
மாசூணாவான்கோலத்து அமரர்கோன்வழிப்பட்டால *
மாசூணாஉனபாதம் மலர்ச்சோதிமழுங்காதே ? (௮)

மழுங்காதவைந்நுதிய சக்கரநல்வலத்தையாய் *
தொழுங்காதல்களிறளிப்பான் புள்ளூர்ந்துதோன்றினையே *
மழுங்காதஞானமே படையாக * மலருலகில்
தொழும்பாயார்க்குஅளித்தால் உன்சுடர்ச்சோதிமறையாதே ? (௯)

மறையாயநால்வேதத்துள்நின்ற மலர்ச்சுடரே ! *
முறையால்இவ்வுலகெல்லாம் படைத்திடந்துண்டுமிழ்ந்தளந்தாய் ! *
பிறைபேறுசடையானும் நான்முகனும்இந்திரனும் *
இறையாதல்அறிந்தேத்த வீற்றிருத்தல்இதுவியப்பே ? (௰)

வியப்பாயவியப்பில்லா மெய்ஞ்ஞானவேதியனை *
சயப்புகழார்பலர்வாழும் தடங்குருகூர்ச்சடகோபன் *
துயக்கின்றித்தொழுதுரைத்த ஆயிரத்துள்இப்பத்தும் *
உயக்கொண்டுபிறப்பறுக்கும் ஒலிமுந்நீர்ஞாலத்தே. (௧௧)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

முடியார்திருமலையில் மூண்டுநின்றமாறன் *
அடிவாரந்தன்னில் அழகா—வடிவழகைப்
பற்றி * முடியும்அடியும படிகலனும *
முற்றும அனுபவித்தான்முன். (௨௧)

சீயர் திருவடிகளே சரணம்.

---

## உ - ஆந் திருவாய்மொழி--முந்நீர்ஞாலம்.

---

[ஆழ்வார் அழகரைப் பூர்ணாநுபவம் பண்ண முடியாமல் வருந்த, எம்பெருமான் இவரது கலக்கத்தைத் தீர்த்தல்.]

கலிவிருத்தம்.

பண் - சீகாமரம், தாளம் - ஏழொத்து. பூகாரிராகம் - அடதாளம்.

முந்நீர்ஞாலம்படைத்த எம்முகில்வண்ணனே ! *
அந்நாள்நீதந்த ஆக்கையின்வழிஉழல்வேன் *
வெந்நாள்நோய்வீய வினைகளைவேரறப்பாய்ந்து *
எந்நாள்யான்உன்னை இனிவந்துகூடுவனே ? (௧)

வன்மாவையமளந்த எம்வாமனா! * நின்
பன்மாமாயப் பல்பிறவியில்படிகின்றயான் *
தொன்மாவல்வினைத் தொடர்களைமுதலரிந்து *
நின்மாதாள்சேர்ந்து நிற்பதுஎஞ்ஞான்றுகொலோ? (உ)

கொல்லாமாக்கோல் கொலைசெய்து, பாரதப்போர் *
எல்லாச்சேனையும் இருநிலத்துஅவித்தஎந்தாய்! *
பொல்லாவாக்கையின் புணர்வினையறுக்கலறா *
சொல்லாய்யான்உன்னைச் சார்வதோர்சூழ்ச்சியே. (ங)

சூழ்ச்சிஞானச் சுடரொளியாகி * என்றும்
ஏழ்ச்சிக்கேடின்றி எங்கணும்நிறைந்தஎந்தாய்! *
தாழ்ச்சிமற்றெங்கும்தவிர்ந்து நின்தாளிணைக்கீழ்
வாழ்ச்சி * யான்சேரும்வகை அருளாய்வந்தே. (ச)

வந்தாய்போலே வந்தும்என்மனத்தினைநீ *
சிந்தாமல்செய்யாய் இதுவேஇதுவாகில் *
கொந்தார்காயாவின் கொழுமலர்த்திருநிறத்த
எந்தாய்! * யான்உன்னை எங்குவந்தணுகிற்பனே? (ரு)

கிற்பன்கில்லேனென்றிலன் முனநாளால் *
அற்பசாரங்களவை சுவைத்தகன்றொழிந்தேன் *
பற்பல்லாயிரம் உயிர்செய்தபரமா! * நின்
நற்பொற்சோதித்தாள் நணுகுவதுஎஞ்ஞான்றே? (சு)

எஞ்ஞான்றுநாம் இருந்திருந்துஇரங்கிநெஞ்சே! *
மெய்ஞ்ஞானமின்றி வினையியல்பிறப்பழுந்தி *
எஞ்ஞான்றும்எங்கும் ஒழிவறநிறைந்துநின்ற *
மெய்ஞ்ஞானச்சோதிக் கண்ணனைமேவுதுமே. (எ)

மேவுதுன்பவினைகளை விடுத்துமிலேன் *
ஓவுதலின்றி உன்கழல்வணங்கிற்றிலேன் *
பாவுதொல்சீர்க்கண்ணா! என்பரஞ்சுடரே! *
கூவுகின்றேன்காண்பான் எங்கெய்தக்கூவுவனே? (அ)

கூவிக்கூவிக் கொடுவினைத்தூற்றுள்நின்று *
பாவியேன்பலகாலம் வழிதிகைத்துஅலமர்கின்றேன் *
மேவியன்றுஆநிரைகாத்தவன் உலகமெல்லாம் *
தாவியஅம்மானை எங்குஇனித்தலைப்பெய்வனே? (கூ)

தலைப்பெய்காலம் நமன்தமர்பாசம்விட்டால் *
அலைப்பூணுண்ணும் அவ்வல்லலெல்லாம்அகல *
கலைப்பல்ஞானத்து என்கண்ணனைக்கண்டுகொண்டு *
நிலைப்பெற்றுஎன்னெஞ்சம்பெற்றது நீடுயிரே. (கO)

உயிர்களெல்லா வுலகமுமுடையவனை *
குயில்கொள்சோலைத் தென்குருகூர்ச்சடகோபன் *
செயிரில்சொல்லிசைமாலை ஆயிரத்துள்இப்பத்தும் *
உயிரின்மேலாக்கை ஊனிடையொழிவிக்குமே. (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்

முன்னமழகரெழில்மூழ்கும் குருகையர்கோன் *
இன்னவளவென்ன எனக்கரிதாய்த—தென்ன *
கரணக்குறையின் கலக்கததைத * கண்ணன்
ஒருமைப்படுத்தான் ஒழித்து. (உஉ)

சீயர் திருவடிகளே சரணம்.

## † ௩ - ஆந் திருவாய்மொழி—ஒழிவில்காலம்.

[திருவேங்கடமுடையான்திருவடிகளில் நிரந்தரகைங்கர்யம் செய்யப் பாரித்தல்.]

கலிவிருத்தம்

பண் - பழந்தக்கராகம், தாளம் - எழொத்து. ஸௌராஷ்ட்ரராகம்- அடதாளம்

ஒழிவில்காலமெல்லாம் உடனாய்மன்னி *
வழுவிலா அடிமைசெய்யவேண்டும்நாம *
தெழிகுரலருவித் திருவேஙகடத்து *
எழில்கொள்சோதி எந்தைதநதைதந்தைக்கே. (க)

எந்தைதந்தைதந்தை தந்தைதந்தைக்கும்
முந்தை * வானவர் வானவர்கோனொடும் *
சிந்துபூமகிழும் திருவேங்கடத்து *
அந்தமில்புகழ்க் காரெழிலண்ணலே. (உ)

அண்ணல்மாயன் அணிகொளசெந்தாமரைக
கண்ணன் * செங்கனிவாய்க் கருமாணிக்கம் *
‡ தெண்ணிறைச்சுனைநீர்த் திருவேங்கடத்து *
எண்ணில்தொல்புகழ் வானவரீசனே. (௩)

† இது, கோயிலதிருவாய்மொழி. ‡ 'தெண்ணிறச்சுனை' என்பதும் பாடம்.

ஈசன்வானவர்க்கென்பன் என்றால் * அது
தேசமோ திருவேங்கடத்தானுக்கு? *
நீசனேன் நிறைவொன்றுமிலேன் * என்கண்
பாசம்வைத்த பரஞ்சுடர்ச்சோதிக்கே. (ச)

சோதியாகி எல்லாவுலகும்தொழும் *
ஆதிமூர்த்தியென்றால் அளவாகுமோ? *
வேதியர் முழுவேதத்தமுதத்தை *
தீதில்சீர்த் திருவேங்கடத்தானையே. (ரு)

வேங்கடங்கள் மெய்ம்மேல்வினைமுற்றவும் *
தாங்கள்தங்கட்கு நல்லனவேசெய்வார் *
வேங்கடத்துறைவார்க்கு நமவென்ன
லாம்கடமை * அதுசுமந்தார்கட்கே. (சு)

சுமந்துமாமலர் நீர்சுடர் தூபம்கொண்டு *
அமர்ந்துவானவர் வானவர்கோனொடும் *
நமன்றெழும் திருவேங்கடம்நங்கட்கு *
சமன்கொள்வீடுதரும் தடங்குன்றமே. (எ)

குன்றமேந்திக் குளிர்மழைகாத்தவன் *
அன்றுஞாலம் அளந்தபிரான் * பரன்
சென்றுசேர் திருவேங்கடமாமலை *
ஒன்றுமேதொழ நம்வினைஓயுமே. (அ)

ஓயுமமூப்புப் பிறப்புஇறப்புபிணி *
வீயுமாறுசெய்வான் திருவேங்கடத்து
ஆயன் * நாளமலராம் அடித்தாமரை *
வாயுள்ளும்மனத்துள்ளும வைப்பார்கட்கே. (கூ)

வைத்தநாள்வரை எல்லைகுறுகிச்சென்று *
எய்த்திளைப்பதன்முன்னம அடைமின்ளு *
பைத்தபாம்பணையான் திருவேங்கடம் *
மொய்த்தசோலை மொய்பூந்தடம்தாழ்வரே. (கO)

தாள்பரப்பி மண்தாவியஈசனை *
நீள்பொழில் குருகூர்ச்சடகோபன்சொல் *
கேழிலாயிரத்து இப்பத்தும்வல்லவர் *
வாழ்வர்வாழ்வெய்தி ஞாலம்புகழவே. (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்

ஒழிவிலாக்காலம் உடனாகிமன்னி *
வழுவிலா ஆட்செய்ய மாலுக்கு *—எழுசிகர
வேங்கடத்துப்பாரித்த மிக்கநலம்சேர்மாறன் *
பூங்கழலை நெஞ்சே! புகழ். (உ௩)

சீயர் திருவடிகளே சரணம்.

## ௪ - ஆந் திருவாய்மொழி—புகழுநல்லொருவன்

[எம்பெருமானது ஸர்வாத்மபாவத்தைப்பேசி அடிமைசெய்தல்.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பண் - நாட்டம், தாளம் - ஒன்பதொத்து. யழநாகல்யாணிராகம் - ரூபகதாளம்.

புகழும்நல்ஒருவனென்கோ? பொருவில்சீர்ப்பூமியென்கோ? *
திகழும்தண்பரவையென்கோ? தீயென்கோ? வாயுவென்கோ? *
நிகழும்ஆகாசமென்கோ? நீள்சுடரிரண்டுமென்கோ? *
இகழ்வில்இவ்வனைத்துமென்கோ? கண்ணனைக்கூவுமாறே. (க)

கூவுமாறறியமாட்டேன் குன்றங்களனைத்துமென்கோ? *
மேவுசீர்மாரியென்கோ? விளங்குதாரகைகளென்கோ? *
நாவியல்கலைகளென்கோ? ஞானநல்லாவியென்கோ? *
பாவுசீர்க்கண்ணன்எம்மான் பங்கயக்கண்ணனையே. (உ)

பங்கயக்கண்ணனென்கோ? பவளச்செவ்வாயனென்கோ? *
அங்கதிரடியனென்கோ? அஞ்சனவண்ணனென்கோ? *
செங்கதிர்முடியனென்கோ? திருமறுமார்வனென்கோ? *
சங்குசக்கரத்தனென்கோ? சாதிமாணிக்கத்தையே. (௩)

சாதிமாணிக்கமென்கோ? சவிகொள்பொன்முத்தமென்கோ? *
சாதிநல்வயிரமென்கோ? தவிவில்சீர்விளக்கமென்கோ? *
ஆதியஞ்சோதியென்கோ? ஆதியம்புருடனென்கோ? *
ஆதுமில்காலத்தெந்தை அச்சுதன்அமலனையே. (௪)

அச்சுதனமலனென்கோ? அடியவர்வினைகெடுக்கும் *
நச்சுமாமருந்தமென்கோ? நலங்கடலமுதமென்கோ? *
அச்சுவைக்கட்டியென்கோ? அறுசுவையடிசிலென்கோ? *
நெய்ச்சுவைத்தேறலென்கோ? கனியென்கோ? பாலென்கேனோ? (ரு)

பாலென்கோ? நான்குவேதபயனென்கோ? * சமயநீதி
நூலென்கோ? நுடங்குகேள்வியிசையென்கோ? * இவற்றுள்நல்ல
மேலென்கோ? வினையின்மிக்கபயனென்கோ? * கண்ணனென்கோ?
மாலென்கோ? மாயனென்கோ? வானவராதியையே. (௬)

வானவராதியென்கோ? வானவர்தெய்வமென்கோ? *
வானவர்போகமென்கோ? வானவர்முற்றுமென்கோ? *
ஊனமில்செல்வமென்கோ? ஊனமில்சுவர்க்கமென்கோ? *
ஊனமில்மோக்கமென்கோ? ஒளிமணிவண்ணனையே. * (எ)

ஒளிமணிவண்ணனென்கோ? ஒருவனென்றேத்தநின்ற *
நளிர்மதிச்சடையனென்கோ? நான்முகக்கடவுளென்கோ? *
அளிமகிழ்ந்துலகமெல்லாம் படைத்தவையேத்தநின்ற *
களிமலர்த்துளவனெம்மான் கண்ணனைமாயனையே. (அ)

கண்ணனைமாயன்தன்னைக் கடல்கடைந்தமுதங்கொண்ட *
அண்ணலைஅச்சுதனை அனந்தனைஅனந்தன்தன்மேல் *
நண்ணிநன்குறைகின்றானை ஞாலமுண்டுமிழ்ந்தமாலை *
எண்ணுமாறு அறியமாட்டேன் யாவையும்யவரும்தானே. (கூ)

யாவையும்யவரும்தானாய் அவரவர்சமயந்தோறும் *
தோய்விலன்புலனைந்துக்கும் சொலப்படான்உணர்வின்மூர்த்தி *
ஆவிசேருயிரினுள்ளால் ஆதுமோர்பற்றிலாத *
பாவனையதனைக்கூடில் அவனையும்கூடலாமே. (க0)

கூடிவண்டறையும்தண்தார்க் கொண்டல்போல்வண்ணன்தன்னை *
மாடலர்பொழில்குருகூர் வண்சடகோபன்சொன்ன *
பாடலோராயிரத்துள் † இவையுமொருபத்தும்வல்லார் *
வீடிலபோகமெய்தி விரும்புவர்அமரர்மொய்த்தே. (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

புகழொன்றுமால் எப்பொருள்களும்தானாய் *
நிகழ்கின்ற நேர்காட்டிநிற்க *—மகிழ்மாறன் *
எங்கும்அடிமைசெய்யஇச்சித்து வாசிகமாய் *
அங்கடிமைசெய்தான் மொய்ம்பால். (உச)

சீயர் திருவடிகளே சரணம்.

---

† 'இவையொருபத்தும்' என்ற பாடம் பொருந்தும்.

## ரு - ஆந் திருவாய்மொழி—மொய்ம்மாம்.

[பகவத்கைங்கர்யம் பண்ணுகிற பேரைக் கொண்டாடியும், அல்லாதாரை நிந்தித்தும் அருளிச்செய்தல்.]

**அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.**

**பண் - சீகாமரம் : தாளம் - இடையொத்து. நாதநாமக்கிரியை ராகம் - அடதாளம்.**

ஸ்ரீ மொய்ம்மாம்பூம்பொழில்பொய்கை முதலைச்சிறைப்பட்டுநின்ற *
கைம்மாவுக்குஅருள்செய்த கார்முகில்போல்வண்ணன்கண்ணன் *
எம்மானைச்சொல்லிப்பாடி எழுந்தும்பறந்தும்துள்ளாதார் *
தம்மால்கருமமென் ? சொல்லீர் தண்கடல்வட்டத்துள்ளீரே ! (க)

தண்கடல்வட்டத்துள்ளாரைத் தமக்கிரையாத்தடிந்துண்ணும் *
திண்கழற்காலசுரர்க்குத் தீங்கிழைக்கும்திருமாலை *
பண்கள்தலைக்கொள்ளப்பாடிப் பறந்தும்குனித்துழலாதார் *
மண்கொளுலகில்பிறப்பார் வல்வினைமோதமலைந்தே. (உ)

மலையையெடுத்துக்கல்மாரிகாத்துப் பசுநிரைதன்னை *
தொலைவுதவிர்த்தபிரானைச் சொல்லிச்சொல்லிநின்றெப்போதும் *
தலையினோடாதனந்தட்டத் தடுகுட்டமாய்ப்பறவாதார் *
அலைகொள்நரகத்தழுந்திக் கிடந்துழைக்கின்றவம்பரே. (ங)

வம்பவிழ்கோதைபொருட்டா மால்விடையேழும்அடர்த்த *
செம்பவளத்திரள்வாயன் சிரீதரன்தொல்புகழ்பாடி *
கும்பிடுநட்டமிட்டாடிக் கோகுகட்டுண்டுழலாதார் *
தம்பிறப்பால்பயனென்னே ? சாதுசனங்களிடையே. (ச)

சாதுசனத்தைநலியும் கஞ்சனைச்சாதிப்பதற்கு *
ஆதியஞ்சோதியுருவை அங்குவைத்துஇங்குப்பிறந்த *
வேதமுதல்வனைப்பாடி வீதிகள்தோறும்துள்ளாதார் *
ஓதியுணர்ந்தவர்முன்னா என்சவிப்பார்மனிசரே ? (ரு)

மனிசரும்மற்றும்முற்றுமாய் மாயப்பிறவிபிறந்த *
தனியன்பிறப்பிலிதன்னைத் தடங்கடல்சேர்ந்தபிரானை *
கனியைக்கரும்பினின்சாற்றைக் கட்டியைத்தேனைஅமுதை *
முனிவின்றியேத்திக்குனிப்பார் முழுதுணர்நீர்மையினாரே. (சு)

நீர்மையில்நூற்றுவர்வீய ஐவர்க்குஅருள்செய்துநின்று *
பார்மல்குசேனைஅவித்த பரஞ்சுடரைநினைந்தாடி *
நீர்மல்குகண்ணினராகி நெஞ்சம்குழைந்துநையாதே *
ஊன்மல்கிமோடுபருப்பார் உத்தமர்கட்குஎன்செய்வாரே? (எ)

வார்புனலந்தணருவி வடதிருவேங்கடத்தெந்தை *
பேர்பலசொல்லிப்பிதற்றிப் பித்தரென்றேபிறர்கூற *
ஊர்பலபுக்கும்புகாதும் உலோகர்சிரிக்கநின்றாடி *
ஆர்வம்பெருகிக்குனிப்பார் அமரர்தொழப்படுவாரே. (௮)

அமரர்தொழப்படுவானை அனைத்துலகுக்கும்பிரானை *
அமரமனத்தினுள்யோகுபுணர்ந்து அவன்தன்னோடொன்றாக *
அமரத்துணியவல்லார்களொழிய அல்லாதவரெல்லாம் *
அமரநினைந்தெழுந்தாடி அலற்றுவதேகருமமே. (௯)

கருமமும்கருமபலனுமாகிய காரணன்தன்னை *
திருமணிவண்ணனைச்செங்கண்மாலினைத் தேவபிரானை *
ஒருமைமனத்தினுள்வைத்து உள்ளங்குழைந்தெழுந்தாடி *
பெருமையும்நாணும்தவிர்ந்து பிதற்றுமின்பேதைமைதீர்ந்தே. (௧௦)

தீர்ந்தஅடியவர்தம்மைத் திருத்திப்பணிகொள்ளவல்ல *
ஆர்ந்தபுகழச்சுதனை அமரர்பிரானையெம்மானை *
வாய்ந்தவளவயல்சூழ் தண்வளங்குருகூர்ச்சடகோபன் *
நேர்ந்தவோராயிரத்துஇப்பத்து அருவினைநீறுசெய்யுமே. (௧௧)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

மொய்ம்பாரும்மாலுக்கு முன்னடிமைசெய்துஉவப்பால் *
அன்பால்ஆட்செய்பவரை யாதரித்தும் *— அன்பிலா
மூடரைநிந்தித்தும் மொழிந்தருளும்மாறன்பால் *
தேடரியபத்திநெஞ்சே ! செய். (௨௫)

சீயர் திருவடிகளே சரணம்.

---

## ௩ - ஆந் திருவாய்மொழி—செய்யதாமரை.

---

[கைங்கர்யத்துக்குப் பர வ்யூஹ விபவங்களைக்காட்டிலும்
அர்ச்சாவதாரமே ஸுலபவிஷயமென்று அருளிச்செய்தல்.]

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பண் - தக்கராகம், தாளம் - ஏழொத்து. ஸௌராஷ்ட்ரராகம் - ஆதிதாளம்.

செய்யதாமரைக்கண்ணனாய் உலகேழும்உண்டஅவன்கண்டீர் *
வையம்வானம்மனிசர்தெய்வம் மற்றும்மற்றும்மற்றும்முற்றுமாய் *
செய்யசூழ்சுடர்ஞானமாய் வெளிப்பட்டிவைபடைத்தான் * பின்னும்
மொய்கொள்சோதியோடாயினன் ஒருமூவராகியமூர்த்தியே. (௧)

மூவராகியமூர்த்தியை முதல்மூவர்க்கும்முதல்வன்தன்னை *
சாவமுள்ளனநீக்குவானைத் தடங்கடல்கிடந்தான்தன்னை *
தேவதேவனைத் தென்னிலங்கையெரியெழச்செற்றவில்லியை *
பாவநாசனைப் பங்கயத்தடங்கண்ணனைபயரவுமினோ. (உ)

பரவிவானவரேத்தநின்ற பரமனைப்பரஞ்சோதியை *
குரவைகோத்தகுழகனை மணிவண்ணனைகுடக்கூத்தனை *
அரவமேறிஅலைகடலமரும் துயில்கொண்டஅண்ணலை *
இரவும்நன்பகலும்விடாதுஎன்றும்ஏத்துதல் மனம்வைம்மினோ. (௩)

வைம்மின்நும்மனத்தென்று யானுரைக்கின்றமாயவன்சீர்மையை *
எம்மனோர்கள்உரைப்பதென்? அதுநிற்கநாள்தொறும் * வானவர்
தம்மையாளுமவனும் நான்முகனும்சடைமுடியண்ணலும் *
செம்மையால்அவன்பாதபங்கயம் சிந்திதேத்தித்திரிவரே. (௪)

திரியும்காற்றோடுஅகல்விசும்பு திணிந்தமண்கிடந்தகடல் *
எரியும்தீயோடுஇருசுடர்தெய்வம் மற்றும்மற்றுமமுற்றுமாய் *
கரியமேனியன்செய்யதாமரைக்கண்ணன் கண்ணன்விண்ணோரிறை *
சுரியும்பல்கருங்குஞ்சி எங்கள்சுடர்முடியண்ணல்தோற்றமே. (௫)

தோற்றக்கேடவையில்லவனுடையான் அவன்ஒருமூர்த்தியாய் *
சீற்றத்தோடருள்பெற்றவனடிக்கீழ்ப் புகநின்றசெங்கண்மால் *
நாற்றத்தோற்றச்சுவையொலி உறலாகிநின்ற * எம்வானவ
ரேற்றையேயன்றி மற்றொருவரையானிலேன்எழுமைக்குமே. (௬)

எழுமைக்குமெனதாவிக்கு இன்னமுதத்தினை, எனதாருயிர் *
கெழுமியகதிர்ச்சோதியை மணிவண்ணனைக்குடக்கூத்தனை *
விழுமியஅமரர்முனிவர்விழுங்கும் கன்னற்கனியினை *
தொழுமின் தூயமனத்தராய் இறையும்நிலலாதுயரங்களே. (௭)

துயரமேதருதுன்பவின்பவினைகளாய் அவையபலலனாய் *
உயரநின்றதோர்சோதியாய் உலகேழும்உண்டுமிழ்ந்தான்தன்னை *
அயரவாங்குநமன்தமர்க்கு அருநஞ்சினைஅச்சுதன்தன்னை *
தயரதற்குமகன்தன்னையன்றி மற்றிலேன்தஞ்சமாகவே. (௮)

தஞ்சமாகியதந்தைதாயொடு தானுமாய்அவையல்லனாய் *
எஞ்சலில்அமரர்குலமுதல் மூவர்தம்முள்ளுமாதியை *
அஞ்சிநீருலகத்துள்ளீர்கள்! அவனிவனென்றுகூழேன்மின் *
நெஞ்சினால்நினைப்பான்யவன் அவனாகும்நீள்கடல்வண்ணனே. (௯)

கடல்வண்ணன்கண்ணன் விண்ணவர்கருமாணிக்கம்எனதாருயிர் *
படவரவினணைக்கிடந்த பரஞ்சுடர், பண்டுநூற்றுவர் *
அடவரும்படைமங்க ஐவர்கட்காகிவெஞ்சமத்து * அன்றுதேர்
கடவியபெருமான் கனைகழல்காண்பதுஎன்றுகொல்கண்களே? (௧௦)

ஸ்ரீ கண்கள்காண்டற்கரியனாய்க் கருத்துக்குநன்றுமெளியனாய் *
மண்கொள்ஞாலத்துஉயிர்க்கெல்லாம் அருள்செய்யும்வானவரீசனை *
பண்கொள்சோலைவழுதிநாடன் குருகைக்கோன்சடகோபன்சொல் *
பண்கொளாயிரத்துஇப்பத்தால் பத்தராகக்கூடும்†பயிலுமினே. (௧௧)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

செய்யபரத்துவமாய்ச் சீரார்வியூகமாய் *
துய்யவிபவமாய்த் தோன்றிவற்றுள் *— எய்துமவர்க்கு
இந்நிலத்தில் அர்ச்சாவதாரம்எளிதென்றான் *
பன்னுதமிழ்மாறன் பயின்று. (௬௬)

சீயர் திருவடிகளே சரணம்.

---

## ௭ - ஆந் திருவாய்மொழி—பயிலும்.

---

[பாகவதர்களிடத்தில் ஆளானார்க்குத் தாம் சேஷமாயிருத்தலை அருளிச்செய்தல்.]

கலிநிலைத்துறை.

பண் - நாட்டம், தாளம் - ஏழொத்து. ஸஹாநாரர்கம் - அடதாளம்.

ஸ்ரீ பயிலும்சுடரொளிமூர்த்தியைப் பங்கயக்கண்ணனை *
பயிலஇனிய நம்பாற்கடல்சேர்ந்தபரமனை *
பயிலும்திருவுடையார் யவரேலும்அவர்கண்டீர் *
பயிலும்பிறப்பிடைதோறு எம்மையாளும்பரமரே. (௧)

ஆளும்பரமனைக்கண்ணனை ஆழிப்பிரான்தன்னை *
தோளும்ஓர்நான்குடைத் தூமணிவண்ணன்எம்மான்தன்னை *
தாளும்தடக்கையும்கூப்பிப் பணியுமவர்கண்டீர் *
நாளும்பிறப்பிடைதோறு எம்மையாளுடைநாதரே. (௨)

நாதனைஞாலமும்வானமும்ஏத்தும் நறுந்துழாய்ப்
போதனை * பொன்னெடுஞ்சக்கரத்து எந்தைபிரான்தன்னை *
பாதம்பணியவல்லாரைப் பணியுமவர்கண்டீர் *
ஓதும்பிறப்பிடைதோறு எம்மையாளுடையார்களே. (௩)

உடையார்ந்தவாடையன் கண்டிகையன்உடைநாணினன் *
புடையார்பொன்னூலினன் பொன்முடியன், மற்றும்பல்கலன் *
நடையாவுடைத்திருநாரணன் தொண்டர்தொண்டர்கண்டீர் *
இடையார்பிறப்பிடைதோறு எமக்குஎம்பெருமக்களே. (௪)

---

† 'பயின்மினே' என்பதும் பாடம்.

பெருமக்க ளுள்ளவர்தம்பெருமானை * அமரர்கட்கு
அருமையொழிய அன்றுஆரமுதூட்டியஅப்பனை *
பெருமைபிதற்றவல்லாரைப் பிதற்றுமவர்கண்டீர் *
வருமையும்இம்மையும் நம்மையளிக்கும்பிராக்களே. (௫)

அளிக்கும்பரமனைக்கண்ணனை ஆழிப்பிரான்தன்னை *
துளிக்கும்நறுங்கண்ணித் தூமணிவண்ணனெம்மான்தன்னை *
ஒளிக்கொண்டசோதியை உள்ளத்துக்கொள்ளுமவர்கண்டீர் *
சலிப்பின்றியாண்டெம்மைச் சன்மசன்மாந்தரம்காப்பரே. (௬)

சன்மசன்மாந்தரம்காத்து அடியார்களைக்கொண்டுபோய் *
தன்மைபெறுத்தித் தன்தாளிணைக்கீழ்க்கொள்ளும்அப்பனை *
தொன்மைபிதற்றவல்லாரைப் பிதற்றுமவர்கண்டீர் *
நன்மைபெறுத்தெம்மை நாளுய்யக்கொள்கின்றநம்பரே. (௭)

நம்பனைஞாலம்படைத்தவனைத் திருமார்பனை *
உம்பருலகினில்யார்க்கும் உணர்வரியான்தன்னை *
கும்பிநரகர்களேத்துவரேலும் அவர்கண்டீர் *
எம்பல்பிறப்பிடைதோறு எம்தொழுகுலம்தாங்களே. (௮)

குலம்தாங்குசாதிகள் நாலிலும்கீழிழிந்து * எத்தனை
நலந்தானிலாத சண்டாளசண்டாளர்களாகிலும *
வலந்தாங்குசக்கரத்தண்ணல் மணிவண்ணற்காளென்றுஉள்
கலந்தார் * அடியார்தம்அடியார் எம்மடிகளே. (௯)

அடியார்ந்தவையமுண்டு ஆலிலையன்னவசஞ்செய்யும் *
படியாதுமில்குழவிப்படி எந்தைபிரான்தனக்கு *
அடியாரடியார்தம்மடியாரடியார் தமக்
கடியாரடியார்தம் * அடியாரடியோங்களே. (௧௦)

அடியோங்குநூற்றுவர்வீய அன்றுஐவர்க்குஅருள்செய்த
நெடியோனை * தென்குருகூர்ச்சடகோபன் குற்றேவல்கள் *
அடியார்ந்தஆயிரத்துள் இவைபத்துஅவன்தொண்டர்மேல்
முடிவு * ஆரக்கற்கிற்கில் சன்மம்செய்யாமைமுடியுமே. (௧௧)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

பயிலும்திருமால்பதந்தன்னில் * நெஞ்சம
தயலுண்டுநிற்கும் தகியர்க்கு*—இயல்வுடனே
ஆளானார்க்குஆளாகும் மாறனடியதனில் *
ஆளாகார்சன்மம்முடியா. (௨௭)

சீயர் திருவடிகளே சரணம்.

## ௮ - ஆந் திருவாய்மொழி— முடியானே.

[கரணங்களும் தாமும் பெருவிடாயப்பட்டுப் பேசுதல்.]

கலிவிருத்தம்.

பண் - இந்தளம், தாளம் - ஏழொத்து. ஆநந்தபைரவிராகம் - ஆதிதாளம்

ஓ முடியானே ! மூவுலகும்தொழுதேத்தும் சீ
ரடியானே ! * ஆழ்கடலைக்கடைந்தாய் ! புள்ளூர்
கொடியானே ! * கொண்டலவண்ணா ! அண்டத்துஉம்பரில்
நெடியானே ! * என்றுகிடக்கும் என்நெஞ்சமே. (௧)

நெஞ்சமேநீள்நகராக இருந்தஎன்
தஞ்சனே ! * † தண்ணிலங்கைக்கு இறையைச்செற்ற
நஞ்சனே ! * ஞாலம்கொள்வான் குறளாகிய
வஞ்சனே ! * என்னும் எப்போதும்என்வாசகமே. (௨)

வாசகமேயேத்த அருள்செய்யும் வானவர்தம்
நாயகனே ! * நாளிளந்திங்களைக் கோள்விடுத்து *
வேயகம்பால்வெண்ணெய்தொடுவுண்ட ஆனாயர்
தாயவனே ! * என்றுதடவும் என்கைகளே. (௩)

கைகளாலாரத் தொழுதுதொழுதுஉன்னை *
வைகலும்மாத்திரைப்போதும் ஓர்வீடின்றி *
பைகொள்பாம்பேறி உறைபரனே ! * உன்னை
மெய்கொள்ளக்காண விரும்பும்என்கண்களே. (௪)

கண்களால்காண வருங்கொல் ? என்றுஆசையால் *
மண்கொண்டவாமனன் ஏறமகிழ்ந்துசெல் *
பண்கொண்டபுள்ளின் சிறகொலிபாவித்து *
திண்கொள்ளஓர்க்கும் கிடந்துஎன்செவிகளே. (௫)

செவிகளாலார நின்கீர்த்திக்கனியென்னும்
கவிகளே * காலப்பண்தேன் உறைப்பத்துற்று *
புவியின்மேல் பொன்நெடுஞ்சக்கரத்துஉன்னையே *
அவிவின்றி ஆதரிக்கும்எனதாவியே. (௬)

ஆவியே ! ஆரமுதே ! என்னையாளுடை *
தூவியம்புள்ளுடையாய் ! சுடர்நேமியாய் ! *
பாவியேன்நெஞ்சம் புலம்பப்பலகாலும் *
கூவியும்காணப்பெறேன் உனகோலமே. (௭)

† 'தென்னிலங்கை' என்றும் பாடம்.

கோலமே ! தாமரைக்கண்ணது ஓர் அஞ்சன
நீலமே ! * நின்று எனது ஆவியை ஈர்கின்ற
சீலமே ! * சென்று செல்லாதன முன்னிலாம்
காலமே ! * உன்னை எந்நாள் கண்டுகொள்வனே ? (அ)

கொள்வன் நான் மாவலி ! மூவடி தா என்ற
கள்வனே ! * கஞ்சனை வஞ்சித்து வாணனை
உள்வன்மை தீர * ஓராயிரம் தோள் துணித்த
புள்வல்லாய் ! * உன்னை எஞ்ஞான்று பொருந்துவனே ? (௯)

பொருந்திய மாமருதின் இடைபோய எம்
பெருந்தகாய் ! * உன் கழல் காணிய பேதுற்று *
வருந்தி நான் வாசகமாலை கொண்டு * உன்னையே
இருந்திருந்து எத்தனை காலம் புலம்புவனே ? (௧௦)

புலம்புசீர்ப் பூமியளந்த பெருமானை *
நலம்கொள்சீர் நன்குருகூர்ச் சடகோபன் * சொல்
வலம்கொண்ட ஆயிரத்துள் இவையும் ஓர் பத்து *
இலங்குவான் யாவரும் ஏறுவர் சொன்னாலே. (௧௧)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

முடியாத ஆசைமிக முற்றுகரணங்கள் *
அடியார் தம்மைவிட்டு அவன்பால்—படியா * ஒன்
றொன்றின் செயல் விரும்ப உள்ளமெல்லாம் தாம் விரும்ப *
துன்னியதே மாறன் தன் சொல். (௨அ)

சீயர் திருவடிகளே சரணம்.

---

## ௯ - ஆம் திருவாய்மொழி—சொன்னால்.

[நரகவநம் செய்யாது எம்பெருமானை ஸ்துதிக்கும்படி உபதேசஞ் செய்தல்.]

கலிநிலைத்துறை.

பண் - முதிர்ந்தகுறிஞ்சி, தாளம் - ஏழொத்து. ஸஹானா ராகம் - ஆதிதாளம்.

சொன்னால் விரோதமிது ஆகிலும் சொல்லுவன் கேண்மினோ *
என்னாவில் இன்கவி யானொருவர்க்கும் கொடுக்கிலேன் *
தென்னா தெனா என்று வண்டுமுரல் திருவேங்கடத்து *
என்னானை என்னப்பன் எம்பெருமான் உளனாகவே. (௧)

உளனாகவேஎண்ணித் தன்னைஒன்றாகத்தன்செல்வத்தை *
வளனாமதிக்கும் இம்மானிடத்தைக்கவிபாடியென் ? *
குளனார்கழனிசூழ் கண்ணன்குறுங்குடிமெய்ம்மையே *
உளனாயஎந்தையை எந்தைபெம்மானையொழியவே. (௨)

ஒழிவொன்றில்லாத பல்லூழிதோறூழிநிலாவ * போம்
வழியைத்தரும் நங்கள்வானவரீசனைநிற்கப்போய் *
கழியமிகநல்லவான்கவிகொண்டு புலவீர்காள் ! *
இழியக்கருதி ஓர்மானிடம்பாடல்என்னாவதே ? (௩)

என்னாவது ? எத்தனைநாளைக்குப்போதும் ? புலவீர்காள் ! *
மன்னாமனிசரைப் பாடிப்படைக்கும்பெரும்பொருள் *
மின்னார்மணிமுடி விண்ணவர் தாதையைப்பாடினால் *
தன்னாகவேகொண்டு சன்மஞ்செய்யாமையும்கொள்ளுமே. (௪)

கொள்ளும்பயனில்லைக் குப்பைகிளர்த்தன்னசெல்வத்தை *
வள்ளல்புகழ்ந்து நும்வாய்மையிழக்கும்புலவீர்காள்! *
கொள்ளக்குறைவிலன் வேண்டிற்றெல்லாம்தரும்கோதில் * என்
வள்ளல்மணிவண்ணன்தன்னைக் கவிசொல்லவம்மினோ. (௫)

வம்மின்புலவீர் ! நும்மெய்வருத்திக்கைசெய்துஉய்ம்மினோ *
இம்மன்னுலகில்செல்வர் இப்போதில்லைநோக்கினோம் *
நும்இன்கவிகொண்டு நும்நும்இட்டாதெய்வமேத்தினால் *
செம்மின்சுடர்முடி என்திருமாலுக்குச்சேருமே. (௬)

சேரும்கொடைபுகழ் எல்லையிலானை * ஓராயிரம்
பேருமுடையபிரானையல்லால் மற்றுயான்கிலேன் *
மாரியனையகை மால்வரையொக்கும்திண்தோளென்று *
பாரிலோர்பற்றையைப் பச்சைப்பசும்பொய்கள்பேசவே. (௭)

வேயின்மலிபுரைதோளி பின்னைக்குமணாளனை *
ஆயபெரும்புகழ் எல்லையிலாதனபாடிப்போய் *
காயம்கழித்து அவன்தாளிணைக்கீழ்ப்புகும்காதலன் *
மாயமனிசரை என்சொல்லவல்லேன்என்வாய்கொண்டே ? (௮)

வாய்கொண்டுமானிடம்பாடவந்த கவியேனல்லேன் *
ஆய்கொண்டசீர்வள்ளல் ஆழிப்பிரான்எனக்கேஉளன் *
சாய்கொண்டஇம்மையும்சாதித்து வானவர்நாட்டையும் *
நீகண்டுகொள்ளென்று வீடும்தரும்நின்றுநின்றே. (௯)

நின்றுநின்றுபலநாளுய்க்கும் இவ்வுடல்நீங்கிப்போய் *
சென்றுசென்றாகிலும்கண்டு சன்மம்கழிப்பானெண்ணி *
ஒன்றியொன்றிஉலகம்படைத்தான் கவியாயினேற்கு *
என்றுமென்றும்இனி மற்றொருவர்கவியேற்குமே ? (௧௦)

* ஏற்கும்பெரும்புகழ் வானவரீசன்கண்ணன்தனக்கு *
ஏற்கும்பெரும்புகழ் வண்குருகூர்ச்சடகோபன்சொல் *
ஏற்கும்பெரும்புகழ் ஆயிரத்துள்இவையும்ஓர்பத்து *
ஏற்கும்பெரும்புகழ் சொல்லவல்லார்க்குஇல்லைசன்மமே. (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

சொன்னாவில்வாழ்புலவீர்! சோறுகூறைக்காக *
மன்னாதமானிடரை வாழ்த்துதலால்—என்னாகும்? *
என்னுடனேமாதவனை ஏத்துமெனும்குருகூர் *
மன்னருளால் மாறும்சன்மம். (உக)

சீயர் திருவடிகளே சரணம்.

---

## க0 - ஆந் திருவாய்மொழி—சன்மம்பலபல.

---

[எம்பெருமானது அவதாரகுணசேஷ்டிதங்களை அநுபவிக்கையாலே தமக்கு ஒரு குறையுமின்றி ஸர்வாபீஷ்டங்களும் உண்டானமையை அருளிச்செய்தல்.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பண் - நாட்டம், தாளம் - ஏழொத்து அடாணாராகம் - திரிபுடைதாளம்.

* சன்மம்பலபலசெய்துவெளிப்பட்டுச் சங்கொடுசக்கரம்வில் *
ஒண்மையுடையஉலக்கைஒள்வாள் தண்டுகொண்டுபுள்ளூர்ந்து * உலகில்
வன்மையுடையஅரக்கர்அசுரரை மாளப்படைபொருத *
நன்மையுடையவன்சீர்பரவப்பெற்ற நான்ஓர்குறைவிலனே. (க)

குறைவில்தடங்கடல்கோளரவேறித் தன்கோலசெந்தாமரைக்கண் *
உறைபவன்போலஓர்யோகுபுணர்ந்த ஒளிமணிவண்ணன்கண்ணன் *
கறையணிமூக்குடைப்புள்ளைக்கடாவி அசுரரைக்காய்ந்தஅம்மான் *
நிறைபுகழேத்தியும்பாடியும்ஆடியும் யான்ஒருமுட்டிலனே. (உ)

முட்டில்பல்போகத்தொருதனிநாயகன் மூவுலகுக்குரிய *
கட்டியைத்தேனையமுதை நன்பாலைக்கனியைக்கரும்புதன்னை *
மட்டவிழ்தண்ணந்துழாய்முடியானைவணங்கி அவன்திறத்துப்
பட்டபின்னை * இறையாகிலும் யான்என்மனத்துப்பரிவிலனே. (ங)

பரிவின்றிவாணனைக்காத்துமென்று அன்றுபடையொடும்வந்தெதிர்ந்த
திரிபுரம்செற்றவனும்மகனும் பின்னும்அங்கியும்போர்தொலைய *
பொருசிறைப்புள்ளைக்கடாவிய மாயனை ஆயனைப்பொற்சக்கரத்து
அரியினை * அச்சுதனைப்பற்றி யான்இறையேனும்இடரிலனே. (ச)

இடரின்றியே ஒருநாளொருபோழ்தில் எல்லாவுலகும்கழிய *
படர்புகழ்ப்பார்த்தனும்வைதிகனும் உடனேறத்திண்தேர்கடவி *
சுடரொளியாய்நின்றதன்னுடைச்சோதியில் வைதிகன்பிள்ளைகளை *
உடலொடும்கொண்டுகொடுத்தவனைப்பற்றி ஒன்றும்துயரிலனே. (௫)

துயரில்சுடரொளிதன்னுடைச்சோதி நின்றவண்ணம்நிற்கவே *
துயரில்மலியும்மனிசர்பிறவியில் தோன்றிக்கண்காணவந்து *
துயரங்கள்செய்துதன்தெய்வநிலையுலகில் புகவுய்க்கும்அம்மான் *
துயரமில்சீர்க்கண்ணன்மாயன்புகழ்துற்ற யான்ஓர்துன்பமிலனே. (௬)

துன்பமும்இன்பமுமாகிய செய்வினையாய்உலகங்களுமாய் *
இன்பமில்வெந்நரகாகி இனியநல்வான்சுவர்க்கங்களுமாய் *
மன்பல்லுயிர்களுமாகிப் பலபலமாயமயக்குக்களால் *
இன்புறும்இவ்விளையாட்டுடையானைப்பெற்று ஏதும்அல்லலிலனே. (௭)

அல்லலில்இன்பமளவிறந்தெங்கும் அழகமர்சூழொளியன் *
அல்லிமலர்மகள்போகமயக்குக்கள் ஆகியும்நிற்கும்அம்மான் *
எல்லையில்ஞானத்தன்ஞானமஃதேகொண்டு எல்லாக்கருமங்களும்செய் *
எல்லையில்மாயனைக்கண்ணனைத்தாள்பற்றி யான்ஓர்துக்கமிலனே. (௮)

துக்கமில்ஞானச்சுடரொளிமூர்த்தி துழாயலங்கல்பெருமான் *
மிக்கபல்மாயங்களால்விகிர்தம்செய்து வேண்டுமுருவுகொண்டு *
நக்கபிரானோடுஅயன்முதலாக எல்லாரும்எவையும் * தன்னுள்
ஒக்கவொடுங்கவிழுங்கவல்லானைப்பெற்று ஒன்றும்தளர்விலனே. (௯)

தளர்வின்றியேஎன்றும்எங்கும்பரந்த தனிமுதல்ஞானமொன்றாய் *
அளவுடைஐம்புலன்கள்அறியாவகையால் அருவாகிநிற்கும் *
வளரொளியீசனைமூர்த்தியைப் பூதங்களைந்தைஇருசுடரை *
கிளரொளிமாயனைக்கண்ணனைத்தாள்பற்றி யான்என்றும்கேடிலனே. ()

கேடில்விழுப்புகழ்க்கேசவனைக் குருகூர்ச்சடகோபன்சொன்ன *
பாடலோராயிரத்துள் † இவையுமொருபத்தும்பயிற்றவல்லார்கட்கு *
நாடும்நகரமும்நன்குடன்காண நலனிடையூர்திபண்ணி * [அவன்
வீடும்பெறுத்தித்தன்மூவுலகுக்கும்தரும் ஒருநாயகமே. (௧௧)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

சன்மம்பலசெய்து தான்இவ்வுலகளிக்கும் *
நன்மையுடைய மால்குணத்தை நாள்தோறும் *—இம்மையிலே
ஏத்துமின்பம்பெற்றேனெனும்மாறனை உலகீர் ! *
நாத்தழும்ப ஏத்தும்ஒருநாள். (௩௦)

சீயர் திருவடிகளே சரணம்.

---

† 'இவையொருபத்தும்' என்றும் பாடம்.

## நான்காம்பத்து.

பகவத்கைங்கர்யத்துக்கு விரோதி - ஐஶ்வர்ய கைவல்யங்களென்னுதல்.

## க - ஆந் திருவாய்மொழி--ஒருநாயகம்.

[ஐஶ்வர்யத்தின் நிலையில்லாமையையும், ஆத்மாநுபவத்தின் தண்மையையும், பகவதநுபவமே பரமபுருஷார்த்த மென்பதையும் பரோபதேசஞ்செய்தல்.]

கலிநிலைத்துறை.

பண் - நாட்டம், தாளம் - எழொத்து. சுருட்டிராகம் - திரிபுடைதாளம்.

ஒருநாயகமாய் ஓடவுலகுடனாண்டவர் *
கருநாய்கவர்ந்தகாலர் சிதைகியபானையர் *
பெருநாடுகாண இம்மையிலேபிச்சைதாமகொள்வர் *
திருநாரணன்தாள் காலம்பெறச்சிந்தித்துய்ம்மினோ. (க)

உய்ம்மின்திறைகொணர்ந்து என்றுஉலகாண்டவர் * இம்மையே
தம்மின்சுவைமடவாரைப் பிறர்கொள்ளததாம்விட்டு *
வெம்மினொளிவெயில் கானகமபோய்க்குமைதின்பர்கள் *
செம்மின்முடித்திருமாலை விரைந்தடிசேர்மினோ. (உ)

அடிசேர்முடியினராகி அரசர்கள்தாம்தொழ *
இடிசேர்முரசங்கள் முற்றத்தியம்பஇருந்தவர் *
பொடிசேர்துகளாய்ப்போவர்கள் ஆதலில்நொக்கென *
கடிசேர்துழாய்முடிக் கண்ணன்கழல்கள்நினைமினோ. (ங)

நினைப்பான்புகில் கடலெக்கலின்நுண்மணலின்பலர் *
எனைத்தோருகங்களும் இவ்வுலகாண்டுகழிந்தவர் *
மனைப்பால்மருங்கற மாய்தலல்லால்மற்றுக்கண்டிலம் *
பனைததாள்மதகளிறட்டவன் பாதமபணிமினோ. (ச)

பணிமின்திருவருளென்னும் அம்சீதப்பைம்பூம்பள்ளி *
அணிமென்குழலார் இன்பக்கலவியமுதுண்டார் *
துணிமுன்புநாலப் பல்லேழையர்தாமஇழிப்பச்செல்வர் *
மணிமின்னுமேனி நம்மாயவன்பேர்சொலலிவாழ்மினோ. (ரு)

வாழ்ந்தார்கள்வாழ்ந்தது மாமழைமொக்குளின்மாய்ந்துமாய்ந்து *
ஆழ்ந்தாரென்றல்லால் அன்றுமுதலின்றறுதியா *
வாழ்ந்தார்கள்வாழ்ந்தேநிற்பர் என்பதில்லை, நிற்குறில் *
ஆழ்ந்தார்கடற்பள்ளி அண்ணலடியவராமினோ. (சு)

ஆமின்சுவையவை ஆறோடடிசிலுண்டார்ந்தபின் *
தூமென்மொழிமடவாரிரக்கப் பின்னுந்துற்றுவார் *
ஈமினெமக்கொருதுற்றென்று இடறுவராதலின் *
கோமின்துழாய்முடி ஆதியஞ்சோதிகுணங்களே. (எ)

குணங்கொள்நிறைபுகழ்மன்னர் கொடைக்கடன்பூண்டிருந்து *
இணங்கியுலகுடனாக்கிலும் ஆங்கவனையில்லார் *
மணங்கொண்டபோகத்துமன்னியும் மீள்வர்கள்மீள்வில்லை *
பணங்கொளரவணையான் திருநாமம்படிமினே. (அ)

படிமன்னுபல்கலன் பற்றோடறுத்துஐம்புலன்வென்று *
செடிமன்னுகாயம்செற்றார்களும் ஆங்கவனையில்லார் *
குடிமன்னுமின்சுவர்க்கமெய்தியும் மீள்வர்களமீள்வில்லை *
கொடிமன்னுபுள்ளுடை அண்ணல்கழல்கள்குறுகுமினோ. (கூ)

குறுகமிகவுணர்வத்தொடுநோக்கி எல்லாம்விட்ட *
இறுகலிறப்பென்னும்ஞானிக்கும் அப்பயனில்லையேல் *
சிறுகநினைவதோர்பாசமுண்டாம் பின்னும்வீடில்லை *
மறுகலிலீசனைப்பற்றி விடாவிடில்வீடஃதே. (க0)

அஃதேஉய்யப்புகுமாறென்று கண்ணன்கழல்கள்மேல் *
†கொய்பூம்பொழில்சூழ் குருகூர்ச்சடகோபன்குற்றேவல *
செய்கோலத்தாயிரம் சீர்த்தொடைப்பாடலிவைபத்தும் *
அஃகாமல்கற்பவர் ஆழ்துயர்போய்உய்யற்பாலரே. (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

ஒருநாயகமாய் உலகுக்கு * வானோர்
இருநாட்டிலேறியுய்க்கும் இன்பம்—திரமாகா *
மன்னுயிர்ப்போகம்தீது மாலடிமையேஇனிதாம் *
பன்னியிவை மாறனுரைப்பால். (ரு க)

சீயர் திருவடிகளே சரணம்.

---

† 'கொய்பூம்பொழில்குருகூர்ச்சடகோபன்குற்றேவல்கள்' என்பதும்பாடம்.

## ௨ - ஆந் திருவாய்மொழி--பாலனாய்.

[எம்பெருமானது காலதேசங்களாற் கைகழிந்தநிலைகளைப் பெற விரைகின்ற தலைமகளின் தன்மை கண்டு தாய இரங்கிக்கூறும் பாசுரம்.]

கலிவிருத்தம்.

பண் - நட்டபாஷை, தாளம் - ஒன்பதோத்து. ஸ்ரீராகம் - ஆதிதாளம்.

பாலனாய் ஏழுலகுண்டுபரிவின்றி *
ஆலிலைஅன்னவசஞ்செய்யும் அண்ணலார் *
தாளிணைமேலணி தண்ணந்துழாயென்றே
மாலுமால் * வல்வினையேன் மடவல்லியே. (௧)

வல்லிசேர்நுண்ணிடை ஆய்ச்சியர்தம்மொடும *
கொல்லைமைசெய்து குரவைபிணைந்தவர் *
நல்லடிமேலணி நாறுதுழாயென்றே
சொல்லுமால் * சூழ்வினையாட்டியேன் பாவையே. (௨)

பாவியல்வேத நன்மாலைபலகொண்டு *
தேவர்கள்மாமுனிவர் இறைஞ்சநின்ற *
சேவடிமேலணி செம்பொன்துழாயென்றே
கூவுமால் * கோள்வினையாட்டியேன் கோதையே. (௩)

கோதிலவண்புகழ் கொண்டுசமயிகள் *
பேதங்கள்சொல்லிப் பிதற்றும்பிரான்பரன் *
பாதங்கள்மேலணி பைம்பொன்துழாயென்றே
ஓதுமால் * ஊழ்வினையேன் தடந்தோளியே. (௪)

தோளிசேர்பின்னைபொருட்டு எருதேழ்தழீஇக்
கோளியார் * கோவலனார் குடக்கூத்தனார் *
தாளிணைமேலணி தண்ணந்துழாயென்றே
நாளுநாள் * நைகின்றதால் என்தன்மாதரே. (௫)

மாதர்மாமண்மடந்தைபொருட்டு ஏனமாய் *
ஆதியங்காலத்து அகலிடமகீண்டவர் *
பாதங்கள்மேலணி பைம்பொன்துழாயென்றே
ஓதும்மால் * எய்தினள் என்தன்மடந்தையே. (௬)

மடந்தையை வண்கமலத்திருமாதினை *
தடங்கொள்தார்மார்பினில்வைத்தவர் தாளின்மேல் *
வடம்கொள்பூந்தண்ணந்துழாய்மலர்க்கே இவள்
மடங்குமால் * வாணுதலீர்! என்மடக்கொம்பே. (௭)

கொம்புபோல்சீதைபொருட்டு இலங்கைநகர் *
அம்பெரியுய்த்தவர் தாளிணைமேலணி *
வம்பவிழ்தண்ணந்துழாய்மலர்க்கே இவள்
நம்புமால் * நான்இதற்குஎன்செய்கேன் ? நங்கைமீர் ! (அ)

நங்கைமீர் ! நீரும ஓர்பெண்பெற்றுநல்கினீர் *
எங்ஙனேசொல்லுகேன் ? யான்பெற்றஏழையை *
சங்கென்னும்சக்கரமென்னும் துழாயென்னும் *
இங்ஙனேசொல்லும் இராப்பகல்என்செய்கேன் ? (கூ)

என்செய்கேன் ? என்னுடைப்பேதை என்கோமளம் *
என்சொல்லும் என்வசமுமல்லள்நங்கைமீர் ! *
மின்செய்பூண்மார்பினன் கண்ணன்கழல்துழாய் *
பொன்செய்பூண்மென்முலைக்கென்று மெலியுமே. (க0)

மெலியும்நோய்தீர்க்கும் நம்கண்ணன்கழல்கள்மேல் *
மலிபுகழ் வண்குருகூர்ச்சடகோபன்சொல் *
ஒலிபுகழாயிரத்து இப்பத்தும்வல்லவர் *
மலிபுகழ்வானவர்க்காவர் நற்கோவையே. (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்

---

பாலரைப்போல்சீழ்கிப் பரனளவில்வேட்கையால *
காலத்தால்தேசத்தால் கைகழிந்த *—சால
அரிதானபோகத்தில் ஆசையுற்றுநைந்தான் *
குருகூரில்வந்துதித்தகோ. (ருஉ)

சீயர் திருவடிகளே சரணம்.

---

## ரு-ஆந் திருவாய்மொழி—கோவைவாயாள்.

---

[அர்த்தித்தபடியே எம்பெருமான் தன்னைக்காட்ட, ஆழ்வார் அவனது ப்ரணயித்வகுணத்தில் ஈடுபட்டு அருளிச்செய்தல்.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

பண் - தக்கேசி, தாளம் - ஏழொத்து. ஆரபிராகம்-ஆதிதாளம்.

கோவைவாயாள்பொருட்டு ஏற்றினெருத்தமிறுத்தாய் ! * மதிளிலங்கைக்
கோவைவீயச்சிலைகுனித்தாய் ! குலநலயானைமருப்பொசித்தாய் ! *
பூவைவீயாநீர்தூவிப் போதால்வணங்கேனேலும் * நின்
பூவைவீயாம்மேனிக்குப பூசும்சாந்துஎன்நெஞ்சமே. (க)

பூசும்சாந்துஎன்னெஞ்சமே புனையும்கண்ணிஎனதுடைய *
வாசகம்செய்மாலையே வான்பட்டாடையும்அஃதே *
தேசமானஅணிகலனும் என்கைகூப்புச்செய்கையே *
ஈசன்ஞாலமுண்டுமிழ்ந்த எந்தைஏகமூர்த்திக்கே. (௨)

ஏகமூர்த்திஇருமூர்த்தி மூன்றுமூர்த்திபலமூர்த்தி
யாகி * ஐந்துபூதமாய் இரண்டுசுடராய் அருவாகி *
நாகமேறிநடுக்கடலுள் துயின்ற நாராயணனே ! * உன்
ஆகமுற்றுமகத்தடக்கி ஆவியல்லல்மாய்த்ததே. (௩)

மாய்த்தலெண்ணிவாய்முலைதந்த மாயப்பேயுயிர்
மாய்த்த * ஆயமாயனே ! வாமனனே ! மாதவா ! *
பூத்தண்மாலைகொண்டு உன்னைப்போதால்வணங்கேனேலும் * நின்
பூத்தண்மாலைநெடுமுடிக்குப் புனையும்கண்ணிஎனதுயிரே. (௪)

கண்ணிஎனதுயிர் காதல்கனகச்சோதிமுடிமுதலா *
எண்ணில்பல்கலன்களும் ஏலுமாடையும்அஃதே *
நண்ணிமூவுலகும் நவிற்றும்கீர்த்தியும்அஃதே *
கண்ணனெம்பிரானெம்மான் காலசக்கரத்தானுக்கே. (௫)

காலசக்கரத்தொடு வெண்சங்கம்கையேந்தினாய் ! *
ஞாலமுற்றும்உண்டுமிழ்ந்த நாராயணனே ! என்றென்று *
ஓலமிட்டுநானழைத்தால் ஒன்றும்வாராயாகிலும் *
கோலமாம்என்சென்னிக்கு உன்கமலமன்னகுரைகழலே. (௬)

குரைகழல்கள்நீட்டி மண்கொண்டகோலவாமனா ! *
குரைகழல்கைகூப்புவார்கள் கூடநின்றமாயனே ! *
விரைகொள்பூவும்நீருமகொண்டு ஏத்தமாட்டேனேலும் * உன்
உரைகொள்சோதித்திருவுருவம் என்னதாவிமேலதே. (௭)

என்னதாவிமேலையாய் ஏர்கொளேழுலகமும் *
துன்னிமுற்றுமாகிநின்ற சோதிஞானமூர்த்தியாய் *
உன்னதென்னதாவியும் என்னதுன்னதாவியும் *
இன்னவண்ணமேநின்றாய் என்றுரைக்கவல்லேனே ? (௮)

உரைக்கவல்லேனல்லேன் உன்னுலப்பில்கீர்த்திவெள்ளத்தின் *
† கரைக்கணென்றுசெல்வன்நான் ? காதல்மையலேறினேன் *
புரைப்பிலாதபரம்பரனே ! பொய்யிலாதபரஞ்சுடரே ! *
இரைத்துநல்லமேன்மக்களேத்த யானுமேத்தினேன். (௯)

† 'கரைக்கணின்றசெல்ல' எனவும் பாடம்.

யானுமேத்தி ஏழுலகும்முற்றுமேத்தி * பின்னையும்
தானுமேத்திலும் தன்னையேத்தவேத்தஎங்கெய்தும்? *
தேனும்பாலும்கன்னலும் அமுதுமாகித்தித்திப்ப *
யானும்எம்பிரானையேயேத்தினேன் யானுய்வானே. (௧௦)

உய்வுபாயம்மற்றின்மைதேறிக் கண்ணனொண்கழல்கள்மேல் *
செய்யதாமரைப்பழனத் தென்னன்குருகூர்ச்சடகோபன் *
பொய்யில்பாடலாயிரத்துள் இவையும்பத்தும்வல்லார்கள் *
வையம்மன்னிவீற்றிருந்து விண்ணும்ஆள்வர் † மண்ணூடே. (௧௧)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

கோவானஈசன் குறையெல்லாம்தீரவே *
ஓவாதகாலத்துஉவாதிதனை *—மேவிக்
கழித்தடையக்காட்டிக் கலந்தகுணமாறன் *
வழுத்துதலால் வாழ்ந்ததுஇந்தமண். (௩௩)

சீயர் திருவடிகளே சரணம்.

---

## ௪-ஆந் திருவாய்மொழி—மண்ணை.

---

[பிரிவாற்றாத நிலையில் போலிகண்டு வருந்தும் தலைவியின் நிலையைத் தாய் உரைக்கும் பாசுரம்.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

பண் - பஞ்சமம், தாளம் - இடையொத்து பிலஹரிராகம் - அடதாளம்

மண்ணையிருந்துதுழாவி வாமனன்மண்ணிதுவென்னும் *
விண்ணைத்தொழுது அவன்மேவு வைகுந்தமென்றுகைகாட்டும் *
கண்ணையுண்ணீர்மல்கநின்று கடல்வண்ணனென்னுமன்னே! * என்
பெண்ணைப்பெருமயல்செய்தாற்கு என்செய்கேன்? பெய்வளையீரே!

பெய்வளைக்கைகளைக்கூப்பிப் பிரான்கிடக்கும்கடலென்னும் *
செய்யதோர்ஞாயிற்றைக்காட்டிச் சிரீதரன்மூர்த்திஈதென்னும் *
நையும்கண்ணீர்மல்கநின்று நாரணனென்னும்அன்னே! * என்
தெய்வவுருவிற்சிறுமான் செய்கின்றதொன்றறியேனே. (௨)

அறியும்செந்தீயைத்தழுவி அச்சுதனென்னும்மெய்வேவாள் *
எறியும்தண்காற்றைத்தழுவி என்னுடைக்கோவிந்தனென்னும் *
வெறிகொள்துழாய்மலர்நாறும் வினையுடையாட்டியேன்பெற்ற *
செறிவளைமுன்கைச்சிறுமான் செய்கின்றதென்கண்ணுக்கொன்றே.

---

† 'மண்ணோடே' என்றும் பாடம்.

ஒன்றியதிங்களைக்காட்டி ஒளிமணிவண்ணனே! என்னும் *
நின்றகுன்றத்தினைநோக்கி நெடுமாலே! வாவென்றுகூவும் *
நன்றுபெய்யும்மழைகாணில் நாரணன்வந்தானென்றுஆலும் *
என்றினமையல்கள்செய்தார் என்னுடைக்கோமளத்தையே. (௪)

கோமளவான்கன்றைப்புல்கிக் கோவிந்தன்மேய்த்தனவென்னும் *
போமிளநாகத்தின்பின்போய் அவன்கிடக்கையீதென்னும் *
ஆமளவொன்றுமறியேன் அருவினையாட்டியேன்பெற்ற *
கோமளவல்லியைமாயோன் மால்செய்துசெய்கின்றகூத்தே. (௫)

கூத்தர்குடமெடுத்தாடில் கோவிந்தனாமெனாஓடும் *
வாய்த்தகுழலோசைகேட்கில் மாயவனென்றுமையாக்கும் *
ஆய்ச்சியர்வெண்ணெய்கள்காணில் அவனுண்டவெண்ணெயீதென்
பேய்ச்சிமுலைசுவைத்தாற்கு என்பெண்கொடியேறியபித்தே ! [னும்*

ஏறியபித்தினோடு எல்லாவுலகும்கண்ணன்படைப்பென்னும் *
நீறுசெவ்வேயிடக்காணில் நெடுமாலடியாரென்றோடும் *
நாறுதுழாய்மலர்காணில் நாரணன்கண்ணியீதென்னும் *
தேறியும்தேறாதும்மாயோன் திறத்தனளேஇத்திருவே. (௭)

திருவுடைமன்னரைக்காணில் திருமாலைக்கண்டேனேயென்னும் *
உருவுடைவண்ணங்கள்காணில் உலகளந்தானென்றுதுள்ளும் *
கருவுடைத்தேவில்களெல்லாம கடல்வண்ணன்கோயிலேயென்னும்*
வெருவிலும்வீழ்விலும் † ஓவாக் கண்ணன்கழல்கள்விரும்புமே. (௮)

விரும்பிப்பகவரைககாணில் வியலிடமுண்டானேயென்னும் *
கரும்பெருமேகங்கள்காணில் கண்ணனென்றேறப்பறக்கும் *
பெரும்புலவாநிரைகாணில் பிரானுளனென்றுபின்செல்லும் *
அரும்பெறல்பெண்ணினைமாயோன் அலற்றியயர்ப்பிக்கின்றானே. (௯)

அயர்க்கும்சுற்றும்பற்றி‡நோக்கும்அகலவேநீள்நோக்குக்கொள்ளும் *
வியர்க்கும்மழைக்கண்துளும்ப வெவ்வுயிர்கொள்ளும்மெய்சோரும் *
பெயர்த்தும்கண்ணா!என்றுபேசும பெருமானே ! வாவென்றுகூவும் *
மயல்பெருங்காதலென்பேதைக்கு என்செய்கேன் ? வல்வினையேனே.

வல்வினைதீர்க்கும்கண்ணனை வண்குருகூர்ச்சடகோபன் *
சொல்வினையால்சொன்னபாடல் ஆயிரத்துள்இவைபத்தும் *
நல்வினையென்றுகற்பார்கள் நலனிடைவைகுந்தம்நண்ணி *
தொல்வினைதீரஎல்லாரும் தொழுதெழவீற்றிருப்பாரே. (௧௧)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

† ‘ஓவாள்’ என்பது உரையின் பாடம். ‡ ‘நோக்கி’ என்பது ஆறாயிரப்படி.

மண்ணுலகில்முன்கலந்து மால்பிரிகையால் * மாறன்
பெண்ணிலைமையாய்க் காதல்பித்தேறி *—எண்ணிடில்முன்
போலிமுதலானபொருளை அவனுய்நினைந்து *
மேல்விழுந்தான் மையல்தனின்வீறு. (நச)

சீயர் திருவடிகளே சரணம்.

---

## ரு-ஆந் திருவாய்மொழி—வீற்றிருந்து.

---

[ஸர்வேச்வரன் தனது பெருமையெல்லாம் தோன்ற ஸாந்நித்யம் பண்ணுகையில் ஆழ்வார் மங்களாசாஸநம்பண்ணி ப்ரீதியடைதல்.]

கலிநிலைத்துறை

பண்-இந்தளம்-தறிஞ்சி, தாளம்-ஒன்பதொத்து தோடிராகம்-ரூபகதாளம்.

வீற்றிருந்து ஏழுலகும் தனிக்கோல்செல்ல, வீவில்சீர் *
ஆற்றல்மிக்காளும்அம்மானை வெம்மாபிளந்தான்தன்னை *
போற்றியென்றேகைகளாரத் தொழுதுசொல்மாலைகள் *
ஏற்றநோற்றேற்கு இனியென்னகுறைஎழுமையுமே? (க)

மையகண்ணாள்மலர்மேலுறைவாள் உறைமாபினன் *
செய்யகோலத்தடங்கண்ணன் விண்ணோர்பெருமான்தன்னை *
மொய்யசொல்லால்இசைமாலைகளேத்தி உள்ளப்பெற்றேன் *
வெய்யநோய்கள்முழுதும் வியன்ஞாலத்துவீயவே. (உ)

வீவிலின்பம்மிக எல்லைநிகழ்ந்தநம்அச்சுதன் *
வீவில்சீரன்மலர்க்கண்ணன் விண்ணோர்பெருமான்தன்னை *
வீவில்காலமிசைமாலைகளேத்தி மேவப்பெற்றேன் *
வீவிலின்பம்மிக எல்லை † நிகழ்நதனன்மேவியே. (ங)

மேவிநின்றுதொழுவார் வினைபோகமேவும்பிரான் *
தூவியம்புள்ளுடையான் அடலாழியம்மான்தன்னை *
நாவியலால்இசைமாலைகளேத்தி நண்ணப்பெறறேன் *
ஆவியென்னாவியை யானறியேன்செய்தவாற்றையே. (ச)

ஆற்றநல்லவகைகாட்டும் அம்மானை * அமரர்தம்
ஏற்றை எல்லாப்பொருளும்விரித்தானைஎம்மான்தன்னை *
மாற்றமாலைபுனைந்தேத்தி நாளும்மகிழ்வெய்தினேன் *
காற்றின்முன்னம்கடுகி வினைநோய்கள்கரியவே. (ரு)

---

† 'நிகழ்ந்தன' என்பது உரையின் பாடம்.

கரியமேனிமிசை வெளியநீறுசிறிதேயிடும் *
பெரியகோலத்தடங்கண்ணன் விண்ணோர்பெருமான்தன்னை *
உரியசொல்லால்இசைமாலைகளேத்தி உள்ளப்பெற்றேற்கு *
அரியதுண்டோஎனக்கு? இன்றுதொட்டும்இனியென்றுமே. (௬)

என்றுமொன்றாகி ஒத்தாரும்மிககாரகளும் * தன்தனக்கு
இன்றிநின்றானை எல்லாவுலகுமுடையான்தன்னை *
குன்றமொன்றால்மழைகாததபிரானைச சொல்மாலைகள் *
நன்றுசூட்டும்விதியெய்தினம் என்னகுறைநமக்கே? (௭)

நமக்கும்பூவின்மிசைநங்கைக்கும் இன்பனை * ஞாலத்தார்
தமக்கும் வானத்தவர்க்கும்பெருமானை * தண்தாமரை
சுமக்கும்பாதப்பெருமானைச் சொல்மாலைகள் * சொல்லுமாறு
அமைக்கவல்லேற்கு இனியாவர்நிகர்அகல்வானத்தே? (௮)

வானத்தும்வானத்துள்ளும்பரும் மண்ணுள்ளும்மண்ணின்கீழ்த
தானத்தும் * எண்திசையும தவிராதுநின்றான்தன்னை *
கூனற்சங்கத்தடக்கையவனைக் குடமாடியை
‡ வானக்கோனை * கவிசொல்லவல்லேற்கு இனிமாறுண்டே? (௯)

உண்டும்உமிழ்ந்தும்கடந்தும இடந்தும கிடந்தும்நின்றும *
கொண்டகோலத்தொடுவீற்றிருந்தும் மணநகூடியும் *
கண்டவாற்றால் தனதேயுலகெனநின்றான்தன்னை *
வண்தமிழ்நூற்கநோற்றேன் அடியார்க்குஇன்பமாரியே. (௧௦)

மாரிமாறாததண்ணம்மலை வேங்கடத்தண்ணலை *
வாரிமாறாதபைமபூம்பொழில்சூழ் குருகூர்நகர் *
காரிமாறன்சடகோபன் சொல்லாயிரத்துஇப்பத்தால் *
வேரிமாறாதபூமேலிருபபாள் வினைதீர்க்குமே. (௧௧)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

வீற்றிருக்கும்மால்விண்ணில் மிககமயல்தன்னை *
ஆற்றுதற்காத தன்பெருமையானதெல்லாம் *—தோற்றவந்து
நன்றுகலக்கப்போற்றி நன்குஉகந்துவீறுஉரைத்தான் *
சென்றதுயர்மாறன்தீர்ந்து. (௩௫)

சீயர் திருவடிகளே சரணம்.

---

‡ 'வானக' என்பதை மூன்றாமடியிற் சேர்த்தும் கூறுவா.

## கூ - ஆந் திருவாய்மொழி—தீர்ப்பாரை.

[வெறிவிலக்கு.]

கலிநிலைத்துறை.

பண் - ஸ்ரீகாமரம், பழந்தக்கராகம், தாளம் - இடையொத்து.
பந்துவராளிராகம் - அடதாளம்

தீர்ப்பாரையாம்இனி எங்ஙனமநாடுதும் ? அன்னைமீர் ! *
ஓர்ப்பால்இவ்வொண்ணுதல் உற்றநல்நோயிதுதேறினோம் *
போர்ப்பாகுதான்செய்து அன்றைவரைவெல்வித்த * மாயப்போர்த்
தேர்ப்பாகனார்க்கு இவள்சிந்தைதுழாய்த்திசைக்கின்றதே. (க)

திசைக்கின்றதேஇவள்நோய் இதுமிக்கபெருந்தெய்வம் *
இசைப்பின்றி நீரணங்காடும்இளந்தெய்வமன்றிது *
திசைப்பின்றியே சங்குசக்கரமென்றிவள்கேட்க * நீர்
இசைக்கிற்றிராகில் நன்றேஇல்பெறுமிதுகாண்மினே. (உ)

இதுகாண்மின்அன்னைமீர் ! இக்கட்டுவிச்சிசொற்கொண்டு * நீர்
எதுவானும்செய்து அங்கோர்கள்ளுமஇறைச்சியுமதூவேன்மின் *
மதுவார்துழாய்முடி மாயப்பிரான்கழல்வாழ்த்தினால *
அதுவேஇவளுற்றநோய்க்கும் அருமருந்தாகுமே. (ங)

மருந்தாகுமென்று அங்கோர்மாயவலவைசொற்கொண்டு * நீர்
கருஞ்சோறும்மற்றைச்செஞ்சோறும களனிழைத்தென்பயன் ? *
ஒருங்காகவேஉலகேழும விழுங்கியுமிழ்ந்திட்ட *
பெருந்தேவன்பேர்சொல்லகிற்கில இவளைப்பெறுதிரே. (ச)

இவளைப்பெறுமபரிசு இவ்வணங்காடுதலன்றந்தோ ! *
குவளைத்தடங்கண்ணும கோவைசெவ்வாயுமபயந்தனள் *
கவளக்கடாக்களிறட்டபிரான் திருநாமத்தால் *
தவளப்பொடிக்கொண்டு நீர்இட்டிடுமின்தணியுமே. (ரு)

தணியும் † பொழுதில்லை நீரணங்காடுதிர்அன்னைமீர் ! *
பிணியும்ஒழிகின்றதில்லை பெருகும்இதுவல்லால் *
மணியினணிநிறமாயன் தமரடிநீறுகொண்டு *
அணியமுயலின் மற்றில்லைகண்டீர்இவ்வணங்குக்கே. (சு)

அணங்குக்கருமருந்தென்று அங்கோராடும்கள்ளும்பராய் *
‡ சுணங்கையெறிந்து நுமதோள்குலைக்கப்படும்அன்னைமீர் ! *
உணங்கல்கெடக் கழுதையுதடாட்டம்கண்டென்பயன் ? *
வணங்கீர்கள்மாயப்பிரான்தமர் வேதம்வல்லாரையே. (எ)

---

† 'பொழுதின்றி' என்பது பன்னீராயிரப்படி. ‡ 'துணங்கை' என்றும் பாடம்.

வேதம்வல்லார்களைக்கொண்டு விண்ணோர்பெருமான்திருப்
பாதம்பணிந்து * இவளநோயிது தீர்த்துக்கொள்ளாதுபோய் *
ஏதம்பறைந்துஅல்லசெய்து கள்ளூடுகலாய்த்தூய் *
கீதமுழவிட்டு நீரணங்காடுதல்கீழ்மையே. (௮)

கீழ்மையினால்அங்கு ஓர்கீழ்மகனிட்டமுழவினகீழ் *
நாழ்மைபலசொல்லி நீரணங்காடும்பொய்காண்கிலேன் *
ஏழ்மைப்பிறப்புக்கும்சேமம இந்நோய்க்குமீதேமருந்து *
ஊழ்மையில்கண்ணபிரான் கழலவாழ்த்துமின்உன்னிதே. (௯)

உன்னித்துமற்றொருதெய்வந்தொழாள் அவனையல்லால் *
நும்மிச்சைசொல்லி நுமதோளகுலைக்கப்படும்அன்னைமீர்! *
மன்னப்படுமறைவாணனை வண்துவராபதி
மன்னனை * ஏத்துமின் ஏதத்தலும்தொழுதாடுமே. (௧௦)

தொழுதாடித்தூமணிவண்ணனுக்கு ஆட்செய்துநோய்தீர்ந்த *
வழுவாதொல்புகழ் வண்குருகூர்ச்சடகோபன் * சொல்
வழுவாதஆயிரத்துள் இவைபத்துவெறிகளும் *
தொழுதாடிப்பாடவல்லார் துக்கசீலமிலர்களே. (௧௧)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

தீர்ப்பாரிலாதமயல் தீரக்கலந்தமால் *
ஓர்ப்பாதுமின்றி உடன்பிரிய *—நேர்க்க
அறிவழிந்து உற்றொரும்அறக்கலங்க * பேர்கேட்டு
அறிவுபெற்றான் மாறன்சீலம். (௩௬)

சீயர் திருவடிகளே சரணம்.

---

## எ - ஆந் திருவாய்மொழி—சீலமில்லா.

---

[ஆழ்வார் எம்பெருமானது திருமேனியைக் கண்டு மேவும்படி அஹோராத்ரம் வருந்திக் கூப்பிடுதல்.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பண் - பழந்தக்கராகம், தாளம் - ஏழொத்து கண்டாராகம் - ஆத்தாளம்.

சீலமில்லாச்சிறியனேலும் செய்வினையோபெரிதால் *
ஞாலமுண்டாய்! ஞானமூர்த்தீ! நாராயணா! என்றென்று *
காலந்தோறுமயானிருந்து கைதலைபூசலிட்டால் *
கோலமேனிகாணவாராய் கூவியும்கொள்ளாயே. (௧)

கொள்ளமாளா இன்பவெள்ளம் கோதிலதந்திடும் * என்
வள்ளலேயோ ! வையமகொண்ட வாமனாவோ ! என்றென்று *
நள்ளிராவும்நன்பகலும் நானிருநதோலமிட்டால *
கள்ளமாயா ! உன்னை என்கண்காணவந்தீயாயே. (உ)

ஈவிலாததீவினைகள எததனைசெய்தனன்கொல் ? *
தாவிவையம்கொண்டஎந்தாய் ! தாமோதரா ! என்றென்று *
கூவிக்கூவிநெஞ்சுருகிக் கண்பனிசோரநின்றால் *
பாவிநீயென்றுஒன்றுசொல்லாய் பாவியேன்காணவந்தே. (ங)

காணவநதுஎன்கண்முகப்பே தாமரைக்கண்பிறழ *
ஆணிசெம்பொன்மேனியெந்தாய் ! நின்றருளாயென்றென்று *
நாணமில்லாச் சிறுதகையேன் நானிஙகலற்றுவதென் ? *
பேணிவானோர்காணமாட்டாப் பீடுடையப்பனையே (ச)

அப்பனே ! அடலாழியானே ! ஆழ்கடலைக்கடைந்த
துப்பனே !* உன்தோள்கள்நான்கும கண்டிடக்கூடுஙகொல்? என்று *
எப்பொழுதும்கண்ணநீர்கொண்டு ஆவிதுவர்நதுதுவர்ந்து *
இப்பொழுதேவந்திடாயென்று ஏழையேன்நோக்குவனே. (ரு)

நோக்கிநோக்கிஉன்னைக்காண்பான் யான்எனதாவியுள்ளே *
நாக்குநீள்வன்ஞானமில்லை நாள்தோறும்என்னுடைய *
ஆக்கையுள்ளும ஆவியுள்ளும அல்லபுறத்தினுள்ளும *
நீக்கமின்றிஎங்குமநின்றாய ! நின்னையறிநதறிந்தே. (சு)

அறிந்தறிநதுதேறித்தேறி யான்எனதாவியுள்ளே *
நிறைந்தஞானமூர்த்தியாயை நின்மலமாகவைதது *
பிறந்தும்செத்துமநின்றிடறும பேதைமைதீர்ந்தொழிநதேன் *
நறுந்துழாயின்கண்ணியமமா! நானுன்னைககண்டுகொண்டே. (எ)

கண்டுகொண்டுஎன்கைகளார நின்திருப்பாதஙகள்மேல் *
எண்திசையுமுள்ளபூக்கொண்டு ஏத்தியுகந்துகநது *
தொண்டரோங்களபாடியாடச் சூழ்கடல்ஞாலத்துள்ளே *
வண்துழாயின்கண்ணிவேநதே! வநதிடகில்லாயே. (அ)

இடகிலேன்ஒன்றட்டகில்லேன் ஐம்புலன்வெலலகில்லேன் *
கடவனாகிக்காலநதோறும் பூப்பறித்தேத்தகில்லேன் *
மடவல்நெஞ்சம்காதல்கூர வல்வினையேன்அயர்ப்பாய் *
தடவுகின்றேன்எங்குக்காண்பன் சக்கரத்தண்ணலையே? (கூ)

சக்கரத்தண்ணலே! என்று தாழ்ந்துகண்ணீர்ததும்ப *
பக்கமநோக்கிநின்றலந்தேன் பாவியேன்காண்கின்றிலேன் *
மிக்கஞானமூர்த்தியாய வேதவிளக்கினை * என்
தக்கஞானக்கண்களாலே கண்டுதழுவுவனே. (கO)

தழுவிநின்றகாதல்தன்னால் தாமரைக்கண்ணன்தன்னை *
குழுவுமாடதென்குருகூர் மாறன்சடகோபன் * சொல்
வழுவிலாதவொண்தமிழ்கள் ஆயிரத்துள்இப்பத்தும் *
தழுவப்பாடியாடவல்லார் வைகுந்தமேறுவரே. (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

சீலமிகுகண்ணன் திருநாமத்தால்உணர்ந்து *
மேலவன்தன் மேனிகண்டுமேவுதற்கு *—சால
வருந்திஇரவும்பகலும் மாறாமல்கூப்பிட்டு *
இருந்தனனே தென்குருகூரேறு. (௩எ)

சீயர் திருவடிகளே சரணம்

---

## அ-ஆந் திருவாய்மொழி—ஏறாளும்.

[ஆழ்வார் 'எம்பெருமான்வேண்டாத ஆத்மஆத்மீயங்கள் தமக்கும் வேண்டா'என்பதைத் தலைவிபாசுரத்தாற் பேசுதல்.]

தரவுகொச்சகக்கலிப்பா

பண் - நாட்டம், தாளம் - ஏழொத்து ஸாரங்காகம் - ஆதிதாளம்.

ஏறாளும்இறையோனும் திசைமுகனும்திருமகளும் *
கூறாளும்தனியுடம்பன் குலங்குலமாஅசுரர்களை *
நீறாகும்படியாக நிருமித்துப்படைதொட்ட *
மாறாளன்கவராத மணிமாமைகுறைவிலமே. (க)

மணிமாமைகுறைவில்லா மலர்மாதருறைமார்பன் *
அணிமானத்தடவரைத்தோள் அடலாழித்தடக்கையன் *
பணிமானம்பிழையாமே அடியேனைப்பணிகொண்ட *
மணிமாயன்கவராத மடநெஞ்சால்குறைவிலமே. (உ)

மடநெஞ்சால்குறைவில்லா மகள்தாய்செய்தொருபேய்ச்சி *
விடநஞ்சமுலைசுவைத்த மிகுஞானச்சிறுகுழவி *
படநாகத்தணைக்கிடந்த பருவரைத்தோள்பரம்புருடன் *
நெடுமாயன்கவராத நிறையினால்குறைவிலமே. (௩)

நிறையினால்குறைவில்லா நெடும்பணைத்தோள்மடப்பின்னை *
பொறையினால்முலையணைவான் பொருவிடையேழடர்த்துகந்த *
கறையினார்துவருடுக்கை கடையாவின்கழிகோல்கை *
சறையினார்கவராத தளிர்நிறத்தால்குறைவிலமே. (ச)

தளிர்நிறத்தால்குறைவில்லாத் தனிச்சிறையில்விளப்புற்ற *
கிளிமொழியாள்காரணமாக் கிளரரக்கன்நகரெரித்த *
களிமலர்த்துழாயலங்கல் கமழ்முடியன்கடல்ஞாலத்து *
அளிமிக்கான்கவராத அறிவினால்குறைவிலமே. (ரு)

அறிவினால்குறைவில்லா அகல்ஞாலத்தவரறிய *
நெறியெல்லாமெடுத்துரைத்த நிறைஞானத்தொருமூர்த்தி *
குறியமாணுருவாகிக் கொடுங்கோளால்நிலம்கொண்ட *
கிறியம்மான்கவராத கிளரொளியாலகுறைவிலமே. (௬)

கிளரொளியால்குறைவில்லா அரியுருவாய்க்கிளர்ந்தெழுந்து *
கிளரொளியஇரணியனது அகல்மார்பம்கிழித்துகந்த *
வளரொளியகனலாழி வலம்புரியன், மணிநீல *
வளரொளியான்கவராத வரிவளையால்குறைவிலமே. (எ)

வரிவளையால்குறைவில்லாப பெருமுழக்காலஅடங்காரை *
எரியழலம்புகவூதி இருநிலமுனதுயர்தவிர்த்த *
தெரிவரியசிவன்பிரமன் அமரர்கோன்பணிந்தேத்தும் *
விரிபுகழான்கவராத மேகலையால்குறைவிலமே. (அ)

மேகலையால்குறைவில்லா மெலிவுற்றவகலல்குல் *
போகமகள்புகழ்த்தந்தை விறல்வாணன்புயமதுணிதது *
நாகமிசைத்துயில்வான்போல் உலகெல்லாம்நன்கொடுங்க *
யோகணைவான்கவராத உடம்பினால்குறைவிலமே. (௯)

உடம்பினால்குறைவில்லா உயிர்பிரிந்தமலைததுண்டம் *
கிடந்தனபோல்துணிபலவா அசுரர்குழாம்துணிததுகந்த *
தடம்புனலசடைமுடியன் தனியொருகூறமர்ந்துறையும *
உடம்புடையான்கவராத உயிரினால்குறைவிலமே. (௧௦)

உயிரினால்குறைவில்லா உலகேழ்தன்னுள்ளொடுக்கி *
தயிர்வெண்ணெயுண்டானைத் தடங்குருகூர்ச்சடகோபன் *
செயிரில்சொல்லிசைமாலை ஆயிரத்துள்இப்பத்தால் *
வயிரம்சேர்பிறப்பறுத்து வைகுந்தம்நண்ணுவரே. (௧௧)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

ஏறுதிருவுடைய ஈசனுகப்புக்கு *
வேறுபடில் என்னுடைமை மிக்கவுயிர்* —தேறுங்கால்
என்தனக்கும் வேண்டாவெனும் மாறன்தாளைநெஞ்சே ! *
நந்தமக்குப்பேறாக நண்ணு. (௩அ)

சீயர் திருவடிகளே சரணம்.

---

## கூ-ஆந் திருவாய்மொழி—நண்ணாதார்.

[ஆழ்வார் உலகவியற்கையில் வெறுப்புக்கொண்டு தம்மைத் திருவடியிற் சேர்த்துக்கொள்ளுமாறு எம்பெருமானைப் பிரார்த்தித்தல்.]

தரவுகொச்சகக்கலிப்பா.

பண் - நட்டபாடை. தாளம் - இடையொத்து. தந்யாசிராகம் - நுபகதாளம்.

ஓ நண்ணாதார்முறுவலிப்ப நல்லுற்றார்கரைந்தேங்க *
எண்ணாராத்துயர்விளைக்கும் இவையென்னஉலகியற்கை ? *
கண்ணாளா ! கடல்கடைந்தாய் ! உனகழற்கேவரும்பரிசு *
தண்ணாவாதடியேனைப் பணிகண்டாய்சாமாறே. (௧)

சாமாறும்கெடுமாறும் தமருற்றார்தலைத்தலைப்பெய்து *
ஏமாறிக்கிடந்தலற்றும் இவையென்னஉலகியற்கை ? *
ஆமாறொன்றறியேன்நான் அரவணையாய் ! அம்மானே ! *
கூமாறேவிரைகண்டாய் அடியேனைக்குறிக்கொண்டே. (௨)

கொண்டாட்டும்குலம்புனைவும் தமருற்றார்விழுநிதியும் *
வண்டார்பூங்குழலாளும் மனையொழியஉயிர்மாய்தல் *
கண்டாற்றேன்உலகியற்கை கடல்வண்ணா ! அடியேனை *
பண்டேபோல்கருதாது உன்னடிக்கேகூய்ப்பணிகொள்ளே. (௩)

கொள்ளென்றுகிளர்ந்தெழுந்த பெருஞ்செல்வம்நெருப்பாக *
கொள்ளென்றுதமம்மூடும் இவையென்னஉலகியற்கை ? *
வள்ளலே ! மணிவண்ணா ! உனகழற்கேவரும்பரிசு *
வள்ளல்செய்துஅடியேனை உனதருளால்வாங்காயே. (௪)

வாங்குநீர்மலருலகில் நிற்பனவும்திரிவனவும் *
ஆங்குஉயிர்கள்பிறப்பிறப்புப் பிணிமூப்பால்தகர்ப்புண்ணும் *
ஈங்குஇதன்மேல்வெந்நரகம் இவையென்னஉலகியற்கை ? *
வாங்குஎனைநீமணிவண்ணா ! அடியேனைமறுக்கேலே. (௫)

மறுக்கிவல்வலைப்படுத்திக் குமைத்திட்டுக்கொன்றுண்பர் *
அறப்பொருளையறிந்தோரார் இவையென்னஉலகியற்கை ? *
வெறித்துளவமுடியானே ! வினையேனைஉனக்கடிமை
அறக்கொண்டாய் * இனிஎன்னாரமுதே ! கூயருளாயே. (௬)

ஆயே ! இவ்வுலகத்து நிற்பனவும்திரிவனவும் *
நீயேமற்றொருபொருளும் இன்றிநீநின்றமையால் *
நோயேமூப்பிறப்பிறப்புப் பிணியேயென்றிவையொழிய *
கூயேகொள் அடியேனைக் கொடுவுலகம்காட்டேலே. (௭)

காட்டிநீகரந்துமிழும் நிலம்நீர்தீவிசும்புகால் *
ஈட்டிநீவைத்தமைத்த இமையோர்வாழ்தனிமுட்டை *
† கோட்டையினில்கழித்து என்னைஉன்கொழுஞ்சோதியுயரத்து *
கூட்டரியதிருவடிக்கள் எஞ்ஞான்றுகூட்டுதியே ? (௮)

கூட்டுதிநின்குரைகழல்கள் இமையோரும்தொழாவகைசெய்து *
ஆட்டுதிநீ அரவணையாய் ! அடியேனும் ‡ அஃதறிவன் *
வேட்கையெல்லாம்விடுத்து என்னைஉன்திருவடியேசுமந்துழல *
கூட்டரியதிருவடிக்கள் கூட்டினைநான்கண்டேனே. (௯)

கண்டுகேட்டுற்றுமோந்துண்டுழலும் ஐங்கருவி
கண்டஇன்பம் * தெரிவரிய அளவில்லாச்சிற்றின்பம் *
ஒண்தொடியாள்திருமகளும் நீயுமேநிலாநிற்ப *
கண்டசதிர்கண்டொழிந்தேன் அடைந்தேன்உன்திருவடியே. (௧௦)

திருவடியைநாரணனைக் கேசவனைப்பரஞ்சுடரை *
திருவடிசேர்வதுகருதிச் செழுங்குருகூர்ச்சடகோபன் *
திருவடிமேலுரைத்ததமிழ் ஆயிரத்துள்இப்பத்தும் *
திருவடியேஅடைவிக்கும் திருவடிசேர்ந்தொன்றுமினே. (௧௧)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

நண்ணாதுமாலடியை நானிலத்தே வல்வினையால் *
எண்ணாத்துன்பமுறும் இவ்வுயிர்கள் *—தண்ணிமையைக்
கண்டிருக்கமாட்டாமல் கண்கலங்கும்மாறனருள் *
உண்டுநமக்கு உற்றதுணையொன்று. (௩௯)

சீயர் திருவடிகளே சரணம்.

---

† பன்னீராயிரப்படிக்கு 'கோட்டையினை' என்பதும் பாடம்.
‡ "அதுவறிவன்" என்றும் பாடம்.

## † க0-ஆந் திருவாய்மொழி—ஒன்றுந்தேவும்.

---

['ஸ்ரீமந்நாராயணனே பரதேவதையாகையால் தேவதாந்தரத்தைவிட்டு அவனையே ஆச்ரயியுங்கோள்' என்று முதலித்துப் பேசுதல்.]

**அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.**

**பண் - நாட்டம். தாளம் - ஏழொத்து. சுருட்டிராகம் - ரூபகதாளம்.**

ஒன்றுமதேவும்உலகும்உயிரும்மற்றும் யாதுமில்லா
அன்று * நான்முகன்தன்னொடு தேவருலகோடுஉயிர்படைத்தான் *
குன்றம்போல்மணிமாடநீடு திருக்குருகூரதனுள் *
நின்ற ஆதிப்பிரான்நிற்க ‡ மற்றைத்தெய்வம்நாடுதிரே. (க)

நாடிநீர்வணங்கும்தெய்வமும உம்மையும்முன்படைத்தான் *
வீடில்சீர்ப்புகழாதிப்பிரான் அவன்மேவியுறைகோயில் *
மாடமாளிகைசூழ்ந்தழகாய திருக்குருகூரதனை *
பாடியாடிப்பரவிச்சென்மின்கள் பலவுலகீர் ! பரந்தே. (உ)

பரந்ததெய்வமும்பல்லுலகும்படைத்து அன்றுடனேவிழுங்கி *
கரந்துமிழ்ந்துகடந்திடந்தது கண்டும்தெளியகில்லீர் *
சிரங்களால்அமரர்வணங்கும் திருக்குருகூரதனுள் *
பரன்திறமன்றிப்பல்லுலகீர் ! தெய்வமமற்றில்லைபேசுமினே. (ங)

பேசநின்றசிவனுக்கும்பிரமன்தனக்கும் பிறர்க்கும்
நாயகன்அவனே * கபாலநன்மோக்கத்துக் கண்டுகொண்மின் *
தேசமாமதிள்சூழ்ந்தழகாய திருக்குருகூரதனுள *
ஈசன்பாலோரவமபறைதல் என்னாவதுஇலிங்கியர்க்கே ? (ச)

இலிங்கத்திட்டபுராணத்தீரும சமணரும்சாக்கியரும் *
§ வலிந்துவாதுசெய்வீர்களும் மற்றுநுந்தெய்வமுமாகிநின்றான் *
மலிந்துசெந்நெல்கவரிவீசும் திருக்குருகூரதனுள் *
பொலிந்துநின்றபிரான்கண்டீர் ஒன்றும்பொய்யில்லைபோற்றுமினே (ரு)

போற்றிமற்றோர்தெய்வம் பேணப்புறத்திட்டு * உம்மையின்னே
தேற்றிவைத்தது எல்லீரும்வீடுபெற்றால்உலகில்லையென்றே *
சேற்றில்செந்நெல்கமலமோங்கு திருக்குருகூரதனுள் *
ஆற்றவல்லவன்மாயம்கண்டீர் அதுஅறிந்தறிந்தோடுமினே. (சு)

---

† இது, கோயில்திருவாய்மொழி. ‡ 'மற்றெத்தெய்வம்' என்பதும் சிலர்கொள் பாடம். § 'மலிந்து' என்றும பாடம்.

ஓடியோடிப்பலபிறப்பும்பிறந்து மற்றோர்தெய்வம் *
பாடியாடிப்பணிந்து பல்படிகால்வழியேறிக்கண்டீர் *
கூடிவானவரேத்தநின்ற திருக்குருகூரதனுள் *
ஆடுபுட்கொடியாதிமூர்த்திக்கு அடிமைபுகுவதுவே. (௭)

புக்கடிமையினால்தன்னைக்கண்ட மார்க்கண்டேயனவனை *
நக்கபிரானும்அன்றுஉய்யக்கொண்டது நாராயணனருளே *
கொக்கலர்தடந்தாழைவேலித் திருக்குருகூரதனுள் *
மிக்கஆதிப்பிரான்நிற்க மற்றைத்தெய்வம்விளம்புதிரே. (௮)

விளம்பும்ஆறுசமயமும் அவையாகியும்மற்றும்தன்பால் *
அளந்துகாண்டற்கரியனாகிய ஆதிப்பிரானமரும் *
வளம்கொள்தண்பணைசூழ்ந்தழகாய திருக்குருகூரதனை *
உளம்கொள்ஞானத்துவைம்மின் உம்மைஉய்யக்கொண்டுபோகுறிலே.

உறுவதாவதுஎத்தேவும் எவ்வுலகங்களும்மற்றும்தன்பால் *
மறுவில்மூர்த்தியோடொத்து இத்தனையும்நின்றவண்ணம்நிற்கவே *
செறுவில்செந்நெல்கரும்பொடோங்கு திருக்குருகூரதனுள் *
குறியமாணுருவாகிய நீள்குடக்கூத்தனுக்கு ஆட்செய்வதே. (௧௦)

ஆட்செய்து ஆழிபபிரானைச்சேர்ந்தவன் வண்குருகூர்நகரான் *
நாட்கமழ்மகிழ்மாலைமார்பினன் மாறன்சடகோபன் *
வேட்கையால்சொன்னபாடல் ஆயிரத்துள்இப்பத்தும்வல்லார் *
மீட்சியின்றிவைகுந்தமாநகர் மற்றதுகையதுவே. (௧௧)

ஆழ்வார் திருவடிகளே சரணம்

---

ஒன்றுமிலைத்தேவு இவ்வுலகம்படைத்தமால் *
அன்றியென ஆருமறியவே *—நன்றாக
மூதலித்துப்பேசியருள் மொய்ம்மகிழோன்தாள்தொழவே *
காதலிக்கும் என்னுடையகை. (௪௦)

சீயர் திருவடிகளே சரணம்.

---

## ஐந்தாம்பத்து.

'விரோதியைப் போக்குபவனும் அவனே' என்னுதல்.

## க - ஆந் திருவாய்மொழி—கையார் சக்கரத்து.

[உண்மையான பக்தியில்லாதிருக்கையிலும் பொய்யாகப்பேசிய தமக்குப் பேறளித்தானென்று ஆழ்வார் எம்பெருமானது பரம க்ருபையைப் பேசுதல்.]

கலிநிலைத்துறை.

பண் - குறிஞ்சி, தாளம் - ஏழொத்து. முகாரி ராகம் - அடதாளம்.

கையார்சக்கரத்து என்கருமாணிக்கமே! என்றென்று *
பொய்யேகைம்மைசொல்லிப் புறமேபுறமேயாடி *
மெய்யேபெற்றொழிந்தேன் விதிவாய்க்கின்றுகாப்பாரார்? *
ஐயோ! கண்ணபிரான்! அறையோ! இனிப்போனாலே (க)

போனாய்! மாமருதின்நடுவே என்பொல்லாமணியே! *
தேனே! இன்னமுதே! என்றென்றேசில † கூத்துச்சொல்ல *
தானேல்எம்பெருமான் அவன்என்னாகியொழிந்தான் *
வானேமாநிலமே மற்றுமுற்றும்என்னுள்ளனவே. (உ)

உள்ளனமற்றுளவாப் புறமேசிலமாயம்சொல்லி *
வள்ளல்! மணிவண்ணனே! என்றென்றேஉன்னையும்வஞ்சிக்கும் *
கள்ளமனம்தவிர்ந்தே உன்னைக்கண்டுகொண்டுய்ந்தொழிந்தேன் *
வெள்ளத்தணைக்கிடந்தாய்! இனிஉன்னைவிட்டுஎன்கொள்வனே? (ங)

என்கொள்வன்? உன்னைவிட்டென்னும் வாசகங்கள்சொல்லியும் *
வன்கள்வனேனமனத்தைவலித்துக் கண்ணநீர்கரந்து *
நின்கண்நெருங்கவைத்தே எனதாவியைநீக்ககில்லேன் *
என்கண்மலினமறுத்து என்னைக் ‡ கூவியருளாய்கண்ணனே! (ச)

கண்ணபிரானை விண்ணோர்கருமாணிக்கத்தைஅமுதை *
நண்ணியுமநண்ணகில்லேன் நடுவேயோருடம்பிலிட்டு *
திண்ணமழுந்தக்கட்டிப் பலசெய்வினைவன்கயிற்றால் *
புண்ணைமறையவரிந்து என்னைப்போரவைத்தாய்புறமே. (ரு)

---

† 'கூற்று' என்பது உரையின் பாடம். ‡ 'கூயருளாய்' என்றும் பாடம.

புறமறக்கட்டிக்கொண்டு இருவல்வினையார்குமைக்கும் *
முறைமுறையாக்கைபுகலொழியக் கண்டுகொண்டொழிந்தேன் *
நிறமுடைநால்தடந்தோள் செய்யவாய்செய்யதாமரைக்கண் *
அறமுயலாழியங்கைக் கருமேனியம்மான்தன்னையே. (சு)

அம்மான் ஆழிப்பிரான் அவன்எவ்விடத்தான் ? யான்ஆர் ? *
எம்மாபாவியர்க்கும் விதிவாய்க்கின்றுவாய்க்கும்கண்டீர் *
கைம்மாதுன்பொழித்தாய் ! என்று கைதலைபூசலிட்டே *
மெய்ம்மாலாயொழிந்தேன் எம்பிரானும்என்மேலானே. (எ)

மேலாததேவர்களும் நிலத்தேவரும்மேவித்தொழும் *
மாலார்வந்து § இனநாள் அடியேன்மனத்தேமன்னினார் *
சேலேய்கண்ணியரும பெருஞ்செல்வமும்நன்மக்களும் *
மேலாத்தாய்தந்தையும் அவரேஇனியாவாரே. (அ)

ஆவாரார் துணை ? என்று அலைநீர்க்கடலுளழுந்தும்
நாவாய்போல் * பிறவிக்கடலுள் நின்றுநான்துளங்க *
தேவார்கோலத்தொடும் திருச்சக்கரம்சங்கினொடும் *
ஆவா ! என்றுஅருள்செய்து அடியேனொடும்ஆனானே. (கூ)

ஆனானுடையானென்று அஃதேகொண்டுஉகந்துவந்து *
தானேஇன்னருள்செய்து என்னைமுற்றவும்தானானான் *
மீனாய்ஆமையுமாய் நரசிங்கமுமாய்க்குறளாய் *
கானாரேனமுமாய்க் கற்கியாமஇன்னம்கார்வண்ணனே. (கO)

கார்வண்ணன்கண்ணபிரான் கமலத்தடங்கண்ணன்தன்னை *
ஏர்வளவொண்கழனிக் குருகூர்ச்சடகோபன்சொன்ன *
சீர்வண்ணவொண்தமிழ்கள் இவையாயிரத்துள்இப்பத்தும் *
ஆர்வண்ணத்தால்உரைப்பார் அடிக்கீழ்புகுவார்பொலிந்தே. (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

கையாரும்சக்கரத்தோன் காதலின்றிக்கேயிருக்க *
பொய்யாகப்பேசும் புறனுரைக்கு *—மெய்யான
பேற்றைஉபகரித்த பேரருளின்தன்மைதனை *
போற்றினனே மாறன் பொலிந்து. (சக)

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

§ 'இந்நாள்' என்பதும் பாடம்.

## உ - ஆந் திருவாய்மொழி—பொலிகபொலிக.

[ஸ்ரீ வைஷ்ணவர்திரளைக் கண்டு வாழ்த்தி, அல்லாதாரைத் திருந்துமாறு உபதேசித்தல்.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பண் - சீகாமரம். தாளம் - இடையொத்து. கல்யாணிராகம் - திரிபுடைதாளம்

ஸ்ரீ பொலிகபொலிகபொலிக போயிற்றுவல்லுயிர்ச்சாபம் *
நலியும்நரகமும்நைந்த நமனுக்குஇங்குயாதொன்றுமில்லை *
கலியும்கெடும்கண்டுகொண்மின் கடல்வண்ணன்பூதங்கள்மண்மேல் *
மலியப்புகுந்துஇசைபாடி ஆடியுழிதரக்கண்டோம். (க)

கண்டோம்கண்டோம்கண்டோம் கண்ணுக்கினியனகண்டோம் *
தொண்டீர் ! எல்லீரும்வாரீர் தொழுதுதொழுதுநின்றார்த்தும் *
வண்டார்தண்ணந்துழாயான் மாதவன்பூதங்கள்மண்மேல் *
பண்தான்பாடிநின்றாடிப் பரந்துதிரிகின்றனவே. (உ)

திரியும்கலியுகம்நீங்கித் தேவர்கள்தாமும்புகுந்து *
பெரியகிதயுகம்பற்றிப் பேரின்பவெள்ளம்பெருக *
கரியமுகில்வண்ணன்எம்மான் கடல்வண்ணன்பூதங்கள்மண்மேல் *
இரியப்புகுந்துஇசைபாடி எங்கும்இடம்கொண்டனவே. (ங)

இடங்கொள்சமயத்தையெல்லாம் எடுத்துக்களைவனபோலே *
தடங்கடல்பள்ளிப்பெருமான்தன்னுடைப் பூதங்களேயாய் *
கிடந்தும்இருந்தும்எழுந்தும் கீதம்பலபலபாடி *
நடந்தும்பறந்தும்குனித்தும் நாடகம்செய்கின்றனவே. (ச)

செய்கின்றதுஎன்கண்ணுக்கொன்றே ஒக்கின்றதுஇவ்வுலகத்து *
வைகுந்தன்பூதங்களேயாய் மாயததினால்எங்கும்மன்னி *
ஐயமொன்றில்லை அரக்கர்அசுரர்பிறந்தீருள்ளீரேல் *
உய்யும்வகையில்லைதொண்டீர் ! ஊழிபெயர்த்திடும்கொன்றே. (ரு)

கொன்றுயிருண்ணும்விசாதி பகைபசிதீயனவெல்லாம் *
நின்றுஇவ்வுலகில்கடிவான் நேமிப்பிரான்தமர்போந்தார் *
நன்றிசைபாடியும்துள்ளியாடியும் ஞாலம்பரந்தார் *
சென்றுதொழுதுய்ம்மின்தொண்டீர் ! சிந்தையைச்செந்நிறுத்தியே. ()

நிறுத்திநும்முள்ளத்துக்கொள்ளும் தெய்வங்கள்உம்மையுய்யக்கொள் *
மறுத்தும்அவனோடேகண்டீர் மார்க்கண்டேயனும்கரியே *
கறுத்தமனமொன்றும்வேண்டா கண்ணனல்லால்தெய்வமில்லை *
இறுப்பதெல்லாம் அவன்மூர்த்தியாயவர்க்கேஇறுமினே. (எ

இறுக்கும்இறையிறுத்துண்ண எவ்வுலகுக்கும்தன்மூர்த்தி *
நிறுத்தினான்தெய்வங்களாக அத்தெய்வநாயகன்தானே *
மறுத்திருமார்வனவன்தன் பூதங்கள்கீதங்கள்பாடி *
வெறுப்பின்றிஞாலத்துமிக்கார் மேவித்தொழுதுய்ம்மின்நீரே. (அ)

மேவித்தொழுதுய்ம்மினீர்கள் வேதப்புனிதவிருக்கை *
நாவில்கொண்டுஅச்சுதன்தன்னை ஞானவிதிபிழையாமே *
பூவில்புகையும்விளக்கும் சாந்தமும்நீரும்மலிந்து *
மேவித்தொழும்அடியாரும் பகவருமமிக்கதுலகே. (கூ)

மிக்கஉலகுகள்தோறும் மேவிக்கண்ணன்திருமூர்த்தி *
நக்கபிரானோடு அயனும்இந்திரனுமமுதலாக *
தொக்கஅமரர்குழாங்கள் எங்கும்பரந்தனதொண்டீர்! *
ஒக்கத்தொழுகிற்றிராகில் கலியுகமொன்றுமில்லையே. (கO)

கலியுகமொன்றுமின்றிக்கே தன்னடியார்க்குஅருள்செய்யும் *
மலியும்சுடரொளிமூர்த்தி மாயப்பிரான்கண்ணன்தன்னை *
கலிவயல்தென்னன்குருகூர்க் காரிமாறன்சடகோபன் *
ஒலிபுகழாயிரத்துஇப்பத்து † உள்ளத்தைமாசறுக்குமே. (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

பொலிகபொலிகவென்று பூமகள்கோன்தொண்டர் *
மலிவுதனைக் கண்டுகந்துவாழ்த்தி * — உலகில்
திருந்தாதார்தமமைத் திருத்தியமாறன்சொல் *
மருந்தாகப்போகும் மனமாசு. (சஉ)

சீயர் திருவடிகளே சரணம்.

---

## ரு - ஆந் திருவாய்மொழி — மாசறுசோதி.

---

[எம்பெருமானது விச்லேஷம் பொறுக்கமாட்டாமல், ஆழ்வார், தலைமகள் ஆசைமேலீட்டினால் பழிக்கு அஞ்சாமல் மடலூரத்துணிந்ததாகக் கூறும் பாசுரம்.]

கலிவிருத்தம்.

பண் - நட்டபாஷை, தாளம் - ஏழொத்து. பியாகடை ராகம் - திரிபுடைதாளம்.

மாசறுசோதி என்செய்யவாய்மணிக்குன்றத்தை *
ஆசறுசீலனை ஆதிமூர்த்தியைநாடியே *
பாசறவெய்தி அறிவிழந்துஎனைநாளையம்? *
ஏசறும்ஊரவர்கவ்வை தோழீ! என்செய்யுமே? (க)

---

† 'உள்ளத்தின்' என்றும் பாடம்.

என்செய்யும்ஊரவர்கவ்வை? தோழீ! இனிநம்மை *
என்செய்யதாமரைக்கண்ணன் என்னைநிறைகொண்டான் *
முன்செய்யமாமையிழந்து மேனிமெலிவெய்தி *
என்செய்யவாயும்கருங்கண்ணும் பயப்பூர்ந்தவே. (௨)

ஊர்ந்தசகடம் உதைத்தபாதத்தன் * பேய்முலை
சார்ந்துசுவைத்தசெவ்வாயன் என்னைநிறைகொண்டான் *
பேர்ந்தும்பெயர்ந்தும் அவனோடன்றிஓர்சொல்லிலேன் *
தீர்ந்தஎன்தோழீ! என்செய்யும்ஊரவர்கவ்வையே? (௩)

ஊரவர்கவ்வையெருவிட்டு அன்னைசொல்நீர் † படுத்து *
ஈரநெல்வித்திமுளைத்த நெஞ்சப்பெருஞ்செய்யுள் *
பேரமர்காதல் கடல்புரையவிளைவித்த *
காரமர்மேனி நம்கண்ணன்தோழீ! கடியனே. (௪)

கடியன்கொடியன்நெடியமால் உலகம்கொண்ட
அடியன் * அறிவருமேனிமாயத்தன் * ஆகிலும்
கொடியஎன்னெஞ்சம் அவனென்றேகிடக்குமெல்லே! *
துடிகொளிடைமடத்தோழீ! அன்னையென்செய்யுமே? (௫)

அன்னைஎன்செய்யில்என்? ஊர்என்சொல்லிலஎன்? தோழிமீர்! *
என்னைஇனிஉமக்காசையில்லை அகப்பட்டேன் *
முன்னையமரர்முதல்வன் வண்துவராபதி
மன்னன் * மணிவண்ணன் வாசுதேவன்வலையுளே. (௬)

வலையுளகப்படுத்து என்னைநல்நெஞ்சம்கூவிக்கொண்டு *
அலைகடற்பள்ளியம்மானை ஆழிப்பிரான்தன்னை *
கலைகொளகலல்குல்தோழீ! நம்கண்களால்கண்டு *
தலையில்வணங்கவும்ஆங்கொலோ? தையலார்முன்பே. (௭)

பேய்முலையுண்டுசகடம்பாய்ந்து மருதிடைப
போய்முதல்சாய்த்து * புள்வாய்பிளந்து களிறட்ட *
தூமுறுவல்தொண்டைவாய்ப்பிரானை எந்நாள்கொலோ? *
யாம்உறுகின்றதுதோழீ! அன்னையர்நாணவே. (௮)

நாணும்நிறையும்கவர்ந்து என்னைநல்நெஞ்சம்கூவிக்கொண்டு *
சேணுயர்வானத்திருக்கும் தேவபிரான்தன்னை *
ஆணைஎன்? தோழீ! உலகுதோறுஅலர்தூற்றி * ஆம்
கோணைகள்செய்து குதிரியாய்மடலூர்துமே. (௯)

---

† 'மடுத்து' என்றும் பாடம்.

யாம்மடலூர்ந்தும் எம்ஆழியங்கைப்பிரானுடை *
தூமடல்தண்ணந்துழாய் மலர்கொண்டுசூடுவோம் *
யாம்மடமின்றித் தெருவுதோறுஅயல்தையலார் *
நாமடங்காப்பழிதூற்றி நாடும்இரைக்கவே. (க0)

இரைக்கும்கருங்கடல்வண்ணன் கண்ணபிரான்தன்னை *
விரைக்கொள்பொழில் † குருகூர்ச்சடகோபன்சொன்ன *
நிரைக்கொளந்தாதி ஓராயிரத்துள்இப்பத்தும் *
உரைக்கவல்லார்க்கு வைகுந்தமாகும்தம்மூரெல்லாம். (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

மாசறுசோதி கண்ணன்வந்துகலவாமையால் *
ஆசைமிகுந்து பழிக்குஅஞ்சாமல்*—ஏசறவே
மண்ணில்மடலூர மாறன்ஒருமித்தான் *
உள்நடுங்கத் தான்பிறந்தவூர். (சரு)

சீயர் திருவடிகளே சரணம்

---

## ச - ஆந் திருவாய்மொழி—ஊரெல்லாம்.

---

[மடலூர்தற்கு அசக்யமாய்த் தலைவி இரவுநீட்டிப்புக்கு வருந்திக் கூறல்.]

‡ கலிவிருத்தம்.

பண் - புறநீர்மை. தாளம் - நடையொத்து. கண்டாராகம் - திரிபுடைதாளம்.

ஊரெல்லாம்துஞ்சி உலகெல்லாம்நள்ளிருளாய் *
நீரெல்லாம்தேறி ஓர்நீளிரவாய்நீண்டதால் *
பாரெல்லாம்உண்ட நம்பாம்பணையான்வாரானால் *
ஆர் ? எல்லே ! வல்வினையேன் ஆவிகாப்பார்இனியே. (க)

ஆவிகாப்பார்இனியார் ? ஆழ்கடல்மண்விண்மூடி *
மாவிகாரமாய் ஓர்வல்லிரவாய்நீண்டதால் *
காவிசேர்வண்ணன் என்கண்ணனும்வாரானால் *
பாவியேன்நெஞ்சமே ! நீயும்பாங்கல்லையே. (உ)

---

† 'குருகூரவர்சடகோபன்' என்றும் பாடம்.

‡ பெரும்பாலும் வெண்டளையால் வந்தது.

நீயுமபாங்கல்லைகாண் நெஞ்சமே! நீளிரவும் *
ஓயும்பொழுதின்றி ஊழியாய்நீண்டதால் *
காயும்கடுஞ்சிலை என்காகுத்தன்வாரானல் *
மாயும்வகையறியேன் வல்வினையேன்பெண்பிறந்தே. (௩)

பெண்பிறந்தாரெய்தும் பெருந்துயர்காண்கிலேனென்று *
ஒண்சுடரோன் வாராதொளித்தான் * இம்மண்ணளந்த
கண்பெரியசெவ்வாய் எங்காரேறுவாரானல் *
எண்பெரியசிந்தைநோய் தீர்ப்பார்ஆர்என்னையே? (௪)

ஆர்என்னை ஆராய்வார்? அன்னையருமதோழியரும் *
நீரென்னே? என்னதே நீளிரவும்துஞசுவரால் *
காரன்னமேனி நமகண்ணனுமவாரானல் *
பேரென்னைமாயாதால் வல்வினையேன்பின்னின்றே. (௫)

† பின்நின்றகாதல்நோய் நெஞ்சமபெரிதடுமால் *
முன்னின்றஇராவூழி கண்புதையமூடிற்றால் *
மன்னின்றசக்கரத்து எம்மாயவனும்வாரானல் *
இந்நின்றநீளாவி காப்பார்ஆர்இவ்விடத்தே? (௬)

காப்பார்ஆர்இவ்விடத்து? கங்கிருளின் நுண்துளியாய் *
சேட்பாலதூழியாய்ச செல்கின்றகங்குல்வாய் *
தூப்பாலவெண்சங்கு சக்கரத்தன்தோன்றானல் *
தீப்பாலவல்வினையேன் தெய்வங்காள! என்செய்கேனே? (௭)

தெய்வங்காள! என்செய்கேன்? ஓரிரவுஏழூழியாய் *
மெய்வந்துநின்று எனதாவிமெலிவிக்கும் *
கைவந்தசக்கரத்து என்கண்ணனும்வாரானல் *
தைவந்ததண்தென்றல் வெஞ்சுடரில்தானடுமே. (௮)

வெஞ்சுடரில்தானடுமால வீங்கிருளின் நுண்துளியாய் *
அஞ்சுடரவெய்யோன் அணிநெடுந்தேர்தோன்றாதால் *
செஞ்சுடர்த்தாமரைக்கண் செல்வனுமவாரானல் *
நெஞ்சிடர்தீர்ப்பார்இனியார்? நின்றுருகுகின்றேனே. (௯)

நின்றுருகுகின்றேனேபோல நெடுவானம் *
‡ சென்றுருகி நுண்துளியாய்ச் செல்கின்றகங்குல்வாய் *
அன்றுஒருகால்வையம அளந்தபிரான்வாரானென்று *
ஒன்றொருகால்சொல்லாது உலகோஉறங்குமே. (௧௦)

---

† 'பின்னின்று' என்றும் பாடம். ‡ 'சென்றுருகு' என்பது உரையின் பாடம்.

உறங்குவான்போல் யோகுசெய்தபெருமானை *
சிறந்தபொழில்சூழ் குருகூர்ச்சடகோபன்சொல் *
நிறங்கிளர்ந்தஅந்தாதி ஆயிரத்துஇப்பத்தால் *
இறந்துபோய்வைகுந்தம் சேராவாறுஎங்ஙனேயோ? (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

ஊரநினைந்தமடல் ஊரவும்ஒண்ணாதபடி *
கூரிருள்சேர்கங்குலுடன் கூடிநின்று *—பேராமல்
தீதுசெய்யமாறன் திருவுள்ளதனைச்சென்றதுயர் *
ஓதுவதுஇங்குஎங்ஙனேயோ? (சச)

சீயர் திருவடிகளே சரணம்.

---

## ரு - ஆந் திருவாய்மொழி—எங்ஙனேயோ.

---

[உருவெளிப்பாடுகண்ட தலைவி தாயை மறுத்துரைத்தல்.]

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

பண் - கைசிகம். தாளம் - ஏழொத்து. (செஞ்சுருட்டிராகம் - ரூபகதாளம்.

எங்ஙனேயோ அன்னைமீர்காள்! என்னைமுனிவதுநீர்? *
நங்கள்கோலத்திருக்குறுங்குடிநம்பியை நான்கண்டபின் *
சங்கினோடும்நேமியோடும் தாமரைக்கண்களோடும் *
செங்கனிவாயொன்றினோடும் செல்கின்றதென்நெஞ்சமே. (க)

என்நெஞ்சினால்நோக்கிக்காணீர் என்னைமுனியாதே *
தென்னன்சோலைத்திருக்குறுங்குடிநம்பியை நான்கண்டபின் *
மின்னுநூலும்குண்டலமும் மார்வில்திருமறுவும் *
மன்னுபூணும்நான்குதோளும் வந்துஎங்கும்நின்றிடுமே. (உ)

நின்றிடும்திசைக்கும்நையுமென்று அன்னையரும்முனிதிர் *
குன்றமாடத்திருக்குறுங்குடிநம்பியை நான்கண்டபின் *
வென்றிவில்லும்தண்டும்வாளும் சக்கரமும்சங்கமும் *
நின்றுதோன்றிக்கண்ணுள்நீங்கா நெஞ்சுள்ளும் நீங்காவே. (ங)

நீங்கநில்லாகண்ணநீர்களென்று அன்னையரும்முனிதிர் *
தேங்கொள்சோலைத்திருக்குறுங்குடிநம்பியை நான்கண்டபின் *
பூந்தண்மாலைத்தண்துழாயும் பொன்முடியும்வடிவும் *
பாங்குதோன்றும்பட்டும்நாணும் பாவியேன்பக்கத்தவே. (ச)

பக்கம்நோக்கிநிற்குமனையுமென்று அன்னையரும்முனிதிர் *
தக்ககீர்த்தித்திருக்குறுங்குடிநம்பியை நான்கண்டபின் *
தொக்கசோதித்தொண்டைவாயும நீண்டபுருவங்களும் *
தக்கதாமரைக்கண்ணும் பாவியேனுவியின்மேலனவே. (ரு)

மேலுமவன்பழிநங்குடிக்குஇவளென்று அன்னைகாணக்கொடாள் *
சோலைசூழ்தண்திருக்குறுங்குடி நம்பியை நான்கண்டபின் *
கோலநீள்கொடிமூக்கும தாமரைக்கண்ணுமகனிவாயும *
நீலமேனியும்நான்குதோளும் என்னெஞ்சம்நிறைந்தனவே. (சு)

நிறைந்தவன்பழிநங்குடிக்குஇவளென்று அன்னைகாணக்கொடாள் *
சிறந்தகீர்த்தித்திருக்குறுங்குடிநம்பியை நான்கண்டபின் *
நிறைந்தசோதிவெள்ளம்சூழ்ந்த நீண்டபொன்மேனியொடும *
நிறைந்துஎன்னுள்ளேநின்றொழிந்தான் நேமியங்கையுளதே. (எ)

கையுள்நன்முகம்வைக்குமநையுமென்று அன்னையரும்முனிதிர *
மைகொள்மாடத்திருக்குறுங்குடிநம்பியை நான்கண்டபின் *
செய்யதாமரைக்கண்ணுமஅல்குலும சிற்றிடையும்வடிவும *
† மொய்யநீள்குழல்தாழ்ந்ததோள்களும பாவியேன்முன்நிற்குமே. ()

முன்நின்றுயென்றுதோழிமார்களும அன்னையருமமுனிதிர் *
மன்னுமாடத்திருக்குறுங்குடிநம்பியை நான்கண்டபின் *
சென்னிநீள்முடிஆதியாய உலப்பிலணிகலத்தன் *
கன்னல்பாலமுதாகிவந்து என்னெஞ்சம்கழியானே. (கூ)

கழியமிக்கதோர்காதலளிவளென்று அன்னைகாணக்கொடாள *
வழுவில்கீர்த்தித்திருக்குறுங்குடிநம்பியை நான்கண்டபின் *
குழுமித்தேவர்குழாங்கள் கைதொழச்சோதிவெள்ளத்தினுள்ளே *
எழுவதோருருஎன்னெஞ்சுள்எழும ஆர்க்குமஅறிவரிதே. (கo)

அறிவரியபிரானை ஆழியங்கையனையேஅலற்றி *
நறியநல்மலர்நாடி நன்குருகூர்ச்சடகோபன்சொன்ன *
குறிகொள்ஆயிரத்துள்இவைபத்தும் திருக்குறுங்குடியதன்மேல் *
அறியக்கற்றுவல்லார்வைட்ணவர் ஆழ்கடல்ஞாலத்துள்ளே. (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்

---

எங்ஙனேநீர்முனிவது என்னையினி? நம்பியழகு *
இங்ஙனேதோன்றுகின்றது என்முன்னே *—அங்ஙன
உருவெளிப்பாடா வுரைத்ததமிழ்மாறன் *
கருதுமவர்க்கு இன்பக்கடல். (சரு)

சீயர் திருவடிகளே சரணம்

---

† 'மெய்கொள்' என்பது உரையின் பாடம்.

## கூ - ஆந் திருவாய்மொழி—கடல்ஞாலம்.

[பிரிவாற்றாது தலைவன்தன்மைகளை அநுகரித்துத் தரிக்கப் பார்க்கிற தலைவியின் நிலைகண்ட தாய 'ஆவேசமோ?' என்று நொந்து கூறும் பாசுரம்.]

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

பண் - ஸ்ரீகாமரம் தாளம் - ஏழொத்து யதுகுலகாம்போதிராகம் - ஆதிதாளம்.

கடல்ஞாலம்செய்தேனுமயானேயென்னும
கடல்ஞாலமாவேனும்யானேயென்னும் *
கடல்ஞாலம்கொண்டேனும்யானேயென்னும
கடல்ஞாலம்கீண்டேனும்யானேயென்னும் *
கடல்ஞாலமுண்டேனும்யானேயென்னும
கடல்ஞாலதீசன்வந்தேறககொலோ? *
கடலஞாலத்தீர்க்குஇவைஎனசொல்லுகேன்?
கடல்ஞாலத்துஎன்மகள்கற்கின்றவே. (க)

கற்கும்கல்விக்குஎல்லையிலனேயெனனும
கற்குமகல்வியாவேனும்யானேயென்னும *
கற்கும்கல்விசெய்வேனுமயானேயென்னும
கற்கும்கல்விதீர்ப்பேனுமயானேயென்னும *
கற்கும்கல்விச்சாரமுமயானேயென்னும்
கற்கும்கலவிநாதன வநதேறக்கொலோ? *
கற்கும்கல்வியீர்கட்குஇவையென்சொல்லுகேன்?
கற்கும்கல்விஎன்மகள்காண்கின்றவே. (உ)

காண்கின்றநிலமெல்லாமயானேயென்னும்
காண்கின்றவிசும்பெல்லாம்யானேயென்னும *
காண்கின்றவெந்தீயெல்லாமயானேயென்னும்
காண்கின்றஇக்காற்றெல்லாமயானேயென்னும *
காண்கின்றகடலெல்லாமயானேயென்னும
காண்கின்றகடல்வண்ணனேறக்கொலோ? *
காண்கின்றஉலகத்தீர்க்குஎன்சொல்லுகேன்?
காண்கின்றஎன்காரிகைசெய்கின்றவே. (ஙூ)

செய்கின்றகிதியெல்லாம்யானேயென்னும்
செய்வானின்றனகளும்யானேயென்னும் *
செய்துமுன் இறந்தவும்யானேயென்னும்
செய்கைபயனுண்பேனும்யானேயென்னும் *
செய்வார்களைச்செய்வேனுமயானேயென்னும
செய்யகமலக்கண்ணனேறக்கொலோ ? *
செய்யஉலகத்தீர்க்குஇவையென்சொல்லுகேன் ?
செய்யகனிவாயிளமான்திறத்தே. (சு)

திறம்பாமல்மண்காக்கின்றேன்யானேயென்னும்
திறம்பாமல்மலையெடுத்தேனேயென்னும *
திறம்பாமல்அசுரரைக்கொன்றேனேயென்னும
திறம்காட்டிஅன்றைவரைக்காத்தேனேயென்னும் *
திறம்பாமல்கடல்கடைந்தேனேயென்னும
திறம்பாதகடல்வண்ணனேறக்கொலோ ? *
திறம்பாதஉலகத்தீர்க்குஎன்சொல்லுகேன் ?
திறம்பாதுஎன்திருமகள்எய்தினவே. (ரு)

இனவேய்மலையேந்தினேன்யானேயென்னும்
இனவேறுகள்செற்றேனுமயானேயென்னும் *
இனவான்கன்றுமேய்த்தேனுமயானேயென்னும
இனவாநிரைகாத்தேனும்யானேயென்னும் *
இனவாயர்தலைவனும்யானேயென்னும்
இனத்தேவர்தலைவன்வந்தேறக்கொலோ ? *
இனவேற்கண்நல்லீர்க்குஇவையென்சொல்லுகேன் ?
இனவேற்கண்ணிஎன்மகளுற்றனவே. (எ)

உற்றார்களெனக்குஇல்லையாருமென்னும்
உற்றார்களெனக்கிங்கெல்லாருமென்னும *
உற்றார்களைச்செய்வேனும்யானேயென்னும் *
உற்றார்களையழிப்பேனும்யானேயென்னும் *
† உற்றார்களுக்குஉற்றேனுமயானேயென்னும் *
உற்றாரிலிமாயன்வந்தேறக்கொலோ ? *
உற்றீர்கட்குஎன்சொல்லிச்சொல்லுகேன்யான் ?
உற்றுஎன்னுடைப்பேதைஉரைக்கின்றவே. (அ)

உரைக்கின்றமுக்கண்பிரான்யானேயென்னும்
உரைக்கின்றதிசைமுகன்யானேயென்னும் *
உரைக்கின்றஅமரரும்யானேயென்னும்
உரைக்கின்றஅமரர்கோன்யானேயென்னும் *

---

†, 'உற்றார்கட்கு' என்றும் பாடம்.

உரைக்கின்றமுனிவரும்யானேயென்னும்
உரைக்கின்றமுகில்வண்ணனேறக்கொலோ ? *
உரைக்கின்றவுலகத்தீர்க்குஎன்சொல்லுகேன் ?
உரைக்கின்றஎன்கோமளவொண்கொடிக்கே. (அ)

கொடியவினையாதுமிலனேயென்னும்
கொடியவினையாவேனும்யானேயென்னும் *
கொடியவினைசெய்வேனும்யானேயென்னும்
கொடியவினைதீர்ப்பேனும்யானேயென்னும் *
கொடியானிலங்கைசெற்றேனேயென்னும்
கொடியபுள்ளுடையவனேறக்கொலோ ? *
கொடியவுலகத்தீர்க்குஇவையென்சொல்லுகேன் ?
கொடியேன்கொடிஎன்மகள்கோலங்களே. (சு)

கோலங்கொள்சுவர்க்கமும்யானேயென்னும்
கோலமில்நரகமும்யானேயென்னும் *
கோலந்திகழ்மோக்கமும்யானேயென்னும்
கோலங்கொளுயிர்களும்யானேயென்னும் *
கோலங்கொள்தனிமுதல்யானேயென்னும்
கோலங்கொள்முகில்வண்ணனேறக்கொலோ ? *
கோலங்கொளுலகத்தீர்க்குஎன்சொல்லுகேன் ?
கோலந்திகழ்கோதைஎன்கூந்தலுக்கே (கo)

கூந்தல்மலர்மங்கைக்கும்மண்மடந்தைக்கும்
குலவாயர்கொழுந்துக்கும்கேள்வன்தன்னை *
வாய்ந்தவழுதிவளநாடன் மன்னு
குருகூர்ச்சடகோபன்குற்றேவல்செய்து *
ஆய்ந்ததமிழ்மாலை ஆயிரத்துள்
† இவையுமவைபத்தும்வல்லார் * உலகில்
‡ ஏந்துபெருஞ்செல்வத்தராய்த் திருமா
லடியார்களைப்பூசிக்கநோற்றார்களே. (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

கடல்ஞாலத்தீசனை முன்காணமல்நொந்தே *
உடனு அனுகரிக்கலுற்று *— திடமாக
வாய்ந்தவனாய்த்தான்பேசும் மாறனுரையதனை *
ஆய்ந்துரைப்பார் ஆட்செய்யநோற்றார். (சசு)

சீயர் திருவடிகளே சரணம்.

---

† 'இவையொருபத்தும்' என்றும், ‡ 'எய்ந்த' என்றும் பாடம்.

## எ - ஆந் திருவாய்மொழி—நோற்றநோன்பு.

[ஆழ்வார் எம்பெருமானையன்றித் தாம்தரியாத தமது அநந்ய கதித்வத்தை யெடுத்துக்கூறி வானமாமலைப்பெருமானிடத்தில் ப்ரபத்தி பண்ணுதல்.]

ஆசிரியத்துறை.

பண் - ஸ்ரீகாமரம். தாளம் - ஏழொத்து. ஸாவேரிராகம் - ஆதிதாளம்.

*(ஓ) நோற்றநோன்பிலேன் நுண்ணறிவிலேன் * ஆகிலும்இனிஉன்னை*
*ஆற்றகிற்கின்றிலேன் அரவினணையம்மானே ! * [விட்டொன்றும்*
*சேற்றுத்தாமரைசெந்நெலூடுமலர் சிரீவரமங்கலநகர் **
*வீற்றிருந்தஎந்தாய் ! உனக்குமிகையல்லேனங்கே.* (க)

*அங்குற்றேனல்லேன்இங்குற்றேனல்லேன் உன்னைக்காணுமவாவில்*
*எங்குற்றேனுமல்லேன் இலங்கைசெற்றஅம்மானே!* [வீழ்ந்து *நான்*
*திங்கள்சேர்மணிமாடநீடு சிரீவரமங்கலநகருறை **
*சங்குசக்கரத்தாய் ! தமியேனுக்கருளாயே.* (உ)

*கருளப்புட்கொடிசக்கரப்படை வானநாட ! என்கார்முகில்வண்ணா ! **
*பொருளல்லாதவென்னைப்பொருளாக்கி அடிமைகொண்டாய் ! **
*தெருள்கொள்நான்மறைவல்லவர்பலர்வாழ் சிரீவரமங்கலநகர்க்கு **
*அருள்செய்து அங்கிருந்தாய் ! அறியேன்ஒருகைம்மாறே.* (ங)

*மாறுசேர்படைநூற்றுவர்மங்க ஓரைவர்க்காயன்றுமாயப்போர்பண்ணி**
*நீறுசெய்தஎந்தாய் ! நிலங்கீண்டஅம்மானே ! **
*தேறுஞானத்தர்வேதவேள்வியறாச் சிரீவரமங்கலநகர் **
*ஏறிவீற்றிருந்தாய் ! உன்னைஎங்கெய்தக்கூவுவனே ?* (ச)

*எய்தக்கூவுதலாவதேயெனக்கு ? எவ்வதெய்வத்துளாயுமாய்நின்று **
*கைதவங்கள்செய்யும் கருமேனியம்மானே ! **
*செய்தவேள்வியர்வையத்தேவரறாச் சிரீவரமங்கலநகர் **
*கைதொழஇருந்தாய் அதுநானும்கண்டேனே.* (ரு)

*(ஓ) ஏனமாய்நிலங்கீண்டஎன்னப்பனே ! கண்ணா ! என்றும்என்னையா*
*வானநாயகனே ! மணிமாணிக்கச்சுடரே ! * [ளுடை **
*தேனமாம்பொழில்தண்சிரீவரமங்கலத்தவர் கைதொழவுறை **
*வானமாமலையே ! அடியேன்தொழவந்தருளே.* (சு)

MAHAMAHOPADHYAYA

வந்தருளியென்னெஞ்சிடங்கொண்ட வானவர்கொழுந்தே!*உலகுக்கோர்
முந்தைத்தாய்தந்தையே ! முழுவேழுலகுமுண்டாய் ! *
செந்தொழிலவர்வேதவேள்வியறாச் சிரீவரமங்கலநகர் *
அந்தமில்புகழாய் ! அடியேனை அகற்றேலே. (எ)

அகற்றநீவைத்தமாயவல்லைம்புலன்களாமவை நன்கறிந்தனன் *
அகற்றியென்னையும்நீ அருஞ்சேற்றில்வீழ்த்திகண்டாய் *
பகற்கதிர்மணிமாடநீடு சிரீவரமங்கைவாணனே ! * என்றும்
புகற்கரியஎந்தாய் ! புள்ளின்வாய்பிளந்தானே ! (அ)

புள்ளின்வாய்பிளந்தாய் ! மருதிடைபோயினாய் ! எருதேழடர்த்த*என்
கள்ளமாயவனே ! கருமாணிக்கச்சுடரே ! *
தெள்ளியார்திருநான்மறைகள்வல்லார் மலிதண்சிரீவரமங்கை
யுள் * இருந்தஎந்தாய்! அருளாய்உய்யுமாறுஎனக்கே. (௯)

ஆறெனக்குநின்பாதமே சரணாகத்தந்தொழிந்தாய் * உனக்குஓர்கைம்
மாறுநானொன்றிலேன் எனதாவியும்உனதே *
சேறுகொள்கரும்பும்பெருஞ்செந்நெலும் மலிதண்சிரீவரமங்கை *
நாறுபூந்தண்துழாய்முடியாய் ! தெய்வநாயகனே ! (௧௦)

ஓ தெய்வநாயகன்நாரணன் திரிவிக்கிரமனடியிணைமிசை *
கொய்கொள்பூம்பொழில்சூழ் குருகூர்ச்சடகோபன் *
செய்தஆயிரத்துள்ளிவை தண்சிரீவரமங்கைமேயபத்துடன் *
வைகல்பாடவல்லார் வானோர்க்குஆராவமுதே. (௧௧)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

நோற்றநோன்பிலியேன் நுந்தனைவிட்டாற்றகில்லேன் *
பேற்றுக்குஉபாயம் உன்தன்பேரருளே—சாற்றுகின்றேன் *
இங்கென்னிலையென்னும் எழில்மாறன்சொல்வல்லார் *
அங்குஅமரர்க்கு ஆராவமுது. (௪எ)

சீயர் திருவடிகளே சரணம்.

---

## † அ - ஆந் திருவாய்மொழி—ஆராவமுதே.

[பலஸித்தியாகாமையால் ஆராவமுதாழ்வாரிடத்தில் ஆழ்வார் தீராத ஆசையுடன் ஆற்றாமைபேசி அலமருதல்.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

பண் - காந்தாரம். தாளம் - ஏழொத்து. தந்யாசிராகம் - ஆதிதாளம்.

ஆராவமுதே! அடியே ‡ னுடலம் நின்பாலன்பாயே *
நீராயலைந்துகரைய உருக்குகின்றநெடுமாலே! *
சீரார்செந்நெல்கவரிவீசும் செழுநீர்த்திருக்குடந்தை *
ஏரார்கோலம்திகழக்கிடந்தாய்! கண்டேன்எம்மானே! (௧)

எம்மானே! என்வெள்ளைமூர்த்தி! என்னையாள்வானே! *
எம்மாவுருவும்வேண்டுமாற்றால் ஆவாய்! எழிலேறே! *
செம்மாகமலம்செழுநீர்மிசைக்கண்மலரும் திருக்குடந்தை *
அம்மாமலர்க்கண்வளர்கின்றானே! என்நான்செய்கேனே? (௨)

என்நான்செய்கேன்? யாரேகளைகண்? என்னைஎன்செய்கின்றாய்? *
உன்னாலல்லால்யாவராலும் ஒன்றும்குறைவேண்டேன் *
கன்னார்மதிள்சூழ்குடந்தைக்கிடந்தாய்! அடியேனருவாணாள் *
சென்னாள்எந்நாள்? அந்நாள் உன்தாள்பிடித்தேசெலக்காணே. (௩)

செலக்காண்கிற்பார்காணுமளவும் செல்லும்கீர்த்தியாய்! *
உலப்பிலானே! எல்லாவுலகுமுடையவொருமூர்த்தி! *
நலத்தால்மிக்கார்குடந்தைக்கிடந்தாய்! உன்னைக்காண்பான்நான்
அலப்பாய் * ஆகாசத்தைநோக்கி அழுவன்தொழுவனே. (௪)

அழுவன்தொழுவன் ஆடிக்காண்பன் பாடியலற்றுவன் *
தழுவல்வினையால்பக்கம்நோக்கி நாணிக்கவிழ்ந்திருப்பன் *
செழுவொண்பழனக்குடந்தைக்கிடந்தாய்! செந்தாமரைக்கண்ணா! *
தொழுவனேனைஉன்தாள் சேரும்வகையேசூழ்கண்டாய். (௫)

சூழ்கண்டாயென்தொல்லைவினையையறுத்து உன்னடிசேரும்
ஊழ்கண்டிருந்தே * தூராக்குழிதூர்த்து எனைநாளகன்றிருப்பன்? *
வாழ்தொல்புகழார்குடந்தைக்கிடந்தாய்! வானோர்கோமானே! *
யாழினிசையே! அமுதே! அறிவின்பயனே! அரியேறே! (௬)

அரியேறே! என்னம்பொற்சுடரே! செங்கண்கருமுகிலே! *
எரியே! பவளக்குன்றே! நால்தோளெந்தாய்! உனதருளே *
பிரியாஅடிமைஎன்னைக்கொண்டாய்! குடந்தைத்திருமாலே! *
தரியேன்இனிஉன்சரணம்தந்து என்சன்மம்களையாயே. (௭)

---

† இது, கோயில்திருவாய்மொழி. ‡ 'உடலும்' எனக் கொள்ளவும் இடமுண்டு.

களைவாய்துன்பம்களையாதொழிவாய் களைகண்மற்றிலேன் *
வளைவாய்நேமிப்படையாய் ! குடந்தைக்கிடந்தமாமாயா ! *
தளராவுடலம்எனதாவி சரிந்துபோம்போது *
இளையாதுஉனதாள்ஒருங்கப்பிடித்துப் போதஇசைநீயே. (அ)

இசைவித்துஎன்னை உன்தாளிணைக்கீழ்இருத்தும்அம்மானே ! *
அசைவிலமரர்தலைவர்தலைவா ! ஆதிப்பெருமூர்த்தி ! *
திசைவில்வீசும்செழுமாமணிகள்சேரும் திருக்குடந்தை *
அசைவிலுலகம்பரவக்கிடந்தாய் ! காணவாராயே. (கூ)

வாராவருவாய்வருமென்மாயா ! மாயாமூர்த்தியாய் ! *
ஆராவமுதாய் அடியேனாவிஅகமேதித்திப்பாய் *
தீராவினைகள்தீரஎன்னையாண்டாய் ! திருக்குடந்தை
ஊரா ! * உனக்காட்பட்டும் அடியேன்இன்னும்உழலவேனோ ? (கo)

உழலையென்பின்பேய்ச்சிமுலையூடு அவளைஉயிருண்டான் *
கழல்களவையேசரணாகக்கொண்ட குருகூர்ச்சடகோபன் *
குழலின்மலியச்சொன்ன ஓராயிரத்துளஇப்பத்தும் *
மழலைதீரவல்லார் காமர்மானேய்நோக்கியர்க்கே. (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்

---

ஆராவமுதாழ்வார் ஆதரித்தபெருமைகளை *
தாராமையாலே தளர்ந்துமிக *—தீராத
ஆசையுடன்ஆற்றாமைபேசி யலமந்தான *
பாசறுசீர் மாறனெம்மான். (சஅ)

சீயர் திருவடிகளே சரணம்

---

## கூ - ஆந் திருவாய்மொழி—மானேய்நோக்கு.

[திருவல்லவாழ்செல்ல ஒருப்பட்டதலைவி விடாயத்துப் புறச்சோலையில் விழுந்து தடுக்குந் தோழியரை நல்வார்த்தைகூறி 'அந்தத் திருவல்லவாழ்ப்பிரானை என்று அடைவேன் ?' என்று கூறும் பாசுரம்.]

கலிநிலைத்துறை.

பண் - பஞ்சமம். தாளம் - ஏழொத்து. முகாரிராகம் - அடதாளம்.

மானேய்நோக்குநல்லீர் ! வைகலும்வினையேன்மெலிய *
வானார்வண்கமுகும் மதுமல்லிகைகமழும் *
தேனார்சோலைகள்சூழ் திருவல்லவாழுறையும்
கோனாரை * அடியேன் அடிகூடுவதென்றுகொலோ ? (க)

என்றுகொல்? தோழிமீர்காள்! எம்மைநீர்நலிந்துஎன்செய்தீரோ? *
பொன்திகழ்புன்னைமகிழ் புதுமாதவிமீதணவி *
தென்றல்மணங்கமழும் திருவல்லவாழ்நகருள்
நின்றபிரான் * அடிநீறு அடியோம்கொண்டுசூடுவதே. (௨)

சூடுமலர்க்குழலீர்! துயராட்டியேனைமெலிய *
பாடுநல்வேதவொலி பரவைத்திரைபோல்முழங்க *
மாடுயர்ந்தோமப்புகைகமழும் தண்திருவல்லவாழ் *
நீடுறைகின்றபிரான் கழல்காண்டுங்கொல்நிச்சலுமே? (௩)

நிச்சலும்தோழிமீர்காள்! எம்மைநீர்நலிந்துஎன்செய்தீரோ? *
பச்சிலைநீள்கமுகும் பலவும்தெங்கும்வாழைகளும் *
மச்சணிமாடங்கள்மீதணவும் தண்திருவல்லவாழ் *
நச்சரவினணைமேல் நம்பிரானது நன்னலமே. (௪)

நன்னலத்தோழிமீர்காள்! நல்லஅந்தணர்வேள்விப்புகை *
மைந்நலங்கொண்டுஉயர்விண்மறைக்கும் தண்திருவல்லவாழ் *
கன்னலங்கட்டிதன்னைக் கனியைஇன்னமுதந்தன்னை *
என்னலங்கொள்சுடரை என்றுகொல்கண்கள்காண்பதுவே? (௫)

காண்பதுஎஞ்ஞான்றுகொலோ? வினையேன்கனிவாய்மடவீர்! *
பாண்குரல்வண்டினொடு பசுந்தென்றலுமாகிஎங்கும் *
சேண்சினையோங்குமரச் செழுங்கானல்திருவல்லவாழ் *
மாண்குறள்கோலப்பிரான் மலர்த்தாமரைப்பாதங்களே. (௬)

பாதங்கள்மேலணி பூந்தொழக்கூடுங்கொல்? பாவைநல்லீர்! *
ஓதநெடுந்தடத்துள் உயர்தாமரைசெங்கழுநீர் *
மாதர்கள்வாண்முகமும் கண்ணுமேந்தும்திருவல்லவாழ் *
நாதன்இஞ்ஞாலமுண்ட நம்பிரான்தன்னைநாள்தொறுமே. (௭)

நாள்தொறும்வீடின்றியே தொழக்கூடுங்கொல்? நன்னுதலீர்! *
ஆடுறுதீங்கரும்பும் விளைசெந்நெலுமாகிஎங்கும் *
மாடுறுபூந்தடம்சேர் வயல்சூழ்தண்திருவல்லவாழ் *
நீடுறைகின்றபிரான் நிலந்தாவியநீள்கழலே. (௮)

கழல்வளைபூரிப்பயாம்கண்டு கைதொழக்கூடுங்கொலோ? *
குழலென்னயாழுமென்னக் குளிர்சோலையுள்தேனருந்தி *
மழலைவரிவண்டுகளிசைபாடும் திருவல்லவாழ் *
சுழலின்மலிசக்கரப்பெருமானது தொல்லருளே. (௯)

தொல்லருள்நல்வினையால் சொலக்கூடுங்கொல்? தோழிமீர்காள்! *
தொல்லருள்மண்ணும்விண்ணும் தொழநின்றதிருநகரம் *
நல்லருளாயிரவர் நலனேந்தும்திருவல்லவாழ் *
நல்லருள்நம்பெருமான் நாராயணன்நாமங்களே. (௧௦)

நாமங்களாயிரமுடைய நம்பெருமானடிமேல் *
சேமங்கொள்தென்குருகூர்ச் சடகோபன்தெரிந்துரைத்த *
நாமங்களாயிரத்துள் இவைபத்தும்திருவல்லவாழ் *
சேமங்கொள்தென்னகர்மேல் செப்புவார்சிறந்தார்பிறந்தே. (௧௧)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

மாநலத்தால்மாறன் திருவல்லவாழ்புகப்போய் *
தானிளைத்துவீழ்ந்து அவ்வூர்தன்னருகில் *—மேல்நலங்கித
துன்பமுற்றுச்சொன்ன சொல்லுகற்பார்தங்களுக்கு *
பின்பிறக்கவேண்டாபிற. (௫௯)

சீயர் திருவடிகளே சரணம்.

---

# ௧௦ - ஆந் திருவாய்மொழி—பிறந்தவாறும்.

---

[ஆழ்வார் குணாநுபவத்தால் தாம் சிதிலராகாது சேர்ந்து அநுபவிப்பிக்குமாறு எம்பெருமானை வேண்டுதல்.]

ஆசிரியத்துறை

பண் - காந்தாரம். தாளம் - ஏழொத்து மோஹநாரகம் - ஆதிதாளம்

பிறந்தவாறும்வளர்ந்தவாறும் பெரியபாரதம்கைசெய்து * ஐவர்க்
திறங்கள்காட்டியிட்டுச் செய்துபோனமாயங்களும் * [குத்
நிறந்தனூடுபுக்குஎனதாவியை நின்றுநின்றுஉருக்கியுண்கின்ற * இச்
சிறந்தவான்சுடரே ! உன்னைஎன்றுகொல்சேர்வதுவே ? (௧)

வதுவைவார்த்தையுளேறுபாய்ந்ததும் மாயமாவினைவாய்பிளந்ததும் *
மதுவைவார்குழலார் குரவைபிணைந்தகுழகும் *
அதுவிதுவுதுவென்னலாவனல்ல என்னைஉன்செய்கைநைவிக்கும் *
முதுவையமுதல்வா ! உன்னைஎன்றுதலைப்பெய்வனே ? (௨)

பெய்யும்பூங்குழல்பேய்முலையுண்ட பிள்ளைத்தேற்றமும் * பேர்ந்தோர்
செய்யபாதமொன்றால் செய்தநின்சிறுச்சேவகமும் * [சாடிறச்
நெய்யுண்வார்த்தையுள்அன்னைகோல்கொள்ள நீஉன்தாமரைக்கண்கள்
பையவேநிலையும்வந்து என்னெஞ்சைஉருக்குங்களே. (௩) [நீர்மல்க *

கள்ளவேடத்தைக்கொண்டுபோய்ப் புரம்புக்கவாறும் * கலந்தசுரரை
உள்ளம்பேதம்செய்திட்டு உயிருண்டஉபாயங்களும் *
வெள்ளநீர்ச்சடையானும் நின்னிடைவேறலாமைவிளங்கநின்றதும் *
உள்ளமுள்குடைந்து என்னுயிரைஉருக்கியுண்ணுமே. (௪)

உண்ணவானவர்கோனுக்கு ஆயரொருப்படுத்தவடிசிலுண்டதும் *
வண்ணமால்வரையையெடுத்து மழைகாத்ததும் *
மண்ணைமுன்படைத்துண்டுமிழ்ந்து கடந்திடந்துமணந்தமாயங்கள் *
எண்ணுந்தோறும்என்னெஞ்சு எரிவாய்மெழுகொக்கும்நின்றே. (௫)

நின்றவாறும்இருந்தவாறும் கிடந்தவாறும்நினைப்பரியன *
ஒன்றலாஉருவாய் அருவாயநின்மாயங்கள் * [யேற்கு
நின்றுநின்றுநினைகின்றேன் உன்னைஎங்ஙனம்நினைகிற்பன் ? * பாவி
ஒன்றுநன்குரையாய் உலகமுண்டவொண்சுடரே ! (௬)

ஒண்சுடரோடிருளுமாய்நின்றவாறும் உண்மையோடின்மையாய்வந்து*
கண்கொளாவகை நீகரந்துஎன்னைச்செய்கின்றன * [என்
எண்கொள்சிந்தையுள்நைகின்றேன் என்கரியமாணிக்கமே ! * என்
திண்கொள்ளஒருநாள் அருளாய்உன்திருவுருவே. (௭) [கண்கட்குத்

திருவுருவுகிடந்தவாறும்கொப்பூழ்ச்செந்தாமரைமேல் * திசைமுகன்
கருவுள்வீற்றிருந்து படைத்திட்டகருமங்களும் *
பொருவிலுன்தனிநாயகமவை கேட்குந்தோறும்என்னெஞ்சம்நின்று
அருவிசோரும்கண்ணீர் என்செய்கேன்அடியேனே ? (௮) [நெக்கு *

அடியைமூன்றைஇரந்தவாறும் அங்கேநின்றாழ்கடலும்மண்ணும்விண்
முடிய * ஈரடியால் முடித்துக்கொண்டமுக்கியமும் * [ணும்
நொடியுமாறவைகேட்குந்தோறும் என்னெஞ்சம்நின்தனக்கேகரைந்துகும் *
கொடியவல்வினையேன் உன்னைஎன்றுகொல்கூடுவதே ? (௯)

கூடிநீரைக்கடைந்தவாறும் அமுதம்தேவருண்ண * அசுரரை
வீடும்வண்ணங்களே செய்துபோனவித்தகமும் *
ஊடுபுக்குஎனதாவியை உருக்கியுண்டிடுகின்ற * நின்தன்னை
நாடும்வண்ணம்சொல்லாய் நச்சுநாகணையானே ! (௧௦)

நாகணைமிசைநம்பிரான்சரணே சரண்நமக்கென்று * நாள்தொறும்
ஏகசிந்தையனாய்க் குருகூர்ச்சடகோபன்மாறன் *
ஆகநூற்றவந்தாதி ஆயிரத்துள்இவையும்ஓர்பத்தும்வல்லார் *
மாகவைகுந்தத்து மகிழ்வெய்துவர்வைகலுமே. (௧௧)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

பிறந்துஉலகம்காத்தளிக்கும் பேரருட்கண்ணா ! * உன்
சிறந்தகுணத்தாலுருகும் சீலத்—திறம்தவிர்ந்து *
சேர்ந்தனுபவிக்கும்நிலை செய்யென்றசீர்மாறன் *
வாய்ந்தபதத்தே மனமே ! வைகு. (௫௦)

சீயர் திருவடிகளே சரணம்.

---

## ஆறாம்பத்து.

விரோதி நிரஸந சீலனானவனது திருவடிகளில் சரணம்புகுதல்.

### ௧ - ஆந் திருவாய்மொழி — வைகல்பூங்கழி.

[தலைவி திருவண்வண்டூரிலே சக்ரவர்த்தி திருமகன் விஷயமாகப் பக்ஷிகளைத் தூதுவிட்டதை அருளிச்செய்யும் பாசுரம்.]

கலிநிலைத்துறை.

பண் - நட்டராகம். தாளம் - ஏழொத்து அஸாவேரிராகம் - ஆதிதாளம்.

வைகல்பூங்கழிவாய் வந்துமேயுங்குருகினங்காள்! *
செய்கொள்செந்நெலுயர் திருவண்வண்டூருறையும் *
கைகொள்சக்கரத்து என்கனிவாய்ப்பெருமானைக்கண்டு *
கைகள்கூப்பிச்சொல்லீர் வினையாட்டியேன்காதன்மையே. (௧)

காதல்மென்பெடையோடு உடன்மேயுமகருநாராய்! *
வேதவேள்வியொலிமுழங்கும தண்திருவண்வண்டூர் *
நாதன்ஞாலமெல்லாமுண்ட நம்பெருமானைக்கண்டு *
பாதம்கைதொழுதுபணியீர் அடியேன்திறமே. (௨)

திறங்களாகிஎங்கும் செய்களூடுழல்புள்ளினங்காள்! *
சிறந்தசெல்வம்மல்கு திருவண்வண்டூருறையும் *
கறங்குசக்கரக்கைக் கனிவாய்ப்பெருமானைக்கண்டு *
இறங்கிநீர்தொழுதுபணியீர் அடியேனிடரே. (௩)

இடரில்போகமூழ்கி இணைந்தாடுமடவன்னங்காள்! *
விடலில்வேதவொலிமுழங்கும தண்திருவண்வண்டூர் *
† கடலின்மேனிப்பிரான் கண்ணனைநெடுமாலைக்கண்டு *
உடலம்நைந்துஒருத்தி உருகுமென்றுஉணர்த்துமினே. (௪)

உணர்த்தலூடலுணர்ந்து உடன்மேயும்மடவன்னங்காள்! *
திணர்த்தவண்டல்கள்மேல் சங்குசேரும்திருவண்வண்டூர் *
புணர்த்தபூந்தண்துழாய்முடி நம்பெருமானைக்கண்டு *
புணர்த்தகையினராய் அடியேனுக்கும்போற்றுமினே. (௫)

போற்றியான்இரந்தேன் புன்னைமேலுறைபூங்குயில்காள்! *
சேற்றில்வாளைதுள்ளும் திருவண்வண்டூருறையும் *
ஆற்றலாழியங்கை அமரர்பெருமானைக்கண்டு *
மாற்றம்கொண்டருளீர் மையல்தீர்வதொருவண்ணமே. (௬)

† 'கடலமேனி' என்றும் பாடம்.

ஒருவண்ணம்சென்றுபுக்கு எனக்கொன்றுரைஒண்கிளியே! *
செருவொண்பூம்பொழில்சூழ் செக்கர்வேலைத்திருவண்வண்டூர் *
கருவண்ணம்செய்யவாய் செய்யகண்செய்யகைசெய்யகால் *
செருவொண்சக்கரம்சங்கு அடையாளம்திருந்தக்கண்டே. (எ)

திருந்தக்கண்டெனக்கொன்றுரையாய் ஒண்சிறுபூவாய்! *
செருந்திஞாழல்மகிழ் புன்னைசூழ்தண் திருவண்வண்டூர் *
பெருந்தண்தாமரைக்கண் பெருநீள்முடிநால்தடந்தோள் *
கருந்திண்மாமுகில்போல் திருமேனியடிகளையே. (அ)

அடிகள்கைதொழுது அலர்மேலசையும்அன்னங்காள்! *
விடிவைசங்கொலிக்கும் திருவண்வண்டூருறையும் *
கடியமாயன்தன்னைக் கண்ணனைநெடுமாலைக்கண்டு *
கொடியவல்வினையேன் திறமகூறுமின்வேறுகொண்டே. (கூ)

வேறுகொண்டும்மையான்இரந்தேன் வெறிவண்டினங்காள்! *
தேறுநீர்ப்பம்பை வடபாலைத்திருவண்வண்டூர் *
மாறில்போரரக்கன் மதிள்நீறெழச்செற்றுகந்த *
ஏறுசேவகனார்க்கு என்னையும்உளளென்மின்களே. (கo)

ஓ மின்கொள்சேர்புரிநூலகுறளாய் அகல்ஞாலம்கொண்ட *
வன்கள்வனடிமேல் குருகூர்ச்சடகோபன்சொன்ன *
பண்கொளாயிரத்துள் இவைபத்தும திருவண்வண்டூர்க்கு *
இன்கொள்பாடல்வலலார் மதனர்மின்னிடையவர்க்கே. (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்

---

வைகல்திருவண்வண்டூர் வைகும்இராமனுக்கு * என்
செய்கைதனைப் புள்ளினங்காள்! செப்புமென *—கைகழிந்த
காதலுடன் தூதுவிடும் காரிமாறன்கழலே *
மேதினியீர்! நீர்வணங்குமின். (ருக)

சீயர் திருவடிகளே சரணம்.

---

## † உ - ஆந் திருவாய்மொழி—மின்னிடைமடவார்கள்.

[எம்பெருமான் விளம்பித்து வரக் கண்ட தலைவி 'உமக்கு வேண்டின ஸ்த்ரீகள் இருக்க இங்கே வரவேண்டா' என்று ஊடல் திறத்தினால் திரஸ்காரம் பண்ணினதை அருளிச்செய்தல்.]

ஆசிரியந்துறை.

பண் - சீகாமரம். தாளம் - ஏழொத்து. சோகவராளிராகம் - ஆதிதாளம்.

மின்னிடைமடவார்கள்நின்னருள்சூடுவார் முன்புநானதஞ்சுவன் *
மன்னுடையிலங்கை அரண்காய்ந்தமாயவனே ! *
உன்னுடையசுண்டாயமநானறிவன்இனிஅதுகொண்டுசெய்வதென் ? *
என்னுடையபந்தும்கழலும் தந்துபோகுநம்பீ ! (க)

போகுநம்பீ ! உன்தாமரைபுரைகண்ணிணையும் செவ்வாய்முறுவலும்*
ஆகுலங்கள்செய்ய அழிதற்கேநோற்றோமேயாம் ? *
தோகைமாமயிலார்கள்நின்னருள்சூடுவார் செவியோசைவைத்தெழ *
ஆகள்போகவிட்டுக் குழலூதுபோயிருந்தே. (உ)

போயிருந்துநின்புள்ளுவம அறியாதவர்க்குஉரைநம்பீ ! * நின்செய்ய
வாயிருங்கனியும்கண்களும விபரீதம்இந்நாள் ;
வேயிருந்தடந்தோளினார் இத்திருவருள்பெறுவார்யவர்கொல் ? *
மாயிருங்கடலைக்கடைந்த பெருமானாலே. (ங)

ஆலினீளிலையேழுலகமுண்டு அன்றுநீகிடந்தாய் * உன்மாயங்கள்
மேலைவானவரும்அறியார் இனிஎம்பரமே ? *
வேலினேர்தடங்கண்ணினார் விளையாடுசூழலைச்சூழவேநின்று *
காலிமேய்க்கவல்லாய் ! எம்மைநீகழறேலே. (ச)

கழறேல்நம்பீ!உன்கைதவமமண்ணும்விண்ணுமநன்கறியும்*திண்சக்கர
நிழறுதொல்படையாய் ! உனக்குஒன்றுஉணர்த்துவன்நான் *
மழறுதேன்மொழியார்கள்நின்னருள்சூடுவார் மனம்வாடிநிற்க * எம்
குழறுபூவையொடும் கிளியோடும்குழகேலே. (ரு)

குழகிளங்கள்குழுமணன்கொண்டு கோயின்மைசெய்துகன்மமொன்றில்லை *
பழகியாமிருப்போம் பரமேஇத்திருவருள்கள் ? *
அழகியார்இவ்வுலகமூன்றுக்கும் தேவிமைதகுவார்பலருளர் *
கழகமேறேல்நம்பீ ! உனக்கும்இளைதேகன்மமே. (சு)

கன்மமன்றுஎங்கள்கையிற்பாவைபறிப்பது கடல்ஞாலமுண்டிட்ட *
நின்மலா ! நெடியாய் ! உனக்கேலும்பிழைபிழையே *
வன்மமேசொல்லிஎம்மைநீவிளையாடுதி அதுகேட்கில்என்னைமார் *
தன்மபாவமென்னார் ஒருநான்றுதடிபிணக்கே. (எ)

---

† இந்தத் திருவாய்மொழி, நாச்சிமார் ப்ரணயகலகத்தில் ஸேவிக்கப்படுவது.

பிணக்கியாவையும்யாவரும பிழையாமல்பேதித்தும்பேதியாதது * ஓர்
கணக்கில்கீர்த்திவெள்ளக் கதிர்ஞானமூர்த்தியினாய் ! *
இணக்கியெம்மைஎமதோழிமார் விளையாடப்போதுமினென்னப்போந்தோமை*
உணக்கிநீவளைத்தால் என்சொல்லார்உகவாதவரே ! (அ)

உகவையாலநெஞ்சமுள்ளுருகி உன்தாமரை தடங்கண்விழிகளின் *
அகவலைப்படுப்பான் அழித்தாய்உன்திருவடியால் *
தகவுசெய்திலைஎங்களசிற்றிலும யாமடுசிறுசோறும்கண்டு * நின்
முகவொளிதிகழ முறுவல்செய்துநின்றிலையே. (௯)

நின்றிலங்குமுடியினாய் ! இருபத்தோர்கால்அரசுகளைகட்ட *
வென்றிநீளமழுவா ! வியன்ஞாலம்முன்படைத்தாய் ! *
இன்றுஇவ்வாயர்குலத்தை வீடுய்யத்தோன்றியகருமாணிக்கச்சுடர்! *
நின்தன்னால்நலிவேபடுவோமஎன்றும ஆய்ச்சியோமே. (௧0)

ஆய்ச்சியாகியஅன்னையால அன்றுவெண்ணெய்வார்த்தையுள் *
கூத்தஅப்பன்தன்னைக் குருகூர்ச்சடகோபன் * [ சிற்றமுண்டழு
ஏத்தியதமிழ்மாலை ஆயிரத்துள்இவையுமோர்பத்துஇசையொடும் *
நாத்தன்னால்நவிலஉரைப்பார்க்கு இல்லைநல்குரவே. (௧௧)

ஆழ்வார் திருவடிகளே சரணம்

---

மின்னிடையார்சேர்கண்ணன் மெத்தெனவந்தானென்று *
தன்னிலைபோய்பபெண்ணிலையாய்த் தான்தளரி *—உன்னுடனே
கூடேனென்றாடும குருகையர்கோன்தாள்தொழவே *
நாள்தோறும்நெஞ்சமே ! நல்கு. (௫௨)

சீயர் திருவடிகளே சரணம்.

---

## ௫ - ஆந் திருவாய்மொழி—நல்குரவும்.

---

['ப்ரணயகலஹத்தில் விருத்தரான தம்மை வச்கரித்தவன் விருத்த விபூதிகனான ஸர்வேச்வரன்' என்று அருளிச்செயதல்.]

கலிநிலைத்துறை.

பண் - நட்டராகம். தாளம் - நடையொத்து. உசேனிராகம் - ரூபகதாளம்

நல்குரவும்செல்வும் நரகும்சுவர்க்கமுமாய் *
வெல்பகையும்நட்பும் விடமும்அமுதமுமாய் *
பல்வகையுமபரந்த பெருமான்என்னையாள்வானை *
செல்வம்மல்குகுடித் திருவிண்ணகர்க்கண்டேனே. (௧)

கண்டஇன்பம்துன்பம் கலக்கங்களும்தேற்றமுமாய் *
தண்டமும்தண்மையும் தழலும்நிழலுமாய் *
கண்டுகோடற்கரிய பெருமானென்னையாள்வானூர் *
தெண்திரைப்புனல்சூழ் திருவிண்ணகர்நன்னகரே. (௨)

நகரமும்நாடுகளும் ஞானமும்மூடமுமாய் *
நிகரில்சூழ்சுடராய்இருளாய் நிலனாய்விசும்பாய் *
சிகரமாடங்கள்சூழ் திருவிண்ணகர்சேர்ந்தபிரான் *
புகர்கொள்கீர்த்தியல்லாலில்லை யாவர்க்கும்புண்ணியமே. (௩)

புண்ணியம்பாவம் புணர்ச்சிபிரிவென்றிவையாய் *
எண்ணமாய்மறப்பாய் உண்மையாய்இன்மையாய்அல்லனாய் *
திண்ணமாடங்கள்சூழ் திருவிண்ணகர்சேர்ந்தபிரான *
கண்ணனின்னருளே கண்டுகொண்மின்கள்கைதவமே. (௪)

கைதவம்செம்மை கருமைவெளுமையுமாய் *
மெய்பொய்இளமைமுதுமை புதுமைபழமையுமாய் *
செய்ததிண்மதிள்சூழ் திருவிண்ணகர்சேர்ந்தபிரான் *
பெய்தகாவுகண்டீர் பெருந்தேவுடைமூவுலகே. (௫)

மூவுலகங்களுமாய்அல்லனாய் உகப்பாய்முனிவாய் *
பூவில்வாழ்மகளாய்த்தவ்வையாய்ப புகழாய்ப்பழியாய் *
தேவர்மேவித்தொழும் திருவிண்ணகர்சேர்ந்தபிரான *
பாவியேன்மனத்தே உறைகின்றபரஞ்சுடரே. (௬)

பரஞ்சுடருடம்பாய் அழுககுப்பதிததவுடம்பாய் *
கரந்தும்தோன்றியும்நின்றும் கைதவங்கள்செய்தும * விண்ணோர்
சிரங்களால்வணங்கும திருவிண்ணகர்சேர்ந்தபிரான் *
வரங்கொள்பாதமல்லாலில்லை யாவர்க்கும்வன்சரணே. (௭)

வன்சரண்சுரர்க்காய் அசுரர்க்குவெங்கூற்றமுமாய் *
தன்சரண்நிழற்கீழ் உலகம்வைத்தும்வையாதும் *
தென்சரண்திசைக்குத் திருவிண்ணகர்சேர்ந்தபிரான் *
என்சரண்என்கண்ணன் என்னையாளுடைஎன்னப்பனே. (௮)

என்னப்பன்எனக்காயிகுளாய் என்னைப்பெற்றவளாய் *
பொன்னப்பன்மணியப்பன் முத்தப்பன்என்னப்பனுமாய் *
மின்னப்பொன்மதிள்சூழ் திருவிண்ணகர்சேர்ந்தஅப்பன் *
தன்னொப்பாரில்லப்பன் தந்தனன்தனதாள்நிழலே. (௯)

நிழல்வெய்யில்சிறுமைபெருமை குறுமைநெடுமையுமாய் *
சுழல்வனநிற்பன மற்றுமாய்அவையல்லனுமாய் *
மழலைவாய்வண்டுவாழ் திருவிண்ணகர்மன்னுபிரான் *
கழல்களன்றி மற்றோர்களைகணிலம்காண்மின்களே. (௧௦)

꩜ காண்மின்கள் உலகீர்! என்று கண்முகப்பே நிமிர்ந்த *
தாளிணையன் தன்னைக் குருகூர்ச்சடகோபன் சொன்ன *
ஆணையாயிரத்துத் திருவிண்ணகர்ப்பத்தும் வல்லார் *
கோணையின்றி விண்ணோர்க்கு என்றுமாவர் குரவர்களே. (௧௧)

ஆழ்வார் திருவடிகளே சரணம்

---

நல்லவலத்தால் நம்மைச் சேர்த்தோன் முன்னண்ணார் *
வெல்லும் விருத்தவிபூதியனென்று *—எல்லையறத்
தானிருந்து வாழ்த்தும் தமிழ்மாறன் சொல்வல்லார் *
வானவர்க்கு வாய்த்த குரவர். (௫௩)

சீயர் திருவடிகளே சரணம்

---

## ௪ - ஆந் திருவாய்மொழி—குரவையாய்ச்சியர்.

---

[கண்ணனுடைய குணசேஷ்டிதங்களை எப்பொழுதும் பேசப்பெற்றமைக்குக் களித்தல்.]

**அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்**

**பண்-தக்கராகம் தாளம் - ஏழாந்து யமுநாகல்யாணி ராகம்-ஆதிதாளம்.**

꩜ குரவையாய்ச்சியரோடு கோத்ததும் குன்றமொன்றேந்தியதும் *
உரவுநீர்ப்பொய்கை நாகம் காய்ந்ததும் உட்பட மற்றும் பல *
அரவிற்பள்ளிப்பிரான்தன் மாயவினைகளையே அலற்றி *
இரவும் நன்பகலும் † தவிர்கிலம் என்ன குறைவு எனக்கே? (௧)

கேயத்தீங்குழலூதிற்றும் நிரைமேய்த்ததும் * கெண்டையொண்கண்
வாசப்பூங்குழல் பின்னை தோள்கள் மணந்ததும் மற்றும் பல *
மாயக்கோலப்பிரான்தன் செய்கை நினைந்து மனம் குழைந்து *
நேயத்தோடு கழிந்த போது எனக்கு எவ்வுலகம் நிகரே? (௨)

நிகரில் மல்லரைச் செற்றதும் நிரைமேய்த்ததும், நீள்நெடுங்கை *
சிகரமாகளிறட்டதும் இவைபோல்வனவும் பிறவும் *
புகர்கொள் சோதிப்பிரான்தன் செய்கை நினைந்து புலம்பி * என்றும்
நுகர வைகல் வைகப்பெற்றேன் எனக்கு என் இனி நோவதுவே? (௩)

நோவ ஆய்ச்சி உரலோடார்க்க இரங்கிற்றும், வஞ்சப்பெண்ணை *
சாவப்பாலுண்டதும் ஊர்சகடம் இறச்சாடியதும் *
தேவக்கோலப்பிரான்தன் செய்கை நினைந்து மனம் குழைந்து *
மேவக்காலங்கள் கூடினேன் எனக்கு என் இனி வேண்டுவதே? (௪)

---

† 'தவிர்கிலமென்னகுறைநமக்கே' என்பதும் பாடம்.

வேண்டித்தேவரிரக்கவந்துபிறந்ததும் வீங்கிருள்வாய்
பூண்டு * அன்றுஅன்னைபுலம்பப்போய் அங்குஓராய்க்குலம்புக்கதும்*
காண்டலின்றிவளர்ந்து கஞ்சனைத்துஞ்சவஞ்சம்செய்ததும் *
ஈண்டுநான்அலற்றப்பெற்றேன் எனக்குஎன்னஇகலுளதே? (ரு)

இகல்கொள்புள்ளைப்பிளந்ததும் இமிலேறுகள்செற்றதுவும் *
உயர்கொள்சோலைக்குருந்தொசித்ததும் உட்படமற்றும்பல *
அகல்கொள்வையமளந்தமாயன் என்னப்பன்தன்மாயங்களே *
பகலிராப்பரவப்பெற்றேன் எனக்குஎன்னமனப்பரிப்பே? (சு)

மனப்பரிப்போடு அழுக்குமானிடசாதியில்தான்பிறந்து *
தனக்குவேண்டுருக்கொண்டு தான்தனசீற்றத்தினைமுடிக்கும் *
புனத்துழாய்முடிமாலைமார்பன் என்னப்பன்தன்மாயங்களே *
நினைக்கும்நெஞ்சுடையேன் எனக்குஇனியார்நிகர்நீணிலத்தே? (எ)

நீணிலத்தொடுவான்வியப்ப நிறைபெரும்போர்கள்செய்து *
வாணனாயிரந்தோள்துணித்ததும் உட்படமற்றும்பல *
மாணியாய்நிலம்கொண்டமாயன் என்னப்பன்தன்மாயங்களே *
காணும்நெஞ்சுடையேன் எனக்குஇனியென்னகலக்கமுண்டே? (அ)

கலக்கவேழ்கடலேழ்மலை உலகேழும்கழியக்கடாய் *
உலக்கத்தேர்கொடுசென்றமாயமும் உட்படமற்றும்பல *
வலக்கையாழிஇடக்கைச்சங்கம் இவையுடைமாலவண்ணனை *
மலக்குநாவுடையேற்கு மாறுளதோஇம்மண்ணின்மிசையே? (கூ)

மண்மிசைப்பெரும்பாரம்நீங்க ஓர்பாரதமாபெரும்போர்
பண்ணி * மாயங்கள்செய்து சேனையைப்பாழ்படநூற்றிட்டுப்போய் *
விண்மிசைத்தனதாமமேபுக மேவியசோதிதன்தாள் *
நண்ணிநான்வணங்கப்பெற்றேன் எனக்குஆர்பிறர்நாயகரே? (க0)

நாயகன்முழுவேழுலகுக்குமாய் முழுவேழுலகும் * தன்
வாயகம்புகவைத்துமிழ்ந்தவையாய் அவையல்லனுமாம் *
கேசவனடியிணைமிசைக் குருகூர்ச்சடகோபன்சொன்ன *
தூயவாயிரத்துஇப்பத்தால் பத்தராவர்துவளின்றியே. (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்

---

குரவைமுதலாம்கண்ணன் கோலச்செயல்கள் *
இரவுபகலென்னாமல் * என்றும்—பரவுமனம்
பெற்றேனென்றேகளித்துப் பேசும்பராங்குசன்தன் *
சொல்தேனில் நெஞ்சே! துவள். (ருச)

சீயர் திருவடிகளே சரணம்.

---

# ரு - ஆந் திருவாய்மொழி—துவளில்.

[தோழி தாய்மாரைநோக்கிக் கூறும் பாசுரத்தாலே, ஆழ்வார் எம்பெருமானிடத்து ஈடுபட்டமையைப் பேசுதல்.]

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

பண் - பஞ்சமம். தாளம் - ஏழொத்து சங்கராபரணராகம் - அடதாளம்

துவளில்மாமணிமாடமோங்கு
‡ தொலைவில்லிமங்கலம்தொழும்
இவளை * நீர்இனிஅன்னைமீர் !
உமக்காசையில்லைவிடுமினோ *
தவளவொண்சங்குசக்கரமென்றும்
தாமரைத்தடங்கணென்றும் *
குவளையொண்மலர்க்கண்கள்நீர்மல்க
நின்றுநின்றுகுமுறுமே. (௧)

குமுறுமோசைவிழவொலித்
தொலைவில்லிமங்கலம்கொண்டுபுக்கு *
அமுதமென்மொழியாளை நீர்உமக்கு
ஆசையின்றியகற்றினீர் *
திமிர்கொண்டாலொத்துநிற்கும் மற்றிவள
தேவதேவபிரானென்றே *
நிமியுமவாயொடுகண்கள்நீர்மல்க
நெக்கொசிந்துகரையுமே. (௨)

கரைகொள்பைம்பொழில்தண்பணைத் தொலை
வில்லிமங்கலம்கொண்டுபுக்கு *
உரைகொளின்மொழியாளை நீர்
உமக்காசையின்றியகற்றினீர் *
திரைகொள்பௌவத்துச்சேர்ந்ததும்
திசைஞாலம்தாவியளந்ததும் *
நிரைகள்மேய்த்ததுமேபிதற்றி
நெடுங்கண்நீர்மல்கநிற்குமே. (௩)

நிற்கும்நான்மறைவாணர்வாழ்
தொலைவில்லிமங்கலம்கண்டபின் *
அற்கமொன்றும்அறவுறாள்
மலிந்தாள்கண்டீர்இவள்அன்னைமீர் ! *

‡ 'துலைவில்லிமங்கலம்' என்றும் கூறுவர்.

கற்கும்கல்வியெல்லாம் கருங்கடல்
வண்ணன்கண்ணபிரானென்றே *
ஒற்கமொன்றுமிலள் உகந்துகந்து
உள்மகிழ்ந்துகுழையுமே. (௪)

குழையும்வாள்முகத்தேழையைத்
தொலைவில்லிமங்கலம்கொண்டுபுக்கு *
இழைகொள்சோதிச்செந்தாமரைக்கண்பிரான்
இருந்தமைகாட்டினீர் *
மழைபெய்தாலொக்கும்கண்ணநீரினொடு
அன்றுதொட்டும்மையாந்து * இவள்
நுழையும்சிந்தையள் அன்னைமீர்! தொழும்
அத்திசையுற்றுநோக்கியே. (௫)

நோக்கும்பக்கமெல்லாம் கரும்பொடு
செந்நெலோங்குசெந்தாமரை *
வாய்க்கும்தண்பொருநல் வடகரை
வண்தொலைவில்லிமங்கலம் *
நோக்குமேல்அத்திசையல்லால்
மறுநோக்கிலள்வைகல்நாள்தொறும் *
வாய்க்கொள்வாசகமும் மணிவண்ணன்
நாமமேஇவள்அன்னைமீர்! (௬)

அன்னைமீர்! அணிமாமயில் சிறுமானிவள்
நம்மைக்கைவலிந்து *
என்னவார்த்தையும்கேட்குறாள்
தொலைவில்லிமங்கலமென்றல்லால் *
முன்னம்நோற்றவிதிகொலோ? முகில்
வண்ணன்மாயங்கொலோ? * அவன்
சின்னமும்திருநாமமும் இவள்
வாயனகள்திருந்தவே. (௭)

திருந்துவேதமும்வேள்வியும்
திருமாமகளிரும்தாம் * மலிந
திருந்துவாழ்பொருநல்
வடகரைவண்தொலைவில்லிமங்கலம் *
கருந்தடங்கண்ணிகைதொழுத
அந்நாள்தொடங்கிஇந்நாள்தொறும் *
இருந்திருந்துஅரவிந்தலோசன!
என்றென்றேநைந்திரங்குமே. (௮)

இரங்கிநாள்தொறும்வாய்வெரீஇ
இவள்கண்ணநீர்களலமர *
மரங்களுமிரங்கும்வகை
மணிவண்ணவோ! என்றுகூவுமால *
துரங்கம்வாய்பிளந்தானுறை
தொலைவில்லிமங்கலமென்று * தன்
கரங்கள்கூப்பித்தொழும அவ்வூர்த்
திருநாமம்கற்றதற்பின்னையே. (௯)

பின்னைகொல? நிலமாமகள்கொல்?
திருமகள்கொல்? பிறந்திட்டாள் *
என்னமாயங்கொலோ? இவள்நெடுமா
லென்றேநின்றுகூவுமால் *
முன்னிவந்தவன்நின்றிருந்துறையும்
தொலைவில்லிமங்கலம
சென்னியால்வணங்கும் * அவ்வூர்த்திருநாமம்
கேட்பதுசிந்தையே. (௧௰)

சிந்தையாலும்சொல்லாலும
செய்கையினாலும தேவபிரானையே *
தந்தைதாயென்றடைந்த
வண்குருகூரவர்சடகோபன் *
முந்தையாயிரத்துள்இவை
தொலைவில்லிமங்கலத்தைச்சொன்ன *
செந்தமிழ்ப்பத்தும்வல்லார்
அடிமைசெய்வார்திருமாலுக்கே. (௧௧)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

துவளறுசீர்மால்திறத்துத் தொன்னலத்தால் * நாளும்
துவளறுதன் சீலமெல்லாம்சொன்னான் *—துவளறவே
முன்னமனுபவத்தில் மூழ்கிநின்றமாறனதில் *
மன்னுமுவப்பால்வந்தமால். (௫௫)

சீயர் திருவடிகளே சரணம்.

---

## ௬ - ஆந் திருவாய்மொழி—மாலுக்கு.

[ஆழ்வார் பகவதநுபவத்தின் அலாபத்தால் வந்த பாரவஶ்யத்தை, பிரிந்து வருந்தும் தலைமகளைக் குறித்துத் தாய் இரங்கும் பாசுரத்தால் அருளிச்செய்தல்.]

பண் - முதிர்ந்தகுறிஞ்சி. தாளம் - எழ்ஜாத்து. காபிராகம் - ரூபகதாளம்.

கலிவிருத்தம்.

மாலுக்கு வையமளந்தமணாளற்கு *
நீலக்கருநிற மேகநியாயற்கு *
கோலச்செந்தாமரைக் கண்ணற்கு * என்கொங்கலர்
ஏலக்குழலி இழந்ததுசங்கே. (௧)

சங்குவில்வாள்தண்டு சக்கரக்கையற்கு *
செங்கனிவாய்ச் செய்யதாமரைக்கண்ணற்கு *
கொங்கலர்தண்ணந்துழாய் முடியானுக்கு * என்
மங்கையிழந்தது மாமைநிறமே. (௨)

நிறங்கரியானுக்கு நீடுலகுண்ட *
திறங்கிளர்வாய்ச் சிறுக் † கள்வனவற்கு *
கறங்கியசக்கரக் கையவனுக்கு * என்
பிறங்கிருங்கூந்தல் இழந்ததுபீடே. (௩)

பீடுடைநான்முகனைப் படைத்தானுக்கு *
மாடுடைவையம் அளந்தமணாளற்கு *
நாடுடைமன்னர்க்குத் ‡ தூதுசெல்நம்பிக்கு * என்
பாடுடையல்குல் இழந்ததுபண்பே. (௪)

பண்புடைவேதம் பயந்தபரனுக்கு *
மண்புரைவையம் இடந்தவராகற்கு *
தெண்புனற்பள்ளி எம்தேவபிரானுக்கு * என்
கண்புனைகோதை இழந்ததுகற்பே. (௫)

கற்பகக்காவன நற்பலதோளற்கு *
பொற்சுடர்க்குன்றன்ன பூந்தண்முடியற்கு *
நற்பலதாமரை நாள்மலர்க்கையற்கு * என்
விற்புருவக்கொடி தோற்றதுமெய்யே. (௬)

மெய்யமர்பல்கலன் நன்கணிந்தானுக்கு *
பையரவினணைப் பள்ளியினானுக்கு *
கையொடுகால்செய்ய கண்ணபிரானுக்கு * என்
தையல்இழந்தது தன்னுடைச்சாயே. (௭)

---

† 'கள்வரவர்க்கு' என்று வழங்குவர். ‡ 'தூதுசெய்' என்பது உரையின் பாடம்.

சாயக்குருந்தம் ஒசித்ததமியற்கு *
மாயச்சகடம் உதைத்தமணாளற்கு *
பேயைப்பிணம்படப் பாலுண்பிரானுக்கு * என்
வாசக்குழலி இழந்ததுமாண்பே. (௯)

மாண்பமைகோலத்து எம்மாயக்குறளற்கு *
சேண்சுடர்க்குன்றன்ன செஞ்சுடர்மூர்த்திக்கு *
காண்பெருந்தோற்றத்து எம்காகுத்தநம்பிக்கு * என்
பூண்புனைமென்முலை தோற்றதுபொற்பே. (௧0)

பொற்பமைநீள்முடிப் பூந்தண்துழாயற்கு *
மற்பொருதோளுடை மாயப்பிரானுக்கு *
நிற்பனபலவுருவாய் நிற்குமாயற்கு * என்
கற்புடையாட்டி இழந்ததுகட்டே. (௧௧)

கட்டெழில்சோலை நலவேங்கட வாணனை *
கட்டெழில்தென்குருகூர்ச் சடகோபன்சொல் *
கட்டெழிலாயிரத்து இப்பத்தும்வல்லவர் *
கட்டெழில்வானவர் போகமுண்பாரே. (௧௧)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

மாலுடனேதான்கலந்து வாழப்பெறாமையால் *
சாலநைந்துதன்னுடைமை தானடையக்—கோலியே *
தாணிகழவேண்டாயல் தன்னைவிடலசொலமாறன் *
ஊனமறுசீர்நெஞ்சே! உண். (௬௬)

சீயர் திருவடிகளே சரணம்

---

## ௭ - ஆந் திருவாய்மொழி—உண்ணுஞ்சோறு.

---

[ஆழ்வார் தாரக போஷக போக்யங்கள் கண்ணனென்று உணர்ந்து திருக்கோளூரி லீடுபட்டதை, தலைவன்நகர்நோக்கிச்சென்ற தலைமகளைப் பற்றித் தாய் இரங்கும் பாசுரத்தாலே அருளிச்செயதல்.]

கலிநிலைத்துறை.

பண் - பழந்தக்கராகம் தாளம் - ஏகதாளம். காம்போஜியாகம் - ஆதிதாளம்.

உண்ணும்சோறுபருகுநீர் தின்னும்வெற்றிலையுமெல்லாம்
கண்ணன் * எம்பெருமானென்றென்றே கண்கள்நீர்மல்கி *
மண்ணினுள் அவன்சீர் வளம்மிக்கவனூர்வினவி *
திண்ணமஎன் இளமான்புகுமூர் திருக்கோளூரே. (௧)

ஊரும்நாடும்உலகமும் தன்னைப்போல் * அவனுடைய
பேரும்தார்களுமேபிதற்றக் கற்புவானிடறி *
சேருநல்வளஞ்சேர் பழனத்திருக்கோளூர்க்கே *
போருங்கொல்? உரையீர் கொடியேன்கொடிபூவைகளே! (உ)

பூவைபைங்கிளிகள் பந்துதூதைபூம்புட்டில்கள் *
யாவையும்திருமால் திருநாமங்களேகூவியெழும் * என்
பாவைபோய்இனித் தண்பழனத்திருக்கோளூர்க்கே *
கோவைவாய்துடிப்ப மழைக்கண்ணொடென்செய்யுங்கொலோ? (ந)

கொல்லையென்பர்கொலோ? குணமிகனன்பர்கொலோ? *
சில்லைவாய்ப்பெண்டுகள் அயற்சேரியுள்ளாருமெல்லே! *
செல்வம்மல்கிஅவன்கிடந்த திருக்கோளூர்க்கே *
மெல்லிடைநுடங்க இளமான்செலலமேவினளே. (ச)

மேவினைந்துநைந்துவிளையாடலுறாள் என்சிறுத
தேவிபோய் * இனித்தன் திருமால் திருக்கோளூரில் *
பூவியல்பொழிலும் தடமுமஅவன்கோயிலும்கண்டு *
ஆவியுள்குளிர எங்ஙனேஉகக்குங்கொலஇன்றே? (ரு)

இன்றுஎனக்குஉதவாதகன்ற இளமான்இனிப்போய் *
தென்திசைத்திலதமனைய திருக்கோளூர்க்கே
சென்று * தன் திருமால்திருக்கண்ணும் செவ்வாயும்கண்டு *
நின்றுநின்றுநையும் நெடுங்கண்கள்பனிமல்கவே. (௬)

மல்குநீர்க்கண்ணொடு மையலுற்றமனத்தனளாய் *
அல்லும்நன்பகலும் நெடுமாலென்றழைத்து, இனிப்போய் *
செல்வம்மல்கிஅவன்கிடந்த திருக்கோளூர்க்கே *
ஒல்கியொல்கிநடந்து எங்ஙனேபுகுங்கொல்ஒசிக்தே? (எ)

ஒசிந்தநுண்ணிடைமேல் கையைவைத்துநொந்துநொந்து *
கசிந்தநெஞ்சினளாய்க் கண்ணநீர்துளும்பச்செல்லுங்கொல்? *
ஒசிந்தவொண்மலராள்கொழுநன் திருக்கோளூர்க்கே *
கசிந்தநெஞ்சினளாய் எம்மைநீத்தஎம்காரிகையே. (அ)

காரியம்நல்லனகளவைகாணில் என்கண்ணனுக்கென்று *
ஈரியாயிருப்பாள் இதெல்லாம்கிடக்கஇனிப்போய் *
சேரிபல்பழிதூயிரைப்பத் திருக்கோளூர்க்கே *
நேரிழைநடந்தாள் எம்மைஒன்றும்நினைத்திலளே. (௯)

நினைக்கிலேன்தெய்வங்காள்! நெடுங்கணிளமான்இனிப்போய் *
அனைத்துலகுமுடைய அரவிந்தலோசனனை *
தினைத்தனையும்விடாள் அவன்சேர்திருக்கோளூர்க்கே *
மனைக்குவான்பழியும்நினையாள் செல்லவைத்தனளே. (௰)

வைத்தமாநிதியாம் மதுசூதனையேயலற்றி *
கொத்தலர்பொழில்சூழ் குருகூர்ச்சடகோபன்சொன்ன *
பத்துநூற்றுள்இப்பத்து அவன்சேர்திருக்கோளூர்க்கே *
சித்தம்வைத்துரைப்பார் திகழ்பொன்னுலகாள்வாரே. (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

உண்ணும்சோறாதிஒருமூன்றும் எம்பெருமான் *
கண்ணனென்றேநீர்மல்கிக் கண்ணிணைகள் * - மண்ணுலகில்
மன்னுதிருக்கோளூரில் மாயன்பால்போம்மாறன் *
பொன்னடியே நந்தமக்குப்பொன். (ருள)

சீயர் திருவடிகளே சரணம்

---

## அ - ஆந் திருவாய்மொழி— பொன்னுலகு.

[எம்பெருமானது ஆச்ரிதரோடு கலந்திருக்குங் குணமே பற்றாசு ஆக, பரத்வம் முதலியவற்றில் பறவைகளைத் தூதுவிடும் தலைமகள்பாசுரம்.]

கலிநிலைத்துறை.

பண் - குறிஞ்சி. தாளம் - ஏழொத்து. த்வஜாவந்த்யாகம் - ஆத்தாளம்.

பொன்னுலகாளீரோ? புவனிமுழுதாளீரோ? *
நன்னலப்புள்ளினங்காள்! வினையாட்டியேன்நானிரந்தேன் *
முன்னுலகங்களெல்லாம்படைத்த முகில்வண்ணன்கண்ணன் *
என்னலம்கொண்டபிரான்தனக்கு என்நிலைமையுரைத்தே. (க)

மையமர்வாள்நெடுங்கண் மங்கைமார்முன்பு என்கையிருந்து *
நெய்யமர்இன்னடிசில் நிச்சல்பாலொடுமேவீரோ? *
கையமர்சக்கரத்து என்கனிவாய்ப்பெருமானைக்கண்டு *
மெய்யமர்காதல்சொல்லிக் கிளிகாள்! விரைந்தோடிவந்தே. (உ)

ஓடிவந்துஎன்குழல்மேல் ஒளிமாமலர்ஊதீரோ? *
கூடியவண்டினங்காள்! குருநாடுடைஐவர்கட்காய் *
ஆடியமாநெடுந்தேர்ப்படை நீறெழச்செற்றபிரான் *
சூடியதண்துளவமுண்ட தூமதுவாய்கள்கொண்டே. (ங)

தூமதுவாய்கள்கொண்டுவந்து என்முல்லைகள்மேல்தும்பிகாள்! *
பூமதுவுண்ணச்செல்லில் வினையேனைப்பொய்செய்தகன்ற *
மாமதுவார்தண்துழாய்முடி வானவர்கோனைக்கண்டு *
யாமிதுவோதக்கவாறு? என்னவேண்டுங்கண்டீர்நுங்கட்கே. (ச

நுங்கட்குயானுரைக்கேன்வம்மின் யான்வளர்த்தகிளிகாள்! *
வெங்கண்புள்ளூர்ந்துவந்து வினையேனைநெஞ்சங்கவர்ந்த *
செங்கண்கருமுகிலைச் செய்யவாய்ச்செழுங்கற்பகத்தை *
எங்குச்சென்றாகிலும்கண்டு இதுவோதக்கவாறு? என்மினே. (ரு)

என்மின்னுநூல்மார்வன் என்கரும்பெருமான்என்கண்ணன் *
தன்மன்னுநீள்கழல்மேல்தண்துழாய் நமக்கன்றிநல்கான் *
கன்மின்களென்றுஉம்மையான் கற்பியாவைத்தமாற்றம்சொல்லி *
சென்மின்கள்தீவினையேன் வளர்த்தசிறுபூவைகளே! (௬)

பூவைகள்போல்நிறத்தன் புண்டரீகங்கள்போலும்கண்ணன் *
யாவையும்யாவருமாய் நின்றமாயன்என்னாழிப்பிரான் *
மாவைவல்வாய்பிளந்த மதுசூதற்குஎன்மாற்றம்சொல்லி *
பாவைகள்! தீர்க்கிற்றிரே வினையாட்டியேன்பாசறவே. (எ)

பாசறவெய்தி இன்னே வினையேன்எனையூழிநைவேன்? *
ஆசறுதூவிவெள்ளைக்குருகே! † அருள்செய்துஒருநாள் *
மாசறுநீலச்சுடர்முடி வானவர்கோனைக்கண்டு *
ஏசறும்நும்மையல்லால் மறுநோக்கிலள்பேர்த்துமற்றே. (அ)

பேர்த்துமற்றோர்களைகண் வினையாட்டியேன்நான்ஒன்றிலேன் *
நீர்த்திரைமேலுலவி இரைதேருமபுதாவினங்காள்! *
கார்த்திரள்மாமுகில்போல் கண்ணன்விண்ணவர்கோனைக்கண்டு *
வார்த்தைகள்கொண்டருளியுரையீர் வைகல்வந்திருந்தே. (௯)

வந்திருந்துஉம்முடைய மணிச்சேவலும்நீருமெல்லாம் *
அந்தரமொன்றுமின்றி அலர்மேலசையும்அன்னங்காள்! *
என்திருமார்வற்குஎன்னை இன்னவாறுஇவள்காண்மினென்று *
மந்திரத்தொன்றுஉணர்த்தியுரையீர் மறுமாற்றங்களே. (க௦)

மாற்றங்களாய்ந்துகொண்டு மதுசூதபிரானடிமேல் *
நாற்றங்கொள்பூம்பொழில்சூழ் குருகூர்ச்சடகோபன்சொன்ன *
தோற்றங்களாயிரத்துள் இவையுமொருபத்துமவல்லார் *
ஊற்றின்கண் நுண்மணல்போல் உருகாநிற்பர்நீராயே. (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

† 'அருளசெய்யொருநாள்' என்பது உரையின்பாடம்.

பொன்னுலகுபூமியெல்லாம் புள்ளினங்கட்கேவழங்கி *
என்னிடரைமாலுக் கியம்புமென *—மன்னுதிரு
நாடுமுதல்தா னிகழ்ந்துவிடும் மாறனையே *
நாடுலகீர்! போய்வணங்கும் நீர். (௫௮)

சீயர் திருவடிகளே சரணம்

---

## ௯ - ஆந் திருவாய்மொழி—நீராய்.

---

[கேட்டவர்கள் நெஞ்சு நீராய்க்கரையவும், திருமாலுக்கும் பரமபதத்தில் இருப்பு அரிதாகவும் ஆழ்வார் பேரவாவோடு கூப்பிடுதல்.]

கலிநிலைத்துறை

பண் - காந்தாரம். தாளம் - எழொத்து ஸாவேரிராகம் - ஆதிதாளம்.

நீராய்நிலனாய்த் தீயாய்க்காலாய்நெடுவானாய் *
சீரார்சுடர்களிரண்டாய்ச் சிவனாய்அயனானாய்! *
கூராராழிவெண்சங்கேந்திக் கொடியேன்பால்
வாராய் * ஒருநாள் மண்ணும்விண்ணுமகிழவே. (௧)

மண்ணும்விண்ணும்மகிழக் குறளாய்வலங்காட்டி. *
மண்ணும்விண்ணுங்கொண்ட மாயஅம்மானே! *
நண்ணிஉனைநான் கண்டுகந்துகூத்தாட *
நண்ணிஒருநாள் ஞாலத்தூடேநடவாயே. (௨)

ஞாலத்தூடேநடந்துநின்றும் கிடந்திருந்தும் *
சாலப்பலநாள் உகந்தோறுஉயிர்கள்காப்பானே! *
கோலத்திருமாமகளோடு உன்னைக்கூடாதே *
சாலப்பலநாள் அடியேன்இன்னும்தளர்வேனோ? (௩)

தளர்ந்தும்முறிந்தும் சகடவசுரர்உடல்வேறா *
பிளந்துவீயத் திருக்காலாண்டபெருமானே! *
கிளர்ந்துபிரமன்சிவன் இந்திரன்விண்ணவர்சூழ *
விளங்கஒருநாள் காணவாராய்விண்மீதே. (௪)

விண்மீதிருப்பாய்! மலைமேல்நிற்பாய்! கடற்சேர்ப்பாய்! *
மண்மீதுழல்வாய்! இவற்றுளெங்கும்மறைந்துறைவாய்! *
எண்மீதியன்றபுறவண்டத்தாய்! எனதாவி *
உள்மீதாடி உருக்காட்டாதேஒளிப்பாயோ? (௫)

பாரோரடிவைத்து அதன்கீழ்ப்பரவைநிலமெல்லாம்
தாய் * ஓரடியால் எல்லாவுலகும்தடவந்த
மாயோன் ! * உன்னைக்காண்பான் வருந்திஎனைநாளும் *
தீயோடுஉடன்சேர்மெழுகாய் உலகில்திரிவேனோ ? (௬)

உலகில்திரியும்கருமகதியாய் உலகமாய் *
உலகுக்கேஓருயிருமானாய் ! புறவண்டத்து *
அலகில்பொலிந்த திசைபத்தாயஅருவேயோ ! *
அலகில்பொலிந்த அறிவிலேனுக்குஅருளாயே. (௭)

அறிவிலேனுக்குஅருளாய அறிவாருயிரானாய் ! *
வெறிகொள்சோதிமூர்த்தி ! அடியேன்நெடுமாலே ! *
கிறிசெய்துஎன்னைப்புறத்திட்டு இன்னம்கெடுப்பாயோ ? *
பிறிதொன்றறியாஅடியேன் ஆவிதிகைக்கவே. (௮)

ஆவிதிகைக்க ஐவர்குமைக்கும்சிற்றின்பம் *
பாவியேனைப் பலநீகாட்டிப்படுப்பாயோ ? *
தாவிவையம்கொண்ட தடந்தாமரைகட்கே *
கூவிக்கொள்ளும்காலம் இன்னம்குறுகாதோ ? (௯)

குறுகாநீளா இறுதிகூடாஎனையூழி *
சிறுகாபெருகா அளவிலின்பம்சேர்ந்தாலும் *
மறுகாலின்றிமாயோன் ! உனக்கேயாளாகும் *
சிறுகாலத்தையுறுமோ ? அந்தோ ! தெரியிலே. (க0)

தெரிதல்நினைதல் எண்ணலாகாத்திருமாலுக்கு *
உரியதொண்டர்தொண்டர் தொண்டன்சடகோபன் *
தெரியச்சொன்ன ஓராயிரத்துள்இப்பத்தும் *
உரியதொண்டராக்கும் உலகமுண்டாற்கே. (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

நீராகிக்கேட்டவர்கள் நெஞ்சழிய * மாலுக்கும்
ஏரார்விசும்பில் இருப்பரிதா *—ஆராத
காதலுடன்கூப்பிட்ட காரிமாறன்சொல்லை *
ஓதிடவேஉய்யும்உலகு. (ருகூ)

சீயர் திருவடிகளே சரணம்

---

# † ௧0 ஆந் திருவாய்மொழி—உலகமுண்ட.

[ அலர்மேல்மங்கை புருஷகாரமாகத் திருவேங்கடமுடையானது திருவடிகளில் சரணம்புகுதல். ]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பண் - பழம்பஞ்சுரம் தாளம் - ஏழொத்து. நாதநாமக்ரியையாகம் - ஆதிதாளம்.

உலகமுண்டபெருவாயா! உலப்பில்கீர்த்தியம்மானே! *
நிலவும்சுடர்சூழொளிமூர்த்தி! நெடியாய்! அடியேனாருயிரே! *
திலதமுலகுக்காய்நின்ற திருவேங்கடத்தெம்பெருமானே! *
குலதொல்லடியேன்உனபாதம் கூடுமாறுகூறாயே. (௧)

கூறாய்நீறாய்நிலனாகிக் கொடுவல்லசுரர்குலமெல்லாம் *
சீறாஎறியுமதிருநேமிவலவா! தெய்வக்கோமானே! *
சேறார்சுனைத்தாமரைசெந்தீமலரும் திருவேங்கடத்தானே! *
ஆறாவன்பிலடியேன் உன்னடிசேர்வண்ணம்அருளாயே. (௨)

வண்ணமருள்கொளணிமேகவண்ணா! மாயவம்மானே! *
எண்ணம்புகுந்துதித்திக்கும்அமுதே! இமையோரதிபதியே! *
தெண்ணலருவிமணிபொன்முத்தலைக்கும் திருவேங்கடத்தானே! *
அண்ணலே! உன்னடிசேர ‡ அடியேற்குஆவாவென்னாயே. (௩)

ஆவா! என்னாதுஉலகத்தையலைக்கும் அசுரர்வாணாள்மேல் *
தீவாய்வாளிமழைபொழிந்தசிலையா! திருமாமகள்கேள்வா!
தேவா! * சுரர்கள்முனிக்கணங்கள்விரும்பும திருவேங்கடத்தானே! *
பூவார்கழல்கள்அருவினையேன் பொருந்துமாறுபுணராயே. (௪)

புணராநின்றமரமேழ் அன்றெய்தவொருவில்வலவாவோ! *
புணரேய்நின்றமரமிரண்டின் நடுவேபோனமுதல்வாவோ! *
திணரார்மேகமெனக்களிறுசேரும் திருவேங்கடத்தானே! *
திணரார்சார்ங்கத்துஉனபாதம் சேர்வதடியேனெந்நாளே? (௫)

எந்நாளே?நாமமண்ணளந்த இணைத்தாமரைகள்காண்பதற்கென்று *
எந்நாளுமநின்றுஇமையோர்களேத்தி இறைஞ்சிஇனமினமாய் *
மெய்ந்நாமனத்தால்வழிபாடுசெய்யும் திருவேங்கடத்தானே! *
மெய்ந்நானெய்திஎந்நாள் ‡ உன்னடிக்கண்அடியேன்மேவுவதே? (௬)

---

† இது, கோயில்திருவாய்மொழி. ‡ 'அடியோர்க்கு', 'உன்னடிக்கள்' என்றும் பாடம்.

அடியேன்மேவியமர்கின்றஅமுதே! இமையோரதிபதியே! *
கொடியாவடுபுள்ளுடையானே! கோலக்கனிவாய்ப்பெருமானே! *
செடியார்வினைகள்தீர்மருந்தே! திருவேங்கடத்தெம்பெருமானே! *
நொடியார்பொழுதும்உனபாதம் காணநோலாதாற்றேனே. (௭)

நோலாதாற்றேன்உனபாதம் காணவென்றுநுண்ணுணர்வின் *
நீலார்கண்டத்தம்மானும் நிறைநான்முகனும்இந்திரனும் *
சேலேய்கண்ணார்பலர்சூழவிரும்பும் திருவேங்கடத்தானே! *
மாலாய்மயக்கிஅடியேன்பால் வந்தாய்போலேவாராயே. (௮)

வந்தாய்போலேவாராதாய் வாராதாய்போல்வருவானே! *
செந்தாமரைக்கண்செங்கனிவாய் நால்தோளமுதே! எனதுயிரே! *
சிந்தாமணிகள்பகரல்லைப்பகல்செய் திருவேங்கடத்தானே! *
அந்தோ! அடியேன்உனபாதம் அகலகில்லேன்இறையுமே. (௯)

அகலகில்லேன்இறையுமென்று அலர்மேல்மங்கையுறைமார்பா! *
நிகரில்புகழாய்! உலகம்மூன்றுடையாய்! என்னையாள்வானே! *
நிகரிலமரர்முனிக்கணங்கள்விரும்பும் திருவேங்கடத்தானே! *
புகலொன்றில்லாஅடியேன் உன்னடிக்கீழ்அமர்ந்துபுகுந்தேனே. (௧௦)

அடிக்கீழமர்ந்துபுகுந்து அடியீர்! வாழ்மினென்றென்றருள்கொடுக்கும் *
படிக்கேழில்லாப்பெருமானைப் பழனக்குருகூர்ச்சடகோபன் *
முடிப்பான்சொன்ன ஆயிரத்துத் திருவேங்கடத்துக்கிவைபத்தும் *
பிடித்தார்பிடித்தார்வீற்றிருந்து பெரியவானுள்நிலாவுவரே. (௧௧)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

உலகுய்யமால்நின்ற உயர்வேங்கடத்தே *
அலர்மகளைமுன்னிட்டு அவன்தன்—மலரடியே *
வன்சரணாய்ச்சேர்ந்த மகிழ்மாறன்தாளிணையே *
உன்சரணாய் நெஞ்சமே! உள். (௬௦)

சீயர் திருவடிகளே சரணம்.

---

## ஏழாம்பத்து.

பெரியபிராட்டியார் முன்னிலையாகச் சரணம்புக்கவிடத்திலும் ஸம்ஸாரம் அநுவர்த்திக்கிறபடியைக்கண்டு ஆழ்வார் விஷண்ணராதல்.

### க - ஆந் திருவாய்மொழி—உண்ணிலாவிய.

['எம்பெருமான் தன்திருவடிகளில் சேராதபடி இன்னும் இந்த்ரியங்களாலே எத்தனைநாள் பாதிப்பனோ?' என்று ஆழ்வார் ஓலமிடுதல்.]

ஆசிரியத்துறை.

பண் - பழம்பஞ்சுரம். தாளம் - எழொத்து ஸாரங்காரகம் - ஆதிதாளம்.

உண்ணிலாவியஐவரால்குமைதீற்றி என்னைஉன்பாதபங்கயம் *
நண்ணிலாவகையே நலிவான்இன்னுமெண்ணுகின்றாய் * [டை *
எண்ணிலாப்பெருமாயனே ! இமையோர்களேத்தும்உலகமூன்று
அண்ணலே ! அமுதே ! அப்பனே ! என்னையாள்வானே ! (க)

என்னையாளுமவன்கோஐவரைநதிவைபெய்து இராப்பகல்மோதுவித்
உன்னைநானஅணுகாவகை செய்துபோதிகண்டாய் * [திட்டு *
கன்னலே ! அமுதே ! கார்முகில்வண்ணனே! கடல்ஞாலம்காக்கின்ற *
மின்னுநேமியினாய் ! வினையேனுடைவேதியனே ! (உ)

வேதியாநிற்கும்ஐவரால் வினையேனைமோதுவித்து * உனதிருவடிச்
சாதியாவகைநீ தடுத்துஎனபெறுதி ? அந்தோ ! *
ஆதியாகிஅகலிடமபடைத்து உண்டுமிழ்ந்துகடந்திடநதிட்ட *
சோதிநீளமுடியாய் ! தொண்டனேன்மதுசூதனனே ! (ங)

சூதுநான்அறியாவகை சுழற்றிஐவரைவரைக்காட்டி * உன்னடிப்
போதுநான்அணுகாவகை செய்துபோதிகண்டாய் *
யாதும்யாவருமின்றிநின்னகம்பாலொடுக்கி ஓராலின்னீளிலை *
மீதுசேர்குழவி ! வினையேன்வினைதீர்மருந்தே ! (ச)

தீர்மருந்தின்றிஐந்துநோயடும் செக்கிலிட்டுத்திரிக்கும்ஐவரை *
நேர்மருங்குடைத்தாவடைத்து நெகிழ்ப்பானொக்கின்றாய் *
ஆர்மருந்துஇனியாகுவார் ? அடலாழியேந்திஅசுரர்வன்குலம் *
வேர்மருங்கறுத்தாய் ! விண்ணுளார்பெருமானேயோ ! (ரு)

விண்ணுளார்பெருமாற்கடிமைசெய்வாரையுஞ்செறும் ஐம்புலனிவை *
மண்ணுளென்னைப்பெற்றால் என்செய்யாமற்றுநீயும்விட்டால்?* [தென்
பண்ணுளாய்! கவிதன்னுளாய்! பத்தியினுள்ளாய்! பரமீசனே!* வந்
கண்ணுளாய்! நெஞ்சுளாய்! சொல்லுளாய்! ஒன்றுசொல்லாயே. (௬)

ஒன்றுசொல்லியொருத்தினில்நிற்கிலாத ஓரைவர்வன்கயவரை *
என்றுயான்வெல்கிற்பன் உன்திருவருளில்லையேல்? *
அன்றுதேவர்அசுரர்வாங்க அலைகடலரவமளாவி * ஓர்
குன்றம்வைத்தஎந்தாய! கொடியேன்பருகுஇன்னமுதே! (எ)

இன்னமுதெனத்தோன்றி ஓரைவர்யாவரையுமமயக்க * நீவைத்த
† முன்னமாயமெல்லாம முழுவேரரிந்து * என்னைஉன்
சின்னமும்திருமூர்த்தியும சிந்தித்தேத்திக்கைதொழுவேஅருளெனக்கு
என்னம்மா! என்கண்ணா! இமையோர்தம்குலமுதலே! (அ)

குலமுதலடும்தீவினைக் கொடுவன்குழியினில்வீழக்குமைவரை
வலமுதல்கெடுக்கும் ‡ வரமேதந்தருள்கண்டாய் *
நிலமுதலினிஎவ்வுலகுக்கும் நிற்பனசெலவனவென * பொருள்
பலமுதல்படைத்தாய்! என்கண்ணா! எனபரஞ்சுடரே! (௯)

என்பரஞ்சுடரே! என்றுஉன்னையலற்றி உன்இணைத்தாமரைகட்கு *
அன்புருகிநிற்கு மதுநிற்கச்சுமடுதந்தாய் *
வன்பரங்களெடுத்து ஐவர்திசைதிசைவலிதெற்றுகின்றனர் *
முன்பரவைகடைந்து அமுதம்கொண்டமூர்த்தியோ! (௧௰)

ஓ கொண்டமூர்த்திஓர்மூவராய்க் குணங்கள்படைத்தளித்துக்கெடுக
புண்டரீகக்கொப்பூழ்ப புனற்பள்ளியப்பனுக்கே * [கும் * அப
தொண்டாதொண்டர்தொண்டாதொண்டனசடகோபன சொலலாயிரததுள்
கண்டுபாடவல்லார் வினைபோமகங்குலும்பகலே. (௧௧) [இப்பததும *

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

உண்ணிலாவைவருடனிருத்தி இவ்வுலகில *
எண்ணிலாமாயன் எனைநலிய—எண்ணுகின்றான் *
என்றுநினைந்தோலமிட்ட இன்புகழ்ச்சேர்மாறனென *
குன்றிவிடுமே பவக்கங்குல். (௬௧)

சீயர் திருவடிகளே சரணம்.

---

† 'முன்னை' எனபதும் பாடம். ‡ 'வலமே' என்பதும் பாடம்.

## † உ - ஆந் திருவாய்மொழி—கங்குலும்பகலும்.

---

[ஆழ்வார் பெரியபெருமாளிடத்து மோஹித்திருப்பதை, 'இந்நாயகி விஷயமாக ஏதுஸங்கல்பித்திருக்கிறீர்?' என்று திருத்தாயார் கேட்கும் பாசுரத்தால் அருளிச்செய்தல்.]

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

பண் - தக்கராகம். தாளம் - ஒன்பதொத்து. நீலாம்பரிராகம்-ஆதிதாளம்.

கங்குலும்பகலும்கண் துயிலறியாள்
கண்ணநீர்கைகளால்இறைக்கும் *
சங்குசக்கரங்களென்றுகைகூப்பும்
தாமரைக்கண்ணென்றேதளரும் *
எங்ஙனேதரிக்கேன்உன்னைவிட்டு? என்னும்
இருநிலம்கைதுழாவிருக்கும் *
செங்கயல்பாய்நீர்த்திருவரங்கத்தாய்!
இவள்திறத்தென்செய்கின்றாயே? (க)

என்செய்கின்றாய்? என்தாமரைக்கண்ணா!
என்னும் கண்ணீர்மல்கஇருக்கும் *
என்செய்கேன்? எறிநீர்த்திருவரங்கத்தாய்!
என்னும் வெவ்வுயிர்த்துயிர்த்துருகும் *
முன்செய்தவினையே! முகப்படாயென்னும்
முகில்வண்ணா! ‡ தகுவதோ? என்னும் *
முன்செய்துஇவ்வுலகமுண்டுமிழ்ந்தளந்தாய்!
என்கொலோமுடிகின்றதுஇவட்கே? (உ)

வட்கிலள்இறையும்மணிவண்ணா! என்னும்
வானமேநோக்கும்மையாக்கும் *
உட்குடையசுரருயிரெல்லாமுண்ட
ஒருவனே! என்னும்உள்ளுருகும் *
கட்கிலீ! உன்னைக்காணுமாறுஅருளாய்
காகுத்தா! கண்ணனே! என்னும் *
திட்கொடிமதிள்சூழ்திருவரங்கத்தாய்!
இவள்திறத்துஎன்செய்திட்டாயே? (௩)

---

† இது, கோயில்திருவாய்மொழி. ‡ 'தகவிதோ' என்பதும் பாடம்.

இட்டகாலிட்ட † கையளாயிருக்கும்
எழுந்துலாய்மயங்குமகைகூப்பும் *
கட்டமேகாதலென்றுமூர்ச்சிக்கும்
கடல்வண்ணா ! கடியைகாணென்னும் *
வட்டவாய்நேமிவலங்கையா ! என்னும்
வந்திடாயெனறென்றேமயங்கும *
சிட்டனே ! செழுநீர்த்திருவரங்கததாய் !
இவள்திறத்துஎன்சிந்திததாயே ? (ச)

சிந்திக்கும்திசைக்குமதேறுமகைகூப்பும
திருவரங்கததுள்ளாய் ! என்னும
வந்திக்கும் * ஆங்கேமழைக்கண்ணீர்மல்க
வந்திடாயென்றென்றேமயங்கும *
அந்திப்போதுஅவுணனுடலிடந்தானே !
அலைகடல்கடைந்தஆரமுதே ! *
சந்தித்துஉன்சரணம்சார்வதேவலித்த
தையலைமையல்செய்தானே ! (ரு)

மையல்செய்துஎன்னைமனங்கவர்ந்தானே !
என்னும மாமாயனே ! என்னும் *
செய்யவாய்மணியே ! என்னும தண்புனல்சூழ்
திருவரங்கத்துள்ளாய் ! என்னும் *
வெய்யவாளதண்டுசங்குசக்கரமவில்லேந்தும்
விண்ணோர்முதல் ! என்னும் *.
பைகொள்பாம்பணையாய் ! இவள்திறத்தருளாய
பாவியேன்செயற்பாலதுவே. (சு)

பாலதுன்பங்களின்பங்களபடைத்தாய் !
பற்றிலார்பற்றநின்றானே ! *
காலசக்கரத்தாய் ! கடலிடம்கொண்ட
கடல்வண்ணா ! கண்ணனே ! என்னும *
சேல்கொள்தண்புனல்சூழ்திருவரங்கத்தாய் !
என்னும் என்தீர்த்தனே ! என்னும் *
கோலமாமழைக்கண்பனிமல்கஇருக்கும்
என்னுடைக்கோமளக்கொழுந்தே. (எ)

கொழுந்துவானவர்கட்கு ! என்னும் குன்றேந்திக்
கோநிரைகாத்தவன் ! என்னும *
அழும்தொழுமஆவியனலவெவ்வுயிர்க்கும்
அஞ்சனவண்ணனே ! என்னும *

† 'கைகளாய்' என்பது சிலர் பாடம.

எழுந்துமேல்நோக்கிஇமைப்பிலளிருக்கும்
எங்ஙனேநோக்குகேன் ? என்னும் *
செழுந்தடம்புனல்சூழ்திருவரங்கத்தாய் !
என்செய்கேன்என்திருமகட்கே ? (அ)

என்திருமகளசேர்மார்வனே ! என்னு
மென்னுடையாவியே ! என்னும் *
நின்திருவெயிற்றால்இடந்துநீகொண்ட
நிலமகள்கேள்வனே ! என்னும் *
† அன்றுருவேழும்தழுவிநீகொண்ட
ஆய்மகளன்பனே ! என்னும் *
தென்திருவரங்கம்கோயில்கொண்டானே !
தெளிகிலேன்முடிவுஇவள் தனக்கே. (௯)

முடிவுஇவள் தனக்குஒன்றறிகிலேனென்னும்
மூவுலகாளியே ! என்னும் *
கடிகமழ்கொன்றைச்சடையனே ! என்னும்
நான்முகக்கடவுளே ! என்னும் *
வடிவுடைவானோர் தலைவனே ! என்னும்
வண்திருவரங்கனே ! என்னும் *
அடியடையாதாள்போல்இவளணுகி
யடைந்தனள் முகில்வண்ணனடியே. (க0)

முகில்வண்ணனடியையடைந்துஅருள்சூடி
யுய்ந்தவன் மொய்புனல்பொருநல் *
துகில்வண்ணத்தூநீர்ச்சேர்ப்பன் வண்பொழில்சூழ்
வண்குருகூர்ச்சடகோபன் *
முகில்வண்ணனடிமேலசொன்னசொல்மாலை
ஆயிரத்துஇப்பத்தும்வல்லார் *
முகில்வண்ணவானத்துஇமையவர்சூழ
இருப்பார் பேரின்பவெள்ளத்தே. (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

கங்குல்பகலாதி கைவிஞ்சிமோகமுற *
அங்கதனைக்கண்டோ ரரங்கரைப்பார்த்து *—இங்கிவள்பால்
என்செய்யநீரெண்ணுகின்றதென்னும் நிலைசேர்மாறன் *
அஞ்சொலுற நெஞ்சுவெள்ளையாம. (கஉ)

சீயர் திருவடிகளே சரணம்

---

† 'அன்றுருமேழும்' என்பதும் பாடம்.

## ௩ - ஆந் திருவாய்மொழி—வெள்ளைச்சுரிசங்கு.

[தாய்மாரும் தோழிமாரும் தடுக்கவும், தலைவி திருப்பேரைக்குச் செல்வேனென்று துணிந்ததைக் கூறும் பாசுரம்.]

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பண் - நட்டபாடை தாளம் - ஏழொத்து. ஆநந்தபைரவிராகம் - ஆதிதாளம்.

ஓ வெள்ளைச்சுரிசங்கொடாழியேந்தித்
தாமரைக்கண்ணனென்னெஞ்சினூடே *
புள்ளைக்கடாகின்றவாற்றைக்காணீர்
என்சொல்லிச்சொல்லுகேன்? அன்னைமீர்காள்! *
வெள்ளச்சுகமவன்வீற்றிருந்த
வேதவொலியும்விழாவொலியும் *
பிள்ளைக்குழாவிளையாட்டொலியுமறாத்
திருப்பேரையில்சேர்வன்நானே. (௧)

நானக்கருங்குழல்தோழிமீர்காள்!
அன்னையர்காள்! அயற்சேரியீர்காள்! *
நானித்தனிநெஞ்சம்காக்கமாட்டேன்
என்வசமன்றிது, இராப்பகல்போய்
தேன்மொய்த்தபூம்பொழில்தண்பணைசூழ்
தென்திருப்பேரையில்வீற்றிருந்த *
வானப்பிரான்மணிவண்ணன்கண்ணன்
செங்கனிவாயின்திறத்ததுவே. (௨)

செங்கனிவாயின்திறத்ததாயும்
செஞ்சுடர்நீள்முடிதாழ்ந்ததாயும் *
சங்கொடுசக்கரம்கண்டுகந்தும்
தாமரைக்கண்களுக்குஅற்றுத்தீர்ந்தும் *
திங்களும்நாளும்விழாவறாத
தென்திருப்பேரையில்வீற்றிருந்த *
நங்கள்பிரானுக்குஎன்னெஞ்சம்தோழீ!
நாணும்நிறையும்இழந்ததுவே. (௩)

இழந்தவெம்மாமைத்திறத்துப்போன
என்னெஞ்சினாரும்அங்கேயொழிந்தார் *
உழந்துஇனியாரைக்கொண்டுஎன்உசாகோ?
ஓதக்கடலொலிபோல * எங்கும்

எழுந்தநல்வேதத்தொலிநின்றோங்கு
தென்திருப்பேரையில்வீற்றிருந்த *
முழங்குசங்கக்கையன்மாயத்தாழ்ந்தேன்
அன்னையர்காள்! என்னைஎன்முனிந்தே? (௪)

முனிந்துசகடமுதைத்து மாயப்பேய்
முலையுண்டுமருதிடைபோய் *
கனிந்தவிளவுக்குக்கன்றெறிந்த
கண்ணபிரானுக்குஎன்பெண்மைதோற்றேன் *
முனிந்துஇனியென்செய்தீர்? அன்னைமீர்காள்!
முன்னிஅவன்வந்துவீற்றிருந்த *
கனிந்தபொழில்திருப்பேரையிற்கே
காலம்பெறஎன்னைக்காட்டுமினே. (௫)

காலம்பெறஎன்னைக்காட்டுமின்கள்
காதல்கடலின்மிகப்பெரிதால் *
நீலமுகில்வண்ணத்தெம்பெருமான்
நிற்கும்முன்னேவந்துஎன்கைக்கும்எய்தான் *
ஞாலத்துஅவன்வந்துவீற்றிருந்த
நான்மறையாளரும்வேள்வியோவா *
கோலச்செந்நெற்கள்கவரிவீசும்
கூடுபுனல்திருப்பேரையிற்கே. (௬)

பேரெயில்சூழ்கடல்தென்னிலங்கை
செற்ற பிரான்வந்துவீற்றிருந்த *
பேரையிற்கேபுக்குஎன்னெஞ்சம்நாடிப்
பேர்த்துவரவெங்கும்காணமாட்டேன் *
ஆரைஇனிஇங்குடையம்? தோழீ!
என்னெஞ்சம்கூவவல்லாரும்இல்லை *
ஆரைஇனிக்கொண்டுஎன்சாதிக்கின்றது?
என்னெஞ்சம்கண்டதுவேகண்டேனே. (௭)

கண்டதுவேகொண்டுஎல்லாரும்கூடிக்
கார்க்கடல்வண்ணனோடுஎன்திறத்துக்
கொண்டு * அலர்தூற்றிற்றதுமுதலாக்
கொண்டஎன்காதல்உரைக்கில்தோழீ! *
மண்திணிஞாலமும்ஏழ்கடலும்
நீள்விசும்பும்கழியப்பெரிதால் *
தெண்திரைசூழ்ந்துஅவன்வீற்றிருந்த
தென்திருப்பேரையில்சேர்வன்சென்றே. (௮)

சேர்வன்சென்றுஎன்னுடைத்தோழிமீர்காள் !
அன்னையர்காள் ! என்னைத்தேற்றவேண்டா *
நீர்களுரைக்கின்றதுஎன் இதற்கு ?
நெஞ்சும்நிறைவும்எனக்கிங்கில்லை *
கார்வண்ணன்கார்க்கடல்ஞாலமுண்ட
கண்ணபிரான்வந்துவீற்றிருந்த *
ஏர்வளவொண்கழனிப்பழனத்
† தென்திருப்பேரையின்மாநகரே. (கூ)

நகரமும்நாடும்பிறவும்தேர்வேன்
நாணெனக்கில்லைஎன்தோழிமீர்காள் ! *
சிகரமணிநெடுமாடநீடு
தென்திருப்பேரையில்வீற்றிருந்த *
மகரநெடுங்குழைக்காதன்மாயன்
நூற்றுவரைஅன்றுமங்கநூற்ற *
நிகரில்முகில்வண்ணன்நேமியான் என்
நெஞ்சம்கவர்ந்துஎனையூழியானே ? (கO)

ஊழிதோறூழிஉருவும்பேரும்
செய்கையும்வேறவன்வையம்காக்கும் *
ஆழிநீர்வண்ணனைஅச்சுதனை
அணிகுருகூர்ச்சடகோபன்சொன்ன *
கேழிலந்தாதிஓராயிரத்துள் இவை
திருப்பேரையில்மேயபத்தும *
ஆழியங்கையனைஏத்தவல்லாரவர்
அடிமைத்திறத்தாழியாரே. (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

வெள்ளியநாமம்கேட்டு விட்டகன்றபின்மோகம் *
தெள்ளியமால் தென்திருப்பேர்சென்றுபுக *—உள்ளம்அங்கே
பற்றிநின்றதன்மை பகரும்சடகோபற்கு *
அற்றவர்கள் தாம்ஆழியார். (சுங)

சீயர் திருவடிகளே சரணம்.

---

† 'தென்திருப்பேரெயின்மாநகரே' என்றும் பாடம்.

## ச - ஆந் திருவாய்மொழி—ஆழியெழ.

---

[எம்பெருமானது விஜயபரம்பரைகளைப் பேசுதல்.]

கலிவிருத்தம்.

பண் - காந்தாரம் தாளம் - ஏழொத்து. மோஹநராகம் - அடதாளம்.

ஆழியெழச் சங்கும்வில்லுமெழ * திசை
வாழியெழத் தண்டும்வாளுமெழ * அண்டம்
மோழையெழ முடிபாதமெழ * அப்பன்
ஊழியெழ உலகம்கொண்டவாறே. (க)

ஆறுமலைக்கு எதிர்ந்தோடுமொலி * அர
வூறுசுலாய் மலைதேய்க்குமொலி * கடல்
மாறுசுழன்று அழைக்கின்றவொலி * அப்பன்
சாறுபட அமுதம்கொண்டநான்றே. (உ)

நான்றில ஏழ்மண்ணும்தானத்தவே * பின்னும்
நான்றில ஏழ்மலைதானத்தவே * பின்னும்
நான்றில ஏழ்கடல்தானத்தவே * அப்பன்
ஊன்றியிடந்து எயிற்றில்கொண்டநாளே. (ங)

நாளுமெழ நிலநீருமெழ * விண்ணும்
கோளுமெழ எரிகாலுமெழ * மலை
தாளுமெழச் சுடர்தானுமெழ * அப்பன்
ஊளியெழ உலகமுண்டவூணே. (ச)

ஊணுடைமல்லர் † தகைந்தவொலி * மன்னர்
ஆணுடைச்சேனை நடுங்குமொலி * விண்ணுள்
ஏணுடைத்தேவர் வெளிப்பட்டவொலி * அப்பன்
காணுடைப்பாரதம் கையறைபோழ்தே. (ரு)

போழ்துமெலிந்த புன்செக்கரில் * வான்திசை
சூழுமெழுந்து உதிரப்புனலா * மலை
கீழ்துபிளந்த சிங்கமொத்ததால் * அப்பன்
ஆழ்துயர்செய்து ‡ அசுரரைக் கொல்லுமாறே. (சு)

மாறுநிரைத்து இரைக்குமசரங்கள் * இன
நூறுபிணம் மலைபோல்புரள * கடல்
ஆறுமடுத்து உதிரப்புனலா * அப்பன்
நீறுபட இலங்கைசெற்றநேரே. (எ)

† 'ததர்ந்த' என்றும் பாடம். ‡ 'அசுரர்கொல்லுமாறே' என்றும் பாடம்.

நேர்சரிந்தான் கொடிக்கோழிகொண்டான் * பின்னும்
நேர்சரிந்தான் எரியும்அனலோன் * பின்னும்
நேர்சரிந்தான் முக்கண்மூர்த்திகண்டீர் * அப்பன்
நேர்சரிவாணன் திண்தோள்கொண்டவன்றே. (அ)

அன்றுமண்நீரெரிகால் விண்மலைமுதல் *
அன்றுசுடர்இரண்டுபிறவும * பின்னும்
அன்று மழையுயிர்தேவும்மற்றும் * அப்பன்
அன்றுமுதல் உலகம்செய்ததுமே. (௯)

மேய்நிரைகீழ்புக மாபுரள * சுனை
வாய்நிறைநீர் பிளிறிச்சொரிய * இன
ஆநிரைபாடி அங்கேயொடுங்க * அப்பன்
தீமழைகாத்துக் குன்றமெடுத்தானே. (௧௦)

குன்றமெடுத்தபிரான் அடியாரொடும் *
ஒன்றிநின்ற சடகோபனுரைசெயல் *
நன்றிபுனைந்த ஓராயிரத்துள்இவை *
வென்றிதரும்பத்தும் மேவிக்கற்பார்க்கே. (௧௧)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

ஆழிவண்ணன் தன்விசயமானவை முற்றும்காட்டி *
வாழிதனலென்று மகிழ்ந்துநிற்க *—ஊழிலவை
தன்னை இன்றுபோல்கண்டு தானுரைத்தமாறன்சொல் *
பன்னுவரே நல்லதுகற்பார். (௬௪)

சீயர் திருவடிகளே சரணம்.

---

## ரு - ஆந் திருவாய்மொழி—கற்பார்.

---

['விஜயங்களுக்கு அடியான விபவாவதாரகுணங்களை இழக்கிறீர்களே!' என்று உலகத்தாரைநோக்கி ஆழ்வார் இரங்குதல்.]

கலிநிலைத்துறை.

பண்-நாட்டராகம். தாளம்-ஏழொத்து. ஸஹாநாராகம்-அடதாளம்.

கற்பார்இராமபிரானையல்லால் மற்றும்கற்பரோ? *
புற்பாமுதலாப் புல்லெறும்பாதிஒன்றின்றியே *
நற்பாலயோத்தியில்வாழும் சராசரம்முற்றவும் *
நற்பாலுக்குஉய்த்தனன் நான்முகனார்பெற்றநாட்டுளே. (௧)

நாட்டில்பிறந்தவர் நாரணற்காளன்றியாவரோ? *
நாட்டில்பிறந்து படாதனபட்டுமனிசர்க்காய் *
நாட்டைநலியும்அரக்கரை நாடித்தடிந்திட்டு *
நாட்டையளித்துஉய்யச்செய்து நடந்தமைகேட்டுமே. (௨)

கேட்பார்கள் கேசவன்கீர்த்தியல்லால்மற்றுங்கேட்பரோ? *
கேட்பார்செவிசுடு கீழ்மைவசவுகளேவையும் *
சேட்பால்பழம்பகைவன் சிசுபாலன் * திருவடி
தாட்பாலடைந்த தன்மைஅறிவாரைஅறிந்துமே. (௩)

தன்மையறிபவர்தாம் அவற்காளன்றியாவரோ? *
பன்மைப்படர்பொருள் ஆதுமில்பாழ்நெடுங்காலத்து *
நன்மைப்புனல்பண்ணி நான்முகனைப்பண்ணி * தன்னுள்ளே
தொன்மைமயக்கியதோற்றிய சூழல்கள்சிந்தித்தே. (௪)

சூழல்கள்சிந்திக்கில் மாயன்கழலன்றிச்சூழ்வரோ? *
ஆழப்பெரும்புனல்தன்னுள் அழுந்தியஞாலத்தை *
தாழப்படாமல் தன்பால்ஒருகோட்டிடைத்தான்கொண்ட *
கேழல்திருவுருவாயிற்றுக் கேட்டுமுணர்ந்துமே. (௫)

கேட்டுமுணர்ந்தவர் கேசவற்காளன்றியாவரோ? *
வாட்டமிலாவண்கை மாவலிவாதிக்கவாதிப்புண்டு *
ஈட்டங்கொள்தேவர்கள் சென்றிரந்தார்க்குஇடர்நீக்கிய *
கோட்டங்கைவாமனனாய்ச் செய்தகூத்துக்கள் கண்டுமே. (௬)

கண்டுந்தெளிந்துங்கற்றார் கண்ணற்காளன்றியாவரோ? *
வண்டுண்மலர்த்தொங்கல் மார்க்கண்டேயனுக்குவாழ்நாள் *
இண்டைச்சடைமுடி ஈசனுடன்கொண்டுஉசாச்செல்ல *
கொண்டங்குத்தன்னொடும்கொண்டு உடன்சென்றதுணர்ந்துமே. (௭)

செல்லவுணர்ந்தவர் செல்வன்தன்சீரன்றிக்கற்பரோ? *
எல்லையிலாதபெருந்தவத்தால் பலசெய்மிறை *
அல்லலமரரைச்செய்யும் இரணியனாகத்தை *
மல்லலரியுருவாய்ச் செய்தமாயம்அறிந்துமே. (௮)

மாயமறிபவர் மாயவற்காளன்றியாவரோ? *
தாயம்செறும்ஒருநூற்றுவர்மங்க ஓரைவர்க்காய் *
தேசமறியஓர்சாரதியாய்ச்சென்று சேனையை
நாசம்செய்திட்டு * நடந்தநல்வார்த்தையறிந்துமே. (௯)

வார்த்தையறிபவர் மாயவற்காளன்றியாவரோ? *
போர்த்தபிறப்பொடுநோயொடுமூப்பொடு இறப்பிவை
பேர்த்து * பெருந்துன்பம்வேரறநீக்கித் தன்தாளின்கீழ்ச்
சேர்த்து * அவன்செய்யும் சேமத்தைஎண்ணித்தெளிவுற்றே. (௧௦)

தெளிவுற்றுவீவின்றிநின்றவர்க்கு இன்பக்கதிசெய்யும் *
தெளிவுற்றகண்ணனைத் தென்குருகூர்ச்சடகோபன்சொல் *
தெளிவுற்றஆயிரத்துள் இவைபத்தும்வல்லாரவர் *
தெளிவுற்றசிந்தையர் பாமருமூவுலகத்துள்ளே. (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

கற்றோர்கருதும் விசயங்களுக்கெல்லாம் *
பற்றாம்விபவகுணப் பண்புகளை *—உற்றுணர்ந்து
மண்ணினுள்ளோர்தமமிழவை வாய்ந்துரைத்தமாறனசொல் *
பண்ணில்இனிதான தமிழ்ப்பா. (௬௫)

சீயர் திருவடிகளே சரணம்.

---

## ௬ - ஆந் திருவாய்மொழி—பாமருமூவுலகும்.

---

[எம்பெருமானது குணம் அழகு முதலியவற்றை எண்ணி ப்ரத்யக்ஷமாக அநுபவிக்கும்படி ஆழ்வார் மனமுருகிக் கூப்பிடுதல் ]

கலிநிலைத்துறை

பண் - பாலையாழ். தாளம் - ஏழொத்து தோடிராகம் - ரூபகதாளம்.

பாமருமூவுலகுமபடைத்த பற்பநாபவோ! *
பாமருமூவுலகுமளந்த பற்பபாதாவோ! *
தாமரைக்கண்ணாவோ! தனியேன்தனியாளாவோ! *
தாமரைக்கையாவோ! உன்னைஎன்றுகொல்சேர்வதுவே? (க)

என்றுகொல்சேர்வது? அந்தோ! அரன்நான்முகனேத்தும * செய்ய
நின்திருப்பாதத்தையான் நிலம்நீரெரிகால * விண்ணுயிர்
என்றிவைதாமமுதலாமுற்றுமாய் நின்றஎந்தாயோ! *
குன்றெடுத்துஆநிரைமேய்த்து அவைகாத்தஎம்கூத்தாவோ! (உ)

காத்தஎங்கூத்தாவோ! மலையேந்திக்கல்மாரிதன்னை *
பூத்தண்துழாய்முடியாய்! புனைகொன்றையஞ்செஞ்சடையாய்! *
வாய்த்தஎன்நான்முகனே! வந்துஎன்னாருயிர்நீயானால *
ஏத்தருங்கீர்த்தியினாய்! உன்னைஎங்குத்தலைப்பெய்வனே? (௩)

எங்குத்தலைப்பெய்வன்நான்? எழிலமூவுலகும்நீயே *
அங்குஉயர்முக்கண்பிரான பிரமபெருமானவன்நீ *
வெங்கதிர்வச்சிரக்கை இந்திரன்முதலாத்தெய்வம்நீ *
கொங்கலர்தண்ணந்துழாய்முடி என்னுடைக்கோவலனே! (௪)

என்னுடைக்கோவலனே! என்பொல்லாக்கருமாணிக்கமே! *
உன்னுடைஉந்திமலர் உலகமவைமூன்றும்பரந்து *
உன்னுடைச்சோதிவெள்ளத்து அகம்பாலுன்னைக்கண்டுகொண்டிட்டு*
என்னுடையாருயிரார் எங்ஙனேகொல்வந்தெய்துவரே? (௫)

வந்தெய்துமாறுஅறியேன் மல்குநீலச்சுடர்தழைப்ப *
செஞ்சுடர்ச்சோதிகள்பூத்து ஒருமாணிக்கம்சேர்வதுபோல் *
அந்தரமேல்செம்பட்டோடு அடிஉந்திகைமார்வுகண்வாய் *
செஞ்சுடர்ச்சோதிவிடவுறை என்திருமார்பனையே. (௬)

என்திருமார்பன்தன்னை என்மலைமகள்கூறன்தன்னை *
என்றுமென்நாமகளை அகம்பால்கொண்டநான்முகனை *
நின்றசசிபதியை நிலங்கீண்டெயில்மூன்றெரித்த *
வென்றுபுலந்துரந்த விசும்பாளியைக்காணேனோ! (எ)

ஆளியைக்காண்பரியாய் அரிகாண்நரியாய் * அரக்கர்
ஊளையிட்டுஅன்றுஇலங்கைகடந்து பிலம்புக்கொளிப்ப *
மீளியம்புள்ளைக்கடாய் விறல்மாலியைக்கொன்று * பின்னும்
ஆளுயர்குன்றங்கள்செய்து அடர்த்தானையுங்காண்டுங்கொலோ? (அ)

காண்டுங்கொலோ? நெஞ்சமே! கடியவினையேமுயலும் *
ஆண்திறல்மீளிமொய்ம்பின அரக்கன்குலத்தைத்தடிந்து *
மீண்டும்அவன்தம்பிக்கே விரிநீரிலங்கையருளி *
ஆண்டுதன்சோதிபுக்க அமரரரியேற்றினையே. (௯)

ஏற்றரும்வைகுந்தத்தை அருளும்நமக்கு * ஆயர்குலத்து
ஈற்றிளம்பிள்ளையொன்றாய்ப்புக்கு மாயங்களேஇயற்றி *
கூற்றியல்கஞ்சனைக்கொன்று ஐவர்க்காய்க்கொடுஞ்சேனைதடிந்து *
ஆற்றல்மிக்கான் பெரியபரஞ்சோதிபுக்கஅரியே. (௧0)

புக்கஅரியுருவாய் அவுணனுடல்கீண்டுகந்த *
சக்கரச்செல்வன்தன்னைக் குருகூர்ச்சடகோபன்சொன்ன *
மிக்கஓராயிரத்துள் இவைபத்தும்வல்லாரவரை *
தொக்குப்பல்லாண்டிசைத்துக் கவரிசெய்வர்ஏழையரே. (௧௧)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

பாமருவுவேதம் பகர்மால்குணங்களுடன் *
ஆமழகுவேண்டற்பாடாம்அவற்றை *— தூமனத்தால்
நண்ணிஅவனைக்காண நன்குருகிக்கூப்பிட்ட *
அண்ணலைநண்ணார் ஏழையர். (௬௬)

சீயர் திருவடிகளே சரணம்.

---

## எ - ஆந் திருவாய்மொழி—ஏழையர்.

[எம்பெருமானது திவ்யாவயவஸௌந்தர்யம் உருவெளித்தோற்றத்தில் காணப்பட, அதனால் வருந்தும் தலைவி சொல்லிய பாசுரம்.]

கலிநிலைத்துறை

பண் - பாலையாழ். தாளம் - எழொத்து. முகாரிராகம் - அடதாளம்

ஏழையராவியுண்ணும் இணைக்கூற்றங்கொலோ? அறியேன் *
ஆழியங்கண்ணபிரான் திருக்கண்கள்கொலோ? அறியேன் *
சூழவும்தாமரைநாண்மலர்போல் வந்துதோன்றும்கண்டீர் *
தோழியர்காள்! அன்னைமீர்! என்செய்கேன்? துயராட்டியேனே. (க)

ஆட்டியும்தூற்றியும்நின்று அன்னைமீர்! என்னைநீர்நலிந்தென்? *
மாட்டுயர்கற்பகத்தின் வல்லியோ? கொழுந்தோ? அறியேன் *
ஈட்டியவெண்ணெயுண்டான் திருமூக்கு, எனதாவியுள்ளே *
மாட்டியவல்விளக்கின் சுடராய்நிற்கும்வாலியதே. (உ)

வாலியதோர்கனிகொல்? வினையாட்டியேன்வல்வினைகொல்? *
கோலந்திரள்பவளக் கொழுந்துண்டங்கொலோ? அறியேன் *
நீலநெடுமுகில்போல் திருமேனியம்மான்தொண்டைவாய் *
ஏலும் † திசையுளெல்லாம் வந்துதோன்றும்என்னின்னுயிர்க்கே. (ந)

இன்னுயிர்க்குஏழையர்மேல் வளையும்இணைநீலவிற்கொல்? *
மன்னியசீர்மதனன் கருப்புச்சிலைகொல்? * மதனன்
தன்னுயிர்த்தாதை கண்ணபெருமான்புருவமவையே *
என்னுயிர்மேலனவாய் அடுகின்றனவென்றுநின்றே. (ச)

என்றுநின்றேதிகழும் செய்யவீன்சுடர்வெண்மின்னுக்கொல்? *
அன்றிஎன்னாவியடும் அணிமுத்தங்கொலோ? அறியேன் *
குன்றமெடுத்தபிரான்முறுவல் எனதாவியடும் *
ஒன்றும்அறிகின்றிலேன் அன்னைமீர்! எனக்குஉய்விடமே. (ரு)

உய்விடம்ஏழையர்க்கும் அசுரர்க்கும்அரக்கர்கட்கும் *
எவ்விடம்? என்றிலங்கி மகரம்தழைக்கும்தளிர்கொல்? *
பைவிடப்பாம்பணையான் திருக்குண்டலக்காதுகளே *
கைவிடலொன்றுமின்றி அடுகின்றனகாண்மின்களே. (சு)

காண்மின்கள்அன்னையர்காள்! என்று காட்டும்வகையறியேன் *
நாள்மன்னுவெண்திங்கள்கொல்? நயந்தார்கட்குநச்சிலைகொல்? *
சேண்மன்னுநால்தடந்தோள் பெருமான்தன்திருநுதலே *
கோள்மன்னி ஆவியடும் கொடியேனுயிர்கோளிழைத்தே. (எ)

† 'திசைகளெல்லாம்' என்றும் பாடம்.

கோளிழைத்தாமரையும் கொடியும்பவளமும்வில்லும் *
கோளிழைத்தண்முத்தமும தளிரும்குளிர்வான்பிறையும் *
கோளிழையாவுடைய கொழுஞ்சோதிவட்டங்கொல்? * கண்ணன்
கோளிழைவாண்முகமாய்க் கொடியேனுயிர்கொள்கின்றதே. (அ)

கொள்கின்றகோளிருளைச் சுகிர்ந்திட்டகொழுஞ்சுருளின் *
உள்கொண்டநீலநன்னூல்தழைகொல்? அன்றுமாயன்குழல் *
விள்கின்றபூந்தண்துழாய் விரைநாறவந்தென்னுயிரை *
கள்கின்றவாறுஅறியீர் அன்னைமீர்! கழறாநிற்றிரே. (௯)

நிற்றிமுற்றத்துளென்று நெரித்தகையராய் * என்னைநீர்
சுற்றியுமசூழ்ந்தும்வைதிர் சுடர்ச்சோதிமணிநிறமாய் *
முற்றஇம்மூவுலகும் விரிகின்றசுடர்முடிக்கே *
ஒற்றுமைகொண்டதுஉள்ளம் அன்னைமீர்! நசையென்னுங்கட்கே? ()

கட்கரியபிரமன்சிவன் இந்திரனென்றுஇவர்க்கும் *
கட்கரியகண்ணனைக் குருகூர்ச்சடகோபன்சொன்ன *
உட்குடையாயிரத்துள் இவையுமொருபத்துமவல்லார் *
உடகுடைவானவரோடு உடனாய்என்றும்மாயாரே. (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

ஏழையர்கள்நெஞ்சை இளகுவிக்குமமாலழகு *
சூழவந்துதோன்றித் துயர்விளைக்க *—ஆழுமனந்
தன்னுடனேஅவ்வழகைத் தானுரைத்தமாறன்பால் *
மன்னுமவர் தீவினைபோம்மாய்ந்து. (௬எ)

சீயர் திருவடிகளே சரணம்

---

# அ - ஆந் திருவாய்மொழி—மாயாவாமனனே.

---

[உபத்திரவப்படும்படி தம்மைவைத்த விசித்திர சக்தியால் எம்பெருமானது விசித்திர விபூதியைக் கண்டு ஆழ்வார் ஆச்சரியப்படுதல்.]

கலிவிருத்தம்.

பண் - பாலையாழ். தாளம் - ஏழொத்து. பந்துவாளி ராகம் - ரூபகதாளம்.

மாயா! வாமனனே! மதுசூதா! நீயருளாய் *
தீயாய்நீராய்நிலனாய் விசும்பாய்க்காலாய் *
தாயாய்த்தந்தையாய்மக்களாய் மற்றுமாய்முற்றுமாய் *
நீயாய்நீநின்றவாறு இவையென்னநியாயங்களே! (க)

அங்கண்மலர்த்தண் துழாய்முடி அச்சுதனே ! அருளாய் *
திங்களும்ஞாயிறுமாய்ச் செழும்பல்சுடராய்இருளாய் *
பொங்குபொழிமழையாய்ப் புகழாய்ப்பழியாய்ப்பின்னும்நீ *
வெங்கண்வெங்கூற்றமுமாம் இவையென்னவிசித்திரமே ! (௨)

சித்திரத்தேர்வலவா ! திருச்சக்கரத்தாய் ! அருளாய் *
எத்தனையோருகமும் அவையாயவற்றுள்இயலும் *
ஒத்தவொண்பல்பொருள்கள் உலப்பில்லனவாய்வியவாய் *
† வித்தகத்தாய்நிற்றிநீ இவையென்னவிடமங்களே ! (௩)

கள்ளவிழ்தாமரைக்கண் கண்ணனே ! எனக்கொன்றருளாய் *
உள்ளதும்இல்லதுமாய் உலப்பில்லனவாய்வியவாய் *
வெள்ளத்தடங்கடலுள் விடநாகணைமேல்மருவி *
உள்ளப்பல்யோகுசெய்தி இவையென்னஉபாயங்களே ! (௪)

பாசங்கள்நீக்கி என்னைஉனக்கேஅறக்கொண்டிட்டு * நீ
வாசமலர்த்தண் துழாய்முடி மாயவனே ! அருளாய் *
காயமும்சீவனுமாய்க் கழிவாய்ப்பிறப்பாய், பின்னும்நீ *
மாயங்கள்செய்துவைத்தி இவையென்னமயக்குக்களே ! (௫)

மயக்கா ! வாமனனே ! மதியாமவண்ணமொன்றருளாய் *
அயர்ப்பாய்த்தேற்றமுமாய் அழலாய்க்குளிராய்வியவாய் *
வியப்பாய்வென்றிகளாய் வினையாய்ப்பயனாய், பின்னும்நீ *
துயக்காய்நீநின்றவாறு இவையென்னதுயரங்களே ! (௬)

துயரங்கள்செய்யும்கண்ணா ! சுடர்நீள்முடியாய் ! அருளாய் *
துயரம்செய்மானங்களாய் மதனாகிஉகவைகளாய் *
துயரம்செய்காமங்களாய்த் துலையாய்நிலையாய்நடையாய் *
துயரங்கள்செய்துவைத்தி இவையென்னசுண்டாயங்களே ! (௭)

‡ என்னசுண்டாயங்களால் நின்றிட்டாய் ? என்னையாளும்கண்ணா !*
இன்னதோர்தன்மையையென்று உன்னையாவர்க்கும்தேற்றரியை *
முன்னியமூவுலகும் அவையாய் அவற்றைப்படைத்து *
பின்னும்உள்ளாய் ! புறத்தாய் ! இவையென்னஇயற்கைகளே ! (௮)

¶ என்னஇயற்கைகளால் எங்ஙனேநின்றிட்டாய் ? என்கண்ணா ! *
துன்னுகரசரணம்முதலாக எல்லாவுறுப்பும் *
உன்னுசுவையொளி ஊறொலிநாற்றம்முற்றும்நீயே *
உன்னையுணரவுறில் உலப்பில்லைநுணுக்கங்களே. (௯)

† ‘வித்தகத்தால்’ என்பதும் பாடம்

‡ ‘என்னசுண்டாயங்களாலெங்ஙனேநின்றிட்டாயென்கண்ணா’ என்பதும் பாடம்.

¶ ‘என்னவியற்கைகளால்நின்றிட்டாயென்னையாளுங்கண்ணா’ என்பதும் பாடம்,

இல்லைநுணுக்கங்களே இதனிற்பிறிதென்னும்வண்ணம் *
தொல்லைநன்னூலில்சொன்ன உருவும்அருவும்நீயே *
அல்லித்துழாயலங்கல் அணிமார்ப! என்அச்சுதனே! *
வல்லதோர்வண்ணம்சொன்னால் அதுவேஉனக்குஆம்வண்ணமே. (௧௦)

ஆம்வண்ணம்இன்னதொன்றென்று அறிவதரியஅரியை *
ஆம்வண்ணத்தால் குருகூர்ச்சடகோபன்அறிந்துரைத்த *
ஆம்வண்ணம்ஒண்தமிழ்கள் இவையாயிரத்துள்இப்பத்தும் *
ஆம்வண்ணத்தாலுரைப்பார் அமைந்தார்தமக்கென்றைக்குமே. (௧௧)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

மாயாமல்தன்னைவைத்த வைசித்திரியாலே *
தீயாவிசித்திரமாச் சேர்பொருளோடு—மாயாமல் *
வாய்ந்துநிற்குமாயன் வண்முறைத்தமாறனைநாம் *
ஏய்ந்துரைத்துவாழுநாள் என்று? (௬௮)

சீயர் திருவடிகளே சரணம்

---

## ௯ - ஆம் திருவாய்மொழி—என்றைக்கும்

[எம்பெருமான் தனக்கும் ததீயர்க்கும் இனிதாகக் கவிபாடும்படி தம்மை இங்குவைத்ததற்குக் கைம்மாறில்லாமையை ஆழ்வார் அருளிச்செய்தல்.]

கலிவிருத்தம்.

பண்-நட்டபாடை. நாளம்-ஜம்பரோத்து ஆரபிராகம்-ஆத்தாளம்.

என்றைக்குமென்னை உய்யக்கொண்டுபோகிய *
அன்றைக்கன்றென்னைத் தன்னாக்கிஎன்னால்தன்னை *
இன்தமிழ்பாடியஈசனை ஆதியாய
நின்றஎன்சோதியை * என்சொல்லிநிற்பனோ? (௧)

என்சொல்லிநிற்பன்? என்னினுயிரின்றொன்றாய் *
என்சொல்லால்யான்சொன்ன இன்கவிஎன்பித்து *
தன்சொல்லால்தான்தன்னைக் கீர்த்தித்தமாயன் * என்
முன்சொல்லும் மூவுருவாம்முதல்வனே. (௨)

ஆம்முதல்வனிவனென்று தன்தேற்றி என
நாமுதல்வந்துபுகுந்து நல்லின்கவி *
தூமுதல்பத்தர்க்குத் தான்தன்னைச்சொன்ன * என
வாய்முதலப்பனை என்றுமறப்பனோ? (௩)

அப்பனைஎன்றுமறப்பன்? என்னாகியே *
தப்புதலின்றித் தனைக்கவிதான்சொல்லி *
ஒப்பிலாத்தீவினையேனை உய்யக்கொண்டு *
செப்பமேசெய்து திரிகின்றசீர்கண்டே. (௪)

சீர்கண்டுகொண்டு திருந்துநல்லின்கவி *
நேர்படயான்சொல்லும் நீர்மையிலாமையில் *
ஏர்விலாஎன்னைத் தன்னாக்கிஎன்னால்தன்னை *
பார்பரவின்கவி பாடும்பரமரே. (௫)

இன்கவிபாடும பரமகவிகளால் *
தன்கவிதான் தன்னைப்பாடுவியாது * இன்று
நன்குவந்துஎன்னுடனாக்கி என்னால்தன்னை *
வன்கவிபாடும் என்வைகுந்தநாதனே. (௬)

வைகுந்தநாதன் எனவல்வினைமாய்ந்தற *
செய்குந்தன்தன்னை என்னாக்கிஎன்னால்தன்னை *
வைகுந்தனாகப்புகழ வண்தீங்கவி *
செய்குந்தன்தன்னை எந்நாள்சிந்தித்தார்வனோ? (௭)

ஆர்வனோ? ஆழியங்கை எம்பிரான்புகழ் *
பார்விண்நீர்முற்றும் கலந்துபருகிலும் *
ஏர்விலாஎன்னைத் தன்னாக்கிஎன்னால்தன்னை *
சீர்பெறஇன்கவி சொன்னதிறத்துக்கே. (௮)

திறத்துக்கேதுப்புரவாம திருமாலின்சீர் *
இறப்புஎதிர்காலம் பருகிலும்ஆர்வனோ? *
மறப்பிலாஎன்னைத் தன்னாக்கிஎன்னால்தன்னை *
உறப்பலஇன்கவி சொன்னஉதவிக்கே. (௯)

உதவிக்கைம்மாறு என்னுயிர்என்னஉற்றெண்ணில *
அதுவும்மற்றாங்கவன்தன்னது, என்னால்தன்னை *
பதவியஇன்கவி பாடியஅப்பனுக்கு *
எதுவும்ஒன்றுமில்லை செய்வதுஇங்குமங்கே. (௧௦)

இங்கும்அங்கும திருமாலன்றியின்மைகண்டு *
அங்ஙனே வண்குருகூர்ச் † சடகோபன் *
இங்ஙனேசொன்ன ஓராயிரத்துஇப்பத்தும *
எங்ஙனேசொல்லினும் இன்பம்பயக்குமே. (௧௧)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

† 'சடகோபன்சொல்' என்றும் பாடம்.

என்தனை நீ இங்கு வைத்தது எழுதுக என * மாலும்
என்தனக்கும் என் தமர்க்கும் இன்பம் தரா *—நன்று கவி
பாட என்னைக் கைம்மாறு இலாமை * பகர் மாறன்
பாடு அணைவார்க்கு உண்டாம் இன்பம். (௬௯)

சீயர் திருவடிகளே சரணம்

---

## ௧0 - ஆம் திருவாய்மொழி -- இன்பம்பயக்க.

---

[இன்பக்கவிபாடுவிக்கத எம்பெருமானை ஆழ்வார் திருவாறன்விளையிற் சென்று கண்டு அடிமைசெய்யக் கருதுதல்.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

பண் - பழம்பஞ்சுரம் தாளம்-ஏழாந்தூக்கு, கல்யாணிராகம்-அடதாளம்

இன்பம் பயக்க எழில் மலர் மாதரும் தானும் இவ்வேழுலகை *
இன்பம் பயக்க இனிதுடன் வீற்றிருந்து ஆள்கின்ற எங்கள் பிரான் *
அன்புற்று அமர்ந்து உறைகின்ற அணி பொழில் சூழ் திருவாறன்விளை *
அன்புற்று அமர்ந்து வலஞ்செய்து கைதொழும் நாள்களும் ஆகுங்கொலோ? (௧)

ஆகுங்கொல் ஐயம் ஒன்றின்றி அகலிடம் முற்றவும் * ஈரடியே
ஆகும் பரிசு நிமிர்ந்த திருக்குறள் அப்பன் அமர்ந்துறையும் *
மாகம் திகழ் கொடி மாடங்கள் நீடு மதிள் திருவாறன்விளை *
மாகந்த நீர்கொண்டு தூவி வலஞ்செய்து கைதொழக் கூடுங்கொலோ? (௨)

கூடுங்கொல் வைகலும் கோவிந்தனை மதுசூதனைக் கோளரியை *
ஆடும் பறவை மிசைக் கண்டு கைதொழுது அன்றி, அவனுறையும் *
பாடும் பெரும் புகழ் நான்மறை வேள்வி ஐந்து ஆறங்கம் பன்னினர் வாழ் *
நீடு பொழில் திருவாறன்விளை தொழ வாய்க்குங்கொல் நிச்சலுமே. (௩)

வாய்க்குங்கொல் நிச்சலும் எப்பொழுதும் மனத்து ஈங்கு நினைக்கப் பெற *
வாய்க்கும் கரும்பும் பெருஞ்செந்நெலும் வயல் சூழ் திருவாறன்விளை *
வாய்க்கும் பெரும் புகழ் மூவுலகு ஈசன் வடமதுரைப் பிறந்த *
வாய்க்கும் மணிநிறக் கண்ணபிரான்தன் மலரடிப் போதுகளே. (௪)

மலரடிப் போதுகள் என் நெஞ்சத்து எப்பொழுதும் இருத்தி வணங்க *
பலரடியார் முன்பருளிய பாம்பணை அப்பன் அமர்ந்துறையும் *
மலரின் மணி நெடு மாடங்கள் நீடு மதிள் திருவாறன்விளை *
உலகம் மலி புகழ் பாட நம்மேல் வினை ஒன்றும் நில்லா கெடுமே. (௫)

ஒன்றுநில்லா கெடும் முற்றவும் தீவினை உள்ளித் தொழுமின் தொண்டீர்!*
அன்றங்கமர் வென்று உருப்பிணி நங்கை அணிநெடுந் தோள் புணர்ந்தான்*
என்றும் எப்போதும் என் நெஞ்சம் துதிப்ப உள்ளே இருக்கின்ற பிரான்*
நின்ற அணி திருவாறன்விளை என்னும் நீள் நகரம் அதுவே. (௬)

நீணகரம் அதுவே மலர்ச் சோலைகள் சூழ் திருவாறன்விளை*
நீணகரத்து உறைகின்ற பிரானை நெடுமால் கண்ணன் விண்ணவர் கோன்*
வாணபுரம் புக்கு முக்கட் பிரானைத் தொலையவெம் போர்கள் செய்து*
வாணனை ஆயிரந் தோள் துணித்தான் சரண் அன்றி மற்றொன்றிலமே. (௭)

அன்றி மற்றொன்றிலம் நின் சரணே என்று அகலிரும் பொய்கையின்வாய்*
நின்று தன் நீள் கழல் ஏத்திய ஆனையின் நெஞ்சிடர் தீர்த்த பிரான்*
சென்றங்கு இனிதுறைகின்ற செழும் பொழில் சூழ் திருவாறன்விளை*
ஒன்றி வலஞ்செய்ய ஒன்றுமோ? தீவினை உள்ளத்தின் சார்வல்லவே. (௮)

தீவினை உள்ளத்தின் சார்வல்ல ஆகித் தெளிவிசும்பேறலுற்றால்*
நாவினுள்ளும் உள்ளத்துள்ளும் அமைந்த தொழிலினுள்ளும் நவின்று*
யாவரும் வந்து வணங்கும் பொழில் திருவாறன்விளை அதனை*
மேவி வலஞ்செய்து கைதொழக் கூடுங்கொலோ? என்னும் என் சிந்தனையே.

சிந்தை மற்றொன்றின் திறத்ததல்லாத் தன்மை தேவபிரான் அறியும்*
சிந்தையினால் செய்வதான் அறியாதன மாயங்கள் ஒன்றுமில்லை*
சிந்தையினால் சொல்லினால் செய்கையால் நிலத்தேவர் குழுவணங்கும்*
சிந்தை மகிழ் திருவாறன்விளை உறை தீர்த்தனுக்கு அற்ற பின்னே. (௧௦)

தீர்த்தனுக்கற்ற பின் மற்றோர் சரணில்லை என்றெண்ணித் தீர்த்தனுக்கே*
தீர்த்த மனத்தனனாகிச் செழுங்குருகூர்ச் சடகோபன் சொன்ன*
தீர்த்தங்கள் ஆயிரத்துள் இவை பத்தும் வல்லார்களைத் தேவர் வைகல்*
தீர்த்தங்களே என்று பூசித்து நல்கி உரைப்பர் தம் தேவியர்க்கே. (௧௧)

ஆழ்வார் திருவடிகளே சரணம்

---

இன்பக் கவிபாடுவித்தோனை இந்திரையோடு
அன்புற்று வாழ் திருவாறன்விளையில் *— துன்பமறக்
கண்டடிமை செய்யக் கருதிய மாறன் கழலே *
திண்திறலோர் யாவர்க்கும் தேவு. (௭௦)

ஜீயர் திருவடிகளே சரணம்

---

## எட்டாம்பத்து.

ஆழ்வார் தமது ஆத்மஆத்மீயங்களில் நசையற்றபடியை அருளிச்செய்தல்.

## க - ஆந் திருவாய்மொழி—தேவிமாராவார்.

[எம்பெருமான் தமது நினைவைத் தலைக்கட்டாமையால், ஆழ்வார் அவனது ஆச்ரிதபாரதந்த்ரியம் யாவையும்தானும்நிலைமை இவைகளைச் சங்கித்துத் தெளிதல்.]

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

பண் - புறநீர்மை   தாளம் - ஒன்பதொத்து   பைரவி ராகம் - ஆதிதாளம்.

தேவிமாராவார் திருமகள் பூமி
ஏவமற்றமரர் ஆட்செய்வார் *
மேவியஉலகம்மூன்றவையாட்சி
வேண்டுவேண்டுருவம்நினதுருவம் *
பாவியேன்தன்னை அடுகின்ற
கமலக்கண்ணது ஓர்பவளவாய்மணியே ! *
ஆவியே ! அமுதே ! அலைகடல்கடைந்த
அப்பனே ! காணுமாறுஅருளாய். (௧)

காணுமாறருளாயென்றென்றேகலங்கிக்
கண்ணநீரலமர * வினையேன
பேணுமாறெல்லாம்பேணி நின்பெயரே
பிதற்றுமாறுஅருளெனக்குஅந்தோ ! *
காணுமாறுஅருளாய்காகுத்தா ! கண்ணா !
தொண்டனேன்கற்பகக்கனியே ! *
பேணுவாரமுதே ! பெரியதண்புனல்சூழ்
பெருநிலமெடுத்தபேராளா ! (௨)

எடுத்தபேராளன்நந்தகோபன்தன்
இன்னுயிர்ச்சிறுவனே ! * அசோதைக்கு
அடுத்தபேரின்பக்குலவிளங்களிறே !
அடியனேன்பெரியஅம்மானே ! *

கடுத்தபோரவுணனுடலிருபிளவாக்
கையுகிராண்டஎங்கடலே! *
அடுத்தோருருவாய்இன்றுநீவாராய்
எங்ஙனம்தேறுவர்உமரே? (௩)

உமருகந்துகந்தஉருவம்நின்னுருவமாகி
உன்தனக்குஅன்பரானா
ரவர் * உகந்தமர்ந்தசெய்கைஉன்மாயை
அறிவொன்றும்சங்கிப்பன்வினையேன் *
அமரதுபண்ணிஅகலிடம்புடைசூழ்
அடுபடையவித்தஅம்மானே! *
அமரர்தம்அமுதே! அசுரர்கள்நஞ்சே!
என்னுடை ஆருயிரேயோ! (௪)

ஆருயிரேயோ! அகலிடமுழுதும் *
படைத்திடந்துண்டுமிழ்ந்தளந்த *
பேருயிரேயோ! பெரியநீர்படைத்து அங்குறைந்துஅது
கடைந்தடைத்துடைத்த *
சீரியரேயோ! மனிசர்க்குத்தேவர்போலத்
தேவர்க்குந்தேவாவோ! *
ஓருயிரேயோ! உலகங்கட்கெல்லாம்
உன்னைநான்எங்குவந்துறுகோ? (௫)

எங்குவந்துறுகோ? என்னையாள்வானே!
ஏழுலகங்களுமநீயே *
அங்கவர்க்கமைத்ததெய்வமும்நீயே *
அவற்றவைகருமமுமநீயே *
பொங்கியபுறம்பால்பொருளுளவேலும்
அவையுமோநீயின்னேயானல் *
மங்கியஅருவாம்நேர்பபமும்நீயே
வான்புலனிறந்ததுமநீயே. (௬)

இறந்ததும்நீயேஎதிர்ந்ததுமநீயே
நிகழ்வதோநீஇன்னேயானல் *
சிறந்தநின்தன்மைஅதுஇதுவுதுவென்று
அறிவொன்றும்சங்கிப்பன்வினையேன் *
கறந்தபால்நெய்யே! நெய்யினின்சுவையே!
கடலினுளமுதமே! * அமுதில்
பிறந்தஇன்சுவையே! சுவையதுபயனே!
பின்னைதோள்மணந்தபேராயா! (௭)

மணந்தபேராயா ! மாயத்தால்முழுதும்
வல்வினையேனையீர்கின்ற *
குணங்களையுடையாய் ! அசுரர்வன்கையர்கூற்றமே !
கொடியபுள்ளுயர்த்தாய் ! *
பணங்களாயிரமுடையபைந்நாகப்பள்ளியாய் !
பாற்கடற்சேர்ப்பா ! *
வணங்குமாறுஅறியேன் மனமும்
வாசகமும்செய்கையும்யானும்நீதானே. (௮)

யானும்நீதானேயாவதோமெய்யே
அருநரகவையும்நீயானால் *
வானுயரின்பமெய்திலென் ?
மற்றைநரகமேயெய்திலென் ? எனிலும் *
யானும்நீதானாயத்தெளிதொறும்நன்றும்
அஞ்சுவன் நரகம்நானடைதல் *
வானுயரின்பமன்னிவீற்றிருந்தாய !
அருளுநின்தாள்களை எனக்கே. (௯)

தாள்களை எனக்கேதலைத்தலைச்சிறப்பத்
தந்த பேருதவிக்கைம்மாறு *
தோள்களையாரத்தழுவி என்னுயிரை
அறவிலைசெய்தனன்சோதீ ! *
தோள்களாயிரத்தாய் ! முடிகளாயிரத்தாய் !
துணைமலர்க்கண்களாயிரத்தாய் ! *
தாள்களாயிரத்தாய் ! பேர்களாயிரத்தாய் !
தமியனேன்பெரியவப்பனே ! (௧௦)

❁ பெரியவப்பனைப்பிரமனப்பனை
உருத்திரனப்பனை * முனிவர்க்கு
உரியவப்பனைஅமரரப்பனை
உலகுக்கோர்தனியப்பன்தன்னை *
பெரியவண்குருகூர்வண்சடகோபன்
பேணினஆயிரத்துள்ளும் *
உரியசொல்மாலைஇவையும்பத்து இவற்றால்
உய்யலாம்தொண்டீர் ! நங்கட்கே. (௧௧)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

தேவனுறைபதியில் சேரப்பெறுமையால் *
மேவுமடியார்வசனும் மெய்ந்நிலையும் *—யாவையுந்தா
னும்நிலையும்சங்கிதது அவைதெளிந்தமாறன்பால் *
மாநிலத்தீர் ! நங்கள்மனம். (எக)

சீயர் திருவடிகளே சரணம்.

---

## ௨ - ஆந் திருவாய்மொழி—நங்கள்வரிவளை.

---

[ஆழ்வார் தமக்கு ஸம்ஸாரத்தில் நைராஶ்யமுணடானதை, தலைவனை நோக்கிச் செல்லக் கருதிய தலைவிபேச்சாலே அருளிச்செய்தல்.]

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

பண் - கொல்லி. தாளம் - ஏழொத்து. செந்துருட்டிராகம் - அடதாளம்.

நங்கள்வரிவளையாயங்காளோ !
நம்முடையேதலர்முன்புநாணி *
நுங்கட்குயானென்றுரைக்குமாற்றம்
நோக்குகின்றேன்எங்குங்காணமாட்டேன் *
சங்கம்சரிந்தனசாயிழந்தேன்
தடமுலைபொன்னிறமாய்த்தளர்ந்தேன் *
வெங்கண்பறவையின்பாகன்எங்கோன்
வேங்கடவாணனைவேண்டிச்சென்றே. (க)

வேண்டிச்சென்றொன்றுபெறுகிற்பாரில்
என்னுடைத்தோழியர்நுங்கட்கேலும் *
ஈண்டிதுரைக்கும்படியைஅந்தோ !
காண்கின்றிலேன்இடராட்டியேன்நான் *
காண்தகுதாமரைக்கண்ணன்கள்வன்
விண்ணவர்கோன்நங்கள்கோனைக்கண்டால் *
ஈண்டியசங்கும்நிறைவும்கொள்வான்
எத்தனைகாலம்இளைக்கின்றேனே ? (௨)

காலம்இளைக்கிலல்லால்வினையேன்நான்
இளைக்கின்றிலன்கண்டுகொண்மின் *
ஞாலமறியப்பழிசுமந்தேன் நன்னுதலீர் !
இனிநாணித்தானென் ? *
நீலமலர்நெடுஞ்சோதிசூழ்ந்த
நீண்டமுகில்வண்ணன்கண்ணன்கொண்ட *
கோலவளையொடுமாமைகொள்வான்
எத்தனைகாலமுங்கூடச்சென்றே. (௩)

கூடச்சென்றேன்இனியென்கொடுக்கேன் ?
 கோல்வளை † நெஞ்சத்தொடக்கமெல்லாம் *
பாடற்றொழியஇழந்துவைகல்
 பல்வளையார்முன்பரிசழிந்தேன் *
மாடக்கொடிமதிள்தென்குளந்தை
 வண்குடபால்நின்றமாயக்கூத்தன் *
ஆடற்பறவையுயர்த்தவெல்போர்
 ஆழிவலவனைஆதரித்தே. (௪)

ஆழிவலவனைஆதரிப்பும்
 ஆங்கவன்நம்மில்வரவுமெல்லாம் *
தோழியர்காள ! நம்முடையமேதான் ?
 சொல்லுவதோஇங்கரியதுதான் *
ஊழிதோறூழிஒருவனாக
 நன்குணர்வார்க்கும்உணரலாகா *
சூழலுடையசுடர்கொளாதித்
 தொல்லையஞ்சோதிநினைக்குங்காலே. (௫)

தொல்லையஞ்சோதிநினைக்குங்கால
 என்சொல்லளவன்று, இமையோர்தமக்கும் *
எல்லையிலாதனகூழ்ப்புச்செய்யும்
 அத்திறம்நிற்கஎம்மாமைகொண்டான் *
அல்லிமலர்த்தண்துழாயுமதாரான்
 ஆர்க்குஇடுகோஇனிப்பூசல் ? சொல்லீர் *
வல்லிவளவயல்சூழ்குடந்தை
 மாமலர்க்கண்வளர்கின்றமாலே. (௬)

மாலரிகேசவன்நாரணன
 சீமாதவன்கோவிந்தன்வைகுந்தனென்றென்று *
ஓலமிடஎன்னைப்பண்ணிவிட்டிட்டு
 ஒன்றுமஉருவுமசுவடும்காட்டான் *
ஏலமலர்க்குழலன்னைமீர்காள் !
 என்னுடைத்தோழியர்காள ! என்செய்கேன் ? *
காலம்பலசென்றும்காணபதாணை
 உஙகளோடுஎங்களிடையில்லையே. (௭)

இடையில்லையான்வளர்த்தகிளிகாள !
 பூவைகள்காள் ! குயில்காள் ! மயில்காள் ! *
உடையநம்மாமையும்சஙகுமநெஞ்சும்
 ஒன்றுமொழியவொட்டாதுகொண்டான் *

† 'நெஞ்சந்துடககம்' எனறும பாடம்.

அடையும்வைகுந்தமும்பாற்கடலும்
அஞ்சனவெற்புமவைநணிய *
கடையறப்பாசங்கள்விட்டபின்னையன்றி
அவன்அவைகாண்கொடானே. (அ)

காண்கொடுப்பானல்லன் ஆர்க்கும்தன்னைக்
கைசெயப்பாலதோர்மாயந்தன்னால் *
மாண்குறள்கோலவழுவுகாட்டி
மண்ணுமவிண்ணுமநிறையமலர்ந்த *
சேண்சுடர்த்தோள்கள்பலதழைத்த
தேவபிராற்குஎன்நிறைவினோடு *
நாண்கொடுத்தேன்இனியென்கொடுக்கேன் ?
என்னுடைநன்னுதல்நங்கைமீர்காள் ! (கூ)

என்னுடைநன்னுதல்நங்கைமீர்காள் !
யான்இனிச்செய்வதென் ? என்னெஞ்சுஎன்னை *
நின்னிடையேனல்லேனென்றுநீங்கி
நேமியுமசங்கும்இருகைக்கொண்டு *
பன்னெடுஞ்சூழ்சுடர்ஞாயிற்றோடு
பால்மதியேந்தி, ஓர்கோலநீல *
நன்னெடுங்குன்றமவருவதொப்பான
நாள்மலர்ப்பாதம்அடைந்ததுவே (க0)

பாதமடைவதன்பாசத்தாலே
மற்றவன்பாசங்கள்முற்றவிட்டு *
கோதில்புகழ்க்கண்ணன்தன்னடிமேல
வண்குருகூர்ச்சடகோபன்சொன்ன *
தீதிலந்தாதியோராயிரத்துள
இவையுமோர்பத்துஇசையொடும்வல்லார் *
ஆதுமோர்தீதிலராகி இங்குமங்கும
எல்லாம்அமைவார்கள்தாமே (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்

---

நங்கருத்தைநன்றாக நாடிநிற்கும்மாலறிய ‖
இங்கிவற்றிலாசை எமக்குளதென் ?—சங்கையினால *
தன்னுயிரில்மற்றில்நசை தானொழிந்தமாறன்தான *
அந்நிலையைஆய்ந்துரைத்தான் அங்கு. (எஉ)

சீயர் திருவடிகளே சரணம்.

---

# ங - ஆந் திருவாய்மொழி—அங்குமிங்கும்.

[ஆழ்வார் இங்கு எம்பெருமானுக்குப் பரிவரில்லாமைபற்றி அஞ்சி அப்பிரானருளாலுணர்ந்து பயந்தீர்தல்.]

கலிநிலைத்துறை

பண் - நட்டபாஷை தாளம் - ஏழொத்து வாளிபாகம் ரூபகதாளம்.

அங்குமிங்கும் வானவர்தானவர்யாவரும் *
எங்குமினையையென்று உன்னையறியகிலாதுஅலற்றி *
அங்கம்சேரும் பூமகள்மண்மகள் ஆய்மகள் *
சங்குசக்கரக்கையவனென்பர் சரணமே. (க)

சரணமாகிய நான்மறைநூல்களுஞ்சாராதே *
மரணம்தோற்றம் வான்பிணிமூப்பென்றிவைமாய்த்தோம் *
கரணப்பல்படை பற்றறவோடுங்கனலாழி *
அரணத்திண்படையேந்திய ஈசற்குஆளாயே. (உ)

ஆளுமாளார் ஆழியுமசங்குஞ்சுமப்பார்தாம் *
வாளும்வில்லுங்கொண்டு பின்செல்வார்மற்றில்லை *
தாளும்தோளும் கைகளையாரத்தொழக்காணேன் *
நாளும்நாளும்நாடுவன் அடியேன்ஞாலத்தே. (ங)

ஞாலம்போனகம்பற்றி ஓர்முற்றாவுருவாகி *
ஆலம்பேரிலை அன்னவசஞ்செய்யுமம்மானே! *
காலம்பேர்வதோர் காரிருளூழியொத்துளதால் * உன்
கோலங்காரெழில் காணலுற்றாழுங்கொடியேற்கே. (ச)

கொடியார்மாடக் கோளூரகத்தும் புளிங்குடியும் *
மடியாதின்னே நீதுயில்மேவிமகிழ்ந்ததுதான் *
அடியாரல்லல்தவிர்த்தஅசைவோ? அன்றேல் * இப்
படிதான்நீண்டுதாவிய அசைவோ? பணியாயே. (ரு)

பணியாஅமரர் பணிவும்பண்பும்தாமேயாம் *
அணியாராழியும்சங்கமும் ஏந்துமவர்காண்மின் *
தணியாவெந்நோய் உலகில்தவிர்ப்பான் * திருநீல
மணியார்மேனியோடு என்மனம்சூழவருவாரே. (சு)

வருவார்செல்வார் வண்பரிசாரத்திருந்த * என
திருவாழ்மார்வற்கு என்திறம்சொல்லார்செய்வதென்? *
உருவார்சக்கரம்சங்குசுமந்து இங்குஉம்மோடு *
ஒருபாடுழல்வான் ஓரடியானுமுளனென்றே. (எ)

என்றேஎன்னை உன்னேரார்கோலத்திருந்தடிக்கீழ் *
நின்றேயாட்செய்ய நீகொண்டருளநினைப்பதுதான்? *
குன்றேழ்பாரேழ் சூழ்கடல்ஞாலம்முழுவேழும் *
நின்றேதாவிய நீள்கழலாழித்திருமாலே! (அ)

திருமால்! நான்முகன் செஞ்சடையானென்றிவர்கள * எம
பெருமான்தன்மையை யாரறிகிற்பார்? பேசியென்? *
ஒருமாமுதல்வா! ஊழிப்பிரான்! என்னையாளுடை *
கருமாமேனியன்என்பன் என்காதல்கலக்கவே. (கூ)

கலக்கமில்லாநல்தவமுனிவர் கரைகண்டோர் *
துளக்கமில்லாவானவர் எல்லாம்தொழுவார்கள் *
மலக்கமெய்த மாகடல்தன்னைக்கடைந்தானை *
உலக்கநாமபுகழ்கிற்பது என்செய்வது? உரையீரே. (க0)

உரையாவெநநோய்தவிர அருள்நீள்முடியானை *
வரையார்மாட மன்னுகுருகூர்ச்சடகோபன் *
உரையேய்சொல்தொடை ஓராயிரத்துள்இப்பத்தும *
நிரையேவல்லார் நீடுலகத்துப்பிறவாரே. (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

அங்கமரர்பேணஅவர்நடுவேவாழ்திருமாற்கு *
இங்கோர்பரிவரிலையெனறஞ்ச *—எங்கும்
பரிவருளரென்னப் பயம்தீர்ந்தமாறன் *
வரிகழல்தாள்சேரநதவர் வாழ்வார். (௭௩)

சீயர் திருவடிகளே சரணம்

---

## ச - ஆந் திருவாய்மொழி—வார்கடாவருவி.

[எம்பெருமான் தனதுவலிமையையும் பரிவரின் ஸம்ருத்தியையும் காட்ட, ஆழ்வார் திருச்சேங்குன்றூரிற் கண்டு மகிழ்தல்.]

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

பண் - புறநீர்மை. தாளம்-ஒன்பதொத்து. அடாணாராகம் - ஆதிதாளம்.

வார்கடாவருவியானைமாமலையின்
மருப்பிணைக்குவடிறுத்துருட்டி *
ஊர்கொளதிண்பாகனுயிர்செகுத்து
அரங்கின்மல்லரைக்கொன்றுசூழ்பரண்மேல் *

போர்கடாவரசர்புறக்கிட
மாடமீமிசைக்கஞ்சனைத்தகர்த்த *
சீர்கொள்சிற்றாயன்திருச்செங்குன்றூரில்
திருச்சிற்றாறெங்கள்செல்சார்வே. (௧)

எங்கள்செல்சார்வுயாமுடையமுதம்
இமையவரப்பனென்னப்பன் *
பொங்குமூவுலகும்படைத்தளித்தழிக்கும்
பொருந்துமூவுருவனெம்மருவன் *
செங்கயலுகளுந்தேம்பணைபுடைசூழ்
திருச்செங்குன்றூர்த்திருச்சிற்றாறு
அங்குஅமர்கின்ற * ஆதியானலலால்
யாவர்மற்றென்அமர்துணையே ? (௨)

என்னமர்பெருமான்இமையவர்பெருமான்
இருநிலமிடந்தஎம்பெருமான *
முன்னைவல்வினைகள்முழுதுடனமாள
என்னையாள்கின்றஎம்பெருமான் *
தென்திசைக்குஅணிகொளதிருச்செங்குன்றூரில்
திருச்சிற்றாற்றங்கரைமீபால்
நின்றஎம்பெருமான் * அடியலலால் † சரண்
நினைப்பிலும் பிறிதில்லைஎனக்கே. (௩)

பிறிதில்லைஎனக்குப்பெரியமூவுலகும்
நிறையப் பேருருவமாய்நிமிர்ந்த *
குறியமாணெமான்குரைகடலகடைந்த
கோலமாணிக்கமென்னம்மான் *
செறிகுலைவாழைகமுகுதெங்கணிசூழ்
திருச்செங்குன்றூர்த்திருச்சிற்றாறு
அறிய * மெய்ம்மையேநின்றஎம்பெருமான்
அடியிணையல்லதோரரணே. (௪)

அல்லதோரரணும்அவனில்வேறில்லை
அதுபொருளாகிலும் * அவனை
யல்லதுஎன்னாவியமர்ந்தணைகில்லாது
ஆதலால்அவனுறைகின்ற *
நல்லநான்மறையோர்வேள்வியுள்மடுத்த
நறும்புகைவிசும்பொளிமறைக்கும் *
நல்லநீள்மாடத்திருச்செங்குன்றூரில்
திருச்சிற்றாறெனக்குநல்லரணே. (௫)

† 'சரணம்' என்றும் பாடம்.

எனக்குநல்லரணைஎனதாருயிரை
இமையவர்தந்தைதாய்தன்னை *
தனக்குமதன்தன்மையறிவரியானைத
தடங்கடற்பள்ளியமமானை *
மனக்கொள்சீர்மூவாயிரவர்
வண்சிவனும்அயனும்தானும்ஒப்பார்வாழ் *
கனக்கொள்திண்மாடத்திருச்செஙகுன்றூரில்
திருச்சிறறாறதனுளகண்டேனே. (சு)

திருச்செஙகுன்றூரிலதிருச்சிற்றாறதனுள
கண்ட அத்திருவடிஎன்றும் *
திருச்செய்யகமலக்கண்ணும் செவ்வாயும
செவ்வடியுமசெய்யகையும *
திருசசெய்யகமலவுந்தியும
செய்ய † கமலமார்பும்செய்யவுடையும் *
திருச்செய்யமுடியும் ஆரமுமபடையும்
திகழஎன்சிந்தையுளானே. (எ)

திகழஎன்சிந்தையுளிருந்தானைச்
செழுநிலத்தேவர்நான்மறையோர் *
திசைகைகூபபிஏத்தும திருசசெஙகுன்றூரில்
திருச்சிற்றாற்றஙகரையானை *
புகர்கொள்வானவர்கள்புகலிடந்தன்னை
அசுரர்வன்கையர்வெஙகூற்றை *
புகழுமாறுஅறியேன்பொருநூல்முவுலகும்
படைபபொடுகெடுப்புககாபபவனே. (அ)

படைப்பொடுகெடுபபுககாபபவன்
பிரமபரம்பரன்சிவபபிரானவனே *
இடைப்புக்கோருருவுமஒழிவில்லைஅவனே
புகழ்வில்லையாவையுமதானே *
கொடைப்பெரும்புகழார் ‡ இனையர்தன்னோர்
கூறியவிச்சையோடொழுக்கம் *
நடைப்பலியியற்கைத்திருச்செங்குன்றூரில்
திருசசிற்றாறமர்ந்தநாதனே. (கூ)

அமர்ந்தநாதனை அவரவராகி
அவர்க்கருளருளும்அம்மானை *
அமர்ந்ததண்பழனத்திருச்செஙகுன்றூரில்
திருச்சிற்றாற்றங்கரையானை *

† 'கமலே' என்பதும பாடம. ‡ 'எனையா' என்றும பாடம்.

அமர்ந்தசீர்மூவாயிரவர் வேதியர்கள்
தம்பதிஅவனிதேவர்வாழ்வு *
அமர்ந்தமாயோனைமுக்கணம்மானை
நான்முகனையமர்ந்தேனே. (கo)

தேனைநன்பாலைக்கன்னலையமுதைத்
திருந்துலகுண்டஅம்மானை *
வானநான்முகனைமலர்ந்ததண்கொப்பூழ்
மலர்மிசைப்படைத்தமாயோனை *
கோனைவண்குருகூர்வண்சடகோபன்
சொன்னஆயிரத்துள்இப்பத்தும் *
வானின்மீதேற்றிஅருள்செய்துமுடிக்கும்
பிறவிமாமாயக்கூத்தினையே. (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

வாராமல்அச்சம்இனி மால்தன்வலியினையும *
சீரார்பரிவருடன் சேர்த்தியையும் *—பாருமெனத்
தானுகந்தமாறன்தாள்சார்நெஞ்சே! சாராயேல் *
மானிடவரைச் சார்ந்துமாய். (எச)

சீயர் திருவடிகளே சரணம்.

---

## ரு - ஆந் திருவாய்மொழி—மாயக்கூத்தா.

---

[எம்பெருமான்வடிவழகை ப்ரத்யக்ஷீகரிக்கமாட்டாது ஆழ்வார் விடாய் விஞ்சி அழுது அரற்றுதல்.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பண்-பழம்பஞ்சுரம். தாளம் - ஏழொத்து. ஸாவேரிராகம் - ஆதிதாளம்.

மாயக்கூத்தா! வாமனா! வினையேன்கண்ணா! கண்கைகால் *
தூயசெய்யமலர்களாச் சோதிச்செவ்வாய்முகிழதா *
சாயல்சாமத்திருமேனி தண்பாசடையா * தாமரைநீள்
வாசத்தடம்போல்வருவானே! ஒருநாள்காணவாராயே. (க)

காணவாராயென்றென்று கண்ணும்வாயும்துவர்ந்து * அடியேன்
நாணிநன்னாட்டுஅலமந்தால் இரங்கிஒருநாள்நீஅந்தோ ! *
காணவாராய்கருநாயிறுதிக்கும் கருமாமாணிக்க *
நாள்நல்மலைபோல்சுடர்ச்சோதி முடிசேர்சென்னியம்மானே ! (௨)

முடிசேர்சென்னியம்மா ! நின்மொய்பூந்தாமத்தண்துழாய் *
கடிசேர்கண்ணிப்பெருமானே ! என்றென்றேங்கிஅழுதக்கால் *
படிசேர்மகரக்குழைகளும் பவளவாயும்நால்தோளும் *
துடிசேரிடையுமமைந்தது ஓர் தூநீர்முகில்போல்தோன்றாயே. (௩)

தூநீர்முகில்போல்தோன்றும் நின்சுடர்கொள்வடிவும்கனிவாயும் *
தேநீர்க்கமலக்கண்களும் வந்தென்சிந்தைநிறைந்தவா ! *
மாநீர்வெள்ளிமலைதன்மேல் வண்கார்நீலமுகில்போல *
தூநீர்க்கடலுள்துயில்வானே ! எந்தாய் ! சொல்லமாட்டேனே. (௪)

சொல்லமாட்டேன்அடியேன் உன்துளங்குசோதித்திருப்பாதம் *
எல்லையில்சீரிளநாயிறு இரண்டுபோலென்னுள்ளவா ! *
அல்லலென்னும்இருள்சேர்தற்கு உபாயமென்னே ? * ஆழிசூழ்
† மல்லைஞாலமுழுதுண்ட மாநீர்க்கொண்டல்வண்ணனே ! (௫)

கொண்டல்வண்ணா! குடக்கூத்தா! வினையேன்கண்ணா! கண்ணா! * என்
அண்டவாணா ! என்றுஎன்னை ஆளக்கூப்பிட்டழைத்தக்கால் *
விண்தன்மேல்தான்மண்மேல்தான் விரிநீர்க்கடல்தான்மற்றுத்தான் *
தொண்டனேன்உன்கழல்காண ஒருநாள்வந்துதோன்றாயே. (௬)

வந்துதோன்றாயன்றேல் உன்வையம்தாயமலரடிக்கீழ் *
முந்திவந்துயான்நிற்ப முகப்பேகூவிப்பணிகொள்ளாய் *
செந்தண்கமலக்கண்கைகால் சிவந்தவாயோர்கருநாயிறு *
அந்தமில்லாக்கதிர்பரப்பி அலர்ந்ததொக்கும்அம்மானே ! (௭)

ஒக்குமம்மானுருவமென்று உள்ளங்குழைந்துநாணாளும் *
தொக்கமேகப்பல்குழாங்கள் காணுந்தோறும்தொலைவன்நான் *
தக்கஐவர்தமக்காய் அன்றுஈரைம்பதின்மர்தாள்சாய *
புக்கநல்தேர்த்தனிப்பாகா ! வாராய்இதுவோபொருத்தமே ? (௮)

† 'மல்லல்' என்பதும் பாடம்.

இதுவோபொருத்தம்? மின்னாழிப்படையாய்! ஏறுமிருஞ்சிறைப்புள்
அதுவே * கொடியாவுயர்த்தானே ! என்றென்றேங்கியழுதக்கால் *
எதுவேயாகக்கருதுங்கொல் ? இம்மாஞாலம்பொறைதீர்ப்பான் *
மதுவார்சோலை உத்தரமதுரைப்பிறந்தமாயனே. (கூ)

பிறந்தமாயா ! பாரதம்பொருதமாயா ! நீ இன்னே *
சிறந்தகால்தீநீர்வான் மண்பிறவுமாயபெருமானே ! *
கறந்தபாலுள்நெய்யேபோல இவற்றுள்எங்கும்கண்டுகொள் *
இறந்துநின்றபெருமாயா! உன்னைஎங்கேகாண்கேனே ? (க0)

௵ எங்கேகாண்கேன்! ஈன்துழாயம்மான் தன்னை யான்? என்றென்று *
அங்கேதாழ்ந்தசொற்களால் அந்தண்குருகூர்ச்சடகோபன் *
செங்கேழ்சொன்னஆயிரத்துள் இவையும்பத்தும்வல்லார்கள் *
இங்கேகாணஇப்பிறப்பேமகிழ்வர் எல்லியுங்காலையே. (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

மாயன்வடிவழகைக் காணுதவல்லிடா
யாய் * அதறவிஞ்சி அழுதலற்றும் * —தூயபுகழ்
உற்றசடகோபனை நாமலுன்றிநிற்கும்போதுபகல் *
அற்றபொழுதாகுது எல்லியாம். (எரு)

ஜீயர் திருவடிகளே சரணம்

---

## கூ - ஆந் திருவாய்மொழி —எல்லியும்.

---

[ஆழ்வாரது பெருவிடாய தீரக் கலக்கக் கருதித் திருமால் திருக்கடித் தானத்தில் ஸேவைஸாதிக்கத் தரித்தமை கூறுதல்.]

கலிவிருத்தம்

பண் - வியந்தம் தாளம் - ஏகதாளம் மோஹநராகம் - ஆதிதாளம்.

௵ எல்லியும்காலையும் தன்னைநினைந்தெழ *
நல்லவருள்கள் நமக்கேதந்துஅருள்செய்வான் *
அல்லியந்தண்ணந்துழாய்முடி அப்பனூர் *
செல்வர்கள்வாழும் திருக்கடித்தானமே. (க)

MAHAMAHOPADHYAYA
DR. U.V.S. IYER LIBRARY
BESANT NAGAR, MADRAS-90

திருக்கடித்தானமும் என்னுடைச்சிந்தையும் *
ஒருக்கடுத்து உள்ளேஉறையும்பிரான்கண்டீர் *
செருக்கடுத்து அன்றுதிகைத்த அரக்கரை *
உருக்கெட வாளிபொழிந்தஒருவனே. (உ)

ஒருவர்இருவர் ஓர்மூவரெனநின்று *
உருவுகரந்து உள்ளுந்தோறுந்தித்திப்பான் *
திருவமர்மார்வன் திருக்கடித்தானத்தை *
மருவியுறைகின்ற மாயப்பிரானே. (௩)

மாயப்பிரான் எனவல்வினைமாய்ந்தற *
நேசத்தினால் நெஞ்சம்நாடுகுடிகொண்டான் *
தேசத்தமரர் திருக்கடித்தானத்தை *
வாசப்பொழில் மன்னுகோயில்கொண்டானே. (௪)

கோயில்கொண்டான்தன திருக்கடித்தானத்தை *
கோயில்கொண்டான் அதனோடும்என்னெஞ்சகம் *
கோயில்கொள் தெய்வமெல்லாம்தொழ * வைகுந்தம
கோயில்கொண்ட குடக்கூத்தஅம்மானே. (௫)

கூத்தஅம்மான் கொடியேனிடர்முற்றவும *
மாய்த்தஅம்மான் மதுசூதவம்மானுறை *
பூத்தபொழில் தண்திருக்கடித்தானத்தை *
ஏத்தநில்லா குறிககொண்மின்இடரே. (௬)

கொண்மின்இடர்கெட உள்ளத்துக்கோவிந்தன் *
மண்விண்முழுதும் அளந்த ஒண்தாமரை *
மண்ணவர்தாம்தொழ வானவர்தாம்வந்து *
நண்ணு திருக்கடித்தானநகரே. (௭)

தானநகர்கள் தலைச்சிறந்தெங்கெங்கும் *
வானிந்நிலம்கடல் முற்றும்எம்மாயற்கே *
ஆனவிடத்தும என்னெஞ்சும்திருக்கடித்
தானநகரும் * தனதாயப்பதியே. (அ)

தாயப்பதிகள் தலைச்சிறந்தெங்கெங்கும் *
மாயத்தினால் மன்னிவீற்றிருந்தானுறை *
தேசத்தமரர் திருக்கடித்தானத்துள் *
ஆயர்க்கதிபதி அற்புதன்தானே. (௯)

அற்புதன்நாராயணன் அரிவாமனன் *
நிற்பதுமேவி இருப்பதுஎன்னெஞ்சகம் *
நற்புகழ்வேதியர் நான்மறைநின்றதிர் *
கற்பகச்சோலைத் திருக்கடித்தானமே. (க0)

சோலைத்திருக்கடித்தானத்து உறைதிரு
மாலை * மதிள்குருகூர்ச் சடகோபன்சொல் ;
பாலோடமுதன்ன ஆயிரத்துஇப்பத்தும் *
மேலைவைகுந்தத்து இருத்தும்வியந்தே. (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

எல்லிபகலநடந்த இந்தவிடாய்தீருகைக்கு *
மெல்லவந்து தான்கலக்கவேணுமென * — நல்லவர்கள
மன்னுகடித்தானத்தே மாலிருக்கமாறன்கண்டு *
இந்நிலையைச் சொன்னான்இருந்து. (எசு)

சீயர் திருவடிகளே சரணம்

---

## எ - ஆந் திருவாய்மொழி— இருத்தும்.

[தம்மிடம்வந்து தாம்மனோரதித்தபடி எம்பெருமான் கலக்க, அந்தக்கலவியை ஸ்வப்நாதிகளாகச் சந்தேகித்துத் தெளிந்து ஆழ்வார் எம்பெருமானதுகுணங்களைப் பேசுதல்.]

கலிவிருத்தம்

பண்-இந்தளம் தாளம் - ஏழொத்து கல்யாணிராகம். ஆதி தாளம்.

இருத்தும்வியந்துஎன்னைத் தன்பொன்னடிக்கீழென்று *
அருத்தித்து எனைத்தோர்பலநாளழைத்தேற்கு *
பொருத்தமுடை வாமனன் தான்புகுந்து * என்தன்
கருத்தையுற வீற்றிருந்தான்கண்டுகொண்டே. (க)

இருந்தான்கண்டுகொண்டு எனதேழைநெஞ்சாளும் *
திருந்தாதஓரைவரைத் தேய்ந்தறமன்னி *
பெருந்தாட்களிற்றுக்கு அருள்செய்தபெருமான *
தருந்தான்அருள்தான் இனியான்அறியேனே. (உ)

அருள்தான் இனியான் அறியேன் அவன்என்னுள் *
இருள்தானற வீற்றிருந்தான் இதுவல்லால் *
பொருள்தானெனின் மூவுலகும்பொருளல்ல *
மருள்தானீதோ? மாயமயக்குமயக்கே. (ரு)

மாயமயக்குமயக்கான் என்னைவஞ்சித்து *
ஆயன் அமரர்க்கரியேறு எனதம்மான் *
தூயசுடர்ச்சோதி தனதென்னுளவைத்தான் *
தேசந்திகழும் தன் திருவருள்செய்தே. (௬)

திகழும்தன் திருவருளசெய்து உலகத்தார்
புகழும்புகழ் * தானதுகாட்டித்தந்து * என்னுள்
திகழும்மணிக்குன்றமொன்றே ஒத்துநின்றான் *
புகழும்புகழ் மற்றெனக்கும்ஓர்பொருளே? (௭)

பொருள்மற்றெனக்குமஓர்பொருள் தன்னில் சீர்க்கத்
தருமேல் * பின்னையார்க்கு அவன் தன்னைக்கொடுக்கும்? *
கருமாணிக்கக்குன்றத்துத் தாமரைபோல் *
திருமார்புகால்கண்கை செவ்வாயுந்தியானே. (௮)

செவ்வாயுந்தி வெண்பல்சுடர்க்குழை † தம்மோடு*
எவ்வாய்ச்சுடரும் தம்மில்முன்வளாய்க்கொள்ள*
செவ்வாய்முறுவலோடு எனதுள்ளத்திருந்த*
அவ்வாயன்றி யான்அறியேன்மற்றருளே. (௯)

அறியேன்மற்றருள என்னையாளும்பிரானார் *
வெறிதே அருள்செய்வர் செய்வார்கட்குஉகந்து *
சிறியேனுடைச் சிந்தையுள்மூவுலகும் * தன்
நெறியாவயிற்றில்கொண்டு நின்றொழிந்தாரே. (௧௦)

வயிற்றில்கொண்டு நின்றொழிந்தாருமவரும் *
வயிற்றில்கொண்டுநின்று ஒருமூவுலகும * தம
வயிற்றில்கொண்டு நின்றவண்ணம்நின்றமாலை *
வயிற்றில்கொண்டு மன்னவைத்தேன்மதியாலே. (௧௧)

† 'தன்னோடு' என்று வழங்குவர்.

வைததேன்மதியால் எனதுள்ளத்தகத்தே *
எய்ததேயொழிவேனல்லேன் என்றுமெப்போதும் *
மொய்த்தேய்திரை மோதுதண்பாற்கடலுளால் *
பைத்தேய்சுடர்ப் பாம்பணைநம்பரனையே. (௧௦)

சுடர்ப்பாம்பணைநம்பரனைத் திருமாலை *
அடிச்சேர்வகை வண்குருகூர்ச்சடகோபன் *
முடிப்பான்சொன்ன ஆயிரத்து இப்பத்துஞ்சன்மம்
விட * தேய்ந்தறநோக்கும் தன்கண்களசிவந்தே. (௧௧)

ஆழ்வார் திருவடிகளே சரணம்

---

இருந்தவனதான்வந்து இங்கிவரெண்ணமெல்லாம் *
திருந்த இவர்தந்திறத்தே செய்து *—பொருந்தக்
கலந்துஇனியனுயிருக்கக் கண்டசடகோபர் *
கலந்தநெறி கட்டுரைத்தார்கண்டு. (எ௱)

ஜீயர் திருவடிகளே சரணம்

---

## அ - ஆந் திருவாய்மொழி - கண்கள்சிவந்து.

[தனது கலவியை நிரந்தரம்பெறத்தக்க ஆத்மஸ்வரூப வைலக்ஷண்யத்தை எம்பெருமான் காட்ட, ஆழ்வார் அதனைப் பேசுதல்.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

பண் - தக்கேசி. தாளம் - எமொத்து. பையவிராகம் - ஆதிதாளம்.

கண்கள்சிவந்துபெரியவாய் வாயுஞ்சிவந்துகனிந்து * உள்ளே
வெண்பலிலகுசுடர் இலகுவிலகுமகரகுண்டலத்தன் *
கொண்டல்வண்ணன்சுடர்முடியன நான்குதோளன்† குனிசார்ங்கன் *
ஒண்சங்கதைவாளாழியான் ஒருவன்அடியேனுள்ளானே. (௧)

அடியேனுள்ளான்உடலுள்ளான் அண்டத்தகத்தான்புறத்துள்ளான் *
படியேயிதுவென்றுரைக்கலாமபடியனல்லன் பரம்பரன் *
கடிசேர்நாற்றத்துள்ளாலை இன்பத்துன்பக்கழிநேர்மை *
ஒடியாவின்பப்பெருமையோன் உணர்விலும்பரொருவனே. (௨)

---

† 'குனிசார்ங்கம்' என்பதும் பாடம்.

உணர்விலும்பரொருவனை அவனதருளால்உறற்பொருட்டு * என்
உணர்வினுள்ளேஇருத்தினேன் அதுவும்அவனதுஇன்னருளே *
உணர்வும்உயிரும்உடம்பும் மற்றுஉலப்பிலனவும்பழுதேயாம் *
உணர்வைப்பெறவூர்ந்திறவேறி யானும்தானாயொழிந்தானே. (ங)

யானும்தானாயொழிந்தானை யாதும்யவர்க்கும்முன்னோனை *
தானும்சிவனும்பிரமனுமாகிப் பணைத்ததனிமுதலை *
தேனும்பாலும்கன்னலும் அமுதுமாகித்தித்தித்து * என்
ஊனில்உயிரில்உணர்வினில் நின்றவொன்றைஉணர்ந்தேனே. (ச)

நின்றவொன்றையுணர்ந்தேனுக்கு அதனுள்நேர்மைஅதுவிதுவென்று *
ஒன்றும்ஒருவர்க்குணரலாகாது உணர்ந்தும்மேலுமகாண்பரிது *
சென்றுசென்றுபரம்பரமாய் யாதுமின்றித்தேய்ந்தற்று *
நன்றுதீதென்றறிவரிதாய் நன்றாய்ஞானம்கடந்ததே. (ரு)

நன்றாய்ஞானம்கடந்துபோய் நல்லிந்திரியமெல்லாமீர்த்து *
ஒன்றாய்க்கிடந்தவரும்பெருமபாழ்உலப்பிலதனை உணர்ந்துணர்ந்து *
சென்றாங்கின்பதுன்பங்கள் செற்றுக்களைந்துபசையற்றால் *
அன்றேஅப்போதேவீடு அதுவேவீடுவீடாமே. (சு)

அதுவேவீடு வீடுபேற்றின்பந்தானுமஅதுதேறி *
எதுவேதானும்பற்றின்றி யாதுமிலிகளாகிற்கில் *
அதுவேவீடு வீடுபேற்றின்பந்தானும்அதுதேறாது *
எதுவேவீடு? எதுஇன்பம்? என்று எய்த்தார்எய்த்தார்எய்த்தாரே. ()

எய்த்தாரெய்த்தாரெய்த்தாரென்று இல்லத்தாரும்புறத்தாரும்
மொய்த்து* ஆங்கலறிமுயங்கத் தாம்போகும்போது*உன்மத்தர்போல்
பித்தேயேறிஅநுராகம்பொழியும்போது எம்பெம்மானோடு
ஒத்தேசென்று* அங்குள்ளம்கூடக்கூடிற்றாகில் நல்லுறைப்பே. (அ)

கூடிற்றாகில்நல்லுறைப்புக் கூடாமையைக்கூடினால் *
ஆடற்பறவையுயர்கொடி எம்மாயனாவததுவதுவே *
† வீடைப்பண்ணிஒருபரிசே எதிர்வும்நிகழ்வும்கழிவுமாய் *
ஓடித்திரியும்யோகிகளும் உளருமில்லையல்லரே. (கூ)

† 'வீட்டைப்பண்ணி' என்று மிகாதுவந்தது எதுகைநயம்பற்றி

உளருமில்லையல்லாய் உளராய்இல்லையாகியே *
உளரெம்மொருவரவர்வந்து என்னுள்ளத்துள்ளேஉறைகின்றார் *
வளரும்பிறையும்தேய்பிறையும்போல அசைவும்ஆக்கமும் *
வளரும்சுடரும்இருளும்போல் தெருளும்மருளும்மாய்த்தோமே. (க0)

தெருளும்மருளும்மாய்த்துத் தன்திருந்துசெம்பொற்கழலடிக்கீழ் *
அருளியிருத்தும் அம்மானும் அயனும்சிவனும் * திருமாலால்
அருளப்பட்டசடகோபன் ஓராயிரத்துள்இப்பத்தால் *
அருளியடிக்கீழிருத்தும் † நம்மண்ணல்கருமாணிக்கமே. (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்

---

கண்ணிறையவந்து கலந்தமால்இக்கலவி *
திண்ணிலைபாவேணுமெனச் சிந்தித்து *—தண்ணிதெனும்
அருயிரினேற்றமதுகாட்ட ஆய்ந்துரைத்தான் *
காரிமாறன் தன்கருத்து. (எ௰)

சீயர் திருவடிகளே சரணம்

---

## கூ - ஆந் திருவாய்மொழி—கருமாணிக்கம்.

---

[ஆழ்வார் தமது அநந்யார்ஹசேஷத்வத்தை, தோழி மண விலக்குக்காகத் தாய்மாரோடுகூறும் பாசுரத்தாலே அருளிச்செய்தல்.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பண் - தக்கேசி. தாளம் - ஏழொத்து. ஸ்ரீராகம் - ஆதிதாளம்.

கருமாணிக்கமலைமேல் மணித்தடம்தாமரைக்காடுகள்போல் *
திருமார்வுவாய்கண்கை உந்திகாலுடையாடைகள்செய்யபிரான் *
திருமால்எம்மான்செழுநீர்வயல் குட்டநாட்டுத்திருப்புலியூர் *
அருமாயன்பேரன்றிப்பேச்சிலள் அன்னைமீர்!இதற்கென்செய்கேனோ?

அன்னைமீர்! இதற்குஎன்செய்கேன் ? அணிமேருவின்மீதுலவும் *
துன்னுசூழ்சுடர்ஞாயிறும் அன்றியும்பல்சுடர்களும்போல் *
மின்னுநீள்முடியாரம் பல்கலன்தானுடைஎம்பெருமான் *
புன்னையம்பொழில்சூழ் திருப்புலியூர்புகழும்இவளே. (உ)

---

† 'எமமண்ணல்', என்பதும் பாடம்.

புகழும்இவள்நின்றுஇராப்பகல் பொருநீர்க்கடல்தீப்பட்டு * எங்கும்
திகழுமெரியொடுசெல்வதொப்பச் செழுங்கதிராழிமுதல் *
புகழும்பொருபடையேந்திப்போர்புக்கு அசுரரைப்பொன்றுவித்தான்*
திகழுமணிநெடுமாடநீடு திருப்புலியூர்வளமே. (ங)

ஊர்வளங்கிளர்சோலையும் கரும்பும்பெருஞ்செந்நெலும்சூழ்ந்து *
ஏர்வளங்கிளர்தண்பணைக் குட்டநாட்டுத்திருப்புலியூர் *
சீர்வளங்கிளர்மூவுலகுண்டுமிழ் தேவபிரான் *
பேர்வளங்கிளர்ந்தன்றிப்பேச்சிலள் இன்றுஇப்புனையிழையே. (ச)

புனையிழைகளணிவும் ஆடையுடையும்புதுக்கணிப்பும் *
நினையும்நீர்மையதன்றுஇவட்குஇது நின்றுநினைக்கப்புக்கால் *
சுனையினுள்தடந்தாமரைமலரும் தண்திருப்புலியூர் *
முனைவன்மூவுலகாளி அப்பன்திருவருள்மூழ்கினளே. (ரு)

திருவருள்மூழ்கிவைகலும் செழுநீர்நிறக்கண்ணபிரான் *
திருவருள்களும்சேர்ந்தமைக்கு அடையாளம்திருந்தவுள *
திருவருளருளால் அவன்சென்றுசேர்தண்திருப்புலியூர் *
திருவருள்கமுகொண்பழத்தது மெல்லியல்செவ்விதழே. (சு)

மெல்லிலைச்செல்வவண்கொடிப்புல்க வீங்கிளந்தாள்கமுகின் *
மல்லிலைமடல்வாழை ஈன்கனிசூழ்ந்துமணம்கமழ்ந்து *
புல்லிலைத்தெங்கினூடு காலுலவும்தண்திருப்புலியூர் *
மல்லலஞ்செல்வக்கண்ணன்தாளடைந்தாள் இம்மடவரலே. (எ)

மடவரலன்னைமீர்கட்கு என்சொல்லிச்சொல்லுகேன் ?* மல்லைச்செல்வ
வடமொழிமறைவாணர் வேள்வியுள்நெய்யழல்வான்புகைபோய் *
திடவிசும்பிலமரர்நாட்டைமறைக்கும தண்திருப்புலியூர் *
படவரவணையான்தன்நாமமல்லால் பரவாள்இவளே. (அ)

பரவாள்இவள்நின்றுஇராப்பகல் பனிநீர்நிறக்கண்ணபிரான் *
† விரவாரிசைமறைவேதியரொலி வேலையின்நின்றொலிப்ப *
கரவார்தடந்தொறும்தாமரைக்கயம் தீவிகைநின்றலரும் *
புரவார்கழனிகள்சூழ் திருப்புலியூர்ப்புகழன்றிமற்றே. (கூ)

அன்றிமற்றோருபாயமென் ? இவளந்தண்துழாய்கமழ்தல் *
குன்றமாமணிமாடமாளிகைக் கோலக்குழாங்கள்மல்கி *
தென்திசைதிலதம்புரை குட்டநாட்டுத்திருப்புலியூர் *
நின்றமாயப்பிரான்திருவருளாம் இவள்நேர்பட்டதே. (க0)

† 'விரைவார்' என்பதும் பாடம்,

நேர்பட்டநிறைமூவுலகுக்கும் நாயகன்தன்னடிமை *
நேர்பட்டதொண்டர்தொண்டர்தொண்டர் தொண்டன்சடகோபன் * சொல்
நேர்பட்டதமிழ்மாலை ஆயிரத்துள் † இவைபத்தும்
நேர்பட்டாரவர் * நேர்பட்டார் நெடுமாற்கு அடிமைசெய்யவே. (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

கருமால்திறத்தில் ஒருகன்னிகையாம்மாறன் *
ஒருமாகலவியுரைப்பால் *—திரமாக
அந்நியருக்காகாது அவன் தனக்கேயாகும்உயிர் *
இந்நிலையை யோர்நெடிதா (எகூ)

சீயர் திருவடிகளே சரணம்.

---

## ‡ கo - ஆந் திருவாய்மொழி—நெடுமாற்கடிமை.

---

[அநந்யார்ஹசேஷத்வத்துக்கு எல்லைநிலமான பாகவதசேஷத்வம் தமக்கு உண்மையை ஆழ்வார் பேசுதல்.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பண்-தக்கேசி. தாளம்-ஏழொத்து. ஸஹாநாராகம்-அடதாளம்.

நெடுமாற்கடிமைசெய்வேன்போல் அவனைக்கருதவஞ்சித்து *
தடுமாற்றற்றதீக்கதிகள் முற்றும்தவிர்ந்தசதிர்நினைந்தால் *
கொடுமாவினையேன் அவனடியாரடியேகூடுமஇதுவல்லால் *
விடுமாறென்பதென்? அந்தோ! வியன்மூவுலகுபெறினுமே. (க)

வியன்மூவுலகுபெறினும போய்த்தானேதானேயானாலும் *
புயல்மேகம்போல்திருமேனியம்மான் புனைபூங்கழலடிக்கீழ் *
சயமேஅடிமைதலைநின்றார் திருத்தாள்வணங்கி * இம்மையே
பயனேஇன்பம்யான்பெற்றது உறுமோபாவியேனுக்கே? (உ)

உறுமோபாவியேனுக்கு? இவ்வுலகம்மூன்றுமஉடன்நிறைய *
சிறுமாமேனிநிமிர்த்த என்செந்தாமரைக்கண்திருக்குறளன் *
நறுமாவிரைநாள்மலரடிக்கீழ்ப் புகுதலன்றிஅவனடியார் *
சிறுமாமனிசராய்என்னையாண்டார் இங்கேதிரியவே. (ஙு)

---

† 'இவையுமோர்பத்தும்' என்றும பாடம். ‡ இது, கோயில்திருவாய்மொழி.

இங்கேதிரிந்தேற்குஇழுக்குற்றென்? இருமாநிலம்முன் னுண்டுமிழ்ந்த*
செங்கோலத்தபவளவாய்ச் செந்தாமரைக்கண்ணென்னம்மான் *
பொங்கேழ்புகழ்கள்வாயவாய்ப் புலன்கொள்வடிவுஎன்மனத்ததாய் *
அங்கேய்மலர்கள்கையவாய் வழிபட்டோடஅருளிலே. (௪)

வழிபட்டோடஅருள்பெற்று மாயன்கோலமலரடிக்கீழ் *
சுழிபட்டோடும்சுடர்ச்சோதிவெள்ளத்து இன்புற்றிருந்தாலும் *
இழிபட்டோடும்உடலினில்பிறந்து தன்சீர்யான்கற்று *
மொழிபட்டோடும்கவியமுதம் நுகர்ச்சியுறுமோ? முழுதுமே. (௫)

நுகர்ச்சியுறுமோ? மூவுலகின் வீடுபேறு தன்கேழில் *
புகர்ச்செம்முகத்தகளிறட்ட பொன்னாழிக்கையென்னம்மான் *
நிகர்ச்செம்பங்கியெரிவிழிகள் நீண்டஅசுரருயிரெல்லாம் *
தகர்த்துண்டுழலும்புட்பாகன் பெரியதனிமாப்புகழே. (௬)

தனிமாப்புகழேஎஞ்ஞான்றும் நிற்கும்படியாத்தான்தோன்றி *
முனிமாப்பிரமமுதல்வித்தாய் உலகமூன்றும்முளைப்பித்த *
தனிமாத்தெய்வத்தளிரடிக்கீழ்ப் புகுதலன்றிஅவனடியார் *
நனிமாக்கலவியின்பமே நாளும்வாய்க்கநங்கட்கே. (௭)

நாளும்வாய்க்கநங்கட்கு நளிர்நீர்க்கடலைப்படைத்து * தன்
தாளும்தோளும்முடிகளும் சமனிலாதபலபரப்பி *
நீளும்படர்பூங்கற்பகக்காவும் நிறைபன்னாயிற்றின் *
கோளுமுடையமணிமலைபோல் கிடந்தான்தமர்கள்கூட்டமே. (௮)

தமர்கள்கூட்டவல்வினையை நாசஞ்செய்யும் † சதுமூர்த்தி *
அமர்கொளாழிசங்குவாள் வில்தண்டாதிபல்படையன் *
குமரன்கோலஐங்கணைவேள் தாதை கோதிலடியார்தம் *
தமர்கள்தமர்கள்தமர்களாம் சதிரேவாய்க்கதமியேற்கே. (௯)

வாய்க்கதமியேற்கு ஊழிதோறூழியூழி * மாகாயாம்
பூக்கொள்மேனிநான்குதோள் பொன்னாழிக்கையென்னம்மான் *
நீக்கமில்லாஅடியார்தம் அடியாரடியாரடியாரெங்
கோக்கள் * அவர்க்கேகுடிகளாய்ச்செல்லும் நல்லகோட்பாடே. (௧0)

நல்லகோட்பாட்டுலகங்கள் மூன்றினுள்ளும்தான்நிறைந்த *
அல்லிக்கமலக்கண்ணனை அந்தண்குருகூர்ச்சடகோபன் *
சொல்லப்பட்டஆயிரத்துள் இவையும்பத்தும்வல்லார்கள் *
நல்லபதத்தால்மனைவாழ்வர் கொண்டபெண்டிர்மக்களே. (௧௧)

ஆழ்வார் திருவடிகளே சரணம்

---

† 'சதிர்மூர்த்தி' என்பது பன்னீராயிரப்படி.

ஜ நெடுமாலழகுதனில் நீள்குணத்தில் * ஈடு
படுமாநிலையுடைய † பத்தர் *— அடிமைதனில்
எல்லைநிலந்தானாக எண்ணினான்மாறன் * அது
சொல்லைநிலமானநிலைகொண்டு. (அ0)

சீயர் திருவடிகளே சரணம்.

---

## ஒன்பதாம்பத்து.

ஸர்வாபேக்ஷிதங்களையும் முடித்துக்கொடுப்பதாக அருளிச்செய்த எம்பெருமானது சீலகுணங்களில் ஆழ்வார் ஆழங்கால்படுதல்.

## க - ஆந் திருவாய்மொழி—கொண்டபெண்டிர்.

[ ' ஆபாஸபந்துக்களைவிட்டு ஸர்வவிதபந்துவுமான எம்பெருமானைப் பற்றுங்கோள் ' என்று ஆழ்வார் பரோபதேசஞ்செய்தல்.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

பண்-பழந்தக்கராகம் தாளம்-ஏழொத்து. (செஞ்சுருட்டிராகம் ரூபகதாளம்.

ஜ கொண்டபெண்டிர்மக்களுற்றார் சுற்றத்தவர்பிறரும் *
கண்டதோடுபட்டதல்லால் காதல்மற்றுயாதுமில்லை *
எண்டிசையுங்கீழும்மேலும் முற்றவும்உண்டபிரான் *
தொண்டரோமாய் ‡ உய்யலல்லால் இல்லைகண்டீர்துணையே. (க)

துணையும்சார்வுமாகுவார்போல் சுற்றத்தவர்பிறரும் *
அணையவந்த ஆக்கமுண்டேல் அட்டைகள்போல்சுவைப்பர் *
கணையொன்றாலேஏழ்மரமும்எய்த எம்கார்முகிலை *
புணையென்றுய்யப்போகலல்லால் இல்லைகண்டீர்பொருளே. (உ)

பொருள்கையுண்டாய்ச்செல்லக்காணில் போற்றியென்றேற்றெழுவர் *
இருள்கொள்துன்பத்தின்மைகாணில் என்னே! என்பாருமில்லை *
மருள்கொள்செய்கையசுரர்மங்க வடமதுரைப்பிறந்தாற்கு *
அருள்கொளாளாய் ‡ உய்யலல்லால் இல்லைகண்டீர்அரணே. (ந

† பத்தர்கு என்பதும் பாடம். ‡ ' உய்யில '.

அரணமாவர் அற்றகாலைக்கு என்றென்றமைக்கப்பட்டார் *
இரணங்கொண்டதெப்பராவர் இன்றியிட்டாலும் அஃதே *
வருணித்தென்னே ? வடமதுரைப்பிறந்தவன்வண்புகழே *
சரணென்றுய்யப் † போகலல்லால் இல்லைகண்டீர்சதிரே. (௪)

சதுரமென்றுதம்மைத்தாமே சம்மதித்துஇன்மொழியார் *
மதுரபோகம்துற்றவரே வைகிமற்றொன்றுறுவர் *
அதிர்கொள்செய்கையசுரர்மங்க வடமதுரைப்பிறந்தாற்கு *
எதிர்கொளாளாய் ‡ உய்யலல்லால இல்லைகண்டீர்இன்பமே. (௫)

இல்லைகண்டீர்இன்பம்அந்தோ ! உள்ளதுநினையாதே *
தொல்லையார்களெத்தனைவர் தோன்றிக்கழிந்தொழிந்தார் ? *
மல்லைமூதூர் வடமதுரைப்பிறந்தவன்வண்புகழே *
சொல்லியுய்யப் † போகலல்லால் மற்றொன்றில்லைசுருக்கே. (௬)

மற்றொன்றில்லைசுருங்கச்சொன்னோம் மாநிலத்தெவ்வுயிர்க்கும *
சிற்றவேண்டாசிந்திப்பேயமையும கண்டீர்கள்அந்தோ ! *
குற்றமன்றெங்கள்பெற்றத்தாயன் வடமதுரைப்பிறந்தான் *
குற்றமில்சீர்கற்று வைகல்வாழ்தலகண்டீர்குணமே. (௭)

வாழ்தல்கண்டீர்குணமிதந்தோ ? மாயவனடிபரவி *
போழ்துபோகஉள்ளகிற்கும் புன்மையிலாதவர்க்கு *
வாழ்துணையா வடமதுரைப்பிறந்தவன்வண்புகழே *
வீழ்துணையாப்போமிதனில் யாதுமில்லைமிக்கதே. (௮)

யாதுமில்லைமிக்கதனில் என்றென்றதுகருதி *
காதுசெய்வான்கூதைசெய்து கடைமுறைவாழ்க்கையும்போம் *
மாதுகிலின்கொடிகொள்மாட வடமதுரைப்பிறந்த *
தாதுசேர்தோள்கண்ணனல்லால் இல்லைகண்டீர்சரணே. (௯)

கண்ணனல்லால்இல்லைகண்டீர் சரண்அதுநிற்கவந்து *
மண்ணின்பாரம்நீக்குதற்கே வடமதுரைப்பிறந்தான் *
திண்ணமாநும்முடைமைஉண்டேல அவனடிசேர்த்துஉய்ம்மினோ *
எண்ணவேண்டாநும்மதாதும் அவனன்றிமற்றில்லையே. (௧0)

ஆதுமில்லைமற்றவனில் என்றதுவேதுணிந்து *
தாதுசேர்தோள்கண்ணனைக் குருகூர்ச்சடகோபன்சொன்ன *
தீதிலாதவொண்தமிழ்கள் இவையாயிரத்துள்இப்பத்தும *
ஓதவல்லபிராக்கள் நம்மையாளுடையார்கள்பண்டே. (௧௧)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

† 'போகில்' ‡ 'உய்யில்' என்பன - பாடபேதம்.

கொண்டபெண்டிர்தாம்முதலாக் கூறும்உற்றார் * கன்மத்தால்
அண்டினவரென்றே அவரைவிட்டு *—தொண்டருடன்
சேர்க்கும்திருமாலைச் சேருமென்றான் * ஆர்க்கும்இதம்
பார்க்கும் புகழ்மாறன்பண்டு. (௮௧)

சீயர் திருவடிகளே சரணம்.

---

## ௨ - ஆந் திருவாய்மொழி—பண்டைநாளாலே.

---

[ஆழ்வார் எம்பெருமானைத் தமக்கு எல்லாவுறவின் காரியமும் குறைவில்லாமல் அருளுமாறு பிரார்த்தித்தல்.]

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

பண்-புறநீர்மை தாளம்-ஒன்பதொத்து த்வஜாவந்திராகம்-ஆதிதாளம்.

பண்டைநாளாலேநின்திருவருளும்
பங்கயத்தாள்திருவருளும்
கொண்டு * நின்கோயில்சீய்த்துப்பல்படிகால்
குடிகுடிவழிவந்து ஆட்செய்யும் *
தொண்டரோர்க்கருளிச்சோதிவாய்திறந்து
உன்தாமரைக்கண்களால்நோக்காய் *
தெண்திரைப்பொருநல்தண்பணைசூழ்ந்த
திருப்புளிங்குடிக்கிடந்தானே ! (௧)

குடிக்கிடந்தாக்கஞ்செய்து நின்தீர்த்த
அடிமைக்குற்றேவல்செய்து * உன்பொன்
அடிக்கடவாதே வழிவருகின்ற
அடியரோர்க்கருளி ; நீஒருநாள்
படிக்களவாகநிமிர்த்த நின்பாத
பங்கயமேதலைக்கணியாய் *
கொடிக்கொள்பொன்மதிள்சூழ்குளிர்வயல்சோலைத்
திருப்புளிங்குடிக்கிடந்தானே ! (௨)

கிடந்தநாள்கிடந்தாய்எத்தனைகாலம்
கிடத்தி ? உன்திருவுடம்புஅசைய *
தொடர்ந்துகுற்றேவல்செய்து தொல்லடிமை
வழிவரும்தொண்டரோர்க்கருளி *
தடங்கொள்தாமரைக்கண்விழித்து
நீஎழுந்துஉன்தாமரைமங்கையும்நீயும் *
இடங்கொள்மூவுலகும்தொழஇருந்தருளாய்
திருப்புளிங்குடிக்கிடந்தானே ! (௩)

புளிங்குடிக்கிடந்துவரகுணமங்கையிருந்து
வைகுந்தத்துள்நின்று *
தெளிந்தஎன்சிந்தையகங்கழியாதே
என்னையாள்வாய் ! எனக்கருளி *
நளிர்ந்தசீருலகம்மூன்றுடன்வியப்ப
நாங்கள்கூத்தாடிநின்றார்ப்ப *
பளிங்குநீர்முகிலின்பவளம்போல்
கனிவாய்சிவப்பநீகாணவாராயே. (௪)

பவளம்போல்கனிவாய்சிவப்ப
நீகாணவந்து நின்பல்நிலாமுத்தம் *
தவழ்கதிர்முறுவல்செய்து நின்திருக்கண்
தாமரைதயங்கநின்றருளாய் *
பவளநன்படர்க்கீழ்ச்சங்குறைபொருநல்
தண்திருப்புளிங்குடிக்கிடந்தாய் ! *
கவளமாகளிற்றினிடர்கெடத்தடத்துக்
காய்சினப்பறவையூர்ந்தானே ! (௫)

காய்சினப்பறவையூர்ந்து பொன்மலையின்
மீமிசைக்கார்முகிலபோல் *
மாசினமாலிமாலிமாலியென்று
அங்குஅவர்படக்கனன்றுமுன்நின்ற *
காய்சினவேந்தே ! கதிர்முடியானே !
கலிவயல்திருப்புளிங்குடியாய் ! *
காய்சினவாழிசங்குவாள்வில்
தண்டேந்தி எம்மிடர்கடிவானே ! (௬)

எம்மிடர்கடிந்துஇங்குஎன்னையாள்வானே !
இமையவர்தமக்குமாஙனையாய் ! *
செம்மடல்மலருந்தாமரைப்பழனத்
தண்திருப்புளிங்குடிக்கிடந்தாய் ! *
நம்முடையடியர்கவ்வைகண்டுகந்து
நாம்களித்துளநலங்கூர *
இம்மடவுலகர்காணநீஒருநாள்
இருந்திடாய்எங்கள்கண்முகப்பே. (௭)

எங்கள்கண்முகப்பேஉலகர்களெல்லாம்
இணையடிதொழுதெழுதிறைஞ்சி *
தங்களன்பாரதமதுசொல்வலத்தால்
தலைத்தலைச்சிறந்துபூசிப்ப *
திங்கள்சேர்மாடத்திருப்புளிங்குடியாய்!
திருவைகுந்தத்துள்ளாய்! தேவா! *
இங்கண்மாஞாலத்திதனுளும்ஒருநாள்
இருந்திடாய்வீற்றிடங்கொண்டே. (அ)

வீற்றிடங்கொண்டுவியன்கொள்மாஞாலத்து
இதனுளும்இருந்திடாய் * அடியோம்
போற்றிஓவாதேகண்ணிணைகுளிரப்
புதுமலராகத்தைப்பருக *
சேற்றிளவாளைசெந்நெலூடுகளும்
செழும்பணைத்திருப்புளிங்குடியாய்! *
கூற்றமாய்அசுரர்குல முதலரிந்த
கொடுவினைப்படைகள்வல்லானே! (கூ)

கொடுவினைப்படைகள்வல்லையாய்
அமரர்க்குஇடர்கெடஅசுரர்கட்குஇடர்செய் *
கடுவினைநஞ்சே! என்னுடையமுதே!
கலிவயல்திருப்புளிங்குடியாய்! *
வடிவிணையில்லாமலர்மகள் மற்றை
நிலமகள்பிடிக்கும்மெல்லடியை *
கொடுவினையேனும்பிடிக்கநீஒருநாள்
கூவுதல்வருதல்செய்யாயே. (கo)

கூவுதல்வருதல்செய்திடாயென்று
குரைகடலகடைந்தவன்தன்னை *
மேவிநன்கமர்ந்தவியன்புனல்பொருநல்
வழுதிநாடன்சடகோபன் *
நாவியல்பாட † லாயிரத்துள்ளும்
இவையுமோர்பத்தும்வல்லார்கள் *
ஓவுதலின்றிஉலகமூன்றளந்தான்
அடியிணைஉள்ளத்தோர்வாரே. (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

† 'ஆயிரத்துளிவையுமோர்பத்தும்,' 'ஆயிரத்துளிவையும்பத்தும்' என்பன – பாடபேதங்கள்.

பண்டையுறவானபரனைப் புளிங்குடிக்கே
கண்டு * எனக்குள்ளெல்லாவுறவின் காரியமும் *—தண்டறநீ
செய்தருளென்றேயிரந்த சீர்மாறன்தாளிணையை *
உய்துணையென்று உள்ளமே! ஓர். (அ௨)

சீயர் திருவடிகளே சரணம்.

---

## ௩ - ஆந் திருவாய்மொழி—ஒராயிரம்.

---

[எம்பெருமான் ஆழ்வார் அபேக்ஷித்ததையெல்லாம் தரவல்ல தனது நாராயணத்வத்தைக் காட்ட, அவர் அவன்சீலத்தில் ஈடுபட்டுக் கூறுதல்.]

கலிவிருத்தம்.

பண் - நட்டபாஷை. தாளம் - ஏழொத்து. கேதாரராகம்-ஆதிதாளம்

ஒராயிரமாய் உலகேழளிக்கும் *
பேராயிரங்கொண்டது ஓர்பீடுடையன் *
காராயின காளநன்மேனியினன் *
நாராயணன் நங்கள்பிரானவனே. (க)

அவனே அகல்ஞாலம் படைத்திடந்தான் *
அவனே அஃதுஉண்டுஉமிழ்ந்தான் அளந்தான் *
அவனே அவனும் அவனும் அவனும் *
அவனேமற்றெல்லாமும் அறிந்தனமே. (௨)

அறிந்தனவேத அரும்பொருள் நூல்கள் *
அறிந்தனகொள்க அரும்பொருளாதல் *
அறிந்தனரெல்லாம் அரியைவணங்கி *
அறிந்தனர் நோய்களறுக்கும்மருந்தே. (௩)

மருந்தே நங்கள்போகமகிழ்ச்சிக்கென்று *
பெருந்தேவர்குழாங்கள் பிதற்றும்பிரான் *
கருந்தேவனெம்மான் கண்ணன், விண்ணுலகம் *
தருந்தேவனைச் சோரேல்கண்டாய்மனமே! (௪)

மனமே! உன்னை வல்வினையேன்இரந்து *
கனமேசொல்லினேன் இதுசோரேல்கண்டாய் *
புனம்மேவிய பூந்தண்துழாயலங்கல் *
இனமேதுமிலானை அடைவதுமே. (௫)

அடைவதும் அணியார்மலர்மங்கைதோள் *
மிடைவதும் அசுரர்க்குவெம்போர்களே *
கடைவதும் கடலுளமுதம் * என்மனம்
உடைவதும் அவற்கேஒருங்காகவே. (௬)

ஆகம்சேர் நரசிங்கமதாகி * ஓர்
ஆகம்வள்ளுகிரால் பிளந்தானுறை *
மாகவைகுந்தம் காண்பதற்கு * என்மனம்
ஏகம்எண்ணும் இராப்பகலின்றியே. (௭)

இன்றிப்போக இருவினையும்கெடுத்து *
ஒன்றியாக்கைபுகாமை உய்யக்கொள்வான் *
நின்றவேங்கடம நீளநிலத்துஉள்ளது *
சென்றுதேவர்கள் கைதொழுவார்களே. (௮)

தொழுதுமாமலர் நீர்சுடர்தூபமகொண்டு *
எழுதுமென்னும்இது மிகையாதலில *
பழுதில்தொல்புகழ்ப் பாம்பணைப்பள்ளியாய் ! *
தழுவுமாறுஅறியேன் உனதாள்களே. (௯)

தாளதாமரையான் உனதுஉந்தியான் *
வாள்கொள்நீளமழுவாளி உன்னாகத்தான் *
ஆளராய்த்தொழுவாரும் அமரர்கள *
நாளும்என்புகழ்கோ உன்சீலமே ? (௧௦)

சீலமெல்லையிலான் அடிமேல் * அணி
கோலநீள் குருகூர்ச்சடகோபன் * சொல
மாலையாயிரத்துள் இவைபத்தினின்
பாலர் * வைகுந்தமேறுதல் பான்மையே. (௧௧)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

ஓராநீர்வேண்டினவை உள்ளதெல்லாம்செய்கின்றேன் *
நாராயணனன்றோ நானென்று *—பேருதவைக்
காட்ட அவன்சீலத்தில்கால்தாழ்ந்தமாறனருள் *
மாட்டிவிடும் நம்மனத்துமை. (அ௩)

சீயர் திருவடிகளே சரணம்.

---

# ௪ - ஆந் திருவாய்மொழி—மையார்.

[ஆழ்வார் எம்பெருமானைச் சங்குசக்கரங்களுடன் காணவேண்டிக் கூப்பிட்டு அங்ஙனமே பெற்றமையை உகந்து அருளிச்செய்தல்.]

கலி விருத்தம்.

பண் - கொல்லி. தாளம் - ஏழொத்து. தந்யாசிராகம் - ரூபகதாளம்.

ஓ மையார்கருங்கண்ணி கமலமலர்மேல்
செய்யாள் * திருமார்வினில்சேர் திருமாலே! *
வெய்யார்சுடராழி சுரிசங்கமேந்தும்
கையா! * உன்னைக்காணக் கருதும்என்கண்ணே. (க)

கண்ணே! உன்னைக் காணக்கருதி * என்னெஞ்சம்
எண்ணேகொண்ட சிந்தையதாய்நின்றியம்பும் *
விண்ணோர்முனிவர்க்கு என்றும்காண்பரியாயை *
நண்ணுதொழியேனென்று நான் அழைப்பனே. (உ)

அழைக்கின்றஅடிநாயேன் நாய்கூழைவாலால் *
குழைக்கின்றதுபோல என்னுள்ளம்குழையும் *
மழைக்குஅன்றுகுன்றமெடுத்து ஆநிரைகாத்தாய்! *
பிழைக்கின்றதருளென்று பேதுறுவனே. (ஙு)

உறுவதுஇதுவென்று உனக்குஆட்பட்டு * நின்கண்
பெறுவதுஎதுகொலென்று பேதையேன்நெஞ்சம் *
மறுகல்செய்யும் வானவர்தானவர்க்குஎன்றும் *
அறிவதரிய அரியாயஅம்மானே! (௪)

அரியாய அம்மானை அமரர்பிரானை *
பெரியானைப் பிரமனைமுன்படைத்தானை *
வரிவாளரவினணைப் பள்ளிகொள்கின்ற *
கரியான்கழல்காணக் கருதும்கருத்தே. (ரு)

கருத்தே! உன்னைக் காணக்கருதி * என்னெஞ்சத்து
இருத்தாகஇருத்தினேன் தேவர்கட்கெல்லாம்
விருத்தா! * விளங்குஞ்சுடர்ச்சோதி உயரத்
தொருத்தா! * உன்னையுள்ளும் என்னுள்ளம்உகந்தே. (௬)

உகந்தேஉன்னை உள்ளும்என்னுள்ளத்து * அகம்பால்
அகந்தான்அமர்ந்தே இடங்கொண்டஅமலா! *
மிகுந்தானவன்மார்வகலம் இருகூறு
நகந்தாய் * நரசிங்கமதாயவுருவே! (௭)

உருவாகிய ஆறுசமயங்கட்கெல்லாம் *
பொருவாகிநின்றானவன் எல்லாப்பொருட்கும் *
அருவாகிய ஆதியைத தேவர்கட்கெல்லாம் *
கருவாகியகண்ணனைக் கண்டுகொண்டேனே. (அ)

கண்டுகொண்டு என்கண்ணிணையாரக்களித்து *
பண்டைவினையாயின பற்றோடறுத்து *
தொண்டர்க்கமுதுண்ணச் சொல்மாலைகள்சொன்னேன் *
அண்டத்தமராபெருமான் அடியேனே. (கூ)

அடியானிவனென்று எனக்காரருள்செய்யும
நெடியானை * நிறைபுகழ் அஞ்சிறைப்புள்ளின்
கொடியானை * குன்றாமல் உலகமளந்த
அடியானை * அடைந்துஅடியேன் உய்ந்தவாறே ! (கo)

ஆறுமதயானை அடர்த்தவன்தன்னை *
சேறார்வயல் தென்குருகூர்ச்சடகோபன் *
நூறேசொன்ன ஓராயிரத்துள இப்பத்தும *
ஏறேதரும வானவர்தமின்னுயிர்க்கே. (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

மையார்கண்மாமார்பில் மன்னுமதிருமாலை *
கையாழிசங்குடனே காணஎண்ணி *—மெய்யான
காதலுடன்கூப்பிட்டுக் கண்டுகந்தமாறன்பேர் *
ஓதவுய்யுமே இன்னுயிர். (அச)

சீயர் திருவடிகளே சரணம்

---

## ரு - ஆந் திருவாய்மொழி—இன்னுயிர்ச்சேவல்.

[தலைவனை நேரிற்காண ஆசைப்பட்ட தலைவி ஸ்மாரகபதார்த்தங்களால் தான்தளர்ந்தமை கூறும் பாசுரத்தாலே, தம்நிலையை ஆழ்வார் கூறுதல்.]

கலிநிலைத்துறை

பண் - கொல்லி. தாளம் - ஏழொத்து அஸாவேரிராகம் - ஆதிதாளம்.

இன்னுயிர்ச்சேவலும நீருமகூவிக்கொண்டு,இங்குளத்தனை *
என்னுயிர்நோவமிழற்றேன்மின் குயிற்பேடைகாள் ! *
என்னுயிர்க்கண்ணபிரானை நீவரக்கூவுகிலீர *
என்னுயிர்கூவிக்கொடுப்பார்க்கும் இத்தனைவேண்டுமோ? (க)

இத்தனைவேண்டுவதன்றந்தோ ! அன்றிற்பேடைகாள் ! *
எத்தனைநீரும்நுஞ்சேவலும் கரைந்தேங்குதிர் *
வித்தகன் கோவிந்தன் மெய்யனல்லன்ஒருவர்க்கும் *
அத்தனையாம்இனி என் னுயிர் அவன்கையதே. (உ)

அவன்கையதேஎனதாருயிர் அன்றிற்பேடைகாள ! *
† எவன்சொல்லிநீர்குடைநதாடுதிர் புடைசூழவே *
தவஞ்செய்திலலா வினையாட்டியேனுயிர்இயகுண்டோ ? *
† எவன்சொல்லிநிற்றும்? நும்எங்குகூக்குரல்கேட்டுமே. (ங)

கூக்குரல்கேட்டும் நம்கண்ணன்மாயன்வெளிப்படான் *
மேற்கிளைகொள்ளேன்மின் ‡ நீருமசேவலும்கோழிகாள் ! *
வாக்கும்மனமும்கருமமும் நமக்காஙகதே *
ஆக்கையும்ஆவியும் அந்தரம்நின்றுழலுமே (ச)

அந்தரம்நின்றுழல்கின்ற யானுடைபபூவைகாள் ! *
நுந்திறத்தேதுமிடையில்லை குழறேனமினோ *
இந்திரஞாலங்களகாட்டி இவ்வேழுலகும்கொண்ட *
நந்திருமார்பன் நம்மாவியுண்ணநனகெண்ணினன். (ரு)

நன்கெண்ணிநான்வளர்கத சிறுகிளிபபைதலே ! *
இன்குரலநீமிழற்றேல என்னாருயிர்க்காகுததன் *
நின்செய்யவாயொக்கும்வாயன கண்ணன்கைகாலினன *
நின்பசுஞ்சாமநிறத்தன் கூட்டுண்டுநீங்கினன். (சு)

கூட்டுண்டுநீங்கிய கோலததாமரைக்கண்செவ்வாய் *
வாட்டமிலென்கருமாணிக்கம கண்ணன்மாயனபோல் *
கோட்டியவில்லொடு மின்னுமேகக்குழாஙகள்காள்! *
காட்டேன்மின்நும்முரு என்னுயிர்க்குஅதுகாலனே. (எ)

உயிர்க்கதுகாலனென்று உம்மையானிரந்தேதற்கு * நீர்
குயிற்பைதல்காள் ! கண்ணன்நாமமேகுழறிக்கொன்றீர் *
தயிர்ப்பழஞ்சோற்றொடு பாலடிசிலும்தந்து * சொல்
பயிற்றியநல்வளமூட்டினீர் பண்புடையீரே! (அ)

§ பண்புடைவண்டொடுதும்பிகாள் ! பண்மிழற்றேன்மின் *
புண்புரைவேல்கொடு குததாலொக்கும் நும்இன்குரல் *
தண்பெருநீர்ததடந்தாமரை மலர்ந்தாலொக்கும்
கண்பெருங்கண்ணன் * நம்மாவியுண்டெழநண்ணினன். (கூ)

† 'எவம்' என்று வழங்கும். ‡ 'நீரும்நுஞ்சேவலும்' என்பதும் பாடம.
§ 'பண்புரை' என்பது சுட்டின் பாடம.

எழுநண்ணிநாமும நம்வானநாடனோடொன்றினோம் *
பழனநன்னாரைக்குழாங்களகாள ! பயின்றெனினி ? *
இழைநல்லவாக்கையும் பையவேபுயக்கற்றது *
தழைநல்லவின்பந்தலைப்பெய்து எங்குந்தழைக்கவே. (௧0)

இன்பந்தலைப்பெய்துஎங்குந்தழைத்த பல்லூழிக்கு *
தன்புகழேத்தத் தனக்கருள்செய்தமாயனை *
தென்குருகூர்ச்சடகோபன் சொல்லாயிரத்துள்இவை *
ஒன்பதோடொன்றுக்கும மூவுலகும்உருகுமே. (௧௧)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

இன்னுயிர்மால்தோற்றினது இங்கென்னெஞ்சிலென்று * கண்ணால்
அன்றவனைக்காணவெண்ணி ஆண்பெண்ணாய் *—பின்னை அவன்
தன்னைநினைவிப்பவற்றால் தான்தளர்ந்தமாறனருள் *
உன்னுமவர்க்கு உள்ளமுருகும். (அரு)

சீயர் திருவடிகளே சரணம்

---

## ௯ - ஆந் திருவாய்மொழி-- உருகுமால்.

---

[ஆழ்வார் எம்பெருமானது சீரை இன்னாப்புடன் கூறியருளுதல்.]

கலிவிருத்தம்

பண் - நாட்டராகம் தாளம் ஏழொந்து கல்யாணிராகம் - ஆதிதாளம்.

உருகுமால்நெஞ்சம உயிரின்பரமன்றி *
பெருகுமாலவேட்கையும என்செய்கேன்தொண்டனேன் ? *
தெருவெல்லாமகாவிகமழ் திருக்காட்கரை *
மருவியமாயன்தன மாயம்நினைதொறே (௧)

நினைதொறும்சொல்லுந்தொறும நெஞ்சு இடிந்துகும் *
வினைகொளசீர்பாடிலும் வேமெனதாருயிர் *
சுனைகொள்பூஞ்சோலைத் தென்காட்கரையென்னப்பா ! *
நினைகிலேன்நான் உனக்குஆட்செய்யும்நீர்மையே. (௨)

நீர்மையால்நெஞ்சம் வஞ்சித்துப்புகுந்து * என்னை
ஈர்மைசெய்து என்னுயிராய்என்னுயிருண்டான் *
சீர்மல்குசோலைத் தென்காட்கரையென்னப்பன் *
கார்முகில்வண்ணன்தன் கள்வம்அறிகிலேன். (௩)

அறிகிலேன் தன்னுள் அனைத்துலகும்நிற்க *
நெறிமையால்தானும் அவற்றுள்நிற்கும்பிரான் *
வெறிகமழ்சோலைத் தென்காட்கரையென்னப்பன் *
சிறியவென்னாருயிருண்ட திருவருளே. (௪)

திருவருள்செய்பவன்போல என்னுள்புகுந்து *
உருவமும்ஆருயிரும் உடனேயுண்டான் *
திருவளர்சோலை தென்காட்கரையென்னப்பன் *
கருவளர்மேனி † நங்கண்ணன்கள்வங்களே. (௫)

என்கண்ணன்கள்வம எனக்குச்செம்மாய்நிற்கும் *
அங்கண்ணனுண்ட என்னாருயிர்க்கோதுஇது *
புன்கண்மையெய்திப் புலம்பிஇராப்பகல் *
என்கண்ணனென்று அவன்காட்கரையேத்துமே. (௬)

காட்கரையேத்தும் அதனுள்கண்ணா! என்னும் *
வேட்கைநோய்கூர நினைந்துகரைந்துகும் *
ஆட்கொள்வானொத்து என்னுயிருண்டமாயனால் *
கோட்குறைபட்டது என்னாருயிர்கோளுண்டே. (௭)

கோளுண்டானன்றிவந்து என்னுயிர்தானுண்டான் *
நாளுநாள்வந்து என்னைமுற்றவும்தானுண்டான் *
காளநீர்மேகத் தென்காட்கரையென்னப்பற்கு *
ஆளன்றேபட்டது என்னாருயிர்பட்டதே. (௮)

ஆருயிர்பட்டது எனதுயிர்பட்டது? *
பேரிதழ்தாமரைக்கண் கனிவாயது * ஓர்
காரெழில்மேகத் தென்காட்கரைகோயில்கொள் *
சீரெழில்நால்தடந்தோள் தெய்வவாரிக்கே. (௯)

வாரிக்கொண்டு உன்னைவிழுங்குவன்காணிலென்று *
ஆர்வுற்றஎன்னையொழிய என்னில்முன்னம்
பாரித்து * தான்என்னை முற்றப்பருகினான் *
காரொக்கும் காட்கரையப்பன்கடியனே. (௧௦)

கடியனாய்க் கஞ்சனைக்கொன்றபிரான்தன்னை *
கொடிமதிள்தென்குருகூர்ச் சடகோபன்சொல் *
வடிவமையாயிரத்து இப்பத்தினால் * சன்மம
முடிவெய்தி நாசங்கண்டீர்கள்எங்கானலே. (௧௧)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

† 'என்கண்ணன்' என்றும் பாடம்.

உருகுமால்என்னெஞ்சம்உன்செயல்களெண்ணி *
பெருகுமால் வேட்கையெனப்பேசி *—மருவுகின்ற
இன்னாப்புடன்அவன்சீரேய்க்துரைத்தமாறன்சொல் *
என்னாச்சொல்லா திருப்பதுஎங்கு? (௮௯

சீயர் திருவடிகளே சரணம்

---

## ௭ - ஆந் திருவாய்மொழி—எங்கானல்.

[எம்பெருமானது வடிவழகே பற்றாசு ஆகத் தலைவி திருமூழிக்களத்தே பறவைகளைத் தூதுவிடுவதாகக் கூறும் பாசுரம்.]

தரவுகொச்சகக்கலிப்பா

பண்-நாட்டராகம் தாளம்-ஏழொத்து. கண்டாரிராகம் - ஆதிதாளம்.

எங்கானலகங்கழிவாய் இரைதேர்ந்திங்கினிதமரும் *
செங்காலமடநாராய்! திருமூழிக்களத்துறையும் *
கொங்கார்பூந்துழாய்முடி எங்குடக்கூத்தர்க்குஎன்தூதாய் *
நுங்கால்கள்என்தலைமேல் கெழுமீரோநுமரோடே. (௧)

நுமரோடும்பிரியாதே நீரும்நும்சேவலுமாய் *
அமர்காதல்குருகினங்காள்! அணிமூழிக்களத்துறையும் *
எமராலும்பழிப்புண்டு இங்குஎன்? தம்மாலிழிப்புண்டு *
தமரோடுஅங்குறைவார்க்குத் தக்கிலமே? கேளீரே. (௨.)

தக்கிலமே? கேளீர்கள் தடம்புனல்வாய்இரைதேரும் *
கொக்கினங்காள்! குருகினங்காள்! குளிர்மூழிக்களத்துறையும் *
செக்கமலத்தலர்போலும் கண்கைகால்செங்கனிவாய் *
அக்கமலத்திலைபோலும் திருமேனியடிகளுக்கே. (௩)

திருமேனியடிகளுக்குத் தீவினையேன்விடுதூதாய் *
திருமூழிக்களமென்னும் செழுநகர்வாய் அணிமுகில்காள்! *
திருமேனி அவட்கருளீர் என்றக்கால் * உம்மைத்தன்
திருமேனியொளியகற்றித் தெளிவிசும்புகடியுமே? (௪)

தெளிவிசும்புகடிதோடித் தீவளைத்துமின்னிலகும் *
ஒளிமுகில்காள்! திருமூழிக்களத்துறையும் ஒண்சுடர்க்கு *
தெளிவிசும்புதிருநாடாத் தீவினையேன்மனத்துறையும் *
துளிவார்கட்குழலார்க்கு என்தூதுரைத்தல்செப்புமினே. (௫)

தூதுரைத்தல்செப்புமின்கள் தூமொழிவாய்வண்டினங்காள் ! *
போதிரைத்துமதுநுகரும் பொழில்மூழிக்களத்துறையும் *
மாதரைத்தம்மார்வகத்தே வைத்தார்க்கு, என்வாய்மாற்றம் *
தூதுரைத்தல்செப்புதிரேல் சுடர்வளையும்கலையுமே. (ரு)

சுடர்வளையும்கலையும்கொண்டு அருவினையேன்தோள்துறந்த *
படர்புகழான் திருமூழிக்களத்துறையும்பங்கயக்கண் *
சுடர்பவளவாயனைக்கண்டு ஒருநாள்ஓர் தூய்மாற்றம் *
படர்பொழில்வாய்க்குருகினங்காள் ! எனக்குஒன்றுபணியீரே.

எனக்குஒன்றுபணியீர்கள் இரும்பொழில்வாயிரைதேர்ந்து *
மனக்கின்பம்படமேவும் வண்டினங்காள் ! தும்பிகாள் ! *
கனக்கொள்திண்மதிள்புடைசூழ் திருமூழிக்களத்துறையும் *
புனக்கொள்காயாமேனிப் பூந்துழாய்முடியார்க்கே. (அ)

பூந்துழாய்முடியார்க்குப் பொன்னாழிக்கையாருக்கு *
ஏந்துநீரிளங்குருகே ! திருமூழிக்களத்தாருக்கு *
ஏந்துபூண்முலைபயந்து என்னிணைமலர்க்கண்ணீர்ததும்ப *
தாம்தம்மைக்கொண்டகல்தல் தகவன்றென்றுரையீரே. (கூ)

தகவன்றென்றுரையீர்கள் தடம்புனல்வாயிரைதேர்ந்து *
மிகவின்பம்படமேவும் மென்னடையஅன்னங்காள் ! *
மிகமேனிமெலிவெய்தி மேகலையும்சுடழிந்து * என்
அகமேனியொழியாமே திருமூழிக்களத்தார்க்கே. (க௦)

ஒழிவின்றித்திருமூழிக்களத்துறையும் ஒண்சுடரை *
ஒழிவில்லா அணிமழலைக் கிளிமொழியாள்அலற்றியசொல் *
வழுவில்லாவண்குருகூர்ச் சடகோபன்வாய்ந்துரைத்த *
அழிவில்லா ஆயிரத்து இப்பத்தும்நோயறுக்குமே. (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

எங்காதலுக்கடி மாலேய்ந்தவடிவழகென்று *
அங்காதுபற்றுசா ஆங்கவன்பால் *—எங்குமுள்ள
புள்ளினத்தைத் தூதாகப்போகவிடும் மாறன்தாள் *
உள்ளினர்க்குத் தீங்கையறுக்கும். (அஎ)

சீயர் திருவடிகளே சரணம்.

## ௮ - ஆந் திருவாய்மொழி—அறுக்கும்வினை.

[எம்பெருமான் வரக் காணாமையாலே தலைவி தலைவனது நகரான திருநாவாயிற் செல்ல நினைந்தமை கூறும் முகத்தால் ஆழ்வார் தமது ப்ராப்யத்வரையைத் தெரிவித்தல்.]

கலிவிருத்தம்.

பண் - கொல்லி. தாளம் - இடையொத்து ஸாவேரிராகம் - ஆதிதாளம்.

அறுக்கும்வினையாயின ஆகத்துஅவனை *
நிறுத்தும்மனத்துஒன்றிய சிந்தையினார்க்கு *
வெறித்தணமலர்ச்சோலைகள்சூழ் திருநாவாய் *
குறுக்கும்வகைஉண்டுகொலோ ? கொடியேற்கே. (க)

கொடியேரிடைக் கோகனகத்தவள்கேள்வன் *
வடிவேல்தடங்கண் மடப்பின்னைமணாளன் *
நெடியானுறைசோலைகள்சூழ் திருநாவாய் *
அடியேன்அணுகப்பெறுநாள் எவைகொலோ ? (உ)

எவைகொல்அணுகப்பெறுநாள ? என்று எப்போதும் *
கவையில்மனமின்றிக் கண்ணீர்கள்கலுழ்வன் *
நவையில்திருநாரணன்சேர் திருநாவாய் *
அவையுள்புகலாவது ஓர்நாள்அறியேனே. (௩)

நாளேலறியேன் எனக்குள்ளன * நானும்
மீளா அடிமைப்பணி செய்யப்புகுந்தேன் *
நீளார்மலர்ச்சோலைகள்சூழ் திருநாவாய் *
வாளேய்தடங்கண் மடப்பின்னைமணாளா ! (௪)

மணாளன்மலர்மங்கைக்கும் மண்மடந்தைக்கும் *
கண்ணாளன் உலகத்துயிர்தேவர்கட்கெல்லாம் *
விண்ணாளன்விரும்பியுறையும் திருநாவாய் *
கண்ணாரக்களிக்கின்றது இங்குஎன்றுகொல்கண்டே ? (௫)

கண்டேகளிக்கின்றது இங்குஎன்றுகொல் ? கண்கள் *
தொண்டேஉனக்காய்ஒழிந்தேன் துரிசின்றி *
வண்டார்மலர்ச்சோலைகள் சூழ் திருநாவாய் *
கொண்டேயுறைகின்ற எங்கோவலர்கோவே ! (௬)

கோவாகியமாவலியை நிலங்கொண்டாய் ! *
தேவாசுரம்செற்றவனே ! திருமாலே ! *
நாவாயுறைகின்ற என்நாரணநம்பீ ! *
ஆவா ! அடியான் இவனென்று அருளாயே. (௭)

அருளாதொழிவாய் அருள்செய்து * அடியேனைப்
பொருளாக்கி உன்பொன்னடிக்கீழ்ப்புகவைப்பாய் *
மருளேயின்றி உன்னைஎன்னெஞ்சத்துஇருத்தும் *
தெருளேதரு தென்திருநாவாயென்தேவே ! (௮)

தேவர்முனிவர்க்கு என்றும்காண்டற்கரியன் *
மூவர்முதல்வன் ஒருமூவுலகாளி *
தேவன்விரும்பியுறையும் திருநாவாய் *
யாவரணுகப்பெறுவார் ? இனியந்தோ ! (௯)

அந்தோ ! அணுகப்பெறுநாள்என்று எப்போதும் *
சிந்தைகலங்கித் திருமால்!என்றுஅழைப்பன் *
கொந்தார்மலர்ச்சோலைகள்சூழ் திருநாவாய் *
வந்தேயுறைகின்ற எம்மாமணிவண்ணா ! (௧௦)

வண்ணம்மணிமாட நல்நாவாயுள்ளானை *
திண்ணம்மதிள் தென்குருகூர்ச்சடகோபன் *
பண்ணார்தமிழ் ஆயிரத்துஇப்பத்தும்வல்லார் *
மண்ணாண்டு மணநாகமழ்வர்மல்லிகையே . (௧௧)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

அறுக்குமிடரென்று அவன்பால்ஆங்குவிட்டதூதர் *
மறித்துவரப் பற்றுமனததால் *—அறப்பதறிச்
செய்யதிருநாவாயில் செல்லநினைந்தான்மாறன் ✢
மையலினால் செய்வறியாமல். (௮௮)

சீயர் திருவடிகளே சரணம்.

---

## ௯ - ஆந் திருவாய்மொழி—மல்லிகை.

---

[தலைவி தனது ஆற்றாமையால் வருந்தியதைக் கூறும் பாசுரத்தாலே தமது தன்மையை ஆழ்வார் தெரிவித்தல்.]

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பண் - பஞ்சமம். தாளம் - எழ்ஒத்து. சங்கராபரணராகம் - ரூபகதாளம்.

மல்லிகைகமழ்தென்றலீருமாலோ !
வண்குறிஞ்சியிசைதவழுமாலோ ! *
செல்கதிர்மாலையும்மயக்குமாலோ !
செக்கர்நல்மேகங்கள்சிதைக்குமாலோ ! *

அல்லியந்தாமரைக்கண்ணனெம்மான்
ஆயர்களேறு அரியேறெம்மாயோன் *
புல்லியமுலைகளும்தோளும்கொண்டு
புகலிடமறிகிலம்தமியமாலோ ! (க)

புகலிடமறிகிலம்தமியமாலோ !
புலம்புறுமணிதென்றலாம்பலாலோ ! *
பகலடுமாலைவண்சாந்தமாலோ !
பஞ்சமம்முல்லைதண்வாடையாலோ ! *
அகலிடம்படைத்திடந்துண்டுமிழ்ந்தளந்து
எங்குமளிக்கின்ற ஆயன்மாயோன் *
இகலிடத்தசுரர்கள்கூற்றம்வாரான்
இனியிருந்தென்னுயிர்காக்குமாறென் ? (உ)

இனியிருந்தென்னுயிர்காக்குமாறென் ?
இணைமுலைமுகநுண்ணிடைநுடங்க *
துனியிருங்கலவிசெய்தாகந்தோய்ந்து
துறந்தெம்மையிட்டகல்கண்ணன்கள்வன் *
தனியிளஞ்சிங்கமெம்மாயன்வாரான்
தாமரைக்கண்ணும்செவ்வாயும் * நீலப்
பனியிருங்குழல்களும்நான்குதோளும்
பாவியேன்மனத்தேநின்றீருமாலோ ! (௩)

பாவியேன்மனத்தேநின்றீருமாலோ !
வாடைதண்வாடைவெவ்வாடையாலோ ! *
மேவுதண்மதியம்வெம்மதியமாலோ !
மென்மலர்ப்பள்ளிவெம்பள்ளியாலோ ! *
தூவியம்புள்ளுடைத்தெய்வவண்டு
துதைந்த எம்பெண்மையம்பூவிதாலோ !
ஆவியின்பரமல்லவகைகளாலோ !
யாமுடைநெஞ்சமும்துணையன்றாலோ ! (௪)

யாமுடைநெஞ்சமும்துணையன்றாலோ !
ஆபுகுமாலையுமாகின்றாலோ ! *
யாமுடையாயன்தன்மனம்கல்லாலோ !
அவனுடைத்தீங்குழலீருமாலோ ! *

யாமுடைத்துணையென்னும்தோழிமாரும்
எம்மின்முன் அவனுக்குமாய்வாராலோ! *
யாமுடையாருயிர்காக்குமாறென்?
அவனுடையருள்பெறும்போதரிதே. (௫)

அவனுடையருள்பெறும்போதரிதால்
அவ்வருளல்லன அருளுமல்ல *
அவனருள்பெறுமளவு ஆவியில்லாது
அடுபகல்மாலையும்நெஞ்சும்காணேன் *
சிவனொடுபிரமன்வண்திருமடந்தை
சேர்திருவாகம்எம்மாவியீரும் *
† எவனினிப்புகுமிடம்? எவன்செய்கேனோ?
ஆருக்கென்சொல்லுகேன்? அன்னைமீர்காள்! (௬)

ஆருக்கென்சொல்லுகேன்? அன்னைமீர்காள்!
ஆருயிரளவன்றுஇக்கூர்தண்வாடை *
காரொக்கும்மேனிநங்கண்ணன்கள்வம்
கவர்ந்தஅத்தனிநெஞ்சம்அவன்கணஃதே *
சீருற்றஅகிற்புகையாழ்நரம்பு
பஞ்சமம்தண்பசுஞ்சாந்தணைந்து *
போருற்றவாடைதண்மல்லிகைப்பூப்
புதுமணம்முகந்துகொண்டெறியுமாலோ! (௭)

புதுமணம்முகந்துகொண்டெறியுமாலோ!
பொங்கிளவாடைபுன்செக்காலோ!
அதுமணந்தகன்றநங்கண்ணன்கள்வம்
கண்ணனிற்கொடிது இனியதனிலும்பர் *
மதுமணமல்லிகைமந்தக்கோவை
வண்பசுஞ்சாந்தினில்பஞ்சமம்வைத்து *
அதுமணந்தின்னருளாய்ச்சியர்க்கே
ஊதும்அத்தீங்குழற்கேஉய்யேன்நான். (௮)

ஊதுமத்தீங்குழற்கேஉய்யேன்நான்
அதுமொழிந்திடையிடைத்தன்செய்கோலத் *
தூதுசெய்கண்கள்கொண்டுஒன்றுபேசித்
தூமொழியிசைகள்கொண்டுஒன்றுநோக்கி *

† 'எவம்' என்றும் வழங்கும்.

பேதுறுமுகஞ்செய்துநொந்துநொந்து
பேதைநெஞ்சறவறப்பாடும்பாட்டை *
யாதுமொன்றறிகிலம்அம்ம ! அம்ம !
மாலையுமவந்ததுமாயன்வாரான். (கூ)

மாலையும்வந்ததுமாயன்வாரான்
மாமணிபுலம்பவல்லேறணைந்த *
கோலநன்னுகுகளுகளுமாலோ
கொடியனகுழல்களுமகுழறுமாலோ ! *
† வாலொளிவளர்முல்லைகருமுகைகள்
மல்லிகையலம்பிவண்டாலுமாலோ ! *
வேலையும்விசும்பில்விண்டலறுமாலோ !
என்சொல்லிஉய்வன்இங்குஅவனைவிட்டே? (க0)

அவனைவிட்டகன்றுயிராற்றகிலலா
அணியிழையாய்ச்சியர்மாலைப்பூசல் *
அவனைவிட்டகல்வதற்கேயிரங்கி
அணிகுருகூர்ச்சடகோபன்மாறன் *
அவனியுண்டுமிழ்ந்தவன்மேலுரைத்த
ஆயிரத்துள் இவைபத்தும்கொண்டு *
அவனியுளலற்றிநின்றுய்ம்மின்தொண்டீர் !
அச்சொன்னமாலைநண்ணித்தொழுதே. (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

மல்லடிமைசெய்யும்நாள் மால்தன்னைக்கேட்க * அவன்
சொல்லுமளவும் பற்றுத்தொன்னலத்தால் * —செல்கின்ற
ஆற்றாமைபேசி அலமந்தமாறனருள் *
மாற்றாகப்போகும் என்தன்மால். (அகூ)

சீயர் திருவடிகளே சரணம்.

---

† 'வாலொளி' என்று ஈட்டின் பாடம்.

## † ௧௦ - ஆந் திருவாய்மொழி—மாலைநண்ணி.

[விரும்பியபடி யாவும் அவஸாநத்தில் ஸித்திக்குமென்று ஆழ்வார்க்கு எம்பெருமான் அருள, அவர் உவந்து, திருக்கண்ணபுரத்திலே சென்று அவனைச் சேருமாறு பரோபதேசஞ் செய்தல்.]

கலிவிருத்தம்

பண்-நட்டபாஷை. தாளம்-ஒன்பதொத்து. கேதாரகௌளராகம் - ஆதிதாளம்

ஸ்ரீ மாலைநண்ணித் தொழுதெழுமினோ வினைகெட *
காலைமாலை கமலமலரிட்டுநீர் *
வேலைமோதும்மதிள்சூழ் திருக்கண்ணபுரத்து *
ஆலின்மேலால்அமர்ந்தான் அடியிணைகளே. (௧)

கள்ளவிழும்மலரிட்டு நீர்இறைஞ்சுமின் *
நள்ளிசேரும்வயல்சூழ் கிடங்கின்புடை *
வெள்ளியேய்ந்தமதிள்சூழ் திருக்கண்ணபுரம்
உள்ளி * நாளும்தொழுதெழுமினோ தொண்டரே! (௨)

தொண்டர்! நுந்தம்துயர்போக நீர்ஏகமாய் *
விண்டுவாடாமலரிட்டு நீர்இறைஞ்சுமின் *
வண்டுபாடும்பொழில்சூழ் திருக்கண்ணபுரத்து
அண்டவாணன் * அமரர்பெருமானையே. (௩)

மானைநோக்கி மடப்பின்னைதன் கேள்வனை *
தேனைவாடாமலரிட்டு நீர்இறைஞ்சுமின் *
வானையுந்தும்மதிள்சூழ் திருக்கண்ணபுரம் *
தான்நயந்தபெருமான் சரணாகுமே. (௪)

சரணமாகும் தனதாளடைந்தார்க்கெல்லாம் *
மரணமானால் வைகுந்தம்கொடுக்கும்பிரான் *
அரணமைந்தமதிள்சூழ் திருக்கண்ணபுரத்
தரணியாளன் * தனதன்பர்க்குஅன்பாகுமே. (௫)

அன்பனாகும் தனதாளடைந்தார்க்கெல்லாம் *
செம்பொனாகத்து அவுணனுடல்கீண்டவன் *
நன்பொனேய்ந்தமதிள்சூழ் திருக்கண்ணபுரத்து
அன்பன் * நாளும் தனமெய்யர்க்குமெய்யனே. (௬)

† இது கோயில்திருவாய்மொழி.

மெய்யனாகும் விரும்பித்தொழுவார்க்கெல்லாம் *
பொய்யனாகும் புறமேதொழுவார்க்கெல்லாம் *
செய்யில்வாளையுகளும் திருக்கண்ணபுரத்து
ஐயன் * ஆகத்தணைப்பார்கட்கு அணியனே. (எ)

அணியனாகும் தன்தாளடைந்தார்க்கெல்லாம் *
பிணியுஞ்சாரா பிறவிகெடுத்தாளும் *
மணிபொன்னேய்ந்தமதிள்சூழ் திருக்கண்ணபுரம்
பணிமின் * நாளும் பரமேட்டி தன்பாதமே. (அ)

பாதம்நாளும் பணியத்தணியும்பிணி *
ஏதஞ்சாரா எனக்கேல்இனியென்குறை? *
வேதநாவர்விரும்பும் திருக்கண்ணபுரத்து
ஆதியானை * அடைந்தார்க்கு அல்லலில்லையே. (கூ)

இல்லையல்லல் எனக்கேல்இனியென்குறை? *
அல்லிமாதரமரும் திருமார்பினன் *
கல்லிலேய்ந்தமதிள்சூழ் திருக்கண்ணபுரம்
சொல்ல * நாளும்துயர் பாடுசாரவே. (க0)

பாடுசாராவினை பற்றறவேண்டுவீர்! *
மாடநீடு குருகூர்ச்சடகோபன் * சொல்
பாடலானதமிழ் † ஆயிரத்துள் இப்பத்தும்
பாடியாடி * பணிமின் அவன் ‡ தாள்களே. (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்

---

மால்உமதுவாஞ்சைமுற்றும் மன்னுமுடம்பின்முடிவில் *
சாலநண்ணிச்செய்வனென்னத் தானுகந்து *—மேலவனைச்
சீரார்கண்ணபுரத்தே சேருமெனும்சீர்மாறன் *
தாராளோ நந்தமக்குத்தாள். (கூ0)

ஜீயர் திருவடிகளே சரணம்

---

† 'ஆயிரத்து இப்பத்தும்' என்றும் பாடம்

‡ 'தாள்களையே' என்றும் பாடம்.

## பத்தாம்பத்து.

எம்பெருமான் ஆழ்வார்க்கு அர்ச்சிராதிகதியைக் காட்டி இவரது அபேக்ஷிதங்களைத் தலைக்கட்டுதல்.

### க - ஆந் திருவாய்மொழி—தாளதாமரை.

[அடைந்தார்க்குத் தானே துணையாகின்ற திருமோகூர்க் காளமேகப் பெருமானைச் சரணமடைந்து ஆழ்வார் தாம் பிறவித்துயரொழிந்து பரமபதமடையக் கருதியதை அருளிச்செய்தல்.]

கலிநிலைத்துறை

பண் - இந்தளம். தாளம் - ஏழொத்து பைரவிராகம் - ரூபகதாளம்.

தாளதாமரைத் தடமணிவயல்திருமோகூர் *
நாளும்மேவிநன்கமர்ந்துநின்று அசுரரைத்தகர்க்கும் *
தோளும்நான்குடைச் சுரிகுழல்கமலக்கண்கனிவாய் *
காளமேகத்தையன்றி மற்றொன்றிலம்கதியே. (க)

இலம்கதிமற்றொன்றுஎம்மைக்கும ஈன்தண்துழாயின் *
அலங்கலங்கண்ணி ஆயிரம்பேருடையம்மான் *
நலங்கொள்நான்மறைவாணர்கள்வாழ் திருமோகூர் *
நலங்கழலவனடிநிழல் தடமன்றியாமே. (உ)

அன்றியாமொருபுகலிடம்இலம என்றென்றலற்றி *
நின்றுநான்முகன் அரனொடு தேவர்கள்நாட *
வென்றுஇம்மூவுலகளித்து உழல்வான்திருமோகூர் *
நன்றுநாம்இனிநணுகுதும் நமதிடர்கெடவே. (ங)

இடர்கெடஎம்மைப்போந்தளியாய் என்றென்றேத்தி *
சுடர்கொள்சோதியைத் தேவரும்முனிவரும்தொடர *
படர்கொள்பாம்பணைப் பள்ளிகொள்வான்திருமோகூர் *
இடர்கெடஅடிபரவுதும் தொண்டீர்! வம்மினே. (ச)

தொண்டீர்! வம்மின் நம்சுடரொளிஒருதனிமுதல்வன் *
அண்டமூவுலகளந்தவன் அணிதிருமோகூர் *
எண்திசையும்ஈன்கரும்பொடு பெருஞ்செந்நெல்விளைய *
கொண்டகோயிலைவலஞ்செய்து இங்குஆடுதும்கூத்தே. (ரு)

கூத்தன்கோவலன் குதற்றுவல்லசுரர்கள்கூற்றம் *
ஏத்தும்நங்கட்கும் அமரர்க்கும்முனிவர்க்கும்இன்பன் *
வாய்த்ததண்பணைவளவயல்சூழ் திருமோகூர்
ஆத்தன் * தாமரையடியன்றி மற்றிலமரணே. (௬)

மற்றிலம்அரண் வான்பெரும்பாழ்தனிமுதலா *
சுற்றும்நீர்படைத்து அதன்வழிததொல்முனிமுதலா *
முற்றும்தேவரோடு உலகுசெய்வான திருமோகூர் *
சுற்றிநாம்வலஞ்செய்ய நமதுயர்கெடும்கடிதே. (௭)

துயர்கெடும்கடிதடைந்துவந்து அடியவர்! தொழுமின் *
உயர்கொள்சோலை ஒண்தடமணியொளிதிருமோகூர் *
பெயர்களாயிரமுடைய வல்லரக்கர்புக்கழுந்த *
தயரதன்பெற்ற மரதகமணித்தடத்தினையே. (௮)

மணித்தடத்தடிமலர்க்கண்கள பவளச்செவ்வாய் *
அணிக்கொள்நால்தடந்தோள்தெய்வம அசுரரைஎன்றும் *
துணிக்கும்வல்லரட்டன் உறைபொழில்திருமோகூர் *
நணித்துநம்முடைநல்லரண் நாமஅடைந்தனமே. (௯)

நாமடைந்தநல்லரண் நமக்கென்றுநல்லமரர் *
தீமைசெய்யும்வல்லசுரரை அஞ்சிச்சென்றடைந்தால் *
காமரூபங்கொண்டு எழுந்தளிப்பான திருமோகூர் *
நாமமேநவின்றெண்ணுமின ஏத்துமின்நமர்காள்! (௧௦)

ஏத்துமின † நமர்காள! என்றுதான் குடமாடு
கூத்தனை * குருகூர்ச்சடகோபன ‡ குற்றேவல்கள *
வாய்த்த ஆயிரத்துள்இவை வண்திருமோகூர்க்கு *
ஈத்தபத்திவைஏத்தவல்லார்க்கு இடர்கெடுமே. (௧௧)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

தாளடைந்தோர்தங்கட்குத் தானேவழித்துணையாம் *
காளமேகத்தைக் கதியாக்கி *—மீளுதலாம்
ஏதமிலாவிண்ணுலகில் ஏகவெண்ணும்மாறனென *
கேதமுள்ளதெல்லாம் கெடும். (௯௧)

சீயர் திருவடிகளே சரணம்.

---

† 'எமர்காள்' என்றும பாடம். ‡ 'குற்றேவல' எனபதும் பாடம.

# உ- ஆந் திருவாய்மொழி—கெடுமிடர்.

[திருவனந்தபுரத்தைச்சேர்ந்தால் பரமபதத்திற்போலக் கைங்கர்யம் செய்யலாமென்று பரோபதேசஞ் செயதல்.]

கலிவிருத்தம்

பண் - இந்தளம் தாளம் - ஏழ்மாத்து. கமாஸ்ராகம் - ரூபகதாளம்

கெடும்இடராயவெல்லாம் கேசவாவென்ன * நாளும்
கொடுவினைசெய்யும் கூற்றின் தமர்களும்குறுககில்லார் *
விடமுடையரவில் பள்ளிவிரும்பினான்சுரும்பலற்றும *
தடமுடைவயல் அனந்தபுரநகர்புகுதும்இன்றே. (க)

இன்றுபோய்ப்புகுதிராகில் எழுமையுமேதம்சாரா *
குன்றுநேர்மாடமாடே குருந்துசேர்செருந்திபுன்னை *
மன்றலர்பொழில் அனந்தபுரநகர்மாயன்நாமம் *
ஒன்றும் † ஓராயிரமாம் உளளுவார்ககுஉம்பரூரே. (உ)

ஊருமபுட்கொடியுமஃதே உலகெல்லாமஉண்டுமிழ்ந்தான் *
சேருமதண்ணனந்தபுரம் சிக்கெனப்புகுதிராகில் *
தீரும்நோய்வினைகளெல்லாம் திண்ணமநாம்அறியச்சொன்னோம் *
பேருமோராயிரத்துள் ஒன்றுநீர்பேசுமினே. (ங)

பேசுமின்கூசமின்றிப் பெரியநீர்வேலைசூழ்ந்து *
வாசமேகமழுமசோலை வயலணியனந்தபுரம் *
நேசஞ்செய்துஉறைகின்றானை நெறிமையால்மலர்கள்தூவி *
பூசனைசெய்கின்றார்கள் புண்ணியம்செய்தவாறே! (ச)

புண்ணியம்செய்து நல்லபுனலொடுமலர்கள்தூவி *
எண்ணுமின்எந்தைநாமம் இப்பிறப்பறுக்குமஅப்பால *
திண்ணம்நாம்அறியச்சொன்னோம செறிபொழிலனந்தபுரத்து *
அண்ணலார்கமலபாதம் அணுகுவார்அமரராவார். (ரு)

அமரராய்த்திரிகின்றார்கட்கு ஆதிசேரனந்தபுரத்து *
அமரர்கோனர்ச்சிக்கின்று அங்ககப்பணிசெய்வர்விண்ணோர் *
நமர்களோ! சொல்லக்கேண்மின் நாமுமபோய்நணுகவேண்டுமே *
குமரனார்தாதைதுன்பம்துடைத்த கோவிந்தனாரே. (சு)

துடைத்தகோவிந்தனாரே உலகுயிர்தேவுமமற்றும் *
படைத்தஎம்பரமமூர்த்தி பாம்பணைப்பள்ளிகொண்டான் *
மடைத்தலைவாளைபாயும் வயலணியனந்தபுரம் *
கடைத்தலைசீய்க்கப்பெற்றால் கடுவினைகளையலாமே (எ)

† 'ஓராயிரமா' என்பதும் பாடம்.

கடுவினைகளையலாகும் காமனைப்பயந்தகாளை *
இடவகைகொண்டதென்பர் எழிலணியனந்தபுரம *
படமுடையரவில் பள்ளிபயின்றவன்பாதம்காண *
நடமினோநமர்களுள்ளீர் ! நாம்உமக்கறியச்சொன்னோம். (அ)

நாம்உமக்குஅறியச்சொன்ன நாள்களும்நணியவான *
சேமம்நன்குடைத்துக்கண்டீர் செறிபொழிலனந்தபுரம *
† தூமநல்விரைமலர்கள் துவளறஆய்ந்துகொண்டு *
வாமனனடிக்கென்றேத்த மாய்ந்தறும்வினைகள்தாமே. (௯)

மாய்ந்தறும்வினைகள்தாமே மாதவா ! என்ன * நாளும
ஏய்ந்தபொன்மதிள் அனந்தபுரநகரெந்தைக்கென்று *
சாந்தொடுவிளக்கம்தூபம் தாமரைமலர்கள்நல்ல *
ஆய்ந்துகொண்டேத்தவல்லார் அந்தமிலபுகழினாரே. (கO)

அந்தமில்புகழ் அனந்தபுரநகராதிதன்னை *
கொந்தலர்பொழில் குருகூர்மாறன்சொல்லாயிரத்துள் *
ஐந்தினோடைந்தும்வல்லார் அணைவர்போய்அமருலகில் *
பைந்தொடி மடந்தையர்தம் வேய்மருதோளிணையே. (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்

கெடுமிடராவைகுந்தத்தைக் கிட்டினாற்போல *
தடமுடைஅனந்தபுரந்தன்னில் படவரவில்
கண்துயிலமாற்குஆட்செய்யக் காதலித்தான்மாறன் * உயர்
விண்தனிலுள்ளோர் வியப்பவே (கூஉ)

ஜீயர் திருவடிகளே சரணம்

---

## ௩ - ஆந் திருவாய்மொழி—வேய்மருதோள்.

[தலைவி தலைவனது பிரிவுக்கு இரங்கிய பாசுரத்தாலே, 'இன்னும் என்னை இந்தப் பூமியில்தானே வைத்தால் என்செய்வது ?' என்ற சங்கையை, ஆழ்வார் பேசுதல்.]

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

பண் - பஞ்சமம் தாளம் - ஜம்பை... ராகம் காம்போஜிராகம் - ஆதிதாளம்.

வேய்மருதோளிணைமெலியுமாலோ !
மெலிவும்என்தனிமையுமயாதுமநோக்கா *
காமருகுயில்களும்கூவுமாலோ !
கணமயிலவைகலந்தாலுமாலோ !

† 'தூபநல்விரைமலர்கள்' என்றும் கூறுவர்.

ஆமருவினநிரைமேய்க்கநீபோக்கு
    ஒருபகல்ஆயிரமூழியாலோ ! *
தாமரைக்கண்கள்கொண்டோர்தியாலோ !
    தகவிலைதகவிலையேநீகண்ணா ! (க)

தகவிலைதகவிலையேநீகண்ணா !
    தடமுலைபுணர்தொறும்புணர்ச்சிக்கரா ! *
சுகவெள்ளம்விசும்பிறந்துஅறிவைமூழ்க்கச்
    சூழ்ந்து அதுகனவெனநீங்கியாங்கே *
அகவுயிரகமகந்தோறுமுள்புக்கு
    ஆவியின்பரமல்லவேட்கைஅந்தோ ! *
மிகமிகஇனிஉன்னைப்பிரிவையாமால
    வீவநின்பசுநிரைமேய்க்கப்போக்கே. (உ)

வீவநின்பசுநிரைமேய்க்கப்போக்கு
    வெவ்வுயிர்கொண்டெனதாவிவேமால் *
யாவரும்துணையில்லையானஇருந்து
    உன்னொடுசெனமேனியையாட்டமகாணேன *
போவதன்றுஒருபகல்நீயகன்றால
    பொருகயற்கண்ணிணைநீரும்நில்லா *
சாவது இவ்வாய்க்குலத்தாய்ச்சியோமாய்ப பிறந்த
    இத்தொழுதகையோமதனிமைதானே. (ங)

தொழுதகையோம்தனிமையும்துணைபிரிந்தா
    ஆயரமும் நினைகிலை கோவிந்தா ! * நின்
தொழுத்தனிற்பசுக்களையேவிரும்பித
    துறந்துஎமமைவிட்டுஅவைமேய்க்கப்போதி *
பழுத்தநல்லமுதின் இன்சாற்றுவெள்ளம்
    பாவியேன்மனமகந்தோறுமுள்புக்கு
அழுதத * நின்செங்கனிவாயின்கள்வபபணிமொழி
    நினைதொறும் ஆவிவேமால். (ச)

பணிமொழிநினைதொறும் ஆவிவேமால்
    பகல்நிரைமேய்க்கியபோயகண்ணா ! *
பிணியவிழ்மல்லிகைவாடைதூவப்
    பெருமதமாலையும்வந்தின்றாலோ ! *

மணிமிகுமார்பினின்முல்லைப்போது
        என்வனமுலைகமழ்வித்துஉனவாயமுதம்தந்து *
அணிமிகுதாமரைக்கையைஅந்தோ !
        அடிச்சியோம்தலைமிசைநீஅணியாய். (ரு)

அடிச்சியோம்தலைமிசைநீஅணியாய்
        ஆழியங்கண்ணா ! உன்கோலப்பாதம் *
பிடித்ததுநடுஉனக்குஅரிவையரும்பலா
        அதுநிற்க எமபெண்மையாற்றோம் *
வடித்தடங்கண்ணிணைநீருமில்லா
        மனமுமநில்லா , எமக்குஅதுதன்னாலே *
வெடிப்புநின்பசுநிரைமேய்க்கப்போக்கு
        வேம்எமதுயிர்அழலமெழுகிலுக்கே. (சு)

வேமஎமதுயிர் அழல்மெழுகிலுக்கு
        வெளவளைமேகலைகழன்றுவீழ *
தூமலாக்கண்ணிணைமுத்தமசோரத
        துணைமுலைபயந்துஎனதோளகளவாட *
மாமணிவண்ணா ! உனசெஙகமலவண்ண
        மென்மலரடிநோவநீபோய் *
ஆமகிழ்ந்துகந்தவைமேய்ககின்றுஉன்னோடு
        அசுரர்களதலைபபெய்யில்எவனகொலஆஙகே ? (எ)

அசுரர்களதலைபபெய்யில்எவனகொல ? ஆஙகென்று
        ஆழுமஎனனருயிர் , ஆன்பின்போகேல் *
கசிகையும்வேட்கையுமஉளகலந்து
        கலவியும்நலியுமஎனகைகழியேல் *
வசிசெயுன்தாமரைக்கண்ணும்வாயும
        கைகளுமபீதகவுடையும்காட்டி *
ஒசிசெய்நுண்ணிடையிளவாய்ச்சியர்
        நீயுகக்கும்நல்லவரொடும்உழிதராயே. (அ)

உகக்குநல்லவரொடுமஉழிதந்து
        உன்தன்திருவுள்ளமஇடாகெடுந்தோறும் * நாங்கள்
வியக்கஇன்புறுதுமஎம்பெண்மையாற்றோம்
        எம்பெருமான் ! பசுமேய்க்கப்போகேல் *

மிகப்பலஅசுரர்கள்வேண்டுருவங்கொண்டு
நின்றுஉழிதருவர்கஞ்சனேவ *
அகப்படில்அவரொடும்நின்னொடுஆங்கே
அவத்தங்கள்விளையுமஎன்சொற்கொளஅந்தோ ! (கூ)

அவத்தங்கள்விளையுமஎன்சொற்கொளந்தோ !
அசுரர்களவன்கையர்கஞ்சனேவ *
தவத்தவர்மறுகநின்றுஉழிதருவர்
தனிமையும்பெரிதுஉனக்குஇராமனையும் *
உவர்த்தலை, உடன்திரிகிலையுமஎன்றென்று
ஊடுறஎன்னுடை ஆவிவேமால் *
திவத்திலும்பசுநிரைமேய்ப்புஉவத்தி
செங்கனிவாயெங்களாயர்தேவே ! (கo)

செங்கனிவாயெங்களாயர்தேவு
அத்திருவடிதிருவடிமேல் * பொருநல்
சங்கணிதுறைவன்வண்தென்குருகூர்
வண்சடகோபன்சொல்லாயிரத்துள் *
மங்கையராய்ச்சியாஆய்ந்தமாலை
அவனொடும்பிரிவதற்குஇரங்கி * தையல்
அங்கவன்பசுநிரைமேய்ப்பொழிப்பான்
உரைத்தன இவையும்பத்து அவற்றின்சார்வே. (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்

---

வேய்மருதோளிந்திரைகோன் மேவுகின்றதேசத்தை *
தான்மருவாத்தன்மையினால் * தன்னைஇனனம்—பூமியிலே
வைக்குமெனச்சங்கித்து மால்தெளிவிக்கத்தெளிந்த *
தக்கபுகழ்மாறன எங்கள் சார்வு. (கூகூ)

சீயர் திருவடிகளே சரணம்.

---

## ச - ஆந் திருவாய்மொழி—சார்வே.

---

[ஆழ்வார் தாம் முதலில் அநுஸந்தித்த பந்தி பலித்தமையை அருளிச்செயதல்.]

கலிவிருத்தம்

பண் - கொல்லி தாளம் - நடையொத்து. கல்யாணிராகம் - ஆதிதாளம்.

சார்வேதவநெறிக்குத் தாமோதரன்தாள்கள் *
கார்மேகவண்ணன் கமலநயனத்தன் *
நீர்வானம்மண்எரிகாலாய் நின்றநேமியான் *
பேர்வானவர்கள்பிதற்றும் பெருமையனே . (க)

பெருமையனைவானத்திமையோர்க்கும் காண்டற்
கருமையனை * ஆகத்தணையாதார்க்கு * என்றும்
திருமெய்யுறைகின்ற செங்கண்மால் * நாளும்
இருமைவினைகடிந்து இங்குஎன்னையாள்கின்றானே. (உ)

ஆள்கின்றான் ஆழியான் ஆரால்குறையுடையம் ? *
மீள்கின்றதில்லைப் பிறவித்துயர்கடிந்தோம் *
வாள்கெண்டையொண்கண் மடப்பின்னைதன்கேள்வன் *
தாள்கண்டுகொண்டு என்தலைமேல்புனைந்தேனே. (ங)

தலைமேல்புனைந்தேன் சரணங்கள் * ஆலின்
இலைமேல்துயின்றான் இமையோர்வணங்க *
மலைமேல்தான்நின்று என்மனத்துள்இருந்தானை *
நிலைபேர்க்கலாகாமை நிச்சித்திருந்தேனே. (ச)

நிச்சித்திருந்தேன் என்நெஞ்சம்கழியாமை *
கைச்சக்கரத்தண்ணல் கள்வம்பெரிதுடையன் *
மெச்சப்படான்பிறர்க்கு மெய்போலும்பொய்வல்லன் *
நச்சப்படும்நமக்கு நாகத்தணையானே. (ரு)

நாகத்தணையானை நாள்தோறும்ஞானத்தால் *
ஆகத்தணைப்பார்க்கு அருள்செய்யும்அம்மானை *
மாகத்திளமதியம் சேரும்சடையானை *
பாகத்துவைத்தான்தன் பாதம்பணிந்தேனே. (சு)

பணிநெஞ்சே ! நாளும் பரமபரமபரனை *
† பிணிஒன்றுமசாரா பிறவிகெடுத்தாளும *
மணிநின்றசோதி மதுசூதன்என்னம்மான் *
அணிநின்றசெம்பொன் அடலாழியானே. (எ)

ஆழியான் ஆழியமரர்க்கும்அப்பாலான் *
ஊழியான்ஊழிபடைத்தான் நிரைமேய்த்தான் *
பாழியந்தோளால் வரையெடுத்தான்பாதங்கள் *
வாழிஎன்நெஞ்சே ! மறவாதுவாழ்கண்டாய். (அ)

கண்டேன்கமலமலர்ப்பாதம் காண்டலுமே *
விண்டேயொழிந்த வினையாயினவெல்லாம் *
தொண்டேசெய்து என்றும்தொழுதுவழியொழுக *
பண்டே பரமன்பணித்த பணிவகையே. (கூ)

† 'பிணியென்றும' என்றும் பாடம்.

வகையால்மனமொன்றி மாதவனை * நாளும்
புகையால்விளக்கால் புதுமலரால்நீரால் *
திசைதோறுஅமரர்கள் சென்றுஇறைஞ்சநின்ற *
தகையான்சரணம் தமர்கட்குஓர்பற்றே. (க0)

🙏 பற்றென்றுபற்றிப் பரமபரம்பரனை *
மல்திண்தோள்மாலை வழுதிவளநாடன் *
சொல்தொடையந்தாதி ஓராயிரத்துள்இப்பத்தும் *
கற்றார்க்குஓர்பற்றாகும் கண்ணன்கழலிணையே. (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

சார்வாகவேஅடியில் தானுரைத்தபத்திதான் *
சீரார்பலத்துடனே சேர்ந்ததனை *—சோராமல்
கண்டுரைத்தமாறன் கழலிணையேநாள்தோறும் *
கண்டுகக்கும் என்னுடையகண். (அச)

சீயர் திருவடிகளே சரணம்.

---

## ரு - ஆந் திருவாய்மொழி—கண்ணன்கழலிணை.

---

[ஆழ்வார் எம்பெருமானிடத்துப்பக்தியுடையார் செய்யவேண்டிய செயல்களையெல்லாம் சுருங்கச்சொல்லுதல்.]

வஞ்சித்துறை

பண் - நாட்டம். தாளம் - இடையொத்து. வஸந்தராகம் - ஆதிதாளம்.

🙏 கண்ணன்கழலிணை *
நண்ணும்மனமுடையீர்! *
எண்ணும்திருநாமம *
திண்ணம்நாரணமே. (க)

நாரணன்எம்மான் *
பாரணங்காளன் *
வாரணம்தொலைத்த *
காரணன்தானே. (உ)

தானேஉலகெல்லாம் *
தானேபடைத்திடந்து *
தானேஉண்டுமிழ்ந்து *
தானேயாள்வானே. (ங)

ஆள்வான் ஆழிநீர் *
கோள்வாயரவணையான் *
தாள்வாய்மலரிட்டு *
நாள்வாய்நாடீர். (ச)

நாடீர்நாள்தோறும் *
வாடாமலர்கொண்டு *
பாடீர்அவன்நாமம் *
வீடேபெறலாமே. (ரு)

🙏 மேயான்வேங்கடம் *
காயாமலர்வண்ணன் *
பேயார்முலையுண்ட *
வாயான்மாதவனே. (சா

மாதவனென்றென்று *
ஓதவல்லீரேல் *
தீதொன்றும் அடையா *
ஏதம்சாராவே. (௭)
சாராவேதங்கள் *
நீரார்முகில்வண்ணன் *
பேர் ஆர் ஓதுவார் *
ஆரார் அமரரே. (௮)
அமரர்க்கு அரியானை *
தமர்கட்கு எளியானை *
அமரத்தொழுவார்கட்கு *
அமராவினைகளே. (௯)
வினைவல்லிருளென்னும் *
முனைகள்வெருவிப்போம் *
சுனைநன்மலரிட்டு *
நினைமின்நெடியானை. (௧௦)
நெடியானருள்சூடும் *
படியான்சடகோபன் *
நொடியாயிரத்து இப்பத்து *
அடியார்க்கு அருள்பேறே. (௧௧)

ஆழ்வார் திருவடிகளே சரணம்

---

கண்ணனடியிணையில் காதலுறுவார்செயலை *
திண்ணமுறவே சுருங்கச்செப்பியே *-- மண்ணவர்க்குத்
தானுபதேசிக்கை தலைக்கட்டினான்மாறன் *
ஆனபுகழ்சேர் தன்னருள. (௯௫)

சீயர் திருவடிகளே சரணம்.

---

## ௬ - ஆந் திருவாய்மொழி—அருள்பெறுவார்.

---

[ஆழ்வார் தமக்குப்பேறளிக்குமாறு ஸமயம்பார்த்திருந்த எம்பெருமானது பரமகிருபையைப்பற்றித் தமதுநெஞ்சுடன் பாராட்டிக் கூறுதல்.]

கலிவிருத்தம்.

பண் - இந்தளம். தாளம் - நடையொத்து. நாதநாமக்ரியை ராகம்- ரூபகதாளம்

அருள்பெறுவார்அடியார்தம் அடியனேற்கு * ஆழியான்
அருள்தருவான் அமைகின்றான் அதுநமதுவிதிவகையே *
இருள்தருமாஞாலத்துள் இனிப்பிறவியான்வேண்டேன் *
மருளொழிநீமடநெஞ்சே ! வாட்டாற்றானடிவணங்கே. (௧)

வாட்டாற்றானடிவணங்கி மாஞாலப்பிறப்பறுப்பான *
கேட்டாயேமடநெஞ்சே ! கேசவனெம்பெருமானை *
பாட்டாயபலபாடிப் பழவினைகள்பற்றறுத்து *
நாட்டாரோடுஇயல்வொழிந்து நாரணனைநண்ணினமே. (௨)

நண்ணினம்நாராயணனை நாமங்கள்பலசொல்லி *
மண்ணுலகில்வளம்மிக்க வாட்டாற்றான்வந்துஇன்று *
விண்ணுலகம்தருவானாய் விரைகின்றான்விதிவகையே *
எண்ணினவாறாகா இக்கருமங்கள்என்னெஞ்சே ! (௩)

என்னெஞ்சத்துள்ளிருந்து இங்குஇருந்தமிழ்நூலிவைமொழிந்து
வன்னெஞ்சத்திரணியனை மார்விடந்தவாட்டாற்றான் *
† மன்னஞ்சப்பாரதத்துப் பாண்டவர்க்காப்படைதொட்டான *
நல்நெஞ்சே ! நம்பெருமான் நமக்குஅருள்தான்செய்வானே. (௪)

வானேறவழிதந்த வாட்டாற்றான்பணிவகையே *
நானேறப்பெறுகின்றேன் நரகத்தைநகுநெஞ்சே ! *
தேனேறுமலர்த்துளவம் திகழ்பாதன் * செழும்பறவை
தானேறித் ‡ திரிவானதாளிணை என்தலைமேலே. (௫)

தலைமேலதாளிணைகள் தாமரைக்கண்என்னம்மான் *
நிலைபோனென்னெஞ்சத்து எப்பொழுதும்எம்பெருமான் *
மலைமாடத்தரவணைமேல வாட்டாற்றான் * மதம்மிக்க
கொலையானைமருப்பொசித்தான் குரைகழல்கள்குறுகினமே. (௬)

குரைகழல்கள்குறுகினம நம்கோவிந்தன்குடிகொண்டான் *
திரைகுழுவுகடல்புடைசூழ் தென்னாட்டுத்திலதமன்ன *
வரைகுழுவுமணிமாட வாட்டாற்றான்மலரடிமேல் *
விரைகுழுவுநறுந்துளவம் மெய்ந்நின்றுகமழுமே. (௭)

மெய்ந்நின்றுகமழ்துளவ விரையேறுதிருமுடியன் *
கைந்நின்றசக்கரத்தன் கருதுமிடம்பொருதுபுனல் *
மைந்நின்றவரைபோலும் திருவுருவவாட்டாற்றற்கு *
எந்நன்றிசெய்தேனா என்னெஞ்சில்திகழ்வதுவே ? (௮)

திகழ்கின்றதிருமார்பில் திருமங்கைதன்னோடும் *
திகழ்கின்றதிருமாலார் சேர்விடம்தண்வாட்டாறு *
¶ புகழ்கின்றபுள்ளூர்தி போராக்கர்குலம்கெடுத்தான் *
இகழ்வின்றிஎன்னெஞ்சத்து எப்பொழுதும்பிரியானே. (௯)

பிரியாதுஆட்செய்யென்று பிறப்பறுத்துஆளறக்கொண்டான் *
அரியாகிஇரணியனை ஆகங்கீண்டான்அன்று *
பெரியார்க்குஆட்பட்டக்கால் பெறாதபயன்பெறுமாறு *
வரிவாள்வாயரவணைமேல் வாட்டாற்றான்காட்டினனே. (௧௦)

† 'மன்னெஞ்ச' என்றும் பாடம்

‡ திரிவானத்தாளிணை ' என்பது உரையின்பாடம்: ' திரிவான்தன்தாளிணை ' எனச் சிலர் பாடமோதுவர் ¶ ' புகழ்நின்ற ' என்றும் பாடம்.

꧁ காட்டித்தன்கனைகழல்கள் கடுநரகம்புகலொழித்த *
வாட்டாற்றெம்பெருமானை வளங்குருகூர்ச்சடகோபன் *
பாட்டாயதமிழ்மாலை ஆயிரத்துள்இப்பத்தும்
கேட்டு * ஆரார்வானவர்கள் செவிக்கினியசெஞ்சொல்லே. (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

அருளால்அடியிலெடுத்த மாலன்பால் *
இருளார்ந்ததம்முடம்பை இச்சித்து *—இருவிசும்பில்
இத்துடன்கொண்டேக இவரிசைவுபார்த்திருந்த *
சுத்திசொல்லும் மாறன்செஞ்சொல். (கூகூ)

சீயர் திருவடிகளே சரணம்.

---

## எ - ஆந் திருவாய்மொழி— செஞ்சொற்கவிகாள்.

---

[தம்முடம்பில் எம்பெருமான் மிகுதியாக வைத்துள்ள வாஞ்சையை ஆழ்வார் கால்கட்டி விடுவித்துக்கொண்டு அவனது குணத்தைப் பாராட்டிப் பேசியருளுதல்.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

பண்-தக்கேசி. தாளம்-ஏழொத்து. தன்யாசிராகம்- ஆதிதாளம்

꧁ செஞ்சொற்கவிகாள் ! உயிர்காத்தாட்செய்ம்மின் திருமாலிருஞ்சோலை*
வஞ்சக்கள்வன்மாமாயன் மாயக்கவியாய்வந்து * என்
நெஞ்சுமஉயிரும்உள்கலந்து நின்றார்அறியாவண்ணம் *என்
நெஞ்சுமுயிருமவையுண்டு தானேயாகிநிறைந்தானே. (க)

தானேயாகிநிறைந்து எல்லாவுலகும்உயிரும்தானேயாய் *
தானேயானென்பானாகித் தன்னைத்தானேதுதித்து * எனக்குத்
தேனேபாலேகன்னலேயமுதே திருமாலிருஞ்சோலை *
கோனேயாகிநின்றொழிந்தான் என்னைமுற்றும்உயிருண்டே. (உ)

என்னைமுற்றுமுயிருண்டு என்மாயவாக்கையிதனுள்புக்கு *
என்னைமுற்றும்தானேயாய் நின்றமாயஅம்மான்சேர் *
தென்னன்திருமாலிருஞ்சோலைத் திசைகைகூப்பிச்சேர்ந்தயான் *
இன்னும்போவேனேகொலோ ? என்கொல்அம்மான்திருவருளே? (ங)

என்கொல்அம்மான்திருவருள்கள் ? உலகும்உயிரும்தானேயாய் *
நன்கென்னுடலம்கைவிடான் ஞாலத்தூடேநடந்துழக்கி *
தென்கொள்திசைக்குத்திலதமாய்நின்ற திருமாலிருஞ்சோலை *
நங்கள்குன்றம்கைவிடான் நண்ணாஅசுரர் † நலியவே. (ச)

நண்ணாஅசுரர் ‡ நலிவெய்த நல்லஅமரர்பொலிவெய்த *
எண்ணாதனகளெண்ணும் நன்முனிவர்இன்பம்தலைசிறப்ப *
பண்ணார்பாடலின்கவிகள் யானாய்த்தன்னைத்தான்பாடி *
தென்னாவென்னும்என்னம்மான் திருமாலிருஞ்சோலையானே. (ரு)

திருமாலிருஞ்சோலையானேயாகிச் செழுமூவுலகும் * தன்
ஒருமாவயிற்றினுள்ளேவைத்து ஊழியூழிதலையளிக்கும் *
திருமால்என்னையாளுமால் சிவனும்பிரமனும்காணாது *
அருமாலெய்தி அடிபரவ அருளையீந்தஅம்மானே. (சு)

அருளையீஎன்னம்மானே ! என்னும் முக்கணம்மானும் *
தெருள்கொள்பிரமனம்மானும் தேவர்கோனும்தேவரும் *
இருள்கள்கடியும்முனிவரும் ஏத்தும்அம்மான்திருமலை *
மருள்கள்கடியும்மணிமலை திருமாலிருஞ்சோலைமலையே. (எ)

திருமாலிருஞ்சோலைமலையே திருப்பாற்கடலேஎன்தலையே *
திருமால்வைகுந்தமே தண்திருவேங்கடமேஎனதுடலே *
அருமாமாயத்தெனதுயிரே மனமேவாக்கேகருமமே *
ஒருமாநொடியும்பிரியான் என்ஊழிமுதல்வன்ஒருவனே. (அ)

ஊழிமுதல்வன்ஒருவனேயென்னும் ஒருவன்உலகெல்லாம் *
ஊழிதோறும்தன்னுள்ளேபடைத்துக் காத்துக்கெடுத்துழலும் *
ஆழிவண்ணன்என்னம்மான் அந்தண்திருமாலிருஞ்சோலை *
வாழிமனமே ! கைவிடேல் உடலும்உயிரும்மங்கவொட்டே. (கூ)

மங்கவொட்டுஉன்மாமாயை திருமாலிருஞ்சோலைமேய *
நங்களகோனே ! யானேநீயாகி என்னையளித்தானே ! *
பொங்கைம்புலனும்பொறியைந்தும் கருமேந்திரியம்ஐம்பூதம் *
இங்குஇவ்வுயிரேய்பிரகிருதி மானாங்காரமனங்களே. (கO)

மானாங்காரமனம்கெட ஐவர்வன்கையர்மங்க*
தானாங்காரமாய்ப்புக்குத் தானேதானேயானானை *
தேனாங்காரப்பொழில்குருகூர்ச் சடகோபன்சொல்லாயிரத்துள் *
மானாங்காரத்திவைபத்தும் திருமாலிருஞ்சோலைமலைக்கே. (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

† 'நலியவே,' ‡ 'நலிவெய்த' என்று வழங்குவர்.

செஞ்சொற்பரன் தனது சீராரும்மேனிதனில் *
வஞ்சித்துச்செய்கின்ற வாஞ்சைதனின் *—விஞ்சுதலைக்
கண்டவனைக்கால்கட்டிக் கைவிடுவித்துக்கொண்ட *
திண்திறல்மாறன்நம்திரு. (௯எ)

சீயர் திருவடிகளே சரணம்.

---

## அ - ஆந் திருவாய்மொழி—திருமாலிருஞ்சோலை.

---

[தம்மிடத்து எம்பெருமான் விசேஷமாக விருப்பஞ்செய்வதுகண்ட ஆழ்வார் முன்பு தம்மை அகல்வித்து இப்போது இப்படியிருத் தற்குக்காரணம் கூறமாட்டாது நிற்கும் அவனது திறத்தை விஸ்மிதமாய்ப் பேசுதல்.]

கலிவிருத்தம்.

பண் - இந்தளம் தாளம் - ஏழொத்து, மோஹநாகம் - ஆதிதாளம்.

ஓ திருமாலிருஞ்சோலைமலை என்றேன், என்ன *
திருமால்வந்து என்னெஞ்சுநிறையப்புகுந்தான் *
குருமாமணியுந்துபுனல் பொன்னித்தென்பால் *
திருமால்சென்றுசேர்விடம் தென்திருப்பேரே. (௧)

பேரேயுறைகின்றபிரான் இன்றுவந்து *
பேரேனென்று என்னெஞ்சுநிறையப்புகுந்தான் *
காரேழ்கடலேழ் மலையேழுலகுண்டும் *
ஆராவயிற்றானை அடங்கப்பிடித்தேனே. (௨)

பிடித்தேன்பிறவிகெடுத்தேன் பிணிசாரேன் *
மடித்தேன்மனைவாழ்க்கையுள் நிற்பதோர்மாயையை *
கொடிக்கோபுரமாடங்கள்சூழ் திருப்பேரான் *
அடிச்சேர்வது எனக்குஎளிதாயினவாறே. (௩)

எளிதாயினவாறென்று என்கண்கள்களிப்ப *
களிதாகியசிந்தையனாய்க் களிக்கின்றேன் *
கிளிதாவியசோலைகள்சூழ் திருப்பேரான் *
தெளிதாகிய சேண்விசும்புதருவானே. (௪)

வானேதருவான் எனக்காஎன்றொட்டி *
ஊனேய்குரம்பை யிதனுள்புகுந்து * இன்று
தானேதடுமாற்றவினைகள் தவிர்த்தான் *
தேனேய்பொழில் தென்திருப்பேர்நகரானே. (௫)

திருப்பேர்நகரான் திருமாலிருஞ்சோலை *
பொருப்பேயுறைகின்றபிரான் இன்றுவந்து *
இருப்பேனென்று என்னெஞ்சுநிறையப்புகுந்தான் *
விருப்பேபெற்று அமுதமுண்டுகளித்தேனே. (௬)

உண்டுகளித்தேற்கு உம்பரென்குறை? * மேலைத்
தொண்டுஉகளித்து அந்திதொழும்சொல்லுப்பெற்றேன் *
வண்டுகளிக்கும்பொழில்சூழ் திருப்பேரான் *
கண்டுகளிப்பக் கண்ணுள்நின்றுஅகலானே. (௭)

கண்ணுள்நின்றுஅகலான் கருத்தின்கண்பெரியன் *
எண்ணில்நுண்பொருள் ஏழிசையின்சுவைதானே *
வண்ணநன்மணிமாடங்கள்சூழ் திருப்பேரான் *
திண்ணம்என்மனத்துப் புகுந்தான்செறிந்துஇன்றே. (அ)

இன்றுஎன்னைப்பொருளாக்கித் தன்னைஎன்னுள்வைத்தான் *
அன்றுஎன்னைப்புறம்போகப்புணர்த்தது என்செய்வான்? *
குன்றென்னத்திகழ்மாடங்கள்சூழ் திருப்பேரான் *
ஒன்றுஎனக்கருள்செய்ய உணர்த்தலுற்றேனே. (௯)

உற்றேன்உகந்துபணிசெய்து உனபாதம்
பெற்றேன் * ஈதேஇன்னம்வேண்டுவது எந்தாய்! *
கற்றார்மறைவாணர்கள்வாழ் திருப்பேராற்கு *
அற்றாரடியார்தமக்கு அல்லல்நில்லாவே. (௧௦)

நில்லாஅல்லல் நீள்வயல்சூழ்திருப்பேர்மேல் *
நல்லார்பலர்வாழ் குருகூர்ச்சடகோபன் *
சொல்லார்தமிழ் ஆயிரத்துள்இவைபத்தும்
வல்லார் * தொண்டராள்வது சூழ்பொன்விசும்பே. (௧௧)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

திருமால்தம்பால் விருப்பம்செய்கின்றநேர்கண்டு *
அருமாயத்தன்றகல்விப்பானென்? *—பெருமால்நீ
இன்றுஎன்பால்செய்வானென்னென்ன இடருற்றுநின்றான் *
துன்னுபுகழ்மாறனைத்தான்சூழ்ந்து. (௯௮)

சீயர் திருவடிகளே சரணம்.

# † ௯ - ஆந் திருவாய்மொழி — சூழ்விசும்பு.

[பரஜ்ஞாநத்தைப்பெற்ற ஆழ்வார் திருநாட்டேக்குச் சென்று அடியாரோடு சேர்ந்தமையை விஷயீகரித்து அருளிச்செய்தல்.]

கலிவிருத்தம்

பண் - கொல்லி தாளம் - ஏழொத்து கல்யாணிராகம் அடதாளம்

ஓ சூழ்விசும்பணிமுகில் தூரியமுழக்கின *
ஆழ்கடலலைதிரை கையெடுத்தாடின *
ஏழ்பொழிலும் வளமேந்தியஎன்னப்பன் *
வாழ்புகழ்நாரணன்தமரைக் கண்டுகந்தே. (௧)

நாரணன்தமரைக்கண்டுகந்து நல்நீர்முகில் *
பூரணபொற்குடம் பூரித்ததுஉயர்விண்ணில் *
நீரணிகடல்கள் நின்றார்த்தன * நெடுவரைத்
தோரணம்நிரைத்து எங்கும்தொழுதனருலகே. (௨)

தொழுதனர்உலகர்கள் தூபநல்மலர்மழை
பொழிவனர் * பூமியன்றளந்தவன்தமர்முன்னே *
எழுமினென்று இருமருங்கிசைத்தனர்முனிவர்கள் *
வழியிதுவைகுந்தற்குஎன்று வந்துஎதிரே. (௩)

எதிரெதிர்இமையவர் இருப்பிடம்வகுத்தனர் *
கதிரவரவரவர் கைந்நிரைகாட்டினர் *
அதிர்குரல்முரசங்கள் அலைகடல்முழக்கொத்த *
மதுவிரிதுழாய்முடி மாதவன்தமர்க்கே. (௪)

மாதவன்தமரென்று வாசலில்வானவர் *
போதுமின்எமதிடம் புகுதுகவென்றலும் *
கீதங்கள்பாடினர் கின்னரர்கெருடர்கள் *
வேதநல்வாயவர் வேள்வியுள்மடுத்தே. (௫)

வேள்வியுள்மடுத்தலும் விரைகமழ்நறும்புகை *
காளங்கள்வலம்புரி கலந்துஎங்கும்இசைத்தனர் *
ஆண்மின்கள்வானகம் ஆழியான்தமர்என்று *
வாளொண்கண்மடந்தையர் வாழ்த்தினர்மகிழ்ந்தே. (௬)

† இது, சோயில்திருவாய்மொழி.

மடந்தையர்வாழ்த்தலும் மருதரும்வசுக்களும் *
தொடர்ந்தெங்கும் தோத்திரம்சொல்லினர் * தொடுகடல்
கிடந்தஎங்கேசவன் கிளரொளிமணிமுடி *
குடந்தைஎங்கோவலன் குடியடியார்க்கே. (எ)

குடியடியார்இவர் கோவிந்தன்தனக்கென்று *
முடியுடைவானவர் முறைமுறைஎதிர்கொள்ள *
கொடியணிநெடுமதிள் கோபுரம்குறுகினர் *
வடிவுடைமாதவன் வைகுந்தம்புகவே. (அ)

வைகுந்தம்புகுதலும் வாசலில்வானவர் *
வைகுந்தன்தமர்எமர் எமதிடம்புகுதென்று *
வைகுந்தத்துஅமரரும் முனிவரும்வியந்தனர் *
வைகுந்தம்புகுவது மண்ணவர்விதியே. (கூ)

விதிவகைபுகுந்தனரென்று நல்வேதியர் *
பதியினில்பாங்கினில் பாதங்கள்கழுவினர் *
நிதியும்நற்சுண்ணமும் நிறைகுடவிளக்கமும் *
மதிமுகமடந்தையர் ஏந்தினர்வந்தே. (க௦)

வந்தவர்எதிர்கொள்ள மாமணிமண்டபத்து *
அந்தமில்பேரின்பத்து அடியரோடுஇருந்தமை *
கொந்தலர்பொழில் குருகூர்ச்சடகோபன் * சொல்
சந்தங்களாயிரத்து இவைவல்லார்முனிவரே. (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்

---

சூழ்ந்துநின்றமால்விசும்பில் தொல்லைவழிகாட்ட *
ஆழ்ந்ததனைமுற்றும அனுபவித்து *—வாழ்ந்துஅங்கு
அடியருடனே இருந்தவாற்றைஉரைசெய்தான் *
முடிமகிழ்சேர்ஞானமுனி. (கூகூ)

சீயர் திருவடிகளே சரணம்

---

## † ௧௦ - ஆந் திருவாய்மொழி—முனியே.

[ஆழ்வார் பரமபக்தியால் நைந்து திருமாலைத் தாம் சேர்ந்தமையை அருளிச்செய்து ப்ரபந்தத்தைத் தலைக்கட்டுதல்.]

கலிநிலைத்துறை

பண் - பஞ்சமம். தாளம் - ஏழொத்து    கல்யாணிராகம் - அடதாளம்.

முனியே ! நான்முகனே ! முக்கண்ணப்பா ! * என்பொல்லாக்
கனிவாய்த் தாமரைக்கண் கருமாணிக்கமே ! என்கள்வா ! *
தனியேனாருயிரே ! என்தலைமிசையாய்வந்திட்டு *
இனிநான்போகலொட்டேன் ஒன்றும்மாயஞ்செய்யேல்என்னையே. (௧)

மாயஞ்செய்யேல்என்னை உன்திருமார்வத்துமாலைநங்கை *
வாசஞ்செய்பூங்குழலாள் திருவாணை நின்னாணை கண்டாய் *
நேசஞ்செய்துஉன்னோடுஎன்னை உயிர்வேறின்றிஒன்றாகவே *
கூசஞ்செய்யாதுகொண்டாய் கூவிக்கொள்ளாய்வந்தந்தோ ! (௨)

கூவிக்கொள்ளாய்வந்தந்தோ ! என்பொல்லாக்கருமாணிக்கமே ! *
ஆவிக்குஓர்பற்றுக்கொம்பு நின்னலால்அறிகின்றிலேன்நான் *
மேவித்தொழும்பிரமன்சிவன் இந்திரனாதிக்கெல்லாம் *
நாவிக்கமலமுதற்கிழங்கே ! உம்பரந்ததுவே (௩)

உம்பரந்தண்பாழேயோ ! அதனுள்மிசைநீயேயோ ! *
அம்பரநற்சோதி ! அதனுள்பிரமன்அரன்நீ *
உம்பரும்யாதவரும்படைத்த முனிவன்அவன்நீ *
எம்பரம்சாதிக்கலுற்று என்னைப்போரவிட்டிட்டாயே. (௪)

போரவிட்டிட்டென்னை நீபுறம்போக்கலுற்றால் * பின்னையான்
ஆரைக்கொண்டுஎத்தையந்தோ! எனதென்பதென் ? யானென்பதென் ?
தீரஇரும்புண்டநீரதுபோல என்னாருயிரை
ஆரப்பருக * எனக்கு ஆராவமுதானாயே (௫)

எனக்குஆராவமுதாய் எனதாவியைஇன்னுயிரை *
மனக்காராமைமன்னிஉண்டிட்டாய் இனியுண்டொழியாய் *
புனக்காயாநிறத்த புண்டரீகக்கண்செங்கனிவாய் *
உனக்கேற்குங்கோலமலர்ப்பாவைக்கன்பா ! என்னன்பேயோ ! (௬)

கோலமலர்ப்பாவைக்குஅன்பாகிய என்அன்பேயோ ! *
நீலவரைஇரண்டுபிறைகவ்வி நிமிர்ந்ததொப்ப *
கோலவராகமொன்றாய் நிலங்கோட்டிடைக்கொண்டஎந்தாய் ! *
நீலக்கடல்கடைந்தாய் ! உன்னைப்பெற்றுஇனிப்போக்குவனோ ? (௭)

† இது, கோயில்திருவாய்மொழி

பெற்றுஇனிப்போக்குவனே ? உன்னைஎன்தனிப்பேருயிரை *
உற்றஇருவினையாய் உயிராய்ப்பயனாயவையாய் *
முற்றஇம்மூவுலகும் பெருந்தூறாய்த் தூற்றில்புக்கு *
முற்றக்கரந்தொளித்தாய் ! என்முதல்தனிவித்தேயோ ! (அ)

முதல்தனிவித்தேயோ ! முழுமூவுலகாதிக்கெல்லாம் *
முதல்தனிஉன்னையுன்னை எனைநாள்வந்துகூடுவன்நான் ? *
முதல்தனிஅங்குமிங்கும் முழுமுற்றுறுவாழ்பாழாய் *
முதல்தனிசூழ்ந்தகன்றாழ்ந்துயர்ந்த முடிவிலீயோ ! (க)

சூழ்ந்தகன்றாழ்ந்துயர்ந்த முடிவில்பெரும்பாழேயோ! *
சூழ்ந்ததனில்பெரிய பரநன்மலர்ச்சோதீயோ ! *
சூழ்ந்ததனில்பெரிய சுடர்ஞானவின்பமேயோ ! *
சூழ்ந்தனில்பெரிய என்னவாவறச்சூழ்ந்தாயே. (கய)

அவாவறச்சூழ் அரியை அயனை அரனை அலற்றி *
அவாவற்றுவீடுபெற்ற குருகூர்ச்சடகோபன்சொன்ன *
அவாவிலந்தாதிகளால் இவையாயிரமும் * முடிந்த
அவாவிலந்தாதிஇப்பத்தறிந்தார் பிறந்தார்உயர்ந்தே. (கக)

---

முனிமாறன் முன்புஉரைசெய்முற்றின்பமநீங்கி *
தனியாகிநின்றுதளர்ந்து *—நனியாம்
பரமபத்தியால்நைந்து பங்கயத்தாள்கோனை *
ஒருமையுற்றுச்சேர்ந்தான்உயர்ந்து. (கய)

ஆழ்வார் திருவடிகளே சரணம், எம்பெருமானார் திருவடிகளே சரணம்,
ஜீயர் திருவடிகளே சரணம்.

## திருவாய்மொழி ஸம்பூர்ணம்.

ஆக, பாசுரம் - ககய௨

இனி, திருவாய்மொழியில் முதற்பத்தால் எம்பெருமானது பரத்வமும், இரண்டாம்பத்தால் காரணத்வமும், மூன்றாம்பத்தால் வ்யாபகத்வமும், நான்காம்பத்தால் நியந்த்ருத்வமும், ஐந்தாம்பத்தால் காருணிகத்வமும், ஆறாம்பத்தால் ஶரண்யத்வமும், ஏழாம்பத்தால் ஶக்தத்வமும், எட்டாம்பத்தால் ஸத்யகாமத்வமும், ஒன்பதாம்பத்தால் ஆபத்ஸகத்வமும், பத்தாம்பத்தால் ஆர்த்திஹரத்வமும் கூறப்படுகின்றன வென்றும் பெரியோர் அருளிச்செய்வர்.

---

# திருவாய்மொழிச் செய்யுளகராதி.

திருவாய்மொழிச் செய்யுளகராதி முற்றிற்று.

நோபில் அச்சுக்கூடம், திருவல்லிக்கேணி சென்னை.

# திருவரங்கத்தமுதனார் வைபவம்.

---

ஸ்ரீஸ்நேஹஸ்தஸமுத்பூதம் ஸ்ரீரங்காம்ருதமாஶ்ரயே ||
கவிம் ப்ரபந்நகாயத்ர்யாঃ கூரேஶபதஸம்ஶ்ரிதம் ||

*ஸ்ரீநேஹஸ்தஸமுத்பூதம் ஸ்ரீரங்காம்ருதமாஶ்ரயே-*
*கவிம்ப்ரபந்நகாயத்ராயாঃ கூரேஶபதஸம்ஶ்ரிதம்.*

இவ்வமுதனார், ஒரு பங்குனிமாஸத்தில் ஹஸ்த நக்ஷத்திரத்தில் வேயர் குடியில் திருவவதரித்து, திருவரங்கம்பெரியகோயிலில் இருந்ததுவே ஹேதுவாக 'பெரியகோயில்நம்பி' என்று பிரசித்தராய்வாழ்ந்திருந்தார. இவர் ஸகல சாஸ்திரங்களையும் அதிகரித்து மிக வல்லவராய், தமக்குக் குலக்ரமமாகக் கிடைத்த ஸந்நிதிபௌரோஹித்யத்தையும் புராண படனத்தையும் பெற்று மிகவும் ராஜஸராய்ச் செருக்குடன் வாழ்ந்துவரும்நாளில், லோகோத்தாரணார்த்தமாகத் திருவனந்தாழ்வானது திருவவதாரமாகத் திருவவதரித்த எம்பெருமானார் தமது நிர்ஹேதுககிருபாகடாக்ஷத்தாலே இவரைத் திருத்திப் பணிகொள்ளத் திருவுள்ளமாய்க் கூரத்தாழ்வானுக்கு நியமிக்க ஆழ்வானும் அவரை அநுவர்த்தித்து ஞானச்சுடர் கொளுத்தி எம்பெருமானார் திருவடிக் கீழ்ச் சேர்க்க, எம்பெருமானாரும் அவரைக் குளிரக் கடாக்ஷித்தருளி ஆழ்வானை ஆசரயிக்கும்படி நியமிக்க, அவரும் ஆழ்வானை ஆசரயித்துத் தத்வஹிதபுருஷார்த்தங்களை ஸந்தேஹவிபரீதமில்லாமல் தெளிந்து ஆத்மஆத்மீயங்களை அந்த ஆசார்யன் திருவடிகளிலே ஸமர்ப்பித்து ந்யஸ்தபாரராயிருந்தார்.

பின்பு, இவர், ஸகலசாஸ்த்ரஸங்க்ரஹமான திருமந்த்ரத்தின் ஸாரார்த்தமும் மயர்வறமதிநலம்அருளப்பெற்ற ஆழ்வார்கள் அருளிச்செய்த திவ்யப்ரபந்தங்களின் ஸாரார்த்தமும் நம்மாழ்வார் க்ருபாகடாக்ஷ பாத்ரபூதரான மதுரகவியாழ்வார் தமதுபேச்சுக்களாலும் அநுஷ்டானங்களாலும் ப்ரகாசிப்பித்ததும் நம்மாழ்வாரால் நாதமுனிகளுக்கு உபதேசிக்கப்பெற்றதும் அந்த நாதமுனிகள்முதல் ஓராண்வழியாய்வந்ததும் பரமரஹஸ்யமுமான சரமபாவ நிஷ்டையைத் தாம் நிரந்தரமாக அநுஸந்தித்துக்கொண்டிருக்கையாலே அது தமது உள்ளடங்காமையாலும், 'சேதநர்க்கு இவ்வர்த்த ஞானம் ஸுலபமாக நெஞ்சிற்படும்படியாகவேணும்' என்ற தம்முடைய பரமக்ருபையாலும், தமது ஆசார்யரது ப்ரீதிக்கு ஹேதுவாகத் தமக்கு பரமாசார்யரான ஸ்ரீ உடையவர் விஷயமாக ஒன்று இரண்டு பிரபந்தம் இட்டருளி அவற்றை எம்பெருமானார்ஸந்நிதியிற் கொண்டுபோய் வைக்க, எம்பெருமானாரும் அவற்றை அவிழ்த்து முழுவதும் திருக்கண் சாத்தியருளி அவை தமது திருவுள்ளத்துக்கு இசைந்திராமையாலே அவற்றைக் கிழித்துப்போகட்டு, அவரைப் பார்த்து 'உமக்கு ப்ரபந்தஞ் சொல்லவேணுமென்கிற நிர்ப்பந்தம் உண்டாகில், உமக்கு உத்தேச்யரான ஆழ்வானும் நமக்கு உத்தேச்யரான ஆழ்வார்

களும் உகந்தருளின நிலங்களும் முதலியோர்களுடைய ஸம்பந்தம்தோற்று மாறு ஒரு ப்ரபந்தம் செய்யும்' என்று நியமித்தருள, இவரும் 'அப்படியே செய்கிறேன்' என்று அந்த ஆஜ்ஞையைச சிரஸாவகித்து 'எம்பெருமானார் திருவடிகளிலே ப்ரேமமுடையவர்களுக்கு ஸாவிதரிபோலே இது நித்யம் அநுஸந்தாநவிஷயமாகவேணும்' என்று பாட்டுக்கள்தோறும் இராமாநுச னென்னுந் திருநாமத்தை யிட்டு நூற்றெட்டுப்பாட்டாக அருளிச்செய்து எம்பெருமானார் ஸந்நிதியிலே சேவிதது 'இத்தைத் திருசசெவிசாத்த வேணும்' என்று பிரார்த்தித்து அநுமதிபெற்றுக் கூரத்தாழ்வான் முதலா னோர் பேரோலக்கமாக இருக்கிற அங்குத்தானே இந்த ப்ரபந்தத்தை விண் ணப்பஞ்செய்ய, எம்பெருமானார் மற்றை முதலிகளோடும் திருச்செவிசாத் திச் சிரககம்பனஞ்[illegible]ய்து போரவுகந்தருளி, தம்திருவடிகளில் ஸம்பந்த முடையார்க்கெல்வ[illegible] அந்தப்பிரபந்தத்தை அன்றுதொடங்கி என்றும்நித்யா நுஸந்தேயமாம்படி[illegible] கற்பித்தருளிய தல்லாமல் அவரதுவாக்கு அமுத வாக்காயிருந்தமை[illegible]ல் அவர்க்கு 'அமுதன்' என்ற திருநாமத்தையும் ப்ர ஸாதித்தருளி [illegible] கடாக்ஷித்தருளினார். ஆகையால், அதுமுதல், பெரிய கோயில்நம்பிக்கு [illegible]வரங்கத்தமுதனார்' என்று திருநாமமும், இதற்கு 'ப்ர பந்நகாயத்ரீ' என்[illegible] திருநாமமும் உண்டாயின.

பிறகு நமது பூர்வாசார்யர்கள் விஷயகௌரவத்தால் இந்தப்பிரபந்தத் தை ஆழ்வார்களருளிசசெயல்களோடு ஸமமாகச் சேர்த்தருளினார்கள்.



எந்தாதைகூரேச ரிணையடியோன் வாழியே
 எழில்மூங்கிற்குடிவிளங்க இங்குவந்தோன் வாழியே
நந்தாம லெதிராசர்கலம்புகழ்வோன் வாழியே
 நமதுரங்கவிந்நிலையை நண்ணினான் வாழியே
பைந்தாமவரங்கர்பதம்பற்றினான் வாழியே
 பங்குனியிலஸ்தநாள் பாருதித்தோன் வாழியே
அந்தாதிநூற்றெட்டும் அருளினான் வாழியே
 அணியரங்கத்தமுதனா ரடியிணைகள் வாழியே.

திருவரங்கத்தமுதனார் அருளிச்செய்த்
ப்ரபந்நகாயத்ரி என்னும்

# இராமாநுச நூற்றந்தாதி.

---

## தனியன்கள்.

(வேதப்பிரான்பட்டர் அருளிச்செய்தவை.)

ஒருவிகற்பநேரிசைவெண்பா.

முன்னை வினையகல மூங்கிற்குடியமுதன் *
பொன்னங்கழற்கமலப்போதிரண்டும் *— என்னுடைய
சென்னிக்கணியாகச்சேர்த்தினேன் * தென்புலத்தார்க்கு
என்னுக்கடவுடையேன்யான் ?

கட்டளைக்கலித்துறை.

நயந்தருபேரின்பமெல்லாம † பழுதின்றி நண்ணினர்பால் *
சயந்தருகீர்த்தியிராமாநுசமுனிதாளிணைமேல்
உயர்ந்தகுணத்துத்திருவரங்கத்தமுது ஓங்கும்அன்பால்
இயம்பும் * கலித்துறையந்தாதியோதஇசைநெஞ்சமே!

‡ இனியென்குறைநமக்கு ? எம்பெருமானார் § திருநாமத்தால் *
முனிதந்தநூற்றெட்டுச்சாவித்திரியென்னுநுண்பொருளை *
கனிதந்தசெஞ்சொற்கலித்துறையந்தாதிபாடித்தந்தான் *
புனிதன் திருவரங்கத்தமுதாகியபுண்ணியனே.

(அபியுக்தர் அருளிச்செய்தது)

சொல்லின்தொகைகொண்டுஉனதடிப்போதுக்குத்தொண்டுசெய்யும் *
நல்லன்பரேத்தும்உன்நாமம்எல்லாம் என்தன்நாவினுள்ளே *
அல்லும்பகலும்அமரும்படிநல்கு அறுசமயம்
வெல்லும்பரம ! * இராமாநுச ! இதுஎன்விண்ணப்பமே.

---

(பைரவிராகம்-ரூபகதாளம்.)

ஸ்ரீ பூமன்னுமாது பொருந்தியமார்பன் * புகழ்மலிந்த
பாமன்னுமாறனடிபணிந்துய்ந்தவன் * பல்கலையோர்
தாமன்னவந்த இராமாநுசன் சரணாரவிந்தம்
நாம்மன்னிவாழ *நெஞ்சே! சொல்லுவோம்அவன்நாமங்களே. (க)

---

† 'பழுதென்றுநண்ணினன்பால' என்பதும் பாடம்.

‡ இத்தனியன் மிகுதியாக வழங்குவதில்லை. § 'திருப்பெயரால்' என்ற பாடம் வெண்டளைக்குச் சேரும்.

(தோடிராகம் - ரூபகதாளம்.)

கள்ளார்பொழில்தென்னரங்கன் * கமலப்பதங்கள்நெஞ்சில்
கொள்ளா மனிசரைநீங்கி * குறையல்பிரானடிக்கீழ்
விள்ளாதஅன்பன் இராமானுசன்மிக்கசீலமல்லால்
உள்ளாதென்னெஞ்சு * ஒன்றறியேன்எனக்குற்றபேரியல்வே. (உ)

பேரியல்நெஞ்சே! அடிபணிந்தேன் உன்னை * பேய்ப்பிறவிப்
பூரியரோடுள்ள சுற்றம்புலத்தி * பொருவருஞ்சீர்
ஆரியன் செம்மைஇராமானுசமுனிக்கன்புசெய்யும்
சீரியபேறுடையார் * அடிக்கீழ்என்னைச்சேர்த்ததற்கே. (௩)

என்னைப்புவியில் ஒருபொருளாக்கி * மருள்சுரந்த
முன்னைப்பழவினைவேரறுத்து * ஊழிமுதல்வனையே
பன்னப்பணித்தஇராமானுசன் பரன்பாதமுமென்
சென்னித்தரிக்கவைத்தான் * எனக்கேதும்சிதைவில்லையே (௪)

எனக்குற்றசெல்வம் இராமானுசனென்று * இசையகில்லா
மனக்குற்றமாந்தர் பழிக்கில்புகழ் * அவன்மன்னியசீர்
தனக்குற்றஅன்பர் அவன்திருநாமங்கள் சாற்றுமென்பா
இனக்குற்றம்காணகில்லா * பத்திஏய்ந்த † இயல்விதென்றே (௫)

இயலும்பொருளும் இசையத்தொடுத்து * ஈன்கவிகள் அன்பால்
மயல்கொண்டுவாழ்த்தும் இராமானுசனை * மதியின்மையால்
பயிலும்கவிகளில்பத்தியில்லாதஎன்பாவிநெஞ்சால்
முயல்கின்றனன் * அவன்தன்பெருங்கீர்த்திமொழிந்திடவே. (௬)

(பியாகடைராகம் - ரூபகதாளம்.)

மொழியைக்கடக்கும் பெரும்புகழான் * வஞ்சமுக்குறும்பாம்
குழியைக் ‡ கடக்கும்நம கூரத்தாழ்வான்சரண்கூடியபின் *
பழியைக்கடத்தும்இராமானுசன்புகழ்பாடி அல்லா
வழியைக்கடத்தல் * எனக்குஇனியாதும்வருத்தமன்றே. (௭)

வருத்தும்புறவிருள்மாற்ற * எம்பொய்கைப்பிரான்மறையின்
குருத்தின்பொருளையும் செந்தமிழ்தன்னையும்கூட்டி * ஒன்றத்
திரித்தன்றெரித்ததிருவிளக்கைத் தன்திருவுள்ளத்தே
இருத்தும்பரமன் * இராமானுசன் எம்இறையவனே. (௮)

† 'இயல்வீதென்றே' என்றும்பாடம். ‡ 'கடத்தும்எம்' என்பர் சிலர்.

இறைவனைக்காணும இதயததிருள்கெட * ஞானமென்னும்
நிறைவிளக்கேற்றிய பூதத்திருவடிதாள்கள * நெஞ்சத்து
உறையவைததாளுமஇராமானுசன்புகழ்பூதுமநலலோர்
மறையினைக்காத்து * இந்தமண்ணகத்தே மன்னவைப்பவரே. (கூ)

மன்னியபேரிருள்மாண்டபின் * கோவலுள் மாமலராள்
தன்னொடுமாயனைக் கண்டமைகாட்டும் * தமிழ்த்தலைவன்
பொன்னடிபோற்றுமஇராமானுசற்கு அன்புபூண்டவர்தாள்
சென்னியிலசூடும் * திருவுடையாரென்றுமசீரியரே (க0)

(கல்யாணிராகம் - ரூபகதாளம்.)

சீரியநான்மறைச்செம்பொருள் * செந்தமிழாலளித்த
பாரியலுமபுகழ்ப்பாண்பெருமாள் * சரணாமபதுமத
தாரியலசென்னியிராமானுசனைச்சார்ந்தவர்தம்
† காரியவண்மை * என்னாற்சொல்லொணாது இக்கடலிடத்தே. (கக)

இடங்கொண்டகீர்த்தி மழிசைக்கிறைவன * இணையடிப்போது
அடங்குமிதயத்திராமானுசன் * அம்பொற்பாதமென்றும்
கடங்கொண்டிறைஞ்சுமதிருமுனிவர்க்கன்றிக்காதல்செய்யாத்
திடங்கொண்டஞானியர்க்கே * அடியேனன்புசெய்வதுவே. (கஉ)

செய்யுமபசுந்துளவத்தொழில்மாலையும் * செந்தமிழில
பெய்யும்மறைத்தமிழ்மாலையும் * பேராதசீரரங்கத்து
ஐயன்கழற்கணியுமபரன்தாளன்றியாதரியா
மெய்யன் * இராமானுசன்சரணேகதிவேறெனக்கே. (கங)

கதிக்குப்பதறி * வெங்கானமுமகல்லுமகடலுமெல்லாம்
கொதிக்கத் தவஞ்செய்யும்கொள்கையற்றேன * கொல்லிகாவலன்சொல்
பதிக்கும்கலைக்கவிபாடுமபெரியவர்பாதங்களே
துதிக்கும்பரமன * இராமானுசன்என்னைச்சோர்விலனே (கச)

சோராதகாதலபெருஞ்சுழிப்பால் * தொல்லைமாலையொன்றும்
பாராது அவனைபபல்லாண்டென்றுகாப்பிடும * பான்மையனதாள்
பேராதவுள்ளததிராமானுசன்தன்பிறங்கியசீர்
சாராமனிசரைச்சேரேன் * எனக்குஎன்ன தாழ்வினியே ? (கரு)

(நாதநாமக்கிரியைராகம் - ரூபகதாளம்.)

❀ தாழ்வொன்றில்லா மறைதாழ்ந்து * தலமுழுதுங்கலியே
ஆள்கின்றநாள்வந்து அளித்தவன்காண்மின * அரங்கர்மௌலி
சூழ்கின்றமாலையைசசூடிக்கொடுததவள் தொல்லருளால்
வாழ்கின்றவள்ளல் * இராமானுசனென்னும்மாமுனியே. (கசு)

† 'காரியல்வண்மை' என்பதும்பாடம்.

முனியார் துயரங்கள் முந்திலும் * இன்பங்கள்மொய்த்திடினும்
கனியார்மனம் கண்ணமங்கைநின்றானை * கலைபரவும்
தனியானையைத்தண்தமிழ்செய்தநீலன் தனக்கு உலகில்
இனியானை * எங்களிராமானுசனை வந்தெய்தினரே (கள)

எய்தற்கரியமறைகளை * ஆயிரம்இன்தமிழால்
செய்தற்குஉலகில்வரும் சடகோபனை * சிந்தையுள்ளே
பெய்தற்கிசையும்பெரியவர்சீரைஉயிர்களெல்லாம்
உய்தற்குஉதவும் * இராமானுசன்எம்உறுதுணையே. (கஅ)

உறுபெருஞ்செல்வமும் தந்தையும்தாயும் * உயர்குருவும்
வெறிதருபூமகள் நாதனும் * மாறன்விளங்கியசீர்
நெறிதரும்செந்தமிழாரணமேயென்று இந்நீணிலத்தோர்
அறிதரநின்ற * இராமானுசன் எனக்காரமுதே (கசு)

ஆரப்பொழில் தென்குருகைப்பிரான் * அமுதத்திருவாய்
ஈரத்தமிழின் இசையுணர்ந்தோர்கட்கு * இனியவர்தம்
சீரைப்பயின்றுய்யும்சீலங்கொள்நாதமுனியை நெஞ்சால்
வாரிப்பருகும் * இராமானுசன்என்தன்மாநிதியே. (உ0)

(சங்கராபரணராகம் - ரூபகதாளம்.)

நிதியைப்பொழியும் முகிலென்று * நீசாதம்வாசல்பற்றித்
துதிகற்றுஉலகில் துவள்கின்றிலேன் இனி * தூய்நெறிசேர்
எதிகட்கிறைவன்யமுனைத்துறைவனிணையடியாம
கதிபெற்றுடைய * இராமானுசன்என்னைககாத்தனனே. (உக)

கார்த்திகையானும் கரிமுகத்தானும் கனலும்முககண்
மூர்த்தியும் மோடியும்வெப்பும்முதுகிட்டு * மூவுலகும்
பூத்தவனே! என்றுபோற்றிடவாணன்பிழைபொறுதத
தீர்த்தனையேத்தும் * இராமானுசன் என்தன்சேமவைப்பே. (உஉ)

வைப்பாய வான்பொருளென்று * நல்லன்பர்மனத்தகத்தே
எப்போதும்வைக்கும் இராமானுசனை * இருநிலத்தில்
ஒப்பாரிலாத † உறுவினையேன்வஞ்சநெஞ்சில்வைத்து
முப்போதும்வாழ்த்துவன்*என்னும்இது அவன்மொய்புகழ்க்கே? (உந)

மொய்த்தவெம் ‡ தீவினையால் பல்லுடல்தொறும்மூத்து * அதனால்
எய்த்தொழிந்தேன் முன்னாள்களெலலாம் * இன்றுகண்டுயர்ந்தேன்
பொய்த்தவம்போற்றும்புலைச்சமயங்கள்நிலததவியக்
கைத்தமெய்ஞ்ஞானத்து* இராமானுசனென்னும் கார்தன்னையே. (உச)

† 'அருவினையேன்' என்பதும்பாடம். ‡ 'தீவினையார்' என்பதும்பாடம்.

காரேய்கருணையிராமானுச! * இக்கடலிடத்தில்
ஆரேயறிபவர் நின்னருளின்தன்மை? * அல்லலுக்கு
நேரேயுறைவிடம்நான்வந்துநீயென்னையுய்த்தபின் உன்
சீரேஉயிர்க்குயிராய் * அடியேற்கு இன்றுதித்திக்குமே. (௨௫)

திக்குற்றகீர்த்தி யிராமானுசனை * என்செய்வினையாம்
மெய்க்குற்றம்நீக்கி விளங்கியமேகத்தை * மேவுநல்லோர்
எக்குற்றவாளர்எதுபிறப்புஏதியல்வாகநின்றோர்
அக்குற்றம்அப்பிறப்பு* அவ்வியல்வேநம்மைஆட்கொள்ளுமே. (௨௬)

கொள்ளக்குறைவற்றிலங்கி * கொழுந்துவிட்டோங்கியவுன்
வள்ளல்தனத்தினால் வல்வினையேன்மனம்நீபுகுந்தாய் *
வெள்ளைச்சுடர்விடும்உனபெருமேன்மைக்கிழுக்கிதென்று
தள்ளுற்றிரங்கும * இராமானுச! என்தனிநெஞ்சமே. (௨௭)

நெஞ்சிற்கறைகொண்டகஞ்சனைக காய்ந்தநிமலன் * நங்கள்
பஞ்சித்திருவடிப் பின்னைதன்காதலன் * பாதம்நண்ணா
வஞ்சர்க்கரியஇராமானுசன்புகழன்றி என்வாய்
கொஞ்சிப்பரவகில்லாது * என்னவாழ்வுஇன்றுகூடியதே! (௨௮)

கூட்டும்விதி † என்றுகூடுங்கொலோ?* தென்குருகைப்பிரான்
பாட்டென்னும வேதப்பசுந்தமிழ்தன்னை * தன பத்தியென்னும்
வீட்டின்கண்வைத்தஇராமானுசன்புகழ்மெய்யுணர்ந்தோர
ஈட்டங்கள்தன்னை *என்நாட்டங்கள் கண்டுஇன்பமெய்திடவே (௨௯)

இன்பந்தருபெருவீடுவந்தெய்திலென்? * எண்ணிறந்த
துன்பந்தருநிரயம்பலசூழிலென் ? * தொல்லுலகில்
மன்பல்லுயிர்கட்கிறைவன மாயனெனமொழிந்த
அன்பன் அனகன் * இராமானுசன் என்னையாண்டனனே (௩௦)

(பந்துவராளிராகம் - ரூபகதாளம்.)

✽ ஆண்டுகள்நாள் திங்களாய் * நிகழ்காலமெல்லாம்மனமே!
ஈண்டுபல்யோனிகள்தோறுழல்வோம * இன்றோரெண்ணின்றியே
காண்தகுதோளண்ணல்தென்னத்தியூரர்கழலிணைக்கீழ்ப்
பூண்டவன்பாளன் * இராமானுசனைப் பொருந்தினமே. (௩௧)

பொருந்தியதேசும் பொறையுந்திறலும் * புகழும்நல்ல
திருந்தியஞானமும் செல்வமுமசேரும் * செறுகலியால்
வருந்தியஞாலத்தைவண்மையினால் வந்தெடுத்தளித்த
அருந்தவன * எங்களிராமானுசனை யடைபவர்க்கே. (௩௨)

---

† 'இன்று' என்றும் பாடம்.

அடையாரகமலத்து அலர்மகள்கேள்வன் * கையாழியென்னும்
படையோடுநாந்தகமும் படர்தண்டும்ஒண்சார்ங்கவில்லும் *
புடையார்புரிசங்கமும்இந்தப்பூதலங்காப்பதற்கென்று
இடையே * இராமானுசமுனியாயின இந்நிலத்தே. (௩௩)

நிலத்தைச்செறுத்துண்ணும் நீசக்கலியை * நினைப்பரிய
பலத்தைச்செறுத்தும் பிறங்கியதில்லை * என்பெய்வினை தென்
புலத்திற்பொறித்தஅப்புத்தகச்சும்மைபொறுக்கியபின்
நலத்தைப்பொறுத்தது * இராமானுசன்தன் நயப்புகழே. (௩௪)

நயவேன்ஒருதெய்வம் நானிலத்தே * சிலமானிடத்தைப்
புயலேயெனக் கவிபோற்றிசெய்யேன * பொன்னரங்கமென்னில்
மயலேபெருகும்இராமானுசன்மன்னுமாமலர்த்தாள்
அயரேன் * அருவினைஎன்னை எவ்வாறுஇன்றடர்ப்பதுவே? (௩௫)

அடல்கொண்டநேமியன் ஆருயிர் † நாதன் * அன்றுஆரணச்சொற்
கடல்கொண்டஒண்பொருள் கண்டளிப்ப * பின்னுங்காசினியோர்
இடரின்கண்வீழ்ந்திடத்தானுமவ்வொண்பொருள்கொண்டு அவர்பின்
படருங்குணன * எம்இராமானுசன்தன்படி இதுவே. (௩௬)

படிகொண்டகீர்த்தி இராமாயணமென்னும்பத்திவெள்ளம் *
குடிகொண்டகோயில் இராமானுசன்குணங்கூறும் * அன்பர்
கடிகொண்டமாமலர்த்தாள்கலந்துள்ளங்கனியும்நல்லோர்
அடிகண்டுகொண்டுகந்து * என்னையும்ஆளவர்க்காக்கினரே. (௩௭)

ஆக்கிஅடிமைநிலைப்பித்தனை என்னைஇன்று * அவமே
போக்கிப் புறத்திட்டதென்பொருளாமுன்பு * புண்ணியர்தம்
வாக்கிற்பிரியா இராமானுச! நின்னருளின்வண்ணம்
நோக்கில்தெரிவரிதால் * உரையாய்இந்தநுண்பொருளே. (௩௮)

பொருளும்புதல்வரும்பூமியும் * பூங்குழலாருமென்றே
மருள்கொண்டிளைக்கும் நமக்குநெஞ்சே! * மற்றுளார்தரமோ?
இருள்கொண்டவெந்துயர்மாற்றித்தன்னீறில்பெரும்புகழே
தெருளும்தெருள்தந்து * இராமானுசன்செய்யும்சேமங்களே. (௩௯)

சேமநல்வீடும் பொருளும்தருமமும் * சீரியநற்
காமமுமென்றிவை நான்கென்பர் * நான்கினும்கண்ணனுக்கே
ஆமதுகாமம்அறம்பொருள்வீடிதற்கென்றுரைத்தான்
‡ வாமனசீலன * இராமானுசன் இந்தமண்மிசையே. (௪0)

---

† 'நாதனென்று' என்பதும் பாடம்.
‡ 'வாமனன் சீலர்' என்பதும் பாடம்.

(ஆரபிராகம் - ரூபகதாளம்.)

மண்மிசை யோனிகள்தோறும்பிறந்து * எங்கள்மாதவனே
கண்ணுறநிற்கிலும் காணகில்லா * உலகோர்களெல்லாம்
அண்ணலிராமானுசன்வந்துதோன்றிய அப்பொழுதே
நண்ணருஞானம்தலைக்கொண்டு * நாரணற்காயினரே. (சக)

ஆயிழையார்கொங்கைதங்கும் * அக்காதலளற்றழுந்தி
மாயும்என்னாவியை வந்தெடுத்தான்இன்று * மாமலராள்
நாயகன்எல்லாவுயிர்கட்கும்நாதன் அரங்கனென்னும்
தூயவன் * தீதிலிராமானுசன்தொல்லருள்சுரந்தே. (சஉ)

சுரக்கும்திருவும்உணர்வும் * சொலப்புகில்வாயமுதம்
பரக்கும் இருவினைபற்றறவோடும் * படியிலுள்ளீர்!
உரைக்கின்றனன்உமக்குயான் அறம்சீறுமுறுகலியைத்
துரக்கும்பெருமை * இராமானுசனென்றுசொல்லுமினே. (சங)

சொல்லார் தமிழொருமூன்றும் * சுருதிகள்நான்கும்எல்லை
யில்லா அறநெறியாவும்தெரிந்தவன் * எண்ணருஞ்சீர்
நல்லார்பரவும்இராமானுசன் திருநாமம்நம்பிக்
கல்லார் அகலிடத்தோர் * எதுபேறென்றுகாமிப்பரே. (சச)

பேறொன்றுமற்றில்லைநின்சரணன்றி * அப்பேறளித்தற்கு
ஆறொன்றுமில்லைமற்றச்சரணன்றி * என்றுஇப்பொருளைத்
தேறுமவர்க்கும்எனக்கும்உனைத்தந்தசெம்மை சொல்லால்
கூறும்பரமன்று * இராமானுச! மெய்ம்மைகூறிடிலே (சரு)

கூறும்சமயங்களாறும்குலைய * குவலயத்தே
மாறன்பணித்த மறையுணர்ந்தோனை * மதியிலியேன்
தேறும்படிஎன்மனம்புகுந்தானைத் திசையனைத்தும்
ஏறும்குணனை * இராமானுசனை இறைஞ்சினமே. (சசா)

இறைஞ்சப்படும்பரன்ஈசனரங்கனென்று * இவ்வுலகத்து
அறஞ்செப்பும் அண்ணல்இராமானுசன் * என்னருவினையின்
திறஞ்செற்றுஇரவும்பகலும்விடாது என்தன்சிந்தையுள்ளே
நிறைந்தொப்பறவிருந்தான் * எனக்குஆரும்நிகரில்லையே. (சஎ)

நிகரின்றிநின்ற என்நீசதைக்கு * † நின்னருளின்கணன்றிப்
புகலொன்றுமில்லை அருட்கும்அஃதேபுகல் * புன்மையிலோர்
பகரும்பெருமைஇராமானுச! இனிநாம்பழுதே
அகலும்பொருளென்? * பயன்இருவோமுக்குமானபின்னே. (சஅ)

† 'உன்' என்றபாடம் கட்டளைக்கலித்துறையிலக்கணத்துக்குச் சேரும்.

ஆனதுசெம்மையறநெறி * பொய்ம்மையறுசமயம்
போனதுபொன்றி இறந்ததுவெங்கலி * பூங்கமலத்
தேனதிபாய்வயல்தென்னரங்கன்கழல்சென்னிவைத்துத்
தானதில்மன்னும் * இராமானுசன் இத்தலத்துதித்தே (௪௯)

உதிப்பனஉத்தமர்சிந்தையுள் * ஒன்னலாநெஞ்சம்அஞ்சிக்
கொதித்திட மாறிநடப்பன * கொள்ளைவன்குற்றமெல்லாம்
பதித்தஎன்புன்கவிப்பாவினம்பூண்டனபாவுதொல்சீர்
எதித்தலைநாதன் * இராமானுசன் தனிணையடியே (௫௦)

அடியைத்தொடர்ந்தெழும்ஐவர்கட்காய் * அன்றுபாரதப்போர்
முடியப் பரிநெடுந்தேர்விடும்கோனை * முழுதுணர்ந்த
அடியர்க்கமுதம் இராமானுசன்என்னையாளவந்து இப்
படியில்பிறந்தது * மற்றில்லைகாரணம்பார்த்திடிலே. (௫௧)

பார்த்தான் அறுசமயங்கள்பதைப்ப * இப்பார்முழுதும்
போர்த்தான்புகழ்கொண்டு புன்மையினேனிடைத்தான்புகுந்து *
தீர்த்தான் இருவினை தீர்த்து அரங்கன் செய்யதாளிணையோடு
ஆர்த்தான் * இவைஎம்மிராமானுசன்செய்யும்அற்புதமே (௫௨)

அற்புதன் செம்மையிராமானுசன் * என்னையாளவந்த
கற்பகம் கற்றவர்காமுறுசீலன் * கருதரிய
பற்பல்லுயிர்களும்பல்லுலகுயாவும்பரனதென்னும்
நற்பொருள் தன்னை * இந்நானிலத்தேவந்துநாட்டினனே. (௫௩)

நாட்டியநீசச்சமயங்கள்மாண்டன * நாரணனைக்
காட்டியவேதம் களிப்புற்றது * தென்குருகைவள்ளல்
வாட்டமிலாவண்தமிழ்மறைவாழ்ந்தது மண்ணுலகில்
ஈட்டியசீலத்து * இராமானுசன் தனியல்வுகண்டே. (௫௪)

கண்டவர்சிந்தைகவரும் * கடிபொழில்தென்னரங்கன்
தொண்டர்குலாவும்இராமானுசனை * தொகையிறந்த
பண்தருவேதங்கள்பார்மேல்நிலவிடப்பார்த்தருளும்
கொண்டலைமேவித்தொழும் * குடியாம்எங்கள் † கோக்குடியே. (௫௫)

கோக்குலமன்னரை மூவெழுகால் * ஒருகூர்மழுவால்
போக்கியதேவனைப் போற்றும்புனிதன் * புவனமெங்கும்
ஆக்கியகீர்த்திஇராமானுசனை அடைந்தபின் என்
வாக்குஉரையாது * என்மனம்நினையாது இனிமற்றொன்றையே. (௫௬)

† 'கோக்குலமே' என்றும் பாடம்.

மற்றொருபேறுமதியாது * அரங்கன்மலரடிக்குஆள்
உற்றவரே தனக்குஉற்றவராக்கொள்ளும்உத்தமனை *
நல்தவர்போற்றும்இராமானுசனை இந்நானிலத்தே
பெற்றனன் * பெற்றபின் மற்றறியேன்ஒருபேதைமையே. (ருஎ)

பேதையர் வேதப்பொருளிதென்றுஉன்னி * பிரமம்நன்றென்று
ஓதி மற்றெல்லாவுயிரும்அஃதென்று * உயிர்கள்மெய்விட்டு
ஆதிப்பரனோடொன்றாமென்றுசொல்லுமவ்வல்லலெல்லாம்
வாதில்வென்றான் * எம்இராமானுசனமெய்ம்மதிக்கடலே. (ருஅ)

கடலளவாய திசையெட்டினுள்ளும் * கலியிருளே
மிடைதருகாலத்து இராமானுசன * மிக்கநான்மறையின்
சுடரொளியால்அவ்விருளைத்துரந்திலனேல் உயிரை
யுடையவன் * நாரணனென்றறிவாரில்லைஉற்றுணர்ந்தே. (ருக)

உணர்ந்தமெய்ஞ்ஞானியர் யோகந்தொறும் * திருவாய்மொழியின்
மணந்தரு மின்னிசைமன்னுமிடந்தொறும் * மாமலராள்
புணர்ந்தபொன்மார்வன்பொருந்தும்பதிதொறும்புக்குநிற்கும்
குணந்திகழ்கொண்டல * இராமானுசன்எங்குலக்கொழுந்தே. (சுO)

(ஸஹானாராகம் - ரூபகதாளம்.)

கொழுந்துவிட்டோடிப்படரும் வெங்கோள்வினையால் * நிரயத்து
அழுந்தியிட்டேனை வந்தாட்கொண்டபின்னும் * அருமுனிவர்
தொழும்தவத்தோன்எம்இராமானுசன் † தொல்புகழ்சுடர்மிக்
கெழுந்தது * அத்தால்நல்லதிசயங்கண்டது இருநிலமே. (சுக)

இருந்தேன் இருவினைப்பாசங்கழற்றி * இன்றுயான்இறையும்
வருந்தேனினி எம்இராமானுசன் * மன்னுமாமலர்த்தாள்
பொருந்தாநிலையுடைப்புன்மையினோர்க்குஒன்றும்நன்மைசெய்யாப்
‡ பெருந்தேவரைப்பரவும் * பெரியோர்தங்கழல்பிடித்தே. (சுஉ)

பிடியைத்தொடரும் களிறென்ன * யான்உன்பிறங்கியசீர்
அடியைத்தொடரும்படி நல்கவேண்டும் * அறுசமயச்
செடியைத்தொடரும் மருள்செறிந்தோர்சிதைந்தோட வந்து இப்
படியைத்தொடரும் * இராமானுச! மிக்கபண்டிதனே! (சுங)

பண்தருமாறன்பசுந்தமிழ் * ஆனந்தம்பாய்மதமாய்
விண்டிட எங்களிராமானுசமுனிவேழம் * மெய்ம்மை
கொண்டநல்வேதக்கொழுந்தண்டமேந்திக்குவலயத்தே
மண்டிவந்தேன்றது * வாதியர்காள்! உங்கள்வாழ்வற்றதே (சுச)

† 'தன்புகழ்' என்பதும் பாடம். ‡ 'பெருந்தேவனை' என்றும் பாடம்.

வாழ்வற்றது தொல்லைவாதியர்க்கு * என்றும்மறையவர்தம
தாழ்வற்றது தவம்தாரணிபெற்றது * தத்துவநூல்
கூழற்றது குற்றமெல்லாம்பதித்தகுணத்தினர்க்கு அந்
நாழற்றது * நம்இராமானுசன் தந்தஞானத்திலே. (சுரு)

ஞானம்கனிந்த நலங்கொண்டு * நாள்தொறும்நைபவர்க்கு
வானம்கொடுப்பதுமாதவன் * வல்வினையேன்மனத்தில்
ஈனம்கடிந்தஇராமானுசன் தன்னையெய்தினர்க்கு அத்
தானம்கொடுப்பது * தன் தகவென்னும்சரண்கொடுத்தே. (சுசு)

சரணமடைந்த தருமனுக்கா * பண்டுநூற்றுவரை
மரணமடைவித்தமாயவன் * தன்னைவணங்கவைத்த
கரணமிவைஉமக்கன்றென்று இராமானுசன் உயிர்கட்கு
அரணங்கமைத்திலனேல் * அரணார்மற்றிவ்வாருயிர்க்கே? (சுஎ)

ஆரெனக்கின்று நிகர்சொல்லில்? * மாயன் அன்றுஐவர்தெய்வத்
தேரினில் செப்பியகீதையின் * செம்மைப்பொருள்தெரியப்
பாரினில்சொன்ன இராமானுசனைப்பணியும்நல்லோர்
சீரினில்சென்றுபணிந்தது * என் ஆவியும்சிந்தையுமே (சுஅ)

சிந்தையினோடுகரணங்கள் யாவும்சிதைந்து * முன்னாள்
அந்தமுற்றாழ்ந்ததுகண்டு * அவையென்தனக்கன்றருளால்
தந்த அரங்கனும்தன்சரண் தந்திலன் தானது தந்து *
எந்தைஇராமானுசன்வந்தெடுத்தனன் இன்றென்னையே. (சுகூ)

என்னையும்பார்த்து என்னியல்வையும்பார்த்து* எண்ணில்பல்குணத்த
உன்னையும்பார்க்கில அருள்செயவதேநலம் * அன்றிஎன்பால்
பின்னையும்பார்க்கில்நலமுளதே? உன்பெருங்கருணை
தன்னையென்பார்ப்பர்? * இராமானுச! உன்னைச்சார்ந்தவரே. (எ0)

(தந்யாசிராகம் - ரூபகதாளம்.)

சார்ந்ததுஎன்சிந்தை உன்தாளிணைக்கீழ் * அன்புதான்மிகவும்
கூர்ந்தது அத்தாமரைத்தாள்களுக்கு * உன் தன்குணங்களுக்கே
தீர்ந்ததுஎன்செய்கைமுன்செய்வினைநீ † செய்வினையதனால்
பேர்ந்தது * வண்மைஇராமானுச! எம்பெருந்தகையே! (எக)

கைத்தனன் தீயசமயக்கலகரை * காசினிக்கே
உய்த்தனன் தூயமறைநெறிதன்னை * என்றுஉன்னிஉள்ளம்
நெய்த்தவன்போடிருந்தேத்தும்நிறைபுகழோருடனே
வைத்தனன்என்னை * இராமானுசன்மிககவண்மைசெய்தே. (எஉ)

† 'செய்வனவதனால்' என்பதும் பாடம்.

வண்மையினாலும் தன்மாதகவாலும் * மதிபுரையும்
தண்மையினாலும் இத்தாரணியோர்கட்கு * தான்சரணாய்
உண்மைநல்ஞானமுரைத்தஇராமானுசனையுன்னும்
திண்மையல்லால் எனக்கில்லை * மற்றோர்நிலைதேர்ந்திடிலே. (எங)

தேரார்மறையின்திறமென்று * மாயவன்தீயவரைக்
கூராழிகொண்டுகுறைப்பது * கொண்டலனையவண்மை
ஏரார்குணத்தெம்மிராமானுசன் அவ்வெழில்மறையில்
சேராதவரைச்சிதைப்பது * அப்போதொருசிந்தைசெய்தே. (எச)

செய்த்தலைச்சங்கம் செழுமுத்தமீனும் * திருவரங்கர்
கைத்தலத்தாழியும் சங்கமுமேந்தி * நங்கண்முகப்பே
† மொய்த்தலைத்துஉன்னைவிடேனென்றிருக்கிலும்நின்புகழே
மொய்த்தலைக்கும்வந்து * இராமானுச! என்னைமுற்றும்நின்றே. (எரு)

(செஞ்சுருட்டிராகம் - ரூபகதாளம்.)

❀ நின்றவண்கீர்த்தியும் நீள்புனலும் * நிறைவேங்கடப்பொற்
குன்றமும்வைகுந்தநாடும் குலவியபாற்கடலும் *
உன்தனக்குஎத்தனையின்பந்தரும்உன்னிணைமலர்த்தாள்
என்தனக்குமது * இராமானுச! இவையீந்தருளே. (எசு)

ஈந்தனனீயாதஇன்னருள் * எண்ணில்மறைக்குறும்பைப்
பாய்ந்தனன் அம்மறைப்பல்பொருளால் * இப்படியனைத்தும்
‡ ஏய்ந்தனன்கீர்த்தியினால்என்வினைகளை வேர்பறியக்
காய்ந்தனன் * வண்மைஇராமானுசற்குஎன்கருத்தினியே? (எஎ)

கருத்தில்புகுந்து உள்ளில்கள்ளம்கழற்றி * கருதரிய
வருத்தத்தினால் மிகவஞ்சித்து * நீஇந்தமண்ணகத்தே
திருத்தித்திருமகள்கேள்வனுக்காக்கியபின் என்நெஞ்சில்
பொருத்தப்படாது * எம்இராமானுச! மற்றோர்பொய்ப்பொருளே ()

பொய்யைச்சுரக்கும் பொருளைத்துரந்து * இந்தப்பூதலத்தே
மெய்யைப்புரக்கும் இராமானுசன்நிற்க * வேறுநம்மை
உய்யக்கொள்ளவல்லதெய்வம்இங்குயாதென்றுஉலர்ந்துஅவமே
ஐயப்படாநிற்பர் * வையத்துள்ளோர்நல்லறிவிழந்தே. (எகூ)

நல்லார்பரவும் இராமானுசன் * திருநாமம்நம்ப
வல்லார்திறத்தை § மறவாதவர்கள்எவர் * அவர்க்கே
எல்லாவிடத்திலும்என்றும்எப்போதிலும்எத்தொழும்பும்
சொல்லால்மனத்தால் * கருமத்தினால் செய்வன்சோர்வின்றியே. ()

† 'மெய்த்தலைத்து' என்பதும்பாடம். ‡ 'ஏய்ந்தவனகீர்த்தியினால்' என்பதும் பாடம். § 'மதியாதவர்கள்' என்பதும் பாடம்.

(கல்யாணிராகம் — ரூபகதாளம்)

சோர்வின்றி உன்தன் துணையடிக்கீழ் * தொண்டுபட்டவர்பால்
சார்வின்றிநின்றஎனக்கு * அரங்கன்செய்யதாளிணைகள்
பேர்வின்றியின்றுபெறுத்தும்இராமாநுச ! இனிஉன்
சீரொன்றியகருணைக்கு * இல்லைமாறுதெரிவுறிலே (அக)

தெரிவுற்றஞானம் செறியப்பெறாது * வெந்தீவினையால்
உருவற்ற † ஞானத்து உழல்கின்றஎன்னை * ஒருபொழுதில்
பொருவற்றகேள்வியனாக்கிநின்றான் என்னபுண்ணியனோ?
தெரிவுற்றகீர்த்தி * இராமாநுசனென்னும்சீர்முகிலே. (அஉ)

சீர்கொண்டுபேரறம்செய்து * நல்வீடு ‡ செறிதுமெனும்
பார்கொண்டமேன்மையர் கூட்டனல்லேன் * உன்பதயுகமாம்
ஏர்கொண்ட § வீட்டைஎளிதினில்எய்துவன் உன்னுடைய
கார்கொண்டவண்மை * இராமாநுச ! இதுகண்டுகொள்ளே. (அங)

கண்டுகொண்டேன் எம்இராமாநுசன்தன்னை * காண்டலுமே[நோய்
தொண்டுகொண்டேன் அவன்தொண்டர்பொற்றாளில் * என்தொல்லைவெந்
விண்டுகொண்டேன் அவன்சீர்வெள்ளவாரியைவாய்மடுத்து இன்று
உண்டுகொண்டேன் * இன்னம்உற்றனவோதில்உலப்பில்லையே. (அச)

ஓதியவேதத்தினுட்பொருளாய் * அதனுச்சிமிக்க
சோதியைநாதனென அறியாது உழல்கின்றதொண்டர் *
பேதைமை $ தீர்த்தஇராமாநுசனைத்தொழும்பெரியோர்
பாதமல்லால்என்தனாருயிர்க்கு * யாதொன்றும்பற்றில்லையே. (அரு)

பற்றாமனிசரைப்பற்றி * அப்பற்றுவிடாதவரே
உற்றாரெனவுழன்று ஓடிநையேன் இனி * ஒள்ளியநூல்
கற்றார்பரவும்இராமாநுசனைக்கருதுமுள்ளம்
பெற்றார்யவர் * அவர்எம்மைநின்றாளும்பெரியவரே. (அசு)

பெரியவர்பேசிலும் பேதையர்பேசிலும் * தன்குணங்கட்கு
உரியசொல்என்றுமுடையவனென்றென்று * உணர்வின்மிக்கோர்
தெரியும்வண்கீர்த்திஇராமாநுசன்மறைதேர்ந்துஉலகில்
புரியும்நல்ஞானம் * பொருந்தாதவரைப்பொரும்கலியே. (அஎ)

கலிமிக்கசெந்நெல் கழனிக்குறையல் * கலைப்பெருமான்
ஒலிமிக்கபாடலைஉண்டு தன்னுள்ளம்தடித்து * அதனால்
வலிமிக்கசீயம்இராமாநுசன் மறைவாதியராம்
புலிமிக்கதென்று * இப்புவனத்தில்வந்தமைபோற்றுவனே. (அஅ)

---

† 'ஞாலத்து' என்பதும் பாடம். ‡ 'பெறுதும்' என்பதும் பாடம்.
§ 'வீட்டில்' என்றும் ஓதுவர். $ 'தீர்க்கும்' என்பதும் பாடம்.

போற்றருஞ்சீலத்து இராமானுச! * நின்புகழ்தெரிந்து
சாற்றுவனேல் அது தாழ்வு * அது தீரில் உன் சீர்தனக்குஓர்
ஏற்றமென்றேகொண்டிருக்கிலும் என மனம் ஏத்தியன்றி
ஆற்றகில்லாது * இதற்குஎன்னினைவாயென்றிட்டு அஞ்சுவனே.

† நினையார்பிறவியை நீக்கும்பிரானை * இந்நீணிலத்தே
எனையாளவந்த இராமானுசனை * இருங்கவிகள்
புனையார், புனையும்பெரியவர் தாள்களில் பூந்தொடையல்
வனையார் * பிறப்பில்வருந்துவர் மாந்தர்மருள்சுரந்தே. (கூ0)

(காம்போஜிராகம் - ரூபகதாளம்.)

மருள்சுரந்து ஆகமவாதியர்கூறும் * ‡ அவப்பொருளாம்
§ இருள்சுரந்தெய்த்த உலகிருள்நீங்க * தன்னீண்டியசீர்
அருள்சுரந்து எல்லாவுயிர்கட்கும்நாதன் அரங்கனென்னும்
பொருள்சுரந்தான் * எம இராமானுசன் $ மிக்கபுண்ணியனே. (கூக)

புண்ணியநோன்புபுரிந்துமிலேன் * அடிபோற்றிசெய்யும்
நுண்ணருங்கேள்வி நுவன்றுமிலேன * செம்மைநூற்புலவர்க்கு
எண்ணருங்கீர்த்தி இராமானுச! இன்றுநீபுகுந்து என்
கண்ணுள்ளும்நெஞ்சுள்ளும * நின்றஇக்காரணம்கட்டுரையே. (கூஉ)

கட்டப்பொருளை மறைப்பொருளென்று * கயவர்சொல்லும்
பெட்டைக்கெடுக்கும் பிரானலனே? * என்பெருவினையைக்
கிட்டிக்கிழங்கொடுதன்னருளென்னுமொள்வாளுருவி
வெட்டிக்களைந்த * இராமானுசனென்னும்மெய்த்தவனே. (கூங)

தவந்தரும் செல்வம்தகவும்தரும * [] சலியாப்பிறவிப்
பவந்தரும் தீவினைபாற்றித்தரும * பரந்தாமமென்னும்
திவந்தருமதீதிலிராமானுசன் தன்னைச்சார்ந்தவர்கட்கு
உவந்தருந்தேன * அவனசீரன்றியான் ஒன்றும்உள்மகிழ்ந்தே. (கூச)

உண்ணின்றுஉயிர்களுக்கு உற்றனவேசெய்து * அவர்க்குஉயவே
பண்ணும்பரனும் பரிவிலனாமபடி * பல்லுயிர்க்கும்
விண்ணின்தலைநின்றுவீடளிப்பான்எம்இராமானுசன்
மண்ணின்தலத்துஉதித்து * †† மறைநாலும்வளர்த்தனனே. (கூரு)

---

† 'நினைவார் பிறவியை' என்பதும் பாடம். ‡ 'மறப் பொருளாம்' § 'இருள்சுமந்து' $ 'என்னும் புண்ணியனே' என்பன பாடபேதங்கள். [] 'சரியா' என்பதும்பாடம். †† 'உய்மறை' என்றபாடம் வ்யாக்யானத்துக்கும் வ்ருத்தலக்ஷணத்துக்கும் பொருந்தும்

வளரும்பிணிகொண்ட வல்வினையால் * மிக்கநல்வினையில்
கிளரும்துணிவு கிடைத்தறியாது * முடைத்தலையூன்
தளருமளவும்தரித்தும்விழுந்தும்தனிதிரிவேற்கு
உளர்எம்இறைவர் * இராமானுசன்தன்னையுற்றவரே. (கூசு)

தன்னையுற்றாட்செய்யும்தன்மையினோர் * மன்னுதாமரைத்தாள்
தன்னையுற்றாட்செய்ய என்னையுற்றான் இன்று * தன்தகவால்
தன்னையுற்றாரன்றித்தன்மையுற்றாரில்லையென்றறிந்து
தன்னையுற்றாரை * இராமானுசன்குணம்சாற்றிடுமே. (கூஎ)

(யமுநாகல்யாணிராகம் - ரூபகதாளம்)

இடுமே இனியசுவர்க்கத்தில்? * இன்னும்நரகிலிட்டுச்
சுடுமே? அவற்றைத்தொடர்தருதொல்லை * சுழல்பிறப்பில்
நடுமே? இனிநம்இராமானுசன்நம்மைநம்வசத்தே
விடுமே? சரணமென்றால் * மனமே! நையல்மேவுதற்கே. (கூஅ)

தறகச்சமணரும் சாக்கியப்பேய்களும் * தாழ்சடையோன்
சொற்கற்றசோம்பரும சூனியவாதரும் * நான்மறையும்
நிற்கக்குறும்புசெய்நீசரும்மாண்டனர் நீள்நிலத்தே
பொற்கற்பகம் * எம்இராமானுசமுனிபோந்தபின்னே. (கூகூ)

போந்ததென்னெஞ்சென்னும்பொன்வண்டு*உனதடிப்போதில்ஒண்சீ
ராந்தெளிதேனுண்டுஅமர்ந்திடவேண்டி * நின்பாலதுவே
ஈந்திடவேண்டும்இராமானுச! இதுவன்றிஒன்றும்
மாந்தகில்லாது * இனிமற்றொன்றுகாட்டிமயக்கிடலே. (க00)

(கேதாரகௌளராகம் - ரூபகதாளம்.)

மயக்கும்இருவினை † வல்லியில்பூண்டு * மதிமயங்கித்
துயக்கும்பிறவியில் தோன்றியஎன்னை * துயரகற்றி
உயக்கொண்டுநல்கும் இராமானுச' என்றதுஉன்னையுன்னி
நயக்குமவர்க்குஇதுஇழுக்கென்பர் * நல்லவரென்றுநைந்தே. (க0க)

நையும்மனம்உன்குணங்களையுன்னி * என்நாஇருந்துஎம்
ஐயனிராமானுசனென்றழைக்கும் * அருவினையேன்
கையும்தொழும் கண்கருதிடும்காணக்கடலபுடைசூழ்
வையமிதனில் * உன்வண்மைஎன்பால்என்வளர்ந்ததுவே? (க0௨)

† 'வல்லியை' என்றும் பாடம்.

வளர்ந்தவெங்கோபமடங்கலொன்றாய் * அன்றுவாளவுணன்
கிளர்ந்தபொன்னாகங்கிழித்தவன் * கீர்த்திப்பயிரெழுந்து
விளைந்திடும்சிந்தைஇராமானுசன் என்தன்மெய்வினைநோய்
களைந்துநன்ஞானமளித்தனன் * கையில்கனியென்னவே. (கoங)

கையில்கனியென்னக் கண்ணனைக்காட்டித்தரினும் * உன்தன்
மெய்யில்பிறங்கியசீரன்றி வேண்டிலன்யான் * நிரயத்
தொய்யில் † கிடக்கினும்சோதிவிண் ‡ சேரினும்இவ்வருள்நீ
செய்யில்தரிப்பன் * இராமானுச! என்செழுங்கொண்டலே! (கoச)

(கமாஸ்ராகம் - ரூபகதாளம்)

செழுந்திரைப்பாற்கடல் கண்டுயில்மாயன் * திருவடிக்கீழ்
விழுந்திருப்பார்நெஞ்சில் மேவுநன்ஞானி * நல்வேதியர்கள்
தொழுந்திருப்பாதனிராமானுசனைத்தொழும்பெரியோர்
எழுந்திரைத்தாடும்இடம் * அடியேனுக்குஇருப்பிடமே. (கoரு)

(மோஹநராகம் - ரூபகதாளம்.)

இருப்பிடம் வைகுந்தம்வேங்கடம் * மாலிருஞ்சோலையென்னும்
பொருப்பிடம் மாயனுக்கென்பர்நல்லோர் * அவை § தம்மொடும்வந்து
இருப்பிடம்மாயன் இராமானுசன்மனத்து இன்று அவன்வந்து
இருப்பிடம் * என்தனிதயத்துள்ளே தனக்கின்புறவே. (கoசா)

(ஸௌராஷ்ட்ரராகம் - ரூபகதாளம்.)

இன்புற்றசீலத்துஇராமானுச! * என்றும்எவ்விடத்தும்
என்புற்றநோயுடல்தோறும் பிறந்துஇறந்து * எண்ணரிய
துன்புற்றுவீயினும்சொல்லுவதொன்றுண்டு உன்தொண்டர்கட்கே
அன்புற்றிருக்கும்படி * என்னையாக்கிஅங்காட்படுத்தே. (கoஎ)

(சுருட்டிராகம் - ரூபகதாளம்)

அங்கயல்பாய்வயல்தென்னரங்கன * அணியாகமன்னும்
பங்கயமாமலர்ப்பாவையைப் போற்றுதும் * பத்தியெல்லாம்
தங்கியதென்னத்தழைத்துநெஞ்சே! நம்தலைமிசையே
பொங்கியகீர்த்தி * இராமானுசனடிப்பூமன்னவே. (கoஅ)

தசகஅடிவரவு:—பூ சீர் நிதி ஆண்டு மண அடி கொழுந்து சார்ந்தது சோர்வு மருள் மயக்கு.

திருவரங்கத்தமுதனார் திருவடிகளே சரணம்.



† 'கிடக்கிலென்,' ‡ 'சேரிலென்' என்றும் பாடம். § 'தன்னொடும்' என்று வழங்குவர்.

# இராமானுசநூற்றந்தாதிச் செய்யுளகராதி.

# இயல்சாத்து.

(பிள்ளையுறங்காவில்லிதாஸர் அருளிச்செய்தது.)

நன்றுந்திருவுடையோம் நானிலத்திலெவ்வுயிர்க்கும் *
ஒன்றுமகுறையில்லை ஓதினோம் *—குன்றம்
எடுத்தானடிசேரிராமாநுசன்தாள் *
பிடித்தார்பிடித்தாரைப்பற்றி. (க)

(வகுளாபரணபட்டர் அருளிச்செய்தது.)

வாழிதிருக்குருகூர் வாழிதிருமழிசை *
வாழிதிருமலிவளநாடு *—வாழி
சுழிபொறித்தநீர்ப்பொன்னித்தென்னரங்கனதன்னை *
வழிபறித்தவாளன்வலி. (உ)

(ஸ்ரீபராங்குசதாஸர் அருளிச்செய்தது.)

திருநாடுவாழி திருப்பொருநல்வாழி *
திருநாட்டுத்தென்குருகூர்வாழி *—திருநாட்டுச்
சிட்டததமாவாழி வாழிசடகோபன *
இட்டத்தமிழ்ப்பாவிசை. (ங)

(பரகாலதாஸர் அருளிச்செய்தது.)

மங்கைநகர்வாழி வண்குறையலூர்வாழி *
செங்கையருண்மாரிசீர்வாழி *—பொங்குபுனல்
மண்ணித்துறைவாழி * வாழிபரகாலன்
எண்ணில்தமிழ்ப்பாவிசை. (ச)

(பிள்ளைஇராமானுசதாஸர் அருளிச்செய்தது.)

வாழியரோதென்குருகை வாழியரோதென்புதுவை *
வாழியரோதென்குறையல்மாநகரம் *—வாழியரோ
தக்கோர்பரவும்தடஞ்சூழ்பெரும்பூதூர் *
முக்கோல்பிடிததமுனி. (ரு)

(திருவரங்கத்தமுதனார் அருளிச்செய்தது.)

மொழியைக்கடக்கும்பெரும்புகழான் * வஞ்சமுக்குறும்பாம
குழியைககடக்கும்நங்கூரத்தாழ்வான்சரண்கூடியபின *
பழியைக்கடத்தும்இராமானுசன்புகழ்பாடியல்லா
வழியைக்கடத்தல * எனக்குஇனியாதும்வருத்தமன்றே. (சா)

## சாத்துமறை.

(பிள்ளை அழகியமணவாளதாஸர் அருளிச்செய்தது)

நெஞ்சத்திருந்து நிரந்தரமாக நிரயத்துய்க்கும் *
வஞ்சக்குறும்பின் வகையறுத்தேன் * மாயவாதியர்தாம்
அஞ்சப்பிறந்தவன் சீமாதவனடிக்கு அன்புசெய்யும் *
தஞ்சத்தொருவன் சரணாம்புயம் என் தலைக்கணிந்தே. (எ)

(பின்பழகராம்பெருமாள்சீயர் அருளிச்செய்தது.)

ஊழிதொறும் ஊழிதொறும் உலகமுய்ய
உம்பர்களும் கேட்டுய்ய * அன்பினாலே
வாழியெனும் பூதம்பேய்பொய்கைமாறன்
மழிசையர்கோன் பட்டர்பிரான் மங்கைவேந்தன் *
கோழியர்கோன் தொண்டர்துகள் பாணன் கோதை
குலமுனிவன் கூறிய நூலோதி * வீதி
வாழியென வருந்திரளை வாழ்த்துவார்தம்
மலரடி என் சென்னிக்கு மலர்ந்த பூவே. (அ)

இயல்சாத்து ஸம்பூர்ணம்.



## சாத்துமறை.



பல்லாண்டுபல்லாண்டுபல்லாயிரத்தாண்டு *
பலகோடி நூறாயிரம் *
மல்லாண்ட திண்தோள் மணிவண்ணா! * உன்
செவ்வடி செவ்வி திருக்காப்பு.

அடியோமோடும் நின்னோடும் பிரிவின்றி ஆயிரம்பல்லாண்டு *
வடிவாய் நின் வலமார்பினில் வாழ்கின்ற மங்கையும்பல்லாண்டு *
வடிவார்சோதி வலத்துறையும் சுடராழியும்பல்லாண்டு *
படைபோர்புக்கு முழங்கும் அப்பாஞ்சசன்னியமும்பல்லாண்டே

(பெரியசீயர் அருளிச்செய்தது.)

ஸர்வதேசதசாகாலேஷ்வவ்யாஹதபராக்ரமா-
ராமாநுஜார்யதிவ்யாஜ்ஞாவர்த்ததாமபிவர்த்ததாம்.

(கந்தாடையண்ணன் அருளிச்செய்தது.)

ராமாநுஜார்யதிவ்யாஜ்ஞாப்ரதிவாஸரமுஜ்ஜ்வலா-
திகந்தவ்யாபிநீபூயாத்ஸாஹி லோகஹிதைஷிணீ.

(உடையவர் அருளிச்செய்தது)

ஸ்ரீமச்ஸ்ரீரங்கஶ்ரியமநுபத்ரவாமநுதிநம்ஸம்வர்த்தய -
ஸ்ரீமச்ஸ்ரீரங்கஶ்ரியமநுபத்ரவாமநுதிநம்ஸம்வர்த்தய.

(பெரியசீயர் அருளிச்செய்தது.)

நமஶ்ஶ்ரீஶைலநாதாயகுந்தீநகரஜந்மநே -
ப்ரஸாதலப்தபரமப்ராப்யகைங்கர்யஶாலிநே.

(நம்பெருமாள் அருளிச்செய்தது)

ஸ்ரீஶைலேஶதயாபாத்ரம் தீபக்த்யாதிகுணார்ணவம் -
யதீந்த்ரப்ரவணம்வந்தே ரம்யஜாமாதரம்முநிம்.

(மடத்துப்பிள்ளை அருளிசசெய்தது)

வாழிதிருவாய்மொழிப்பிள்ளைமாதகவால் *
வாழும்மணவாளமாமுனிவன் *—வாழியவன்
மாறன்திருவாய்மொழிப்பொருளை * மாநிலத்தோர்
தேறும்படியுரைக்குஞ்சீர்.

(ப்ரதிவாதிபயங்கரம் அண்ணன் அருளிச்செய்தது.)

செய்யதாமரைத்தாளிணைவாழியே
சேலைவாழிதிருநாபிவாழியே *
துய்யமார்பும்புரிநூலும்வாழியே
சுந்தரத்திருத்தோளிணைவாழியே *
கையுமேந்தியமுக்கோலும்வாழியே
கருணைபொங்கியகண்ணிணைவாழியே *
பொய்யிலாதமணவாளமாமுனி
புந்திவாழிபுகழ்வாழிவாழியே.

அடியார்கள்வாழ அரங்கநகர்வாழ *
சடகோபன்தண்தமிழ்நூல்வாழ *—கடல்சூழ்ந்த
மன்னுலகம்வாழ * மணவாளமாமுனியே ! *
இன்னுமொருநூற்றாண்டிரும்.

சாத்துமறை ஸம்பூர்ணம்.



# நாலாயிர திவ்விய ப்ரபந்தங்கள் அருளிச்செய்த ஆழ்வார்கள்.

| ஆழ்வார்கள். | அவதரித்த காலம். | அம்சம். | அருளிச்செய்த ப்ரபந்தங்கள். | பாசுரம். |
|---|---|---|---|---|
| க. பொய்கையாழ்வார் | த்வாபரயுகம அ, கூஉ, கூஅஉ | பாஞ்சஜந்யாம்சம் | முதல்திருவந்தாதி. | க00 |
| உ. பூதத்தாழ்வார் | ஷை | கதாமசம் | இரண்டாந்திருவந்தாதி | க00 |
| ங. பேயாழ்வார் | ஷை | நந்தகாம்சம் | மூன்றாந்திருவந்தாதி. | க00 |
| ச திருமழிசைப்பிரான் | ஷை | சக்கராம்சம் | திருச்சந்தவிருத்தம் (கஉ0), நான்முகன் திருவந்தாதி (கூசு) | உகசு |
| ரு. மதுரகவியாழ்வார் | அ, சுங, அஎக | வைநதேயாம்சம் | கண்ணிநுண்சிறுத்தாம்பு. | கக |
| சு. நம்மாழ்வார் | கலியுகம் சங-ஆம நாள் | ஸேநாம்சம் | திருவிருத்தம (க00), திருவாசிரியம் (எ), பெரிய திருவந்தாதி (அஎ), திருவாய்மொழி (க, க0உ.) | கஉகூசு |
| எ. குலசேகரப்பெருமான் | ஷை உஅ | கௌஸ்துபாம்சம் | பெருமாள்திருமொழி. | க0ரு |
| அ. பெரியாழ்வார் | சஎ | கருடாம்சம் | திருப்பல்லாண்டு (கஉ). திருமொழி (சசுக.) | சஎங |
| கூ. ஆண்டாள் | கூஅ | பூமிப்பிராட்டியாரம்சம் | திருப்பாவை (ங0), திருமொழி (கசங.). | கஎங |
| க0. தொண்டரடிப்பொடியாழ்வார் | உஅகூ | வநமாலாம்சம் | திருமாலை (சரு), திருப்பள்ளியெழுச்சி (க0.) | ருரு |
| கக. திருப்பாணாழ்வார் | ஙசங | ஸ்ரீவத்ஸாமசம் | அமலனாதிபிரான். | க0 |
| கஉ. திருமங்கையாழ்வார் | ஙகூஅ | சார்ஙகாம்சம் | பெரியதிருமொழி (க, 0அச), திருக்குறுந்தாண்டகம் (உ0), திருநெடுந்தாண்டகம் (ங0), திருவெழுகூற்றிருக்கை (க), சிறிய திருமடல் (க), பெரிய திருமடல். (க) | க,ஙஉஎ |
| | | | ஆக, பாசுரம் .. | ங,எஎஎ. |

நாலாயிரம் பாசுரங்கட்குச் சிறிது குறையினும் நாலாயிரமென்று வழங்குதல் மரபு; இனி, சிறிய திருமடலி லுள்ள எஎ½ - கண்ணிகளையும் பெரியதிருமடலிலுள்ள கசஅ½ - கண்ணிகளையும் செய்யுளாக வைத்துக் கணக்கிட்டு நாலாயிரம் பாசுரமென்று கணக்கிடுவோரும், இராமாநுசநூற்றந்தாதியையும் இவற்றுடன் சேர்த்துக் கணக்கிடுவாருமுளர்.

# அரும்பதவுரை.

அ

அஃகுதல் - சுருங்குதல்.
அகடு - நடுவிடம், வயிறு.
அகப்பணி - அந்தரங்ககைங்கரியம்.
அகம், அகம்படி - உள்ளிடம்.
அகலம் - மார்பு.
அகலிடம் - பூமி.
அகவலை - வலையின் உள்ளிடம்.
அகாரியம் - செய்யத்தகாததொழில்.
அகைப்பு - ஸங்கல்பம், முயற்சி, மதிப்பு.
அக்காரம் - வெல்லம்.
அக்கு - எலும்பு, ருத்ராக்ஷம்.
அக்குவடம் - சங்குமணிவடம்.
அங்கம் ஆறு - சிக்ஷை, வியாகரணம், சந்தஸ், நிருக்தம், ஜ்யோதிஷம், கல்பம்.
அங்காத்தல் - வாய்திறத்தல்.
அங்கி - அக்நி.
அசும்பு - நீர்ப்பெருக்கு.
அசுரர் - இராக்கதர்.
அசசன் - ஸ்வாமி.
அச்சுதன் - அடியார்களை நழுவவிடாத திருமால்.
அச்சோ - ஆச்சரியக் குறிப்பிடைச்சொல்.
அஞ்சனம் - மை.
அடல் - வலிமை, போர், கொல்லுதல்.
அடிகள் - ஸ்வாமி.
அடிசில் - சோறு.
அடிச்சி - அடியவள்.
அடிதாறு - பாதரேகை.
அடிநிலை - பாதுகை.
அடியுறை - பாதகாணிக்கை.
அடுதல் - சமைத்தல், கொல்லுதல்.
அடை - இலை.
அடைக்காய் - வெற்றிலைபாக்கு.
அட்டல் - வார்த்தல் சமைத்தல்.
அணங்காடுதல் - ஆவேசமாடுதல்.
அணங்கு - தெய்வம், வருத்தம்.
அணர் - தாடை.

அ

அணவுதல் - கிட்டுதல்
அணர் கழுத்துக்குக்கீழுறுப்பு.
அணுக்கர் - சமீபத்திலிருப்பவர், அந்தரங்கர்.
அணை - படுக்கை.
அண்டம் . மேலுலகம்.
அணடர் - நித்தியசூரிகள், இடையர்.
அண்டவாணர் - மேலுலகத்தில் வசிக்கும தேவர்.
அண்ணல் - பெருமையுடையவன்
அணணித்தல் - தித்தித்தல்.
அணமை - சமீபம்.
அதகன் - ஔதகன், ஆச்ரிதர்களின் விரோதிகளைப் போக்கும் மிடுக்குடையவன்.
அதர் - வழி.
அதவுதல் - நெருக்குதல்.
அதள் - தோல்
அத்தத்தின் பத்தாம்நாள் - முன்னே சிரவணம், பின்னே ரோகிணி.
அததன் - ஸ்வாமி.
அததாணி - அருகான இடம், ஆஸ்தானம்
அத்தாணிசசேவகம் - பிரியாமல் நெருங்கிசசெய்யுஞ் சேவை.
அத்திரம் - அம்பு.
அாகன் - குற்றமற்றவன்.
அனங்கன் - மன்மதன்.
அநந்தன் - ஆதிசேஷன்.
அநுராகம் - ஆசை.
அந்தகன் - குருடன், யமன்.
அநதணமை - பிராமணத்தன்மை.
அந்தது - அப்படிப்பட்ட பிராப்ய வஸ்து
அந்தமில்பேரின்பம் - முடிவில்லாத நிரதிசயவின்பம்.
அந்தரம் - இடையூறு, தாமதம், இடைவெளி.
அந்தரி - துர்க்கை.
அந்தி - மாலைப்பொழுது.

அ

அந்திகாவலன் - சந்திரன்.
அபயம் - முறையிடுதல், ரக்ஷகம்.
அபிமானதுங்கன் - அபிமானத்தினாற் சிறந்தவன்.
அப் - ஜலம்.
அமணர் - ஜைநர்.
அமஞ்சூழ்ந்து - அமைந்து பரந்து.
அமரர் - மரணமில்லாத தேவர், நித்தியசூரிகள்.
அமருலகு - பரமபதம்.
அமர் - யுத்தம்.
அமலன் - குற்றமற்றவன்.
அமளி - படுக்கை.
அமை - மூங்கில்.
அம்பரம் - வஸ்திரம், ஆகாசம்.
அம்பு - நீர்.
அம்புதம் - மேகம்
அம்புயம் - தாமரை.
அம்புலி - சந்திரன்.
அம்மம் - முலைப்பால்.
அம்மணி - இடுப்பு.
அம்மனைமார் - தாய்மார்.
அயர்ப்பு - மறதி.
அயன்வாளி - பிரமாஸ்திரம்
அயில் - வேல், கூர்மை.
அரக்கர் - ராக்ஷஸர்.
அரங்குதல் - அழிதல்.
அரசாணி - அரசமரத்தின்கிளை.
அரட்டன் - தீம்பன்.
அரணம் - க்ஷேமம்.
அரண் - காவல், மதிள், சரணம்.
அரந்தை - துன்பம்.
அரம்பன் - தீம்பன்.
அரம்பையர் - தேவமாதர்.
அரவதண்டம் - யமதண்டனை.
அரவப்பகையூர்தி - பாம்புக்குப் பகைவனாகிய கருடனை வாகனமாகவுடைய திருமால்.
அரவம் - ஓசை, பாம்பு.
அரவிந்தம் - தாமரை.
அரவிந்தலோசனம் - தாமரைக்கண்.
அரவு - பாம்பு.
அரன்சேய் - சுப்பிரமணியன்.
அரி - சிங்கம், ரேகை, கறுப்புநிறம், சத்ரு.

அ

அரியணை - சிங்காசனம்.
அரியுரு - நரஸிம்ஹஸ்வரூபம்.
அரிவை - இளம்பெண்.
அரு, அருவம் - உருவமின்மை.
அருகல் - சமீபம்.
அருக்கன் - சூரியன்.
அருத்தி - ஆசை, உண்பித்து.
அருந்துதல் - உண்ணுதல்.
அரும்பெறல் - பெறுதற்கு அருமை.
அரைத்தொடர் - அரைவடம்.
அரையன் - அரசன்.
அர்த்தபஞ்சகம் - ஸ்வஸ்வரூபம், பரஸ்வரூபம், புருஷார்த்த ஸ்வரூபம், உபாயஸ்வரூபம், விரோதிஸ்வரூபம்.
அர்த்தம் - பாதி, பொருள்.
அலகு - அளவு, நுனி. விதை, வாய்.
அலக்கண் - துன்பம்.
அலங்கல் - மாலை.
அலசுதல் - இளைப்படைதல்.
அலந்தலை - கலக்கம்.
அலப்பு - சிரமம்.
அலமருதல் - சுழலுதல்.
அலம் - கலப்பை, போதும்.
அலம்புதல் - அலையசெய்தல்
அலர் - புஷ்பம், பழிதூற்றுதல்.
அலர்மகள் - லக்ஷ்மி
அலவலை - தனது வெற்றியைப் பிறர்மேல் ஏற்றிப் புகழ்பவன் பொய்யன், வாயாடி.
அலவன் - ஆண்நண்டு.
அலவை - வஞ்சகமுள்ளவன்.
அலற்றுதல் - அழுதல்.
அலி - நபும்ஸகம்.
அலைவலிமை - அலைச ல்தன்மை.
அலோகம் - கண்ணுக்கு விஷயமாகாத வஸ்து.
அல் - இராத்திரி, இருட்டு.
அல்ல - பாவம்
அல்லல் - துன்பம், தோஷம்.
அல்லி - அகவிதழ், ஓர்நீர்ப்பூக்கொடி.
அல்வழக்கு - தகாதமுறை.
அவத்தம் - அபதநம், இழிவு, தவறு, பொல்லாங்கு, வீண்.

அவபிருதம் - யாகத்தின்முடிவிற்செய்யுமங்களஸ்நானம.
அவம் - வீண.
அவயம் - அபயம், அடைக்கலம்
அவலம் - துன்பம்
அவனியாள் - பூமிதேவி.
அவா - ஆசை.
அவியுணா - ஹவிஸ், யாகங்களில் தேவர்களுக்குக் கொடுக்கும் உணவு.
அவுணன் - ராக்ஷஸன், அசுரன்.
அவை - ஸபை.
அழக்கொடி - பேயமகள்.
அழுந்தை - திருவழுந்தூர்.
அழும்புதல் - மிகநெருங்குதல்.
அளகைக்கோன் - குபேரன.
அளறு - சேறு.
அளி - வண்டு, கிருபை
அளை - தயிர், சேறு, வளை.
அள்ளல் - குழைசேறு, நெருக்கம்.
அறவன் - தர்மஸ்வரூபி
அறுசுவை - கைப்பு புளிப்பு உவர்ப்பு கார்ப்பு தித்திப்பு துவர்ப்பு.
அறுதொழில் - ஓதல் ஓதுவித்தல் யாகம்செய்தல் செய்வித்தல் ஈதல் ஏற்றல்.
அறுபதம் - வண்டு.
அறுமுகன் - சுப்பிரமணியன்.
அறுவகைச்சமயம் - பௌத்தம், ஜைநம், பைரவம், காளாமுகம்.லோகாயதம், சூநியவாதம; பிறவாறும் கூறுவர்
அறை - பாறை.
அறைகூவுதல் - போர்செய்ய வலியக்கூப்பிடுதல்.
அறையோ - சயித்தவர்கள் தோற்றவர்களை நோக்கிச்சொல்லும்வார்த்தை, முறையிடுதல்.
அற்கம் - அடக்கம்.
அற்றம் - சமயம், இடையூறு, இல்லாமை.
அனங்கன் - மன்மதன்.
அனந்தல் - நித்திரை.
அனந்தசயனன் - ஆதிசேஷசயனத்திற்பள்ளிகொண்டவன்.
அனுங்குதல் - நோவுபடுதல்.
அனை - தாய்.
அன்றுதல் - சீறுதல்.
அன்னவசஞ்செய்கை - உணவுக்கு ஈடாக இடம்வலம் கொள்ளுதல், தூங்குதல்.

## ஆ

ஆகமவாதியர் - சைவர்.
ஆகம் - மார்பு, உடம்பு.
ஆகுலம் - துன்பம்.
ஆக்கம் - செல்வம், பேறு.
ஆக்கை - சரீரம்
ஆங்காரம் - அஹங்காரம்.
ஆசறுத்தல் - நிரவித்தல்.
ஆசு - குற்றம்
ஆடகம - ஒருவகைப்பொன.
ஆடல்மா - திருமங்கையாழ்வாரது குதிரை.
ஆடு - வெற்றி
ஆட்சி - ஆளுகை.
ஆணம் - கதி
ஆணிப்பொன் - மாற்றறிதற்குக்கொள்ளும் உயர்தரப்பொன்.
ஆணை - சத்தியம.
ஆண்டு - வருஷம், அரசாட்சிசெய்து.
ஆதரம் - அன்பு.
ஆதர் - இழிந்தவர்.
ஆதித்தியன் - சூரியன்.
ஆத்தன் - ஆப்தன்.
ஆநிரை - பசுக்கூட்டம்.
ஆப்பு - கட்டு, சரீரம்.
ஆம்பல் - இலைக்குழலோசை, அல்லி.
ஆயம் - தோழியார்கூட்டம், வேலைத்திறம், சிநேகம.
ஆயர்பாடி - இடைச்சேரி.
ஆய்க்குலம் - இடைச்சாதி.
ஆய்மகள் - நப்பின்னைப்பிராட்டி.
ஆரணம் - வேதம்.
ஆரம - மாலை, சந்தனம்
ஆரல் - ஒருவகைமீன்.
ஆராஅமுதம் - தெவிட்டாத [பரமபோகயமான] அமிருதம்.
ஆராமம் - சோலை.
ஆராமை - திருப்திபிறவாமை.
ஆரியன் - ஆசாரியன்.
ஆர் - கூர்மை, இலை.
ஆர்கலி - கடல்.
ஆர்தல் - நிறைதல்.

ஆர்த்தல் - ஆரவாரஞ்செய்தல், கட்டுதல்.
ஆர்ப்பு - பேரொலி.
ஆர்வம் - அன்பு.
ஆலம் - விஷம்.
ஆலி - மழைத்துளி.
ஆலித்தல் - ஆரவாரஞ்செய்தல், ஓலமிடுதல்.
ஆலுதல் - ஆடுதல்.
ஆவத்தனம் - ஆபத்துக்காலத்தில் உதவும் செல்வம்.
ஆவா - யாவா
ஆவலிப்பு - ஆசைப்படுதல், செருக்குதல்.
ஆவித்தல் - நெடுமூச்சுவிடுதல்.
ஆழி - சக்கராயுதம், வட்டவடிவம், கடல், சூரியன்.
ஆளம்வைத்தல் - ஆலாபித்தல்.
ஆளரி - நரசிங்கம்
ஆளி - சிங்கம்
ஆறு - விதம்.
ஆற்றல் - பராக்கிரமம்.
ஆறா - அழியாத
ஆனின்மேயஐந்து - பஞ்சகவ்யம்.
ஆனைசசாத்தன் - வலியன்.
ஆன் - பசு.

இ

இகல் - போர், பகை.
இகுள் - செவிலித்தாய்.
இசலுதல் - பேரொலிசெய்தல்
இசை - இராகம், உடன்பாடு.
இஞ்சி - மதிள்.
இடத்தல் - பிளத்தல்.
இடவன் - மணகட்டி.
இடும்பை - துன்பம்.
இடைவீடு - விச்சேதம்.
இடைகழி - நடுவிடம் [நடை.]
இட்டம் - இஷ்டம்.
இட்டிடை - சிறியஇடுப்பு
இணக்கம் - சகவாசம்.
இணர் - பூங்கொத்து
இணை - இரண்டு. ஒப்பு.
இணடை - பூமாலை.
இணடைக்குலம் - நெருங்குதலையுடைய கூட்டம்.
இதணம் - பரண்.
இதயம் - மனம்.
இதழ் - உதடு.
இந்திரகோபம் - தம்பலப்பூச்சி.
இந்திரஞாலம் - மாயவித்தை.
இந்திரன்சிறுவன் - அருச்சுனன்.
இந்து - சந்திரன்.
இமம் - பனி.
இமவந்தம் - இமயமலை.
இமில் - மூசுப்பு.
இமையவர் - தேவர்.
இம்பர் - இவ்விடம்.
இயக்கு - அசைதல், துன்பம்.
இயக்கர் - யக்ஷர்.
இயம்புதல் - சொல்லுதல்.
இயல் - லக்ஷணம்.
இயல்வு - விரகு.
இரவி - சூரியன்.
இராகம் - ஆசை, இசைப்பாட்டு.
இராவணாந்தகன் - இராவணனைக் கொன்றவன்.
இரிதல் - ஓடுதல்.
இரீஇ - இருத்தி.
இருக்கு - வேதம்
இருக்கை - இருப்பிடம்.
இருடீகேசன் - ஹ்ருஷீகேசன், இது, எம்பெருமானது துவாதசநாமங்களுள் ஒன்று, இந்திரியங்களை அடக்கியாள்பவனென்று பொருள்படும்.
இருந்தில - கரி.
இருபிறப்பு - இயற்கையான ஜன்மத்தோடு ஞானஜன்மமுஞ்சேர்ந்த பிராமணப்பிறப்பு [த்விஜா.]
இருவாட்சி - மலர்விகையில் ஓர்சாதி.
இலகுதல் - விளங்குதல்.
இலக்கியம் - லக்ஷ்யம்.
இலக்கு - குறி.
இலங்குதல் - விளங்குதல்.
இலச்சினை - அடையாளம், முத்திரை
இலட்டுவம் - லட்டு.
இலிங்கியர் - லிங்கப்பிரமாணவாதிகள், ஆநுமாநிகர்.
இலைக்குரம்பை - பர்ணசாலை.
இல்லம் - வீடு.
இல்லவள் - மனைவி.
இல்லறம் - க்ருஹஸ்ததருமம்.
இல்லி - சிறுதுவாரம்.
இவரித்தல் - எதிர்த்தல்.
இழவு - இழத்தல்.

இழுக்கு - குறைவு, தவறு.
இழுசுதல் - பூசுதல்.
இழை - ஆபரணம், செய்.
இளங்கோ - இளையபெருமாள்.
இளங்கோயில் - பாலாலயம்.
இளம்படி - இளந்தன்மை.
இறப்பு - மரணம், மோக்ஷம்.
இறவு - மீன்விசேஷம், முடிதல்.
இறுகல் - ஸங்கோசம்
இறுத்தல் - செலுத்துதல்.
இறுமாப்பு - கர்வம்.
இறை-சிறிது, அரசன்,கடவுள்,சப்பம்.
இறைச்சி - மாமிசம்.
இறைஞ்சுதல் - வணங்குதல்.
இறைநிலை - பரமாத்மஸ்வரூபம்
இன்பமாரி - இன்பத்தை யுண்டாக்கும் மேகம்.
இன்னுமை - துன்பம்

ஈ

ஈசன் - சிவன்
ஈடறவு - விடாமுயற்சி
ஈடு - ஒப்பு, தகுதி.
ஈட்டம் - கூட்டம்.
ஈட்டுதல் - திரளுதல்
ஈணடுதல் - நெருங்குதல்.
ஈரி - அன்புடையவள்.
ஈர்த்தல் - இழுத்தல்
ஈரமை - உபயபாவனை, ஈரப்பாடு.
ஈளை - கோழை.
ஈற்றுத்தாய் - பெற்றதாய்.

உ

உகவாதவர் - பகைவர்.
உகவை - சந்தோஷம்
உகளுதல் - புரளுதல்
உகிர் - நகம்.
உகைத்தல் - உபேக்ஷித்தல்,செலுத்துதல்.
உக்கம் - விசிறி.
உசாவுதல் - வினவுதல்.
உடுக்கை - வஸ்திரம்.
உடை - வஸ்திரம்.
உட்கண் - ஞானம்
உட்கு - பெருமை, அச்சம்.
உணங்கல் - உலாத்தின நெல், புழுங்கல்நெல்.
உண்டி - உணவு.
உதரம் - வயிறு
உத்தரவேதி - யாகஸ்தானம்.
உத்தானம் - எடுத்தல்.
உந்தி-கொப்பூழ், மகளிர்விளையாட்டு.
உந்தை - உனதந்தை.
உமா - உம்மைச்சேர்ந்தவர்
உமைபங்கன் - பார்வதியை இடப்பாகத்திற்கொண்ட சிவன்.
உம்பர் - மேலிடம், தேவர்.
உம்பி - உன்தம்பி
உயவேன் - ஸஹவாஸம் செய்யேன், விஞவேன்
உயிர்நிலை - ஜீவாத்மஸ்வரூபம்.
உயிர்ப்பு - மூச்சு
உயோகுதுயில் - யோகநித்திரை, எல்லாவற்றையும் அறிந்துகொண்டே தூங்குதல்.
உயத்தல் - கொண்டுவிடுதல்.
உய்வு - பிழைப்பு
உரகம் - பாம்பு.
உரப்புதல் - மல்க்குதல், அதட்டுதல்.
உரம் - பலம், மார்பு.
உரவு - வலிமை.
உரன் - மனம்.
உரிஞ்சுதல் - தேய்த்தல்.
உரு - ரூபம், தேகம்
உருத்தல் - கோபித்தல்.
உருப்பன் - ருக்மன்.
உருப்பிணி - ருக்மிணி
உருபபொலா - அழகில்லாத முடையார்
உரும் - இடி.
உருவறை - அழகில்லாதவன்.
உருவி - உர்வீ, பூமி
உரைக்கியம் - சொல்வோம்.
உரோடம் - கோபம்.
உரோமகூபம் - மயிர்ச்சிலிர்ப்பு.
உலங்கு - பெருநுளம்பு, கொசுகு.
உலப்பு - அழிவு, வறட்சி.
உலோபாய் - பின்வாங்கமாட்டாய்.
உவணப்புள் - கருடப்பக்ஷி.
உவரி - கடல்.
உவலை - இழிவு.
உவனியம் - உபநயநம்.
உவன் - மத்தியிலிருப்பவன்.
உவா - அமாவாஸ்யை, பௌர்ணமி.
உழக்குதல் - கலக்குதல்.
உழத்தல் - வருந்துதல்.
உழலை - குறுக்கிடும் மரம்.

உழறுதல் - அளைதல், துகைத்தல்,கலககுதல்,
உழிதருதல் - அலைச்சல்படுதல்.
உழுவை - புலி.
உழை - புள்ளிமான்
உளை - புறமயிர்
உள்ளுதல் - நினைத்தல்.
உறகல் - உறஙகல், உறஙகவேணடா.
உறைப்பன் - மிடுக்குடையவன்
உறைப்பு - உறுதி.
உறைவிடம் - இருப்பிடம்.
உன்னி - நினைததற்குஉரியவன்.
உன்மத்தர் - பைததியம்பிடிததவர்.
உன்னுதல் - நினைததல.
உஷையின்தோழி - சித்ரலேகை (இவள் கணணனது பௌத்ரனை அநிருத்தனை கொணடுபோனாள்.)

ஊ

ஊடல் - பிரணயகலகம்.
ஊட்டம் - தீனி.
ஊண - உணவு
ஊதல் - நடுக்குதல்.
ஊதை - குளிர்காற்று.
ஊரகம் - உலகளந்த பெருமாள் சந்நிதி
ஊரு - தொடை.
ஊர்தி - வாகனம்
ஊழி - விலக்ஷணகாலம், கற்பகாலம்.
ஊழிலை - மூளையிலே விழுநத இலை, சருகு.
ஊழ் - முறை, விதி.
ஊழ்ததல் - கனிதல.
ஊழ்மை - முறைமை.
ஊளி - பசி.
ஊறு - ஸ்பாசம்.
ஊற்றம் - உறுதி
ஊனகாரகர் - தாங்கள் கொல்லுவதல்லாமல் பிறரைக்கொணடுமே கொல்விப்பவர்.
ஊனம் - குறைவு
ஊனேயகுரம்பை - மாம்ஸதேகம்.
ஊன் - மாமிசம்.

எ

எக்கம் - தாளம்.
எக்கல் - மேடு.
எக்கே - இதுஎன்னகஷ்டம்?
எசசம் - சந்ததி.
எஞ்சல் - குறைவு.
எடுப்பு - உயர்வு,
எட்டினொடிரண்டு - பததுா, பக்தி.
எணகணணன் - பிரமன்.
எண்கு - கரடி.
எண்தோளினள் - துர்க்கை.
எம்மாவீடு - எமக்காகததருகிற விலக்ஷணமான மோக்ஷம்.
எயில் - மதிள்.
எயிறு - பல.
எய்ப்பினில்வைப்பு - தளர்ந்தகாலததில உதவும் செலவம
எய்ததல் - இளைததல்.
எரியம்பு - ஆக்நேயாஸ்தரம்.
எரிவு - எரிசசல்.
எருதது - முசுப்பு.
எருததுககொடியுடையான் - ருஷபதவசதததையுடைய சிவன்.
எலவி - இரவு.
எல்லே - தோழி! வியப்பும்இரக்கமும் பற்றிவருமஇடைசசொல.
எவம - எது.
எவ்வம - துன்பம்.
எழில - அழகு.
எழுமை எழுபிறப்பு; ஊர்வன மானிடம் தேவர் நீர்வாழ்வன பறவை மிருகம் தாவரம
எள்கல் - நெகிழ்தல்.
எறறு - எபபடிப்பட்டது
எற்றுதல - மோதுதல்.
'எனது' என்பது - மமகாரம
எனைதது - எவ்வளவு.
எஃகு - எஃகினாற்செய்த சூலம்.

ஏ

ஏ - பாணம்.
ஏகம் - ஒன்று.
ஏடு - ஸூக்ஷ்மசரீரம், புஸ்தகம்
ஏண் - நிலை, வலிமை
ஏதம - குற்றம், துன்பம்.
ஏதலன் - அயலான்.
ஏதிலர் - பகைவர், அயலார்.
ஏததுதல் - புகழ்தல்.
ஏமம் - கட்டழகு, வலி, மயக்கம், இனிமை, காவல், இராததிரி.
ஏமாறறம் - துன்பம்.
ஏய்ததல் - ஒத்தல்.
ஏர் - அழகு, ஒப்பு.
ஏர்வு - ஒப்பு.
ஏலம் - வாசனை.
ஏவலம் - அம்பின்திறமை.

ஏழிசை - தாரம், உழை, குரல், இளி, துத்தம், விளரி, கைக்கிளை.

ஏழுமால்வரை-ஸப்தகுல பர்வதங்கள்; கைலை இமயம் மந்தரம் விந்தியம நிடதம் ஏமகூடம் நீலகிரி என்பன.

ஏழையா - சபலமுடையவா.

ஏழ்ச்சி - விகாரம.

ஏறன் - சிவன்.

ஏறு - ஆண்சிங்கம்.

ஏறூரன் - சிவன்.

ஏனம - பன்றி.

ஏனோர் - மற்றையோா, பகைவா.

என்றேன் - பொருந்தினேன.

ஐ

ஐங்கணைவில்லி - ஐந்து புஷ்பபாணங்களையுடைய மனமதன்.

ஐ - கோழை.

ஐங்கருவி - பஞ்ச இந்திரியங்கள்.

ஐம்படை - பஞ்சாயுதமென்னும் ஆபரணம்.

ஐம்பால் - கூந்தல்; மென்மை குளிர்ச்சி நாற்றம நெடுமை கறுப்பு என்ற ஐங்குணமுடையது; அன்றி, முடி குழல கொண்டை பனிச்சை சுருள் என ஐவகையாகப் புனையப்படுவது.

ஐம்பெருபூதம்-பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாசம

ஐயம் - யோக்யவிஷயததில் இடுவது.

ஐயப்பாடு - சந்தேகம்.

ஐயறிவு - பஞ்ச இந்திரியவுணாச்சி

ஐயுறவு - சந்தேகம

ஒ

ஒக்கலித்தல் - நடைபழகுதல்.

ஒக்கலை - இடுப்பு.

ஒசித்தல் - ஒடித்தல்.

ஒசிவு - தளாச்சி.

ஒட்டு - உவமை

ஒண்தொடி - அழகிய வளையல்களையணிந்தவள்.

ஒண்மை - நன்மை

ஒருக்கடுத்தல் - ஒருமைப்படுத்துதல்.

ஒருங்கிற்று - ஒருவழியிற்சேர்ந்தது.

ஒருங்கு - முழுதும்.

ஒருநாயகம் - தனியரசாட்சி.

ஒல்குதல் - நாணங்கொண்டு கூசுதல்.

ஒல்லை - விரைவு.

ஒற்கம் - ஒடுக்கம்.

ஒன்றிரண்டுகெண்ணினன்-மூன்றுகண்களையுடைய சிவன்.

ஒன்றுதல் - கலத்தல்.

ஒன்னலர் - பகைவர்.

ஒன்னார் = ஒன்றார் - சத்துருக்கள்.

ஓ

ஓச்சுதல் - ஓங்கியடித்தல்.

ஓடை - முகபடாம.

ஓட்டருதல் - ஓட்டந்தருதல், ஓடிவருதல்

ஓதம் - குளிர்ச்சி, அலை, கடல்.

ஓதி - கூந்தல்.

ஓத்து - வேதம்

ஓராமை - ஆராய்ந்தறியாமை.

ஓர்ப்பு - மனனம்பண்ணுதல்

ஓலக்கம் - ஸாந்நித்யம, காட்சிகொடுத்தல்.

ஓலமிடுதல் - கதறிக்கூப்பிடுதல்.

ஓவி - சித்திரம.

ஓவுதல் - ஒழிதல்

ஓளி - ஒழுங்கு.

க

கங்கு - முற்றுதல், இராத்திரி, நிறம்.

கங்குல - இராத்திரி.

கசிதல் - ஈடுபடுதல்

கச்சங்கம - வியவஸ்தை, பிரதிஜ்ஞை.

கச்சி - காஞ்சீபுரம்

கச்சு - அரைவஸ்திரததின்மேற் கட்டுவது.

கடம்-காடு, மதநீா, பாபபலம், அவசியம செய்றபாலது.

கடலேழ் - உவர்நீர், நன்னீர், பால், தயிர், நெய், கருப்பஞ்சாறு, தேன் இவற்றின் மயமானவை

கடவன் - கடமைப்பட்டவன்

கடவு - கடமை, பிராப்தி.

கடாம் - மதநீர்.

கடாரம் - பெரியபாத்திரம்.

கடாவுதல் - செலுத்துதல்.

கடி - காவல், மதிள், வாசனை, கலியாணம்.

கடிகைத்தடங்குன்று - சோளசிங்கபுரம.

கடிப்பு - ஒருகாதணி.

கடிறு = களிறு, யானை.

கடுவன் - ஆண்குரங்கு.

கடைத்தலை - தலைவாசல்.

கடையா - மூங்கிற்குழாய்.

கச. திருக்குடந்தை:—சார்ஙகபாணிப்பெருமாள், ஆராவமுதன்-கோமள வல்லி. வைதிகவிமாநம். ஹேமபுஷ்கரிணி கிழக்கே திருமுகமண்டலம் - உதயோகசயநம். ஹேமமகரிஷிக்கு ப்ரதயக்ஷம். பெரியாழ்வார். திருமழிசை யாழ்வார், திருமஙகையாழ்வார், பூததாழ்வார், பேயாழ்வார், நம்மாழ்வார் மஙகளாசாஸநம். கும்பகோணததுக்கு வடமேற்கே க - மைலில் உள்ளது.

கரு. திருக்கண்டியூர்:—அரன் சாபந்தீர்ததபெருமாள்-கமலவல்லி நாச்சியார். கமலாக்ருதி விமாநம். கபாலதீர்ததம் கிழக்கே திருமுகமணடலம் - நின்ற திருக்கோலம். ருததிரனுக்கு கபாலநிவாரததி செய்தவர். அகஸ்தியருக்கு ப்ரதயக்ஷம். திருமஙகையாழ்வாா மஙகளாசாஸநம். சிவபெருமானது சாபத்தைக கணடநம்செய்ததுபோலச சேவைசாதிதத தலமாதலால், இத் தலததிற்கு 'திருககணடியூர்' என்று திருநாமமாயிற்று வடமொழியில் 'கண்டநபுரம்' என்று வழங்கும். தஞ்சாவூர்ககு வடகிழக்கே ரு-மைலில் உள்ளது.

கசு. திருவிண்ணகர்:—உப்பிலியப்பன் - பூமிதேவிநாச்சியாா. விஷ்ணு விமாநம். ஆர்த்தி புஷ்கரிணி. கிழக்கே திருமுகமணடலம் - நின்ற திருக் கோலம். மார்க்கணடேயருக்கும், பெரியதிருவடிக்கும், காவேரிக்கும், தர்ம தேவதைக்கும் ப்ரத்யக்ஷம். திருமஙகையாழ்வாா, பொய்கையாழ்வார், பேயாழ் வார், நம்மாழ்வார் மஙகளாசாஸநம். (விணணகரென்பது - தேவலோகம்போ ன்றதென்ற காரணம்பற்றிவந்த பெயரென்னலாம்; இதுவே, உப்பிலியப்பன் ஸந்நிதியெனப்படுவது.) இததலதது எம்பெருமான்திருநாமமான உப்பிலியப் பன் என்பதை ஒப்பிலியப்பனென்றுமவழஙகுவர். இததலதது எம்பெருமான் திருவேஙகடமுடையான்போன்ற திருவுருவ முள்ளவராய், அன்பர்களின் அபிமதத்தைப் பூர்ததிசெய்கின்றனரென்றும், மிருகணடுமுனிவர் பத்தினி யினதுவிருப்பத்தின்படி உப்பில்லாத பிரசாதஙகளேயே அமுதுசெய்கின்றன ரென்றும் அறிக. கும்பகோணததுக்குக் கிழக்கே ங - மைலில் உள்ளது.

கஎ. திருக்கண்ணபுரம்:—சௌரிராஜன் - கணணபுரநாயகி. உத்பலா வதகவிமானம் நித்யபுஷ்கரிணி கிழக்கே திருமுகமணடலம் - நின்ற திருக் கோலம். கண்வமாமுனிக்கு ப்ரத்யக்ஷம். பெரியாழ்வார், ஆணடாள், குலசேக ராழ்வார், திருமஙகையாழ்வார், நம்மாழ்வார் மஙகளாசாஸநம். திருக்கண்ண புரமென்பது, பஞ்சகிருஷ்ணக்ஷேதரஙகளுள் ஒன்று; (மற்றவை - திருக்கண் ணங்குடி, திருக்கண்ணமங்கை, திருக்கணணன் கவித்தலம், திருக்கோவலூர் என்பன என்பர்.) இததலத்தின் மறுபெயா, கண்வபுரம். இததலத்தில் விமா னம் - உத்பலாவதகம்; அதன்பொருள் வருமாறு—பலம் - மாமிசம், அது சோஷிக்கப்பெற்றவர் - உத்பலர் அவராவர் - தேகத்தை உபேக்ஷிக்கின்ற முமுக்ஷுக்கள். அவர்களேக்காக்கின்ற கடவுள் எழுந்தருளியிருக்கும் விமான மாதலால், இதற்கு 'உதபலாவதகம்' என்று திருநாமம். இதுபற்றியே, 'மரண மானல் வைகுந்தங்கொடுக்கும் பிரான்'என்று நம்மாழ்வார் மஙகளாசாஸனஞ் செய்ததும். இவ்விமானம் பிரதக்ஷிணஞ் செய்யும்போது கட்புலனுகாதவாறு கட்டப்பெற்றுள்ளதென்பர். நன்னிலத்துக்குக் கிழக்கே ச மைலில் உள்ளது.

௧அ. திருவாலி திருநகரி:—வயலாலி மணவாளன் - அம்ருதகடவல்லி. அஷ்டாக்ஷர விமானம். இலாக்ஷணி புஷ்கரிணி. மேற்கே திருமுகமண்டலம் - வீற்றிருந்த திருக்கோலம். அலாத நிகஞ்சமப்ரஜாபதிக்கும், திருமங்கையாழ்வாருக்கும் ப்ரத்யக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம். எம்பெருமானைத் திருமகள் ஆலிங்கனஞ் செய்துகொண்ட தல மாதல்பற்றி, இதற்கு, 'திருவாலி' என்று பெயர். சீயாழிக்குக் கிழக்கே ௬ - மைலில் உள்ளது.

௧௯. திருநாகை (நாகப்பட்டணம்) :—சௌந்தர்யராஜன் - சௌந்தர்ய வல்லி. சௌந்தர்ய விமானம். ஸாரபுஷ்கரிணி. கிழக்கே திருமுகமண்டலம்-நின்ற திருக்கோலம். நாகராஜனுக்கும், திருமங்கையாழ்வாருக்கும் ப்ரத்யக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம். நாகை - நாகபட்டண மென்பதன் மரூஉ. நாகராஜனுக்குப் பிரதியக்ஷமான தல மாதலால், இதற்கு 'திருநாகை' என்று பெயர். நாகப்பட்டணத்துக்கு மேற்கே கால் - மைலில் உள்ளது.

௨௦. திருநறையூர் (நாச்சியார் கோயில்.)—நம்பி - நம்பிக்கை நாச்சியார். ஸ்ரீநிவாஸவிமானம். மணிமுக்தாநதி. கிழக்கே திருமுகமண்டலம் - நின்ற திருக்கோலம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம். நறுமணம்மிக்க தல மென்பதுபற்றி, இதற்கு 'திருநறையூர்' என்று திருநாமம்; வடமொழியில், 'ஸுகந்தகிரி' என்று எம்பெருமான் எழுந்தருளியிருக்கு மிடத்தை வழங்கு வது காணக. இங்கு, கந்யாசுல்கமாக நாச்சியாருக்குப் பிரதானியத்தை எம்பெருமான் அளித்ததனால், இத்தலத்திற்கு 'நாச்சியார்கோவில்' என்று ஒரு பெயர் வழங்குகின்றது. இத்தலத்து எம்பெருமான், மேதாவிமுனிவரின் கன்னிகையைப் பலியென்னும் அசுரன் கவர்ந்துசெல்ல அவனைசசபித்து அக்கன்னிகையை அம்முனிவர்க்கு அருள்செய்தன ரென்றும், திருமங்கையாழ்வார்க்குத் திருவிலச்சினை பிரசாதித்தனரென்றும் அறிக. இங்கே கருடன் விசேஷம். கும்பகோணத்துக்குத் தென்கிழக்கே ௬ - மைலில் உள்ளது.

௨௧. நந்திபுரவிண்ணகரம் (நாதன்கோவில்):--விண்ணகரப்பெருமாள், ஜகந்நாதன், நாதநாதப்பெருமாள் - செண்பகவல்லி. மந்தாரவிமானம். நந்தி தீர்த்தம். மேற்கே திருமுகமண்டலம் - வீற்றிருந்த திருக்கோலம். நந்திக்கும், சிபி சக்ரவர்த்திக்கும் ப்ரத்யக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம். நந்திதேவர்க்குப்பிரத்யக்ஷமான சிறந்த நகரமாதல்பற்றி, இத்தலத்திற்கு, 'திருநந்திபுரவிண்ணகரம்' என்று திருநாமம்: இது. 'நாதன்கோவில்' என வழங்கும். கும்பகோணத்துக்குத் தென்மேற்கே ௩ - மைலில் உள்ளது.

௨௨. திருஇந்தளூர்:—சுகந்தவனநாதன், மருவினிய மைந்தன் - சந்திர சாபவிமோசன வல்லி, புண்டரீகவல்லி. வேதசக்ர விமானம். இந்து புஷ்கரிணி. கிழக்கே திருமுகமண்டலம் - வீரசயனம். சந்திரனுக்கு ப்ரத்யக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம். சந்திரன் தனது சாபம் நீங்கப்பெற்ற தல மாதலால், 'திருவிந்தளூர்' என்று இத்தலத்திற்குப் பெய ரென்பர். இதற்கு வடமொழியில் 'ஸுகந்தவநம்' என்று திருநாமம் வழங்குகின்றது. மாயவரத்துக்கு வடகிழக்கே ௩ - மைலில் உள்ளது.

௨௩. திருச்சித்திரகூடம்:—கோவிந்தராஜன் - புண்டரீகவல்லி. ஸாத்விக விமானம். புண்டரீக ஸரஸ். கிழக்கே திருமுகமண்டலம் - போகசயநம்.

சிவன் முதலிய தில்லைமூவாயிரவருக்கு ப்ரத்யக்ஷம். குலசேகராழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம். சித்திரக்கூடம்-விசித்திரமான சிகரங்களையுடையதெனப் பொருள்படுங் காரணப்பெயர். இது, இராமபிரான் வனவாசஞ்செய்தபொழுது அவ்வெம்பெருமானது திருவுள்ளத்திற்கு மிகவும்பாங்காயிருந்ததொரு மலை; அதனைப்போலவே, இத்தலமும் எம்பெருமானது திருவுள்ளத்திற்கு மிகவும் பாங்காயிருப்ப தென்பதுபற்றி, அப்பெயரே இதற்கும் இடப்பட்ட தென்பர். இங்கு உதஸவமூர்த்தி, இராமபிரான் வனவாசஞ்செய்கையில் சித்திரகூடபருவதத்தில் வீற்றிருந்தவண்ணமாக எழுந்தருளி யிருக்கின்றனர்; மூலமூர்த்தி, க்ஷீராப்திநாதனைபோலச் சயனத்திருக்கோலமாகிச் சிவபிரானது நடனத்தைப் பார்த்து ஆமோதித்துக்கொண்டு எழுந்தருளியிருக்கின்றனர். இது, தில்லைமரங்க ளடர்ந்த காடாயிருந்ததனால், 'தில்லைத்திருச்சித்திரகூடம்' என்று வழங்கப்படும். இது, எம்பெருமான், தேவர்களும்முனிவர்களும் சூழக் கொலுவீற்றிருந்த சபை சிதம்பரத்துக்கு வடமேற்கே ௧-மைலில் உள்ளது.

௨௪. காழிச்சீராமவிண்ணகரம்—தாடாளன், த்ரிவிக்ரமமூர்த்தி-மட்டவிழுங்குழலி. புஷ்கலாவர்த்தக விமானம் சக்ரதீர்த்தம், சங்கபுஷ்கரிணி. கிழக்கே திருமுகமண்டலம் நின்றதிருக்கோலம் அஷ்டகோணமகாரிஷிக்கு ப்ரத்யக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம் சக்கரவர்த்தித் திருமகனெழுந்தருளியிருக்கின்ற சிறந்தநகரமாதல்பற்றி,இத்தலத்திற்கு'சீராமவிண்ணகரம்' என்று பெயர். காளிவாசஞ்செய்கிற காரணம்பற்றி இத்தலத்திற்குக் காழிச்சீராமவிண்ணகரமென்றும்பெயருண்டு. (இது, சீகாழியென்றும்வழங்கப்படும்) இது, திருஞானசம்பந்தமூர்த்திநாயனுரைத் திருமங்கையாழ்வார் தமது கவித்திறத்தினால் வென்று அவரது வெற்றிவேலைத் திருமுன்காணிக்கையாகப் பெற்ற தலம். சீயாழிக்குக் கிழக்கே அரைமைலில் உள்ளது.

௨௫. கூடலூர்:-(ஆடுதுறைப் பெருமாள்கோவில்).-வையங்காத்தபெருமாள் - பத்மாஸநவல்லி. சுத்தஸத்வ விமானம். சக்ரதீர்த்தம் - காவேரிநதி. கிழக்கே திருமுகமண்டலம் - நின்ற திருக்கோலம். நந்தகமாமுனிக்கு ப்ரத்யக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம். தேவர்கள்கூட்டமாகவந்து எம்பெருமானைச் சேவிக்குந் தலமாதலால், திருக்கூடலூர்' என்று இத்தலத்திற்குத் திருநாமமென்பர். ஐயம்பேட்டைக்கு வடமேற்கே ௪-மைலில் உள்ளது.

௨௬. திருக்கண்ணங்குடி—சயாமளமேனிப்பெருமாள் - அரவிந்தவல்லி நாச்சியார். உத்பலவிமானம். ராவணபுஷ்கரிணி கிழக்கே திருமுகமண்டலம். நின்ற திருக்கோலம். ப்ருகுசையத்யருக்கும் கௌதமமுனிக்கும் ப்ரத்யக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம். கண்ணன் வாழ்கின்ற இடமாதலால், இத்தலத்திற்கு, திருக்கண்ணன்குடி என்று பெயர்: அதுவே கண்ணங்குடியென்று வழங்குவதாயிற்று. இத்தலத்தைக்குறித்து 'உறங்காப்புளி, ஊறாக்கிணறு, காயாமகிழ், தீராவழக்கு, திருக்கண்ணங்குடி' என்று ஒருபழமொழி வழங்கும். கீவளூர்க்குக் கிழக்கே ௨-மைலில் உள்ளது.

உஎ. திருக்கண்ணமங்கை.—பக்தவத்ஸலப்பெருமாள் - அபிஷேகவல்லித்தாயார். உத்பலவிமாநம். தர்சநபுஷ்கரிணி. கிழக்கே திருமுகமண்டலம் - நின்றதிருக்கோலம. வருணனுக்கும், உரோமசருக்கும் ப்ரத்யக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம். திருவாலூர்க்கு வடமேற்கே ௪-மைலில் உள்ளது.

உஅ. கவித்தலம்.—கஜேந்த்ரவரதர் - ரமாமணிவல்லி, பொற்றாமரையாள். ககநாக்ருதிவிமாநம். கஜேந்திர புஷ்கரிணி - கபிலதீர்த்தம். கிழக்கே திருமுகமண்டலம்-புஜங்கசயநம். கஜேந்திரனுக்கும், ஆஞ்சநேயருக்கும் ப்ரத்யக்ஷம். திருமழிசையாழ்வார் மங்களாசாஸநம். அநுமானுக்கு ப்ரத்யக்ஷமான தலமாதலால், இத்திருப்பதிக்கு, 'திருக்கவித்தலம்' என்று பெயரென்பர். பாபநாசத்துக்கு வடமேற்கே உ - மைலில் உள்ளது.

உகூ. திருவெள்ளியங்குடி.—கோலவில்லிராமன்-மரகதவல்லிநாச்சியார். புஷ்கலாவர்த்தகவிமாநம் சுக்ரபுஷ்கரிணி - பிரமதீர்த்தம். கிழக்கே திருமுகமண்டலம் - புஜங்கசயநம். வாழைமரம். சுக்ரனுக்கும பிரம்மாவுக்கும் பராசரருக்கும் இந்திரனுக்கும் ப்ரத்யக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம். சுக்கிராசாரியனுக்கு ப்ரத்யக்ஷமான தலமாதலால், இத்திருப்பதிக்கு 'திருவெள்ளியங்குடி' என்று பெயர். 'பார்க்கவபுரி' என்று இத்தலத்திற்கு வடமொழியில் ஒருபெயர் வழங்குதலுங் காண்க. திருவிடைமருதூர்க்கு வடக்கே ரு - மைலில் இருக்கிறது.

௩௰. திருமணிமாடக்கோயில்:—நந்தாவிளக்குப் பெருமாள், நரநாராயணன்-புண்டரீகவல்லி. ப்ரணவவிமாநம், இந்த்ரபுஷ்கரிணி, ருத்ரபுஷ்கரிணி. கிழக்கே திருமுகமண்டலம - வீற்றிருந்த திருக்கோலம். ஏகாதசருத்ரருக்கும் இந்திரனுக்கும் ப்ரத்யக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம். இதுமுதற் கூறப்படுகின்ற திருப்பதிகள் பதினொன்றையும். 'திருநாங்கூர்த் திருப்பதிகள்' என வழங்குவா அழகிய உபரிகைவீடுகள் நிறைந்து எம்பெருமானெழுந்தருளியிருக்கின்ற தலமாதலால், இத்தலத்திற்கு 'திருமணிமாடக்கோயில்' என்று பெயர் வந்ததுபோலும். சீயாழிக்குக் கிழக்கே ரு - மைலில் உள்ளது.

௩க. திருவைகுந்தவிண்ணகரம் -வைகுந்தநாதன், தாமரைக்கண்ணுடையபிரான் - வைகுந்தவல்லி. அநந்தசத்யவர்த்தகவிமாநம். லக்ஷ்மிபுஷ்கரிணி, உதங்கபுஷ்கரிணி, விரஜை. கிழக்கே திருமுகமண்டலம் - வீற்றிருந்த திருக்கோலம். உபரிசரவஸுராஜாவுக்கும் உதங்கமகரிஷிக்கும் ப்ரத்யக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம. ஸ்ரீவைகுண்டத்தில் எம்பெருமான் எழுந்தருளி யிருப்பதுபோலவே இத்தலத்தில் வீற்றிருந்த திருக்கோலமாகச் சேவை சாதித்தலால், இத்திருப்பதிக்கு 'திருவைகுந்தவிண்ணகரம்' என்று பெயரென்பர். சீயாழிக்குக் கிழக்கே ரு - மைலில் உள்ளது.

௩உ. திருஅரிமேயவிண்ணகரம்:—குடமாடகூத்தர் - அம்ருதகடவல்லி. உச்சச்ருங்கவிமாநம். கோடிதீர்த்தம், அம்ருததீர்த்தம். கிழக்கே திருமுகமண்டலம் - வீற்றிருந்த திருக்கோலம். உதங்கமகரிஷிக்கு ப்ரத்யக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம். 'திருஅரிமேயவிண்ணகரம்' என்பது அரிபொருந்

திய விண்ணகரம் போன்றது எனப்பொருள்படும். ('அரி'என்ற சொல் அழகு திருமால் குரங்கு சிங்கம் தவளை மூங்கில் முதலிய பலபொருளுள்ளது.) சீயாழிக்குத் தெற்கே ௧ - மைலில் உள்ளது.

௩௩. திருத்தேவனார் தொகை:—தெய்வநாயகப்பெருமாள் - கடல்மகள் நாச்சியார். சோபநவிமாநம் சோபநபுஷ்கரிணி, தேவஸபாபுஷ்கரிணி. மேற்கே திருமுகமண்டலம் - நின்ற திருக்கோலம். வஸிஷ்டருக்கு ப்ரத்யக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம். தேவர்கள் சபைகூடின இடமாதலால், இத்திருப்பதிக்கு 'திருத்தேவனார்தொகை' என்று பெயராயிற்றென்னலாம். சீயாழிக்குத் தென்கிழக்கே ௪ - மைலில் உள்ளது.

௩௪ திருவண்புருடோத்தமம்:—புருஷோத்தமன்-புருஷோத்தம நாயகி. சஞ்சீவிக்ரஹவிமாநம். திருப்பாற்கடல் தீர்த்தம் கிழக்கேதிருமுகமண்டலம்-நின்ற திருக்கோலம். உபமந்யுவுக்கு ப்ரத்யக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம். புருஷோத்தமனென்ற வடசொல் - பத்தர்களும் முக்தர்களும் நித்யர்களுமாகிய புருஷர்கள் யாவரினுஞ் சிறந்தவனென்று பொருள்படும். புருஷோத்தமனெழுந்தருளியிருக்கின்ற வளப்பமுள்ள திருப்பதியாதலால், இதற்கு 'திருவண்புருடோத்தமம்' என்று பெயர். சீயாழிக்குக் கிழக்கே ரு - மைலில் உள்ளது

௩௫ திருச்செம்பொன்செய்கோயில் —பேரருளாளர் - அல்லிமாமலர் நாச்சியார். கநகவிமாநம். கநகதீர்த்தம். ஹேமபுஷ்கரிணி. கிழக்கே திருமுகமண்டலம் - நின்ற திருக்கோலம். ருத்ரனுக்கு ப்ரத்யக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம். சீயாழிக்குக் கிழக்கே ரு - மைலில் உள்ளது.

௩௬. திருத்தெற்றியம்பலம்.—செங்கண்மால் - செங்கமலவல்லி. வேதவிமாநம். ஸூர்யபுஷ்கரிணி. கிழக்கே திருமுகமண்டலம் - புஜங்கசயநம் செங்கமலவல்லிநாச்சியாருக்கும், அநந்தனுக்கும் ப்ரத்யக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம். சீயாழிக்குக் கிழக்கே ரு - மைலில் உள்ளது.

௩௭. திருமணிக்கூடம்:—மணிக்கூடநாயகன் - திருமாமகள் நாச்சியார். கநக விமானம். சந்திரபுஷ்கரிணி. கிழக்கே திருமுகமண்டலம் - நின்றதிருக்கோலம். பெரிய திருவடிக்கும், சந்திரனுக்கும் ப்ரத்யக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம். சீயாழிக்குக் கிழக்கே ரு - மைலில் உள்ளது.

௩௮ திருக்காவளம்பாடி:—கோபாலக்ருஷ்ணன் - மடவரல் மங்கை, செங்கமலநாச்சியார். ஸ்வயம்பு விமாநம் தடமலர்ப்பொய்கை. கிழக்கே திருமுகமண்டலம் - நின்றதிருக்கோலம். சேனைத்தலைவருக்கும், ருத்ரனுக்கும் ப்ரத்யக்ஷம் திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம். சீயாழிக்குக் கிழக்கே எ - மைலில் உள்ளது.

௩௯ திருவெள்ளக்குளம்:—கண்ணன், நாராயணன் - பூவார் திருமகள் நாச்சியார். தத்வத்யோதக விமாநம். வெள்ளக்குளத்தீர்த்தம். கிழக்கே திருமுகமண்டலம் - நின்ற திருக்கோலம். இக்ஷ்வாகு வம்சத்தில் ச்வேதராஜனுக்கும் ருத்ரனுக்கும் ப்ரத்யக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம். சீயாழிக்குத் தென்கிழக்கே ௪ - மைலில் உள்ளது.

சо. திருப்பார்த்தன்பள்ளி:—தாமரையாள் கேள்வன் - தாமரைநாயகி. நாராயண விமானம். சங்கஸரஸ். மேற்கே திருமுகமண்டலம் - நின்ற திருக்கோலம். பார்த்தனுக்கும் வருணனுக்கும் ஏகாதச ருத்ரருக்கும் ப்ரத்யக்ஷம். திருமங்கையாழ்வார் பொய்கையாழ்வார் மங்களாசாஸநம். சீயாழிக்குத் தென்கிழக்கே எ - மைலில் உள்ளது.

## சோழநாட்டுத் திருப்பதிகள் ஸம்பூரணம்.



## பாண்டியநாட்டுத் திருப்பதிகள் - கஅ.

சக திருமாலிருஞ்சோலை —அழகர் மாலலங்காரர் - சுந்தரவல்லிநாச்சியார். சோமசுந்தரவிமானம். சிலம்பாறு கிழக்கே திருமுகமண்டலம் - நின்ற திருக்கோலம் வ்ருஷபகிரி. சந்தனவிருக்ஷம் மலயத்வஜபாண்டியனுக்கும் தர்மதேவதைக்கும் ப்ரத்யக்ஷம் பெரியாழ்வார் ஆண்டாள் திருமங்கையாழ்வார் பூதத்தாழ்வார் பேயாழ்வார் நம்மாழ்வார் மங்களாசாஸநம். மதுரைக்கு வடகிழக்கே கஉ - மைலில் உள்ளது.

சஉ திருக்கோட்டியூர்:—ஸௌம்ய நாராயணன் திருமாமகள் நாச்சியார் அஷ்டாங்கவிமானம் தேவபுஷ்கரிணி கிழக்கே திருமுகமண்டலம். நின்றும் இருந்தும் நடந்தும் கிடந்தும் கூத்தாடியும் நின்றதிருக்கோலம். கதம்பமகரிஷிக்கும் இந்திரனுக்கும் ப்ரத்யக்ஷம். பெரியாழ்வார், திருமங்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார் மங்களாசாஸநம். இரணியாசுரன் மூவுலகத்தையும் ஆட்சிசெய்தகாலத்தில் தேவர்கள் அவ்வசுரனை யொழிப்பதற்கு வேண்டிய உபாயத்தை ஆலோசிப்பதற்கு ஏற்றதாய், அசுர ஸஞ்சாரமில்லாத இடத்தைத் தேடுகையில் கதம்பமுனிவரது சாபத்தால் 'துஷ்டர் ஒருவரும் வரக்கூடாது' என்று ஏற்பட்டிருந்த இந்தக்ஷேத்ரம் அவர்கள் கூட்டமாக இருந்து ஆலோசித்தற்கு ஏற்ற இடமாயிருந்த காரணம் பற்றி, இத்தலத்திற்கு 'கோஷ்டீபுரம்' என்று வடமொழியிற் பெயர்; அதுவே 'கோட்டியூர்' எனத் தமிழில் வழங்குகின்றது. எம்பெருமானார் திருக்கோட்டியூர் நம்பியினிடத்துத் திருமந்திரத்தை உபதேசங்கொண்டருளி விமானத்தின்மீது ஏறியிருந்து பரமரஹஸ்யமான அந்தத் திருமந்த்ரத்தை எல்லாரும் கேட்டு உய்வுபெறுமாறு உரத்துவெளியிட்ட இடம் இது, மானாமதுரைக்கு வடகிழக்கே உஎ - மைலில் உள்ளது.

சங. திருமெய்யம்:—ஸத்யகிரிநாதன் - உய்யவந்தாள். ஸத்யகிரிவிமானம். ஸத்யகிரி. ஸத்யதீர்த்தம், கதம்ப புஷ்கரிணி பலாவிருக்ஷம். கிழக்கே திருமுகமண்டலம்-நின்றதிருக்கோலம். ஸத்யதேவதைகளுக்கு ப்ரத்யக்ஷம். திருமங்கையாழ்வார்மங்களாசாஸநம். ஸத்யதேவதைகள் திருமாலைநோக்கித் தவஞ்செய்த தலமாதல்பற்றி, இத்திருமலை ஸத்யகிரியென்றும், அங்குத்தோன்றிய திருமால் ஸத்யகிரிநாதரென்றும் பெயர்பெறுவர்; சத்தியகிரியென்ற அச்சொல்லே திருமெய்யமலை யென்றும், அத்திருப்பதி திருமெய்யமென்றும் வழங்கப்பெறும். மானாமதுரைக்கு வடகிழக்கே ஙடு - மைலில் உள்ளது. அன்றி, திருச்சிறுப்பள்ளிக்குத் தெற்கே சடு - மைலில் உள்ளது.

௪௪. திருப்புல்லாணி(தர்ப்பசயநம்) —கல்யாணஜகந்நாதன் - தெய்வச்சிலையார் - கல்யாணவல்லி. கல்யாணவிமானம் ஹேமதீர்த்தம், சக்ரதீர்த்தம். அசவததவிருக்ஷம் கிழக்கேதிருமுகமணடலம்-சயநமும்நின்றதிருக்கோலமும் புல்லாரணயமகரிஷிக்கும்,அசவததநாராயணனுககும்.ப்ரத்யக்ஷமாய்ஸ்ரீராமன் சமுதத்ராஜனுக்கு வரங்கொடுதத இடம். திருமஙகையாழ்வார் மஙகளாசாஸநம். புல்லாணி - புல்லணையென்பதன் மரூஉ இது, சீதையைக் கவர்ந்து சென்ற இராவணனைக கொல்லுதற்பொருட்டு இராமபிரான் வானரசேனையுடனே புறப்பட்டுசென்று தென்கடற்கரையையடைந்து கடல்கடக்க உபாயஞ்சொல்லவேணடு மென்று அக்கடலரசனுன வருணனைப் பிரார்த்தித்துத் தருப்பததிற் படுதது எழுநாளளவும் பிராயோபவேசமாகக கிடந்த தல மாதலால், இது வடமொழியில் தர்ப்பசயநம் எனப்படும்; புல்லணை என்பது - அதற்குஎற்றதென்மொழி. ராமநாதபுரத்துக்குத்தெற்கே ௩-மைலில்உள்ளது.

௪௫. திருத்தண்கால்:—அப்பன், தணகாலப்பன் - அன்னநாயகி, அநந்தநாயகி, நாசசியார் நால்வா. தேவ சந்தர விமாநம். பாப விநாச தீர்த்தம். கிழக்கே திருமுகமணடலம-நின்ற திருக்கோலம். சல்லிய பாணடியனுக்கும் ஸ்ரீவல்லபனுக்கும் புலிக்கும் ப்ரதயக்ஷம் திருமஙகையாழ்வார் பூதத்தாழ்வார் மஙகளாசாஸநம். சாததூாக்கு மேற்கே க௫ - மைலில் உள்ளது

௪௬. திருமோகூர்.—காளமேகப்பெருமாள் - திருமோகூர்வல்லி, மேகவல்லி நாசசியாா. கேதகி விமானம் க்ஷீராப்தி புஷ்கரிணி. கிழக்கே திருமுகமணடலம - நினற திருக்கோலம் - அஜருதரேந்தராதிகளுக்கு ப்ரத்யக்ஷம். திருமஙகையாழ்வார் நம்மாழ்வார் மஙகளாசாஸநம். இத்தலம்-வடமொழியில் ஸ்ரீமோஹநபுரம எனப்படும். மதுரைக்கு வடகிழககே ௭ - மைலில் உள்ளது.

௪௭. திருக்கூடல் (தென்மதுரை) —கூடலழகா, வகுளவல்லிநாச்சியார், மரகதவல்லிநாசசியார், வாகுணவல்லி, மதுரைவல்லி அஷ்டாஙகவிமானம். ஹேமபுஷ்கரிணி, சக்ரதீர்ததம். கிழக்கே திருமுகமணடலம் - வீற்றிருந்த திருக்கோலம் சௌநகாதிகளுக்கும் ப்ருகுமகாரிஷிக்கும் பெரியாழ்வாருக்கும் ப்ரதயக்ஷம். திருமஙகையாழ்வார் மஙகளாசாஸநம். பெரியாழ்வாக்குச் சேவைசாதித்த ‘அவ்வெம்பெருமான்’ அஷ்டாஙகவிமானததின்மீது எழுந்தருளியிருக்கின்ற ‘வையந்தாயபெருமான்’ என்பா. கூடல் என்பது தென்மதுரைக்கு ஓாபெயர். மதுரைக்குக கிழக்கே அரை - மைலில் உள்ளது.

௪௮ ஸ்ரீவில்லிபுத்தூர்.—வடபத்ரசயநா, ரங்கமன்னர்-ஆண்டாள், கோதைநாசசியார். ஸம்சநவிமாநம் திருமுககுளதீர்த்தம் கிழக்கே திருமுகமண்டலம்-வடபத்ரசயனம-நின்ற திருக்கோலம். மண்டூகமகரிஷிக்கும் பெரியாழ்வாருக்கும்ப்ரதயக்ஷயம். பெரியாழ்வாரும் ஆண்டாளும்அவதரித்ததலம். முப்புரியூட்டியதலம. பெரியாழ்வார் ஆணடாள் மஙகளாசாஸநம். வில்லிகண்டர் என்பவர்களில் மூத்தவனுன வில்லியென்பவனுல் எற்படுத்தப்பட்ட புதியநகரமாகையால், இதற்கு,‘ஸ்ரீவில்லிபுத்தூர்’என்று திருநாமமென்பர். சாத்தூர்க்கு மேற்கே ௨௨ - மைலில் உள்ளது.

௯௯. திருக்குருகூர் (ஆழ்வார்திருநகரி) :—ஆதிநாதப்பெருமாள், பொலிந்துநின்றபிரான் - ஆதிநாதவல்லி. கோவிந்த விமானம் தாம்ரபர்ணி நதி-ப்ரம்மதீர்தம். கிழக்கே திருமுகமண்டலம் - நின்ற திருக்கோலம். பரம்மாவுக்கும் நம்மாழ்வாருக்கும் மதுரகவிகளுக்கும் ப்ரத்யக்ஷம். நம்மாழ்வார் மங்களாசாஸநம். ஒருநாள் பிரமன் 'எங்குத்தவஞ்செய்வது?' என்று சிந்தைகொண்டிருக்கையில். 'கா-பிரமனே! குரு-(இக்குத்தவஞ்)செய்'என்றுஇத்தலத்தைச சுட்டிஆகாயவாணி மொழிந்ததனல், இதற்கு 'குருகாபுரீ' என்று பெயர்வந்த தென்பர். இத்தலம், நம்மாழ்வார் திருவவதரித்த தலமாதல்பற்றி, 'ஆழ்வார் திருநகரி' என்று பெயர்பெறும். திருநெல்வேலிக்குக் கிழக்கே ௧௯-மைலில் உள்ளது.

௱௦. துலைவில்லிமங்கலம்:—தேவபிரான், அரவிந்தலோசனன் - கருந் தடங்கணணி குமுதவிமானம். தாம்ரபர்ணி நதி, வருணதீர்த்தம். கிழக்கே திருமுகமண்டலம - நின்றதிருககோலம் - வீற்றிருந்த திருக்கோலம். இந்திரன் வாயு வருணன் இவர்களுக்கு ப்ரதயக்ஷம. இங்கே இரணடு திருப் பதிகள் உள்ளதனல், 'இரட்டைததிருப்பதி' என்றும் பெயர்வழங்கும். திருநெல்வேலிக்கு வடககே உ௰-மைலில் உள்ளது.

௱௧. சிரீவரமங்கை (வானமாமலை):—வானமாமலைப்பெருமாள், தெய்வ நாயகன், தோதாத்ரிப்பெருமாள் - சிரீவரமங்கை நாசசியார். நந்தவர்த்தந விமானம். இந்த்ரபுஷ்கரிணி, சேற்றுத்தாமரை. கிழக்கே திருமுகமண்டலம்-வீற்றிருந்த திருக்கோலம. ஸ்ரீதேவி பூதேவி நீளாதேவி சேனைமுதலியார் பெரியதிருவடி இவர்களுடனும், சாமரகனனிகைகள் சந்திரசூரியர் பக்கத்திலிருக்க, இந்திரனுக்கும ப்ரம்மாவுககும் உரோமசரிஷிக்கும் பிருகுரிஷிக்கும் மாரக்கணடேயருக்கும் ப்ரதயக்ஷம் நம்மாழ்வாா மஙகளாசாஸநம. சிரீவர மஙகையென்பது-அததலத்திற்கு அஙகு எழுந்தருளியுள்ள நாசசியரின் திருநாமத்தால் வந்தது; அஙகு எழுந்தருளியுள்ள எமபெருமான் திருநாமததைக் கொண்டு,இந்தத திவ்யதேசததை 'வானமாமலை'என்றும் வழங்குவர். அதறகு ஏற்ற வடமொழித திருநாமம், 'தோதாத்ரி' என்பது. திருநெல்வேலிக்குத தெற்கே ௧௮ - மைலில் உள்ளது.

௱௨. திருப்புளிங்குடி:—காய்சினவேந்தன் - மலர்மகள்நாச்சியார், புளிங் குடிவல்லி. வேதஸாரவிமானம், வருணதீாத்தம், நிருதிதீர்ததம். கிழக்கேதிருமுகமண்டலம் புஜங்கசயனம். நிருதிவருணன் தர்மராஜாஇவர்களுக்கு ப்ரத்யக்ஷம், நம்மாழ்வாா மஙகளாசாஸநம். திருநெல்வேலிக்குக கிழக்கே ௧எ - மைலில் உள்ளது.

௱௩. திருப்பேரை:—மகரநெடுங்குழைக்காதர், நிகரில்முகில்வண்ணன்-குழைக்காதுவல்லிநாசசியார் பதரவிமானம், சுக்ரபுஷ்கரிணி. கிழக்கே திருமுகமண்டலம்-வீற்றிருந்ததிருக்கோலம். சுக்ரனுக்கும்ப்ரம்மாவுககும் ஈசாந்ய ருத்ரனுக்கும் ப்ரத்யக்ஷம். நம்மாழ்வார் மஙகளாசாஸநம். திருநெல்வேலிக்குக் கிழக்கே உ௯ - மைலில் உள்ளது.

௫௪. ஸ்ரீவைகுந்தம்:—கள்ளப்பிரான், வைகுந்தநாதன்-வைகுந்தவல்லி. சந்த்ரவிமானம். தாம்ரபர்ணிநதி, ப்ருகுதீர்த்தம். கிழக்கே திருமுகமண்டலம். நின்ற திருக்கோலம். இந்திரனுக்கும பிருதுசக்ரவர்த்திக்கும் ப்ரத்யக்ஷம். நம்மாழ்வார்மங்களாசாஸநம். திருநெல்வேலிக்குக்கிழக்கே கசு-மைலில்உள்ளது.

௫௫. வரகுணமங்கை:—விஜயாஸநர் - வரகுணவல்லி. விஜயகோடி விமானம். தேவபுஷ்கரிணி அக்நிதீர்த்தம். கிழக்கே திருமுகமண்டலம் - வீற்றிருந்த திருக்கோலம். அக்நிக்கு ப்ரத்யக்ஷம். நம்மாழ்வார் மங்களாசாஸநம். திருநெல்வேலிக்கு வடகிழக்கே கஅ-மைலில் உள்ளது.

௫௬. திருக்குளந்தை (பெருங்குளம்) —மாயக்கூத்தன்-குளந்தைவல்லி. ஆனந்தநிலயவிமானம். பெருங்குளதீர்த்தம். கிழக்கே திருமுகமண்டலம் - நின்றதிருக்கோலம். ப்ரிஹஸ்பதிக்குப்ரத்யக்ஷம். நம்மாழ்வாாமங்களாசாஸநம். இந்தத்தலம் - பெரிய குளத்தையுடையதாதலின், 'பெருங்குளம்' என்று வழங்குகின்றது. ஆகவே, குளந்தை யென்பது மரூஉமொழிபோலும். திருநெல்வேலிக்கு வடகிழக்கே உசு-மைலில உள்ளது.

௫௭. திருக்குறுங்குடி.—வைஷ்ணவநம்பி மலைமேல்நம்பி நின்றநம்பி இருந்தநம்பி கிடந்தநம்பி திருப்பாற்கடல்நம்பி - குறுங்குடிவல்லி. பஞ்சகேதகவிமானம். திருப்பாற்கடல்நதி, பஞ்சதுறை. கிழக்கே திருமுகமண்டலம்-நின்றதிருக்கோலம் பகவம்நின்ற சிவனுக்கு ப்ரத்யக்ஷம. பெரியாழ்வார் திருமழிசையாழ்வார் திருமங்கையாழ்வார நம்மாழ்வார் மங்களாசாஸநம். சண்டாள ஜந்மத்திற் பிறந்த நம்பாடுவான் தன்னை யுண்ணுமாறு வந்த பிரமரக்ஷஸுக்கு முன்பு சபதஞ்செய்துகொடுத்து, இத்தலத்து எம்பெருமானைக்குறித்துக் கைசிகமென்னும பண்பாடி வழிபட்டு மீண்டு, முன்னர்ப் பிராமணனாகிக் கருமாநுஷ்டாநத்திற் கொத்தையினால் பிரமரக்ஷஸான அவனை உய்வித்ததலம் இதுவே. குறுகியவனான வாமனனது க்ஷேத்ர மாதலால். இத்தலத்திற்குக் குறுங்குடியென்று பெயர்வந்த தென்பர் இத்தலத்திலுள்ள எம்பெருமான்களுள் ஓர் எம்பெருமான் ஸ்ரீபாஷ்யகாரர்பக்கலிலே வேதாந்தார்த்தம்கேட்டுச் சிஷ்யனாய் 'நாமும நம்மிராமாநுசனை யுடையோம்' என்கையாலே, அப்பெருமானுக்குவைஷ்ணவநம்பியென்றுதிருநாமம். நம்மாழ்வார திருவவதாரத்திற்குக்காரணமாயிருந்தவரும் இத்தலத்துநம்பியே. திருநெல்வேலிக்குத் தெற்கே உசு-மைலில் உள்ளது.

௫௮. திருக்கோளூர் —வைத்தமாநிதி (நிக்ஷேபவித்தன்)-கோளூர் வல்லி நாச்சியார். ஸ்ரீகரவிமானம். குபேரதீர்த்தம், தாம்ரபர்ணிநதி. கிழக்கே திருமுகமண்டலம் - புஜங்கசயநம். குபேரனுக்கும மதுரகவியாழ்வாருக்கும் ப்ரத்யக்ஷம். மதுரகவியாழ்வார் அவதாரஸ்தலம். நம்மாழ்வார் மங்களாசாஸநம் நவநிதிகள் இங்கே ஒளித்துக்கொண்டிருக்கின்றன என்று அதாமம் குபேரனுக்குக் கோள்சொல்லிய இடமாதல்பற்றி, இத்தலத்திற்குத் திருக்கோளூரென்று பெயரென்பர்; 'பிஸுநக்ஷேத்ரம்' என்று வடமொழியிற் பெயர்வழங்கும். திருநெல்வேலிக்குக் கிழக்கே உ௦ - மைலில் உள்ளது.

பாண்டியநாட்டுத் திருப்பதிகள் ஸம்பூர்ணம்.



## மலைநாட்டுத்திருப்பதிகள் - கங.

ருக. திருவநந்தபுரம்:—அநந்தபதமநாபன் - ஸ்ரீஹரிலக்ஷ்மி. ஹேமகூட விமாநம். மதஸ்யதீர்த்தம். கிழக்கே திருமுகமண்டலம் - புஜங்கசயநம். ருத்ரனுக்கும் சந்திரனுக்கும் இந்திரனுக்கும் ப்ரத்யக்ஷம். நம்மாழ்வார் மங்களாசாஸநம். திருநெல்வேலிக்குத தென்மேற்கே அஅ-மைலில் உள்ளது.

சுO திருவண்பரிசாரம்:—திருக்குறளப்பன் திருவாழ்மாரபன் - கமலவல்லிநாசசியார் இந்தரகல்யாண விமாநம். லக்ஷ்மிதீரத்தம். கிழக்கே திருமுகமண்டலம் - சயனத திருக்கோலம. விந்தைக்கும் காரிக்கும் உடையநங்கைக்கும் ப்ரதயக்ஷம் நம்மாழ்வார் மஙகளாசாஸநம். திருநெல்வேலிககுத் தெற்கே சுO-மைலில் உள்ளது.

சுக. திருக்காட்கரை:—அப்பன் - பெருஞ்செல்வநாயகி. புஷ்கலவிமாநம். கபிலதீர்த்தம். கிழக்கே திருமுகமண்டலம் - நின்ற திருக்கோலம். கபிலமுனிக்கு ப்ரத்யக்ஷம். நம்மாழ்வார் மஙகளாசாஸநம். ஷோரனூர் எர்ணகுளம் ரயில்வே இடைப்பள்ளி ஸ்டேஷனுக்குக் கிழக்கே உ-மைலில்உள்ளது.

சுஉ. திருமூழிக்களம்.—திருமூழிக்களத்தான் - மதுரவேணிநாச்சியார். ஸௌந்தர்யவிமாநம் பெருஙகுளதீர்த்தம். கிழக்கே திருமுகமண்டலம் - நின்றதிருககோலம். ஹாரீதமுனிக்கு ப்ரதயக்ஷம் திருமஙகையாழ்வார்நம்மாழ்வார் மஙகளாசாஸநம். ஷோரனூர் எர்ணகுளம் ரயில்வே கரிக்குட்டி ஸ்டேஷனுக்குத் தென்மேறகே ச - மைலில் உள்ளது.

சுங. திருப்புலியூர் - குட்டநாடு.—மாயப்பிரான்-பொற்கொடிநாசசியார். புருஷோத்தமவிமாநம் பூஞ்சுனைத தீர்த்தம். கிழககே திருமுகமண்டலம் - நின்ற திருக்கோலம். ஸப்தரிஷிகளுக்கு ப்ரதயக்ஷம் திருமஙகையாழ்வார் நம்மாழ்வார் மங்களாசாஸநம். கொல்லததுககு வடகிழக்கே சுக - மைலில் உள்ளது. (திருசசெஙகன்னூரிலிருந்து ங - மைலில் உள்ளது.)

சுச. திருச்செங்குன்றூர்:—இமையவரப்பன் - செஙகமலவல்லி. ஜகஜ்யோதிவிமாநம் கிருசசிற்றாறு, சஙகதீர்த்தம் கிழக்கே திருமுகமண்டலம் - நின்றதிருக்கோலம். பதமாசுரன் நிமித்தமாகச சிவனுக்குப்ரதயக்ஷம். நம்மாழ்வார் மங்களாசாஸநம். கொல்லததுக்கு வடகிழக்கே ருஅ - மைலில்உள்ளது.

சுரு. திருநாவாய்:—நாராயணன் - மலர்மஙகைநாசசியார். வேதவிமாநம். செங்கமலஸரஸ். கிழக்கே திருமுகமண்டலம்-வீற்றிருந்த திருக்கோலம். லக்ஷ்மிக்கும கஜேந்திரனுககும் ப்ரத்யக்ஷம். திருமஙகையாழ்வார் நம்மாழ்வார் மஙகளாசாஸநம். திருவாங்கூர் ஸம்ஸ்தானத்தில் இடக்குளம் ஸ்டேஷனுக்குத் தெற்கே அரை - மைலில் உள்ளது.

சுசு. திருவல்லவாழ்:—கோலப்பிரான்-செல்வத்திருக்கொழுந்து நாச்சியார். சதுரஙககோலவியாநம். கண்டாகர்ணதீர்த்தம். கிழக்கே திருமுகமண்டலம்-நின்றதிருக்கோலம். கண்டாகர்ணனுக்குப்ரத்யக்ஷம். திருமஙகையாழ்வார்

நம்மாழ்வார மங்களாசாஸநம். திருவாஙகூர் ஸம்ஸ்தானம் அம்பலப்புழைக்கு வடகிழக்கே உ௦ - மைலில் உள்ளது.

௬எ. திருவண்வண்டூர்:—பாம்பணையப்பன் - கமலவல்லிநாச்சியார். வேதாலயவிமாநம். பாபநாசதீர்த்தம். மேற்கே திருமுகமண்டலம் - நின்ற திருக்கோலம். மார்க்கண்டேயருக்கும் நாரதருக்கும் ப்ரத்யக்ஷம். நம்மாழ்வார் மங்களாசாஸநம் திருவாஙகூர் ஸம்ஸ்தாநம் அம்பலப்புழைக்குக் கிழக்கே க௬-மைலில் உள்ளது.

௬அ. திருவாட்டாறு —ஆதிகேசவப்பெருமாள் - மரகதவல்லிநாச்சியார். அஷ்டாஙகவிமானம். கடல்வாய்தீர்த்தம், ராமதீர்த்தம் கிழக்கே திருமுகமண்டலம் - புஜங்கசயனம். பரசுராமனுக்கும் சந்திரனுக்கும் ப்ரத்யக்ஷம் நம்மாழ்வார் மஙகளாசாஸநம். இது, நதியின்றற் பெயர்பெற்றது திருவனந்தபுரத்துக்குத் தென்கிழக்கே உஅ - மைலில் உள்ளது

௬௯. திருவித்துவக்கோடு.—உய்யவந்த பெருமாள் - வித்துவக்கோட்டுவல்லி. தத்துவகாஞ்சநவிமாநம் சகரதீர்த்தம கிழக்கே திருமுகமண்டலம் - புஜங்கசயநம். அம்பரீஷனுக்கு ப்ரத்யக்ஷம. திருவிற்றுவக்கோடு என்றும் வழங்கும். குலசேகராழ்வார மஙகளாசாஸநம். இடப்பள்ளி ஸ்டேஷனுக்குக் கிழக்கே ௯௦ - மைலில் உள்ளது.

எ௦. திருக்கடித்தானம் —அற்புதநாராயணன் - கற்பகவல்லித்தாயார். புண்யகோடிவிமானம் பூமிதீர்த்தம். கிழக்கே திருமுகமண்டலம்-நின்றதிருக்கோலம். ருக்மாஙகதராஜனுக்கு ப்ரத்யக்ஷம நம்மாழ்வார் மஙகளாசாஸநம். திருவல்லவாழுக்கு வடக்கே ௩ - மைலில் உள்ளது.

எக. திருவாறன்விளை —திருக்குறளப்பன் - பத்மாஸநநாச்சியார். வாமநவிமாநம். வேதவ்யாஸஸரஸ் கிழக்கே திருமுகமண்டலம்-நின்ற திருக்கோலம். பிரம்மாவுக்கு ப்ரத்யக்ஷம். நம்மாழ்வார் மஙகளாசாஸநம். திருச்செஙகுன்றூர்க்குக் கிழக்கே ௪ - மைலில் உள்ளது.

மலைநாட்டுத்திருப்பதிகள் ஸம்பூர்ணம்.

---

## நடுநாட்டுத்திருப்பதிகள் - உ.

எஉ. திருவயிந்திரபுரம்.—தெய்வநாயகப்பெருமாள் - வைகுண்டநாயகி. சந்திரவிமாநம். கருடநதி - சேஷதீர்த்தம். கிழக்கே திருமுகமண்டலம்-நின்ற திருக்கோலம். சந்திரனுக்கும் கருடனுக்கும் ப்ரத்யக்ஷம். திருமஙகையாழ்வார்மஙகளாசாஸநம். அஹீந்த்ரனெனப்படுகிற திருவனந்தாழ்வான் பூஜித்த தலமாதல்பற்றி, 'அஹீந்த்ரபுரம்' என்று இத்திருப்பதிக்குத் திருநாமம். திருப்பா புலியூர்க்கு மேற்கே ௪ - மைலில் உள்ளது.

எ௩. திருக்கோவலூர்-(கோபாலநகரம்):—த்ரிவிக்ரமன், ஆயனார் - பூங்கோவல்நாச்சியார். ஸ்ரீகரவிமானம். க்ருஷ்ணதீர்த்தம். கிழக்கே திருமுகமண்டலம் - நின்ற திருக்கோலம். மிருகண்டுமுனிக்கும் மகாபலிசக்ரவர்த்திக்கும் ப்ரத்யக்ஷம் திருமஙகையாழ்வார் பொய்கையாழ்வார் பூதத்தாழ்வார மங்

ளாசாஸநம். கோபாலன் எனப்படுகிற ஆயனார் எழுந்தருளியிருக்குந் திவ்விய தலமாதல்பற்றி, இதற்கு 'திருக்கோவலூர்' என்று திருநாமமாயிற்று, வடமொழியில் இது, 'கோபாலபுரம்' எனப்படும். "பாவருந் தமிழாற் பேர்பெறுபனுவல் பாவலர் பாதிநாளிரவில், மூவரு நெருக்கி மொழிவிளக்கேற்றி முகுந்தனைத் தொழுத நன்னாடு" என்று புகழ்ந்துகூறும்படி முதலாழ்வார் மூவரும் ஒருவரையொருவர் சந்தித்து அந்தாதிபாடின தலம். இது, திருக்கோவலூர்க்குத் தென்மேற்கே ந - மைலில் உள்ளது.

நடுநாட்டுத் திருப்பதிகள் ஸம்பூர்ணம்.



## தொண்டைநாட்டுத் திருப்பதிகள் - உஉ.

எசு. திருக்கச்சி-அத்திகிரி:—பேரருளாளப் பெருமாள், வரதராஜப் பெருமாள் - பெருந்தேவித்தாயார் புண்யகோடிவிமாநம். ஸத்யவ்ரத க்ஷேத்திரம். அநந்தஸரஸ், சேஷதீர்த்தம், வராகதீர்த்தம், ப்ரஹ்மதீர்த்தம், பத்மதீர்த்தம், அக்நிதீர்த்தம், குசலதீர்த்தம், வேகவதிநதி மேற்கே திருமுகமண்டலம் - நின்றதிருக்கோலம். ப்ருகுமகரிஷிக்கும் நாரதருக்கும் திருவனந்தாழ்வானுக்கும் கஜேந்த்ராழ்வானுக்கும் பரம்மாவுக்கும் ப்ரத்யக்ஷம் பூதத்தாழ்வார் திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம். கச்சி-காஞ்சீ என்னும் வடசொல்லின் சிதைவு பிரமனாற் பூசிக்கப்பட்டதலம் என்பது பொருள்; இனி, பூமியாகிய பெண்ணுக்கு அரையில் அணியும் அரைநூலமாலைத் தானத்தி லுள்ளதுபற்றி வந்த பெயரென்று கூறுவாருமுளர். அத்திகிரி = ஹஸ்திகிரி: 'கோயில் திருமலை பெருமாள்கோயில்' என்று சிறப்பாக எடுத்துக்கூறப்படுகின்ற மூன்று தலங்களில் ஈற்றுத்தலம் இது. இது, தியாகமண்டபம் எனப்படும். நெடுநாள் தவஞ்செய்தும் மனத்தூய்மைபெறாத பிரமதேவன் ஆகாயவாணி கூறியபடி பூலோகத்தில் புண்ணியக்ஷேத்திரங்க ளெல்லாவற்றுள்ளும் உத்தமமானதும் ஒன்று ஆயிரமாகப் பயன்தருவதுமாகிய சத்தியவிரதக்ஷேத்திரத்தை யடைந்து, அங்கு அநந்தஸரஸின்கரையிலுள்ள ஹஸ்திகிரியை உத்தரவேதியாகக் கொண்டு யாகசாலையையமைப்பித்து, அசுவமேதயாகஞ்செய்து அதனால் ஸ்ரீமந் நாராயணனையாராதிக்க, அந்த யாகாக்கினியினின்று எழுந்த புண்ணியகோடிவிமானத்தில் தேவராஜனை திருமால் பிரசந்நனாயின னென்றும், அந்த வரதராஜஸ்வாமியைப் பின்பு கஜேந்திராழ்வான் பூசித்து முதலையினாலாகிய துயர்தீர்ந்துமேன்மைபெற்றதென்றும், தெய்வத்தச்சரிலொருவனான மயனென்பவன் பிரமன்கட்டளையால் அங்கு எம்பெருமானுக்குத் திருக்கோயில் கட்டியமைத்தன னென்றும் அறிக. இந்திரனது யானையாகிய ஐராவதம் நெடுநாள் தவஞ்செய்து மலைவடிவங்கொண்டு எம்பெருமானைத் தரித்தலால், அம்மலைக்கு 'ஹஸ்திகிரீ' என்று பெயர் கஜேந்திராழ்வான் பூஜித்துப் பேறுபெற்ற தலமாதலால் இப்பெயர்நிகழ்ந்த தென்றலுமுண்டு. இங்கு, மலையடிவாரத்திலுள்ள அழகியசிங்கப்பெருமானே ஆழ்வாரது மங்களாசாஸநம் பெற்றவ ரென்பது, பலர் கொள்கை. காஞ்சீபுரத்துக்குத் தென்கிழக்கே ந - மைலில் உள்ளது.

எடு. திருஅட்டபுயங்கம்:—ஆதிகேசவப்பெருமாள். சக்ரதார்-அலர்மேல்மங்கை. ககநாக்ருதிவிமாநம் கஜேந்த்ர புஷ்கரிணி. மேற்கே திருமுகமண்டலம்-நின்றதிருக்கோலம் கஜேந்திராழ்வானுக்கு ப்ரத்யக்ஷம் திருமங்கையாழ்வார் பேயாழ்வார் மங்களாசாஸநம் இத்தலத்து எம்பெருமானுக்கு எட்டுத் திருக்கைகள் உள்ளதுபற்றி 'அஷ்டபுஜம்' என்று திருப்பெயராக, அச்சொல் 'க'ப்ரத்யயம் பெற்று 'அஷ்டபுஜகம்' என்று ஆகி, தமிழில் அஷ்டபுயங்கம் எனத் திரிந்தது. இனி, இத்திருப்பதி அஷ்டபுயகரம் என்று வழங்கப்பெறுதலு முண்டு; அஷ்டபுஜன் எழுந்தருளியிருக்கின்றகரம் [கிருகம்] ஆதலபற்றி இப்பெயர் வந்தது போலும். அட்டபுயவகரம் என்பதன் மரூஉ என்பாருமுளர். காஞ்சீபுரத்துக்குத் தெற்கே க - மைலில் உள்ளது.

எசு. திருத்தண்கா:—விளக்கொளி. தீபப்ரகாசர் - மரகதவல்லித்தாயார். ஸ்ரீகரவிமாநம். ஸரஸ்வதி தீர்த்தம். மேற்கே திருமுகமண்டலம்-நின்றதிருக்கோலம். ஸரஸ்வதிக்கு ப்ரத்யக்ஷம் திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம். வேதாந்தாசாரியார் திருவவதாரஸ்தலம் இதுவே. காஞ்சீபுரத்துக்குத் தெற்கே உ - மைலில் உள்ளது.

எஎ. வேளுக்கை:—அழகியசிங்கர், முகுந்த நாயகன்-வேளுக்கைவல்லி. கனகவிமாநம் கநகஸரஸ. கிழக்கே திருமுகமண்டலம்-நின்றதிருக்கோலம். ப்ருகுமகரிஷிக்கு ப்ரத்யக்ஷம். பேயாழ்வார் திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம். காஞ்சீபுரத்துக்குக் கிழக்கே உ - மைலிலுள்ளது.

எஅ. பாடகம் (பாண்டவதூத ஸந்நிதி) —பாண்டவதூதர் - ருக்மிணிதேவி, ஸத்யபாமை. பத்ரவிமாநம். மத்ஸ்ய தீர்த்தம். கிழக்கே திருமுகமண்டலம்-வீற்றிருந்த திருக்கோலம் ஹாரீதமகாமுனிக்கு ப்ரத்யக்ஷம். திருமழிசையாழ்வார் திருமங்கையாழ்வார் பூதத்தாழ்வார் பேயாழ்வார் மங்களாசாஸநம். காஞ்சீபுரத்திற்கு மேற்கே க-மைலில் உள்ளது.

எகூ. திருநீரகம்:—ஜகதீசப்பெருமாள் - நிலமங்கைவல்லி. ஜகதீசவிமாநம். அக்ரூர தீர்த்தம். கிழக்கே திருமுகமண்டலம்-நின்ற திருக்கோலம். அக்ரூரருக்கு ப்ரத்யக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம் காஞ்சீபுரம் உலகளந்தபெருமாள் ஸந்நிதிக்குத் தென்மேற்கே க-மைலில் உள்ளது.

அ௦. நிலாத் திங்கள்துண்டம்:—நிலாத்திங்கள்துண்டத்தான்-நேரொருவரில்லாவல்லி. புருஷஸூக்த விமாநம். சந்திரபுஷ்கரிணி மேற்கே திருமுகமண்டலம் - நின்ற திருக்கோலம் சிவனுக்கு ப்ரத்யக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம். காஞ்சீபுரம் ஏகாம்பரநாதர் கோயிலுக்குள் உள்ளது.

அக. திருவூரகம் (உலகளந்த பெருமாள் கோவில்) —உலகளந்த பெருமாள் (த்ரிவிக்ரமன்) - அமுதவல்லி நாச்சியார். ஸார ஸ்ரீகரவிமாநம். நாக தீர்த்தம். மேற்கே திருமுகமண்டலம் - நின்ற திருக்கோலம் உரகமென்கிற ஆதிசேஷனுக்கு ப்ரத்யக்ஷம் திருமழிசையாழ்வார் திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம், இத்தலத்தில் திருமால் உரகரூபியாய்ச் சேவைசாதிப்பதுபற்றி

இததிருப்பதிக்கு 'ஊரகம்' என்று திருநாமம்போலும் உரகம்-பாம்பு. காஞ்சீ புரத்துக்குத தென்மேற்கே க-மைலில் உள்ளது.

அஉ. திருவெஃகா (யதோக்தகாரி):—சொன்னவண்ணஞ்செய்த பெருமாள் - கோமளவல்லி நாசசியார். வேதஸாரவிமானம். பொய்கை புஷ்கரிணி. மேற்கே திருமுகமண்டலம - புஜஙகசயநம. பொய்கையாழ்வாருக்கும் கணிகணணருக்கும் பிரம்மாவுக்கும் ப்ரதயக்ஷம். பொய்கையாழ்வார்திருவவதரித்த தலம். நம்மாழ்வார் திருமழிசையாழ்வார் திருமஙகையாழ்வார் பொய்கையாழ்வாா பேயாழ்வார் மஙகளாசாஸநம். திருவெஃகாவிலெம்பெருமான் பிரமதேவன்செய்த வேள்வியையழிககவந்த வேகவதிநதியைத் தடுததற்பொருட்டு அதறகு அணையாகக் குறுக்கிற் பள்ளிகொண்டருளினவனுதலால், அப்பிரானுக்குவடமொழியில் 'வேகாஸேது' என்றுபெயர்; அது தமிழில் 'வேகவணை, என்று மொழிபெயர்ந்து, அது பின்பு (நாகவணையென்பது நாகணையென்று விகாரப்படுதல் போல) 'வேகணை' என விகாரப்பட்டு, அது பின்னர் 'வெஃகணை' எனத திரிந்து, தானியாகுபெயராய்த தலத்தைக் குறிததது, அது, பின்பு 'வெஃகா' என மருவிவழஙகிற்றென நுணணிதின் உணாக. காஞ்சீபுரததுக்குத தென்கிழககே உ - மைலில் உள்ளது.

அரு. திருக்காரகம்:—கருணாகரப் பெருமாள் - பத்மாமணி நாசசியார். வாமந விமாநம் அக்ராயதீாததம. தெற்கே திருமுக மணடலம்-நின்றதிருக்கோலம் கார்ஹரிஷிக்கு ப்ரதயக்ஷம். திருமங்கையாழ்வாா மஙகளாசாஸநம். காஞ்சீபுரத்துக்கு மேற்கே க-மைலில் உள்ளது.

அச. திருக்கார்வானம்:—கள்வா. கமலவலலி நாசசியார். புஷ்கலவிமாநம். கௌரிதடாகம். மேற்கே திருமுகமணடலம் - நின்ற திருக்கோலம். பார்வதிக்கு ப்ரதயக்ஷம திருமஙகையாழ்வார் மஙகளாசாஸநம். காஞ்சீபுரததுக்குத தென்மேறகே க-மைலில் உள்ளது.

அரு. திருக்கள்வனூர்:—ஆதிவராகப் பெருமாள் - அஞ்சிலை நாசசியார் வாமந விமாநம. நிதயபுஷ்கரிணி. மேற்கே திருமுகமணடலம் - நின்றதிருக்கோலம். அசவதத நாராயணனுககு பரதயக்ஷம. திருமஙகையாழ்வார் மஙகளாசாஸநம் காஞ்சீபுரததுக்கு மேறகே க-மைலில் உள்ளது.

அசு. திருப்பவளவண்ணம்:—பவளவண்ணப் பெருமாள் - பவளவல்லி நாசசியாா. ப்ரவாளவிமாநம். சக்ரதீர்ததம். மேற்கே திருமுகமண்டலம்-நின்ற திருககோலம். அச்விநீ தேவதைகளுக்கும் பாாவதிக்கும் ப்ரத்யக்ஷம். திருமஙகையாழ்வார் மஙகளாசாஸநம் காஞ்சீபுரததுக்கு மேற்கே க-மைலில் உள்ளது

அஎ பரமேச்சுர விண்ணகரம் (வைகுண்டப்பெருமாள் சந்நிதி):—பரமபதநாதன் - வைகுந்தவலலி முகுந்த விமாநம். அயிரமதீர்த்தம். மேற்கே திருமுகமண்டலம்-வீற்றிருநத திருககோலம். பல்லவராயனுக்கு ப்ரத்யக்ஷம் திருமஙகை யாழ்வார் மங்களாசாஸநம். பரமேசுவரன் [தேவாதிதேவன்]எழுந்தருளியிருக்கின்ற விண்ணகரமாதல்பற்றி, இததலத்திற்குப் பரமேசசுரவிண்ணகரமென்று திருநாமம். காஞ்சீபுரத்துக்குத் தெற்கே க-மைலில் உள்ளது.

அஅ. திருப்புட்குழி:—விஜயராகவப் பெருமாள்-மரகதவல்லி நாச்சியார் விஜயகோடி விமானம். ஜடாயுதீர்த்தம் கிழக்கே திருமுகமண்டலம்-வீற்றிருந்த திருக்கோலம். ஜடாயுவுக்கு ப்ரத்யக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம். புள்ளை - [சடாயுவென்னும் பெரியவுடையாரைக்] குழியிலிட்டு ஸம்ஸ்கரித்ததுபோல எம்பெருமான் சேவை சாதிக்கின்ற தலமாதல்பற்றி, திருப்புட்குழியென்று இத்தலத்திற்குத் திருநாமமென்பர். காஞ்சீபுரத்துக்குத் தென்மேற்கே ரு - மைலில் உள்ளது.

அகூ திருநின்றவூர்:—பக்தவத்ஸலன் (பத்தராவிப்பெருமாள்) - என்னைப் பெற்றதாயார். ஸ்ரீநிவாஸவிமானம். வருணபுஷ்கரிணி-விருத்தக்ஷீரநதி. கிழக்கே திருமுகமண்டலம் - நின்ற திருக்கோலம். வருணனுக்கு ப்ரத்யக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம். தின்னனூருக்குத் தெற்கே க - மைலில் உள்ளது.

கூ0. திருவெவ்வுள் —வீரராகவப்பெருமாள்-கநகவல்லித்தாயார். விஜயகோடிவிமானம். ஹ்ருத்தாபநாசதீர்த்தம். கிழக்கே திருமுகமண்டலம்-புஜங்கசயநம். வீக்ஷாரண்யம், மகிஷாரண்யம். சாலிஹோத்ரருக்கு ப்ரத்யக்ஷம். திருமங்கையாழ்வார் திருமழிசையாழ்வார் மங்களாசாஸநம். திருமால் சாலிஹோத்திர மகரிஷிக்குப் ப்ரத்யக்ஷமாகி, 'உறைதற்கு உரிய உள் எவ்வுள்?' எனவினவியதனால், இத்தலத்திற்குத் திருவெவ்வுளூரென்று திருநாமமாயிற்றென்பர். திருவள்ளூர்க்கு வடக்கே உ - மைலில் உள்ளது.

கூக. திருநீர்மலை (தோயாத்ரிலம்.) —நீலமுகில்வண்ணன் - அணிமாமலர்மங்கைத்தாயார். சக்ரவர்த்தித்திருமகன், உலகளந்தபெருமாள், அழகிய சிங்கர் இவர்கள் கிழக்கே திருமுகமண்டலம். தோயகிரி விமானம். மணிகர்ணிகாதீர்த்தம். ரங்கநாதன் - ஸ்ரீரங்கநாயகி. தெற்கே திருமுகமண்டலம். மாணிக்கசயநம். தொண்டைமான் சக்ரவர்த்திக்கும், பிருகு மார்க்கண்டேயருக்கும் ப்ரத்யக்ஷம். திருமங்கையாழ்வார் பூதத்தாழ்வார் மங்களாசாஸநம். பல்லாவரத்துக்கு மேற்கே உ - மைலில் உள்ளது.

கூஉ. திருவிடவெந்தை:—நித்யகல்யாணர் - கோமளவல்லி நாச்சியார். கல்யாணவிமானம். கல்யாணதீர்த்தம். கிழக்கே திருமுகமண்டலம் - நின்ற திருக்கோலம். மார்க்கண்டேயருக்கு ப்ரத்யக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம். இத்தலத்தி லெழுந்தருளிய வராகப்பெருமாள் தமது தேவியை இடப்பக்கத்திற் கொண்டிருத்தலால், இத்தலத்திற்குத் திருவிடவெந்தையென்று திருநாமமாயிற்று. சென்னை திருவல்லிக்கேணிக்கு அடுத்த பாப்பான்சாவடியிலிருந்து தெற்குவழியாகத் தோணியில் போகவேண்டும். வண்டலூர்க்குக் கிழக்கே கக - மைலில் உள்ளது.

கூ௩. திருக்கடல்மல்லை (மஹாபலிபுரம்) — தலசயனத் துறைவார்- நிலமங்கை நாச்சியார். ககநாக்ருதிவிமானம். கருடநதி. கிழக்கே திருமுகமண்டலம் - ஸ்தலசயநம். புண்டரீகரிஷிக்கு ப்ரத்யக்ஷம். திருமங்கையாழ்வார் பூதத்தாழ்வார் மங்களாசாஸநம். இது, பூதத்தாழ்வார் திருவவதாரஸ்தலம். செங்கல்பட்டுக்குக் கிழக்கே கஅ - மைலில் உள்ளது. அல்லது, மேற்கண்ட தோணியிலும் போகலாம்.

௬௪. திருவல்லிக்கேணி (ப்ருந்தாரண்ய க்ஷேத்ரம் :—வேஙகடக்ருஷ்ணன் (பார்த்தசாரதி) - ருக்மிணிப்பிராட்டி. (அநிருத்தன்-ப்ரத்யும்நன்-பலராமன்-ஸாத்யகி). கிழக்கே திருமுகமண்டலம்-நின்றதிருக்கோலம். ஆனந்த விமாநம். வ்யாஸமஹரிஷியினுல் பிரதிஷ்டை செய்யப்பட்டு ஆத்ரேய மஹரிஷியினுல் ஆராதிக்கப்பட்டவர். ஸுமதியென்னும ராஜாவுக்கும், தொண்டைமான் சக்ரவர்த்திக்கும், அர்ச்சுனனுக்கும் ப்ரத்யக்ஷம்.

மந்நாதன் (ரங்கநாதன் - என்னையாளுடையவப்பன்) - வேதவல்லித்தாயார். புஜங்கசயநம் கிழக்கே திருமுகமண்டலம். ப்ருகுமகரிஷியினுல் கன்னிகாதானம் பண்ணப்பெற்றவர்.

(வராஹநாயனுர்) அழகியசிங்கர் தெள்ளியசிங்கர் நரஸிம்ஹர். மேற்கே திருமுகமண்டலம். வீற்றிருந்த திருக்கோலம். அத்ரிமஹரிஷிக்கும், ஜாலிமஹரிஷிக்கும் ப்ரத்யக்ஷமாய் மோக்ஷந்தந்தவர்,

சக்ரவர்த்தித்திருமகன் [ஸ்ரீராமன்] (பரதாழ்வான், சத்ருக்நாழ்வான், இளையபெருமாள்.) மைதிலி. தெற்கே திருமுகமண்டலம் - 'நின்றதிருக்கோலம்.' சசபதர்குமாரரான மதுமான் என்னும் மஹரிஷிக்கு ப்ரத்யக்ஷம்.

வேதப்பெருமாள். கிழக்கே திருமுகமண்டலம். கருடாரூடா ஸப்தரோமாவுக்கு ப்ரத்யக்ஷம்

இந்த்ரதீர்த்தம், ஸோமதீர்த்தம், மீநதீர்த்தம், அக்நிதீர்த்தம், விஷ்ணுதீர்த்தம இவ்வைந்து தீர்த்தங்களால சூழப்பட்ட கைரவிணி என்னும் ஸரஸ்

ப்ருகு அத்ரி மரீசி மார்க்கண்டேயா ஸுமதி ஸப்தரோமா ஜாலி என்னும் ஏழுமஹரிஷிகள் தவம் செய்த இடம்.

திருமங்கையாழ்வார் பேயாழ்வார திருமழிசையாழ்வார் மங்களாசாஸநம். இது - தொண்டைமான் சக்ரவர்த்தியின் பிரார்த்தனைப்படியே திருவேங்கடமுடையான் கண்ணனாக தனது குடும்பத்தோடு சேவைசாதித்த தலம். இத்தலத்துப் புஷ்கரிணி - அல்லிப்பூக்கள் நிறையப்பெற்றதனுல், கைரவிணி யென்று வடமொழியிலும், திருவல்லிக்கேணி யென்று தென்மொழியிலும் பெயர்பெறும். இந்தப் புண்ணியதீர்த்தத்தின் பெயரே இத்தலத்திற்கும்பெயராயிற் றென்க. இது மயிலையை அடுத்ததிருத்தமால், மயிலைத்திருவல்லிக்கேணி யெனப் பெயர்பெறும; இம்மயிலையே பேயாழ்வாரது திருவவதாரஸ்தலமாம். சென்னை ஸெண்ட்றல் ஸ்டேஷனுக்குத் தென்கிழக்கே ௨-மைலிலும், எழும்பூருக்குத் தென்கிழக்கே ௨-மைலிலும் உள்ளது.

௬௫. திருக்கடிகை (சோளஸிங்கபுரம்):—யோகாநருஸிம்ஹர் - அமருதவல்லி நாச்சியார். ஸிங்ககோஷ்டாகதிவிமாநம். அமிருததீர்த்தம் கிழக்கே திருமுகமண்டலம்-வீற்றிருந்த திருக்கோலம். சிறியதிருவடிக்கு ப்ரத்யக்ஷம். தக்கான்-அக்காரக்கனிப்பெருமாள். தக்கான்குளம். திருமங்கையாழ்வார் பேயாழ்வார் மங்களாசாஸநம். ஒருவர் ஒருகடிகைப்பொழுது இத்தலத்திலுறைந்தாலும் அவர்க்கு முத்தி கிடைக்கு மாதலால், இத்தலத்திற்குக கடிகையென்று திருநாமம்: கடிகாசல மெனப்படும் இது, சோளதேசம்போன்று வளம்மிக்கு

நரஸிம்ஹமூர்த்தி உறைதற்கு இடமாயிருத்தல்பற்றி, சோளஸிம்ஹபுர *மென்றும் வழங்கப்பெறும். சோளஸிம்மஹாராஜனது புரமெனினுமாம. சோளஸிம்ஹ புரத்துக்கு வடக்கே கூ-மைலில் உள்ளது.

## தொண்டைநாட்டுத்திருப்பதிகள் ஸம்பூர்ணம்

---

## வடநாட்டுத்திருப்பதிகள் - கஉ.

கூசு திருவேங்கடம் (திருமலை—திருப்பதி.) :—திருவேங்கடத்தான் - அலர்மேல்மங்கைத்தாயார். ஆநந்தநிலயவிமானம். சேஷாசலம். ஸ்வாமிபுஷ்கரிணி, கோனேரி கிழக்கே திருமுகமண்டலம் நின்றதிருக்கோலம். தொண்டைமான சக்ரவர்த்திக்கும், ஆறுமுகனுக்கும் ப்ரத்யக்ஷம. பெரியாழ்வார் ஆண்டாள் குலசேகராழ்வார் திருமழிசையாழ்வார் திருப்பாணாழ்வார் திருமங்கையாழ்வார் நம்மாழ்வார் மங்களாசாஸநம் தன்னையடைந்தவர் பாவமனைத்தையும் ஒழிப்பதனால், இது 'வேங்கடம்' எனப்பெயர்பெற்றது ஸ்ரீசைலத்தின் மேற்கிலுள்ள நந்தனபுரமெனனும் ஊரில் புரந்தரனென்னும்பிராமணோத்தமனது குமாரனாகிய மாதவனென்பவன் தன்மனைவியாகிய சந்திரரேகையென்பவளோடு பூஞ்சோலையிற் சென்று விளையாடிக்கொண்டிருக்கையில் மாலினியென்பாளொரு சண்டாளகன்னிகையின் கட்டழகைக் கண்டு காமுற்று அவளோடுசேர்ந்து மனையாளைத்துறந்து அப்புலைமங்கையுடனே சென்று புலால் நுகர்ந்தும் கட்குடித்தும் கைப்பொருள் முழுவதையும் இழந்து பின்புவழிபறித்தல் உயிர்க்கொலை முதலிய கொடுந்தொழில் புரிந்து பொருள்சேர்த்து அவட்குக்கொடுத்துவந்து முடிவில் வறியவனாகிப் பலநோய்களையும் அடைந்து அவளால்அகற்றப்பட்டவனாய்ப் பலபாவமுந்தொடரப் பித்தன்போலஅலைந்து திரிந்து இத்திருமலையை அடைந்தமாத்திரத்தில் தனது தீவினையெல்லாம் சாம்பலாகப்பெற்று முன்னையபிரமதேஜஸைப் பொருந்தி நலலறிவுகொண்டு திருமாலைசசேவித்து வழிபட்டுப் பரமபதமடைந்தன னாதலால், இதற்கு 'வேங்கடாசலம்' என்னும் பெயர் நிகழ்ந்தது என்று வடமொழியில் ப்ரஹ்மாண்ட புராணத்திலும் பவிஷ்யோத்தரபுராணத்திலும் கூறப்படுதல் காணக. அன்றி, 'வேம் என்பது - அழிவின்மை, கடம் என்பது - ஐசுவரியம்; அழிவில்லாத ஐசுவரியங்களைத் (தன்னையடைந்தார்க்குத்) தருதலால் வேங்கடமெனப் பெயர்கொண்டது' என்று வராகபுராணத்திற சொல்லப்பட்டவாறும் உணர்க. திருப்பதி மலையின்மேல் எ-மைலில் உள்ளது.

கூஎ. சிங்கவேள்குன்றம் (அஹோபிலம்.):—நரஸிம்ஹன் - லக்ஷ்மிநாச்சியார். குருகைவிமானம. இந்த்ரதீர்த்தம், நரசிங்கதீர்த்தம், பாபநாசதீர்த்தம். கிழக்கே திருமுகமண்டலம்- வீற்றிருந்ததிருக்கோலம, ஹிரண்யனை ஸம்ஹரித்து ப்ரஹ்லாதனுக்கு அருள்செய்தவர். திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம். சிங்கமாகிய, யாவராலும் விரும்பப்படுகின்ற கட்டழகுடைய பெருமான் எழுந்தருளிய திருமலையாதலால், சிங்கவேள்குன்றம் என்று இத்தலத்திற்குப் பெயர்: 'சிங்கவேழ்குன்றம்' என்று வழங்குதலு முண்டு: அப்போதைக்கு நர

சிங்கமூர்த்திகள் எழுந்தருளியிருக்கின்ற எழுகுன்றங்களையுடையது எனப் பொருள் காண்க இதுவே அஹோபில மெனப்படும். கடப்பைஜில்லா எர்ரகுண்டாவுக்கு வடக்கே ௫௦ மைலில் உள்ளது.

௯௮. திருவயோத்தி:—சக்ரவர்த்தித்திருமகன் ரகுநாயகன் - ஸீதாபிராட்டி. புஷ்கலவிமாநம் பரமபத ஸத்யபுஷ்கரிணி ஸரயூநதி. வடக்கே திருமுகமண்டலம் - வீற்றிருந்த திருக்கோலம். பரதாழ்வானுக்கும், தேவர்களுக்கும், முனிவர்களுக்கும் ப்ரத்யக்ஷம். பெரியாழ்வார் குலசேகராழ்வார் தொண்டரடிப்பொடியாழ்வார் திருமங்கையாழ்வார் நம்மாழ்வார் மங்களாசாஸநம். அயோத்தி - பகைவர்களாற் போர்செய்து வெல்லமுடியாதது எனப் பெயர் பெறும்; அரண்முதலியவற்றால் மிக்க பாதுகாவலையுடையது என்பது கருத்து. இது, ஸ்ரீராமபிரானது திருவவதாரஸ்தலம். முத்திதரும் நகரமேழனுள் ஒன்று. அஜோத்யாவுக்கு உ-மைலில் உள்ளது.

௯௯. நைமிசாரண்யம்:—தேவராஜன் - ஸ்ரீஹரிலக்ஷ்மி. புண்டரீக வல்லித்தாயார். ஸ்ரீஹரிவிமாநம். திவ்யவிசாராந்ததீர்த்தம். கிழக்கே திருமுகமண்டலம் - நின்ற திருக்கோலம். தேவரிஷிகளுக்கும், இந்திராதிகளுக்கும் ஸு தருமனுக்கும் ப்ரதயக்ஷம். திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம். ஒருகாலத்தில் முனிவர்கள் 'தவஞ்செய்தற்குச் சிறந்த இடம் நிலவுலகத்தில் யாது?' என்று தங்களுக்கு விளக்கிக்காட்டுதற்பொருட்டுப் பிரமனை வேண்டியபோது அம்முனிவர்க்கு, அப்பிரமதேவன் தான் ஒருதருப்பையாழியைசசெய்துமண்ணுலகத்திலுருட்டி அது சென்று நின்ற இடத்தையே சிறந்ததென்று காட்டினனாதலால், அதற்கு இடமான இத்தலம் நைமிசமெனப் பெயர்பெற்றது. நைமிசம்-நேமிவிழுந்த இடம். ஸாண்டிலிக்கு வடக்கே உ௫-மைலில் உள்ளது.

௧௦௦. சாளக்கிராமம்:—ஸ்ரீமூர்த்திப்பெருமாள் - ஸ்ரீதேவிநாச்சியார். கநகவிமாநம். சக்ரதீர்த்தம். கண்டகிநதி. வடக்கே திருமுகமண்டலம்-நின்ற திருக்கோலம். கண்டகிஎன்கிற வேசிக்கும், பிரமருத்ராதிகளுககும் ப்ரத்யக்ஷம். பெரியாழ்வார் திருமங்கையாழ்வார்மங்களாசாஸநம். கோரக்பூர்க்கு வடகிழக்கே ௯௦ - மைலில்உள்ளது.

௧௦௧. வதரியாச்சிரமம் (பதரிகாசரமம்):—பதரீநாராயணன் - அரவிந்தவல்லி. தப்தகாஞ்சநவிமாநம். தப்தகுண்டதீர்த்தம். கிழக்கே திருமுகமண்டலம் - வீற்றிருந்த திருக்கோலம். இலந்தைமரத்தின்கீழ்ப் பத்மாசனங்கொண்டு ஞானமுத்திரை தரித்துஜயசீலரான தபஸ்வியாய்,நரனுக்குத் திருமந்த்ரோபதேசஞ்செய்தவர். பெரியாழ்வார் திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம். (பதரி - இலந்தைமரம்) இலந்தைமரங்களடர்ந்த ஆச்ரமமென்பது, பொருள். இது-இமயமலையி லுள்ளது. ஹரித்வாரத்திலிருந்து வடகிழக்கே ௧௭௫ - மைலில் உள்ளது.

௧௦௨. திருக்கண்டங்கடிநகர் (தேவப்ரயாகை):— நீலமேகப்பெருமாள்-புருஷோத்தமன் - புண்டரீகவல்லி. மங்களவிமாநம். கிழக்கே திருமுகமண்டலம்-நின்றதிருக்கோலம். பரத்வாஜமகரிஷிக்கு ப்ரத்யக்ஷம். பெரியாழ்வார் மங்களாசாஸநம். ஆல்மோராவுக்கு வடக்கே ௧௫௨-மைலில் உள்ளது.

௧0௫. திருப்பிருதி (நந்தபிரயாகை) :—பரமபுருஷன் - பரிமளவல்லிநாச்சியார். கோவர்த்தநவிமாநம். மாநஸஸரஸ். கிழக்கே திருமுகமண்டலம்-புஜங்கசயனம். பார்வதிக்குப்ரத்யக்ஷம் திருமங்கையாழ்வார்மங்களாசாஸநம். ஆல்மோராவுக்கு ௩௩0 - மைலில் உள்ளது.

௧0௬. த்வாரகை .—கல்யாணநாராயணன் - கல்யாணநாச்சியார். அஷ்டமஹிஷிகள். ஹேமகூடவிமாநம். கோமதிதீர்த்தம். மேற்கே திருமுகமண்டலம் - வீற்றிருந்ததிருக்கோலம். த்ரௌபதிக்கு ப்ரத்யக்ஷம். பெரியாழ்வார் ஆண்டாள் திருமங்கையாழ்வார் நம்மாழ்வார் மங்களாசாஸநம். இதுவும்முத்திதரும் நகரமேழனுள் ஒன்று இந்நகரம் - காலயவனன் பெருஞ்சேனையோடு வடமதுரையை முற்றுகைசெய்தபோது அவனால் யாதவர்க்கு எங்குத் தீங்கு வருமோ ? என்ற கருத்தினால் ஸ்ரீகிருஷ்ணபகவான் சமுத்திரத்தினிடையே அவ் யாதவரைப் பாதுகாக்குமாறு ஏற்படுத்தி அரசாண்ட நகரம். பேரிபந்தர் அல்லது பம்பாயிலிருந்து ஸ்டீமரில் ௩௯-மணிநேரத்தில் போகலாம்.

௧0௭. வடமதுரை (கோவர்த்தநம்)·—கோவர்த்தநேசன் - சத்தியபாமை. கோவர்த்தன விமாநம். இந்திரதீர்த்தம், கோவர்த்தனதீர்த்தம். கிழக்கே திருமுகமண்டலம் - நின்ற திருக்கோலம். இந்த்ராதிதேவர்களுக்கு ப்ரத்யக்ஷம். பெரியாழ்வார் ஆண்டாள் திருமங்கையாழ்வார் நம்மாழ்வார் மங்களாசாஸநம். இது - ஸ்ரீகிருஷ்ணபகவானது திருவவதாரஸ்தலம். முத்திதரும் நகரமேழனுள் இதுவும் ஒன்று. கண்ணுக்கு மதுரமாயிருத்தலாலும். மது வென்ற அசுரனை யழித்த இடமாதலாலும், இதற்கு மதுரையெனப் பெயர் வந்த தென்பர். கோவர்த்தனகிரி யென்னும் மலை, மட்ருவிலிருந்து வடமேற்குத் திசையில் ௧௫ மைல் தூரத்தில் இருக்கிறது.

௧0௮. திருவாய்ப்பாடி (கோகுலம்) ·—நவமோகனக்ருஷ்ணன். ருக்மிணிப்பிராட்டி, ஸத்யபாமைப்பிராட்டி. ஹேமகூடவிமாநம். யமுநாநதி. கிழக்கே திருமுகமண்டலம் - நின்ற திருக்கோலம். நந்தகோபருக்கு ப்ரத்யக்ஷம். பெரியாழ்வார் ஆண்டாள் திருமங்கையாழ்வார் மங்களாசாஸநம். ஆய்ப்பாடி - இடையர்கள்வசிக்கின்ற சேரி யெனப் பொருள்படும் ; 'கோகுலம்' என்று வடமொழியில் வழங்கப்பெறும் மட்ருவுக்குத் தென்கிழக்கே ௬-மைலில் உள்ளது.

௧0௯. திருப்பாற்கடல் ·—க்ஷீராப்திநாதன், வ்யூஹமூர்த்தி - கடல்மகள் நாச்சியார். அஷ்டாங்கவிமாநம். அமிருததீர்த்தம். தெற்கே திருமுகமண்டலம் - புஜங்கசயநம். ப்ரஹ்மருத்ராதிகளுக்கு ப்ரத்யக்ஷம். பெரியாழ்வார் ஆண்டாள் குலசேகராழ்வார் திருமழிசையாழ்வார் தொண்டரடிப்பொடியாழ்வார் திருமங்கையாழ்வார் பொய்கையாழ்வார் பூதத்தாழ்வார் பேயாழ்வார் நம்மாழ்வார் மங்களாசாஸநம். எம்பெருமானது ஐவகைநிலைகளுள், திருப்பாற்கடலி லெழுந்தருளியிருப்பவன் வியூகமூர்த்தியாவன் ; "வ்யூஹமாவது - ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரார்த்தமாகவும், ஸம்ஸாரிஸம்ரக்ஷணார்த்தமாகவும், உபாஸகாநுக்ரஹார்த்தமாகவும் ஸங்கர்ஷண ப்ரத்யும்ந அநிருத்த ரூபேண நிற்கும்நிலை." பாற்கடல், வடக்குத்திசையில் உள்ளது

## திருநாடு - க.

௧0அ. பரமபதம் :—பரமபதநாதன் - பெரிய பிராட்டியார். அநந்தாங்க விமாநம். விரஜாநதி - அயிரமதபுஷ்கரிணி. தெற்கே திருமுகமண்டலம் - வீற்றிருந்த திருக்கோலம். அநந்த கருட விஷ்வக்ஸேநர் முதலிய நித்ய ஸூரிகளுக்கும் முக்தர்களுக்கும் ப்ரத்யக்ஷம். பெரியாழ்வார் திருமழிசையாழ்வார் திருப்பாணாழ்வார் திருமங்கையாழ்வார் பொய்கையாழ்வார் பேயாழ்வார் நம்மாழ்வார் மங்களாசாஸநம். இது திருமாலினது ஐவகை நிலைகளுள் பரத்வம் விளங்குந் தானம். பரத்வமாவது அகாலகால்யமான நலமந்தயில்லதோர் நாட்டிலே நித்யமுக்தர்க்குப் போக்யனாய்க்கொண்டு எழுந்தருளியிருக்கும் இருப்பு. இதுவே - பரமபதமெனவும், நித்யவிபூதி யெனவும்படும்.

---

இதுவரையிற் கூறிவந்த திருப்பதிகள் மயர்வறமதிநலம் அருளப்பெற்ற ஆழ்வார்களால் மங்களாசாஸநம் செய்யப்பட்டு மிகவும் ஏற்றம் பெற்றன. இவைகளன்றி, முனிவர் முதலியோரால் ப்ரதிஷ்டை செய்யப்பட்டு ஏற்றம் பெற்ற புராணஸ்தலங்களும், ஆழ்வாராசாரியர்களின் திருவவதாரம் முதலிய சம்பந்தங்களினால் ஏற்றம்பெற்ற தலங்களும் உண்டு. அவையாவன :—

க. திருநாராயணபுரம் :—செல்வப்பிள்ளை எழுந்தருளிய தலம். ஸ்ரீபாஷ்யகாரர்; திருநாராயணன் செல்வப்பிள்ளை என்ற இவர்கட்குச் சந்நிதி முதலியன நிர்மாணம்செய்து செல்வப்பிள்ளையை எழுந்தருளப்பண்ணி உத்ஸவாதிகளை யெல்லாம் நடப்பித்தருளினர். நாராயணாத்ரியென்றும் வேதாத்ரியென்றும், யாதவாத்ரியென்றும், யதிசைலமென்றும் மறுபெயர்களையுடைய பிரசித்தமான தலம் இதுவே. இது மேல்நாட்டிலுள்ளது.

உ. ராஜமன்னார்கோயில் —ராஜகோபாலன் எழுந்தருளிய தலம்.

ங. ஜநார்த்தநம் :—ஜநார்த்தநப்பெருமாள் எழுந்தருளிய தலம்; இப்பெருமான் தமதுகையிற்கொண்டுள்ள நீரை யுகமுடிவில் ஆசமநஞ்செய்வரென்பர்; இது, மேலைக்கடற்கரையி லுள்ளது.

ச. ஸ்ரீமுஷ்ணம் :—ஆதிவராகப்பெருமான் எழுந்தருளிய தலம். இது, எட்டு ஸ்வயம்வ்யக்தஸ்தலங்களில் ஒன்று. (மற்றவை-ஸ்ரீரங்கம், திருவேங்கடம், வானமாமலை, புஷ்கரம், நைமிசாரணியம், பத்ரிகாசிரமம், சாளக்கிராமம் என்பன.) இது, சோழநாட்டிலுள்ளது.

ரு. புஷ்கரம் :—தீர்த்தஸ்வரூபியாகிய எம்பெருமான் எழுந்தருளிய தலம்.

சா. ஜகந்நாதம் :—ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி எழுந்தருளிய தலம். புருஷோத்தமம் என்னும் மறுபெயருடையது. வடநாட்டி லுள்ளது.

எ. ஸ்ரீகூர்மம் :—ஸ்ரீவராகப்பெருமாள் எழுந்தருளிய தலம்.

அ. சிங்கப்பெருமாள்கோயில் :—இது, தொண்டைநாட்டி லுள்ளது; நரசிங்கமூர்த்தி எழுந்தருளியுள்ள தலம்.

௯. அவந்தி:—கண்ணன் எழுந்தருளிய தலம். உஜ்ஜயினி என்னும் மறு பெயருடையது. இது, முத்திதரும் நகரங்கள் ஏழனுள் ஒன்று,

௧0. கயா:—பல்குநி நதிக்கரையி லுள்ளது. சிராத்தபிண்டம போமெம்படி யான விஷ்ணுபாதத்தை யுடையது.

௧௧. ப்ரயாகை:—மாதவப்பெருமாள் ஆலிலையில் பள்ளிகொண்டுள்ள தலம். அகலபாத் என்னும் மறுபெயருடையது.

௧௨. மயிலாப்பூர்:—இது, முதலாழ்வார்கள் மூவரில் பேயாழ்வார் திருவவ தரித்த தலம்.

௧௩. திருமழிசை:—திருமழிசையாழ்வார திருவவதரித்த தலம். மஹீஸார க்ஷேத்ரம் என்னும் மறுபெயருடையது.

௧௪. திருவஞ்சிக்களம்:—குலசேகராழ்வார் திருவவதரித்த தலம். மலைநாட்டி லுள்ளது.

௧௫. திருமண்டங்குடி:—தொண்டரடிப்பொடியாழ்வார் திருவவதரித்த தலம்.

௧௬. திருக்குறையலூர்:—திருமங்கையாழ்வார் திருவவதரித்த தலம்.

௧௭. காட்டுமன்னார்கோவில்:—ஸ்ரீமந்நாதமுனிகளும் ஸ்ரீ ஆளவந்தாரும் திரு வவதரித்த தலம்.

௧௮. பூவிருந்தவல்லி:—திருக்கச்சிநம்பிகள் திருவவதரித்த தலம்.

௧௯. ஸ்ரீபெரும்பூதூர்:—ஸ்ரீபாஷ்யகாரர் திருவவதரித்த தலம். இவர்க்குப் பெரியநம்பிகள் த்வயம் உபதேசம்செய்த தலம்—ஸ்ரீமதுராந்தகம்.

௨0. கூரம்:—கூரத்தாழ்வான் திருவவதரித்த தலம்.

௨௧. மழலைமங்கலம்.—எம்பார் திருவவதரித்த தலம்.

௨௨. பச்சைப்பெருமாள்கோயில்: — முதலியாண்டான் திருவவதரித்த தலம்.

மற்றும் பல வுள.

